Vol. XXXI

1956—1957




The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly, Ltd.,
Tirunelveli. :. Madras-1.



[Price Rs. 6-0-0

## 'செந்தமிழ்ச் செல்வி'

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்

### EDITORIAL BOARD MEMBERS

# உள்ளுறை





சிலம்பு ௩௧ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௭, செப்டம்பர், 1956 | பரல் ௧


# நம் செல்வியின் புத்தாண்டு

நம் செல்விக்கு முப்பான் அகவை நிரம்பி இவ் வாண்டு முப்பத்தோராம் அகவை துவக்கமுறுகின்றது. நம செல்வி ஆண்டுகள் தோறும் ஆற்றி வந்த பணியைப்போல் இவ்வாண்டினும் தன் கடமைகளான தமிழ்த் தொண்டு, சைவத் தொண்டினை ஆற்றிவருவாள். கடந்த ஆண்டில் நம் செல்வி, இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ்த் துறையின் முறைபோகிய வித்தகர் புனைந்த பொன்மணி ஆரந்தாங்கி வெளிபபோந்து அறிஞர்கள் கையகத்தும் நாவகத்தும் களிநடம் புரியலானுள்

நம் செல்விக்குத் தனித்தமிழ் வளர்ச்சியே உயிர்ப்பு. அக் கொள்கையைக் கடைப் பிடியாகக் கொண்டு நம் செல்வி, சென்ற முப்பானுண்டுக் கால வெல்லையில் ஆற்றிய அரும்பெறற் செயல்கள் அளப்பில. அக்கிராசனுதிபதி, பிரசங்கம் போன்ற எண்ணற்ற வட சொற்கள் நம் செந்தமிழ் மொழிக்கண் நுழைந்து வேர் வீழ்த்துக் காலூன்றி நின்றகாலை, அவைகட்கேற்ற தலைவர், சொற்பொழிவு போன்ற அரிய தீவிய செந்தமிழ்ச் சொற்களைப் பெய்து நிலை பெறுத்தியும் தனித்தமிழ்க் கட்டுரைகளைத் தாங்கியும் வெளிப்போந்து தனித்தமிழைத் தனித்தமிழாகக் கொணர்ந்த பெருமை நம் செல்விக்கே உண்டெனின் அது உண்மையன்றிப் புகழ்மையாகாது. நம் செல்வியின் அரிய கடப்பாட்டினுலேயே இன்று நாட்டில் செவ்விய சீரிய கூரிய தனித்தமிழ் நடை இளைஞர்கள் நாவகத்தும் எழுத்தகத்தும் கால்கொண்டு நிலவுவதாயிற்று !

சென்ற யாண்டில் நம் செல்வி மகிழத்தக்க அருஞ் செயல்கள் நிகழ்வனவாயின. அவை: அண்ணுமலைப் பல்கலைக் கழகத்

துத் தமிழ்த்துறைத் தலைவர், டாக்டர் உயர்திரு. அ. சிதம்பர நாதச் செட்டியாரவர்கட்குத் தருமையாதீனத் தலைவரவர்கள் 'செந்தமிழ்க் காவலர்' என்னும் அரிய பட்டம் சூட்டிப் பொன்னுடை போர்த்துவித்து மகிழ்வித்தமை; தமிழும் சைவமுமே தம் இரு கண்களாகக் கொண்டு அவ் வழியே தம் வாழ்நாளை வகுத்துக்கொண்டு சைவசமாசப் பணியில் பங்குகொண்டு தொண்டாற்றி வரும், உயர்திரு. ம பாலசுப்பிரமணிய முதலியாரவர்கட்கு மணிவிழா நிகழ்ந்தமை; புலவர் ஏறு உயர்திரு. அ. வரதநஞ்சைய பிள்ளையவர்கட்குச் சேலம், குகை, திருக்குறட் கழகச் சார்பில் பொன்னுடை போர்த்து மகிழ்வித்தமை முதலியனவாம். இத்தகைய அரிய நிகழ்ச்சிகள் நிகழுங்காலை நம் செல்வியும் பங்குகொண்டு அவர்களைப் பாராட்டியும் அவர்கள் வரலாற்றை தன்னகத்துத தாங்கியும் வெளிப்போந்துளாள்.

கட்டியே உண்பார்க்கு ஏனதும் கிட்டுதல்போல, நம் செல்விக்கு இடையிடையே புன்கண் தரத்தக்க செயல்களும் நிகழ்வவாயின. பாரிபபாக்கத்துத் தோன்றிப் பாவலரும் காவலரும பாராட்டும பண்பு வாய்ந்த பெரியார், உயர்திரு. கண்ணப்ப முதலியாரவாகள மறைவு, நெல்லையில் தோன்றி ஒல்லும் வகை தமிழ்த்தொண்டே புரிந்துவந்த பேராசிரியர் உயர்திரு. வையாபுரிப பிள்ளையவாகள நெடும்பிரிவு, புலவரேறுகப் பொன்றுப் புகழ்படைத்த உயர்திரு அ. வரதநஞ்சைய பிள்ளையவர்கள் பெரும் பிறிது, சிவ வழிபாட்டுச செலவர் உயர்திரு. குமரசாமிச் செட்டியாரவர்கள், உயா திரு செநதிலாறுமுகச் செல்வரவர்கள், சீர்திருத்தசசெல்வர் உயர்திரு. சொ. முருகபபா அவர்கள் ஆகியோரின் பேராவியற்கை முதலியனவும் குறிபபிடத்தக்கனவாம்.

இப் புத்தாண்டில் எல்லாம வல்ல இறை சிவபெருமான் திருவருளால் நாடெஙகும இன்பமே நன்கு நிலவுவதாக.

நம செல்வியின் கையொப்ப அன்பர்கள் ஒவ்வொருவரும் சில பல கையொப்ப நண்பர்களைச் சேர்த்துதவின், நம் செல்வி முன்னைய யாண்டுகளினும் பன்னலங்கெழுமிய கட்டுரையணிகள் பூண்டு செம்பொற்சிலம்பு கலீர கலீரென ஒலிப்ப நமபால் போந்து துறைததீநதமிழின் ஒழுகு நறுஞ் சுவையமுதை ஊட்டி மகிழ்விப்பாள்.

ஆகவே, புரப்போர் பொருட் செல்வமும், புலவர் பெருமக்கள் கட்டுரைச் செல்வமும் தநது நம் செல்வியைப் பொன்னிற் பொதிநது போற்றிப் புரந்தருளுமாறு பெரிதும் செலவியன்பர்களாகிய அவாகளை விரும்பி வேண்டுகின்றேம்.

# புலனுழுதுண்போர்

[பெருமழைப் புலவர், திரு. பொ. வே. சோமசுந்தரனூர்]

மாலைப் பொழுதிலே பெரும்பாலும் மக்கள் வழக்கற்றதும் எம்மூர்க்கணித்தாகவுள்ளதுமாகிய சாலையின் வழியே ஏறக் குறைய நாலைந்துகல் தொலை நடந்துசென்று மீள்வதில் எமக்குச் சிறந்த இன்பந் தோன்றுகின்றது. இச்சாலையின் தென்புறத்தே "வங்கக்கடல் சங்கத் திரள் உநதி" அலைவீசி முழங்கிக் கிடக்கின்றது. கடற்கரைப் பகுதியாகலின் நிலவுக் குவித்தன்ன சிறுசிறு மணற்குன்றுகள் அங்கங்கே உள்ளன. எஞ்சிய மணற்பரப்பிலே தெங்கிளம் பொழில் இருண்டு கிடக்கின்றன. சவுக்குமரப் பொழிலும் இவற்றின் இடையிடையே கிடக்கும் புல்வெளிப் பகுதிகளும் காட்சிக்குப் பேரினபம் நல்குகின்றன இச்சாலையின் வடபுறத்திலே கண்ணுக்கு எட்டுமளவும் பச்சைப் பசேல் எனச் செழித்துள்ள நீஞ்சாலிப்பயிரையுடைய மருத நிலப்பரபபுப் பரந்துகிடக்கின்றது இச்சாலையின் இருமருங் குமட வளமுடைய பெருமரங்கள் நிரலாக நின்று இன்னிழல் தருகின்றன. இவ்வாற்ருல் யாண்டும் பசேல் என விளங்கும் இப்பகுதியில மாலைக்காலததுச் செஞ்ஞாயிற்றுப் பசும்பொன் வெயில படியுங்கால் உண்டாகும் எழிலினை உணர்ச்சியால் நுகருமளவு எளிதாக எழுத்தால் எழுதிக்காட்ட எம்மால் இயல்வதில்லை.

நம்மன்னை காவிரியினது பற்பல கால்களில் ஒன்று வட திசையினின்றுவநது இம் மணற்பரபபினை ஊடறுத்துத தென் பால் உள்ள கடலிலே புகாநின்றது இவ்வியாற்றின் இருமருங்கு முள்ள மரங்கள் செலவமிக்கோர் போன்று ஏனையவற்றினும் சிறப்புடையனவாக வானுற வளர்ந்து திகழ்கின்றன. இவ் வியாற்றின் மேற்றிசையில் இன்னும் மனிதர்களால் அழிக்கப் படாத குறுங்காடுகள் அங்கங்கே உள்ளன. இச் சிற்ருற்றின் கரையில் உள்ள மணற்குன்றுகளைக் காண்டலினும் அவற்றின் உச்சியில் ஏறி நின்று நான்கு திசைகளையும் நோக்கி நின்று மகிழ்தற்கும் என்னுள்ளம் ஒருபொழுதும் சலிப்பதில்லை.

இம் மணற் குன்றின் உச்சியின் மேனின்று நான்கு பக்கத் தேயும் நோக்குமபோது யாம எம்கண்முன் விரிந்துகிடககு மொரு கடவுட் பெருங்காப்பியத்தையே காண்கின்றேம். இது மிகைபடவோ புனைநதோ கூறியதன்று. உண்மையே கூறு

கின்றேம். இப்பெருங்காப்பியமே இப்பேருலகத்தே உள்ள நாடு கள் தோறும், காலந்தோறும், தோன்றிய சிறந்த பெருங்காப்பி யங்கள் அனைத்திற்கும் முதனூலாகும். இச்செந்தமிழ் நாட்டிலே சிறந்து விளங்கும் பாட்டும் தொகையும் கீழ்க்கணக்கும் சிந்தா மணியும் சிலம்பும் மேகலையும் 'இராமாவதாரமும் தொண்டர் புராணமும் இன்னோரன்ன பெருநூல்கள் அனைத்தும் இம் முதனூலினின்றும் தோன்றிய வழிநூல்களே. இனி வட மொழியிலே தோன்றிய வான்மீகியும் காளிதாசனும் இன்னோ ரன்ன பிறரும் மேலைநாட்டிலே தோன்றிய மில்டனும் செகப் பிரியனும் செல்லியும் பிறரும் ஆகிய நல்லிசைப் புலவரெல்லாம் தாந்தாந் தத்தம் மொழியிலே இயற்றிய காவியங்களும் பிறவும் எல்லாம் இவ்வொரு பெருங் கடவுட் காப்பியத்தின் வழிநூல் களே ஆகும்.

சிலப்பதிகாரம்போன்ற பெருங் காப்பியங்களை யாம் பயிலும் போது அவற்றின் ஆசிரியரை யாம் காணமுடிவதில்லை; இல்லை எனினும் அக்காப்பியங்கள் அனைத்தினும் அவ்வவற்றின் ஆசிரியன்மார் அழகிய திருவுள்ளத்தை யாம் நன்கு உணர்கின் றேம். அங்ஙனமே இயற்கைக்காட்சியாகிய இக்கடவுட் காப்பியத்தை யாம் மனமொன்றிப் பயிலும்போது அக்காட்சி யினூடே இதனை இயற்றியதோர் ஒப்பற்ற திருவுள்ளத்தையும் நாம் காணமுடிகின்றது இதனை ஆக்கிய அப்பேராசிரியன் யார்? இக்கேள்வியைத் தொடர்ந்து ஆழ்ந்துசிந்திப்பின் அப் பேராசிரியனையே இக்காப்பியத்திலே காணமுடியும். எங்கும் நிறைந்த கடவுளே இக்காப்பியத்தின் நல்லாசிரியன். அவனை நம்முடைய புன்பொறிகளாலே அறிதல் இயலாது என்று நூல்கள் அறிவிக்கின்றன. ஆயினும் அமைதியாக அவ்வாற்றங் கரையின் மணற்குன்றின் உச்சியிலே அமர்ந்து கூர்ந்து நோக்கும் பொழுதெல்லாம் அவ்வாசிரியனை-அக் காணமுடியாத கடவுளையே- யாம் கண்கூடாகக் கண்டிருக்கின்றேம்; கண்டு கைகுவித்துத் தொழுதுமிருக்கின்றேம்; இதனைப் புனைந்துரை என்பர் புல்லர்; புலவோர இது பொருள்பொதிந்த மெய்யுரையே என்று ஒப்புவர்.

இவ்வியற்கைக் காட்சியிலே அறிவாலே ஆராய்ந்து கூறுதற் கியலாததும், ஆனல் அனுபவமாகி நம்முள்ளத்தைத் தன் பாலிழுத்து நம்மைப் பரவசப்படுத்துமொரு பொருள் நம்முணர்ச் சிக்குப் புலப்படவில்லையா? அதுதான் யாது? சிவாநுபூதிச் செல்வராகிய தாயுமான அடிகளார் இப்பொருளைக் காண முடியாத அக்கடவுளின் மோன உருவெளித் தோற்றமே கண்டீர் என்று கூறி அதனைக் கைதொழுது அதன்அருளிலே யான்

எனதறக் கலந்துய்வோம் வம்மின் என்று நம்மைப் பரிந்தழைக்கின்றார்.

"கண்டன வெலாம் மோன உருவெளியதாகவும்
கருதி யஞ்சலி செய்குவாம்"

என்பது அவ்வடிகளார் அருண்மொழி.

மோனவுருவெளியாக மட்டுமே நம்முணர்ச்சியைத் தொடாநின்ற அமெய்ப்பொருள் மோனமாகவே நம்மோடு பேசுகின்றது. இம் மோனப் பேச்சிற்கு எழுத்தில்லை; ஒலியில்லை. ஆதலால் நம்மனோர் அவ்வுருவெளியின் மோனத்தை உணர மட்டும் முடிகின்றது. அது கூறுவதனைப் புரிந்து கொள்ள முடிவதில்லை "உணர்ச்சிவாயில் உணர்வோர் வலித்தே" என்பர் தொல்காப்பியர். நம்மினும் பற்பலமடங்கு பொங்கி முற்றிய வாலுணர்வினோர்க்குமட்டுமே அக்கடவுள் மொழியாகிய மோன மொழியின் உட்பொருள் புரிகின்றது. அவர் மட்டும் தம்முடைய மனிதமொழியிலே அக்கருத்தை இயன்றதுணை அரிதின் மொழிபெயர்த்துத் தருகின்றனர். அத்தகைய பொங்கிய முற்றிய வாலுணர்வினோர் இவ்வுலகத்தே எப்பொழுதும் தோன்றுதல் இல்லை. எக்காலத்திலேனும் எந்நாட்டிலேனும் எம்மொழியினராகவேனும் தோன்றுநிற்பர். இவர் எல்லோரும் ஒரே பேராசிரியன் இயற்றிய உலகம் என்னும் ஒப்பற்ற ஒரே நூலினின்றும் தத்தம் மொழியிலே எழுதுகின்றனர்; ஆதலால் அவர் தரும் காப்பியங்களில் மொழி வேறுபடுதல் மட்டுமே உளது. கருத்தோ ஒருசிறிதும முரண்படுதலில்லை. ஒரு சாலை மாணவராகிய இந்நல்லிசைப் புலவர் அனைவரும் ஒன்றுபடவே மொழிந்துள்ளமையை யாங் காணுகின்றோம்.

நாடுகள் தோறும் காலந்தோறும் தோன்றிய நல்லிசைப் புலவர்களைப் பற்றிய வரலாறுகள் அனைத்தும் அவர் நம் போன்றவர் அல்லர்; ஏதோ ஒரு கண்காணுக் கடவுள் அருள் பெற்றமையாற்றான் அவர் அத்தகைய பெருஞ்செயல்களைச் செய்தனர் என்று கூறுதலை யாண்டும் காணலம். அருள் உணர்ச்சி குன்றிய இக்காலத்து வரலாற்றுநூலோர் மட்டும் தமது வறண்டுபோன அறிவாலே அத்தெய்வத்தன்மையுண்மையை ஒத்துக்கொள்ளமாட்டாதவராய் அவற்றை மூடக் கதைகள் என்று குறிப்பிடுகின்றனர்.

பெருங்காப்பியங்களை இயற்றிய நல்லிசைப்புலவர் இயல்பு இங்ஙனமாக, அவர் மானிட மொழியில் இயற்றிய காப்பியங்களை ஓதியுணர்தலும் எளிதன்று என்று எண்ணுக. காவியம் செய்தற்குப் பொங்கிய முற்றிய வாலுணர்வு வேண்டுமெனின் அக்

காவியத்தைப்பயின்று அதன்கண் ஆழ்ந்திருக்கும் கவியுளங் காண்டற்கு முற்றிய வாலுணர்வேனும் வேண்டும்; அஃதில்லார் காவியங்களைச் சுமத்தல் வீணே! வீணே!

பண்டைக்காலத்தே நம் சான்றோர் காவியங்களை ஓதி இன்புறுந் திருவுடையாரைப் "புலனுழுதுண்போர்" என்னு மொரு இனிய பெயர்கொண்டு வழங்கினர். மாந்தருள் இரு வகையினர் எக்காலத்தும் உளர். இவரை வேறுபாடறிதற்கு ஆசிரியர் தொல்காப்பியனார் மக்கள் மாக்கள் என்று இரு வேறு பெயர் இட்டுரைத்தனர். இம் முது பெரும் புலவரின் கருத்தை விளக்குவோர் போன்று ஆசிரியர் திருவள்ளுவனார் இவற்றோடு, "செவியுணவின் கேள்வியுடைய மக்கள் வாயுணர்வின் மாக்கள்" என்று தகுந்த அடைபுணர்த் தோதினர். மற்று இம் மாக்கள் பெரும்பாலும் நிலனுழுதுண்போர் (உழுவித்துண்போரும் இதன் கண் அடங்குவர்) ஆதலால் இவரினின்றும் பிரித்துணரவே நம் சான்றோர் மக்களைப் புலனுழுதுண்போர் என்று வழங்கு வராயினர்.

இனிக் காய்பசியஞ்சுவோர் நிலனுழுதுண்டல் நேரிதே! அச் செயலைத் திருவள்ளுவர் பெரிதும் போற்றியே கூறியுள்ளார். (நிலனுழுதல் என்பதன்கண் எல்லாத்தொழிலும் அடங்கும்) தொழில் செய்துண்போரை எக்காலத்தும் அறிஞர்கள் போற்றியே வந்தனர். இக்காலத்தும் அறிஞர் பெரிதும் போற்று தலை அரசியல் மேடையினும் பிறவிடங்களினும் கேட்கின்றோம். இக்காலத்துக் கவி பாரதியாரும் "உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்-வீணே-உண்டுகளித்திருப்போரை நிந்தனை செய்வோம்" எனத் தமக்கே உரிய தெய்வத் தீஞ்சொல்லால் பாடியுள்ளனர். "உழுவார் உலகத்துக் காணி" என்னும் வள்ளுவர் வாய்மொழியும் கேட்டிருக்கின்றோம் எனவே வயிறார உண்ணவும் உடுத்தவும் விரும்பும் இவ்வுலகம் அவ்வுழவு நெறியையும் அதற்கினமான பிறதொழில் நெறியையும் மேற் கோடல் இன்றியமையாததாகின்றது

"நல்லது தம்பி, நெய்யும் பருப்பும் கலந்த தீஞ்சுவை அடிசில் ஆற்றவும் இனிதே! உண்டால் உடல் கொழுகொழு வென்றிருக்கும் உண்மையே. ஆயினும் நாமெல்லாம் இரைக்கே அலைகின்ற மாக்கள் அல்லமே; மக்களாகிய நம்முயர்பிறப்பிற்கு ஏற்புடைய செய்தல் வேண்டாவோ," என்று இரங்கினர் மேலை நாட்டறிஞர் ஒருவர். அவ்வறிஞர் இக்காலத்திலர். இருந்திருப் பரேல் அவ்வாயுணர்வின் மாக்கள் எல்லாம் தம் வயிற்றுப் பெருமான் பொருட்டே மிலிட்டனையும் செகப்பிரியனையும்

செல்லியையும் வான்மீகியையும் காளிதாசனையும் இளங்கோவினையும் கம்பனையும் தம் புத்தக மூட்டைக்குள் அடக்கிவைத்துக் கொண்டு நள்ளிரவிலும் பொருள் உணராது நாத்தழும்பேற 'நெட்டுரு' செய்தலையும் காண்பரேல் என்சொல்வர்? அன்பரீர் படிப்பது நல்லதுதான் ஆயினும் இப் பாழும் படிப்பு நும் குறிக்கோளை எய்துவிக்குமொரு கருவியன்று. இவற்றோடு நும் ஆயுளில் வீணே ஒரு சிறந்த பகுதியைக் கெடுத்தொழியாதே கொண்மின்! போதும்! நீயிர் கற்றது போதும்!. இதனை இனிச் சிறிது நிறுத்தி வைக்கமாட்டீரோ என்று வேண்டுவர் என்றே யாம் நம்புகின்றோம்.

நிலனுழுதல் முதலிய தொழில் மிக்கவழி உலகில் நெல்லும் ஆடையும்ஆகிய பொருள்கள் மிகும் என்பது எல்லோரும் அறிந்ததே.

உழுதுண்டு வாழ்தலே மக்கள் வாழ்க்கைக்குப் போதியதாகாது. அவர் வாழ்க்கைக்குச் சிறந்த குறிக்கோள் ஒன்றுண்டு. அக் குறிக்கோளை ஒரு பிறப்பின்கண் எய்துதல் அரிதே ஆயினும் அக் குறிக்கோளை எய்தும் நெறியில் அவர் தம் வாழ்க்கைப்போக்கினைத் திருப்பிச் செலுத்துதலே அமையும். கல்வியும் ஒழுக்க வழக்கங்களும் பிறப்புக்கடோறும் விடாது தொடரும் இயல்புடையன. ஆதலின் மக்கள் அழிந்துப் பிறந்த விடத்தும் அவை அவரை அகலாது வந்தெய்தி மேன் மேலும் ஆக்கந்தருதல் உறுதியேயாகும். இங்ஙனமன்றி, இவ்வுலகத்தே பெருஞ்செல்வமும் 'செல்வாக்கும் எய்தினோரும் - அவர்தம் வாழ்க்கை எத்துணை ஆரவாரமுடையதாயினும் - உண்டுடுத்தி வாழும் மாத்திரையே அமைவரெனின், அவர் உயர்ந்த மானிடப் பிறப்பினால் உறுபயனை எட்டுணையும் எய்தப் பெறாதே கழிபவர் ஆவர். ஆசிரியர் திருவள்ளுவனார்,

> "செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
> அவியினும் வாழினும் என்".

என்னும் திருக்குறளில் இக்கருத்தை அழகாகக் கூறி வைத்தனர்.

செல்வ நிலையிலோ அல்லது அல்லலுறும் கொடிய நல்கூர் நிலையிலோ இன்ப துன்பங்கட்கிடையிலேயே மனிதன் எப்பொழுதும் சீரிய காவியங்களில் கவிந்த உள்ளமுடையனாய் வாழ்தல் வேண்டும். இப்பயிற்சி மனிதனுக்குச் செல்வ நிலையில் செருக்கறுக்கும் மருந்தாக அமைந்து நலஞ் செய்யும். மற்று வறுமை நிலையினும் அதனாலுறும் இடுக்கணை அகற்றி

இன்பஞ் செய்யும் கருவி இக் கலைப்பயிற்சினும் சிறந்ததாகப் பிறிதொன்றை யாம் கண்டிலேம் உற்றுழி உதவும் நண்பரில் தலைசிறந்த நண்பன் காவிய நண்பனே.

மேலும், உழுதுண்போர் உண்ணும் சுவை கைப்புங் கார்ப்பும் புளிப்பும் உவர்ப்பும் துவர்ப்பும் தித்திப்பும் என இவ்வறுவகைப்பட்ட எளிய சுவைகளேயாகப் புலனுழுதுண் போர் நுகர்வனவோ நகையும் கருணையும் வீரமும் வெகுளியும் அச்சமும் இழிப்பும் வியப்பும் சாந்தமும் என்னும் கலையமிழ்தத் தெய்வத் தீஞ்சுவை ஒன்பதும் என்ப வாயாலுண்ணும் அவிச் சுவை பொய்யுடலுக்கு ஆக்கம் செய்வதாம்; மேலும் அவ்வுடல் கொழுப்புற்ற விடத்துக் காம வெகுளி மயக்கங்களைத் தூண்டிச் செலுத்திப் பெருந் தீங்கியற்றுதலும் உண்டு. இது கருதியே வள்ளுவனார், "நலலார்கட் பட்ட வறுமையின் இன்னாதே, கல்லார்கட் பட்ட திரு" என்று நுண்ணிதின் ஓதினர்.

பண்டைக் காலத்தே நம் முன்னோர் சிறந்த மக்கட் பிறப்பின் குறிக்கோளை எய்துதற்குக் கலைமகள் அருளே உறுதுணையாக அமைவதென்றறிந்து அவள் திருக்கோயிலை அன்புடன் எய்தி அவள் மலரடி வணங்கி அவள் அருள் பெற்றுயர்ந்தனர். இக்காலத்தே கலைமகள் திருக்கோயில் புகுவோர் கருத்து நம் முன்னோர் கருத்திற்கு முழுதும் முரண் பட்டது ஆதல் காணலாம். பிறப்பின் குறிக்கோளை எய்துதல் இவர் கருத்தன்றென்பது யாவரும் அறிந்ததே. உடலோம்ப வேண்டும்; பொறிகளும் வயிறும் ஆர உண்ணுதல் வேண்டும்; நீள நீளப் பட்டும் துகிலும் உடுததுதல் வேண்டும். இங்ஙனம் உண்ணவும் உடுத்தவும் கல்வி ஒரு சாதனம் என்பதே இவர் தம் கருத்து. இஃதொரு மயக்கம்; உண்மையில் உணவும் உடையும் பிறவும் மனிதருடைய உடலுழைப்பின் விளைவுகளே அன்றோ? இவர் காரணத்தை வெறுத்துக் காரியத்தை விரும்புதல் விபரீதமே. (உடல் உழைப்பை வெறுத்து அதன் பயனை நுகர்தல்) உணவு முதலியன கலப்பை முதலிய கருவிகளைக் கொண்டு உடல் வியர்க்க வியர்க்க உழைப்போர்க்கே உரியன ஆதல் வேண்டும். அத்தகைய உழைப்பினை அறவே வெறுப்பவரே இக்காலத்துக் கலைமகளை நாடிச் செல்வோரிற் பெரும்பாலோர். இவர் கலைமகள்பால் வேண்டும் வரமும் வீடுபேறன்று; மனநலமும் அன்று. உழைப்பில்லாமல் எய்தும் உண்டியும் உடையும் பிறவுமே. கற்றமையால் பெரும்பொருளீட்டினோம் என்போர்கூற்று வெறும் பொய்! பொய்! ஆராய்ந்து காண்போர்க்கு அவர் ஈட்டிய பெரும் பொருட்குக் காரண மெல்லாம் கைக்கூலியும் களவும் வஞ்சமும் இவ்வினத்த

பிறவுமே ஆதல் தெற்றெனப் புலப்படும். இவரனையோர் கற்றலிற் கல்லாமையே இவர்க்கும் பிறர்க்கும் நன்றாகும்.

" புலனுழுதுண்போரே வாழ்க்கை பயன்படுமாறு வாழ் வாங்கு வாழ்பவர் ஆவர். இவர் இவ்வுலகத்திருந்தும் "வானுறையும் தெய்வத்தோடு ஒப்பர்" என்பதனை வள்ளுவனார், முற்கூறிய திருக்குறட் பாவிலே உணர்த்தியருளினார்.

புலனுழுதுண்போர் செல்வப்பேற்றினை ஒரு பொருளாக மதிப்பதில்லை. ஊழ்வலியான் அவர் ஒரோவழிச் செல்வப் பேறுடையராயின் ஊருணி நீர் நிறைந்தாற் போன்று பலர்க்கும் பயன்பட்டு வாழ்பவராவர். இனி அவர் நல்குரவிற்கும் நலியாத் திண்மையுடையோரும் ஆவர்.

இறைவன் படைத்த இப்பேருலகில் ஒரு சில பொருள்களே மக்கட்கும் மாக்கட்கும் பொதுப்பொருளாவன. எஞ்சிய அனைத்தும் புலனுழுதுண்போர் நுகர்தற்குரிய பொருள்களே யாகும். அலையெறிந்து முழங்கிக் கிடக்கும் பெருங் கடலையும் புலனுழுதுண்போர் உண்பர்! ஞாயிற்றை யுண்பர். திங்களை யுண்பர். விண்மீன்களை விரும்பி நுகர்வர். ஏன், விசும்பெல்லாம் ஓரழகாக விழுங்குவர் அரிமானின் முழக்கத்தையும் இடி யேற்றின் முழக்கத்தையும் இவர் பிடித்துண்பர். சுருங்கக் கூறின் இவர்க்கென்றே இப்பேருலகம் இத்தனை விரிவாக இறைவனாற் படைக்கப்பட்டுளது எனலாம். இவர் குடியேறி வாழ்வதற்குரிய நாடுகளே இளங்கோ முதலிய நல்லிசைப் புலவர் ஆக்கிய மாபெருங் காப்பியங்கள்.

கலைமகள் அருளாட்சி நிலவும் இக்கலைத் திருநாட்டுச் சிறுகுடி மக்களே புலனுழுதுண்போர். இவர் அந்நாட்டில் என்றென்றும் உண்பன பல் தீஞ்சுவைக் கலைப் பேரமிழ்தமே. திருமகளின் சீற்றத்திற்கு இவர் அஞ்சுவாரல்லர். அன்னை கலை மகட்கே வழிவழி அடிமையாகி ஏழேழ் பிறப்பும் மகிழ்ந்து வாழ்வோராவர் இவரே வாழ்வு பயன்பெற வாழ்பவர்.

வாழ்க புலனுழுதுண்போர்! வாழ்க அவர்தம் கலைத் திருநாடு.

# மாசில்லா மணி

[திரு. அ. க. நவநீதகிருட்டிணன்]

ஒளி வீசும் மணிகளை ஒன்பது வகையாகப் பிரிப்பர். முத்து, பவளம், மாணிக்கம், மரகதம், வைரம், வைடூரியம், நீலம், கோமேதகம், புட்பராகம் என்று அவைகள் குறிக்கப் பெறும். இம் மணிகள் எல்லாம் மாசுடைய மணிகளே. அவற்றைச் சூழ்ந்துள்ள மாசினை மாற்றுதற்கு வல்லார் அவைகளைக் கழுவுவர். மண்ணுதல் என்பது கழுவுதல் என்று பொருள்படும். நன்கு கழுவப் பெற்ற மணிகளே ஒளி வீசும் இயல்புடையன. மண்ணப் பெறுதலின் அவை மணியெனப் பெயர் பெறுவவாயின.

இத்தகைய மணிகளைப் பொன்வணிகர் தம் கடைகளில் வைத்து விற்பர். அவற்றை வாங்கி அணியும் விருப்புடையார், கடைக்குச் சென்று மணிகளைக் கண்டு, அவற்றின் பெருமை சிறுமைகளை ஆராய்ந்து விலை பேசுவர். விலையை முடிவு செய்த பின், மணிகளை வாங்கிக் கொண்டு, குறித்த பொருளைக் கொடுத்து வருவர். இஃது உலக இயற்கை.

தண்பொருநைத் தடங்கரையில் தோன்றிய தெய்வக் கவிஞராகிய குமரகுருபரர் மணியொன்றைப் பெறுதற்காக நாடெங்கும் சுற்றினர். சைவமும் தமிழும் வளர்க்கும் தருமையாதீன மடாலயத்தை அடைந்தார். அங்குக் கோயில் கொண்டருளிய குருஞானசம்பந்தர் தமது மடாலயத்தில் மணிகள் பலவற்றை மாசு கழுவித் தேசு வீசும் மாசில்லா மணிகளாக்கி வைத்திருந்தார். குமரகுருபரர் அத்திருமடத்துள் புகுந்தவுடன் ஒளி வீசும் பல மணிகள் ஆங்கு ஒளிரக்கண்டார். அவற்றின் நடுவே மாசில்லா மணியொன்று பேரொளி வீசி விளங்குவதைக் கண்டார். அதனை எவ்விதத்தினும் பெற வேண்டுமெனப் பேராவல் பூண்டார்.

ஆங்கிருந்த நன்மணிகள், பொன்வணிகர் கடையில் வைத்து விற்கும் கன்மணிகள் போன்றனவல்ல. அந்தக் கன்மணிகளைப் பெறுதற்குக் காசொன்றே வேண்டும். குருஞானசம்பந்தரின் அருள்ஞான மணிகளைப் பெறுதற்கோ உடல் பொருள் ஆவி ஆகிய மூன்றையும் கொடுத்தல் வேண்டும். வணிகர்பால் அம் மணிகளை வாங்கிக்கொண்டே பணத்தைக் கொடுப்பர். ஆனால் மடாலயத்தில் விளங்கும் மாசில்லா மணியைப் பெற விரும்பு

வோர் அதனைப் பெறுவதற்கு முன்னரேயே தம் உடல்பொருள் ஆவிஆகிய மூன்றையும் கேளாமலே கொடுத்துவிடுவர். அங்ஙனம் உள்ளத்தைப் பற்றியீர்க்கும் பேராற்றல் உடையது அம் மணி.

அருளாற்றல் பெரிதும் படைத்த ஞானதேசிகராகிய மாசிலாமணி தேசிகரைக் கண்ட குமரகுருபரர் தமது உடல் பொருள் ஆவி ஆகிய மூன்றையும் அவருக்கு உடைமையாக்கினர். தமக்கு அருள்ஞானம் வழங்குமாறு அடிபணிந்து வேண்டினர். தேசிகரோ, சேக்கிழார் அருளிய 'ஐந்து பேரறிவும் கண்களேகொள்ள' என்று தொடங்கும் தெய்வமணக்கும் செய்யுளுக்கு அனுபவப்பொருள் கூறுமாறு குறிப்பிட்டார். குமரகுருபரருக்கோ பேசுதற்கு நா எழவில்லை. செந்தில் முருகன் உணர்த்திய திறமும் சிந்தையில் தோன்றியது. விடையிறுக்க வகை அறியாது நின்ற குமரகுருபரரைத் தில்லை சென்று அம்பலக் கூத்தன் அருள்நடனம் கண்டு வருமாறு பணித்தார். அங்ஙனமே தில்லை சென்று திரும்பிய குமரகுருபரர்க்கு மாசிலாமணி தேசிகர் ஞானம் வழங்கியருளினர்.

மெய்ஞ்ஞானம் கைவரப் பெற்ற குமரகுருபரர், தமக்கு அருள்செய்த ஞானதேசிகரது திருவருள்திறத்தை வியந்து பாடினர். அங்ஙனம் பாடிய முப்பத்துமூன்று பாக்களின் கோவையே பண்டார மும்மணிக்கோவை எனப்படும். பண்டாரம் என்ற சொல், களஞ்சியம் என்று பொருள்படும் அருள் ஞானக் களஞ்சியமாக விளங்கியவர் மாசிலாமணி தேசிகா. அவரது உள்ளமாகிய கொள்கலம் ஞானமணிகளால் நிறைந்து விளங்குவது. அம் மூலபண்டாரத்திலிருந்து எடுத்து வழங்கிய ஞானநன்மணியைப் பெற்றவரே குமரகுருபரர். அதற்கு விலையாக முதலிலேயே தம் உடல் பொருள் ஆவி ஆகிய மூன்றையும் வழங்கிவிட்டார். 'ஒருவேளை, அவர் ஒருவரே இந்த நிலையுற்றார் போலும்!' என்று எவரேனும் எண்ணலாம் என்று கருதிய குமரகுருபரர், முன்னரும் அந் நிலையுற்றார் பலருளர்: இனி மேலும் அவரை அடைபவர் எவராயினும் அந்தநிலையே அடைவர் என்றும் அறிவுறுத்தினர்.

'பொன்னேஅல் லாமல் பொருளோ(டு) உடல் உயிர்விற்(று)
எனனே மணியொன்(று) எவர்கொள்வார்—கொன்னே
குருமாசி லாமணியைக் கொள்வோர்கொள் ளாமுன்
தருவார்மற் றிம்மூன்றும் தான்'

என்பது குமரகுருபரரது அமுதனைய பாடலாகும்.

திருப்பெருந்துறைக் குருந்தமர நீழலில் குருவடிவாய் எழுந்தருளிய பெருமானைக் கண்ட மணிவாசகர் அவரது திருவடிகளில் அடியற்ற மரம்போல் விழுந்து பணிந்தார். அவரது பரிபக்குவ நிலையைக் கண்ட பரமன், அவருக்குச் சிவஞான போதத்தை உபதேசித்தருளினார். சிவஞானம் கைவரப் பெற்ற மணிவாசகர், சிவனது சிறப்பைச் சிவபுராணமாகப் பாடிப் பரவினார். அதுகேட்டு மகிழ்ந்த பெருமான், "நீ மாணிக்கவாசகனாக மாநிலத்து மன்னுக!" என்று வாழ்த்தி மறைந்தருளினார்.

இங்ஙனம் தமக்கு எதிரே வீற்றிருந்து இன்னருள் சுரந்த பெருமான் திடீரென்று மறைந்ததும் வியந்தார், மகிழ்ந்தார், ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். "பெருமானே! என்னை இன்னும் இவ்வுலகில் விட்டுச்சென்று விட்டாயே! நான் என்ன தீங்கு செய்தேன்?"

'யாரொடு நோகேன் யார்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ அருளிலை யானால்
வார்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே!'

என்று அரற்றினார். "அருட்பெருங்குன்றமே! என்னை ஆட்கொண்ட அப்பொழுதே என்னுடைய உடல் பொருள் ஆவி ஆகிய மூன்றையும் பெற்றுக் கொண்டாயே! இனி எனக்கென்று உலகில் என்ன இருக்கிறது? நன்மை செய்யினும் தீமை செய்யினும் எல்லாம் உன்னைச் சார்ந்தனவன்றோ?" என்று பலவாறு அலறினார்.

'அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை யெல்லாமும்
குன்றே அனையாய் என்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோர் இடையூ றெனக்குண்டோ
எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ இதற்கு நாயகமே'

இங்ஙனம் பாடியருளிய மணிவாசகர் திருவாக்கு, குமரகுருபரரால் விளக்கமுற்ற திறம் வியந்து இன்புறற் பாலதாகும்.

# நாடக இலக்கியம்

**தி. நா.**

'நாடகம்' என்ற ஒரு கலைத்துறை, ஒரு தனி இலக்கியம் அன்று. பல இலக்கியத்துறைகளும், பல கலைத்துறைகளும் ஒன்று கலந்து (ஒரு பன்மையில் ஒருமையாக) அமைந்த "இலக்கியக் கலைக் கூட்டுறவுக் கழகம்" ஆகும்.

இயல், இசை, நடிப்பு, ஆடல், ஓவியம், சிற்பம், பாட்டு என்ற பலகலைத் துறைகளும் ஒத்து இயங்கினால் அன்றி நாடகக் கலை உருவாக இயலாது. ஆகவே நாடகக்கலையின்கண் தொடர்பு கொள்பவர்கள் பல்கலை அறிஞர்களாகவே அமைந் திருக்க வேண்டும். பல்கலை அறிவும், பயிற்சியும் அமையாத வர்கள் நாடக உணர்ச்சியை வெளியிடவே முடியாது. ஆம், முடியவே முடியாது. இதனால் தான், ஏனைய கலைத்துறை வல்லுநர்களைவிட நாடகக்கலைஞர்களிடம் மக்களுக்குக் கவர்ச்சி யும் விருப்பமும் மிகுதியாக அமைகிறது.

நாடக அறிவு வாய்த்த கவிஞனோ, உரையாசிரியனோ, எழுத்தாளனோ, பேச்சாளனோ, நாடகத்துறைத் தொடர்பற்ற அறிஞர்களைவிட ஆற்றல் படைத்தவனாக விளங்குவான். நாடக அறிவு அமையப்பெற்ற கவிஞனின் கவிதைகளிலும் அந் நாடகப் பண்பு அவனை அறியாமலேயே அமைந்துவிடும். இதை ஒரு சிறு வாழ்க்கைக் காட்சியில நாம் நன்கு தெளியலாம். ஆடற்கலை பயின்ற பெண், நடக்கும் நடையிலேயே நாட்டிய சாயல் மிளிருவதைக் காணலாம். அவள் கை அசைவு, விரல் களின் இயக்கம், கண்களின் அலைவு, முக அமைதி, புருவங் களின் செயற்பாடு, உதடுகளின் போக்கு, யாவிலும் ஆடற்கலை யின் நடிப்பியல்பு தானே அமைந்து கிடக்கும்.

வள்ளுவர் செய்த 'உலகநூல்' உலக நாடக இலக்கியங் களுக்கெல்லாம் தலைமை வகிக்கும் 'நாடகப் பேரிலக்கியம்' என்பதைத் திருக்குறளை நுணுகிக்கற்கும் யாவரும் எளிதில் அறிவர்.

திருவள்ளுவர் ஓர் அறப்புலவராகவே பெரும்பாலும் காட்சி அளிக்கிறார் மக்களுக்கு. திருக்குறளும் ஓர் அறநூ லாகவே மக்களால் போற்றப் படுகிறது. ஆயின், திருக்குறள் ஓர் ஒப்பற்ற கலைநூல்! மக்கள் தேய்ந்தவழியிலேயே செல் வதையே பெரிதும் விரும்புவர். அதனால்தான் "பழைய வாய்க்

காலைத் தூர்க்காதே; புதிய வாய்க்காலை வெட்டாதே" எனப் பழமொழியும் பாடிவைத்து விட்டனர்! இது ஒரு குறுகிய உளப்பாங்கே அன்றி, வேறன்று. குறள்நூல் ஓர் அறநூல் என்பது உண்மையே. ஆயின், அது வெறும் அறம் கூறும் நூல் மட்டுமன்று. அறத்தோடு கலையையும், கலையோடு, பல் வகை அறிவியல் துறையையும், இலக்கணத் துறைகளையும் தன்னகத்துக்கொண்ட ஒரு பல்கலைக் கழகம் ஆகும். வள்ளுவர் குறளை வெறும் அறநூலாகக் கருதி இருப்பாராயின் மொழி அமைப்பிலே அழகையும், நடை அமைப்பிலே கவர்ச்சியையும் படைத்திருக்க மாட்டார்! எண்ணற்ற உவமைகளை மூன்று பால்களிலும் பெய்து குறள் யாத்திருக்க வேண்டிய இன்றியமை யாமை என்ன? இவற்றால் நாம் அறியும் ஒரு பேருண்மை யாதெனில், வள்ளுவர் வெறும் மொழிப் புலவர் மட்டும்ன்று; அழகுணர்ச்சிக்கும் அடிமையான கலைப்புலவரும் ஆவர் என்பதே!

வள்ளுவர் அழகுணர்ச்சி மிக்கவர் என்பதற்கு அவர் குறளே கரி.

"கல்லாதான் சொல்காமுறுதல் முலைஇரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று." (௪0௨)

"நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண புனைபாவை அற்று" (௪0எ)

என்ற குறட்பாக்களால் அவர் அழகை எவ்வளவு உயர்ந்த உள்ளத்தோடு காதலித்தார் என்பது புலனாகும். அழகிய திரண்ட கொங்கைகள் இல்லாத பெண் அழகான பெண் அன்று இம்முடிபை வள்ளுவர் தம் நூலில் உவமையாக ஆள் கிறார். எழிலை 'நலம்' என்ற சிறப்படை மொழியில் இரண்டாம் குறளில் பாராட்டுகிறார். இவை இரண்டும் வள்ளுவரின் அழகுணர்ச்சிக்கு ஏற்ற எடுத்துக் காட்டாகும்!.

காமத்துப் பாலிலே பெண்களின் அழகை மிகப்பெருமை படுத்திப் பேசுகின்ற அழகுப்பித்தரான வள்ளுவரைக் காண் கிறோம் நாம். ஒரு குறட்பாவில், "கண் நிறைந்த அழகுடைய பெண்" என்று காதலியைப்புகழ்கிறார்.

"கண் நிறைந்த காரிகைக் காம்பேர் தோட் பேதைக்குப்
பெண் நிறைந்த நீர்மை பெரிது." (கஉஎஉ)

அதுமட்டுமல்ல, வள்ளுவர் அழகு ஆராய்ச்சியறிஞர் என்பதை கஉஎங-ஆம் குறள் விளக்குகிறது.

"காதலியின் அழகில்" காதல் குறிப்பும், இன்பவிழைவும் இருக்கிறது என்பர்![1]

'நலம் புனைந்துரைத்தல்', 'தகையணங் குறுத்தல்' தலைப்புகள் வள்ளுவரின் முருகியல் சுவைக்குப் பேரிலக்கியமாகும். அப்பாடல்கள் சாகா ஒளி வீசுவதைக் காண்கிறோம்.

"காதலன், காதலியைப் பார்க்கும்போது, அந்தப் பார்வையை விரும்பிய காதலி மெல்லச் சிரிப்பாள். அந்தச் சிரிப்பிலே ஒப்பற்ற அழகு விளங்குகிறது" என்கிறார். காம உணர்வைக் கடந்த அழகுவெறி இது, என்பதை ஆராய்கின்றவா உணரலாம்.[2] "காதலுக்குக் கண் இல்லை" என்பது நம அருந்தமிழ்ப் பழமொழி. உண்மையில் காம உணர்வு ஏனைய அறிவை மயங்கவைத்து மறக்கச்செய்யும் மாபேருணர்வே. அத்தகைய காம உணர்வில் ஈடுபடும் காதலன் கலைஉணர்ச்சி வாய்ந்தவனாக இருந்தால் ஒழிய காமமயக்கத்திலும் காதலியின் அழகையும், அவள் சிரிப்பு எழிலையும் சுவைக்க இயலாது. உண்மையில் ஓவியக் கலைஞர்களால் மட்டும்தான் எத்தகைய சூழ்நிலையிலும், எத்தகைய மம்மர்ப் பேருணர்விலும் அழகைச் சுவைக்க முடியும வள்ளுவர் காட்டும் காதலன் கலைஉணர்வு மிக்க அழகுப் பித்தனாக இருக்கிறான். இப்படி ஒரு இலக்கியப் படைப்பைத் தன்னுடைய சொந்த வாழ்க்கையில் துய்க்காமல் கவிஞனால் பாட்டில் இவ்வளவு அழகாக இந்நுண்ணிய ஒள் உணர்வை வடிக்க முடியவே முடியாது!.

பெண்களைக் குறிக்கும் போதெல்லாம ஆயிழை, சேயிழை, வளையல் அணிந்த கையள எனவெல்லாம் குறிப்பிடுவர். பெண்கள் அழகை மிகைப்படுத்திக் கொள்வதற்காகவே அணிகலன்களைப் பூணுவர். இவ்வுண்மையை வள்ளுவரே தெளிவாக்குவார். "பெண்மான் போன்ற மடநோக்கும் நாணத்தையும் உடைய அழகிய காதலிக்கு இவள் அழகோடு ஒவ்வாத - ஒரு தொடர்பும் இல்லாத-அணிகலன்களைச் செய்து அணிவது ஏனோ?" என்று க0அகூ-ம் குறட்பாவில் குறிக்கிறார்.

"பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு
அணி எவனோ ஏதில தந்து."

இக் குறட்பாவால் மகளிர் தம குறை அழகை நிறைவாக்கிக் கொள்ளவே பல்வகை அணிகலன்களைப் பூண்டனர் என்றும்,

---

1. மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதொன்று உண்டு. (கஉஎங)
2. அசையியற்கு உண்டுஆண்டோர்ஏஎர் யான்நோக்கப்
பசையினள் பைய நகும். (க0கூஅ)

நூல் தன் நவில்தொறும் சுவைதரும் நுண்ணயத்தை அருள் செய்யும்.

கல்லிலே தீ மறைந்திருந்து, அதனோடு மோதும் இரும்பினால் புறப்பட்டு ஒளிர்தல் போல, தமிழ்க் குறளில் பொதிந்து கிடக்கும் மாபெரும் புலமை ஆற்றல்களை அறிவெனும் எஃகால் ஆழ்ந்து இழைத்துத்தான் அறிவு ஒளியை, உண்மைத்தீயை அடைய முடியும்! இன்னும் திருக்குறள் திரைச்சேரியில் என்னென்ன கருவூலங்கள் ஒளிந்துகிடக்கின்றனவோ? வெல்லும் காலம், விரைவில் அவ் வெழிற் கருத்துக்களை வெளிக்கொணருமாக!

# தாண்டவம்

[டாக்டர். திரு. அ. சிதம்பரநாதச் செட்டியார்]

தமிழிலுள்ள தாண்டவம் என்ற சொல் சமக்கிருதத்திலிருந்து வந்தது எனப் பலர் தவறுதலாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். பாகவத புராணத்தில் தாண்டவா என்ற சொல் கூத்து என்ற பொருளில் வடமொழியில் வழங்கியுள்ளது உண்மையே யாகும். தாண்டு என்னும் திராவிட அடிவேரிலிருந்துதான் இச் சொல் உண்டாகியிருத்தல் வேண்டும். மலையாளம், கன்னடம் முதலியவற்றிலும் 'குதி' என்ற பொருளில் தாண்டு என்ற சொல் வழங்குகிறது. தெலுங்கில் 'தாடு' என்று இதே சொல் காணப்படுகிறது. இதைப் போன்ற அடிவேர்ப் பொருளைக் கூறுதலோ, இதனையொத்த வடிவம் பிற இந்திய-ஐரோப்பிய மொழிகளில் உண்டு என்று காட்டுதலோ வடமொழியினரால் மாட்டாமையின், இச்சொல் தமிழிலிருந்து வடமொழிக்குப் போனதொன்றே யாகும் என்பது புலப்படும்.

இவைபோன்ற பல்வேறு சொற்கள் தமிழிலிருந்து வடமொழியில் ஏறியிருந்தாலும், எடுத்துக் காட்டுவாரற்று இருத்தலாலும், எடுத்துக்காட்டலுறுவாரை ஏளனம் செய்வார் உளராதலாலும் உண்மை வெளிப்படாமல் மாசு படிந்து கிடக்கின்றது. இம் மாசினை நீக்கும் நாள் எந்நாளோ?

# பொதுப்பள்ளி எழுச்சி*

[பேராசிரியர். பெ. சுந்தரம்பிள்ளை, எம். ஏ.]

இத்தொடர், மூன்று சொற்களால் ஆகியது. பொது, பள்ளி, எழுச்சி என்பன அவை. பொது - எத்தெய்வத்தையும் முன்னிலைப்படுத்தாது, கடவுட் கொள்கையுடைய எவரும் வேண்டும் முறையில் 'எம்பெருமான்' என்றழைத்து வேண்டுவது. பள்ளி - படுக்கை பகல் முழுமையும் உழைக்கும் உடலுறுப்புக்கள் இரவில் இளைப்பாறுதல் அடையும் அவ் விளைப்பாறும் வேளையே உறக்கக்காலம். படுக்கையிற் படுத்திருந்தும் கவலையாலோ, சூழ்ச்சி நினைவாலோ தூக்கமில்லாதிருப்பதும் உண்டு. 'அனந்தல் ஆடேல்' 'வைகறைத் துயில் எழு' என்ற பொன்மொழிகள் அளவிறந்த காலம் தூங்கிக்கொண்டிருக்கலாகாதென்பதையும், விடியற்காலம் படுக்கையைவிட்டு எழுந்து மறுநாட்கு வேண்டும் பணிகளைப்புரிய முயற்சிக்கவேண்டும் என்பதையும் அறிவுறுத்துவன நள்ளிரவுக்குமுன் படுக்கைக்குச் செல்வதும், விடியற்காலத்தில் துயிலுணர்வதும் உடல்நலத்துக்கு ஒத்த முறை. "கூவினபூங்குயில், கூவின கோழி, குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்" இவைகளில் முதல் மூன்றும் இயற்கை எச்சரிக்கைப் பணியாளர்கள். கோயில் முதலிய இடங்களில் தொன்றுதொட்டுச் சங்கநாதப்பணிபுரிந்தவர்கள், ஓச்சர்கள் உவச்சர்கள் என்று அழைக்கப்பெறுவர். புதுமைக்காலத்தில் மின்சாரத் துணைகொண்டு செயற்கை முறையில் சங்கப்பணிகள் நடைபெறுகின்றன.

மக்களுக்கு உரிய ஒருநாள் 24 மணி வேளை; இரவு, பகல் என்ற இரு பகுதியது. இத்தகைய நாள்கள் 365 ஒரு வருடம் அல்லது யாண்டு ஆம். இவ் யாண்டு ஒன்று தேவர்கட்கு ஒரு நாள். ஓர் யாண்டு பன்னிரண்டு மதிகளுடையது. தை முதல் ஆனியீறாகப் பகல் என்றும், ஆடிமுதல் மார்கழி ஈறாக இரவு என்றும் தேவர் கணக்கிற் குறிக்கப்படும். ஒரு நாளை அல்லும் பகலும் அறுபது நாழிகை என்பதற்கேற்ப, அதனை எட்டாய்ப் பகுத்து ஏழரை நாழிகை அல்லது ௩-மணி கொண்டதை யாமம் என்பர். இங்ஙனம் பகலுக்கு நான்கு யாமங்களும், இரவுக்கு நான்கு யாமங்களும் ஆக எட்டு யாமங்கள் உள. "சேமம் புகினும் சாமத்து உறங்கு" என்பது ஔவை மொழி. நடு யாமத்து உறங்குதல் வேண்டும்; கடையாமத்து விழித்து எழுதல் வேண்டும். இவ் வேளைதான் மனந்தெளிந்திருக்கும்;

* "விவேகசிந்தாமணி" என்னும் திங்கள் வெளியீட்டில் வெளி வந்தது.

இறைவனை எண்ணி வழிபட்டுப் பின் பணிகளை நிறைவேற்றற் குரியது. "வைகறையாமந் துயிலெழுந்து தான் செய்யும்" என்றார்; திருவாயில்முள்ளியார். எழுச்சி - எழுதல்.

சைவசமயாசிரியர் மாணிக்கவாசக அடிகளும் வைணவ நங்கைமணி நாச்சியாரம்மையும் இறைவனை முன்னிலைப்படுத்தித் திருப்பள்ளி எழுச்சி பாடியுள்ளார்கள். மணிமொழியில், தம்முள் நட்புடைய பல பெண்டிர் தங்கள் தோழியாகிய ஒருத்தியைத் துயிலுணர்த்தற் பொருட்டுக் கூறிய பாட்டாக அமைந்த திருவெம்பாவையில், மார்கழி மாதத்தில் (தேவர்களின் விடியற்கால வேளையில்) விடியற்காலை, குளத்தில் முழுகச் செல்லும் பெண்டிர், தம்மவரை அழைப்பதாகவும் தம்முட் பேசிக்கொள்வதாகவும் சொல்லிப்பாடுகின்றனர். தத்துவப் பொருளாளர், மனோன்மணி, சர்வபூததமணி, பலப்பிரமதணி, பலவிகரணி, கலவிகரணி, காளி, இரௌத்திரி, சேட்டை, வாமை என்னும் ஒன்பது சத்திகளுள், முன் நின்றவர் பின் நின்றவரைத் துயில் எழுப்புவதாகவும், எல்லாருங்கூடி இறைவனை வழுத்தும் பொருட்டுத் தம்முட் பாடுவதாகவும் இயம்பிய பாடல்கள் திருவெம்பாவையாகும் என்பர்.

சத்திகளின் இயக்கத்தால், அனந்தர்வாயிலாக அசுத்த மாயைக்குக் கீழ்ப்பட்டவற்றின் படைப்பு நிகழும் என்ப. "போற்றியருளுக" என்ற 20 ஆ-ம் பாட்டில் சட உலகிற்கும் சித்துலகிற்கும் ஆதியும் முடிவுமாய் இறைவன் நிற்பதையும், உயிர்கள் முத்தொழிற்படுவதையும், யான் எனது என்னும் செருக்கில் உயிர் ஆழ்ந்து மறைப்புத் தொழிற்படுவதையும், அருளலையும் குறித்துளார். இறைவனது ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழிலும் இங்குக் கூறப்பட்டுள.

மார்கழி மாதம் உதயகாலமாய்ப் படைப்புக் காலத்துக்கு ஏதுவாகும். உலகப்படைப்பைத் திருவுளத்து அமைத்து வைந்தவ சத்தியைப் படைக்கத் தொடங்குகிற காலமே திருப்பள்ளி எழுச்சி என வழங்கும். திருப்பெருந்துறைப் புராண ஆசிரியர், மகாவித்துவான், திரு. மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் திருப்பள்ளி யெழுச்சியாவது, பணிவிடை கேட்டு ஆர்வமுடன் ஆண்ட அரற்கு அன்புசெயும் இயல்பு என்றதும் ஈண்டுக் கருதற்குரியது.

இனி, நம் பேராசிரியர். பெ. சுந்தரம்பிள்ளை அவர்கள் பாடியுள்ள பொதுப்பள்ளி யெழுச்சியிற் சொல்லப்படுவன என்ன என்பதைக் கருதுவாம்.

மக்கள் எச்செயலைச் செய்ய முற்படினும் இறைவன் திருவருளை முதற்கண் நாடவேண்டும். மக்கட்குத் தூய உள்ளம் இன்றியமையாதது. பால் குடித்து வாழவிருக்கும் இளங்கன்றை அதன் தாய்ப்பசுவினிடம் ஒட்டி ஊட்டுவர்; அதுபோல் நன்மை தீமை அறியாதார்க்கு நல்வழி காட்டி ஒழுகுவிக்க வேண்டும். மனத்தூய்மையே வீட்டுக்கு வித்து. மனம் நன்னெறியில் நிற்க இறை அருள்வேண்டும். பலவகைத் தொழில்களும் ஓர் கடல். அதில் உடலாகிய தோணியைச் செலுத்திப் பயனடைய வேண்டும். உடலோ பல ஓட்டை யுடையது. காமம், வெகுளி மயக்கம் ஆகிய மூன்று குற்றங்களும் மூன்று ஓட்டைகளாம் இஃதன்றிக் கன்மேந்திரியங்கள், ஞானேந்திரியங்களாகிய பத்து நரிகளின் சேட்டைகட்கோ எல்லையில்லை. இப் பத்தும் பொய்யை மெய் எனக் காட்டி ஏய்ப்பதனால், நரிகளென்றார் திருமூலனார். இச் சேட்டைகள் ஓய்ந்தாலே கன்மக் கடல் கடந்து முத்திக்கரை ஏறலாம் அஞ்ஞான இருள் நீங்க இந்திரியச்சேட்டை ஒழிய வேண்டும். அகங்காரம் அற்று நல்லற வழியில் நிற்க வேண்டும். தீய நினைவுகள் துன்பங்கள் என்கின்ற துருவழுக்கு மன இரும்பைப் பற்றாதிருக்கவேண்டும். மன இரும்பு இறைவன் அருள் என்னும் காந்தவயபபட வேண்டும் தற்போதம் தான் எனும் முனைப்பு - அறவேண்டும். இறையடி ஞானம் உறவேண்டும். பத்திவழியே முத்திவீடு அடைதல் எவ்வுயிர்க்கும் எளிதே.

### ஆசிரிய விருத்தம்

பரிதியின் ஒருசிறு கதிர்வரும் வெளியே
பலஅணுத் திரளினம் இலகுறும் உறையே
கருதரு நினதருட் கதிர்வர அடியேம்
கரணமும் புவனமும் புரணம துறவே
உருவற விழுங்கிய உறக்கம்விட் டெழுந்தோம்
உன்னருள் பரவிட உவந்திவண் இருந்தோம்
இருதயத் தினிச்சகம் ஏறிடு முன்னம்
எம்பெருமான் எம்முள் எழுந்தரு ளாயே.

பரிதி - சூரியன், செங்கதிரோன், ஞாயிறு, கதிர்வட்டம். கதிர் - ஒளி. வெளி - வெளியிடம், விண், ஆகாயம். (Space). அணுத்திரள் இனம் - அணுக்கூட்டவகை. இலகுறும் - விளங்கும். உறை - இருப்பிடம். கருதரு - நினைக்கமுடியாத. அருட்கதிர் - அருள் ஒளி. கரணம் - கண் முதலிய புறக்கருவிகளும், மனம் முதலிய அகக்கருவிகளும். புவனம் - உலகம். புரணம் - வெளிப்படல், தோற்றல். உரு - வடிவு. இவண் - இவ்விடம். இருதயம் - உள்ளம், நெஞ்சு. சகம் - உலகம்; ஈண்டு உலக வழக்கு முதலிய.

(க)

ஒன்றிய விவேகமாம் உயர்குணம் போக
உண்பதும் உடுப்பது மேகதி யாக
நின்றுழ லாவகை நெஞ்சில்நீ நின்று
நிட்கள சித்தமே சத்கதி என்று
நன்றுடன் தீதுணர் நடுநிலைப் பேறே
நல்கிய நின்னருட் கென்னகைம் மாறே
இன்றுமத் தொல்லருள் எமையுவந் தாள
எம்பெருமான் எம்முள் எழுந்தரு ளாயே.

ஒன்றிய - பொருந்திய. கதி - வழி. உழலா - அலையாத, வருந்தாத. நிட்கள - களங்கமற்ற, தூய. சித்தம் - உள்ளம், மனம் சத்கதி - நல் வழி. நன்று தீது - நன்மை தீமை. நடு நிலைப்பேறு - மனோசாட்சி, மனச் சான்று, (Consience), "நெஞ்சத்து நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமை யாற், கல்வி அழகே அழகு" என்பது நாலடி. கைம்மாறு - பதிலுதவி. தொல் - பழமையான. ஆள - ஆட்கொள்ள. (௨)

நன்றெனத் தீதென நீநடு நின்று
நல்லொளி காட்டியுஞ் செல்லலற் றின்று
நின்றனம் நடுதறி என்றிடக் கட்டி
நிறுத்திய கயிற்றை அவிழ்த்தும்பின் தட்டிக்
கன்றைநற் றுயிடம் விடுத்திடு மாறே
காட்டிய நல்வழி கூட்டிவை பேறே
என்றுநின் நல்லரு ளன்றியொன் றெய்தேம்
எம்பெருமான் எம்முள் எழுந்தரு ளாயே.

செல்லல் - செல்லுதல், போதல். நடுதறி - நடப்படுமுளை, கட்டுத் தறி. கயிற்றை அவிழ்த்தும் பின்தட்டிக் கன்றை நற்றுயிடம் விடுத்திடு மாறே - கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்து விடுப்பினும் தாயிடம் சேராக் கன்றைத் தட்டி ஏவுதல் வழக்கம். "புலனைந்தும் அகத்தடக்கிப் புலம்பி நோக்கிச் சருத்தினால் தொழும் அடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் **நடுதறியைக்** காணலாமே" என்ற அப்பர் அருள்மொழியுங் காண்க. எய்தேம் - அடையோம். (௩)

சித்தநற் சுத்தியே முத்தியின் வித்தாத்
தேற்ற நீததந்தும்பின் சிற்றின்பம் பற்றுத்
தத்துறு வேமையிச் சழக்கிற்கை தூக்கிச்
சடத்தும் போக்கிநின் தன்வய மாக்கி
நித்தம்எம் திரிவித கரணநன் னெறிக்கே
நின்றிட அமைத்தருள் நின்றிதிற் குறுக்கே
எத்தனை வரினுங்கே டத்தனை யுங்காத்
தெம்பெருமான் எம்முள் எழுந்தரு ளாயே.

வித்தா - முளையாக. தேற்றம் - தெளிவு, உண்மையறிவு. பற்று - பற்றி; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் செய்து என் எச்சப் பொருளில் வந்தது. தத்துறுவேமை - வருத்தப்படுகின்ற எங்களை. சழக்கு - மயக்கம், தளர்ச்சி. சடத்துவம் - சடமாயிருக்குந்தன்மை, அறிவின்மை. திரிவித கரணம் - மூன்று வகையான மனம், வாக்கு, காயம். குறுக்கே - ஊடே, இடையே, நடுவே. (ச)

தப்பரும் பலதொழிற் சாகர நடுவே
சடலமென் சிறுதோணி விடவொருப் படுவோம்
முப்பெருங் குற்றமா மூன்றுள வோட்டை
மொழிமுதற் றுணைகளோ வொழிகில சேட்டை
எப்புறம் பார்க்கினும் தப்பருங் கேடே
எங்ஙனந் துழாவியாம் எய்துவம் வீடே
எய்ப்பினின் நின்னருள் இளவளி ஈவான்
எம்பெருமான் எம்முள் எழுந்தரு ளாயே.

தப்பரும் - தப்பமுடியாத. தொழிற்சாகரம் - வேலைக்கடல், செயற் கடல். சடலம்-உடல்; ஈண்டு உடலைத் தோணி என்னும் இவவாசிரியர், தம் மனோன்மணீயம் இரண்டாம் அங்கத்தில் இவ்வுயிர் வாழ்க்கையாம் பெருங்கடலுள் போம் "**மாக்கலனும் ஆடவர்நெஞ்சம்**" என்பர். அப்பர் அடிகளும் "மனம் எனுந் தோணிபற்றி" என்றனர், திருநேரிசையில். ஒருப்படல் - இணங்குதல்; துணிதல். முப்பெருங் குற்றம் - மூன்று பெரிய குற்றங்கள். காமம், வெகுளி, மயக்கம். முற்றுங் கடியப் பெறாதலால் பெருங் குற்றங்களாயின. மொழி முதற்றுணை - வாக்கு, பாதம், பாணி, குதம், உபத்தம் என்ற கன்மேந்திரியங்களும், கண், செவி, வாய், மூக்கு, மெய் என்ற ஞானேந்திரியங்களும் சேட்டை ஒழிகில - துன்பஞ்செய்யா தொழிகின்றில. துழாவி - கிளறி, ஆராய்ந்து. எய்ப்பு - இளைப்பு. இளவளி - இளங்காற்று ஈவான் - கொடுக்கும் பொருட்டு. வீடு - முத்தி, மோக்கம், விடுபடுதல். (ரு)

நித்திரை செயுமனை நெருப்புறப் படையும்
நெருங்கவிட் டேகு வார்நெஞ்சக் கிடையும்
உத்திகொண் டோடுநாய்க் கொருமுழங் கூட்டி
ஓச்சிடுங் கல்லும்போ லாக்கம்பா ராட்டி
சித்தத்துஞ் செறியாது தீவினை வெருவிச்
சேட்டித காமாதிக் கூட்டமுற் றொருவி
இத்தகை எம்பணி முற்றிடும் வண்ணம்
எமபெருமான் எம்முள் எழுந்தரு ளாயே.

படை - சேனை. நெஞ்சு - மனம். அசசக்கிடை - அச்சத்தின் தன்மை. ஓச்சிடும் - எறியும்; வீசும். சேட்டித - தொழிற்படுதலான- ஒருவி - நீங்கி. (சு)

நல்லது கண்டுமற் றல்லது பற்றும்
நாணறு சங்கற்ப நலிபடை சுற்றும்
எல்லையிலா வெளி மானதக் கோட்டை
இந்திரி யப்படை யிதிற்செய்யுங் கேட்டைச்
சொல்லவோ வாயில்லை சூழிருள் மூலஞ்
சுதந்திர மற்றுளம் சோர்ந்திடுங் காலம்
இல்லையுன் அருளொளியில் எங்ஙன முய்வோம்
எம்பெருமான் எம்முள் எழுந்தரு ளாயே.

சங்கற்பம் - கொள்கை, துணிவு. நலி - வருத்து கோட்டை - மனசாகிய கோட்டை. கே - -டை - அரண். இருள்வழி.

வெங்கதிர்ச் செல்வனும் திங்களும் விண் - ம்
வீசுமா சுகம்கனல் விரிபுனல் மண்ணும்
தங்குநின் ஞெயில் தந்தொழிற் பரணஞ்
சந்ததம் புரிவபோல் எந்தனு கரணந்
துங்கநல் லறவழி தங்கிநின் றொழுகச்
சுந்தரம் அடியேங்கள் அகங்கர நழுவ
இங்குநின் தொல்லருள் ஈந்தளித் திடுவான்
எம்பெருமான் எம்முள் எழுந்தரு ளாயே.

ஆசுகம் - காற்று. பரணம்— - ; சந்ததம் - எந்நாளும். தனுகரணம் - உடம்பு, கருவி. துங்க - உயர்வான. அகங்கரம் - அகங் காரம், நான் எனும் செருக்கு.

(அ)

குணக்கெழு கதிரவன் குடக்கடை முனமே
குறும்புசெய் தழித்திடுங் கொடுவினை வினமே
கணக்கிட எளிதல கருத்திடைக் கூடிக்
கவலைசெய் அவலமோ கணங்கணங் கோடி
பிணக்குறும் உளத்தினி அழுக்கிவை போகப்
பேரருட் காந்தத்தின் நேரிரும் பாக
இணக்கிநின் பதந்தர இதுவொரு தருணம்
எம்பெருமான் எம்முள் எழுந்தரு ளாயே.

குணக்கு - கிழக்கு. குடக்கு - மேற்கு. குறும்பு - சேட்டை. அவலம் - வருத்தம், கேடு. பிணக்கு - மாறுபாடு. காந்தத்தின் நேர் இரும்பு ஆக - காந்தம் முன் வலிக்கப்படும், - இணக்கி - [illegible] க்கப்படும் இரும்புபோல்.

(௯)

தங்கிய இருளிற்சஞ் சரிக்குமின் மினியாச்
சலிக்குஞ்சார் போதமே சதமென மதியா
சங்கைகொள் உளத்தராத் தலைதடுமாறுந்
தருக்கிகள் போம்வழி ஒழித்திது காறும்
பொங்கிய கருவமும் புலமையும் விடுத்தோம்
புத்தியின் பத்தியே பொருளென அடுத்தோம்
இங்குமற் றெளியேங்கட் கிந்நெறி போதும்
எம்பெருமான் எம்முள் எழுந்தரு ளாயே.

சலிக்கும் - அசையும், தளரும். போதம் - அறிவு. சதம் - உறுதி. ஆசங்கை - ஐயம், தடை. புத்தியின் - புத்தியைவிட. (க0)

# அருளே வென்றிடும்

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

நினைத்தால் சிரிக்கும் விஞ்சைகளை
நொடிது முடிக்க வல்லவராம்
நினைத்தால் எல்லாம் தந்தருளும்
நிமலன் அருளைப் பெற்றவர்க்கு
நினைத்தால் ஆகாச் செயலுண்டோ
நேர்மை தவறும நெறியுண்டோ
அனைத்து உலகும் ஆண்டாலும்
அருளே உலகில் வென்றிடுமே! (க)

பொன்னை மிகவும் பெற்றாலும்
பொருளே அதிகம் பெற்றாலும
மின்னார் முறுவல் மஙகையரின்
மேவல் மிகவும் பெற்றாலும்
தன்னே ரில்லாப் பதவிகளின்
தயவை மிகவும் பெற்றாலும்
பொன்னார் கொன்றைச் சடையானைப்
போற்றல் வேண்டும் புன்மனமே! (உ)

# முப்பாலும் முதுசொல்லும்

[திரு. கு. பரமசிவன் பி. ஏ. (ஆனர்சு)]

நயமாகப் பேசுதலிலோ எழுதுதலிலோ, நன்முறையில் கருத்தை விளக்குதலிலோ, நாட்டமுள்ளோர் பழமொழிகளைப் பயன்படுத்துதல் மரபாகும். பொதுமக்களேயன்றிப் புலவர் பெருமக்களும் இம் மரபினைப் போற்றுவர். சங்க இலக்கியங்கள் முதலாகத் தற்கால நூல்கள்வரை எல்லா நூல்களிலும், பழமொழிகளுள் ஒன்றோ பலவோ இடம் பெற்றிருத்தலைக் கற்றோர் உணர்வர். கருத்துக்களை விளக்குதற்குத் திருவள்ளுவர் உவமைகளையே அன்றிப் பழமொழிகளையும் கையாண்டிருக்கிறார்.

அறம் பயக்கும் இனிய சொற்கள் உளவாகவும், அவற்றை விடுத்து, இன்னாத சொற்களை ஒருவன் கூறுதலின் அறியாமையினையும் அரும்பயன் இன்மையினையும் விளக்க வந்த ஆசிரியர் வள்ளுவர், 'கனியிருப்பக் காய் கவர்தல்' என்னும் தொடரைப் பயன்படுத்தியுளளார்.

"இனிய உளவாக இன்னாத கூறல்
கனிஇருப்பக் காய்கவர்ந் தற்று." (கOO)

இனிய உளவாக இன்னாத கூறலுக்கு உவமையாகக் 'கனியிருப்பக் காய் கவர்தல்' வந்ததெனினும் இத்தொடர் ஒரு பழமொழித்தொடர் என்பது அறியத்தக்கது. அரனைத் தொழாது, அவத்தமே வாணாளைப் போக்குவாராய புல்லறிவினரின் தன்மையை அப்பரடிகள் ஆரூர்ப் பதிகம் ஒன்றில் பழமொழிகள் பலகொண்டு புலப்படுத்துகின்றனர். அப் பதிகத்துள்,

"கொய்புலா மலர்சசோலைக் குயில்கூவ
மயில்ஆலும் ஆரூரரைக்
கையினால் தொழாதொழிந்து கனிஇருக்கக்
காய்கவர்ந்த கள்வனேனே"

எனவரும் அருள்வாக்கால் 'கனியிருப்பக் காய் கவர்தல்' பழமொழித் தொடர் என்பது பெறப்படும். அப் பதிகத்தின் ஏனைய பாடல்களின் ஈற்றடிகளில், "முயல்விட்டுக் காக்கைபின் போனவாறே" "இருட்டறையின் மலடு கறந்து எய்த்தவாறே" என்பன முதலாய பழமொழிகள் வருதலும், அப் பதிகத்திற்குப்

'பழமொழிப் பதிகம்' என்னும் வழக்கு[1] உண்மையும் இக் கருத்தை வலியுறுத்தும்.

மக்களிடையே ஓர் ஒழுக்கத்தை வலியுறுத்திக் கூற விழை வோர், மக்களால் கைகூடற்கரிது என்று கருதப்படும் ஒரு செயலும் தாம் வற்புறுத்தும் ஒழுக்கத்தால் எளிதாக நிறை வேறும் என்று எடுத்துரைத்தல் இயல்பு. நோற்பாரது ஆற்றலின் ஏற்றத்தைக் கூறவந்த பொய்யில் புலவர், செயற்கரிய செயலொன்றும் தவமுடையார்க்கு எளிதாகும் என்றுரைப் பதன் மூலம் தவவொழுக்கத்தின் உயர்ச்சியைப் புலப்படுத்து கிறார் :

> " கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
> ஆற்றல் தலைப்பட் டவர்க்கு " (உசுக)

இங்குக், கைகூடற்கரிய செயல் என்பதனாலேயே 'கூற்றம் குதித்தல்' நோற்றலின் ஆற்றலை விளக்குதற்கு எடுத்தாளப் பட்டது என்பர். அருஞ்செயலும் கைகூடும் எனக் கூறுதலே வள்ளுவர் கருத்தாயின் ஏதேனும் ஓர் அருஞ்செயலைக் குறிப்பிட் டிருப்பர். 'கூற்றங் குதித்தல்' எனும் தொடரை அவர் எடுத்தாண்டதன் உட்கிடை ஒன்று இருத்தல் வேண்டும். " கூற்றம் குதித்து உய்ந்தார் இல்லை " என்பது போன்றதொரு பழமொழி மக்களிடையே பெருவழக்கிற்றாக அவர் காலத்து இருந்தமையினாலேயே அததொடரை வள்ளுவர் ஆண்டார் என்றெண்ணுதற்கு இடமுண்டு.

> " இழைத்த நாள் எல்லை இகவா பிழைத்(து)ஒரீஇக்
> **கூற்றம் குதித்(து உய்ந்தார்** ஈங்(கு)இல்லை—ஆற்றப்
> பெரும்பொருள் வைத்தீர் வழங்குமின் நாளைத்
> தழீஇம்தழீஇம் தண்ணம் படும " (௬)

எனவரும் நாலடியார்ச் செய்யுளாலும்,

> " வளமையும் தேசும் வலியும் வனப்பும்
> இளமையும் இற்பிறப்பும் எல்லாம்—உளவாய்
> மதித்(து)அஞ்சி மாறும்அஃ(து) இன்மையால் **கூற்றம்**
> **குதித்(து உய்ந்து அறிவாரோ இல்** " (௩௬௧)

எனவரும் பழமொழிநானூற்றுப் பாடலாலும் 'கூற்றம் குதித்தல்' என்பது பண்டைக் காலதது வழங்கியதொரு பழமொழியின் தொடர் என உணர்தல் கூடும். கால வேறுபாடு, இம் மூன்று நூல்களிலும் இப் பழமொழியின் வடிவ வேறு பாட்டுக்குக் காரணமாகலாம். " நாய்வால் திருந்துதல்

1. " திருவாரூர் "—தருமபுர வெளியீடு (1949)—பக். 57.

"ஓர் அறையுள் பாம்போடு உடன் உறையும் ஆறு" (பழ: உ௫௩) எனவும், "வெள்ளத்தது அனைய மலர் நீட்டம்" (குறள் : ௫௯௫) என்பது "நீர்வரையவாம் நீர்மலர்" (பழ: ௩எசு) எனவும் வழங்கின வாகும். இவற்றால் எல்லாம் பெறப்படுகின்ற இயல்பான முடிவு, ஏற்றதொரு பழமொழியால், எடுத்த கருத்தை விளக்கும் இயல்பு, வள்ளுவரிடத்துக் காணப்படும் என்பதேயாகும்.

சுருங்கிய சொற்களிலே பெருகிய கருத்துக்களை உள்ளடக்கிக் கூறும் தெய்வப்புலவரின் மாட்சியை வியந்து, தெள்ளு தமிழ்ப் புலவோர்,

"கடுகைத் துளைத்(து)எழ் கடலைப் புகட்டிக
குறுகத் தறித்த குறள்."

என்றும்,

"அணுவைத் துளைத்(து) எழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்."

என்றும் போற்றினர். பல குறட்பகுதிகள் பழமொழிகள் ஆகும் எனக் கண்டோம். எஞ்சிய பகுதியிலே-அரைக்கடுகில்-அணுவிற் பகுதியில்-ஆன்ற கருத்துக்களைத் தோன்ற உரைத்த செந்நாப்போதாரின் செந்தமிழ்ச்சொல்லாட்சித்திறன் நினைந்து நினைந்து வியந்து போற்றற்குரியதாகும்.

## அறிவு

(நாகை. திரு. த. சி. வேலன்)

அறிவெனப் படுவது யாதெனக் கேட்கின்
கண்டவை கேட்டவை உண்டவை உயிர்த்தவை
உற்றறிந் தவையெலாம் ஒருங்கே கூட்டி
காலம் நிலைமை கருதிய சூழ்நிலை
இனிவரும் உலகின் இயல்பு என்றிவை
அனைத்தும் ஆய்ந்து அத்துடன் பனுவல்
பகர்வன பலவும் பார்த்துத் தெளிந்து
கொள்வன கொண்டு தள்ளுவ தள்ளி
சரியெனப் பட்டதைத் துணிவுடன் கூறும்
ஆற்ற லதுவே அறிவெனப் படுமே.

பேராசிரியர், பன்மொழிப்புலவர், பண்டித புலவ வித்துவ

ஞா. தேவநேயப் பாவாணர்

*எம். ஏ., பி. ஓ. எல்., அவர்கள்*

*சேலம் நகராண்மைக் கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராயிருந்து*
*அண்ணாமலைப் பல்கலைக்கழகத்து மொழியாராய்ச்சித்துறை*
*வாசகராய்ச் செல்வதுபற்றிச்*

சேலம் திருவள்ளுவர் கழகத்தார் வழங்கும்

# பிரிவியல் வாழ்த்து

தென் தமிழ்நாடுமுன் செய்யறப் பயனாய்
வந்திடும் பெரியோய்! மாண்புடைத் தமிழ!
கருமுதற் றொடங்கி வருபுலச் செல்வ!
வரன்முறை யாமொழி வகையா ராய்ச்சிக்
கலைபல தேர்ந்தோய்! கால்டுவெல் ஐயர்
“ நிலைத்தமிழ் வடமொழித் துணைவேண் டாது
தழைத்திடும்; வழங்கும்; சாலுறும் ” என்று
சொற்றனர் அதனை முற்று மெய்ப்பித்துக்
காட்டவும் நன்கு நாட்டவும வல்லாய்!
ஒல்காப் பெருமைத் தொல்காப் பியம்முதல்
கற்றுத் துறைபோய் முற்றிய அறிஞ!
ஆங்கில மொடுபல தீங்கறத் தெளிந்தோய்!
சுட்டு விளக்கம், கட்டுரை வரைவியல்,
பழந்தமி ழாட்சி, பழமொழித் தொகுப்பு,
ஒப்பியல் மொழிநூல், ஒளிர்முதல் தாய்மொழி
செப்பிய நலத்துத் தேவ நேய!
இனும்பல ஆய்வுகள் இனம் பல வாக
தனித்தமிழ் மிளிர்வொடு நுனித்தறிந் தளித்தோய்!
ஆய்ந்து கற்றும் அழகுறச் சுவைத்தும்
ஏய்ந்திடப் பயன்பல எழுதியும் யாத்தும் நீ
விளைத்திடு நலத்தை விளங்கக் கூறி
விரிப்பின் பெருகும்; தொகுப்பின் எஞ்சும்.
சேலம் கல்லூரி சாலவும் சிறக்கத்
தமிழ்த்துறைத் தலைமை செலுத்திச்செல் செம்மால்

அங்ஙனம் உணருமாறு முதன் மூன்று திருப்பாட்டுக்களை ஈண்டு எடுத்து விளக்குதும் :

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

இதன் பொருள் : அந்தணர் வானவர் ஆனினம் ஆகிய மூவரும் வாழ்க. தண்புனல் வீழ்க. வேந்தனும் ஓங்குக. (தீயது ஆழ்க. எல்லாம் அரன் நாமம் சூழ்க.) வையகமும் துயர் தீர்க.

சிறப்பு வகையால் தெய்வத் தன்மை எய்திய அறுவரையும் வாழ்த்துதல் கடவுள் வாழ்த்தோடொக்கும். இவ்வுண்மை வரும் தொல்காப்பிய நூற்பாவான் விளங்கும் :

அமரர்கண் முடியும் அறுவகை யானும்
புரைதீர் காமம் புல்லிய வகையினும்
ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப (தொல். பொருள்—௮௪)

இதன் கண் சுட்டப்படும் அறுவராவார் : முனிவர், பார்ப்பார், ஆனினம், மழை, முடியுடை வேந்தர், உலகு எனப்படுவோராவர். இம் முறையே திருப்பாசுரத்தின் கண்ணும் அந்தணர் முனிவரெனவும், வானவர் பார்ப்பாரெனவும், ஆனினம் ஆனினம் எனவும் கூறப்படும். வானவர் என்போர் நன்மையும் அழகும் பெருமையும் வலிமையும் ஆகிய நான்மையும் ஒருங்கமைந்த எழுத்தறிவிக்கும் இறைவராவர். அந்தணராவோர் நூலருளும் முறைவராவர். ஆனினம் இவ்விருவர் போன்று அனைவர்க்கும் இன்றியமையாப பயன் ஈயும் எழிலினமாகும். மழையும் கைம்மாறு கருதாக் கடப்பாட்டதாகும். மேற் கூறிய ஐந்தும் பேருலகினுக்குப் பெரும்பயன் அளிக்க இடையறாது இடை நின்று காப்போன் முடியுடை வேந்தனவன். இப்பயன் அனைத்தும் நிறைவுறுவன உலகு உயிர்களினிடத்தே யாம். இவை நிகழ்வன அரன் நாமமாகிய 'சிவயநம' என்னும் செந்தமிழ்த் திருவைந்தெழுத்தின் திருமறையினை அகம் புறம் தூய்மையாய் ஓவாது கணிக்கும் ஒண்மை ஒழுக்கத்தாலாம். 'வையகம் துயர் தீர்க' என வாழ்த்துதல் துயர் தீர்ந்து இன்புறுக என வாழ்த்தும் குறிப்பிற்றும்;

இனிச் சிவஞான போத முதற் சூத்திரம் :

அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர். (மெய்—௧.)

இதன்கண் கூறப்படும் அவன் அவள் என்பது அந்தணர் வானவர் என்னும் பொருளோடு இயையும். அது, என்பது ஆனினம் என்பதனோடு இயையும். மழை வீழ்தல் தோற்றத் தினையும், வேந்தன் ஓங்குதல் நிலையினையும், தீயது ஆழ்தல் ஒடுக்கத் தினையும் குறிப்பனவாகும். எனவே இவை மூவினைமை யின் பொருளோடு இயையும். எல்லாம் அரன் நாமமே சூழ்க என்பது தோற்றிய திதியே என்பதனோடு இயையும். அரன் நாமமே ஓதுதல் வினைச் செவ்வி; அஃது ஆதி என்பதனோடியை யும். துயர் தீர்க என்பது மலச் செவ்வி; அஃது அந்தம் என்பதனோடியையும். என்மனார் புலவர் என்பது திருமுறைப் பெருமக்களைக் குறிக்கும். நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறினேன் கண்ணுதலோன் ஆதலின், அவன் அடியாரும் பொய்யடிமை இல்லாத புலவரெனப்பட்டனர். இக்குறிப்பினை நினைவு கொள்ளுமாறு ஒரு வெண்பாவில் வரைகின்றாம்.

அந்தணரே வானவர் ஆனினம ஆமஅவை
வந்தவீழ் ஓஙகஆழ் மூவினைமை—பந்தவெல்லாம்
உள்பொருளாம் நாமம்வினை ஓய்வுதுயர் தீர்கமலம்
கொள்சிவஞா னப்போதக் கூறு.

"அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்
எரியர் ஏறுகந் தேறுவர் கண்டமும்
கரியர் காடுறை வாழ்க்கையர் ஆயினும்
பெரிய ராரறி வாரவர் பெற்றியே,"

இதன் பொருள், முழு முதற் சிவன் 'மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன்' ஆதலின் அறிவாற் காண்டற்கரிய காட்சிய ராவர். அவர் தம் திருக் கையில் அறிவொளியாகிய இயற்கைச் சுடர் விளங்கிக் கொண்டிருப்பதால் அருட் கண்ணால் காணும் விளக்கினராவர். அறஞ்சாரும் நல்லுயிர்களை உடனின்று செலுத்தும் குறிப்பாக ஆனேற்றினை உகந்து ஏறுவர். ஆருயிர் கள் சிவனை மறப்பதாகிய பெரும் பிழையினை மன்னிக்கும் அடையாளமாகிய திருநீலகண்டத்தர், பேரொடுக்கப் பெரு வெளியாகிய காட்டின்கண் உறைகின்ற வாழ்க்கையர். அத்தகைய ஐந்தொழிலுடையவராயினும் அளத்தற்கரிய பெரியவராவர். அவர் தன்மையினை அறிவார் எவரும் இலர்.

"அவையே தானே ஆயிரு வினையின்
போக்கு வரவு புரிய ஆணையில்
நீக்கமின்றி நிற்கும் அன்றே." (மெய்—உ.)

அவையே ஆய் என்பது உடலுயிர் போல் கடவுள் உலகுயிர் களுடன் ஒன்றாய் இருத்தல். இஃது அரிய காட்சியர்

என்பதனோடு இயையும். தானேஆய் என்பது கண்ணும் கதிரவனும போன்று பொருள்தன்மையால் கடவுளும் உயிரும் வேறாக இருத்தல். இது தமதங்கை சேர் எரியர் என்பதனோடு இயையும். அவையே தானேஆய் என்பது கண்ணொளியும் உயிர் அறிவும் போன்று உடனாயிருத்தல். இஃது ஏறுகந்து ஏறுவர் என்பதனோடியையும். இம் மூன்றுமே ஒன்றாய் வேறாய் உடனாம் மெய்ப்புணர்ப்பினைக் குறிப்பதாகும். இதுவே புனித மெனும் அத்துவிதமாகும். இருவினை என்பது தன்முனைப் புடன் செய்யும் இருள்சேர் இருவினை. இது கண்டமும் கரியர் என்பதனோடியையும். போக்கு வரவு புரிய என்பது உயிர்கள் இறந்து பிறந்து வருதல். இது காடுறை வாழ்க்கையர் என்பதனோடியையும். ஆணை நிலை என்பது திருவருளாற்ற லுடன் பிரிப்பின்றி நிற்கும் பெற்றி எய்துதல். இஃது ஆயினும் பெரியர் என்பதனோடியையும். நீக்கமின்றி நிற்கும் என்பது ஆணையோடும் இருவினையோடும் ஆருயிரோடும் அண்டத்தோடும் பிரிப்பின்றி நிற்றல் இஃது ஆரறிவார் அவர் பெற்றி என்பதனோடியையும். அருளே அறியும் என்பதும் அவ்வருளே ஆருயிர்க்கும் அறிவிக்கும் என்பதும் குறிப்பு.

காட்சிதீ ஊர்தல்முப் பின்னல்கண் டஙகருமை
ஆட்சிவினை போக்குவர வாம்காடு—தாட்சியிலா
ஆம்பெரிய ராணைநிலை நீக்கமின்றி ஆரறிவார்
தாம்பெற்றி பின்னூற்பா சாற்று.

பின்னல்—புணர்ப்பு; அத்துவிதம்.

"வெந்த சாம்பல் விரையெனப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தி யாஎழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யாரவர் எவ்வகை யார்கொலோ."

இதன் பொருள், பேரொடுக்கத்தின் பின்னும் தானே ஒடுங்காது நிலைபெறும் முழு முதன்மையர் என்பதனை அச் சிவ பெருமான் மேல் பொலிந் திலங்கும் திருவெண்ணீறு காட்டும். அனைத்துயிரும் உய்யும் வழி காட்டும் திரு நீறாதலின் அதனை மணப் பொருளாகப் பூசினர். தானே தனி முதலாதலின் பிறப்பு இறப்பு இல்லாதவராவர். அக்குறிப்பே தந்தையாரொடு தாயிலர் என்பது. அவரையே நினைந்து திருவைந்தெழுத் தோதித் திருவருள்வழி நின்று முயல்வார் தம் முத்திற வினையையும் தீர்ப்பர். அவர் எந்தையாராவர். எவ்வியல்பினரென்று எவராலும் கூற ஒண்ணாதவர்.

" உளதிலது என்றலின் எனதுடல என
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலிற் கண்படில்
உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா. "

வெந்த சாம்பல் விரை எனப் பூசி என்பது ஒடுக்கப்பட்ட உயிர்களை மீளத் தோற்றுவித்து அந்தம் ஆதி தாமே என்பது திருநீற்றுப் பொலிவால் ஆருயிர்களுக்குக் காட்டியருளல். இஃது இலது..... இன்மையின் என்பதனோடு இயையும். தந்தையாரொடு தாயிலர் தம்மை என்பது உணர்த்த உணர்தலின் என்பதனோடியையும். சிந்தியா எழுவார் என்பது ஆன்மா உளது என்பதனோடியையும். வினை தீர்ப்பரால் என்பது மாயா இயந்திர தனு என்பதோடியையும்.

சீர்சிந்தி யாவெழுவார் செய்வினை தீர்ப்பரால்
ஏர்தந்தை தாயிலர் என்னலால்—நார்கொளுயிர்
ஏதுக்கள் ஓரேழால் இவ்வுடற்கண் உண்டென்ன
ஓதுமெய் கண்டாரோ டொன்று.

மேல் ஓதிய மூன்று திருப்பாசுரங்களும் முறையே இறை தளை உயிர் என்னும் முப்பொருட் குறிப்பினை ஓர் புடை குறிப்பன வாகும். இது மெய் கண்டார் நூற்பாவின் முறைவைப்போடியை யும். அரன் நாமமே என்பதால் இறையும், காடுறை வாழ்க்கையர் என்பதால் தளையும், சிந்தியா எழுவார் என்பதால் உயிரும் குறிப்பால் பெறப்படுவ காண்க. இம்மூன்று திருப் பாசுரங்களும் மற்றைவ வற்றின் வேறான யாப்புடையனவாகத் திகழ்வதும் நினைவுகூரத்தக்கது.

## திரு. சாமி வேலாயுதனார் பிரிவு

தமிழ்ப் புலமைமிக்க திரு. வேலாயுதம் பிள்ளையவர்கள் தம் 63-ஆம் அகவையில் 16-8 56-இல் துடுமென காலை 4 மணிக்கு இறைவன் திரு வடிப் பேறுற்றனர். இவர்கள்தம் பிரிவு ஈடும் எடுப்புமற்ற பேரிழப் பாகும்.

இவர்கள் தஞ்சை மாவட்டக் கல்லூரிகளில் தலைமை ஆசிரியராக இருந்து அரும்பணி புரிந்துள்ளதன்றி, அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தில் தமிழ் ஆராய்ச்சித் துறையிற் பதவியேற்று அருந்தொண்டு புரிந் துள்ளார்கள்.

மொழியாசி, திருக்குறள் சொல்லடைவு ஆகிய நூல்களும் எழுதி யுள்ளார்கள். இவர்கட்கு மனைவியும் மூன்று பெண் மக்களும், ஒரு புதல்வனும் உள்ளனர்.

இன்னாரின் பெரும்பிரிவு குறித்து எம் ஆழ்ந்த வருத்தத்தை அன்னா ரின் குடும்பத்தாருக்குத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

# அருட்கவி சேதுராமனர்

[திரு வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ.]

அருட்கவி சேது ராமனரைத் தமிழுலகம் அவசியம் அறிய வேண்டியது. இவர் தஞ்சை ஜில்லாவில் திருவாரூருக்கு அடுத்த 'நாடாகுடி' என்னும் சிற்றூரினர். மறையவர் குலத்தவர். தாது ஆண்டு தை உகவ (3-2-37) விசாகநாளிற் பிறந்தவர். ஆண்டில் இளைஞராயினும் பத்திநிலையிற் பெரியர்; நான்கு ஆண்டுகளுக்கு முன்பு திருப்போரூர் முருகப்பெருமானல் ஆட்கொளப்பெற்ற அருந்தவத்தினர். மூன்று ஆண்டுகளாக இறைவன் முன்னிலையில் ஆசுகவிகளாகப் பதிகங்களும், சந்தப் பாக்களும் இன்னிசையுடன் நாள் தவருது பாடிவரும் நியமத்தினர். இவரின் பாக்கள் அருமையான பொருள்களையும், இனிமையான பலவித சந்தங்களையும் கொண்டுள்ளன. முருகவேளின் முன்னிலையிற் சந்தப் பாக்களும் சிவபிரான் முதலிய பிற சந்நிதிகளில் விருத்தப் பாக்களும் இதுவரை வந்துள்ளன; இவர் பாடும் பொழுது உடனிருந்து ஒருவர் எழுத வேண்டும்; சேலத்தில் அனுமார் கோயிலில் வடமொழியிலும், விஜயவாடாவில் தெலுங்கிலும் பாடல்கள் உதித்துள.

திருவான்மியூர்ச் சிவனர் திருக்கோயிலில் இவர் பாடின பதிகத்தில் ஒரு பாடலும், இலம்பையங் கோட்டூர்ச் சிவாலயத்தில் இவர் அண்மையிற் பாடின பதிகத்தில் ஒரு பாடலும், முருகவேள் மீது ஆயிரக் கணக்கில் இவர் பாடின சந்தப் பாடல்களில் ஒரு பாடலும், அன்பர்கள் கண்டு களிக்குமாறு, ஈண்டு வெளியிடப் படுகின்றன.

## 1. திருவான்மியூர்*

**பண்: நவரோசு** **தாளம்: ஆதி**

6. கீளுலாங் கோவணங் கீழரைக் கேயசைத் திட்டவன்
கோளுலாம் வேணிமேற் கோளராக் கூவிளம் கொண்டவன்
வாளுலாம் நீள்விழி மாதராள் பங்கினன் வான்மியூர்த்
தேளுலாஞ் செஞ்சடைத் தேசிகன் சேவடி சேர்மினே.

**குறிப்பு:** சிவபிரான் சடையில் தேளும் உண்டு. "துத்திநச்சரா இளம் பிசசி கொச்சிகூவிளம்கா பொற்கடுக்கை எடலம்" ...வேணியர்" என வரும் திருப்புகழில் (கஉடுக) கடுக்கை எடு - அலம். என வருவதில் கடுக்கை எடு - கொன்றை மலர்; அலம் - தேள். பேரூர்க் கனக சபையில் சம்கார அகோரமூர்த்தியின் விரிசடையிலே ஒரு பெரிய தேள் சித்திரிக்கப்பட்டுளது. அகோர மூர்த்தியின் ஓமத் தியான சுலோகத்தில்,

'கபால மாலா பரணம் சர்ப்ப
விருஸ்சிக பூஷணம்" என வருகின்றது.
(சித்தாந்தம் மலர் 22. இதழ் 5. பக்கம் 168.)

---

* 29-5-1955 ஆம் தேதியில் பாடியது.

## 2. இலம்பையங் கோட்டூர்ப் பதிகம்†

பண்: காம்போதீ தாளம்: ஆதி

10. [1]சொல்லை மீறிய தொல்புக ழரனே!
[2]தோடு பெய்குழைக் காதுடை யவனே!
[3]தொல்லை யாவையுந் தூள்படச் செய்யும்
சூல பாணியே நீலமைக் கண்டா!
[4]அல்லை நேர்குழல் [5]அரம்பையர் பூசை
ஆதரிக்குமா றவனியில் வந்த
எல்லை யில்புகழ் இலம்பையங் கோட்டூர்
ஈச னேஎனை என்றுகொண் டருளே.

குறிப்பு:

1. "சொற்பதங் கடந்த தொல்லோன்"
—திருவாசகம். திரு அண்டப் பகுதி. 40, 111.
2. "தோடுடையான் குழையுடை (ே) யான்";
"தோடுடையான் ஒரு காதில் தூய குழைதாழ"
—சம்பந்தா. I-61-8; I-103-1.
3. தொல்லை - துன்பம். 4. அல் - இருள்.
5. இலம்பையங் கோட்டூர் அரம்பையர் பூசித்த தலம்.

## 3. தணிகை முருகர்மீது‡

பண்: தன்யாசி தாளம்: ஆதி

தனன தந்தன தனன தந்தன
தனன தந்தன தனதான
[1]கொழு மலங்குடி கொளவி டநதரு
குருதி யென்புறு குடிலூடே
[2]குலவு கும்பிருள் நிலவு, மைம்புல
குறவர் வம்பினில் விழஆசை;
[3]எழும லந்தபின் அழுமனம் பினும்
இடரு டன்படும் இதுவோநீ-
[4]எழுதி நின்றதென் முடியில்? நன்றிதுன்
இயல்கொல்! என்றனை இனியாள்வாய்;
[5]செழு மலந்தனி உழுவ லன்பொடு
திகிரி யங்கையர் பெறஈயும்-

† 29-4-56 ஆம் தேதியில் பாடியது.
‡ 27-2-56 ஆம் தேதியில் பாடியது.

[6] திரு மடந்தையி னுருமிகுந்தொளி
திகழு டம்பிடி யுடையோனே;
[7] கழு மலந்தனில் மலமழிந்தது
கடை அயம்புகு நெடுநாகா-
[8] ககன குஞ்சரி மறவர் மஞ்சரி
கணவ என்பவர் பெருமாளே.

## பொழிப்புரை

1. கொழுப்பும் மலங்களும் குடிகொள்ளும்படியாக இடந் தருவதும், இரத்தமும், எலும்பும் பொருந்தியதுமான வீடாகிய இந்த உடலில்;

2. பொருந்தியதும், திரண்டுள்ளதுமான (அஞ்ஞான) இருளில் படிந்துள்ள ஐம்புலன்களாகிய வேடர்கள் வீண் தொழிலில் விழுந்து ஈடுபடுவதால் ஆசைகள்;

3. உண்டாகும்; (அலந்தபின்) வேதனைப்பட்ட பின்பு, (அழுமனம்) மனம் அழும்; (அம் மனம்) பின்னும் துன்ப நிலையிலேயே உடன்பாடுற்றலையும்; இதுதானு நீ;

4. எழுதி நின்றது என் தலையில்; உன் தன்மைக்கு இது நன்று? இனியேனும் என்னை யாண்டருள்வாயாக.

5. செழுமை தங்கிய கலப்பை, ஒப்பற்ற எழுமையுந் தொடர்ந்த அன்பால், சக்கரதராகிய திருமால் பெறும்படி (அவருக்குத்) தந்த;

6. சீதாலட்சுமியின் உருவினும் மிகுந்த செவ்வொளி விளங்கும் வேலாயுதத்தை யுடையவனே!

7. (கழுமலந்தனில்) 'கழுமலம்' என்ற சொற்றொடரில் (மலம் அழிந்தது) 'மலம்' என்னும் சொல் நீங்கி, (அது கடை) எஞ்சி நிற்கும் 'கழு' என்னும் அச் சொல்லின் (கடை) இறுதியில், (அயம்புகு) 'நீர்' என்னும் சொல் சேர்ந்துள்ள, (நெடு) பெரிய, நாகா - மலைக்குரியவனே! (அதாவது, கழு + நீர் + நாகா = கழுநீர் நாகா - திருத்தணி மலைக்கதிபனே!)

8. விண் மடந்தை தேவசேனைக்கும், வேடர்மடந்தை வள்ளிக்கும் கணவனே என்று போற்றுபவர்தம் பெருமாளே! (என்றனை இனி யாள்வாய்!)

இந்தப் பாடலில் 7-ஆம் அடியில் தணிகை மலையைக் குறிக்கக் 'கழுநீர்மலை' என வருவதற்கு, எடுத்த சந்தத்துக்கு அமையும்படி கொண்டுள்ள சொற்றிறமை வியக்கத் தக்கதாம். இவ்வாறே—தணிகை மலையைக் குறிக்கப் பிறிதொரு சந்தப் பாடலின் ஈற்றடியில்,

'மகா கவியின் மகவின் மலைப் பெருமாளே' எனப் பாடியுள்ளார். இது 'மகாகவியில் மகவில் மலை' எனப் பிரிபட்டு; 'மகாகவி' என்றும் சொல்லில், 'ம', 'க' என்றும் இரண்டு எழுத்துக்களும் இலவாகக் 'காவி' என நின்று அந்த அடி 'காவி மலைப் பெருமாளே'—எனப் பொருள் தந்து, வியப்பை ஊட்டுகின்றது.

[காவிமலை - நீலோற்பல மலை - திருத்தணி.]

போதித்துவருகிறார்கள். அங்ஙனம் உயர்வகுப்புகளுக்குப் போதிக்கின்றவர்களுக்கு உயர் ஊதியம் கொடுத்தால் என்ன குறை உண்டாகும் என்பது விளங்கிற்றிலது.

ஆங்கிலத்தில் பி. ஏ. பட்டம் பெற்று ஆசிரியர் பயிற்சியும் பெற்றவர்கட்குக் கொடுக்கும் அளவு ஊதியம் தமிழ்ப்புலவர் தேர்வுபெற்று, ஆங்கிலமும் தமிழும் பயின்று கீழ்த்திசைக் கலைப்பட்டம்பெற்று ஆசிரியர்பயிற்சியும் பெற்றவர்கட்குக்கூடக் கொடுக்க மறுக்கின்றனர்.

சில மாவட்டங்களில் நாட்டாண்மைக்கழகங்கள் முதல்நி தமிழாசிரியர்களுக்கு, ஆசிரியர்பயிற்சி பெற்ற பட்டதாரிகள் பெறும் அளவு ஊதியமளிக்கின்றன. சில கழகங்கள் பொருளில்லையென்று பொருந்தாக்காரணம் கூறித் தட்டிக்கழிக்கின்றன.

தமிழ்நாட்டிலேயே தமிழுக்கும் தமிழ்ப்புலவர்கட்கும் தக்க மதிப்பு கொடுக்கப்பெறவில்லையாயின் வேறுஎங்குதான் கிடைக்கப் போகிறது?

தமிழ் முதல்மொழி என்றால் தமிழில் மிகுந்த புலமை வாய்ந்தவர்கட்கன்றோ பள்ளிகளில் முதன்மையிடம் கொடுக்கப் படவேண்டும். முதன்மையான ஊதியம் அளிக்கப்பட வேண்டும்? செயல்முறையில் அவ்வாறில்லையே! ஆங்கிலம் பயின்று தமிழில் புலமையற்றவர்கள்தானே தலைமையாசிரியர்களாக இன்னும் இருந்து வருகின்றார்கள். அவர்களுக்குத்தானே முதன்மொழிக்குரிய உரிமைகள் வழங்கப்பட்டு வருகின்றன. பெயரளவிலே தமிழ் முதன்மொழியென்று இருந்து வருகின்றதேயன்றித் தமிழுக்கும், தமிழ் பயின்றோருக்கும் முதலிடம் இல்லையே! இந்தநிலைமை என்று மாறுமோ? அல்லது அவ்விடத்தை வேற்றுமொழி கவர்ந்துவிடுமோ அறிகிலேம்!

ஆங்கிலத்தில் அரசியல் அலுவல்களெல்லாம் நடைபெறுகின்றனவே; அதனால் ஆங்கிலம் கற்றவர் தலைமைப்பதவியிலிருப்பதுதான் ஏற்புடைத்து என்று கூறுவாராயின், முதனிலைத் தமிழாசிரியர், பி. ஓ. எல். பயின்றவர்கட்கும் ஆங்கிலத்தில் எழுதத்தெரியும்; படிக்கவும் தெரியும்.

ஏன்? தமிழ் முதல்மொழி என்றநிலை இருக்கும்போது அரசியல் நடவடிக்கைகளைத் தமிழில் நடத்தினால் வருந்தீங்கென்ன? அரசாங்கம் சோதனையாக இரண்டொரு மாவட்டங்களில் தமிழை அரசியலில் கையாண்டு பார்த்து விட்டு விட்டார்கள். அதுசரியாக நடைபெறவில்லை யென்கிறகாரணத்தால்

கைவிட்டு விட்டார்களாம். இனிவரப்போவதாகக் (10-ஆண்டு களுக்குள்) கூறப்படுகின்ற இந்தி வந்தால் என்னசெய்யப் போகிறார்கள்? எப்படி அரசியலில் கையாளுவார்கள்?

மூவேந்தர் நீடூழி ஆண்டகாலத்தில் அரசியல் மொழி என்ன இருந்தது? தமிழ்நாட்டிலேயே தமிழ் அரசியல் மொழியாயிருக்கத் தகுதியில்லையென்றால் வேறு எங்கு அதற்குச் செல்வாக்கு இருக்கும்? தமிழர் குடியேறி வாழ்கின்ற அயல்நாடுகளில்கூடத் தமிழையும் அரசியல்மொழியாக ஏற்றுக்கொள்ள முன்வரும்போது தமிழ் எல்லையறுகாலந் தொட்டு வழங்கி, வரையறுத்துக் கூற இயலாத அத்துணை நீண்ட காலமாக ஆட்சிமொழியாக இருந்து வந்துள்ள தமிழ் நாட்டில் அரசியல் ஆட்சிமொழியாகச் சோதனை நடைபெறுகிறது. என்னே தமிழரின் மொழிப்பற்று!

ஆந்திர நாடு தனியே பிரிந்ததும் தெலுங்கு ஆட்சிமொழி யாக்கப்பட்டுச் செவ்வன் நடைபெற்று வருவதைப் பார்த்தாவது பின்பற்றக் கூடாதா? ஆந்திரமொழிமட்டும் புதிதாக இறக்கு மதி செய்யப்பட்டதா?

அன்றியும் இந்தியா முழுவதும் ஒரே எழுத்து முறையைப் பின்பற்ற வேண்டுமென்னும் முயற்சி நடந்துவருவது தமிழர் அறிவர். அங்ஙனம் ஒரே முறைவரின் என்று தோன்றிய தென்று ஆராய்ச்சியாளரால் கூற முடியாத பண்பட்ட மொழி யின் இனிமை, இயல்பு யாதாகும் என்பதைத் தமிழர் சிந்திக்க வேண்டுகிறேன். உலகில் எந்த மொழியிலும் இல்லாத சிறப் பெழுத்தாகிய 'ழ' என்னாகும்?

எஞ்சிய சென்னைமாநிலத்தைத் தமிழ்நாடு என்று பெய ரிடச் சொன்னால் மைய அரசாங்கம் மயங்குகிறது. அதற்கு மாறாக ஒன்றை (தக்கண நாடு)க் கூறுகிறது. மலையாளத்தா ரும், கன்னடரும் தனிநாடு வேண்டுமென்று கோரும்போது தமிழ்நாடு பிரிப்பதில் ஏன் பிடிவாதம் என்பது நமக்கு விளங்க வில்லை. ஆந்திரநாடு மட்டும் ஏன் தனியாகப் பிரித்துக் கொடுக் கப்பட்டது என்பதும் புதிராகத்தான் இருக்கிறது. நாம் தனியே பிரிந்தாலும் இந்தியாவுடன் ஒன்றுபட்டு வாழவே விரும்புகிறோம். நம்மொழி, நம்நாடு வளம்பெறவே தனியரசு தேவை என்கிறோம்.

இவற்றிற்கெல்லாம் செவிசாய்க்காது "பாச்சி," "பாச்சி," என்னும் பாலர்க்குச் "சோச்சி" "சோச்சி," என்று சொல்லு வதுபோலத் தாறுமாறானவற்றைக் கூறுகிறார்கள்.

தமிழ் முதன்மொழியாக இன்று இருந்தும் தமிழ்ப் புலவர் கட்கு முதலிடம் இல்லை. தமிழ் ஆட்சிமொழியாக ஆக்கப்பட வில்லை. அவற்றைப்பற்றி மேடைப்பேச்சு சிறிது உளதேயன்றிக் கேட்பாரில்லை; பார்ப்பாருமில்லை. இலங்கைத் தமிழர் படும் அவதியைப் பார்த்தும் ஆதரவுகூறக்கூட ஆளில்லை இந்த நாட்டிலே. தமிழைப்பற்றியும் தமிழரைப்பற்றியும் அரசாங்கம் அக்கறை காட்டாதது மிகவும் வருந்தத்தக்கதே.

இன்னும் பத்து ஆண்டுகளுக்குள் 'இந்தியை' அரசியல் மொழியாக்க எவ்வளவு முயற்சி எடுக்கப்படுகிறதோ அதில் பத்தில் ஒரு பங்குகூடத் தமிழுக்கு இல்லை. தமிழர்களே! முதன்மொழிக்கு முதலிடத்துரிமை முதலில் பெறுக!

## திரு. வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் மறைவு

தமிழ்ப்புலவர் திரு. வை. மு. கோபாலகிருஷ்ணமாச சாரியாரவர்கள் 26-8-56-இல் சென்னை திருவல்லிக்கேணி துள சிங்கப் பெருமாள் கோவில் தெருவிலுள்ள தம் இல்லத்தில் செங்கண்மாலின் திருவுலகம் சேர்வுற்றனர்.

இவர்கள் கம்பராமாயணம், வில்லிபுத்தூராழ்வார் பார தம், திருக்குறள், நன்னூல் முதலிய நூல்களைப் பதிப்பித் துள்ளனர். இவர்களின் அரிய தமிழ்த் தொண்டைப் பாராட் டித் தமிழ் எழுத்தாளர் சங்கம் அண்மையில் கேடகம் ஒன்று வழங்கிற்று.

ஆச்சாரியாரவர்கள் பிரிவு குறித்துப் பெரிதும் இரங்கு கின்றோம். அன்னாரின் குடும்பத்தினருக்கும் எம் மனமார்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

# இராசாக்கண்ணனுர் மலேயாச் செலவு

நாவன்மை மிக்க திரு. மு. இராசாக்கண்ணனுரைவர்களைத் தமிழ் கூறு நல்லுலகம் நன்கறியும். அவர்கள் திருப்பாதிரிப் புலியூர்ச்சிவசண்முகமெய்ஞ் ஞான சிவாச்சாரிய அடிகளின்பால் செந்தமிழ்க் கல்வி சிறப்புறப் பயின்று பின்னர், பி ஓ. எல். (ஆனர்சு), எம் ஏ.,எம் இ எஸ் முதலிய பட்டமும் பெற்ருர்கள்.



அதன்பின்னர்த் தொழில் மேற்கொண்டு பல கல்லூரிகளில் ஆசிரியராக அமர்ந்து தமிழ்த்தொண்டு புரிந்தார்கள்; அப்பால் தற்காலம் சென்னைக் கலைக்கல்லூரியில் ஆசிரியராக அமர்ந்து அரிய பெரிய தமிழ்ப்பணி புரிந்து வந்துள்ளார்கள்; பல்லாண்டுகள் நம செல்வியின் இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்களில் ஒருவராகத் தொடர்ந்து இருந்து வருகின்ருர்கள். புலமைச் செல்வமிக்க இராசாக்கண்ணனுரைவர்கள் நாநலம் என்னும் நலம் கைவரப் பெற்றவர்கள்; கேட்டார்ப்பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்பமொழியும் வீறு, அவர்கள் சொல்லில் ஒளிரும்; சோர்ந்தாரையும விழிப்பூட்டி யெழுச்சியுறச் செய்யும் சொல்லின் செல்வர், நம் கண்ணனுர்.

இத்தகைய செம்மைசான்ற புலமைச் செல்வருக்கு மலேயாப் பல்கலைக்கழகத்தின தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றும் பேறு கிட்டிற்று. அதனை ஆற்றிவர 12-9-56-ஆம் நாள் ரசூலா என்னும் நாவாயில் புறப்பட்டபோது பல தமிழன்பர்கள் போந்து வழியனுப்பு முகமன்கூறி மலர்மாலை அணிவித்தனர். நம் இராசாக்கண்ணனுர், இனிதே போய்ச்சேர்ந்து, துறைத்தீந்தமிழின் நறுஞ்சுவையமிழ்தை மொழிபெயர்தேயமான மலேயா முழுதும் பல்கலைக்கழக வழியாகப் பரப்பி, அவையில் செழுந்தமிழ் வழக்கே அயல்நாடெல்லாம் பரவ எல்லாம் வல்ல இறைசிவபெருமான் திருவருளால் அருந்தமிழ்த்தொண்டு புரிந்து பன்னெடுங்காலம் இன்புடன் வாழ்க வாழ்கவென வாழ்த்துகின்ருேம்.

# மதிப்புரை

## (க) இதய ஜோதிடம்

[இதன் ஆசிரியர் எம். எம். புகாரி அவர்கள் ஆவர். இதன் விலை ரூபா. 3-8-0. இன்போதயப் பதிப்பகம் நாகப்பட்டினம். இதன் ஆசிரியர் இதழாசிரியரும் நூலாசிரியருமாவர்.]

இந்நூல் கலப்புமணத்தின் இன்றியமையாமையை, நன்கு விளக்குகின்றது. கலந்து வாழும் வாழ்க்கையே சிறப்பான வாழ்க்கை. அன்பு செய்வதுதான் இப்பிறப்பின் பெரும் பயன். 'பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும்; சிறப்பொவ்வா' என்றமையால் கூடி வாழத்தெரியாதவர் கலப்புமணத்தை மிகுதியும் மறுப்பர். உண்மையான் நோக்குவார் உயர்வாக வேறுவிதமாக உரைப்பர். இக் கருத்தை விளக்குவதே இக் காதையாகும். இதை விளக்குவதற்கு இருபதெட்டுப் பெருந் தலைப்புக்கள் மிளிர்க்கின்றன. இதனை மெய்யன்பர்கள் வாங்கி ஆசிரியரை ஊக்குவார்களாக.

## (உ) அன்பு மலர் மாலை

[இதன் ஆசிரியர் பண்டித இராம சுப்பிரமணிய நாவலர் அவர்கள் ஆவர். இதன் விலை அணா பன்னிரண்டு. செந்தமிழ் நிலையம், தக்கலை, தென்திருவிதாங்கூர்.]

இதன்கண் பரம்பொருள் வணக்கம், சிவபெருமான், முருகப்பிரான் திருமால், அகிலசத்தி, அருண்மணிமாலை, பரம்பொருட் பாமாலை, அருள் வேண்டல், விண்ணப்பம், வீடுவேண்டல், பொருளியல்பு, பொதுமொழி, நெறிநிலை முதலிய பல பெருந் தலைப்புக்கள் காணப்படுகின்றன.

செய்யுள்நடை மிகுதியும் குறைந்து வரும் இந்நாளில் செய்யுள் நூல் ஒன்றினைக் காண்பதும் புதுமை போல் காணப்படும். செய்யுள் நடை வழக்கற்றுவிடும்படி செய்வதும் தவறாகும். அதனால் அதனைப் பேணுவதும் தமிழோம்புவார் தனிப்பெருங் கடமைகளுளொன்றாகும்.

இம் மலர் மாலைச் செய்யுட்கள் ஒவ்வொன்றும் தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்தன. வெண்பாவும் விருத்தமும் விரவியுள்ளன. தம் பெயருக்கேற்ப அன்பு கனிந்தொழுகு முறையில் அமைந்துள்ளன. படிப்போர் தாயுமானச் செல்வர் நூற்போக்கினையொத்திருக்குந் தகுதியைக் காண்பர். சொற்செறிவும் பொருள் அழகும் மிக்குள்ளன. எளிய இனிய நடை திகழ்கின்றன. பொருள் எளிதிலுணரும் பான்மையது; ஆற்றொழுக்கினது; கடவுள் நம்பிக்கையை அங்கைநெல்லி என எங்கும் விளக்குவது. யார்க்கும் பத்தியை விளைக்கும் பான்மையது; செந்தமிழன்பர்களும் செந்நெறியாளர்களும் வாங்கிக் கற்றுப் பயன் எய்துவார்களாக.

திருநெல்வேலித், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௭, புரட்டாசி பரல
௩௧ அக்டோபர், 1956

# மொழிவழி மாநில அமைப்பு

உலகத்தில் மொழியே அடிப்படையாகும். மொழியினுலேயே ஒருநாட்டின் நாகரிகமும் பண்பும் அரசும் பிறவும் அறிதற்கு வாய்ப்பாகும். எனவே ஒருநாட்டின் உயிர்நாடி மொழியே எனலாம்.

ஆகவே, தன்னுரிமை பெற்ற நாட்டில் மொழிவழி மாநிலத்தைப் பிரித்து அமைத்து அதன்வழி நாட்டை நடத்தவேண்டுமென ஏற்கனவே காங்கிரசுப் பேரவையும் காந்தியடிகளும் கூறியுள்ளனர். அவ்வாறே அமைத்தல் வேண்டுமென எல்லா மொழியினரும் மைய அரசியலாரை வேண்டினர். ஆங்காங்கே கிளர்ச்சியும் செய்தனர். ஆனுல் இவையிற்றைப் பொருட்டாகக் கருதாது மைய அரசியலார் வாய்வாளாதிருந்தனர். அதன்பின்னர் ஆந்திரநாட்டினர் விடாப்பிடியாகத் தம் மொழிவழி தம் நாடு ஆந்திர மாநிலமெனத் தனியாகப் பிரியவேண்டுமென்று கிளர்ச்சி செய்துவந்தனர். இதைக் குறிக்கோளாகக்கொண்டு திரு. பொட்டி ராமுலு என்பவர் வடக்கிருந்து (உண்ணுவிரதங் கொண்டு) உயிர்நீத்தனர். ஆந்திரர் அதைக்காரணமாகக் கொண்டு புகைவண்டிகளை நிறுத்தியும், வணிகக்கடைகளில் புக்கு அங்குள்ள பொருள்களைச் சூறையாடியும், கொள்ளையிட்டும் செய்த புரட்சியினுல் மைய அரசியலார் செவிசாய்த்தனர்; தனி மாநிலமாக்க முன்வந்தனர்; தனி மாநிலமாக்க வாய்ப்பளித்தனர். அப்பால் ஆந்திரர் நம் தமிழகத்திலிருந்து பிரிந்து சென்று தனி மாநிலமாக்கி மொழியை முதன்மையாகக்கொண்டு ஆந்திரர் ஆட்சிக்குக்கொணர்ந்து 'ஆந்திரா' எனப் பெயரமைத்து ஆட்சிசெய்து வருகின்றனர். ஆங்கே ஆட்சி தெலுங்கிலேயே

நடாத்துகின்றனர். இனி, ஐதராபாத்து நகரைத் தலைநகராகக் கொண்டு 'விசால ஆந்திரா' எனப்பெயர் சூட்டி நவம்பரில் ஆட்சிசெய்ய முற்பட்டிருக்கின்றனர்.

மைய அரசியலார் தனித்தனி மாநிலமாகப் பிரியின் நாடு, சிறுசிறு நாடாக ஆகும். அதனால் பாரதநாடு சிறப்பில் குன்றுமெனக் கருதினர். அதனால் உத்தரப்பிரதேசம், தட்சிணப் பிரதேசம் எனப்பிரித்து சில பலமொழி வழங்கும் நாடுகளை ஒன்றாக இணைத்துத் தனிநாடாக ஆக்கக்கருதி அறிக்கையும் வெளியிட்டனர். அது கூடாதென மறுத்து வடநாடு முழுதும் பெருங்கிளர்ச்சி செய்தனர்; கொள்ளை, கொலை, புகைவண்டி நிறுத்தம் முதலிய புரட்சிகள் நிகழ்ந்தன; மைய அரசினர், அதைப் படைகொண்டு அடக்கினர்; அரசியலார் எண்ணியவாறு பல்லிடங்களில் கூட்டுமொழி ஆட்சி ஆக்க முற்பட்டுள்ளனர்.

இம் முறையில் நாடுகள் மொழிவழி பிரித்துத் தனி மாநிலமாக்க வரும் நவம்பர்த் திங்கள் க-ஆம் நாளினை மைய அரசினர், குறிப்பிட்டுள்ளனர். அதற்கான வேலைகளும் விரைவாக நடந்து வருகின்றன.

ஆகவே, நம் தமிழ்நாடும் மொழிவழி தனிநாடாக அமைக்கப்பெறுகின்றது; கன்னடரும், கேரளரும் தனித்தனியாகப் பிரிந்து செல்கின்றனர். நம் தமிழ்நாட்டுடன் சேர வேண்டிய சில தாலுகாக்கள் சேர்க்கப்பெறாமல் இருக்கின்றன. தென்குமரி எல்லையைச் சேர்ந்த தேவிகுளம், பீர்மேடு, நெய்யாற்றங்கரை, சித்தூர் முதலியன சேர்க்கப்பெறாமல் கேரளத்தோடு சேர்க்கப்பட்டுள்ளன. ஆனால் அங்கு வாழும் மக்கள் தமிழ்மொழி பயின்று தமிழராகவே வாழ்ந்து வந்துள்ளனர். இப்போது கேரளத்தோடு சேர்த்ததால்-இனி அது மலையாளிகள் ஆட்சியில் வருவதால் - தமிழர் பல்வகையானும் நெருக்குண்பர்; அவர்கட்குத் தமிழ் கற்க வாய்ப்பளிக்கார்; அவர், அங்கே ஒண்டிக் குடிகள்போல் துச்சில் இருந்து வருந்த நேரும். ஆகவே, தேவிகுளம் பீர்மேடு பகுதிகளை நம் தமிழகத்தோடு சேர்த்தற்குத் தமிழ் மக்கள் ஒன்றுபட்டு முயறல்வேண்டும்; அறமுறையில் மைய அரசியலாருக்கு உணர்த்துதல்வேண்டும். அகத்தீசுரம், கல்குளம், இலவங்கோடு, தோவாளை, செங்கோட்டையில் பாதி ஆகிய இத் தாலுகாக்கள் நம் தமிழ்நாட்டுடன் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. இது, மகிழ்ச்சிக்குரியதாயினும், நம் தமிழகத்தோடு சேர்க்க வேண்டும் ஊர்களைச் சேர்க்காது விடுதல் நடுவிகந்த செயலாகும். இவை பண்டுதொட்டுத் தமிழ்நாட்டுடன் சேர்ந்திருந்தே வந்துள்ளன. செங்கோட்டை முழுதுமே நம்

தமிழகத்தொடு சேர, நாடு அமைப்புக் குழுவினர் முடிபு செய்திருந்தனர்; மைய அரசியலார் அதைத்தவிர்த்துப் பாதியாக்கினர்; இது, அறத்திற்கு முரணானது.

'அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை'

என்பதை நடுவிகந்த மைய அரசியலார்க்குத் தெரிவிக்க விரும்புகின்றோம். நம், மாநில அமைச்சர்களும் நமக்கென்ன என்றும் யாருக்குவந்த விருந்தோ என்றும் இருத்தலாகாது; கடமை தவறுதலாகாது; நம் உரிமை நம்மைவிட்டு அகலப்பார்த்தல் ஆகாதென்பதையும் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

வடவெல்லைப் பகுதியில் நம் தமிழ்நாட்டுடன் சேரவேண்டிய உரிமையான தாலுகாக்கள் ஆந்திரநாட்டுடன் இணைக்கப்பெற்றுள்ளன. அவை, திருப்பதி, திருத்தணி, சித்தூர், புத்தூர் முதலியன. இவைகட்காகத் தமிழரசுக்கழகம் ஒத்துழையாஇயக்கந் துவங்கி நடத்திவருகின்றது. அதற்கு மைய அரசியலாரும், மாநில அரசியலாரும் வாளா இருந்து வருகின்றனர் இதனை நடுநின்று முடிப்பது அரசியலாரின் பொறுப்பாகும்.

நவம்பர்த் திங்கள் பிரியவிருக்கும் நம் சென்னை மாநிலத்திற்குச் 'சென்னை மாகாணம்' என்று பழைய பெயரையே நிறுவாது 'தமிழ்நாடு' என்று பெயரிடுவது முதன்மையாகும்.

நம் நாட்டுக்குப் பழங்காலமுதல் வழங்கிவந்த பெயரே அது. எனவே, 'தமிழ்நாடு' என்று பெயர் சூட்டி வழங்க முன் வரவேண்டும். இதனை நம் மாநில அமைச்சர்களும், சட்ட அவை உறுப்பினர்களும் அரசியலோடு தொடர்புடைய ஏனையோரும் கருத்தில் இருத்திச் செயலுக்குக் கொணரவேண்டுவது முதற்பெருங் கடப்பாடாகும்.

தமிழ்நாடெனப் பெயர்வழங்கும் நாட்டில் தமிழ்மொழியே ஆட்சிமொழியாக அமைதல்வேண்டும். ஆங்கிலமொழியில் வழங்கும் ஆட்சிச்சொற்களைத் தமிழில் மொழிபெயர்த்தமைத்தல் வேண்டும். முன்னரேயே சென்னைமாகாணத் தமிழ்ச் சங்கத்தார் சில ஆட்சிமொழியை வெளியிட்டுள்ளனர். அச்சங்கத்திற்கு நம் சென்னைமாநில அரசியலாரும் ரூ. 1000-0-0 கொடுத்து உதவியிருப்பதாக அறிகின்றோம். ஆகவே, நவம்பர்த் திங்கள் தனி மாநிலமாகப் பிரியப்போகும் சென்னைமாநிலத்துக்குத் 'தமிழ் நாடு' எனப் பெயரமைத்துத் தமிழ் மொழியையே ஆட்சிமொழியாக்கித் தன்னுரிமை நாடாகத்திகழ வழிகோலுமாறு மீண்டும் மீண்டும் நம் தமிழ்நாட்டு ஆட்சியாளர்களைப் பெரிதும் வேண்டிக் கேட்டுக்கொள்ளுகின்றோம்.

# திங்களும் தாமரையும்

[குடந்தை, திரு. சு. கண்ணன்]

பழந்தமிழ் நாடு பண்பட்ட வளநாடாக வாழ்ந்தது என்பது பொய்யுரையுமன்று; புனைந்துரையுமன்று. அதற்குக் காரணம் கம்பர் கனவில் கண்ட அயோத்தியைப் போன்று எல்லோரும் எல்லாச் செல்வமும் எய்தினவர்களாக வாழ்ந்தார்கள் என்பது அல்ல. ஏழ்மையும் வறுமையும் தமிழகத்திலே தலைகாட்டிய துண்டு. வறுமையே காணு வளநாடாகத் தமிழ்நாடு மிளிர்ந்தது எனக்கூற இயலாது. ஆனால் வறுமையில் வாழ்ந்தோர்க்கு வரையாது வழங்கும் வள்ளன்மை நிறைந்த பெருமைக் குணம் சான்ற பண்புடையோரும் வாழ்ந்தனர். ஆதலால் வறுமையின் வன்மை அங்கு தன்னரசை நாட்டமுடியவில்லை.

மக்கள் தவறே செய்யாத் தனிமனிதர்களாக வாழவில்லை. மன்னன்கூட நெறிதவறி நடக்க முயன்றதுண்டு; நடந்த துண்டு. ஆனால் வழிதவறி நடக்க முயன்ற மன்னனையும் மற்றையோரையும், தக்க சமயத்தில் தவறுணர்த்தி தன்னிலை கெடாது வாழ வகைசெய்ய, பன்னூல்களையும் ஆழ்ந்தகன்று ஆய்ந்து படித்தறிந்த கல்வியிற் பெரியோர் பலரையும் படைத் திருந்தது தமிழகம். ஆதலால் கல்லாமையோ, அறியாமையோ, தமிழகத்தைத் தன்பால் இழுக்க முடியவில்லை. இவைதான் தமிழ்நாடு வளநாடாக வாழ்ந்ததற்குக் காரணமாகக் கூறலாம்.

புலவர்கள் அறிவுசான்ற பெரியோர்கள். ஆனால் "நாமகள் உறைதலாலே சேராளே பூமகள் புலந்து" என்ற இயற்கை விதியின் காரணமாகவோ என்னவோ புலவர்கள் எல்லோரும் வறுமையில்தான் வாழ்ந்தார்கள் என்று அவர்களது வரலாறு உரைக்கின்றது. ஏதோ ஓரிருவரைத் தவிர, மிடியின் பிடியில் வாழ்ந்த புலவருக்கு வாழ்க்கைத் துன்பம் தோன்றாதபடி அன் புடன் ஆதரவுதந்து காத்தார்கள் தமிழகக் காவலர்கள். தம் துன்பம் துடைத்த புரவலரை மறந்தும் மறக்கவில்லை புலவர்கள். தம் பாவன்மையால் இன்பம் தந்தனர். பரிசுபெற்றுச் செல்வ தோடு நின்றுவிடவில்லை அக்காலப் புலவர்கள். நன்றியெனும் நல்லுணர்ச்சியோடு, அன்பு கொண்டு, சமயம் நேரும் போதெல் லாம் அரசனுக்கு அறிவுரை வழங்கினர்; துன்பத்திலும் உறவு கொண்டு ஆறுதல் கூறினர்; தவறியபோது திருத்தினர். இவ் வாறாக நாடாள்வோருக்கு உண்மைத் தோழராகவே திகழ்ந்தனர் நாவலர்கள். இதற்குச் சங்க இலக்கியங்கள் சான்று பகரும்.

சோழன் நலங்கிள்ளி காவிரிபாயும் கழனிநாட்டுக் குரிய வன். பகைவருக்கும் அஞ்சான்; பாவலரின் வறுமைக்கும் அஞ்சான். இரண்டையும் விரட்டும் வீரன். வடநாட்டரசர் எல்லோரும் இவன்பால் கொண்ட அச்சத்தால் துஞ்சாக் கண்ணராயினர். ஈகையால் இசைகொண்டோன் இவன். புலவர் பாடும் புகழ் பெற்றவன்.

உறையூர் முதுகண்ணன் சாத்தனுர் புலமைப்பண்பு மிகுந் தவர். நலங்கிள்ளியின்பால் அன்புடையவர். அவனுக்கு நல் லறிவு கொளுத்தும் நோக்கம் உடையவர். தன் தலைவனது தளராத வள்ளன்மையைக் கண்டு வியந்தார். அவன் இன்னும் இத்தன்மையில் சிறந்து விளங்கவேண்டுமென நோக்கங் கொண்டு உலக இயற்கையை எடுத்து விளக்குகிறார்.

சேற்றில் தாமரை வளர்ந்து நிற்கிறது. ஒள்ளிய நிறத் துடன் அழகுற விளங்கும மலரில் அடுக்கி வைத்தாற் போன்று பல இதழ்கள் இலங்குகின்றன. அதன் அருகில் பல இலைகளும் காட்சி அளிக்கின்றன. ஆனால் நூறுகிய இதழ்களைப் பலர் விரும்புகின்றனர்; போற்றுகின்றனர்; புகழ் பாடுகின்றனர். ஆனால் அருகிலிருக்கும் இலைகளை ஏறெடுத்து நோக்குவாரில்லை. அவை பிறரால் போற்றப் படாமலேயே சின்னுட்களில் வீழ்நது இறந்து விடுகின்றன

அதுபோன்றுதான் மனித இனத்திலும். ஏற்றத்தாழ் விலாது சிறந்த குடியின்கண் பிறந்து அரசு வீற்றிருந்த வேந்தர் பல்லோர். ஆனால் எல்லோரும் புகழுடன் வாழவில்லை. இசைபட வாழாதே இறந்து விட்டவர் பலர். தாமரையைப் போன்று, எல்லோராலும் ஏத்தப்பெற்று ஏற்றமுடன் வாழ்ந் தவர் சிலர்தான். மற்றையோர் மரையிலைபோல் பயன்படாது மாய்ந்தனர். இவ்வுலகில் புலவர் போனறோரால் பாடப்படும் புகழ் பெற்றோரே வானுலகிலும் சிறப்புற வாழ்வார்.

வானத்தில் வெண்ணிலவு பரப்பும் திங்களைப் பலரும் கண் டிருப்பர். அது பதினைந்து நாட்கள் தேய்ந்துகொண்டே செல் லும். ஒருநாள் முழுதும் மறைந்து விடுகிறது. மீண்டும் தோன்றுகிறது; வளருகிறது இவ்வாறு தேய்தலையும் பெருகு தலையும், மறைதலையும், பிறத்தலையும் மக்கள் கவனித்திருப்பர். ஆனால் அதன் உட்பொருளை எல்லோரும் அறிந்திருக்க மாட் டார்கள். உலகில் நன்னிலையிலிருப்போர் தாழ்வுறுதல் உண்டு. தாழ்ந்தோர் உயர்வதுமுண்டு தாழ்ச்சியும் உயர்ச்சியும மாறி மாறி வருவது இயற்கை. நிலையாக ஒரே நிலையில் வாழ்வது கிடையாது. அதுபோன்றே பிறந்த எல்லோரும் இறவா வரம்

பெற்றோர் இல்லை. நிலையில்லா இவ்வுலகில் பிறந்த எல்லோரும் இறந்தே தீருவர். பிறப்புண்டேல் இறப்புமுண்டு. மாற்றரிய விதி இது. இறந்தவர் மீண்டும் மாறிப் பிறப்பர். இவ்வுண்மை களைத்தான் தான் தேய்ந்தும் வளர்ந்தும், மாய்ந்தும், தோன்றி யும், உலகில் கல்வி அறிவிலா மடவோர்க்கும் திங்களாகிய தெய்வம் அறிவுறுத்தி நிற்கின்றது.

இவைகளைத்தான் புலவர் சாத்தனார் நலங்கிள்ளிக்கு எடுத் துக் கூறி "ஆதலால் அரசே! திங்கள் தன் செயலால் இவ்வுல கிற்குச் சொல்லாமல் சொல்லும் நிலையாமை எனும் பெரும் உண்மையையும், தாமரையின் மலரும் இலையும் தங்கள் வாழ்க் கையால் மானிடர்க்குக் கூறும் புகழின் மேன்மையையும் உணர்ந்து நீ நன்னிலையிலிருக்கும் போதே, நின்வாழ்க்கை பிற ருக்குப் பயன்பட வேண்டுமென நோக்கம்கொண்டு, வறுமை யால் வருந்தி, அல்லலுற்று வருவோர்க்கு ஆதரவு தந்து, அவ ரது இன்மையைப் போக்கி, இசையைக் கொண்டு, அருளுடைய வனாக வாழ்வாயாக. "திங்களையும் தாமரையையும் நோக்கி நின் வாழ்க்கையைப் பண்படுத்திக்கொள்" என அறிவுறுத்தினார்.

அவரது அறிவுரை நல்லதொரு செய்யுள் வடிவில் வெளி வந்தது:

"சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ்
நூற்றித ழலரி னிரைகண் டன்ன
வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து
வீற்றிருந் தோரை எண்ணுங் காலை
உரையும் பாட்டும் உடையோர் சிலரே
மரையிலை போல மாய்ந்திசி னோர் பலரே
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவ னேவா வான வூர்தி
எய்துப வென்பதஞ் செய்வினை முடித்தெனக்
கேட்ப லெந்தை சேட்சென்னி நலங்கிள்ளி
தேய்த லுண்மையும் பெருக லுண்மையும்
மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டி
திங்கட் புத்தேள் திரிதரு முலகத்து
வல்லா ராயினும் வல்லுந ராயினும்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
அருள வல்லை யாகுமதி.........
...................................... ......

(புறம் உஎ)

திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்து 25-ஆம் பட்டத்தில்
எழுந்தருளியிருக்கும்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

அவர்களின் திருவுருவப் படத்தைத்

**திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து அதிபர்**

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களால் நிறுவப்பெற்ற

ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியில்

5—10—1956 ல

**ஸ்ரீ காசி மடம் இளவரசு**

ஸ்ரீமத் வித்துவான் மகாலிங்கத் தம்பிரான சுவாமிகள அவர்கள்

எழுந்தருளுவித்த ஞான்று சமர்ப்பித்த

# *பாமலர்

திருவில்லி புத்தூரில் திகழ்தரவே தோன்றித்
திருத்தரும புரந்தன்னில் திருமடங்கண் டருளும்
குருஞான சம்பந்த மூர்த்திக்கும் அடியேம்
குருவுக்கு முன்னடைந்த பரவசர்க்கும் அடியேம்
குருசச்சி தானந்த குரவர்க்கும் அடியேம்
குமரகுரு பரர்க்கைந்து பேரறிவுங் காட்டி
அருள்செய்த மாசிலா மணியார்க்கும் அடியேம்
அருட்பனசை அருணந்தி அம்மானுக் காளேம். க

குற்றாலப் பெருவெள்ளம் குறைந்தடங்கப் பணித்த
குருஞான சம்பந்த குரவர்க்கும் அடியேம்
சிற்றிடையாள் வள்ளியம்மை திருக்காட்சி கண்ட
திருஞான சம்பந்த தேசிகர்க்கும் அடியேம்
நற்றஞ்சை அரசனுக்கு நாட்டமருள் செய்த
நல்லதிரு வம்பலதே சிகர்தமக்கும் அடியேம்
அற்றமிலாத் திருச்சிற்றம் பலஅழகர்க் கடியேம்
அருட்பனசை அருணந்தி அம்மானுக் காளேம். உ

செம்போத்து முதலுயிரைத் திருவடியிற் சேர்த்த
திருநாவுக் கரசென்னும் தேசிகர்க்கும் அடியேம்
செம்பனசை மடங்கண்ட தில்லைநா யகர்க்குத்
திருவருள்செய் சிவஞான தேசிகர்க்கும் அடியேம்
வம்பரவர் நச்சுப்பால் வழங்கியதைக் குடித்தும்
வாழ்சச்சி தானந்த தேசிகர்க்கும் அடியேம்
அம்முத்துக் குமரதே சிகர்தமக்கும் அடியேம்
அருட்பனசை அருணந்தி அம்மானுக் காளேம். ௩

---

***பாடியவர்:** திரு. தா. ம. வெள்ளைவாரணம், தமிழ்ப்பேராசிரியர், திருப்பனந்தாள்.

காழிஅரு ணாசலக் கவிராயர் முதலோர்க்
கடிபரவ அருள்ஞான சம்பந்தர்க் கடியேம்
மேழியுழ "வானங்காள் பெய்கமழை" என்ற
மேலோராம் கந்தப்ப தேசிகர்க்கும் அடியேம்
வாழிரண்டாம் மாசிலா மணியார்க்கும் அடியேம்
வான்கவிஞர் மீனாட்சி சுந்தரனார்க் கருளி
ஆழியுருட் டியசச்சி தானந்தர்க் கடியேம்
அருட்பனசை அருணந்தி அம்மானுக் காளேம். ௪

திருபுவன மாம்பதியில் சிவனடியைச் சேர்ந்த
சீரார்ந்த மாணிக்க வாசகர்க்கும் அடியேம்
திருப்பனசை தனில்வைகிச் சிவனடியைச் சேர்ந்த
சிவஞான தேசிகராம் செம்மலுக்கும் அடியேம்.
இருவினைப்பா சந்தீர்ந்த மாணிக்கர்க் கடியேம்
இருபதாம் பட்டத்துச் சிவஞானர்க் கடியேம்
அருள்மூன்று வதுசச்சி தானந்தர்க் கடியேம்
அருட்பனசை அருணந்தி அம்மானுக் காளேம். ௫

கலைமலிந்த தமிழ்மொழியாம் கடலில்தோய்ந் தெழுந்து
கல்விவல புலவர்களுள் முதல்வரெனத் திகழும்
தலைவரவர் ஆயிரத்தை ஆண்டாண்டு பெறவே
தருநிதியைத் தருசுவாமி நாதரவர் தமக்கு
மலைவறவே அருள்செய்த மாணிக்கர்க் கடியேம்
மாண்பார்ந்த அருணந்தி வள்ளல்தமக் கருள
அலருமுகம் அருள்சுப்ர மணியார்க்கும் அடியேம்
அருட்பனசை அருணந்தி அம்மானுக் காளேம். ௬

புவனியெலாம் போற்றுகின்ற புகழ்க்காசி மடத்தில்
புனிதஇள வரசாகிப் பொலியுமகா லிங்கர்க்(கு)
உவகையெழத் தவநெறியை உதவியருள் செய்த
உயர்ந்தோராம் சண்முகதே சிகர்தமக்கும் அடியேம்
தவநெறிக்கண் தலைவரெனத் தரணியெலாம் வாழ்த்தத்
தருமைவாழ் சுப்ரமண்யதே சிகர்க்கும் அடியேம்
அவனியிடைச் சிவவொலியைச் சிவவொளியால் வளர்க்கும்
அருட்பனசை அருணந்தி அம்மானுக் காளேம். ௭

இங்ஙனம்,
பணிவுள்ள
செந்தமிழ்க் கல்லூரி ஆசிரியரேம்.

திருப்பனந்தாள்
5—10—1956

# வேளாளர் நாகரிக வித்தாவார்

[சித்தாந்த பண்டிதர் ப. இராமநாதபிள்ளை அவர்கள்]

"வாளார்கண் செந்துவாவாய் மாமலையான் தன்மடந்தை
தோளாகம் பாகமாப் புல்கினான் தொல்கோயில்
வேளாளர் என்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்கும்
தாளாளர் ஆக்கூரில் தான்தோன்றி மாடமே."

—ஆளுடையபிள்ளையார்.

உலகு உயிர் ஓம்பலால் உடையான் திருவடி எளிதின் எய்தும் செல்வர்களே! உலகம், கட்டற்று வீடுற்றுக் கடவுளின்பம் இம்மையிலேயே எய்துதற்குரிய தொண்டினைக் கற்பிக்கும் செம்மை நலம் சான்ற சீரிய கலைக்கழகம். அக்கழகத்துக்குரிய வகுப்புக்கள் நான்கு. அவ்வகுப்புக்களில் முறையே ஏடுணர்த்தல் நாடளித்தல் ஏடெழுதல் வீடுணர்த்தல் எனப் பாடங்கள் நான்கு நிகழும்.

ஏடுணர்த்தல் என்பது ஓதல் வேட்டல் ஈதல் என்பவற்றால் அறிவும் ஆண்மையும் அன்பும் பெருகி இன்புறும்படி அனைவர்கட்கும் ஓதுவித்தல்.

நாடளித்தல் என்பது மேற்கூறிய அறுவகைப் பண்புடனே குறுநிலமன்னராய், முடியுடை நெடுநில வேந்தராய், அனைத்துலகும் ஆளும் வேந்தர்க்கு வேந்தாய் உலகினை உயிரெனக் காத்தல்.

ஏடெழுதல் என்பது குறித்த அறுவகைப் பண்பினராய் அவாவின்றி அன்பினால் வீடுணர்த்துவோர் விளைவித்த விளைவுகளைக் காலினும் கலத்தினும் கொண்டு விலைமாறி 'நெடுநுகத்துப் பகல்போல நடுவுநின்காது' நானிலத்தாரும் நலம்பெறக் கணக்கெழுதி வணிகம் புரிதல்.

வீடுணர்த்த லென்பது குறித்த அறுவகைப் பண்பினராய் உழுதலும் உழுவித்தலும் செய்து 'நீம்புனல் உலகத்துத்' தலைவனும் சிவபெருமானுகிய 'வேந்த'னிடம் விழுமிய தொடர்பு கொண்டு விழவும் பூசையும் வீறுபெறச் செய்து, நாறு முடிக் கொண்டு நட்டு விளைவித்து, அவ்விளைவினைப் புண்ணியப் பயனைக் கொண்டு தமக்குத் துணையாம் பதினெண் குடிமக்கட்கும், கற்பித்தல், காத்தல், படிகொண்டு விற்றல் முதலிய செய்யும் தம்முன் நின்றும் நிறுத்திய மூவர்க்கும், மருதமொழிந்த ஏனை நானிலத்தினை மக்கட்கும், சிற்றுயிர்கட்கும் 'நிலத்தொடு

நீராம்' தூய உணவு அளித்து நலம் புரிதல். பசித்துன்பத்தினின்றும் நீங்கி நலம் எய்துதல் இம்மையின்பம். அறியாமைத் துன்பத்தினின்றும் நீங்கித் திருவடி நலம்எய்துதல் அம்மையின்பம். துன்பம் நீக்கி இன்பம் ஆர்த்துதலே வீடுணர்த்துதலாம்.

இந்நான்கு வகுப்புக்களிலும் முதன்மையும் தலைமையும் வாய்ந்த வகுப்பு வீடுணர்த்தல். அதற்கடுத்த வகுப்பு ஏடுணர்த்தல். அதற்கடுத்தது நாடளித்தல். அதற்கடுத்தது ஏடெழுதல்.

கல்லூரி வகுப்புக்கள் எல்லாஞ் சேர்ந்து விழுமிய கல்லூரியாயினும் படிமுறையான் ஒவ்வொரு வகுப்புக்கும் சிறப்புக் கூடிக்கொண்டு போவதைக் கண்டு பிணக்க முறுவார் எவருமிலர்: அதற்கு மாறாக இணக்கமேயுற்று இன்பெய்திக் களித்துக் கற்கின்றனர்.

கண் கை கால் முதலிய பலவுறுப்புக்களும் தத்தம் நிலையில் ஒத்த சிறப்பினவே எனினும் ஒன்றினொன்று சிறந்ததெனக் கூறுதலின் மாறுகொள்வார் எவருமிலர். எண்சாண் உடம்பினுள் கண்ணே சிறப்புடையதென்ப. ஏனெனின், கண் காட்டி வழிப்படுத்துதலால். அங்ஙனம் வழிப்படுத்தலாகிய அறிவுப்பொறி, செயற்பொறி இல்வழிப் பயனின்றிவறிதே இருக்கும். எடுத்துக் காட்டாக, நறுநீர்ச்சுனையும், தண்ணிழற் சோலையும், விரை மலரும் நறைக் கனியும் மிக்கதருவும், இழுமென இழிதரும் அருவியும், விழுமிய கற்பாறையும் கண் காட்டக் காணலாம். காட்டியும் அவ்வுடலில் செயல் பொறியாகிய கையும் காலும் இன்றெனின் வெய்ய பொருளை அடைதற்கு நடந்து சென்று கொய்து நுகர்ந்து உயிர் இன்புறுதல் எங்ஙனம்? எனினும் கண்காட்டா வழிக் கையும் காலும் இருப்பினும் அப்பயனை உயிர் எய்தாது. எனவே செயற்பொறியினும் அறிவுப் பொறியே ஏற்றமுடையதென்னும் மாற்றத்திற்கு இழுக்கின்று.

அறிவுப்பொறி ஐந்து. அவை, மெய் வாய் கண் மூக்கு செவி என்ப. செயற்பொறி ஐந்து. அவை, கை கால் வாய் கருவாய் எருவாய் என்ப. இவ்விரண்டிலும் வாய் என்னும் ஓர் உறுப்பின் பெயர் காண்கின்றேம். அதுவே சிறப்புடைய உறுப்பாம், ஏனை எட்டினும் வாய் பொதுவாகப் பல் இதழ் நா அண்ணம் முதலியவற்றைக் குறிக்கும். அவற்றுள நா ஒன்றே சிறப்புடையது. ஏனெனின் அதுவே சுவையறிதலாகிய அறிவும் பொறியும், சொற்புகல்வதாகிய செயற்பொறியும் ஆகும். இவற்றைத் திருவள்ளுவ நாயனாரும்,

"யாகவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு."    குறள் : ௧உ௭.

என்றருளினர்.

**இதன் பொருள் :** காக்கப்படவேண்டிய பொறிகள் பத்தினுள் தனித்தனிப் பொறியாம் ஏனை எட்டினையும் காவா தொழியினும், இருவகைப் பொறியும் ஒன்றாகிய நாவொன்றனையும் சுவையாலும் சொல்லாலும் குறிக்கொண்டு காக்க; காவாவிட்டு விட்டால் ஆசையும் அளவிறப்பும் கொண்டு சுவைபடவுண்டு நோயும் மடியும் பெருகி ஒழியாத்துன்பமும் வசையாம் சொல் லிழுக்கும் பெறுவர். நன்னூற் பழக்கமும், நல்லாரிணக்கமும், குடிப்பிறப்பொழுக்கமும் இல்லாது மனம் போனவாறு அறிவினைச் சென்றவிடத்தாற் செலவிட்டுத் தீதும் நன்றும் அறியாது பொய் குறளை கடுஞ்சொல் பயனில்சொல் பாராட்டி நயனில்லாது பிறரால் நைவப்புடைப்புண்டு விளியாத்துன்பமும் அழியா வசையும் பெறுவர், என்பதே.

இந்நாக்குப் போன்று 'வேற்றுமை தெரிந்த நாற்பா'லுள்ளும் ஆற்றவும் சிறப்புடையார் வேளாளர் என்பது நடுவு நின்று ஆராய்வார்க் கெல்லாம் ஒப்ப முடிந்ததொன்று.

வேளாண் மாந்தர்களாலேயே நிலவளம் நீர்வளம் உடைவளம் ஊண்வளம் மொழிவளம் உணர்வுவளம உறை (மருந்து) வளம் உறையுள்வளம் உதவிவளம் ஊர்வளம் குடிவளம் கோல்வளம் கோவில்வளம் முதலாகிய நன்மைகள் பலவும் உலகிலேயே முதற்கண் நம் செந்தமிழ் நாடாம் தென்னாட்டில் உண்டாயின. இவற்றின் பயனாகிய 'நகச் சொல்லி நட்பாளுதலும், பகச் சொல்லிக் கேளிர்ப் பிரியாமையும்,' பயின்றார் சொல்லை மறுக்காது அவர்க்குப் பயன் செய்யும் கண்ணோட்டமுமே நாகரிகமென்று நவிலப்பெறும்.

உயிர்க்குயிராய்ப் பயின்ற நண்பரின் நண்புண்மை நிலைநாட்டற் பொருட்டுப் பகைவர் நஞ்சுகலந்து கொடுப்பின் அதனையும் உண்டு உண்மை நலத்தால் உயிர்தாங்கி நண்பருடன் அமைந்து நனி நாகரிகத்தை நாட்டுவர். இதனையே திருவள்ளுவப்பயன்,

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்." (திருக்குறள் - ௫அ0.)

என்று கூறுகின்றது.

பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்தொட்டு இன்று காறும் நிலைத்திருக்கும் நாகரிகம் தமிழர் நாகரிகமே யாம். அதுவே உலகெங்கணும் பரந்து உயர்ந்தாரால் கைக்கொள்ளப்பட்டுப் பயின்றுவரப் பெறுகின்றது. தமிழர் நாகரிகம் என்பதன்

மெய்ம்மை வேளாளர் நாகரிகமேயாம். வேளாளரே நாகரிகம் தோன்றுதற்குக் காரணமாகிய வித்தாவர். வித்து - காரணம். இவ்வுண்மை "ஞால மளந்த மேன்மைத், தெய்வத் தமிழும் தரும் செவ்வி மணஞ்செய் ஈரம்" என்று தெய்வத் திருக்குறட்கு மெய்வைத்த இலக்கியமாக அமைந்த திருத்தொண்டர் சீரினுள் ஆசிரியர் சேக்கிழார் அடிகள் அருளுவதாலும் காண்க. ஈரம், இனிமை, அன்பு, அறிவு, அருள், ஆண்மை முதலிய நாகரிகம்.

அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்ற நாகரிக நன் மக்கட்பகுப்பு உண்டாயது ஐந்திணையுள்ளும் மருதத்திணையின் கண்ணதே. அவ்வுண்மையை நடுநின்றாய்வார் பலரும் நன்கு வலியுறுத்திப் போந்தனர். அது, குறிஞ்சி நிலத்து வாழும் வில்வேடரும நெய்தல் நிலத்து வாழும் வலைவேடரும், மான் மரை முதலிய மெல் விலங்குகளையும் புலி பன்றி முதலிய வல்விலங்குகளையும், கடல்வாழ் மீனினங்களையும் முறையே கொன்றருந்தினர். குறிஞ்சி நிலத்தார்க்குத் தேனும் தினையும் காயும் கனியும் தழையும் குழையும் ஒரோவழி உணவாதலும் உண்டு. அதுபோல் நெய்தனிலத்தார்க்குப் பனம் பழமுதலி யவை ஒரோவழி உணவாதலும் உண்டு.

பாலை நிலத்தாராகிய மறவர்களுக்கு ஆறலைத்தலும் சூறை கொள்ளலும் ஆகிய பிறருடைமையால் வருவனவே அவர்க்குரிய உணவு முதலாம்.

முல்லை நிலத்தார்க்கு முந்நிரை (ஆடு மாடு எருமை) காத்துப் பாற்பயன் கொண்டு வரகு முதலிய புன்செய்ப் பயிர் களை மேட்டு நிலத்து வித்தி வானோக்கி விளைத்த அவ்விளைவு உணவாகும்.

மருத நிலத்தார் மேற்கூறிய நாற்பாலாரினும் அறிவாற்றல் மிக்காராய் அன்பருள் கைக்கொண்டு சிவநினைவினராய்க் கொலை புலையும் விடுத்தாராய்த் தூய உணவு உட்கொண்டு அவற்றால் பிறர்பழியும் தம்பழியும் நாணுவதாகிய உளத்தூய்மையும், வாய்மையுரைப்பதாகிய மொழித்தூய்மையும் பிறர் நலம் பேணுவதாகிய அறவொழுக்கமும் மேற்கொண்டு நடப்பதாகிய நல்வாழ்க்கைக்கு வளம் நிறைய வேண்டிய இன்றியமை யாமை ஏற்பட்டது. வறுமையுடையார் இருமையுறியார் என் பது வாய்மையன்றோ?

வளம் பெருக்குவதற்குக் குளம் பெருகவேண்டும் என நினைந்தனர். ஆறுகளில் அணைகட்டிக் கால்வாய் வழியாக நீர் கொணர்ந்து குளம் முதலியவற்றில் நிரப்பினர். வில்லேரின்றி

நல்லோரால் நிலத்தை உழுது பதினெண்வகைக் கூலங்களையும் விளைவித்தனர். விளைத்த கூலங்களைப் போராக்கினர். போரைச் சாய்த்து எருது முதலியவற்றால் மிதித்துழக்கி மணி கொழித்தெடுத்து அவற்றையும் போராக்கிக் குவித்து நெற் குதிர்களில் நிறைப்பர். வைக்கோல்களையும் போராக்குவர். இப்போர் என்னும் சொல்லே வேந்தர் முதலாயினர் பிறர்க்கு நலம் செய்யாது பொலம் செய்யும் தீயோரையும் அவரை யொத்த மன்னரையும் பொருதடக்கி அவரால் நலிவுற்ற மக்களைத் துன்ப மெலிவினின்றும் விலக்கித் தந்நிலையிற் கலங்காது வாழத் துணைபுரிந்து இன்பம் பொலிவாக்கும் செயற்கும் ஆயிற்று என்பது மிகையாகாது.

நிலவளம் பெருகவே மிடிபட்ட வாழ்க்கை நீங்கிச் செல்வ வாழ்க்கை வாழத் தலைப்பட்டனர். அப்பொழுது இரவாராய் இரப்போர்க்கு அவர் வேண்டுவ தொன்றைக் கரவாதுவந்தீயும் வள்ளலாய் வாழ்ந்தனர். தொகுத்த கூல முதலிய பொருள்களைக் கள்வர் பகைவர் முதலிய தீயோர்கள் கவர்ந்து கொண்டு போகாது நிலையான காவலரும் அரணும் கொண்டு காக்கவேண்டிய இன்றியமையாமை ஏற்படுவது இயல்பாயிற்று.

அதன் பொருட்டுத் தம்முள் உடல்வலியும் உளத்துரனும் மறமானமும் இயல்பாக அமைந்த ஒரு சாராரை நாடுகாத்தற்குத் தெரிந்தெடுத்து அரசராய் அமைத்தனர்.

பின் வாழுமுயிர்க்குக் கண்ணெனப்படும் எண்ணும் எழுத்தையும் கற்பிக்கும் ஓதுவித்தற்றொழிலுக்கு இயல்பாயமைந்த கூர்த்தமதியும் குளிர்ந்த நெஞ்சும் கடவுள் நினைவால் களித்த சிந்தையும் உடையராய் உள்ளாரைத் தெரிந்தெடுத்து அந்தணராய் அமைத்தனர்.

மேலும் விளைந்த பொருள்களை ஏனையோர்க்கு எளிதிற் கிடைக்கும்படி ஆங்காங்குக் கொண்டுபோய்க் கூறிவிற்கும் நயமொழியும் கணக்குத் திறனும் பலமொழி பயிலும் ஆர்வமும் பலருடன் பழகும் பண்பும் இயல்பாக அமைந்தாரைத் தேர்ந்தெடுத்து வணிகராய் அமைத்தனர்.

நிலத்துக்குரியார் வேளாளரே என்பது அவர்க்குத் தொன்று தொட்டு உலக வழக்கிலும் நூல் வழக்கிலும் பயின்று வரும் கிழார் என்னும் சிறப்புப் பெயரானே விளங்கும். கிழமை - உரிமை. கிழார்-உரியவர். எதற்குரியவரெனின் நிலத்துக்குரியவரென்க. நிலம் நற்றாயாகவும் நீர் செவிலித் தாயாகவும் நீலமணி மிடற்று ஒருவனும் வேந்தன் தந்தையாகவும் இவர் தம் நிறையருள் மக்கள் வேளாளராகவும் கொள்ளுதல் நேர்மை. (தொடரும்)

# தனிமையின் இனிமை

[நெல்லை. திரு. க. சுப்பிரமணியன்]

அறிவு ஆழமில்லாத வெற்றுப் பேச்சுக்களிலும் வேடிக்கைக் கதைகளிலும், ஓய்வு நேரத்தின் பெரும்பகுதியைப் போக்கிக் கொண்டிருக்கும் சில்லோர், இலக்கியத்தின் இன்சுவையை மாந்தவும் இயற்கையின் எழில்நலத்தை நுகரவும் தனிமையை நாடும் தன்மையாளரைக் கண்டு 'நமக்குப் பொழுதுபோவது யாங்ஙனம்?' என அறியாது வினவுகின்றனர். பகல் முழுதும் பொருளீட்டும் முயற்சிகளில் நினைவெல்லாம் செலுத்தப்பட்டு, மாலைக் காலம் ஆனதும், அந்நினைவு வறிதாகிச் சாம்பிப் போகா வண்ணம், தனித்திருந்து இனித்திருக்கும் காட்சிகளிலும் கருத்துக்களிலும் ஈடுபடுவது எவ்வளவு மேன்மையானது என்பதை அன்னோர் ஏன் உணர்கிலாது உள்ளனர்? ஒருநாளிற் சிறிது நேரமாவது நம் சிந்தனைக்கு இடந்தந்து, மன எழுச்சி பிறக்க வகை செய்யும் தனிமையை, மாந்தர் விரும்பாராயின், கரும்பின் சக்கை போலான உடலைப் போல் உள்ளமும் தளர்வுறுமோ? அன்றியும், புத்தர் முதலான அறிவுத் தெளிவுபெற்ற சிந்தனைச் செல்வரும், சித்தர் முதலான கருத்தூருணியாகத் திகழும் மேன்மக்களும் தனிமையைப் பெரிது விரும்பி இனிது இருந்தமையாலன்றோ, உலகுக்கு ஒளிசெய்து போதருகின்றனர். 'இனிது இனிது ஏகாந்தம் இனிது' என்று பிற்காலத்து அவ்வையார் அருளிய செவ்வை நன்மொழியைச் சிந்தித்துப் பாருங்கள்!

மக்கள் என்பார் எக்காலத்தும் எவ்விடத்தும் ஒருவரோடு ஒருவர் உறவுரிமை பூண்டு வாழும் இயல்பினரே யாவர்என மொழிந்திட்டார். மூதறிஞர் ஒருவர். கற்றுத் துறைபோய அந்நல்லறிஞர் கூற்று, முற்றும் உண்மையே ஆகும். ஆகவே, மக்கட் கூட்டத்தை விட்டகன்று, தனித்திருக்க முழுதும் விழைவது என்பது, இக்காலத்து இயல்பிற்கு ஏலாத தொன்றாகவும், இடர்ப்பாடாகவும் முடியும். மற்று, அறிவு வளர்ச்சியையும் தெளிவையும் அவாவும் மக்கள் எல்லார்க்கும் சிறிதளவு நேரமாவது சிந்தித்துணர, ஒவ்வொரு நாளும் தனிமை வேண்டற்பாலது. ஆனாலும், அல்லற்பட்ட ஞான்று ஆறுதல் மொழி கூறுதற்கும், உளத் தளர்ச்சி நேர்ந்தவழி அதனை மாற்றிக் கிளர்ச்சி யூட்டும் கனிமொழி கிளத்துதற்கும், உலக வாழ்வின் நிகழ்ச்சிகளில் தெளிவுபெறுதற்கும் வாய்த்த நண்பர் சுற்றத்தாரை

யெல்லாம் பிரிந்து என்ஞான்றும் தனித்திருத்தல் என்பதும், வரம்பு இகந்த பின், பெரிதிடர் பயக்கும் என்று தெரிதல் வேண்டும். இன்னும், தமரைப் பிரிந்து காலமெல்லாம் தனிமையை விரும்புபவன் தனக்கோ பிறர்க்கோ பயன்பெறுதல் ஒல்லுமோ? ஒல்லாது! ஆகவே, தனிமைக்கும் ஓர் அளவுண் டென்று அறிதல் வேண்டும.

தனிமை என இங்கு எடுத்து இயம்புவதெல்லாம், சூழ்ச்சி யும் சூதும் நிரம்பிய மக்கட் கூட்டத்தினின்றும் நனி விலகி, அறிவின் வளர்ச்சிக்கும் ஒழுக்கத்தின் உயர்ச்சிக்கும வழி கோலும் வகையாகச் சிந்தனைக்கு இடம்தரும் தனித்திருக்கும் நிலையாம் என்று உணர்தல் வேண்டும். அவ்வண்ணம் தனிமை யில் இருத்தல் என்பது சுற்றிலும் மற்ற மக்கள் இலர் எனினும், இயற்கையின் எழிலோவியக் காட்சிகளை வழங்குகின்ற காடும் காவும் யாறும குளனும் ஏரியும் பள்ளத்தாக்கும் ஆகிய இடங் களின் உளங்கவர் சூழ்நிலைக் காட்சிகளின் நடுவண் இருக்கின்ற பான்மையாகும் என்று எண்ணவேண்டும். அல்லாமலும், இன்னோரனன எழில்மிகு பொழிற்காட்சிகளும் பிறவுமான எல்லா நலங்களும கெழுமி இருத்தற்கு இடமான இலக்கிய நயங்களின் நாப்பண், நம் நினைவெல்லாம் ஆழ்ந்து ஆய்ந்து நுகரும் நிலையே யாகும் என்றும் நினைவுகொளல் வேண்டும்

தனிமையிலிருத்தல் தண்டனையாகவும் குற்றவாளிகளுக்கு அமைகிறது. அதுவும், வரம்பு கடந்த காலம் அங்ஙனம் ஓர் குற்றவாளிக்குத் தண்டனை கொடுக்கப்படுவதும் தீதாய் முடிகிறது. எல்லோர்க்குமே எல்லையில்லாத காலம் தனித் திருத்தல் என்பதும் தொல்லையாகவே காணப்படும். மனம், வன்பாடு எய்தும்.

வரலாற்றிலே சிறப்பிடம் பெற்ற வீரர்களும் அறிஞர்களும் பெரியார்களும், தனிமையின் இனிமையில் இருந்து கண்டு கொண்ட அரியபெரிய அடிப்படைக் கொள்கைகளை வித்தாகக் கொண்டே உயர்நிலைபெற்றுப் பயன்மிக விளைத்துள்ளனர். அஃதொன்று? மொழியிலே ஆட்சித்தலைமை பூண்ட புலவர் பெருமக்கள், வாழ்க்கைக்கு வழிகாட்டும் இலக்கியங்கள் இயற்றி யருள்வது, தனிமையில் இருந்தேயாகும் என்று உளங்கொளல் வேண்டும்.

மக்கள் வாழ்க்கையைச் செப்பஞ்செய்தற்கும், உலக இடுக்கண்களை நீக்குதற்கும், அறியாமை இருட்போக்கி நலம்பல புரிதற்கும் ஏற்ற, புதிய கண்டுபிடிப்புகளையும் இலக்கியங்களை யும் ஆக்க முயலும் பெருமக்களது தனிமை விருப்பம் தகைமை சான்றதாகும் என்று மனங்கொளல் வேண்டும்.

தும் முறைமை கற்றோரது உள்ளங்கவருந் தன்மையதாய் இலங்குகின்றது.

'பயனில்சொற் பாராட்டு வானைமக னெனல்,
மக்கட் பதடி யெனல்.'

என்கின்றார் வள்ளுவர். பயனில்லாத சொற்களைச் சொல்வதனாலேயே அவற்றைச் சொல்வானது பயனின்மை உணரப்படுமாகையால், அவனைப் பதர் என்று கூறுவது சாலப்பொருத்தமுடையதன்றோ? பயனுடைய சொல்பவனே மகன் (மனிதன்), அல்லாதான் மக்களுட் பதர் என்க. இதனுட் பதடி (பதர்) என இழித்துக்கூறு முகத்தால் பயனில்லாத சொற்களைச் சொல்வதன் இழிவை ஆசிரியர் புலப்படுத்தினாராதல் கொள்க.

ஒருவரைக் காணாதவிடத்து அவரைப் பழித்துரைத்துக் கண்டவிடத்தில் அத்தியவொழுக்கத்தை மறைத்தொழுகுவதை விட இறந்துவிடுதல் அறநூல்கள் கூறுகின்ற சிறப்பைத்தரும் என்னும் கருத்தை,

'புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறும் ஆக்கந் தரும்.'

என்பதனால் அறிக. இதனுள், புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்பவன் இறத்தல் உலகிற்கு நன்றாவதும் அன்றி, அவனுக்கு நன்றாம் எனக் கடுமொழி கூறி நீதி நிறுவப்பட்டது காண்க. தீங்கு புரியாதவர் நற்கதி அடைவர் என்பது அறநூல்களின் கொள்கை. புறங்கூறுபவன் இறந்தானாயின், அவனுக்கு அத்தீங்கினை இயற்ற இயலாதன்றோ? இயலாதாகவே அவன் அத்தீங்கில் நின்றும் ஒழிவதனால், அறநூல்கள் கூறும் நற்பேற்றை அடைவதற்குத் தகுதியுடையவன் ஆகின்றான் என்க. அவன் இறவாதிருப்பனாயின், அத்தீங்கினைச் செய்து தீக்கதி சேர்வது ஒருதலையாகையால், அவன் இறப்பது அவனுக்கும் நன்றாமாறு காண்க.

உலகநடை அறிந்து ஒழுகுவதன் இன்றியமையாமையை,

'ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்.'

என்னும் வேம்பினுங் கடிய வெஞ்சொல்லால் தெளிவுறுத்துகின்றார் தெய்வப்புலவர். 'உலகநடை அறிந்தொழுகுபவன் உயிர்வாழ்பவன், ஏனையவன் செத்தாருள் ஒருவனாகக் கருதப்படுவன்' என்பது இதன் கருத்தாம். ஒத்ததறிவானை 'உயிர் வாழ்வான்' என வேண்டா கூறி விளக்கினமையால், ஏனையோன உயிரிருந்தும் வாழாதவன் எனக் கூறியவாறாயிற்று.

ஒரு பொருளை இரந்தார்க்கு அதனைக் கொடுக்க இயையாத விடத்து, இறப்பதே இனிதாம் என்னுங் கருத்தைச்,

'சாதலின் இன்னாத தில்லை, இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை.'

என்பதனால் வள்ளுவர் வகுப்பது காண்க.

புகழ்பெறாது வாழ்பவர் இறந்தவராவர் என்னும் கருத்து,

'வசையொழிய வாழ்வாரே வாழ்வார், இசையொழிய
வாழவாரே வாழா தவர்.'

என்பதனால் அறியப்படுகின்றது.

திருத்தகு தெய்வப்புலமைத் திருவள்ளுவரது சொற்றிறனை இப்பாட்டில் நாம் தெளியக்காணல் ஆகும். 'வசையொழிய வாழ்வாரே வாழ்வார்' என்றது 'வசைதழுவ வாழ்வார் வாழாதவர்' என்றவாறும். 'இசையொழிய வாழ்வாரும் வாழாதவர்' என்பது சொல்முறையானே பெறப்பட்டது. ஆகவே, வசையுடன் வாழ்வாரும் இசையின்றி வாழ்வாரும், வாழ்பவராயினும வாழ்க்கைப் பயனைப் பெறாமையால், வாழாதவரோடொப்பர் என்பது பெறப் படுகின்றது. இதனால், ஒருபால் இசையுடையராயினும் மற்றொருபால் வசையுடையாரும் வாழாதவர் ஆவர் என்பதுதானே பெறப்படும். யாதோர் வசையும் இன்றி இசைபெற்று வாழ்தல் வேண்டும் என்பது வள்ளுவர் கருத்தாகத் தெரிகின்றது.

'தோன்றிற் புகழொடு தோன்றுக, அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.'

என்னுஞ் செய்யுளில், 'ஒருவர் பிறப்பதாயின், பிறந்து புகழ் பெறுதற்கு உரிய குணங்களுடன் பிறக்கவேண்டும், அஃது இல்லாதவர் பிறப்பதைவிடப் பிறவாமலிருப்பது நன்றாம்' எனக் கூறிப் புகழ்க்குரியவர் அல்லாதாரின் பிறப்பைக்கடிதல் மிக அழகு பயந்து அவிர்கின்றது. பிறப்பதாயின் சிறப்பொடு பிறக்கவேண்டும், பிறந்தும் ஒருவர் சிறப்பிலராகக் காணப்படுவராயின் அவர் இறக்கவேண்டும் என்பது வள்ளுவர் கருத்தாம் என்பது இப்பாடலானும் 'புறங்கூறிப் பொய்த்து' என்றற்றொடக்கத்துப் பாடல்களானும் அறியப்படும். இதனால் சிறப்புடைய நல்லாரே உலகில் வாழ்தலை விரும்புகின்றார் ஆசிரியர் என்க.

இனி, இச் செய்யுட்கு, 'கூட்டங்களில் ஒருவர் தோன்றுவராயின் புகழோடு தோன்றுக, அஃதில்லாதவர் அவ்வாறு தோன்றாதிருத்தல் நல்லது' என்று பொருள் கூறுவாரும் உளர்.

எவ்விடத்துந் தோன்றாது புகழ்பெறுவது அரிதாகையாலும், இல்லகத்திருந்தே கொடை முதலியவற்றால் புகழ்பெறலாம் எனில், அதுவும் யார் முகத்தாயினும் தோன்றாது பெறப்படுவதன்றாகையாலும், புகழ் என்பது பலரறிந்து பேசப்படுவதாகையாலும் யாரோடாயினும் அறிமுகப்படாது புகழ் பெறுதலரிதாகையாலும், பத்திரிகைகள் (காலமுறை வெளியீடுகள்) வாயிலாகப் புகழ் பெறலாமெனில் அவை வள்ளுவர் காலத்து இக் காலம்போன்று பெருவழக்கில் இல்லாமையாலும், அவற்றின் வாயிலாகப் புகழ்பெறுவதும் ஒருவர் தம்மை ஒருவழிப் புலப்படுத்தலாகவே கூறுதலானும், அது உரையாகாமை நன்கு உணரத்தகும். மேலும், 'பிறந்தால் அவன்போலப் பிறக்க வேண்டும், பிறந்தால் தருமனைப் பிறக்கவேண்டும், வீரனைப் பிறந்து வீரனையிறக்கவேண்டும்' என்றாற் போலும் வழக்குக்கள் எல்லாம் குறிப்பிட்ட பயன்களுக்கு உரிய குணங்களோடு பிறக்கவேண்டும் என்பதையே விளக்குறுத்துவதுபோல, ஈண்டும், புகழோடு தோன்றுக என்பதில் புகழ் என்பது புகழ்க்குரிய குணங்களை விளக்குறுத்தி நின்றதென்க. பல்கலைசான்ற பரிமேலழகர் பகர்ந்த உரையும் இதுவே.

புகழில்லாத உடம்பைத் தாங்கும் நிலம் தன் வளங்களிற் குறைவுபடும் என்பதை வள்ளுவனார்,

> 'வசையிலா வண்பயன் குன்றும், இசையிலா
> யாக்கை பொறுத்த நிலம்.'

என்பதனால் விளக்குகின்றார். இதனால், புகழில்லாதவர் படிக்குப் பாரமாவதன்றி நிலம் விளையுள் குறைவதற்கும் காரணம் ஆவர் என அவரை ஆசிரியர் இழித்துக் கூறினாராதல் காண்க.

துறந்த சான்றோரை ஒப்ப வேடம் புனைந்து வஞ்சித்து வாழ்வாரை இரக்கம் அற்ற கொடியவர் என்கின்றார் வள்ளுவனார்.

> 'நெஞ்சிற் றுறவார், துறந்தார்போல் வஞ்சித்து
> வாழ்வாரின் வன்கணா ரில்.'

என்பது காண்க. 'வன்கணார்இல்' என்றமையால் இவரினும் கொடியார் இலர் என்பது பெறப்படும். (வன்கணார் - கொடியவர்.)

> 'வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்னெஞ்சம்
> தானறி குற்றப் படின்.'

ஒருவன் ஒன்று குற்றம் என்று நெஞ்சுற உணர்ந்தும், அக் குற்றத்தில் தங்குவனாயின், அவனது பெரிய தோற்றம் (குடிப்

பிறப்பு) என்ன பயன் செய்யும் என்று வினவுகின்றார். அத்தகையவனது தோற்றம் பயனற்றது எனக் கடிந்து கூறு வாறு காண்க.

'செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான், அல்லிடத்துக்
காக்கிலென், காவாக்கா லென்.'

'செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக் கீழ்த்தங்கு முலகு.'

என்பனவும் வாயுறை வாழ்த்தில் அடக்கப் பெறுவன. 'செவி கைப்ப' என்னுந் தொடக்கத்துப் பாட்டு, வாயுறை வாழ்த்தின் பண்பையும் பயனையும் உணர்த்தி நிற்றல் ஆய்ந்துணரற் பாலது.

கல்லாதவர் கண்ணுடையர் ஆகார். அவர் முகத்தில் இரண்டு புண்களை மட்டுமே உடையவர் ஆவர் எனக் கல்லா தாரை வள்ளுவனார் இழித்துக் கூறுமாறு காண்க.

'கண்ணுடைய ரென்பவர் கற்றோர், முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.'

கண்ணிருந்தும் ஆராய்ச்சி யுணர்வு இன்மையால் கல்லாதார் கண்களைப் புண்கள் என்றார். கண்கள் ஊனுலானமையின் புண் களாம் என்க. கற்றோரைக் கண்ணுடையர் என்றது அவ்வூன் விழிகள் பற்றியன்று, அவரது கல்வியறிவு பற்றியாம் என்க.

'நுட்பம் உடையதாய் மாட்சிமைப்பட்டு எந்நுண்பொரு ளினும் நுழைந்து அறியும் அறிவு இல்லாதவனுடைய எழுச்சி யுடைய அழகு மண்ணால் மாட்சிமைப்படச் செய்யப்பட்ட பாவையது எழுச்சியுடைய அழகையொக்கும்' என நுண்ணறிவு இல்லாதவரை வள்ளுவனார் இழித்துக் கூறும் நயம் நயத்தக்கது.

'நுண்மாண் நுழைபுல மில்லான் எழினலம்
மண்மாண் புனைபாவை யற்று.'

என்பதனால் அந்நயங் காண்க. இதனால், நுண்ணறிவில்லாத வனது அழிவு வெற்றழகாய் மண்பாவையது அழகுபோலும் என்பதாம். எனவே, அவனை அழகிய மட்பதுமை என்று இழித்துக் கூறியவாறு ஆயிற்று என்க.

'விலங்கொடு மக்கள் அனையர், இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.'

என்பதில், வள்ளுவனார், கல்லாதவரை விலங்குகள் என இழித் துக் கூறுவது காணத்தக்கது. மக்கட்கும் விலங்குகட்கும் எத்துணை வேற்றுமை, அத்துணைவேற்றுமை கற்றார்க்கும் கல்லாதவர்க்கும் உளதாம் என்பது கருத்து. இதனால், கல்லா

தார் வடிவால் மக்கள் போல்வரேனும், அறிவால் விலங்குகள் ஆவர் என்று உணரப்படும்

'அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து.'

என்பதனுள், பிறர்க்கு எளிய செவ்வி இல்லாதவனும் (பிறர்க்கு எளிதில் காண இயலாதவனும்) இனிதல்லாத முகத்தை (சுடு முகத்தை) உடையவனும் ஆகிய அரசனது செல்வம் பேய் பெற்ற செல்வம் போன்ற தன்மையை உடையது என வள்ளுவனார் இழித்துக் கூறுகின்றார். எளிய செவ்வியும் இனிய முகமும் இல்லாத அரசன் காண்பதற்கு அருமையும் பொல்லா முகமும் உடைய பேய்போல்வன் என்பது கருத்து.

செவியினால் கல்விப் பொருட் சுவையை நுகர்ந்து உணராத, வாயினால் உண்பொருட்சுவையை மட்டும் நுகர்ந்து உணர்தலையுடைய மாக்கள் இறந்தால் என்ன? வாழ்ந்தால் என்ன? (இரண்டற்கும் பயன் ஒன்றேயாம்) என்கின்றார் வள்ளுவனார். இதனை,

'செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
ரம் வாழினு மென்.'

என்னுஞ் செய்யுளால் அறிக. இதனால், கேள்விநலம் இல்லாதவர் இறக்க என்று கூறிற்றிலராயினும், அவர் வாழ்வதாற் பயனில்லை என்று கூறினார் ஆவர் வள்ளுவனார்.

'கல்லா தவரிற் கடையென்ப, கற்றறிந்தும்
நல்லா ரவையஞ்சு வார்.'

என்பதனால், வாய்மொழி வள்ளுவனார், கற்றும் கற்றார் கூடிய அவைக்கு அஞ்சி உரைக்க மாட்டாதவரைக் கல்லாதவரினும் கடைப்பட்டவர் ஆவர் என்கின்றார். எனவே, கல்லாதார்க்குக் கூறிய இழிவுகள் எல்லாம் இவரையுஞ் சேரற்பாலனவாம்.

அன்றியும், கற்றுவைத்தும் அவையஞ்சி உரைக்கமாட்டாதாரை, உலகத்திருப்பவராயினும் இல்லாதவரோடு ஒப்பர் என,

'உளரெனினும் இல்லாரோ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.'

என்னும் பாட்டால் விளக்குகின்றார். வாழ்ந்திருந்தும், வாழாதாரைப் போலப் பயன்படா திருப்பதனால், அவையஞ்சுவார் வாழாதாரோடு ஒப்பர் என்பதாம்.

'வைத்தான் வாய்சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில்.'

என்னும் பாட்டில், மிகுந்த செல்வத்தை ஈட்டிவைத்து அதை நுகராமல் இருப்பவனைச் 'செத்தான்' என்று கூறுகின்றார். இறந்தவர் தாம் முன்செய்து வைத்த செல்வத்தை நுகர இயலாதன்றோ? அஃதொப்ப, ஒருவன் வாழ்ந்திருந்தும் தன் செல்வத்தை நுகராதிருப்பனுயின், அவனுக்கும் அதனை நுகராது வைத்து இறந்தானுக்கும் வேற்றுமை உளதோ?

மேலும், இவறன்மை (உலோபம்) மேற்கொண்டு செல்வப் பயனை விரும்பாதவருடைய பிறப்பு நிலத்துக்குச் சுமைஆகும் என்கின்றார் பொய்யில் புலவர்.

'ஈட்டம் இவறிஇசை வேண்டா ஆடவா
தோற்றம் நிலகுப் பொறை.'

என்பது காண்க.

'துஞ்சினர் செத்தாரின் வேறல்லர், எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.'

என்பதனல், கள்ளுண்பாரை நஞ்சுண்பார் என நான்முகனர் நவில்வது காண்க.

'ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின், அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று."

என்பதனல், தன்னோடு ஒட்டாதவர் பின்சென்று வாழ்வதை விடக் கெட்டொழிதல் நன்று என்று கூறியவாறு காண்க.

மரப்பாவைக்கு உயிரில்லையாயினும் அதில் தொடுக்கப் பெற்ற கயிற்றின் இயக்கத்தால் உயிருடையதாக மருட்டுகின்றது. நல்லார்க்கு நாணமே உயிராவது, நாணம் இல்லாதவர் உயிரற்றவர் என்பதாம். ஆயின், நாணம் இல்லாதவர் இயங்குகின்றாரே எனில், மரப்பாவை கயிற்றால் இயங்குவது போல அவரும் ஒருவகைக் கயிற்றால் இயங்குகின்றார் என்க. அவரை இயக்குவது (அசைப்பது) உயிரென்று சொல்லத் தக்கதன்று, அது ஒருவகைக் கயிறும் என்பது. எனவே, நாணம் இல்லாதவர் மரப்பாவைகள் ஆவார். இக் கருத்தைப் பொய்யா மொழியார்,

'நாணகத் தில்லா ரியக்கம் மரப்பாவை
நாணல் உயிர்மருட்டி யற்று.'

என்னும் இனிய பாவால் சுருக்கி விளக்கல் காண்க.

'விளிந்தாரின் வேறல்லர் மன்ற, தெளிந்தாரிற்
றீமை புரிந்தொழுகு வார்.'

என்பதனல், தம்மை நம்பினரின் மனைவியரைக் காதலித்து ஒழுகுபவர் இறந்தவரே ஆவர் (இறந்தவரைவிட வேறாகார்) என்கின்றார்.

ஒருவனைப் புறம்பழிப்பவனை வையம் தாங்காது. அது அவனையுந் தாங்குகின்றதே எனில், யாவரையுந் தாங்குவது தனக்கு அறனாகும் என்று கருதியேயாம். அன்றி நிலத்தால் அவன் தாங்கப் பெறுந்தகுதி உடையவன் அல்லன. இக் கருத்தை,

'அறனோக்கி ஆற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை.'

என்பது விளக்குகின்றது.

'நகுதற் பொருட்டன்று நட்டல், மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு'

என்னும் இப் பாட்டு வாயுறை வாழ்த்தின் இன்றியமையாமையும் உணர்த்துகின்றது. நட்புக்கொள்வது நகைத்து மகிழ்தற்காக அன்று. நண்பர் வரம்பு கடந்து ஒழுகுமிடத்து, அவரை மீதூர்ந்து, இடித்துக்கூறி நன்னெறி நிறுத்தற் பொருட்டாம் என்பது கருத்து.

செல்வம் உண்டானவிடத்து நட்புக்கொண்டு, அச் செல்வம் நீங்கியவிடத்து நட்பை விட்டு நீங்குபவரை 'ஒப்பற்றவர்' எனக் குறிப்புமொழியால் இழித்துக் கூறுகின்றார் முதற்பாவலர். மேலும், அவரது நட்பைப் பெற்றாலும் இழந்தாலும் பயனொன்றே என்பர்.

'உறினட் டறினொரூஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என்.'

என்பது காண்க.

'நல்லோர் ஒன்றைச்செய்ய ஏவினும், அது செய்யமாட்டான், தானுயினும் தெளியவறிந்து அது செய்வதற்கு உரியதெனச் செய்யவுங்கில்லான், அத்தகையோன் இறக்குமளவும் ஒரு நோயாவன்! என்னும் கருத்தை,

'ஏவவுஞ் செய்கலான் தான்தேறான், அவ்வுயிர்
போஒம் அளவுமோர் நோய்.'

என்னும் செய்யுளிற் காண்க.

கண்ணோடு பொருந்தியும் அருணோக்கம் இல்லாதவரை மண்ணோடு பொருந்திய மரத்தை ஒப்பர் என்கின்றார் இயன்மொழிப் பாவலர். இதனை,

'மண்ணோ டியைந்த மரத்தனையர், கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்.'

என்பதனால் அறிக. கண்ணோட்டம் இல்லாதவர் கண் மண்ணோடு ஒக்கும் என்பதாம்.

# ஒழுக்கம்

[வித்துவான், சு. குமாரஸ்வாமி ஆச்சாரி, எம்.ஏ., மயிலம்]

மக்கள் காலத்துக்கும் இடத்துக்கும் தக்கபடி வாழ, அவர்களைப் பக்குவப்படுத்துவதே சமையமாம். எச்சமையத்துக்கும் அடிப்படை தன்னைத்தானறிதலே. தன்னைத் தானறிவதனால் வரும் அறிவே ஒவ்வொருவரும் மேற்கொள்ளவேண்டிய ஒழுக்க நிலையை யளிக்கும். ஆதலின், உயிரின் அழியாத்தன்மையை யுணர்ந்து விருப்பொடு செயலாற்றுவதே ஒழுக்கமாம். வேறுபாடுகள் மிக்க இவ்வுலகத்து ஒற்றுமையைத் தெளிந்துணர்ந்து வாழ்வதே ஒழுக்கமாம். எனவே, வேற்றுமை யுணராத நிலையே—வெறுப்பின்மையே—ஒழுக்க நெறியாம். இதுவே சமையம் சாற்றும் உண்மையாம். ஆதலின், ஒருவர் மற்றொருவர்பால் நடந்து கொள்வதே சமையம் எனப்படும்.

வேறுபாட்டுணர்ச்சியொடு கூடி வாழ்வது பாவம் ஆம். வேறுபாட்டுணர்ச்சியின்மையே அறமாம். அறம் தன்னலம் கருதுவதை யழிக்கும். ஆதலின், வேற்றுமையுணர்ச்சியை யழிப்பதாகிய ஒழுக்கமாம். உயிர்கட்குரிய ஓர் வரம்பு (Law) ஆகும். மாறுபாட்டினை விளைக்கும் இவ்வுலகத்தில் ஒழுக்கமே ஒற்றுமையையும் இன்பத்தையும் அளிப்பது யாருக்கு எத்தகைய நன்மை செயினும், அவருடைய பருவுடலைக்கண்டு செய்வதில்லை. அவருடைய பண்பினை—மனநிலையை—உணர்ந்தே செய்கிறோம். ஆதலினால், தன்னைத் தானறிந்தவன் (உயிரினியல்பை யுணர்ந்தவன்) மேற்கொள்ளும் நெறியே ஒழுக்க நெறியாம். அன்பின் விளக்கமே ஒழுக்கமாதலின், எல்லாப் பொருளினும் ஒற்றுமையைக் காண்பதே—எவ்வுயிரையும் தன்னுயிர்போலக் கருதுவதே—ஒழுக்கமாம். ஒரே ஒளி ஒரு முப்பட்டைக்கண்ணாடியின் (Prism) மூன்று பக்கங்களினும் பரவுவது போலத் தன்னைத்தான் அறிதலால் தோன்றும் அறிவு, காலம், இடம், பொருள்களுக்கேற்பச் செயற்படுவதே ஒழுக்கமாம்.

வாழ்க்கையின் குறிக்கோளாகிய இன்பத்தை அளிப்பது ஒழுக்கமேயாம். இன்பம் என்பது உயிரோடு ஒன்றியிருப்பதே. புறத்தேயிருந்து பெறுவதன்று. பதி, பசு, பாச அறிவின் வளர்ச்சியினால், உயிர் அவ்வின்பத்தை எய்தலியலும். உயிரை மயக்குவதாகிய மாயையை விட்டு விலகுவதே இன்பம் எய்தும் நெறியாம். இன்பம் அடைதற்கு இதைத்தவிர வேறு நெறியில்லை. ஆதலால், ஒழுக்கத்தை எல்லோரும் மேற்கொள்கிறார்கள்; போற்றுகின்றார்கள். ஒழுக்கமே இன்பம். ஒழுக்கமே வென்றி. ஒழுக்கமே நிறைவு. ஒழுக்கமே வாழ்வின் வளமாம்.

அழகும், அமைதியும், கவர்ச்சியும், சாந்தமும் உடல் நலமும் மனநலமும் ஒழுக்க நெறியைக் கைக்கொள்வதாலேயே பெறமுடியும். எல்லாவற்றினும் இறைநிலையைக் காண்பதே ஒழுக்கநெறியாதலின், பதிபசுபாச உண்மையறிவின்றி இன்பம் எய்தலியலாது. இரக்கவுணர்ச்சியும் பிறர்க்கென வாழ்தலும் தூய்மையான ஒற்றுமைப் பண்பும் உடையவராதலே ஒழுக்க நெறியாம் என்பது இதனால் வெள்ளிடைமலையாம்.

**அறம்**

ஒவ்வொருவரும் தன்னையும் தனக்குப் புறத்தேயுள்ளே பொருள்களையும் ஆய்ந்துணர்ந்து, உயிர்க்குயிராக இறைவன் ஒருவன் உண்டெனவுணர்ந்து, எட்பொருளையும் இறைவடிவாகக் காண்பதே மெய்யறிவாம்.

"பண்ணே னுனக்கான பூசையொரு வடிவிலே
பாவித் திறைஞ்ச வாஙகே
பார்க்கின்ற மலரூடு நீயே யிருத்தியப்
பனிமல ரெடுக்க மனமும்
நண்ணே னலாமலிரு கைதான் குவிக்கவெனில்
நாணு மென்னுளம் நிற்றிநீ"

என்னும் தாயுமானார் வாக்கை நோக்குக. அவ்வாறின்றி, உலகப்பொருள்களில் மயங்கி நின்று தான் வேறு பிறவேறு என வேற்றுமை யுணர்தலே பொய்யறிவாம். மெய்யறிவே இன்பம் தருவது. பொய்யறிவு துன்பம் தருவது. மெய்யறிவின் பயனாகிய இரக்கமே இன்பம் தருவது. பொய்யறிவாலெழும் வன்கண்மையே துன்பம் தருவது. "அறத்தான் வருவதே இன்பம்."

அறநெறியில் நின்ற மனம் குறையா வளமுடையது. ஒருவனது வறுமை கண்டுழி உள்ளம் இரங்குகிறது. அடுத்து வேறொருவனது துன்பம் கண்டுழியும் உள்ளம் இரங்குகிறது. உழைத்து ஊதியம் காணாது நிலை கண்டும் உள்ளம் இரங்குகிறது இரக்கவுணர்ச்சி இங்ஙனம் பலவாக விரிந்து செல்லினும் மேன்மேலும் வளர்ச்சியடைகிறதே தவிரக் குறைவதில்லை. ஒருமுறையிரங்கிய உள்ளம், மீண்டும் மீண்டும் இரக்கம் கொள்ளாமலிருப்பதில்லை. 'பொறுமை முழுதும் இழந்துவிட்டேன். இனிப் பொறுமை என்பதே என்னிடமில்லை' என்று யாராவது சொல்லமுடியுமா? இரக்கம்போலப் பொறுமையும் குறையாமல் வளர்ச்சியடைவதேயாம். இங்ஙனமே அறச்செயல்கள் ஒவ்வொன்றையும் பற்றி யுணரின், 'அறம் அழியாதது, குறையாதது, வளர்ச்சியடைவது' என்பது நன்கு புலனும். சுருங்கக்கூறின், அறம் செயலில் வெளிப்படுந்தோறும்

வளர்ச்சியடைந்து கொண்டிருக்கிறது. சிந்தையின் அறமாம். சிந்தையின் நிறைவின்றேல்—போதுமென்ற எண்ண மின்றேல்—அவாதோன்றும். அதனால் அழுக்காறுதிய குற்றங் கள் தோன்றும்; பாவச்செயல்கள் மிகும். சிந்தையின் நிறை வால் அறம் வளரும். சிந்தையின் குறைவால் பாவம் வளரும். வேண்டிய பயனைப்பெறும் வழியின்மையால், பாவம் இளைப்பை யும் வெறுப்பையும் தருகின்றது. பயனளிப்பதால், அறம் அசைவிலா ஊக்கத்தையும் ஆற்றலையும் அளிக்கிறது. ஆதலின், சான்றோர் அறத்தையே நாடுவர்; சீரினும் சீரல்ல செய்யார்.

அறத்தின் அடிப்படையான அன்பே ஒழுக்கத்தை வளர்ப் பது. தன்னைத்தானறிவதால், பிரமமேதானென உணர்ந்து தன்னினும் பிரமம் வேறுனது என உணர்வதால் எழுவதே அன்பு. அன்பே சிவம். இவ்வுணர்ச்சியால் அன்பும் அருளும் தன்னலமின்மையும் உலகில் மிகுகின்றது. உயிர்களையெல்லாம் ஒன்றுகக்காணும் அறிவு அன்பினுலெழுவதாம். ஆதலின், உர மும், ஆற்றலும், உடல் நலமும் தூயவளமும் இறை பற்றிய உணர்ச்சியினுல் உண்டாவனவேயாம். இறை பற்றிய கொள்கை கள் பலவாருக இருக்கினும் அன்பும் ஆற்றலும் நலமும் வளமும் தருவது சமையமே என்பதில் கருத்து வேறுபாடில்லை வேற்று மையை யழித்து ஒற்றுமையை நாட்டுகின்ற போர்ச்செயலுக் கும் அன்பே காரணம். "அறத்திற்கே யன்புசார் பென்ப அறி யார், மறத்திற்கும் அஃதே துணை."

### பாவமும் இன்பந்தருமா?

பாவம் இன்பத்தை யளிக்காது; மகிழ்ச்சியை ஊட்டுகிறது. மகிழ்ச்சி இன்பம்போலத் தோன்றுவது, நிறைவில்லாதது, நிறைவுடையதுபோலத் தோன்றுவது, மேலும் மேலும் அவாவை எழுப்புவது அவாவின்மையே இன்பமாம். ஆதலின் மகிழ்ச்சி நட்பொடு கூடியிருந்தே கேடுவிளைப்பவனைப்போன்றது. அம் மகிழ்ச்சியின் எழும் அவாவே இடும்பைக்கெல்லாம் காரண மாம், மேலும் மேலும் கவலையை விளைக்கும் வித்தாம், பிறப் பினும் வித்தாம். மாயையங்களைக் கண்டு உண்மை தெளியாத நிலையில் எழும் ஒற்றுமை யுணர்ச்சியே மகிழ்ச்சியாம். ஆதலின், மகிழ்ச்சி தோன்றியழியும். சிந்தையின் நிறைவாகிய இன்பம் என மகிழ்ச்சியைக் கருதுவதே பாவங்களுக்கெல்லாம் காரண மாம். ஆதலின், பாவம் இன்பத்தைத்தாராது.

### அன்பும் இகலும் (விருப்பும் வெறுப்பும்)

வேற்றுமையை அழிக்கும் முறை இரண்டு. அவை அன்பு, இகல் என்பன. தூய அருளால் வேற்றுமையை யழிக்கும்

அன்பு நெறியே சிறந்தது. அன்புக்கு மாறுபட்ட இகலால் பகைவரை அழித்தோம் என்று எண்ணலாமே ஒழிய, வேறுபாட்டுணர்ச்சி அழியவே அழியாது. ஆதலின், குறுகிய மனப்பான்மையைப் போக்குவதே தூயநன்னெறியாகும். பிற பொருளையோ உயிரையோ அழிப்பது குறுகிய மனப்பான்மையைத்தான் வளர்க்கிறது. அப் பிரிவுணர்ச்சி ஒவ்வொருவருடைய உள்ளத்தினின்றும் எழுவது. புறப்பொருள்களை யழிப்பதால் அவ்வுணர்ச்சி அழியாது ஆதலால், வேறுபாட்டுணர்ச்சிக்கு உள்ளத்தில் இடந்தரலாகாது. வேற்றுமையுணர்ச்சியை மறத்தல்வேண்டும். அதனை மறத்தலாவது பகைவரையும் நட்பினராகக் கோடலேயாம். பிற பொருள்களின் வடிவங்கள் நம்மைத் தாக்குவதில்லை அவற்றாலெழும் விருப்பும் வெறுப்பும் ஆகிய உணர்ச்சிகளே நம்மைத் தாக்குவன. ஒரு வடிவத்தை வெறுப்பது மேலும் மேலும் அவ்வுணர்ச்சியையே வளர்க்கும். உருவினைக்கண்டு எழும் அவ்வுணர்ச்சிகளை நீக்குவதற்குப் புறத்தோற்றம் மாயையே என்பதை நன்கு உணரவேண்டும். மாயையின் மயக்கால் புறப்பொருள்களின் தோற்றங் கண்டு, வெறுப்பது தவறானதாகும். 'நானே பிரமம்' அல்லது 'பிரமமே நான்' எனக்கண்ட ஞானிகள் மாயையின் மயக்கால் புறப்பொருள்களின் தோற்றத்தையே — ஐம்பூதங்களினாலாய உடம்பையே—நான் எனக்கருதுவார்களாயின், அவர்கள் தவறான வழியில் செல்பவர் ஆவர்.

அக்பரும் ஔரங்கசீபும் நாட்டில் ஒற்றுமை காணவிழைந்தார்கள். அக்பர் வேற்றுமையுணர்ச்சியை அடியோடு விலக்கினமையால் தன் கொள்கை வெற்றியடையக் கண்டார். பிறரை அழிப்பதையே — வேறுபாட்டுணர்சசியையே — கைக்கொண்டமையால் ஔரங்கசீப் தன் கொள்கையில் வெற்றி காணவில்லை. வேறுபாட்டினை மறப்பதே வாழ்க்கையின் நோக்கமாகிய ஒற்றுமையையும் இன்பத்தையும் அளிப்பது இதனாலன்றோ திருவள்ளுவரும் "நன்றல்லது அன்றே மறப்பது நன்று" என்றார். நான்வேறு, நீவேறு, அவன் வேறு எனக்கருதுவதால் ஒருநாளும ஒற்றுமை கிட்டாது; இன்பம் வாராது. சமையக் கொளகைகளைப் பிறழ உணர்வதால் வேறுபாடு மிகச் சமையங்கள் இருநத இடம் தெரியாமல் மறைகின்றன. வேறுபாட்டுணர்ச்சியுடையவர் தங்களுக்கு உறுதி தேடுவதாக நினைத்துத் தங்களைத் தாங்களே மெலிவுபடுத்திக்கொள்கிறார்கள். துன்ப விடுதலையை நாடிப் பெருந்துன்பத்தையே அடைகிறார்கள். ஆதலின், வேற்றுமையை மறந்து வாழ்கின்ற வாழ்வே ஒற்றுமை, உடல் உளநலம், ஆற்றல், இன்பம் ஆகியவைகளைத்

தரும். அன்புகொண்டு பிறர் குற்றங்களை மன்னித்து வாழ்கின்ற வாழ்வே மேற்சொன்னவற்றைத் தரவல்லது வாழ்க்கையின் சிறந்த குறிக்கோள் இதுவே. ஆதலால், மக்கள் யாவரும் ஒற்றுமையோடு, பல்வகை நலன்களும் பெற்று இன்புற்று வாழ வழிகோலுவது சமையமேயாம் என்பது வெள்ளிடைமலை.

பொறுமை, நேர்மை, ஊக்கம், அஞ்சாமை, ஆகியவை சமையச்சார்பான வாழ்க்கையில் தோன்றுவனவேயாம். அரசியலும் இச்சமைய நெறிநில்லாது தழைக்காது. அரசன்—நாட்டுத் தலைவன்—அன்பினாலேதான் குடிகளையடக்கி யாளமுடியும். இந்தத் துணையின்றி மனதை யடக்கிவாழ்தல் இயலாது. மனதையடக்காவிட்டால் சிக்கன வாழ்க்கையும் பிறர்க்கென வாழ்தலும் இயலாதனவேயாம். பிறருக்கும் உதவவேண்டும் என்ற உணர்ச்சியே—அன்பே—நாட்டு மக்கள் யாவரும் வேண்டுவனபெற்று இன்பமொடு வாழ்தற்குரிய சிக்கன வாழ்க்கையைத் தரவல்லது. மன்னுயிரைத் தன்னுயிர்போல நினைப்பதே—எப்பொருளையும் சிவமயமாகக் காண்பதே—நாட்டுமக்கள் யாவரும் ஒற்றுமையோடு இன்புற்று வாழ்தற்குரிய நெறியாகும். தூய அருளுணர்ச்சியின்றி — சமையச்சார்பின்றி — நாட்டில் ஒற்றுமையை நிலைநாட்ட இயலாது.

அழிபடும் நிலையிலுள்ள நாட்டினையாளும் மன்னர்கள்—தலைவர்கள்—தங்கள் நிலையைச் சிறிதே சிந்தித்துப் பார்ப்பார்களாயின், தன்னலவுணர்ச்சியே தங்கள் கேட்டுக்குக் காரணமென்பதை நன்கு உணர்வார்கள். அவர்கள் அருள்நெறியைக் கைக்கொள்வராயின் நாட்டை நன்னிலையில் அமைப்பர். அன்பு ஒன்றே இன்ப வாழ்க்கைக்குக் கருங்கல்லால் அமைத்த அடிப்படைபோன்றது அன்பின்றி எச்சமையமும் இல்லை; எவ்வரசியலுமில்லை; ஒற்றுமையே காணமுடியாது. வேற்றுமையுணர்ச்சியும் தன்னலம் விழைவதுமே தம் கொள்கையாக வாழ்பவர் தங்கள் வாழ்வில் இன்பத்தை என்றும் காணமுடியாது. அன்புநெறிக்கு மாறுபட்டதைக் கற்பிப்பாரைச் செம்மறியாடுகள்போலப் பின்பற்றி வாழ்பவர் பலர். அவர்கள் உலகில் வஞ்சகம் என்பதொன்றுண்டு என்பதை யுணர்வார்களானல், அன்பு நெறியில் நின்று இன்புற்று வாழ்வார்கள் அன்பு நெறியே — சமையநெறியே — நல்லறிவையும் இன்பத்தையும் அளிக்கவல்லது. இன்புற்று வாழநினைக்கும் ஒவ்வொருவரும், பிறரும் தன்னைப்போல் இன்புற்று வாழவேண்டும் என்று கருதி, அதன்படி ஒழுகவேண்டும் என்பது இதனல் நன்கு புலனுகின்றது.

சமையம் தன்னலமற்ற வாழ்க்கையையே கற்பிக்கிறது. ஆதலின், சமையம் கற்பிக்கும் ஒழுக்கநெறி நடுநிலையானது. நடுநிலை வகிப்பது எப்பொழுதும் கடினமானதேயாம் என்பதை யாவரும் அறிவோம். "இடும்பைகூர் என்வயிறே உன்னோடு வாழ்தலரிது" என்றொரு புலவர் கூறுவதை நோக்குக. 'வேண்டிய அளவுக்குத் தருக. குறைக்கவும் வேண்டாம், பெருக்கவும் வேண்டாம்.' எனக்கூறுகிறது வயிறு. அதனினின்றும் நாம் அடிக்கடி மாறுபடுகிறோமல்லவா! அதைப்போலவேதான் பிறரொடு கூடிவாழ்வதிலும் நடுநிலையினின்றும் மாறுபடுகின்றோம். ஒவ்வொருவரும் தத்தம் வாழ்வில் நடுநிலையில் நிற்றலாவது, மகிழ்ச்சி, துன்பம் ஆகிய இரண்டுக்கும் இடைப்பட்ட நெறியில் செல்லுதலாம். அஃதாவது விருப்பு வெறுப்பு அற்ற வாழ்க்கையாம். விருப்பமானவை உற்றபோது மகிழ்தலும் வெறுப்பானவை உற்றபோது துன்புறுதலும் இல்லாத வாழ்க்கையேயாம். இவ்வாழ்க்கையே மேலானது. "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு, யாண்டும் இடும்பை யில." வறுமையினும் வளத்தினும், நோயினும் நலத்தினும், சிறுமையினும் பெருமையினும் மாறுபடாத மனநிலையுடையராக வாழ்தலே இடும்பையற்ற வாழ்வாகும். எனவே, வேறுபாடின்மையே இன்பம் தருவதாம்.

சிலர் இடும்பைக்கு அஞ்சியவராய், 'அச்சமில்லோம், ஆண்மையுடையோம்' எனக்கூறுவர். அவர்கள் மகிழ்ச்சி புணர்ச்சிக்கு அடிமையாகித் தம்மைச் சுதந்தரர் எனக் கூறிக்கொள்வர். உண்மையில், அவர்கள் சொல்லுக்கும் செயலுக்கும் ஒற்றுமை காணமுடியாது. உண்மைச் சமையநெறி இன்பம் துன்பம் ஆகிய இரண்டிற்கும் இடைப்பட்ட வாழ்க்கையேயாம். பொறுமை, வாய்மை முதலிய பண்புகளை ஆராய்ந்தறியின் இவ்வுண்மை புலனும். மகிழ்ச்சியினும் இகழ்ச்சியினும் ஒரு தன்மைத்தாய மனநிலையோடு இருத்தல்—மகிழ்ச்சியால் ஆணவம் மிகாமலும் இகழ்ச்சியால் மனங்குன்றிச் செயலின்றிப் போகாமலும் மனதை ஒரு நிலையில் நிறுத்துவது பொறுமையேயாம். விருப்பத்தால் கேடுறாமலும் வெறுப்பால் நிலைகுன்றாமலும் உண்மையியல்புணர்ந்து வாழ்தலே-நேர்மையே—மனதையடக்கி யாண்டு இன்பம் தருவதாம். பயன்மிகினும் இழவு நேரினும் மனதில் இன்பத்தை எழுப்புவது வாய்மையேயாம். ஆதலின், இருவேறு வகைப்பட்ட உலகில் அவ்விரண்டிற்கும் இடைப்பட்ட நிலையில் — நடுநிலையில்—நின்று வாழ்தலே ஒழுக்கம்—நல்லொழுக்கம் (Character) எனப்படும். ஆதலின்,

ஒழுக்கமாவது வேறுபாட்டுணர்ச்சி யின்மையே—உள்ளத்தை நடுநிலையில் நிறுத்தலேயாம். மகிழ்ச்சி இகழ்ச்சி, விருப்பு வெறுப்பு, உடைமை, வறுமை போன்ற இருவேறு நிலைகளில் யாதாவதொன்றனைச் சாராது இரண்டிற்கும் இடைப்பட்ட நிலையில் வாழ்தல் வேண்டும். யாதாவதொன்றனையே சாரின் துன்பமேயாம். மகிழ்ச்சியையே கருதுபவன் இகழ்ச்சிக்கு அஞ்சுதல் வேண்டும். பிறர் தன்னை விரும்பவேண்டு மென்று கருதுபவன் வெறுப்புக்கு அஞ்சுதல் வேண்டும். இகழ்ச்சியை வெறுப்பவன் மகிழ்ச்சியை விரும்புதல் வேண்டும். "கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக், கோடாமை சான்றோர்க் கணி."

## அறத்தின் அடிப்படை

ஒற்றுமை யென்பதும் வேறுபாட் டுணர்ச்சியின்மை யென்பதும் ஒன்றேயாம. வேறுபாட்டுணர்ச்சி யின்மையே—அன்பே—அறங்களுக்கெல்லாம் அடிப்படை. இவ் வுணர்ச்சி யின்றி எவ்வறமும் நிகழாது. ஆதலின், இதுவே அறத்தின் அடிப்படையாம். பொறுமை என்பது மனத்திண்மையே. ஐம்புலன்களையும் தத்தம போக்கிலே செல்லாதபடி நன்னெறி யில் திருப்பிவிடுவது மனத்திண்மையேயாம்—உரனேயாம். மனத்திண்மையே—மாயையின் செயல்கண்டு மயங்காதிருப்பதே அறத்திற்கு அடிப்படையாம். மனத்திண்மை வேற்றுமை யுணர்ச்சியின்மையால் எழுவது. "மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்" என்றார் வள்ளுவரும்.

"உரனென்னுந் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து."

"பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்."

என்னும் இவ்விரண்டு குறள்மணிகளையும் நோக்கின், பொறிவாயி லைந்தவித்தலால் எழுவதே உரன் என்பதும், அது கருவியாக அமைவதே பொய்தீரொழுக்கம் என்பதும், அவ் வொழுக்கமே வரம்பிலா இன்பமளிப்பதென்பதும் பிறவா வாழ்க்கை யளிப்பதென்பதும் நன்கு புலனாம். இதனாலன்றோ சேக்கிழார் பெருமான் "ஈரநெஞ்சினர் யாதுங்குறைவிலர், வீரமென்னால் விளம்பும் தகையதோ." என்றார்.

உலகப்பொருள்களைக் கனாப் பொருள்களாகக் கண்டு, வேற்றுமை யுணர்ச்சியின்றி— தன்னலமின்றி—வாழ்பவர்கள் ஆற்றலுடைமையை ஆற்றலின்மையாகக் கருதுவர்; செல்வ நிலையை வறுமையாகக் கருதுவர்; மகிழ்ச்சியை நோயாகக்

கருதுவர்; தம்பாலுள்ள பொருளையிழப்பதே ஊதியமாகக் கருதுவர்; உயர்ந்தவர் என்ற உணர்ச்சியின்றி உழைப்பதே பெருமையாகக் கருதுவர். அவர்கள் செயலின்றி—உழைப்பின்றி யிருப்பதை வெறுப்பர்; பசி தாகங்களைப் பொருட்படுத்தார். இத்தகையரே தொண்டர், மாகேசர், யோகியர் எனப் படுவர். இவ் வொழுக்க முடையவரே ஞானிகளாவர். இத்தகையவர்களைப் பைத்தியங்கள் எனக்கூறுவர் சிலர். பொய் கூறுபவர் பிறரைப் பொய்யர் என்பர். திருடர் பிறரையும் திருடர் என்பர். அதேபோல, உண்மை யறிவிலார் இவர்களைப் பைத்தியங்கள் என்பர். அறிஞர் அவரது பெருமையறிந் தொழுகுவர்.

**உரன்பெறு நெறி**

யோக நெறியினை—இருக்கையை (ஆசனங்களைப்) பழகுவதே உரன்பெறு நெறியாம். அதனோடு உட்கு, அச்சம் ஆகிய இவையின்றி வாழ மனதைப் பயிற்றுதல் வேண்டும். யோக சாதனத்தமர்ந்து தியானம் செய்யும் பழக்கம் ஒன்றே உரனும் ஆண்மையும் அளிக்கவல்லதாம். இதனைப் படிப்படியாகப் பழகி மனத்தெழும் அவாவினை அழித்தல் வேண்டும். இந்தத் தியானப்பயிற்சியில் மூச்சையடக்கியாளுதல் (பிராணாயாமம்) என்பது இன்றியமையாப்பகுதியாம். பொறுமையே அதனைத் தரவல்லது. பொறுமையின்மை ரேசக பூரக கும்பகங்களைக் கெடுத்துவிடும். பிராணாயாமம் பயிலும்போது வேறு எண்ணம் எழலாகாது. ஆணவ உணர்ச்சி எழுமாயின் ஆற்றல் குறைந்துபடும். ஆதலால், பிராணாயாமம் பயில்பவர் பொறுமையும் அமைதியும் பணிவும் உடையராதல் வேண்டும்.

**பொறிவாயில் ஐந்தவித்தல் இயலுமா?**

ஐம்பொறி யுணர்ச்சிகள் விருப்பு வெறுப்பு காரணமாக எழின் தீமைகளைத்தான் தரும். நற்செயல்களும்—பிறர்க்குப் பயன்பட வாழ்தலும் அப் பொறியுணர்ச்சிகளின் துணைகொண்டு தான் நிகழ்தல் வேண்டும். ஆதலின், ஐம்பொறியுணர்ச்சிகளை நல்வழிப் படுத்துவதே ஞானமாம். ஞானம் ஐம்பொறி யுணர்ச்சிகளை யழிப்பதன்று.

(தொடரும்)

# * மொழிச்சிக்கல்

[திரு. ச. இராசகோபாலாச்சாரியார்]

மதுரையிலுள்ள எல்லாக் கல்லூரி மாணவர் சங்கங்களும் இணைந்து நடத்திய ஒரு சிறப்புக் கூட்டத்தில் திரு சி. இராச கோபாலாச்சாரியார் "மொழிச் சிக்கல்" என்னும் பொருள் பற்றிப் பேசியதாவது :—

"ஒருவனுடைய கல்வி எல்லா நிலைகளிலும் அவனுடைய தாய்மொழி மூலமே கற்பிக்க முடியும். எனினும் கல்லூரி நிலையில் தாய்மொழி மூலம் பாடம் கற்பிக்க இயலுமா என்ற ஐயம் ஏற்படுகிறது.

கல்லூரி வகுப்புக்களிலும் பாடங்களைக் கற்றுக்கொள் வதற்குத் தாய்மொழியோ அன்றி அந்தந்தப் பகுதி மொழியோ தான் சாலச் சிறந்தது என்று நான் உறுதியாக நம்புகிறேன். கல்லூரிகளில் தாய்மொழி மூலம் பாடம் கற்பிப்பதற்கு குறிப் பாக, விஞ்ஞானம் போன்ற பாடங்களைக் கற்பிப்பதற்குரிய கலைச் சொற்கள் வட்டார மொழிகளில் மிகவும் குறைவாகக் காணப் படுகின்றன என்று பலர் கூறுகின்றனர் தற்சமயம் தாய்மொழி களில் ஆக்கப்பட்டுள்ள கலைச்சொற்களைப் பற்றிப் பலர் பல் வேறு எண்ணம் கொண்டுள்ளனர் அவைகளை எல்லோரும் ஏற்றுக்கொள்ளவில்லை எனினும் கலைச் சொற்கள் நிறைந்த மொழியே பாடம் கற்பிப்பதற்குரிய மொழியாக இருக்கவேண்டு மென்பது அவசியமில்லை. கிரேக்க மொழியை ஆங்கிலத்தில் கற்றுக்கொடுக்கலாம். அவ்வாறு கற்றுக்கொடுக்கும்பொழுது கிரேக்க மொழியின் சொற்களை இன்றியமையாது தேவைப்படும் இடங்களில் பயன்படுத்துவதில் குற்றமில்லை. அதேபோன்று விஞ்ஞானத்தையும் தாய்மொழியில் கற்றுக்கொடுக்கலாம். அவ் வாறு கற்றுகொடுக்கும் பொழுது இதுவரை வழக்கில் இருந்து வரும் ஆங்கிலக் கலைச் சொற்களை அவ்வாறே எடுத்தாளலாம்.

பாடங்களை ஆங்கில மொழியில் சொல்லிக்கொடுப்பதன் மூலம் ஆங்கில மொழியை ஊன்றிப் படிக்க வேண்டிய நிலை மாணவர்களுக்கு ஏற்படுகிறது. இது அவர்களுக்கு மிகுந்த இன் னலைக் கொடுக்கும். ஆங்கில இலக்கியத்தையும் தாய்மொழியி லேயே சொல்லிக்கொடுக்க இயலும். இப்போது வழக்கில் உள்ள ஆங்கில மொழிக் கலைச் சொற்களை விருப்பு வெறுப்பற்று மொழிப்பற்றின் காரணமாக ஒதுக்கித்தள்ளாது அவைகளை நாம் பயன்படுத்த வேண்டும். அவ்விதம் உபயோகப்படுத்துவதன்

* 8-10-56-இல் மதுரையில் நிகழ்த்திய சொற்பொழிவு.

மூலம் ஆங்கிலமொழியை மாணவர்கள் அதிக அளவு படிக்க வேண்டிய கவலையை நீக்கலாம்.

### ஆங்கிலமொழி படிப்பதும் அவசியமே

ஆங்கில மொழியைப் படிப்பது அவசியமா என்பது வேறு கேள்வி. ஆங்கில மொழி படிக்கத்தான் வேண்டும்; ஆங்கிலத்தி லுள்ள சிறந்த இலக்கியங்கள், கதைகள் முதலியவற்றைத் தவறாது படிக்கவேண்டும். கடந்த 150 ஆண்டுக் காலமாக ஆங்கிலம் பயில நாம் மிகுந்த இன்னலுற்று இப்போது நாம் அதை நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கிறோம். எனவே, ஆஙகில மொழியும் இப் போது நம்முடைய மொழியே ஆகும். எனவே, ஆங்கில மொழியை உபயோகிப்பதால் எவ்விதத் தவறும் கிடையாது.

### தமிழ்மொழி மூலம் பாடம் கற்பிக்கவேண்டும்

தமிழ் மொழியின் மூலம்தான் பாடங்கள் நடத்தப்பட வேண்டும். தமிழ் மொழி நமது தாய்மொழி என்பதினாலோ, அல்லது உலகின் சிறந்த மொழிகளுள் ஒன்று என்பதனாலோ நான் இவ்வாறு கூறவில்லை ஆனால் தமிழ்மொழி மூலம் பாடங் களை நடத்தினால் நாம் எளிதில் புரிந்து கொளள முடியும்.

### ஆட்சிமொழி

ஒரு மாகாணத்தில் ஆட்சிமொழி அந்த மாகாணத்தில் உள்ள மொழியாக இருக்க வேண்டும்; மாகாணங்களுக்கிடையே கடிதப்போக்குவரத்து நடத்தவும் மாகாணத்துக்கும் மத்திய அரசாங்கத்துக்கும் நடக்கும் கடிதப் போக்குவரத்துக்கும் ஆங்கில மொழி பயன்படுத்தப்படவேண்டும். அதற்கு இந்தி மொழி யைப் பயன்படுத்தக் கூடாது. நாட்டில் பெரும்பான்மையான மக்கள் இந்தியைப் பேசுகிறார்கள்; புரிந்து கொள்ளுகிறார்கள். இதைப்பற்றி எவ்வித ஐயமும் இல்லை. எனவே, இந்திதான் ஆட்சிமொழியாக இருக்க வேண்டுமென முடிவு செய்யப்பட்டது. மக்கள் இந்திய நாட்டின் பண்புமிக்க, சிறந்த குடிமக்களாக இருப்பின் அவர்கள் இந்தி கற்கவேண்டும்; ஏனெனில் இந்த நாட்டிலே இந்திக்கு உள்ள முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிட முடியாது. ஆனல், அந்தக் காரணத்திற்காக இந்திய நாட்டிற்கு இந்தி ஆட்சிமொழியாக இருக்க வேண்டுமா என்பதே இப்போது ஏற்பட்டிருக்கிற கேள்வி.

### சமத்துவம்

ஆட்சி முறையிலே எல்லோரும் சமத்துவமாக நடத்தப்பட வேண்டியது மிக முக்கியமானதாகும். 200 ஆண்டுகளாக

ஆங்கிலத்தைக் கற்றுவந்த தமிழர்கள்மத்தியில் இந்தியை அலுவல் மொழியாக வைப்பது நீதியாகாது. ஆங்கிலம் அவர்களுடைய கருவூலமாக இருக்கிறது. தமிழ்நாட்டில் இந்தியில் ஆட்சி நடத்தவேண்டும் எனக்கட்டளையிடுவது ஒரு அநீதியாகும். ஏனெனில் அவர்களுக்கு இந்தி தெரியாது. ஆங்கிலம் மத்திய அரசிலும், மற்ற எல்லா மாகாணங்களிலும் நன்ருகப் புரிந்து கொள்ளப்படுகிறது. எனவே, ஆங்கிலம் மூலம் மத்திய அரசிலும் மற்ற மாகாணங்களிலும் அலுவல்கள் நடத்தவேண்டுமென்ருல் அதில் நமக்கு எவ்விதக் குறையுமில்லை. பரம்பரை பரம்பரையாக ஆங்கிலத்தைப் பயின்ற நாம் ஏன் ஆங்கிலத்தைத் தொடர்ந்து உபயோகிக்கக் கூடாது? மத்திய அரசு ஆங்கில அறிவு இல்லாமல் இந்தி அரசாக இருந்தால் இந்தியை ஆட்சி மொழி ஆக்கலாம் என்று கூறலாம். ஆனல் அவ்வாறில்லையே? இந்தியாவிலுள்ள விவேகமுள்ள கல்வி பயின்ற மனிதர்கள் யாவரும் ஆங்கிலம் கற்றவர்கள். அதை யாரும் மறுக்கமுடியாது. ஒரு மொழியைப் பிற மொழியினர் மீது திணிப்பதில் எவ்விதப் பயனுமில்லை. அதனல் பலத்த தீமைகளே ஏற்படும் சனநாயகத்தின் தேவை என்ன என்பதை நாம் உணரவேண்டும்.

சனநாயகம என்பது பெருமபானமையினுடைய ஆட்சி என்ருலும்கூட சிறுபான்மையினரும் சமத்துவமான நன்மையும் மகிழ்ச்சியும் அடைவதாய் இருக்கவேண்டும். சிறுபான்மையினம் என்பது வகுப்புவாத அடிப்படையில் உள்ள சிறுபான்மையாளரை மட்டும் குறிக்கவேண்டுமென்பதில்லை. சென்னையில் வசிக்கும் ஒரு குறிப்பிட்ட மொழி பேசும் இனத்திற்கு இந்தியைக் கட்டாயமாகப் புகுத்தினல் அவர்களுக்குப் பலத்த தீமையாகவே முடியும். அன்னிய ஆட்சியின் காரணமாக அவர்கள் ஆங்கிலம் பயின்ருர்கள் என்பதில் சந்தேகமில்லை. அன்னிய ஆட்சியில் வந்த முடிவு வேறு அன்னிய ஆட்சி வேறு.

சுவிட்சர்லாந்து உதாரணத்தை எடுத்துக்கொள்வோம், அங்கே இத்தாலி, செர்மென், பிரான்சு ஆகிய மொழிகள் ஆட்சி மொழிகளாக இருக்கின்றன என்ருல் அங்கே மிகவும் சொற்ப மக்களே இத்தாலி, செர்மென் மொழி பேசுகிருர்கள். அப்படியிருந்தும்கூடச் சுவிட்சர்லாந்து அரசாங்கம் அம் மொழிகளையும் ஆட்சி மொழியாகக்கொண்டிருக்கிறது. அரசாங்கத்தின் எல்லாப் பிரசுரங்களும் இம் மூன்று மொழிகளிலும் பிரசுரிக்கப்படுகின்றன. எனவே உலகத்திலேயே சிறந்த சனநாயகம் சுவிட்சர்லாந்தில் தான் நடைபெறுகிறது என்பதை நாம் உணரவேண்டும். அங்கே அரசாங்கம் சிறுபான்மையினருடைய மொழியை மதித்து அந்த மொழிகளையும் ஆட்சி மொழியாகக்கொண்டிருக்கிறது.

கனடாவிலும், பின்லாந்திலும்கூட இரு மொழிகள் ஆட்சி மொழிகளாக உள்ளன. ஆனால் இந்தியாவில் ஏராளமான மொழிகள் உள்ளன. பத்து பெரிய மொழிகளை உள்ள இந்தியாவில் அவைகளையெல்லாம் ஆட்சி மொழிகளாக்குவது சாத்தியமல்ல ஆனால் அதற்காக இந்தியாவில் வசிக்கும் பெரும் பான்மையினருடைய மொழி ஒன்றுதான் அரசாங்க மொழியாக இருக்கவேண்டும் என்றும் கூறிவிடமுடியாது.

வரலாற்றில் ஏறபட்ட எதிர்பாராத நிகழச்சிகள மொழியும் நம்மிடையே பரவி இருக்கிறது. நிருவாகத்துறையில் பங்குகொண்ட அனைவரும் ஆங்கிலம தெரிந்தவர்களாக இருக்கின்றனர். இந்தியுடன் ஆங்கிலத்தையும் அலுவல் மொழியாக அவர்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் எனவே இந்தியுடன் ஆங்கிலத்தையும் ஆட்சிமொழியாகச் செய்யட்டும். இவ்வாறு செய்தால் சென்னையைப் போன்ற மாகாணங்கள் மற்ற மாகாணங்களுடனும், மத்திய அரசுடனும் ஆங்கிலத்தின் மூலமே தொடர்பு வைத்துக்கொள்ளலாம்.

இந்தி பேசுபவர்கள் இந்தியிலேயே தொடர்பு வைத்துக் கொள்ள அனுமதிக்கலாம். ஆனால் அவர்கள் கூட ஆங்கிலத்தில் தொடர்பு வைத்துக்கொள்ளலாம் என்றே நான் விரும்புகிறேன். சென்னை மாகாண மொழியைப் பொறுத்தவரையில் மாகாண மக்களிடத்தில் தமிழ் மொழிமூலமாகவே தொடர்புவைத்துக் கொள்ளலாம் ஒரு குறிப்பிட்ட மொழியைப் பேசும் மக்களுக்கு மட்டும் சலுகைகள் அளிக்கும் முகமாக மத்திய அரசாங்கம் ஏதேனும் சட்டங்கள் நிறைவேற்றி அதன் மூலம அந்தக் குறிப்பிட்ட மொழியைத் தெரியாதவர்களுக்குப் பலத்த தீமையிழைப்பின் அது பெரிய அநீதியாகும். எந்தச் சனநாயக அரசும் அத்தகையதொரு அநீதியான சட்டத்தை நிறைவேற்றவோ, அமுல் நடத்தவோ முடியாது அத்தகைய நடவடிக்கையினால் இந்தி அரசாங்கமே ஆட்டம் கண்டுபோகும். மத்திய அரசாங்கத்தின் பலம் குறைந்துகொண்டே போய்விடும். அநீதி என்பது பலவீனத்திற்கு ஒரு உற்பத்தி.

சென்னையிலுள்ள மக்கள் இந்தியைப் படிப்பதற்கு நீண்ட காலம் ஆகுமாதலால் இந்தியை நாட்டின் ஒரே ஆட்சி மொழியாக வைக்கக்கூடாது; இன்றும் கூட மக்கள் இந்தி படிப்பதற்கான சிறந்த முயற்சி எதுவும்செய்யப்படவில்லை.’’

—தமிழ் நாடு.

# கற்பின் கொழுந்து

[செல்லூர்க்கிழார், திரு. செ. ரெ. இராமசாமிபிள்ளை]

கற்பென்பது கற்றல் எனப் பொருள்படும்; கற்றல் ஈண்டு ஏட்டுக் கல்வியைக் கற்றலன்று. களவொழுக்கத்தில் தலை நின்று கன்றிய காதலர்களாகிய ஆடவர் பெண்டிர் இருவர்களும் கணவன் மனைவியராகி இல்லறக் கடமை பூண்டு, விருந்து புறந்தந்து அருந்தவர்ப் பேணி எல்லோரிடத்தும் அன்புடையராக வாழும் நெறியாகும் இதனைக்,

'கற்பெனப் படுவது கரணமொடு புணரக்
கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்
கொடைக்குரி மரபினர் கொளக் கொடுப்பதுவே.'
(கற்பியல் க)

எனத், தொல்காப்பியரும்,

'பொற்பமை சிறப்பிற் கற்பெனப் படுவது
மகிழ்வும் ஊடலும் ஊடல் உணர்த்தலும்
பிரிவும் பிறவும் மருவிய தாகும்.' (நம்பியகப்: உ00)

என, நாற்கவிராச நம்பியாரும் கற்பியலுக்கு இலக்கணமாகக் கட்டுரைத்தனர். இவை, கற்பியலுக்கு விளக்கமாக அமைந்தனவாகும்.

யாம் இங்கே கட்டுரைப்பது, கணவன் மனைவியர் இருவரும் தம் உள்ளக் கிழியில் ஒருவரை யொருவர் எழுதிப் பிரிவின்றியைந்த துவராநட்பின் கெழுதகைமையே கற்பென்பதாம் என்பது இக் கற்பு இருபாலவருக்கும் பொதுமையேயாயினும், சிறப்புப்பற்றிப் பெண்ணியலார்க்கே உரிய சொல்லாக வழக்கிலும் நூல்களிலும் பெருவரவிற்றாக வழங்கலாயிற்று. இதனை வள்ளுவரும்,

'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்.' (திருக்குறள்: ருச)

எனப் பெண்மை இயல்பிற்கே ஏற்றிக் கூறுதலான் அறியப் பெறும் இக் கற்பின்வழி ஒழுகி நெறி பிறழாது நிற்கும் உயரிய நிலை கற்புக்குக் கொழுந்தாயிற்று. கொழுந்தாவது, ஒரு மரத்தின் மேலிடத்து முகிழ்த்து வருவதாகிய இளந்தளிர். அது மேலிடத்திலே இருப்பதுபோல இவர்களும் மேன்மையான பெண்மை இயல்பிற் பிறழாது நிற்றற் சிறப்பினால் கொழுந்தெனப் பட்டனர், ஆகுபெயராக. கொழுந்து மேலிடம் என்பதை,

'பொன்னி அமுதப் புதுக்கொழுந்து பூங்கமுகின்
சென்னி தடவும் திருநாடன்.'

என, நளவெண்பாவின்கண் வரும் தொடரில் நீர்மிக்க பெருக்கின் மேலிடத்தைப் 'புதுக் கொழுந்து' என்றமையால் அறியலாம். ஆகவே, கற்பின் கொழுந்தென்னும் இத் தொடர் கற்பிற் சிறந்த பெண்டிர் ஒருவரைச் சுட்டுவதாயிற்று.

இக் கற்பின் கொழுந்தாக நிற்றற்குரியார் ஒருவர் எவரெனின்? யாம் ஈண்டுக் கூறுவது கண்ணகியையே. இவள் கற்பின் கொழுந்தாதற்குரிய சிறப்பென்னை என இனி ஆய்ந்து காண்பாம்.

இவள் சிறந்த பண்பினள்; இவளை முதன் முதற் கூறும் போதே இளங்கோவடிகளார்,

'போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்
தீதிலா வடமீனின் திறமிவள் திறம்.' (சிலப். க: உசு-எ)

என்று இவளின் கற்பின் பெற்றியையே தோற்றுவிக்கின்றார். இதில் தீதிலா வட மீனின் திறம் என்பதால் அருந்ததி போன்ற என்றுமாறு இயல்புவாய்ந்தவள் என்பது போதரும்.

ஆனால் மேற்கூறியவாறு கண்ணகி கோவலன் இருவர்க்கும் காதல் முறையில் களவு மணமாகிப் பின் கற்புமணம் நிகழவில்லை; இவர்கள் காலம் பொய்யும் வழுவும் தோன்றிக் கரணம் நிகழ்ந்து வரும் காலமாக இருக்கலாமெனக் கோடற்கேற்ற நிலையில் இருந்ததாகக் கொள்ளக்கிடக்கின்றது. இவ்விருவா தாய் தந்தையர்கள் மகட்பேசி இவ் விருவர்க்கும் மணம் புணர்த்தியதாகலான் என்க.

பின்னர்,

'மணவணி காண மகிழ்ந்தனர்.'

என்றும்,

'வானூர் மதியம் சகடணைய வானத்துச
சாலி ஒருமீன் தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலஞ் செய்வது காண்பார்கள் நோன்பென்னை.'
(சிலப். க: ருO-ந.)

என்றும் கூறுதலான் தெளிவு பெறும்.

இத்தகைத்தாகக் காதற்பிணைப்பின்றி இருமுது குரவர்களும் கூட்டுவிக்கக்கூடிய கணவன் மனைவியர்களே கோவலன் கண்ணகியாகிய இருவரும். ஆயினும் இருவரும் இல்லறக் கிழமையில் தலைநின்று பாலும் நீரும் மலரும் மணமும் போன்று ஒன்றுபட்டு

வாழ்க்கை நிகழ்த்தினர். கோவலனும் இவள்பாற் காதலன்பு பூண்டு இவளைப் பாராட்டிப் பேசி இன்புற்றான்; அவ்வின்புரை யாக,

'மாசறு பொன்னே! வலம்புரி முத்தே!
காசறு விரையே! கரும்பே தேனே!
அரும்பெறற் பாவாய்! ஆருயிர் மருந்தே!
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே!
மலையிடைப் பிறவா மணியே என்கோ
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ
யாழிடைப் பிறவா இசையே என்கோ
தாழிருங் கூந்தல் தையால்! நின்னை.' (சிலப். உ: எங-அ0)

என, அவன் கூறுதல்கொண்டு அறியலாம்.

இவ்வாறு மிக்க அன்புடன் இல்லறக் கிழமையில் இயற்கை யாக ஒழுகுநாளில், அவ்வூர்க் கணிகையர் குலத்தில் தோன்றி, ஆடல், பாடல், அழகுகளிற் சிறந்த மாதவி யென்பாள்பால் கோவலன் மனம் நெகிழ்வுற்றுக் காமங் காழ்க்கொள அவள் இல்லத்துக்கேகி விடுதலறியா விருப்பினனாகத் தன் மனை யகத்தை மறந்துறைவானானன். அவள் பொருட்டுத் தன் முன் னோர் தொகுத்த பொருள்களையெல்லாம் வாரி வாரி வழங்கி வறிஞனானன்

இந் நிலையிலும் கற்புக்கடம் பூண்ட கண்ணகி, தன் கணவன் மீது வெறுப்புற்றாளில்லை; அல்லும் பகலும் அவனையே நினைந்து நினைந்து பிரிவுத தீ சுட்டுருக்க வெதும்பினள்; அவள் கண்கள் துயின்றில; நீரை வாரி வாரி இறைத்த வண்ணமாக இருந்தன; அவள் உணவு ஒழுங்குற உண்டாளில்லை; நல்லாடை புனைந்தா ளில்லை; அணிகள் அணிந்திலள்; கூந்தலை வாரி முடித்திலள்; பொட்டிடாள்; பூப் புனையாள்; பூக்களை உதிர்த்த வறுங் கொம்பு போல் பொலிவிழந்து வாடி வதங்கினள்.

இந் நிலையைத் தமக்கென அமைந்த செஞ்சொற்கொண்டு இளங்கோவடிகளார் காட்டும் அருஞ்சித்திரம் நுண்ணியவ மாகக் கண்ணகி அரும் பண்பை விளக்கிக் காட்டுகின்ற உயிர்க் காட்சியாக மிளிர்தலால் அதனை ஈங்கே எடுத்துக் காட்டுவாம்.

'அஞ்செஞ் சீறடி அணிசிலம் பொழிய
மென்துகில் அல்குல் மேகலை நீங்கக்
கொங்கை முன்றிற் குங்குமம் எழுதாள்
மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்
கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்
திங்கள் வாண்முகம் சிறுவியர் பிரியச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்

பவள வாணுதல் திலகம் இழப்ப
தவள வாணகை கோவலன் இழப்பத்
மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்
கையறு நெஞ்சத்துக் கண்ணகி.' (சிலப். ச ' சஎ - ௫௭)

இவ்வாறு கண்ணகி நிலை இருப்பது, அவள் தன் கற்பின் பொற்பை விளக்குதல் அறிக. இவள் கோவலனைக் காணாது தவித்துத் தனித்து உறைந்த காலத்து இவள் தன் தோழி தேவந்தியென்பாள் 'கண்ணகி தன் கணவனோடு ஒன்றுபட்டு வாழ வேண்டு'மென்னுங் கருத்தினளாய்ச் "சோமகுண்டம் சூரிய குண்டம் என்றும் ஏரிகளில் நீராடிக் காமகோட்டமாம் காமன் கோயிலையும் கண்டு தொழுவார் கணவனோடு பிரியாது வாழ்வர்" என்று இவட்குக் கூறியகாலைக் கண்ணகி, அது 'பீடன்று' என்று கூறி மறுக்கின்றாள்.

கற்புமிக்க பொற்றொடி நல்லார், செயற்கை அன்பு முறையை வேண்டுபவரல்லர்; அவர்,

'இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியர்எம் கணவனை
யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே.' (குறுந் : சக)

என்று நினைக்கும் நீர்மையர்; அவர்கள், 'இப் பிறப்பு மாறி மற்றொரு பிறப்பு வர நேரினும் நீயே என் கணவனாக அமைதல் வேண்டும்' என்று தம் கருத்தை—தன்னமர் அன்பினைக் கூறிக் 'கணவன் அன்பின்றி இருந்தால் பயனில்லை; இருதலையானன்றோ அன்பு அமைதல்வேண்டும்; ஆகவே, ஒருதலையன்பு செம்மையில்லது; நின் உள்ளத்துக்கு ஒத்தவளாக நான் அமைதல் வேண்டும்' என்று கணவனை நோக்கிக் கூறுவதில் எவ்வளவு நுண்மை அடங்கிக் கிடக்கின்றது பாரீர்கள்! 'அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே' என்பதற்கேற்பவன்றோ பேசுகின்றனர், கற்புக்கடம் பூண்ட பொற்புடை நங்கையர்.

காதற்கணவன் தன் காதலியோடு பேசுங்கால் 'இப் பிறப்பில் உன்னைப் பிரியே'னென்கின்றான் இது கேட்ட காதலி 'மறுபிறப்பில் பிரிய நேருமோ? 'என்னுங் கருத்தினால் கண்கள் நீர் பொழிய அழுது தேம்பினாள்; வேறொரு காதலி தன் காதற் கிழவன் பின்புறமாக வந்து கண்ணைப் பொத்தினாள்; அவள் வந்ததும் தன் கண்களைத் தொடுமெனப் பொத்தியதும் கணவன் அறிந்தானில்லை; அதனால் 'யார்?' என்றான். இச்சொல், கற்புமிக்க அப்பொற்பினாட்குப் பொறுக்க இயலவில்லை; 'நம்மையன்றி வேறொருத்தி இவன் கண்களைக் கையாற் பொத்தும் இயல்பினளோ?' வென்று கருதினாள்; பெருமூச்சு விட்டாள்; வருந்தி நின்றாள், எழுது

ஓவியம்போல. என்னே, மங்கை நல்லார் பொங்கிய அன்பு! இவ்வோவியங்களை முறையே படைத்துக் காட்டிய செல்வர்கள், தமிழ்மொழிக்குக் கதியாக இலகுறும் திருவள்ளுவரும் கம்பநாடருமாவர். அச் சித்திரங்கள்:

'இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.' (திருக்குறள்: கஙகரு)

'போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலன்கொள் திண்டோள்
மாரன் அனையான் மலர்கொய்திருந் தானை வந்தோர்
காரன்ன கூந்தற் குயிலன்னவள் கண்புதைப்ப
ஆர்என்ன லோடும் அழலென்ன அயிர்த் துயிர்த்தாள்'
(கம்ப, பால, பூக்கொய்: கரு)

இச் செம்மைசான்ற மெய்ம்மைக் கற்பினளே கண்ணகியும்.

தன் கணவன் கோவலன் ஓராண்டல்ல ஈராண்டல்ல; பலவாண்டுகள் தன்னை நோக்காது சலம்புணர் கொள்கைச் சலதியாகிய மாதவியோடு உறைந்து விடுதலறியா விருப்பினனாய் ஒழுகி வந்தும் வெறுத்தாளில்லை ஒருநாள் தன் கணவன் கோவலன் தன்பால் வந்து,

'குலம்தரு வான்பொருள் குன்றம் தொலைந்த
இலம்பாடு நாணுத் தரும்' (சிலப். க: எ0-க)

என்று கூறிய காலைத் தன் கணவர், 'தம் காதலியாகிய கணிகைக் கன்றோ கொடுப்பதற்கு இல்லையென்று கருதுகின்றார்' என்னும் கருத்தினளாய்ச் 'சிலம்புள கொள்ளும்' என்று மதுமொழியிறுத்துத் தன் கணவன் மனச் சோர்வை—கலக்கத்தை—மாற்றுகின்றாள். இஃதன்றோ கற்பு; தற்கால நாகரிக நங்கையர்க்கு வருமோ? தங்கள் நாயகரில் தெய்வம தவம்பிறிது இலவென்றெண்ணும் மங்கையர் மனத்தன்றோ வளர்ந்து தளிர்த்துப் படர்ந்து பரவும். இத்தகையாரை யன்றோ வள்ளுவர் திருமகன், தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாதவளே பெண்ணெனப் போற்றுகின்றார். இவள் சிலம்பைதர ஒருப்பட்டது கண்ட கோவலன், "சிலம்பை முதலாக வைத்து வாணிகஞ்செய்து அழிந்த பொருள்களையெல்லாம் மீண்டும் ஈட்ட எண்ணியுள்ளேன்; மதுரைக்குச் சென்றே இவ்வாணிகத்தொழிலை மேற்கொள்ள வேண்டும்; ஏடலர் கோதாய் என்னோடு எழுக" என்று கட்டளையிடுகின்றான். மண்ணக மாதர்க்கு மருந்தனைய கண்ணகி தன் கணவனோடு மதுரை செல்ல முன்னின்றாள். படிசொற்கடவாத பத்தினியாகிய கண்ணகி கணவன் கட்டளையைத் தலைமேல் தாங்கினாள். நிழல்போற்றொடர்ந்தாள்.

(தொடரும்)

# *மொழிக் குழப்பம்

[திரு. ச. இராசகோபாலாச்சாரியார்]

மொழிப் பிரச்சினையில் இரண்டு பொருள்களைப் பற்றிக் குழப்பம் ஏற்பட்டிருப்பதை அகற்றித் தெளிவுபடுத்த வேண்டும்.

பாரதநாட்டு மக்களில் பெரும்பாலோருக்கு இந்தி தாய்மொழியாகும்; அல்லது எளிதில் புரிந்துகொள்ளும்படியான மொழியாகும் ஆனபடியால் பாரதநாட்டுப் பொதுமொழி இந்தி மொழியென்பதை யாரும் மறுக்கமுடியாது. இந்தி பேசாதவர்களும், அறியாதவர்களும், பெருங்கணக்கில் இருக்கிறார்கள். ஆயினும் அவர்கள் இந்தி பேசுபவர்களின் மத்தியில் சிதறிக் கிடப்பவர்கள் அல்ல சேர்ந்தாற்போல் பாரத நாட்டின் தென்பாகத்தில் வாழ்ந்து வருகிறார்கள். அவர்களையும் அவர்களுடைய நாட்டுப் பகுதிகளையும் 'சிறு கணக்கு' என்று புறக்கணிக்க முடியாது. இந்தக் காரணத்தினால் பெரும்பாலோரின் மொழியை அரசியல் மொழியாகச் செய்துவிட்டுத் திணிப்பது முறையாகாது. சனநாயக முறைக்கு மாறுபாடாகும். அரசியல் மொழிப்பிரசசினை வேறு; தேசப் பொதுமொழிப் பிரசசினை வேறு. தேசப் பொதுமொழி தானாக வேர்விட்டு முளைத்து வளரும் செடியாகும். அரசியல் மொழிப்பிரசசினையானது சட்டத்தின் மூலம் அமுலுக்குக் கொண்டுவரவேண்டியதாகும். அதில் விடாப்பிடி நிலையாவது நெறிமுறைக்கு மாறான காரியமாவது இருக்கக்கூடாது.

கல்வித்துறையில் அந்தந்தப்பகுதி மொழியிலேதான் அந்தந்தப் பகுதியில் படிப்பு நடைபெறவேண்டும். புது விஞ்ஞானப் பொருள்களைப் பற்றிப் பாடஞ் சொல்லித்தருவதற்கு ஆங்கிலம் இன்றியமையாததாகும் என்று பேசப்பட்டுவருகிறது. இதில் ஓரளவு உண்மையுண்டு. புதுப் பொருள்கட்கு அந்தப் பொருள்களோடு வந்த வேற்றுமொழிப் பெயர்களையே வைத்துக் கொள்வதும், வைத்துக்கொண்டு கற்பிப்பதும் நலம். புதிதாக வந்திருக்கும் பொருள்களுக்குப் புதுப்பெயர் வருந்தி உண்டாக்கி அலையவேண்டியதில்லை. பொதுமக்களுக்கும் புதுப்பெயர்களினால் ஒன்றும் ஊதியமில்லை. புதுப்பெயர்களை உண்டாக்கினாலும் அவை மெல்லத்தான் வழக்கில்வரும். இரண்டும் கூடவே நடைபெறலாம். ஆனால் மரபுச சொற்கள் பிரச்சினை வேறு. பொருள்களை விளக்கிச சொல்லித் தருவது எந்த மொழியின்மூலம் என்கிற பிரசசினை வேறு. மரபுச்சொற்களை—அதாவது பொருள்களின் பெயர்களை—ஆங்கிலத்தில் வைத்துக் கொண்டு தமிழிலேயே பாடஞ்சொல்லித் தரமுடியும். இலத்தீன் பெயர்களை வைத்துக்கொண்டு ஆங்கிலத்தில் பாடஞ்சொல்லித் தருவதுபோல் நாமும் தமிழில் சொல்லித்தரலாம். பாடங்களும் சொற்பொழிவுகளும் எந்த மொழியில் நடைபெறவேண்டும் என்கிற கேள்வியையும், விஞ்ஞான ஆராய்ச்சியிலும் படிப்பிலும் உபயோகிக்க வேண்டிய ஆங்கிலப் பெயர்களைப்பற்றிய கேள்வியையும் ஒன்றுசேர்த்துக் குழப்பி, கற்பிக்கும் முறை முழுவதும் ஆங்கிலமாகவே இருக்கவேண்டுமென்று சொல்வது தவறு. சில மொழிகள் வேற்றுமொழியாக இருக்கவேண்டியபடியினால் முழுவதுமே வேற்று மொழியாக இருக்கவேண்டிய கட்டாயமில்லை. தெளிவுறப் புரிந்துகொள்வதற்குத் தாய்மொழி இன்றியமையாததாகிறது. இடையில் வரும் ஆங்கிலச் சொற்களைப்பற்றிக் கவலையில்லை. 'மோட்டாரில் எஞ்சின் சரியாகவேலை செய்யவில்லை; கார்ப்பரெட்டர் சரியாகவேயிருக்கிறது.' இந்த உதாரணத்தை வைத்துக்கொண்டு மேலே சொல்லப்பட்டதின் பொருளைக் காணலாம்.

---

* கல்கி 23-9-56 இல் வந்தது. வடசொல் நீக்கி வெளியிட்டது.

# வள்ளுவன் என் பிள்ளை

[ வித்துவான். திரு. சொ. சிங்காரவேலனார் ]

" பிள்ளைஇல்லா வாழ்வு பெரும்பாலை யேஅன்றோ ?
கள்ளமற்ற புன்னகையும் காதலுற்ற நன்னோக்கும்
சின்னஞ் சிறுவிழியும் சிந்தனைபோல் ஆழமுள்ள
கன்னங் கருவிழியில் தோய்ந்திருக்கும் நற்கவினும்
பாலொடு தேன்போலப் பாயும் மழலையும்நல்
நூலொடு நுண்மதியும் வாய்த்த அறிஞர்க்கும்
இன்ப விருந்தன்றோ ? என்ன இருந்தாலும்
துன்ப நினைவுகளைத் தூவென்று தள்ளிடவோர்
பிள்ளைக் கனியமுது பின்னின்றேல் என்னாகும் ?
அள்ளி எடுக்கையிலே ஆவி குளிர்ந்துவிடும்
தோளில் சுமந்திருந்தால் துன்பமெலாம் தூள்தூளே !
வாளின் வலிமைபோல் வாழ்வினுக்கோர் இன்பமுண்டு!"
என்று பலநாளும் எங்கினேன் என்வாழ்வில்
தென்றல் மெலவருமா ? தேன்துளிகள் சிந்தலுண்டா ?
மக்கட் பெரும்பேறு மாண்புண்டா ? என்றெல்லாம்
துக்கக் கடல்வீழ்ந்து தொல்லைப் படும்போது ;
வீதிப் புழுதியிலே வீழ்ந்தாடிப் புன்னகையால்
மோதிப் புரண்டுவரும் முத்தான பிள்ளைகளைக்
கண்டு பெருமூச்சுக் காற்றில் மிதந்துநான்
கொண்டு துயரால் கொதித்திருக்கும் நேரத்தில் !
அன்றொருநாள் மாலை ; அகல்வானத் தேவெயிலை
நின்று பொழிந்த நெடியோன் மலைவாயில்
வீழ்ந்து வெகுநேரம் ஆகவில்லை ; வேகமுடன்
மாழ்ந்து மறுகிடும்என் உள்ளத்துத் துன்பத்தை
நீக்கும் பனிமதிபோல் நேரோடி வந்தான் ஓர்
நோக்கு நலம்வாய்ந்த நுண்ணறிவுப் பிள்ளை !
அழகுத் திருவிழியால் அன்பொழுகப் பார்த்தான் !
பழகு தமிழால்நற் பாட்டோ எனமொழிந்தான் !
" ஐயா வணக்கம்; அடியேன் " எனககேட்டு
மெய்யாக வேநானும் மேனி குளிர்ந்துநின்றேன் !
வார்த்தை எழும்பவில்லை; வாய்திறக்கவும் இல்லை ;
நேர்த்தி மிகுந்தவந்த நீளழகில் சொக்கிவிட்டேன் !
" பேச மறுத்தீரோ ? பின்னென் ? பெரியவரே !
ஆசை யுடன்நானும் ஆட இவண்வந்தேன் ;
உம்பிள்ளை எங்கே ? உரையிரோ ? இந்நேரம்
தெம்புள்ள ஆடல் தெருவில் புரிந்திடுவோம் "

என்று மொழிந்தான் - இதயத்தே கோலிட்டான்!
தென்றல்தான் - ஆனால்என் தேகத்திற் சுட்டதுவே!
பால்மொழிதான்—ஆனால்என் பாங்கிற் புளித்ததுவே!
வேல்விழிதான்—ஆனால்என் வேகம் தணித்ததுவே!
பிள்ளை அழைக்கின்றான்; பேசும் தவஞானப்
பிள்ளை விளிக்கின்றான்; பிள்ளைக்குப் போவதெங்கே?
தோழன் தனையழைத்துத் தோம்தோமென் றேயிங்கு
வாழும் விளையாட்டு வண்ணமுற ஆடிடவே
செல்வன் அழைக்கின்றான்; என்செய்வேன் பண்டுபோல்
செல்வன் சிறுத்தொண்டன் பிள்ளை சிதைத்ததன்பின்
சீராளா! வாஎன்று சிந்தையொடு கூப்பிட்டான்;
நேராக வந்தானச் சீராளன் நிலத்தே!
நானழைத்தால் இன்று வருவானோ நாயகனே;
ஊனழைத்த சொல்லால் உழலும் உரைகேட்டுப்
பிள்ளை வடிவாய்ப் பெருமான் வருவானோ? .....
அள்ளும் அழுதென்றன் சிந்தை கலைத்ததுவே;
"காதுகள் கேளாவோ?" என்றான் கனிமொழியான்;
மோதும் மனஅலைகள் முன்விட்டுச் சொன்னேன்
"கனியொத்த சொல்லாய்; கமழ்கின்ற நீயார்?
பனியொத்த நின்பார்வை பாவிஎனைக் கொல்லுதலால்
பேச முடியவில்லை; பேசு." எனக்கேட்டேன்!
"நேசம் மிகுந்தவரே! நின்புவியில் எந்நாளும்
சிந்தை புரிகின்றீர்; செந்தமிழிற் பாடுகிறீர்!
விந்தைத் தமிழ்மாலை வேகமுடன் சூட்டுகிறீர்!
யாரென் றறியீரோ? யாதுரைப்பேன்? வள்ளுவன்நான்!
நீரென் வடிவதனை நேராகப் பாரு"மென்றான்!
பிள்ளைத் திருவுருவாய் பேசுந் தவவடிவாய்
கொள்ளைத் தமிழ்க்கவியாற் கூறும் கவிப்பொருளாய்
வீற்றிருக்கும் வள்ளுவனே முன்னின்றான்; "வென்றியினாய்!
போற்றிசைக்கும் என்றனக்கு ஈதென்ன பொல்லாப்பு?
என்பொருட்டும் மண்மீது ஏற்றமுறத் தோன்றிவந்த
தன்பொருட்டு யானெளியேன் யாதறிவேன் கைம்மாறு?"
என்றுரைத்துக் கீழ்த்தாழ்ந்தேன்; "தோழா எழுந்திரு உன்
துன்பங்கள் நீங்கும்; துயரம் பொடியாகும்;
பிள்ளைப் பெருஞ்செல்வப் பேறடைவாய்; நெஞ்சத்தால்
அள்ளி அணைப்பாய்; அகமகிழ்வாய்; பண்புடைய
மக்கட்பே றுற்றதனால் மாண்பும், மறுமைக்குத்
தக்க நலமும் தடையின்றித் தானடைவாய்;
மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம்; மற்றவர்
தக்கசொற் கேட்டல் தகுமுனக்கு! எந்நாளும்

உாழையடி வாழையாய் வண்மைத் தமிழுக்குக்
கோழை மனமின்றிக் கொள்ளுவைநல் தொண்டுகளை!
செந்தமிழாம் தேனைச சிதைக்கும் அறிவிலிகள்
சிந்தை திருந்திச செயலாற்றச செய்குவையே ௨0
தாயகத்தை ஓம்பாது தம்வாழ்வைப் பேணிடுவார்
நாயகத்தார் என்பதனை நானிலத்தில் தோற்றுவையே"
என்றான்; இருகண்ணால் ஏந்தலவன் பொன்னுருவை
நன்றாயப் பருக நான்நினைத்தேன்; ஆனாலோ
வள்ளுவனைக காணேன்; வழஙகும் உரைகேளேன்;
பிள்ளைபோல் வந்த பெரியவனைக் காணேன்;
மொழிந்த மொழிகேளேன; முத்தமிழின் சாற்றைப்
பிழிந்த உரைகேளேன்; பித்தானேன்; ஐயோ!
சிறுநேரம் காட்சிதந்து சிந்தைதனில் நின்று
வருநேரம் எஙகோ மறைந்துவிட்டான் வள்ளுவனே; ௩0
பிள்ளை எனக்கில்லாட் பெருந்துயரம் போனதுவே!
வள்ளுவனே பிள்ளையாய் வந்து பிறந்திடுவான்!
பேசும் குரலில் பிறங்கும் குறள்மொழிவான்!
வீசும் மழலையார் வெல்லும்சொல் வெள்ளமே!
என்றதொரு நம்பிக்கை எண்ணத் திருத்தலினால்
நன்றென்று வாழ்கின்றேன் நான். ௩௬

# தமிழ்த் தாய்!

[திரு. ம. அப்புச்சாமி]

வள்ளுவன்செய் மெய்க்குறளை வாகையதாய்க் கண்டமதில்
வசைநீங்கி வனிதையவள் விளங்குகிறா ளணிந்து!
தெள்ளுமொழி வைத்தமைத்த சிலம்பதனைத் தென்றல்படு
தீஙகுழலில் மென்மலராய் விளஙகுகிறா ளணிந்து!
வெள்ளையார மெனவிளஙக வீரமூட்டும புறத்தினை
வீரத்தாய் வெணகழுத்தில் விளங்குகிறா ளணிந்து!
கள்ளமிலாக காதலினைக் கனிந்துரைக்கு மகத்தினைக்
காதினிடைக் கம்மலென விளங்குகிறா ளணிந்து! ௧

கண்ணின் கருவிழியாங் கம்பன்தரு செம்பொருளைக்
கண்ணிடையே கன்னியவள் விளங்குகிறா ளணிந்து!
பெண்ணின பெருமையெலாம் பேசுகின்ற மேகலையைப்
பெற்றியென மேகலையாய் விளஙகுகிறா ளணிந்து!
மண்ணுலகின வாழ்வதனை மாண்புடனே போற்றுகின்ற
மணியத்தை மஙகையவள் விளஙகுகிறா ளணிந்து!
பண்ணமைத்துப் பாடல்பெற்ற பனுவலாம் பதிற்றுப்பத்தைப்
பல்கலனாய்க் காலிடையே விளஙகுகிறா ளணிந்து! ௨

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) தமிழில் ஆட்சிச்சொற்கள் தொகுப்பு

ஆங்கிலத்திலுள்ள ஆட்சிச் சொற்கட்கு ஏற்ற சரியான தமிழ்ச் சொற்களை ஆக்கி அத்தொகுப்பைச் செப்டம்பர்த் திங்கள் இறுதிவாக்கில் முடிவு செய்யப்படும் என்று சென்னை மேல்அவை அரசினர் கட்சித் தலைவரான திரு. எம். பக்தவத்சலம் 24-9-56-இல் மேல்அவையில் கூறினர். இத் தமிழ்ச்சொற்கள் மக்களுக்கு விளங்கக் கூடியதாக இருக்கவேண்டுமென்பதில் மிகக் கவனம் செலுத்தப்பட்டிருப்பதாகவும் கூறினர். இத் தொகுப்பைச் சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் தொகுத்துள்ளது. இதற்காகச் சென்னை அரசியலார் அதற்கு ரூ. 1000 உதவியாக அளித்துள்ளது.

**குறிப்பு:** நம்நாடு, தமிழ்மொழி வழங்கும் நாடாகும். இங்கே அரசியல் அலுவல்கள் யாவும் தமிழ்மொழியிலேயே நடத்தப்பெற வேண்டும். அதற்கேற்ற தமிழ்ச்சொற்களை ஆங்கில மொழியிலிருந்து ஆக்கப் பெறுதல் வேண்டும். இதில் சென்னை மாநில அரசியலாரே கருத்துக் கொண்டு முனைந்திருப்பதும் அப் பணியைச் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தார் மேற்கொண்டிருப்பதும் மகிழ்ச்சிக்குரியவையாகும். சொற்களை ஆக்குங்கால் ஆங்கிலச் சொற்களுக்கு ஏற்ற சொற்கள் தனித்தமிழில் ஆக்குதல்வேண்டும். அதைவிட்டு வடசொற்களை ஆக்கித் தமிழில் நுழைத்தல்கூடாது. இதனை மொழி ஆக்கக் குழுவினர் கருத்தாகக் கொள்வது தமிழாக்கம் கருதுவோரின் கடப்பாடாகுமெனக் கூற விழைகின்றோம்.

## (உ) இந்திமொழிபற்றிச் சென்னைக் கவர்னர் கருத்து

சென்னைக் கவர்னர் திரு. பிரகாசா கிரிபெய்லூரில் நாட்டாண்மைக் கழக உயர்நிலைப்பள்ளியைத் திறந்துவைத்தபோது இந்திமொழி பற்றிக் கூறியதாவது:

இந்தியைத் தேசிய மொழியெனக் கூறுவது தவறு. அரசியல் அமைப்பில் கூறப்பட்டுள்ள 14 மொழிகளும் தேசிய மொழிகள்தான். ஆனால் இந்தி பொதுமொழி; ஆட்சித்துறையில் வழங்கக்கூடிய பொது மொழி என்று கூறினர்.

**குறிப்பு:** இந்தி மொழிக்கு ஆதரவு காட்டும் அளவில் ஆயிரத்தில் ஒரு கூறுகூட நம் தமிழ்மொழிக்கோ வேறு மொழிக்கோ ஆதரவு காட்டவில்லை. மைய அரசியலார் கல்வி இலாகா இந்திப் பகுதியினர் இந்தியில் அறுபதினுயிரம் கலைச்சொற்கள் திரட்டியுள்ளனர். 1960-க்குள் 3 லட்சம் சொற்கள் திரட்டி எல்லாக் கலைகளையும் இந்தியில் கற்பிக்கலாம் என்று கூறுகின்றனர். தமிழுக்கு ஆக்கஞ்செய்ய நம் சென்னை மாநிலத்தில் அரசியலார் முன்வருவார்களா? வரின் நம் செந்தமிழ் மிகச் சிறந்த மொழியாக இலகும். இதனை ஆற்ற முன்வருமாறு அரசியலாரை வேண்டுகின்றோம்.

(ஈ) தருமபுர ஆதீனந்து மடத்து முதல்வர் படத் திறப்பு விழா

திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்து உரு-ஆம் பட்டத்தில் எழுந்தருளியிருக்கும் மறைத்திரு சுப்பிரமணிய தேசிக ஞான சம்பந்த பரமாசிரிய சுவாமிகள் அவர்களின் திருவுருவப்படத்தைத் திருப்பனந்தாள் மடத்து முதல்வர் அருட்டிரு. காசிவாசி அருள்நந்தித் தம்பிரான சுவாமிகள் அவர்களால் திறவப் பெற்ற உயர்திரு. காசிவாசி சாமிநாத சுவாமிகள் செந்தமிழ்க் கல்லூரியில், காசிமடம் இளவரசு வித்துவான் திருமிகு. மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் எழுந்தருளுவித்தார்கள். அஞ்ஞான்று ஷை செந்தமிழ்க் கல்லூரி ஆசிரியர்கள் யாவரும் அவர்கள் திருவடிக்கு அழகிய பாமாலை புனைந்து சூட்டினார்கள். அப்பாமாலைச் செய்யுட்கள் இதன்கண் பிறிதோரிடத்து வெளியிடப் பெற்றுள்ளன.

**குறிப்பு :** கல்லூரிகளில் பெரியார்களின் படங்களைத் திறந்து வைத்தலும், அவர்கள் வரலாற்றுண்மைகளை அதன் வாயிலாக எடுத்து உரைத்தலும் மாணவர்க்கு அறிவை மேலும் மேலும் பெருக்குவதாகும். இத்தகைய நல்ல செயல்கள் செய்ய ஒருப்பட்ட அடிகளாரின் உயர்ந்த குறிக்கோளைப் பெரிதும் போற்றி அடிகளாரின் பொன்னடிகள் இந் நிலவுலகில் பன்னெடுங்காலம் நின்று நிலவ இறையருளை வேண்டுகின்றோம்.

(ச) குமரகுருபர சுவாமிகள் உயர்தொடக்கப்பள்ளி உ-ஆவது ஆண்டு விழா

திருப்பனந்தாள் ஷை பள்ளியின் இரண்டாவது ஆண்டு விழா 13—9—56-ஆம் நாள் திருப்பனந்தாள் காசிமடத்தின் இளவரசு வித்துவான் திருமிகு. மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள் தலைமையின் கீழ் மிகச் சிறப்புற நிகழ்வுற்றது. நிகழ்ச்சி நிரலிற் கண்டவாறு பல பேரறிஞர்கள் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அற்றை நாள் அருட்டிரு. காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் திருவுருவப்படத்தை வைகுண்டம் வழக்கறிஞர், திரு. டி. எம். குமரகுருபரன் பிள்ளை பி. ஏ. பி. எல் அவர்கள் எழுந்தருள்வித்தார்கள்.

(ரு) சமய வளர்ச்சி மாநாடு

கடந்த செப்டம்பர்த் திங்களில் துவங்கி சமய வளர்ச்சி மாநாடு நிகழ்வுற்றது. அதன் மூன்றும் நாள் நிகழ்ச்சி தமிழவேள் திரு. பி. டி. இராசன் தலைமையில் தொடங்கியது. திருப்பெருந்திரு. குன்றக்குடி அடிகளார், சென்னை அறநிலையப் பாதுகாப்பாளர் திரு. ஏ. உத்தண்டராம பிள்ளை, சித்தாந்த கலாநிதி திரு. ஔவை, சு. துரைசாமி பிள்ளை, டாக்டர் நடராசன் முதலியோர் அம் மாநாட்டில் கலந்து கொண்டனர்.

**குறிப்பு :** சமய வளர்ச்சி குன்றிவரும் இந்நாளில் இத்தகைய சமய வளர்ச்சி மாநாடுகள் கூடுவதும், அதில் பேரறிஞர்கள் பலர் கலந்து கொண்டு தொண்டாற்றுவதும் நாடு நலம் பெறுதற்கு ஏற்ற செயலாகும். இன்னன போன்ற மாநாடுகள் நிகழ்ந்து வருவது கண்டு பெரிதும் மகிழ்கின்றோம்.

# மதிப்புரை

(க) **தஸ்தாவேஜுகள் (அல்லது) பத்திரங்கள் எழுதுவது எப்படி**

[இதன் ஆசிரியர் திரு. T. P. பொன்னுசாமிப் பிள்ளை அவர்கள். இவர்கள் முன்னாள் தலைமை ஆசிரியர் ஜில்லாப்போர்டு பாடசாலை செங்கற்பட்டு. இதன் விலை 0-12-0. கிடைக்குமிடம் T. P. பொன்னுசாமிப் பிள்ளை, தண்டலம் கிராமம், பெரியபாளையம் P. O. பொன்னேரி மார்க்கம்.]

இதன்கண் பத்திரம் அல்லது டாக்குமெண்ட் எழுதுவது எப்படி? என்பது முதல் ஈடு பத்திரம் தாவாச் செய்தல் ஈறாக ஐம்பத்தொரு பெருந்தலைப்புக்களில் நாட்டில் கொடுக்கல் வாங்கல் முதலிய எல்லாத் துறைகளிலும் செய்து கொள்ளக்கூடிய ஆவணமாகிய பத்திர வேறுபாடுகளையும் அவற்றின்மேல் வழக்குகள் ஏற்பட்டால் அவ்வழக்குகள் கோர்ட்டுக்குப்போவதன் முன் நோட்டீசுவிடும்முறை வழக்குத் தொடுக்கும்முறை எல்லாம் தெளிவாக நடைமுறைப் பேச்சுத்தமிழில் எழுதியுள்ளார்கள். யாவரும் இந்நூலின் துணைகொண்டு பத்திரங்கள் எழுதுதல் பதிதலாகிய ரிஜிஸ்டர் செய்தல் முதலியவற்றைச் செய்து கொள்ளலாம். இப்பொழுது எழுதும் எழுத்தாளர்கள் பலரும் பெரும்பாலும் இலக்கண இலக்கியப் பயிற்சியில்லாதவர். அதனால் பத்திரங்களில் பிழையென்று தெரியாமலே பிழைகள் மலிந்துள்ளன. அவர்களுக்கும் இந்நூல் துணையாகும். அவர்களும் இதன் துணையால் பிழையின்றிச் செம்மையாக எழுதுவர். எனவே இந்நூல் ஓரளவு நடைமுறை எழுத்துப் பதிவுகள் நல்ல தமிழில் வழங்கப் பெருந்துணையாகும். இத்துறையில் இதுவே முதல்வெளியீடாகும். இதனைப் பெருமக்கள் அனைவர்களும் வாங்கி ஆசிரியரை ஊக்குவார்களாக.

(உ) **வெண்ணிலா**

[இதன் ஆசிரியர் தஞ்சை-புலவர்-இளங்கோ ஆவர். இதன் விலை ரூபா. 2-0-0. கிடைக்குமிடம் கோயமுத்தூர் சக்தி காரியாலயம் த. பெ. எண் 15. கோயமுத்தூர்.]

இந்நூல் கற்பனைக் கருவூலம் நிறைந்த ஓர் அரிய நாடகநூல். இதன் ஆசிரியர் முறையுறக் கற்றுத்துறைபோய செந்தமிழ்ப் பாவலரும் நாவலரும் ஆவர். அதனால் நாடக அமைப்பும் உறுப்பினர் பெயர்களும் உரையாடும் உரைகளும் செவ்விய இனிய எளிய தூய தமிழ்நடையில் அமைந்துள்ளன. இத்தகைய நாடக நூல்களே நாட்டுக்கும் மொழிக்கும் பெருநலம் விளைப்பனவாகும். இதனைக்கற்கும் இருபாலாரும் வாழ்க்கையில் ஆண்மையும், அன்பும், அறமும், காதலும், கற்பும், ஓதலும், உவகையும், ஊக்கமும், உரமும், உண்மையும், ஒழுக்கமும் பெற்றுச் சிறப்பர். இடை இடையே தக்க தமிழ்ப்பாடல்கள் பொருத்தமுற எடுத்தாளப்பட்டுள்ளன.

இதனைச் செந்தமிழன்பர்கள் பெற்று ஆசிரியரவர்களை அத்துறைக்கண் ஊக்கி நாட்டுக்கும் மொழிக்கும் நன்னலம் புரிவார்களாக.



திருநெல்வேலித், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.

## சமயவளர்ச்சி மாநாடு

### மெய்கண்ட குருகுலக் கட்டிடக் கால்கோள் விழாப் படங்கள்









1. கல்லூரி முதல்வர் டாக்டர். பா. நடராசன் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்துதல்
2. ஆசிரியர்களும், மாணவர்களும் கூட்டு இறைவணக்கம் செய்தல்
3. செங்கோல் மடத்துத் தலைவர் தலைமையுரை நிகழ்த்துதல்
4. திருவாளர். ஓ. பி. இராமசாமி ரெட்டியார் அவர்கள் கட்டிடக் கால்கோள் செய்தல்









5. முருவாளர. ஓ. பி. இராமசாமி ரெட்டியார் அவர்கள் சொற்பொழிவு ஆற்றுதல்
6. திரு. B. C. பாலகிருஷ்ணன் பி.ஏ., (ஆனர்சு) சொற்பொழிவு ஆற்றுதல்
7. திரு. சி. இலக்குவனர், எம்.ஏ., எம்.ஓ எல். சொற்பொழிவு ஆற்றுதல்
8. திருப்பனந்தாள் ஆதீனம் அனுப்பிய நன்கொடையைக் கல்லூரி முதல்வர் பெறுதல்
9. திரு. சிவசுப்பிரமணிய பிள்ளை நன்றியுரை நிகழ்த்துதல்.




சிலம்பு ௩௧ திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௭, ஐப்பசி பரல் ௩
நவம்பர், 1956

உலகம் முதல் முதல் உருவாகியது தென்பகுதியே. அப் பகுதியில்தான் மக்கள் முதலில் தோன்றினர் இது வரலாற்று நூலோர் காட்டும் உண்மையாகும். இதனைக் 'கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளோடு முன்தோன்றி மூத்தகுடி.' என்னும் புறப்பொருள் வெண்பா வுரையும் வலியுறுத்தும். அக் காலத்தே நாவை அசைத்துத் தோன்றியது, நம் தமிழ்மொழி. பின்னர் மக்கள் பல்கிப் பல்வேறிடங்கட்குப் பெயர்ந்தனர். நிலப் பெயர்ச்சியினாலும் தட்பவெப்ப நிலைகளினாலும் மொழியும் நடையும் ஒழுகலாறும் பண்பும் திரிந்தன, வேறுபட்டன. இவ் வடிப்படையில் பல்வேறு மொழிகள் தோன்றி வளர்ச்சியுற்றன. அப்பால் அவ்வேறுபட்ட மொழிகள் வழங்கும் இடத்தினளவு, ஒரு மொழிக்குரியதென வரையறுத்துக் கணிக்கப்பெற்றன. இந்நிலையில் தமிழ்மொழி வழங்கும் மாநிலமும் தனிநாடாகத் தமிழ்நாடாகப் பண்டைக்காலத்திலேயே பிரிந்தது.

முற்காலத்து உலகமுழுதும் தமிழர் நாகரிகமே பரந்து பட்டிருந்தது என்பதை இஞ்ஞான்றை நிலநூல்வல்லார் நிலத்தை அகழ்ந்து கண்டு சான்றுரைக்கின்றனர். சர் சான் மார்சல் என்னும் மேல்நாட்டுப் பேரறிஞர் சிந்து மாநிலத்தில் அகழ்ந்து நம் தமிழர் கொண்ட பழக்க வழக்க ஒழுகலாறுகளைக் காட்டும் பொருள்கள் வழியாகவும், சமயக்குறிகளைக் காட்டும் வடிவங்கள் வாயிலாகவும் நிறுவனம் செய்துள்ளார்.

'மான இளிவினால் வாழ்வேன்மன்,' 'இரந்தும் உயிர்வாழ்தல் சாலாது' 'இல்லெனினும் ஈதலே நன்று' 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பன போன்ற அறமும் பண்பும் நம் தென்

றமிழ் நாட்டிடையே தோன்றித்தான், பின் மலர்ந்து மணந்து உலகெங்கும பரவலாயின.

இத்தகைய பண்பும் நாகரிகமும் வளர்ந்த நாட்டில் செல்வத்துக்குக் குறைவேது? மகிழ்ச்சிக்கு வரம்பேது? கலையும் காவியமும் ஓவியமும் இசையுங் கூத்தும் எங்கும் செழித்துச் சிறந்தோங்கியிருந்தன.

இந்நன்னாடாகிய நம நாடு, தென்குமரி வடபெருங்கல் குணகுட கடலாக நான்கு எல்லையையும் கொண்டு திகழ்ந்தது. காலக் கோட்பாட்டால் பன்னாட்டார் இங்கே போந்தனர்; நம்மோடு பழகினர்; உறவு கொண்டனர்; நமமையும் அடிமையாக்கினர்: அரசராயினர்; ஆண்டனர். நாம், நீர்வழிப் படூஉம் புணைபோல அவர்வழிச் சென்றோம். நம் கலை புளித்தது; மொழிப்பற்று பற்றுவிட்டது; பிறர்க்காளாய்க் கழிந்தனம். இறுதியாக ஆங்கிலர் ஆண்டனர்; அவர்மொழி, கலை, நாகரிகத்தை ஈங்கே பரப்பிவிட்டுச் சென்றனர். நாடு அவர் பிணிப்பினின்றும் விடுபட்டுத் தன்னுரிமை பெற்றது. தன்னுரிமை கொண்ட நாடுகள், மொழிவழி பிரிய முனைந்தன; மைய அரசினர் மென்சொல்லும வன்சொல்லும் காட்டினர்; ஒறுத்தனர்; உரிமை வீறுபெற்ற மக்கள், கிளர்ந்தெழுந்த உரிமை வேட்கைக் கேற்ப, வடநாட்டிலும் தென்னாட்டிலும் மொழி வழி மாநிலங்களாக இநநவமபர்த் திங்கள் முதல்நாள் பிரிந்தன; அவ்வம் மாநிலங்களை அமைத்துக்கொண்டன; ஆங்காங்கே மாநில அமைப்பு விழாக்கள் கொண்டாடி மகிழ்ச்சியில் திளைக்கலாயின.

நம் தமிழ் நிலம் மட்டும் இன்னும் **தமிழ்நாடு** எனப் பெயர் உருவாகாது சென்னை மாநிலமாகவே இருக்கின்றது! ஆள்வோர் கலக்குறுத்த அவ்வுரு மாறாது இருக்கின்றது. **தமிழ்நாடு** எனப் பெயர் சூட்டவும், தமிழ் மொழி ஆட்சி மொழியாக அரியணையேறி ஆணையுருளை இயக்கவும் ஆளுநரை வேண்டி உண்ணா நோன்பை மேற்கொண்டு விருதுநகர்ச் சங்கரலிங்கனார் என்னும் பெரியார் உயிர்துறந்தனர். அவர் வேட்கை இன்னும் நிறைவுறாது இருத்தல் ஆட்சியினர் தமிழ்நாட்டுப் பற்றின்மையை விளக்குகின்றது. புகழெனின் உயிரும் பொருட்டல்லவெனத் துணிந்த சங்கரலிங்கனாரின் உளதாகும் சாக்காட்டை என்றும் நாடு நினைவு கூரும்.

நம் தமிழகம், தமிழ்நாடாக மலர்ந்து, **மொழி** ஆட்சிகொளு வும் நாளே நன்னாள், பொன்னாள்! அந்நாள், கங்கையும் மதியும் பாம்பும் கடுக்கையும் முடிமேல்வைத்த அங்கணர் சிவபெருமான் திருவருளால் விரைந்து மலர்வதாக; நெடியோன் குன்றமும்

தொடியோள்பௌவமும் தமிழ்வரம்பாகி வானமளந்த தனைத்து மளந்த நம் வண்மொழி வளர்வதாக! நம்நாடு வளங் கொழிப்ப தாக! என, இறையருளை விழைந்து வேண்டுகின்றோம்.

## தமிழ்நா(




1-11-1956-இல் மொழிவழி மாநிலத்தொன்றாகப் பிரிந்த நம் தமிழ்நாட்டின் நிலப்பரப்பைக் குறிக்கும் படம்.

# தமிழ்நாட்டுக்கு உயிர்தந்த சான்றோர்

[செல்லூர்க்கிழார், திரு. செ. ரெ. இராமசாமிபிள்ளை]

தமிழ்நாடு சான்றாண்மைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்வது. புகழெனின் உயிரும் கொடுக்கும் பொற்புமிக்கது; ஈன இழிவைப் பொறாதது; அதற்கு உயிர் கொடுக்கும் ஒண்மையது. இத்தகைய பண்டைப் புகழைப் புதுப்பித்த பெரியார் சங்கரலிங்கனாரவர்கள்.

நம் நாடு அடிமைப் பிணிப்பினின்றும் ஓரளவு விடுதலை பெற்றுளது. ஆனால் இன்னும் முழு உரிமை பெறவில்லை. இப்போது மொழிவழி மாநிலங்களாக வடநாட்டிலும் தென்னாட்டிலும் நாடுகள் பிரிவுபட்டு இந்நவம்பர்த் திங்கள் முதனாள் நாடு முழுதும் வெற்றிவிழாக் கொண்டாடினர். நம் நாட்டோடு பிணைப்புற்றிருந்த வடுகா ஏற்கனவே பிரிந்தனர்; இதுகாலைப் பரந்த நாடாக ஆக்கிக் கொண்டுள்ளனர். எஞ்சியிருந்த மலை நாட்டாரும் கன்னடரும் நவம்பர்த் திங்கள் முதனாள் முன்னாள் நம் நாட்டுத் தொடர்பு விட்டுத் தம் நாட்டுக்குச் சென்றனர். அங்கங்கே, கேரளமும் கருநாடமும உருப்பெற்றன. அவற்றிற்கு வெற்றிவிழா எடுத்தனர். நம் தமிழ்நாடு மட்டும் 'எஞ்சிய சென்னை' ஆகவே, ஆள்வோர் நிலையினால் இருந்து வருகின்றது; இது வருந்தற்குரிய தொன்றாம்.

நம் நாட்டுக்குத் 'தமிழ் நாடு' எனப் பெயரிடுதல் விரும்பியும் தமிழே ஆட்சி மொழியாக வேண்டுமென்பதையும் பிற வேறு கொள்கைகளையும் எடுத்துக்காட்டி அவைகளை முற்றுவிக்குமாறு விருதை, திரு. க. பெ. சங்கரலிங்க நாடாரவர்கள் நம மாநில அமைச்சருக்கு வேண்டுகோள்விடுத்து அக் கொள்கைகளை நிறைவேற்றுதற்கு உண்ணா நோன்பு மேற்கொண்டனர். அமைச்சர்கட்கு அஃது ஏறவில்லை. அதனால் அவர், எஎ-நாட்கள் தவங்கிடந்து உயிர் நீத்தார். கடமையுணர்ச்சி மேற்கொண்டு உயிரைக்கொடுத்த சங்கரலிங்கனார் உயர்பண்பு, மலையினும் மாணப் பெரிதாகும். இதை ஆள்வோர் பொருட்படுத்தவில்லை. இக்கொடுங்கோன்மை கொடுமை! கொடுமை! இவ்வாட்சியார் அளியரோ! அளியர்! இப்பாவம் கொடிது! இது, தமிழ்நாட்டுக்கும் தமிழர் பண்பாட்டுக்கும் கடைப்பட்டதாகும். ஐயகோ!

[1] "கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காது வேண்டு பவர்."

என்றும்,

1. திருக்குறள் : ருசு௨.

[1] "அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை"

என்றும் அறவோன் கூறும் அறவுரை - பொய்யாமொழி - பொய்க்காதென அவர்கட்கு நினைவூட்டுகின்றோம்.

தமிழ்நாட்டுக்காக - தமிழ்மொழிக்காக - உயிரைத் துரும்பாக மதித்துவிட்ட தன்னலந் துறந்த பெருமை சங்கரலிங்கனார்க்கே உரி; உலகுடன் பெறினும் பழி பொருத அன்னார் உயிர் நல் அமைதி உறுவதாக. பண்டைக் காலத்தே புறப்புண் நாணி உயிர் நீத்தகோப்பெருஞ் சோழன் பண்பினும், சிறையில் வாடிய சேரமான் கணைக்கால் இரும்பொறையென்னும் சேரமன்னன், நீர் வேட்கை நீக்க உரிய காலத்து நீர் தாராமைக்காக நீருண்ணாது உயிர் துறந்த பண்பினும் பன்மடங்கு சிறந்தது; உயரிது; அவர்கள் தமக்காக-தம் மேம்பாட்டுக்காகத் - தந்நலங் கருதியே உயிர் துறந்தனர் நம் பெருமகன் சங்கரலிங்கனார், நாடு தழைக்க - மொழி பெருமையுற - மக்கள் வாழத் - தம் உயிரை - அரும்பெறல் ஆவியை நீத்தார்; அவர் புகழ் நம் தமிழ்நாடு உள்ளளவும் - தமிழ்மக்கள் உள்ளவரையும் - அறிஞர்கள் இருக்குந்துணையும் - நின்று நிலவும்.



அருள்வடிவான ஆண்டவனே! ஆள்வோர் செய்த பிழையை - இத் தவற்றைப் பொறுக்கமாட்டோம்! இக் கறை

1. திருக்குறள் : ௫௫௫.

என்றும் நம் தமிழ்நாட்டை விட்டு நீங்காது! நீங்காது! இப்பழியைப பொறுக்கமாட்டோம! பொறுக்கமாட்டோம்!

[1] "அழுக்கு மெய்கொடுன் திருவடி அடைந்தேன்
அதுவும் நான்படற் பாலதொன் றானால்
பிழுக்கை வாரியும் பால்கொள்வர் அடிகேள்!
பிழைப்பன் ஆகிலும் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினும் திருப்பெயர் அல்லால்
மற்று நானறியேன்."

என்றருளித் தம் கண்ணொளிபெற ஆண்டவனை நோக்கித் தவங் கிடந்தார், வன்றொண்டப் பெருந்தகை அவ்வாறே நம் நாட்டிற்கு உற்ற இப் பழி தீர ஆண்டவனை வேண்டித் தவங் கிடப்பேம்!

கோவலனைக் கொன்ற கொடுங்கோன்மையை உயிராணி கொடுத்து நிமிர்த்த ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் ஆண்ட தமிழ்நாடே! ஆக்கன்றுக்காகக் கோக்குமரனை ஆழியின் மடித்த மனுச்சோழன் ஆட்சி செலுத்திய கோமுறை கோடாத் தமிழ்நாடே! பெண்ணுரிமை நல்கிய தமிழநாடே! கற்புக்கடம் பூண்ட பொற்றொடியார் வாழ்ந்த தமிழ்நாடே! நீ யாண்டுளாய்! யாண்டுளாய்! எப்போது மலர்வாய்! விடுதிபெற்றும் பெயர் மாறாத தமிழ்நாடே! நீ தமிழ்நாடாக மலர்வையோ! சங்கர லிங்கனார் உயிரை உண்ட கூற்றுவர் இடையில், நீ மலர்வையோ! வெட்கம்! வெட்கம்! பெயர் சூட்டுதற்கும் வெட்கம்! அடிமை மனப் பண்பு! மானமழிந்தும் உயிர் வாழாமை முன்னினிதே! பெயர்பெற 'நேரமும் காலமும்' உனக்கு வருமோ! வாராதோ! எக்காலமும்! ஒருகால் வரும்! அக்காலம் விரைந்து வருமோ! வருமோ! எனவே ஏங்குகின்றோம்!

சங்கரலிங்கனார் புகழினால் தமிழ்வெல்க! தமிழ்நாடு மலர்க! தமிழ்மொழி ஆட்சி அரியணை யேறுக! அம் மொழி யாண்டும் பரவுக! நாடு, பசியும் பிணியும் பகையும் நீங்கி, வசியும் வளனும் சுரப்ப வளர்வதாக! சங்கரலிங்கனார் பெயர் தழைப்பதாக! தழைப்பதாக!

1. சுந்தரர் தேவாரம். பதிகம், ௫௪ : க

# திரு. மே. வீ. வேணுகோபாலபிள்ளை மணிவிழா

# வாழ்த்துரை

பேரன்புடையீர்,

சிந்தாமணிச் செல்வர் திரு. மே. வீ. வேணுகோபாலபிள்ளையவர்களின் மணிவிழா அழைப்பு கிடைக்கப் பெற்றோம்.

பிள்ளையவர்கள் தன்னேரில்லாத நம் தமிழ்மொழி வளர்ச்சி ஒன்றையே கருத்தாகக்கொண்டு தொண்டாற்றி வருபவர்கள், தம் வாழ் நாளை வீழ் நாளாக்காது தாழாது தமிழுக்கே கழித்த பெரியாரும் ஆவார்கள். அவர்கட்கு மணிவிழா அண்மையில் நிகழ்வது குறித்துப் பெருமகிழ்ச்சி கொள்ளுகின்றோம். இவர்கள் செந்தமிழ் மொழி வளத்தைப்பெற்றதோடன்றி ஆங்கில அரு மொழி இலக்கியச் செல்வத்தையும் பெற்று எக்கழுத்தத்தோடு "இருந்தமிழே உன்னால் இருந்தேன்" என்பதற்கேற்பத் தமிழுக்கே தழைவுள்ளத்தில் தனியிடந் தந்து விருப்பத்துடன் திகழ்பவர்களாவார்கள்.

புலனழுக்கற்று அந்தண்மையொழுக்கம் பூண்டொழுகும் பிள்ளையவர்கள் வாயிலாக, இறையனார் அகப்பொருள் உரை, தஞ்சைவாணன் கோவைப் புத்துரை, தொல்காப்பியச் சொல்லதிகார நச்சினார்க்கினியர் உரை, அட்டப்பிரபந்த விளக்கவுரை, அரிச்சந்திர புராண விளக்கக் குறிப்புரை, சித்தர் ஞானக்கோவை முதலிய நூல்கள் திருத்தத்துடன் பிழையின்றி வெளிவந்திருப்பது, கைம்மாறு பேணா இவர்களின கடப்பாட்டுணர்ச்சியைக் கலங்கரை விளக்கம்போல் காட்டுவதாகும். நூல்கள் பதிப்பது அருஞ்செயலாகும்; அதினும் பிழையின்றி வழுக்கள் நூற்கண் நுழையாவாறு நன்முறையில் பதிப்பது அரிதினும் அரியதாம் அதில் எடுத்துக்காட்டுக்கு முதலிடம் பெறுவது, இவர்கள் பதிப்பித்துள்ள நூல் செல்வங்களேயாகும்.

சிலர் விரிவுரையில் தேர்சசி பெற்றிருப்பர், அவர்க்கு எழுதவாராது; சிலர் எழுதுவர், அவையில் பேச இயலாது நடுக்குற்று நிற்பர். சிலர் எழுதுவர், அவர்தம் எழுத்து எத்தகையோர்க்கும் படிக்க இயலாது. இவர்கள் இவ்வெவற்றிலும் திறமை சான்றவர்கள் ஆவார்கள். இவர்கள் கையெழுத்து முத்துக் கோத்தனபோல் அழகிதாய் மணியெனத் திகழும். நூறகள் பதிப்பதோடன்றித் தமிழ் கற்க விழையும் பெரியோர்க்கும் இளைஞர்க்கும் கணக்காயராக அமர்ந்து அவர்தம் அறிவுப் பசிக்குக் 'கண்ணோக் கரும்பா நகைமுகமே நாள்மலரா, இன்மொழியின் வாய்மையே திங்காயா, வண்மை பலமாக' அருவிருந்தூட்டி எண்சுவை கொள்ள அளிக்கும் அரிய கற்பக தாருவாய்த் திகழ்பவர்களாவார்கள்.

செயற்கரிய செய்துவரும் பெரியார், பலர்பகழ் நன்மொழிப் புலவர் பெருந்தகை, திரு மே. வீ. வேணுகோபாலபிள்ளையவர்கள் இம்மணிவிழாவின் மகிழ்ந்து, நூற்றுண்டு விழாவும் பெற்றுப் பொன்றுப் புகழுடன் பொற்கோட்டிமையமும் பொதியமும் போன்று பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து பன்னெடுங்காலம் வாழிய வாழியவென மகிழ்ந்து வாழ்த்துகின்றோம்.

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

# வேணுகோபாலபிள்ளை மணிவிழா

---- தமிழ்ச் சங்கத்தால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தவாறு **தமிழ் வித்துவான் திரு. மே. வீ. வேணுகோபால பிள்ளையவர்களின் அறுபான் ஆண்டு நிறைவுவிழா** அண்ணாமலை பல்கலைக் கழகத் துணை வேந்தர் திரு. டி. எம். நாராயணசாமி பிள்ளையவர்கள் தலைமையில் 4-11-56-ஆம் நாட்காலையில் துவங்கி நிகழ்வுற்றது.

அன்று காலையில் காஞ்சியிலுள்ள இராமகிருஷ்ண மடத்திலிருந்து ஆண்டர்சன் பள்ளிவரை யானை முதலிய விருதுகள் தொடர்ந்துவர திரு. பிள்ளையவர்கள் ஊர்வலமாக விழா மண்டபத்துக்கு அழைத்துவரப் பெற்றனர். அவ்வூர்ப் பச்சையப்பன் கல்லூரி திரு. என் சஞ்சீவி யாவரையும் வரவேற்றனர்.

தொடக்கத்தில் விழாத் தலைவர், வேணுகோபாலபிள்ளையின் உயர் பண்புகளைப் பாராட்டினார். அவர், 'ஈடு இணையற்ற ஆசிரியர்' என்றும், 'பல தமிழ் இலக்கியங்களை ஆராய்ந்து வெளியிட்டுத் தமிழுக்கு அருந்தொண்டாற்றி யிருக்கிறா'ரென்றும், 'அத்தகையாருக்கு நாம், நன்றிசெலுத்த வேண்டியது முதன்மை' என்றும் குறிப்பிட்டார்.

பின்னர், சென்னை அனைத்திந்திய வானொலியைச் சேர்ந்த திரு அ. ச. ஞானசம்பந்தம் இவ்விழாவுக்காக ஆக்கப்பட்ட சிறப்பு மலரைப் பிள்ளையிடம் கொடுத்தனர். பல சங்கங்களின் சார்பில் வாழ்த்துரைகள் படித்தளிக்கப்பட்டன. மாலை விழா நிகழ்ச்சியின்போது விழாவுக்காகப் பலவிடங்களிலிருந்து வந்திருந்த வாழ்த்துச் செய்திகளை சென்னை முன்னாள் மேயர், திரு. இராதாகிருஷ்ண பிள்ளை படித்தார். திரு கே. வேங்கடசாமி நாயுடுவும், பண்டித திருவாட்டி கிருஷ்ணவேணி அம்மையாரும் சிறப்புக்குரிய பிள்ளையைப் பாராட்டிப் பேசினர்.

அப்பால் திரு. பி. டி. இராசன் வேணுகோபால பிள்ளைக்குப் பொன்னாடை போர்த்துச் சிறப்புச் செய்தனர் அவர் 'நம் நன்றியைப் பிள்ளையவர்கட்குத் தெரிவிக்கும் வழி, அவர் காட்டிய வழியில் தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபடுவதுதான்' என்றனர்.

நகரசபைத் தலைவரும் விழாவுக்கு தலைவருமான திரு. வி. என் பெருமாள் நாயுடு, திரு. வேணுகோபால பிள்ளைக்கு ரூ. 5101. குரு காணிக்கையாக அளித்தனர். அவ்வூர்க் கல்லூரிகளில் தமிழ்ப் போட்டிக்குப் பரிசாக ஒரு கிண்ணம் கொடுக்க ஏற்பாடு செய்யப்போவதாக உரைத்தார்.

திரு. மே. வீ. வே. பிள்ளை நன்றி தெரிவிக்குங்கால், 'தமிழ் வித்துவானின் வேலை ஆராய்ச்சிசெய்து தமிழ் இலக்கியங்களில் காலப் போக்கில் கலந்துள்ள குறைகளைக் களைந்தெறிவதுதான்' என்றும் 'அவ்வேலையைத் தாம் தொடர்ந்து செய்யப் போவதாகவும்' கூறினார்

வித்துவான் திரு. சி. கருணைவடிவேல் முதலியார் நன்றி கூறினார் திரு. தண்டபாணி தேசிகரின் இன்னிசையுடன் விழா இனிது முடிந்தது.

# சமயவளர்ச்சி மாநாடு

பொன்னும் மணியும் உந்தி அருவி புடைசூழ்ந்தோடும் தென்பாண்டி நாட்டின்கண் குமரியம் பெருந்துறைக்கு அணித்தாய்த் திகழும் தென்திருவிதாங்கூரைச் சார்ந்த நாகர்கோவிலிலுள்ள இந்துக் கல்லூரியின் மெய்கண்ட குருகுலச் சார்பில் சென்ற செப்டம்பர்த் திங்கள் 29, 30 நாட்கள், அக்டோபர்த் திங்கள் 1-ஆம் நாள் ஆகிய நாட்களில் ஆலவாய்மொழியில் திருக்கைலாய ஞானபரம்பரையின் திருமூலரின் நேர்மாணவராய சத்தியஞான தரிசினிகளின் சந்தான வரிசையில் செங்கோல் மடத்தில் நூற்றொன்றாவது பட்டத்தில வீற்றிருந்தருள்கின்ற தவப்பெருந்திரு. ஆறுமுகசுந்தர சத்தியஞான பரமாசிரிய சுவாமிகள் தலைமையின்கீழ்ச் சமயவளர்ச்சி மாநாடு நிகழ்வுற்றது.

முன்னாள் நம் மாநில முதலமைச்சராய் வீற்றிருந்தவரும், காந்தியடிகள் வகுத்த நன்னெறியிற் படர்வோருமாகிய திரு. ஓமந்தூர் இராமசாமி ரெட்டியாரவர்கள் குருகுலக் கட்டிடக் கால்கோள் விழா நிகழ்த்தினார்கள். இக் குருகுலத்துக்காகத் திருவிதாங்கூர் அரசர் ரூ. 25000-மும், இக் கல்லூரிச் சங்கத்தார் ரூ. 10000-மும் தந்துள்ளனர் திருப்பனந்தாள் ஆதீனத் தலைவர், காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள், வழிபாட்டு மண்டபத்துக்கென ரூ 30000—நன்கொடையாக வழங்கியுள்ளார்கள்.

இறைவணக்கத்திற்குப் பிறகு திருவிதாங்கூர் இந்துக் கல்லூரித் தலைவரான டாக்டர் திரு. பா. நடராசன் எம். ஏ. டி லிட். அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள். அதன் சில பகுதிகள் வருமாறு :

பண்டைமறை வண்டரற்றும் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்ட இரு தயகமல முகைகளெல்லாங்
கண்திறப்பக் காசினிமேல் வந்த அருட்கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணைமேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவநாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தேவாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அவர்களே !
எம் தவக்குரு மேலோர்களே !
அன்னையர்களே ! ஆன்றோர்களே !

அனைவருக்கும் வணக்கம். அனைவர் வரவும் நல்வரவாகுக.

புலவர்கள் காவியங்கள் இயற்றுங்கால் நாட்டுப்படலம் நகரப் படலம் சொல்வது மரபு ; மாநாட்டு வரவேற்புரை செய்வோரும,

மாநாடு கூடும் நாடு பற்றியும், ஊர்பற்றியும் வரலாற்றுச் செய்திகள் சில தெரிவிப்பது மரபு. இம்மரபுபற்றி, இந்தச் சமய வளர்ச்சி மாநாடு கூடும் நாஞ்சில் நாட்டைப் பற்றியும் இந்த ஊராகிய ஆரல்வாய்மொழி பற்றியும் சில சொல்ல விரும்புகின்றோம்.

வடக்கே சந்தனப் பொதியமும் தெற்கே உருகெழு குமரிக் கடலும் எல்லையாக்கொண்டு செந்நெல் வளம் மண்டிக்கிடப்பது நாஞ்சில் நாடு. நாஞ்சில் நாடு என்ற சொற்றொடருக்குக் கலப்பை வளம் சிறந்த நாடு என்பது நேரடியான பொருள். இது சங்க நூற்களிலேயே காணப்படும் பெயர். முதற் சங்ககால இறுதியில், குமரி முனைக்குத் தெற்கே பரந்துகிடந்த நிலம் கடலால் கொள்ளப்பெறவே, குமரிமுனையே தமிழ்நாட்டின் தென்எல்லையாய் அமைந்தது. வடஎல்லையாம் வேங்கடத்தைத் தமிழகம் இன்று இழந்த காலையிலும், தென்எல்லையாம் குமரியைக் காத்து மீண்டும் தமிழ்நாட்டின் எல்லையாய்ப் பொருத்துவித்த பெருமை நாஞ்சில் நாட்டு மக்களுக்குண்டு. சங்கநூல் செப்பும் தனிப் பஃறுளியாற்றை நினைவூட்டுவதாய், பறளியாறு பழையாறும் விரிந்து இங்கே பாய் தருகின்றது. பிடியுணவு கேட்ட ஔவை மூதாட்டிக்குப் பெரு யானையைப் பரிசிலாய் வழங்கிய நாஞ்சில் வள்ளுவன் வாழ்ந்ததும் இங்கேயே. அந்த ஔவை மூதாட்டிக்குப் பல கோயில்கள இருப்பதும் இங்கேயே. மருதன் இளநாகனார், ஒருசிறைப் பெரியனார், கருவூர் கதப்பிள்ளை போன்ற புறநானூற்றுச் சங்கப் புலவர்க்கெல்லாம் பாட்டுடைத் தலைவனாயமைந்த பொதிகைப்பொருநன் இந் நாஞ்சில் வள்ளுவனே. அரசப் புலவனும் பூதப்பாண்டியனால் பொதியிற செல்வனே என்று பாடி மகிழப்பெற்ற திதியன் என்னும் அகநானூற்றுத் தலைவனும் இந்த நாஞ்சில் நாட்டை ஆண்ட குரிசிலே. பூதப்பாண்டியன் பெயரால் இங்கு ஒரு நகரமும், கோயிலும் அணித்தே இருக்கின்றன. அதியமானும் இதனையாண்டு தன் பெயரை அதியனூருக்கு ஈந்து சென்றான். அது இன்று அழகிய பாண்டிபுரமாகி அண்மையில் பொலிகின்றது. ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்தைத் தம் முன்னிலையில் அரங்கேற்றப்பட்ட ஆசான் ஊராம் அதங்கோடும் இங்கேயே உள்ளது. இங்ஙனம் சங்கப் புகழும தொன்மையும்கொண்ட இந்நாட்டில் தமிழ்ப் புலமை மரபு, இன்றளவும் செய்குத்தம்பிப் பாவலர், சிவராசப் பிள்ளை, கவிமணி போன்றோரால் புரக்கப்பட்டு வந்துள்ளது.

ஐந்திணையும் மயங்கித் தென்றல் தவழும் இந்த நாடு, சென்ற இரண்டாயிரம் ஆண்டுகளிலே பற்பல அரசர் ஆளுகைக்கு உட்பட்டிருக்கின்றது. ஆதியிலே பெரிப்ளூஸ் குறிக்கும் ஆய்மன்னர், பின்னே வந்த சேரர், பழம் பாண்டியர், பெருஞ்சோழர், பிற்கால

சோழ பாண்டியர், விசயநகர நாயக்க மன்னர், வேணாட்டு மன்னர் எனப் பற்பலர் இன்றுகாறும் இந்நாட்டில் கோலோச்சிக் குடிதழீஇ வந்திருக்கின்றனர். ஆனால், அரசு வேறு வேறாய் மாறிய காலத்தும் மக்கள் மிகுந்த உரிமையுணர்வோடும் சமய உணர்வோடும் வாழ்ந்திருக்கின்றனர். 'நாஞ்சிலல்லது படையு மில்லை' என்ற இவர்கள் குறிக்கோள் வாழ்வுக்கு அடிப்படையாய் அமைந்தது ஊராண்மைக் கழகங்களே. இவை இன்றுகாறும் உயிர்த்துடிப்போடு செயலாற்றி, கல்வியும் சமயமும் இரு கண்கள் எனக்கொண்டு இந்துக்கல்லூரி, மெய்கண்ட குருகுலம் என்ற இரு நிறுவனங்களை அமைத்து, இயக்கி வருகின்றன.

நாஞ்சில்நாட்டைச் சார்ந்து அதன் நற் புகழுக்குரிய இடமாக விளங்கும் இந்த ஆரல்வாய்மொழி, தொன்று தொட்டே வரலாற்றுச் சிறப்புடையதாகும். இன்று இது ஆரல்வாய்மொழி யென வழங்கப்பட்டாலும் ஆரும்பொழி என்றே மக்கள் நாவில் பயிலப்பட்டு வருகின்றது. இதன் தொன்மைப் பெயர் ஆரும் பொழில் என்றிருத்தல் வேண்டும் இன்றும் ஈத்தாம்பொழி, ஓராம்பொழி, பைம்பொழி எனும் பெயர்களுடன் பல ஊர்களைக் காண்கின்றோம். வளம் மிகு சோலைகள் நிறைந்த இடமே பொழில் எனப்படும். இந் நாட்டைச் சுற்றி நோக்குங்கால், நாற் புறம் மலைகளையும், காண்போர் கண்களைக் கவரும் பசுமை வயல் வெளிகளையும் காணலாம். இங்கு உடல் நல வளர்ச்சிக்கேற்ற இனிய தட்ப வெப்ப நிலையும் உண்டு. ஆதலின் பண்டு மூவேந் தர்களும தம்முள் கலந்து செயல்முறை ஆராயும் இடமாக இதைத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர் போலும்! மூவேந்தரும் ஆராயும இடமாகக் கொள்ளவே, அதற்கு முப்பந்தர் என்று யிற்று. இப் பெயரால் இன்னும் அவ்வூர் எல்லையில் இருந்து வருகின்றது. மூவேந்தரும் கூடிச் சூழ்வதற்குரிய இடமாக முதன்மை பெற்ற இந் நாஞ்சில்நாட்டின் பெருமையை ஆரல்வாய் மொழி இன்று நிலைநாட்ட முன் வந்துள்ளது

கேரளம், சென்னை என்ற பெயருடன் தனி நாடுகள் அமைய இருக்கும் இச் சூழ்நிலையில், இருபகுதிகட்கும நல்லுறவு நிலைநாட்டும் நடுவிடமாக விளங்குவது இவ்வூர் என்பதில் ஐய மில்லை. இவ்வூர் சிற்றூரேயாயினும் அரசர் பற்றில் பேரூரேயாகும. சித்திரை மன்னரின் பெருமங்கலநாள்தோறும் விழாவெடுத்து, சித்திரை மன்னர் கிணறு, சித்திரை மன்னர் பள்ளி, சித்திரை மன்னர் நூல்நிலையம், சித்திரை மன்னர் நகர்க்கூடம், சித்திரை மன்னர் தெருவிளக்கு என, எல்லாம் சித்திரையின் சித்திர மாகவே சென்ற இருபத்தைந்து ஆண்டுகளாக நினைவுப்பணி அமைததுள்ளார்கள். மேலும் இந்த மீனாட்சியம்மன் கோயிலில்

சித்திரை மன்னர் திருவுருவச்சிலையையும் மக்கள் எழுப்பி யுள்ளார்கள். இச் சிறப்பு இந்நாட்டிலேயேயன்றி வேறு, எந் நாட்டினும் எக்கோயிலுக்கும் இல்லை. இக் கோயில் திருமுன் பிலேயே வேணாட்டரசர்க்குத் தாங்கள் குடிகள் என்று இவண் மக்கள் பன்னூறு ஆண்டுகட்குமுன் உறுதி செய்துகொண்டார் கள். குடிமை நிலைமைஇன்று மாறினும் அன்பு நிலை என்றும மாறாது. எனவே, இம் மாநாட்டை இவ்வூரில் இத்திருக்கோயி லின் முன்பே கூட்டினோம்.

இச் சமய வளர்ச்சி மாநாட்டை நமது வணக்கத்திற்குரிய சித்திரைத் திருநாள மன்னர் திறக்க எழுந்தருளியுள்ளார்கள். இத்தகையதொரு சமயமாநாட்டைத் தொடங்க இவரினும் ஏற்றம் பெற்றோர் எவரே? இவர்கள் முன்னோராம் சேரன் செங்குட்டுவனைப்போலவே, சேரமான் பெருமாள் நாயனாரைப் போலவே, குலசேகர ஆழ்வாரைப்போலவே அரசியல் தலைமையும் சமயத் தலைமையும் ஒருங்கே பூண்டவர்கள் இவர்களும். பல்லா யிரம் ஆண்டாய் நம் சமயம் கொண்ட இழிவைத் துடைத்து, திருக்கோயில்களை அனைவருக்கும் திறந்து தந்த பெருமை இவர்களையே சாரும். செயற்கரிய செய்த இவர்களும் நாயன்மார் ஆழ்வார் வரிசையில் வைத்தெண்ணப்பட வேண்டியவராகியே விட்டார்கள். வேணாட்டரசர்கள் என்றுமே இந்நாட்டு மக்கள் பால் பேரன்பும் இந்நாட்டுக் கோயில்கள்பால் பெரும் பக்தியும் கொண்டவர்களாய் இருந்தார்கள். திவான் என்ற முதன் மந்திரியை நியமனம் செய்யும்பொழுதெல்லாம் சுசீந்திரம் கோயிலைக் காவல்செய்வாயாக, என, 'நீட்டுக்' கொடுப்பதே திருவிதாங்கூர் அரச மரபு. சுசீந்திரத்து விழாவில், நெடுந்தேர் நிலைக்குத் திரும்புவதுவரையும் உண்ணா நோன்புகொள்ளும் சமய உறுதி உடையவர்கள். இத்தகைய சமயப்பற்று உடைய வர்களை அரசியல் தொடர்பில் பிரிந்து செல்லவேண்டிய நிலையில் இருக்கின்றோம். ஆயினும் வாழ்வு முற்றும் அரசியல் அன்று. நிலையற்ற அரசியல் கடந்தது நிலைகண்ட சமயம். எது எங்ஙனம் மாறினும் அன்பிலும் சமய உணர்விலும் எழுந்த அடிப்படையான இதயத்துடிப்புக்கள் மாறாமல் மறவாமல் மறையாமல் நிகழ்ந்து கொண்டே இருக்கும் என்பதை இதுகாலை எம் மன்னர் பெருமானுக்குத் தெரிவிக்க விரும்புகின்றோம் அரசர் எம் உள்ளத்தில் ஆட்சி கொண்டார்கள். நாம் அவர் உள்ளத்திலே குடிகொண்டோம். அன்பு அன்பினை ஈனும். அன்புத்தளையை அறுப்பவர் எவரோ? எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கி இன்று இங்கு எழுந்தருளி இம் மாநாட்டைத் திறக்க வந்தமைக்கு எம் உள்ளத்தின் ஆழ்ந்த நன்றியை அவர்களுக்கு அறிவிக்கின் றோம். 'எம் அண்ணலே வருக! வருக!' என வரவேற்கின்றோம்.

இம் மாநாட்டின் மூன்று நாட்களிலும் தலைமை தாங்க இசைந்துள்ள தலைவர்கட்கும், தொடக்கவுரை வாழ்த்துரை வழங்க இசைந்த பெரியோர்கட்கும், எமக்கு நல்லுரை பகர வந்துள்ள சொற்பொழிவாளர்க்கும், கலைவிருந்து அளிக்க வந்துள்ள கலைஞராம் செல்வர்கட்கும, எமது அழைப்புக்கிணங்கத் திரளாகக் குழுமியுள்ள அன்னையர்க்கும், சமயச் செல்வராம் உங்கட்கும் எம் அகம் கனிந்த வரவேற்பை நல்குகின்றோம். அனைவிருமே குணம்நாடிக் குற்றம் களைவீர்களாக என்று பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறோம்.

இம் மாநாட்டை யாம் கூட்டுவிக்கக் கருதியகாலை எம் குரு முதல்வனும் மெய்கண்டான் நினைவு ஒன்றே துணையாய் இருந்தது. எங்ஙனம் இதைச் செய்துமுடிப்போம் என்று எண்ணி அயர்ந்தோம். ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே? திருவருளால் அன்பர்கள் பலர் எங்கெங்கிருந்தோ விரைந்தோடிவந்து உறுதுணையாய்ப் பணியாற்ற முற்பட்டனர். நம் படைத்துறை அமைச்சர் பெருமைமிகு கைலாசநாத கட்ஜுவும இங்கு வந்து இந்நேரத்தில் இம் மாநாட்டில பங்கு கொள்ளலாயினர். ஏறிலான் கயிலை வெற்பு முதல் எம் குமரி வாழ்முனைவரை தனிச்செங்கோல் ஓச்சும் நம் சமயத்தின் ஒற்றுமைக்கும் எம் மெய்கண்டான் திருவருளுக்கும் இவர்களின் எதிர்பாராத வரவினும் வேறு எடுத்துக்காட்டு வேண்டுமோ? கைலாச நாதரே வருக! வருக!

நண்பர்களே! சமயம்வேறு வாழ்க்கை வேறு அல்ல. இந்தச சமய வளர்ச்சி மாநாடே வாழ்க்கை வளர்ச்சி மாநாடாகும. எனவேதான் பொருளாதாரத்துறையில் பொருந்தியுள்ள என்னையும சமயம் ஈர்க்கின்றது. சமயத்துறை சிறந்தால் வாழ்வுத்துறை சிறக்கும் என்றுகூறி, வரவேற்புரையை நிகழ்த்திமுடித்தார்கள்.

அதன்பின்னர்த் தலைமைதாங்கிய சுவாமிகள் தம முன்னுரையில் குறிப்பிட்டதாவது: ‘உயர்ந்த சமயப் பண்பாட்டால் தான் நாம் அறிஞர் என அழைக்கப்படுகின்றோம். அருள் நெறியில் சாதிமத வேற்றுமை கிடையாது; சிவஞானபோதப் பெருமை அளவிடற்கரியது’ என்பதாம்.

அதற்கு அடுத்துக் ‘குருகுலக் கல்வி’ என்னும் பொருள் பற்றித் திரு. ஓ. பி. இராமசாமி ரெட்டியாரவர்கள் பேசியதாவது: ‘பல துறைகளில் சமயத்தொண்டு செய்து குருகுலத்தை நிறுவ முயற்சியெடுத்துக் குழந்தைகளை மெய்கண்டார்போலப் பல்கலை வல்லுநர்களாகச் செயல்முறையிற் கொணரக் குருகுலம் உதவி

செய்கிறது. உடம்பில் உத்தமர் கோயில் கொண்டுள்ளார் என்பதை யுணர்ந்து ஞானியின் பெயரால் குருகுலம் இங்குத் தொடங்கப்பெற்றுள்ளது. வாழ்க்கை நமக்காக மட்டுமல்ல. பிறர்க்கும் தொண்டுசெய் யென்பதை உணர்த்தவே குருகுலங் களில் பெரியோர் கற்பித்தனர். அன்று குருகுலங்கள் மனம் உடல் ஆன்மா நாம் பண்புற வளர்க்க இருந்தன. அக்காலத்தில் திண்ணைப் பள்ளிக்கூடங்களும மிகுதியாக இருந்தன. இராம பிரான், வசிட்டரிடம் குருகுல வாழ்வு வாழ்ந்தார். பண்டைக் குருகுலத்தில் ஆசிரிய மாணவ உறவு, மிகுதியாக இருந்தது. இக்காலத்தில் படித்தவர் தொழில் செய்தல், இழிவென நினைக் கிறார்கள். இதை யொட்டியே (Basic education) என்பதை நடைமுறையில் சிறப்பாகக் கொண்டுவர வேண்டுமென்னும் நோக்குடனே மிகவும் ஆதரவுகொடுத்தார் காந்தியடிகள். அடிப் படையற்ற கல்வி கற்பவர்கள் உலக வாழ்விற்கும் கல்விக்கும் தொடர்பில்லாமல் செய்துவிடுகிறார்கள். தற்காலத்தில் கற்கிறவர் களுக்கு அடிப்படைக் கல்வியில் நம்பிக்கை கிடையாது.

இக்காலத்தில் ஆசிரியர்கள் பயனற்ற முறையில் மாணவர் கட்குக் கல்விகற்பித்து வெளியேற்றித் திண்டாட விடுகின்றனர். உழவுத்தொழில் வாணிகம் விஞ்ஞானம் சிற்பக்கலை இவை முன் னேற வேண்டும். ஒவ்வொருவரும் உண்மைத் தொழிலில் பயிற்சி பெற்றால்தான் நாம் மற்றவர்கட்கு நன்மை செய்தவர்கள் ஆவோம். கடவுளன்பு, தொழில், அறிவு முதலியவை தனக்கும் ஏனையோருக்கும் பயனுடையதாயிருக்கவேண்டும் என்ற கொள் கையில் குருகுலம் அமையவேண்டும். மெய்கண்ட குருகுலம் ஏனையோருக்கு வழிகாட்டியாக வேண்டும்' என்பதாம்.

அதற்கடுத்துக் கல்லூரி மலையாள விரிவுரையாளர் திரு. பி. சி. பாலகிருட்டிணன் அவர்கள் 'பண்டைக் குருகுலங்கள்' என்பதுபற்றிப் பேசியபோது குறிப்பிட்டதாவது :

'இந்து மதத்தின் அடிப்படைக் கொள்கைகளை நிறை வேற்றுவதே இக் குருகுலத்தின் நோக்கம். சைவம் என்றால் சிவன் சம்பந்தப்பட்டது. வடஇந்தியாவில் நாளந்தாக் குரு குலத்தைத் தழுவிய ஒரு பல்கலைக்கழகம் விளங்கியது. அதே போல் தென்னிந்தியாவில் கேரளத்தில் மெய்கண்டார் குருகுலம் தோன்றியுள்ளது. அக்காலத்தில் உடற்பயிற்சி குருகுலத்தின் தலைமையான குறிக்கோளாக இருந்தது.

நாஞ்சில் மக்களும் மலையாளிகளும், எப்பொழுதும் கருத்து வேறுபாடின்றி ஒற்றுமையாக வாழவேண்டும். நாஞ்சில் நாடு தமிழ்நாட்டோடு சேர்ந்த பிறகும் பழைய நட்பு என்றென்றும்

நிலைத்திருக்க வேண்டும். தமிழர்களும் மலையாளிகளும் சகோதரர்கள். அவர்களுக்குள் கருத்துவேற்றுமை யிருக்கக்கூடாது' என்பதாம்.

அதன் பின்னர்ப் பேராசிரியர் திரு. சி. இலக்குவனார் அவர்கள் 'மெய்கண்ட தேவர்' என்னும் பொருள்பற்றிப் பேசியதாவது :

'பண்டைக்காலக் குருகுலத்தில் மாணவர்கள் குருவிற்கு விறகு கொண்டுவந்து கொடுத்தனர். ஆனால், இக்காலத்துக் குருகுல வாழ்க்கை அப்படி யிருக்காது. 'குரு' என்ற சொல்லிற்கு ஆசிரியர் என்றும், 'குலம்' என்ற சொற்குக் 'கூட்டம்' என்றும பொருள். குருகுலம் என்னுந் தொடர் வடசொல்லெனச் சிலர் கருதுகிறார்கள். அது தவறு. தமிழேயாகும்.

முற்காலத்தில் மாணவர்கள் ஆசிரியர் இல்லங்கட்குச் சென்று கல்வி பயின்றனர். பயில்கின்றவர் குரு வீட்டிற்குச் சென்றால் அவர்க்குரிய பணியைச் செய்வது இயல்புதானே. ஆதலால் இக்காலத்தும் நல்ல மாணவர்களைப் பயிற்றுவித்து நல்ல சூழ்நிலையை உருவாக்க வேண்டும்.

தமிழர்கள் உண்மையுடன் இருந்தார்கள்; உண்மையைக் காணுவதில் கவனம் செலுத்தினார்கள் தமிழர்கண்ட மெய் என்ன? 'ஒன்றே குலம், ஒருவனே தேவன்' என்பதே. இதனைச் செயலில் மெய்யாக்க வேண்டும். திருவள்ளுவர் கூறிய—மெய்கண்டார் உரைத்த—உண்மைகளை உலகுக்கு அறிவிக்க வேண்டும். மெய்கண்ட குருகுலம் எக்காலத்திற்கும் எல்லோருக்கும் தொண்டாற்றும் பொதுநிலையமாக விளங்கும்.

இப்போது தொடங்கும் இக் குருகுலம் மெய்கண்ட நெறியில் வளரவேண்டும். இந்தச் சூழ்நிலையில் மாணவர்கள் நல்ல முறையில் உருவாகுதல் வேண்டும். மெய்கண்ட குருகுலம், மாணவ ஆசிரியத் தொடர்பை வளர்க்க வழியேற்படுத்துகிறது.' என்பதாம்.

முடிவில் தலைவர் முடிவுரைக்குப் பின், திரு. டி. வி. சிவசுப்பிரமணிய பிள்ளை நன்றி கூறினார்கள். நாட்டு வாழ்த்துடன் கூட்டம் இனிது நிறைவுற்றது.

# *சங்கரலிங்கப் பெரியோய்!

[வித்துவான், திரு. சி. இராமசாமி]

தென்னகத்தே விருதுநகர்த் தியாகியுயிர் தீர்ந்தனையோ?
நின்னகத்தே என்னவெலாம் நினைந்துடலம் நீத்தனையோ?
தன்னகத்தே யுணர்வூறாத் தமிழகத்தே யுனைப்போல
முன்னுமிலை பின்னுமெவர் முனைவாரோ யாமறியேம்! (௧)
பொன்னிழப்பார் பொருளிழப்பார் புகழிழப்பார் புவியரசு
தன்னருமைத் தாய்தந்தை தாரமக வையுமிழப்பார்
தென்னிழப்பார் தம்வாழ்வில் சேர்கலைசெல் வமுமிழப்பார்
உன்னரிய செயல்போல உயிரிழப்பார்க் காண்கிலமே! (௨)
'புகழென்றால் உயிரினையும் பொருட்படுத்தா தீவார்கள்
இகழென்றால் உலகனைத்தும் ஈந்தாலும் ஏலார்கள்
தகவுடைய சான்றோர்கள்' என நூல்கள் சாற்றுவதை
மிகக்கண்டேம் இந்நாளில் மேலோய்நின் செயலாலே. (௩)
தத்தமது வாழ்வுயரத் தலைவரெனப் பெயர்சூடி
எத்தனையோ மேடைகளில் எடுத்துரைப்பார் வழிநின்று
செத்தபிற கனுதாபம் செலுத்துகிற மனிதரிடை
உத்தம! நீ உயிர்விடுத்த தொருசெயல்தான் வியப்பலவோ? (௪)
மெத்தநலம் பெற்றோரும் மேலுநலம் பெறுவதற்குத்
தத்தமது தியாகத்திற் கரியவிலை தாம்வேண்டும்
எத்தனையோ பெயர்த்தியாகி என்பாரோ டிணையாமல்
உத்தம! நீ உயிர்த்தியாகம் அளித்ததனுக் குருகுவரோ? (௫)
**சங்கரலிங் கப்பெரியோய்!** சாதற்குத் துணிந்தநினை
இங்குலவும் ஆட்சியினர் இன்னுமுள தலைவரெலாம்
தங்களரு முயற்சியினால் தவிர்த்திருக்க வழியுண்டு
எங்கவர்தாம் ஒளித்தனரோ? எனநெஞ்சம் ஏங்கிடுமே! (௬)
ஆந்திரர்போல் வடவரைப்போல் ஆர்வமுடன் முன்வந்து
மாந்தரிவண் நற்கொள்கை மதித்துரிமைப் போர்க்கொடியை
ஏந்திநடத் திடுவரென எண்ணியுண்ணா நோன்பிருந்து
சாந்தொழிலைச் செய்தனையே! "தமிழ்நாடு" தழைத்திடுமோ? (௭)
'**தமிழ்நாடென்**" றினியபெயர் தான்சூட்ட வேண்டுமெனும்
அமிழ்தான வேண்டுகையும், ஆளுநர்தாம் நாட்டுநலம்
கமழ்வுறவே யாட்சிசெயுங் கடமைகளும் வலியுறுத்தி
நுமதுயிரை யுண்ணாமை நோன்பியற்றி விடுத்தனையே! (௮)
மானமொடு தமிழ்நாட்டார் வாழ்வதனை விரும்பாமல்
ஈனமுறச் செய்கின்ற இயல்புடையார் கொடுமைகளை
ஏனென்று கேட்பவர்கள் இவ்வுலகத் தின்மையினால்
வானவர்பாற் கூறிநல வழிதேடச் சென்றனையோ? (௯)
பண்புடையோய்! நினதுயிரைப் பலிகொடுத்த தமிழினந்தான்
கண்பெறுநாள் எந்நாளோ? கழுவாய்தான் இதற்குண்டோ?
விண்புகுந் தமிழ்நாட்டில் விரும்பியவை கைகூடின்
தண்பெருகு தமிழாலே தலமிதனை வாழ்த்துவையோ? (௧௦)

---

* 'தமிழ்நாடு' எனப் பெயர் சூட்டி நம்நாட்டை அழைக்கவும், வேறு சில நற்கொள்கைகளை வேண்டியும் அரசியலார்க்கு அறிவித்து, அதற்காக 77 நாட்கள் உண்ணா நோன்புகொண்டு உயிர் கொடுத்த சங்கரலிங்கனார் பிரிவுக்கு இரங்கிக்கூறிய கையறுநிலைப் பாக்கள்.

# வேளாளர் நாகரிக வித்தாவார்

[சித்தாந்த பண்டிதர் ப. இராமநாதபிள்ளை]

(செல்வி சிலம்பு-௩௧, பரல்-௨, பக்கம் ௬௩-இன் தொடர்ச்சி)

நீலமணிமிடற்று ஒருவனும் தந்தைபோன்று வேளாளரும் எல்லார்க்கும் ஊண் உடை உணர்வு நல்கி அவர்கள் துன்பத்தையும் தாமேற்று அவர்களைத் தாங்கி உலகத்துக்கே அச்சாணி போன்றிருக்கின்றனர். இவ்வுண்மை,

" உழுவார் உலகத்தார்க்கு ஆணியஃ தாற்றாது
எழுவாரை யெல்லாம் பொறுத்து." (திருக்குறள். ௧0௩௨)

என்னும் திருவள்ளுவர் திருமறையாலும் காண்க.

நிலத்தை வளம்படுத்தி அந்நிலத்துக்கும் உலகத்துக்கும் வாழ்வு தந்து மைந்தர் போன்று தாங்குவார் வேளாளரே. இயற்கையில் நிலம் காடு பள்ளம் மேடு முதலியவாக இருப்பினும் அது அவற்றால் பெருமை எய்துவதில்லை. அந் நிலத்தைப் பண்படுத்தி விளைவுண்டாக்கிப் பலர்க்கும் அவ் விளைவினை நல்கி வாழ்விக்கும் 'கைசெய்தூண் மாலையவராகிய' வினைவிழை ஆடவராலேயே பெருமை எய்தும்.

இஃது இரண்டாயிரம் யாண்டுகளுக்கு முன் செந்நாப்புலவர் ஒளவையாரால் பாடப்பெற்ற புறநானூற்றுச் செய்யுள் நூற்றெண்பத்தேழால் உணர்க. அது:

" நாடாக ஒன்றோ காடாக ஒன்றோ
அவலாக ஒன்றோ மிசையாக ஒன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே."

நீரைப் பெருக்கி நெறிப்படுத்தி நிலத்திற் பாய்ச்சி வளமுண்டாக்கி நீர்க்கு அமிழ்தென்னும் பெயரை நிலைபெறச் செய்தலின் வேளாளர் நீருக்குச் சீரும் சிறப்பும் அமைந்த மக்களாவர்.

" பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வர் " என ஆசிரியர் இளங்கோவடிகள் அருளுவதாலும் உணரலாம்.

இவ் வேளாளர் நிலம் பெயர்ந்துறையா நீர்மையராய் நிலம் பெயர்ந்துறையும் அந்தணர் அரசர் வணிகரென்னும் மூவரையும் அவர்தம் தொழின்முறைக்கு முட்டின்றி வேண்டுவ உதவி தம் உயர் குடியுறுப்பாய்க் கொண்டு போற்றி வருகின்றனர்.

அதனால் குடிமை என்பது வேளாளர்க்கே இயல்பாகவுள்ள உரிமையாம். ஏனையார்க்குச் சிறப்பாகக் கொள்ளப்படும். குடிமை என்பது, தள்ளா விளையுளைச் செய்யும் மெய்யொழுக்கமும் தக்காராய் வாழும் மொழி வாய்மையும், தாழ்விலாச் செல்வராக்கும் உளநாணும் ஆகிய மூன்றும் என்றும் இயல்பாக அமைந்து தவிராது நடைமுறையில் இருந்து வருவதேயாம். இது,

"ஒழுக்கமும் வாய்மையும் நாணுமிம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார்." (திருக்குறள். ௯௫௨)

என்னும் பொய்யில்புலவர் பொருளுரையானுமுணர்க.

பழந் தமிழ்ப் பாட்டெனச் சிறப்பித்துக் கூறப்படும் முட்டாச் சிறப்புறு பட்டினப பாலையாம் நூலின்கண் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஆசிரியர் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

கிளைகலித்துப் பகை பேணாது
வலைஞர் முன்றில் மீன்பிறழவும்
விலைஞர் குரம்பை மாவீண்டவும்
கொலை கடிந்தும் களவு நீக்கியும்
அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்
நல்லானொடு பகடோம்பியும்
நான்மறையோர் புகழ்பரப்பியும்
பண்ணிய மட்டியும் பசுபதம் கொடுத்தும்
புண்ணிய முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக்
கொடுமேழி நசையுழவர்."

(பட்டினப். ககக-௨0௬)

வேளாளரின் தனிச் சிறப்பை விளக்கி அருளினர்.

இதன் பொருள்: செந்நெறிச் செல்வர்களாகிய வேளாண் விழுத்தவத்தோரால் விளைவு மிகுந்து 'விரிநீர் வியனுலகத்துள் நின்றுடற்றும் பசி' யொழிந்தமையால் கொன்றுண்பார் தம் கொலைத் தொழிலினின்றும் நீங்கி அருள்நெறியாம் அன்பு கைக்கொண்டனர். அதனால் மீன்பிடி வலைஞர் முற்றத்து அம் மீன்கள் அவர்களைப் பகை எனக் கருதாது நீரினின்றும் துள்ளிக் குதித்து நீரில் விளையாடி மீண்டும் நீருள் புகும். அது போன்று ஆடுமாடு முதலிய விலங்கினங்கள் கொலைஞர் முற்றத்து அச்சமின்றி நெருங்கி உலவுவ.

களவு செய்வார் 'நகையீகை இன்சொல் இகழாமை' ஆகிய குடிப்பிறப்பின் வகை நான்கால் வேளாளர் வேண்டும் உதவி செய்ய இழிதொழிலாம் களவு விட்டு விழுத் தொழிலாம் உழவு பெற்று வாழ்வார்.

பிறர் வாழ வேண்டுமென்னும் பேரருளால் ‘காலுணவாகச் சுடரொடு கொட்கும்’ அமரரை நினைந்து வேள்வி செய்வர். அவ் வேள்வியால் அவர்கள் மகிழ்வர். அம் மகிழ்வே அவர்கட்கு ஊட்டும் அவியுணவாகும்.

ஆனும் ஆனேறும் எருமையும் யானையும் வளம்பெறப் பாது காப்பர். அறம் பொருள் இன்பம் வீடாம் தமிழ் நான்மறை பயின்ற மறையோர்க்கு வேண்டுவ கொடுத்து அவர்கள் புகழை நிலைநிறுத்துவர். அறவினை புரியும் உரனும் வளமும் திறமையு மில்லார் பொருட்டுத் தாம் அறச்செயல் செய்து அப் பயனைப் பூவும் புனலும் சொரிந்து அவர்கட்கு அளிப்பர்.

இவ்வகைப் புண்ணியங்கள் பலவும் குறைவின்றிச் செய்து அனைவர்க்கும் புகலிடமாய் ‘எந்நாளும் காப்பாரே வேளாளர் காண்’ என்னும் புகழுரையோடு அருள் வாழ்க்கையராய் வாழ் வார் கோழைபடா மேழிச் செல்வமே கனவிலும் விரும்பும் நல் ஏர் உழவராம் வேளாளர் என்பதே.

இது,

“பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்.”

என்னும் திருவள்ளுவப் பயனால் நன்குணரலாம்.

இற்றைக்கு ஐயாயிர யாண்டுகளுக்கு முன்னுள்ள ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்தின்கண்,

“வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி.”

(தொல்-மரபியல், அ0)

இதன் பொருள்: விழுக் குடிப் பிறந்த வேளாளர்க்குச் சிறப்புத் தொழில் உழவேயாம். அதுவே அவர்கள் ஊண் முத லாம். ஏனை ஓதுவித்தல் நாடுகாத்தல் கொண்டு விற்றல் மூன் றும் தம்மால் ஏவப்பெற்ற அந்தணர் அரசர் வணிகர் என்னும் மூவர்க்கும் உற்றுழி உதவப்போம் படியிலாப்பணியாம். அதனால் அந் நிகழ்ச்சிகள் அவர்க்குப் பொதுவகையாவதன்றி ஊணின் பொருட்டுக் கொள்ளும் சிறப்பு நிகழ்ச்சி இல்லையென ஆன்றோர் கூறுப.

ஆயினும், வேளாளர் ஓதல், ஊணும் உடையும் முதலான கொடுத்து ஓதுவித்தல், படைக்கலம் பயிறல், பணமின்றிப் பயிற்றுவித்தல், விருந்தோம்பல், வேண்டுவ உதவி விருந்தோம் பச் செய்தல், கடவுளைத் தொழுதல், தொழுவார்க்கு வேண்டும்

துணைபுரிதல், தொழாதார்க்கும் உண்மை எடுத்துரைத்துக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதித் தொழும்படி செய்தல், நாட்டு நலனின் பொருட்டு வேந்தற்கு உற்றுழி உதவப் பகைப் புலம் சென்று வென்றியும் புகழும் பெறுதல், மன்றத்திருந்து 'இருவர்தம் சொல்லையும் எழுதரம் கேட்டு, இருவரும் பொருந்த முறை செய்தல், ஒரோவழி முறை செய்யுமிடத்து ஊழ்வினைப் பாங்கால் பிழைநேரின் உயிரினை நீத்துப் புகழினை நிறுவல் முத லிய அறம் பலவும் கடனெனப் புரியும் கடவுள் தொண்டராய்ப் பண்டும இன்றும் என்றும் நின்று நிலவும் சான்றோராவர்.

வேந்தற்கு உற்றுழிப் பிரிந்து உயிர்கொடுத்து வென்று புகழ்கொண்டார் வேளாண் விழுக் குடிச் செல்வராம் கலிப் பகையார். இவ் வரலாற்றினை ஆசிரியர் சேக்கிழார் அடிகள்,

"ஒருவாறு பெருங்கிளைஞர் மனந்தேற்றத் துயரொழிந்து
பெருவானம் அடைந்தவர்க்குச் செய்கடன்கள் பெருக்கினார்
மருவார்மேல் மன்னவற்கா மலையப்போங் கலிப்பகையார்
பொருவாரும் போர்க்களத்தில் உயிர்கொடுத்துப் புகழ்கொண்டார்."
(திருத்-திருநா. ௩0)

என அருளுகின்றனர்.

முறையில் நேர்ந்த குறையின் பொருட்டுப் பழையனூர்ச் சிறுத்தொண்டராகிய வாய்மை திறம்பாத் தூய்மையராகிய வேளா ளர் எழுபது பேரும் 'நளியிரும் பொய்கையும் தீயுமோரற்றே' எனக் கண்டார் மருள அருள்வலிகொண்டு முழுகி முறை நிறுத்தினர்.

அது,

"நற்றி றம்புரி பழையனூர்ச் சிறுத்தொண்டர் நவைவந்து
உற்ற போதுதம் உயிரையும் வணிகனுக் கொருகால்
சொற்ற மெய்ம்மையும் தூக்கிஅச் சொல்லையே காக்கப்
பெற்ற மேன்மையில் நிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு."
(திருத் - திருக், ௩.)

என ஆசிரியர் சேக்கிழார் அடிகள் அருளுமாற்றான் அறிக.

கூறியசொல் பிழைக்குமாயின் உயிர்கொடுப்பார் புகழுக் குரியவரே என்பது திருவள்ளுவ நாயனார் திருவுள்ளம்.

அது,

"இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்."

என்னும் எஎகூ-ஆம் திருக்குறளான் உணர்க.

### வேளாளர் ஆட்சி

பண்டை நாளில் கொடையும் படையும் மிக்குடைய வேள் எவ்வி என்னும் மன்னன் மிழலைக் கூற்றத்தை ஆண்டனன். இதுபோன்று வேள்பாரி, இருங்கோவேள் முதலிய பலர் ஆண்டுள்ளமை வரலாறு கண்ட வுண்மை.

சோழன் கரிகாற்பெருவளத்தான் குமரிமுதல் வடபெருங்கல் வரை ஒருமொழிவைத்து உலகாண்டனன். அம் மன்னர் பெருமான் நாங்கூர்வேள் என்னும் வேளாண் தலைவர்பால் பெண் கொண்டனன். அவன் தந்தை உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி அழுந்தூர்வேள் என்னும் வேளாண்பால் மகட் கொண்டனன். இங்ஙனம் வரும் வரலாறு பல. அவற்றைச் சங்கத் தொகை நூல்களானும், கல்வெட்டுக்களானும் பரக்கக் காணலாம்.

### வேளாளர் முடி நல்கும் உரிமையர்

இவ்வுரிமை செந்தமிழ்நாட்டு நிலவுரிமைக்கிழார்க்கே வாய்ந்ததென்பது எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது. கிழார் என்று சிறப்பித்துக் கூறப்படுவார் வேளாளரேயாவர். இதனை வலி யுறுத்துவது, அயோத்தியர் இறைக்கு முடிசூட்டுங்கால் 'வெண்ணெயூர்ச் சடையன் மரபினோர் திருமுடி கொடுக்க வசிட்டன் வாங்கிச் சூட்டினன் எனக் கவிச்சக்கரவர்த்தி கம்பரும் கூறுகின்றனர்.

> "அரியணை யனுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்தப்
> பரதன்வெண் குடை கவிக்க இருவரும் கவரி வீச
> விரைசெறி குழலி யோங்க வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
> மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி."
>
> (கம்பர் - திருமுடி, ௩அ)

### மூவராய் அழைக்கப்படும் வேளாளர்

வேளாளர் கார்காத்தார் முதலியார் என வேளாண் மாந்தர் மூன்று பெரும் பிரிவினராக வழங்கப் பெறுகின்றனர். இவர்கள் அனைவரும் சிவனடியும் திருமாலடியும் மறவாக் செந்நெறிச் செல்வராய்க் கொலையும் புலையும் நீத்த தூய உணவுகொள் நிலையுடைச்சைவராய்த் தொன்றுதொட்டு இன்றுகாறும் வாழ்ந்து வருகின்றனர். இவர்களுக்குள் ஏதொரு வேறுபாடுமின்றி உடனுண்ணல் நிகழ்ந்துவருகின்றது. கொள்ளலும் கொடுத்தலும் அவரவர்களுக்குள்ளேயே நிகழ்ந்துவருகின்றன.

### வேண்டத்தக்கது

இப்பொழுது மூவகைப் பிரிவாம் வேளாளர்களும் கால வேற்றுமையால் ஒற்றுமை குன்றி உயர்நிலை ஒரீஇ வாழ்கின்றனர்.

[நாராயணன் என்னும் சப்தமிருக்கிறது; வாயும் வசத்திலிருக்கிறது. அப்படியும் கோரமான நரகத்தில் பலர் விழுகின்றனர் என்பது என்ன ஆச்சரியம்!] என்று புராணங்களில் பேசப்படுகிறது. பொய்கையாழ்வாரும் இதையே

"நாவாயிலுண்டே நமோ நாரணவென்று
ஓவாதுரைக்கும் உரையுண்டே—மூவாத
மாக்கதிக்கண் செல்லும் வகையுண்டே என்னொருவர்
தீக்கதிக்கண் செல்லும்திறம்." — என்று அருளிச்செய்தார்,

(ஆவிவக்தந) ஆ—ஸமந்தாத்—விவக்தந. எங்கும் சொல்லுங்கள் ஸர்வதேசத்திலும் சொல்லுங்கள். ஸர்வகாலத்திலும் சொல்லுங்கள். ஸர்வாவஸ்தையிலும் சொல்லுங்கள்.

"துஞ்சும்போதழைமின் துயர்வரில் நினைமின்
துயரிலீர் சொல்லினும் நன்றாம்
நஞ்சுதான கண்டீர் நம்முடை வினைக்கு
நாராயணாவென்னும் நாமம்" [பெரியதிரு1-1-9]

என்றார் திருமங்கையாழ்வார்.

ஆஸீநா வா ஶயாநா வா திஷ்டந்தோ யத்ர குத்ர வா ।
நமோ நாராயணாயேதி மந்த்ரைகஶரணா வயம்||

[எங்காவது உட்கார்ந்திருந்தாலும், படுத்துக்கொண்டிருந்தாலும், நின்றுகொண்டிருந்தாலும் 'நமோ நாராயணாய' என்னும் மந்திரத்தையே உபாயமாகப் பற்றியவர்கள் நாங்கள்.]

என்று ரிஷிகளும் இதை விவரித்தனர். (ஆவிவக்தந)எங்கும் ஸங்கீர்த்தனம் செய்யுங்கள் என்கையாலே, பரிசுத்தனாயிருக்கும் போதோடு, அசுத்தனாயிருக்கும் போதோடுவாசியற ஸர்வாவஸ்தைகளிலும் சொல்லுங்கள் என்றதாகிறது. திருநாமஸங்கீர்த்தனம் செய்யும் போது: அசுத்தனுக்கு சுத்திஸம்பாதிக்கவேண்டியதில்லை, சுத்தனுக்கு அசுத்தி ஸம்பாதிக்கவேண்டியதில்லை. இருந்தபடியே ஸங்கீர்த்தனம் செய்ய அமையும் என்று கருத்து.

"நஞ்ஜீயர், 'அப்ரயதனாய்க்கொண்டு திருநாமம் சொல்லலாமோ? ஆகாதோ?' என்று பட்டரைக் கேட்க, 'கங்காஸ்நாநம் பண்ணப் போமவனுக்கு உவர்க்குழியிலே (உப்புநீர்க்குட்டையிலே) தோய்ந்து

# நெடுநல்வாடையின் திணை ஆராய்ச்சி

[வித்துவான். திரு. செ. வேங்கடராமச் செட்டியார்]

பழந்தமிழ் நூல்கள் என்று எல்லாராலும் பாராட்டப்பெறும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்ற சங்க இலக்கியப் பாடல்கள் எல்லாவற்றையும் அகத்திணைப் பாடல்கள் புறத்திணைப் பாடல்கள் என்ற இருவகையில் அடக்கிவிடலாம். தலைவன் தலைவி என்ற இருவர் அகத்தே நிகழும் இன்பம் பற்றிய ஒழுக்க நிலையை விளக்குவது அகத்திணையாகும். அறனும் பொருளும் பற்றி எல்லோரும் அறியப் புறத்தே நிகழ்த்தும் ஒழுக்க நிலையை விளக்குவது புறத்திணையாகும். அகத்திணை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என்ற ஏழு திணைகளையுடையது. அவற்றுள், கைக்கிளையும் பெருந்திணையும் அகப்புறம் என வழங்குவதுமுண்டு. வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்ற ஏழு திணைகளையுடையது புறத்திணையாகும். அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, கலித்தொகை, ஐங்குறுநூறு என்ற தொகை நூல்கள் ஐந்தும் அகத்திணைப் பாடல்களின் தொகுதிகளாகும். புறநானூறு, பதிற்றுப்பத்து என்ற தொகை நூல்கள் இரண்டும் புறத்திணைப் பாடல்களின் தொகுதிகளாகும் பரிபாடல் ஒன்று மட்டும் அவ்விரு திணைப்பாடல்களையும் ஒருங்கே பெற்றுள்ள தொகை நூலாகும். பத்துப்பாட்டில் திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, கூத்தராற்றுப்படை (மலைபடுகடாம்), மதுரைக்காஞ்சி என்ற ஆறு பாட்டுகளும் புறத்திணை பற்றியன. முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை என்ற மூன்று பாட்டுகளும் அகத்திணை பற்றியன என்பதை அவற்றின் பெயர்களே உணர்த்துகின்றன.

நெடுநல்வாடை என்ற ஒரு பாட்டுமட்டும் திணை ஆராய்ச்சிக்கு உரியதாகின்றது. தொல்காப்பியம் என்னும் பேரிலக்கணத்திற்கும் பத்துப்பாட்டு, கலித்தொகை என்ற சங்க இலக்கியங்கட்கும், சிந்தாமணி யென்ற சிறப்புடைய காப்பியத்திற்கும் நல்லுரை கண்ட புலமை மிக்க நச்சினார்க்கினியரையே திகைக்கச் செய்த பாடல் இந் நெடுநல்வாடையாகும். இப்பாடலின் முன்னுரையில்: 'இப்பாட்டு, சுட்டி ஒருவர் பெயர் கொள்ளாமையின் அகப்பொருளாமேனும், "வேம்பு தலையாத்த நோன்காழ் எஃகம்" என அடையாளப்பூக் கூறினமையின்

அகமாகாதாயிற்று' என்று கூறியுள்ளார். மேலும், "'கூதிர் நின்றன்றாற்போதே' எனவும், 'கூதிர்ப்பாசறை' எனவும் கூறுகின்றாராதலின் இது, 'வாகை தானே பாலையது புறனே' எனப் பாலைக்குப் புறனாகக் கூறிய வாகைத்திணையாய் அதனுள், 'கூதிர் வேனில் என்றிரு பாசறைக், காதலி னொன்றிக் கண்ணிய மரபினும்' எனக்கூறிய கூதிர்ப்பாசறையே யாயிற்று" எனத் துறையும் கூறியுள்ளார்.

எனவே, நச்சினார்க்கினியர் கருத்துப்படி, நெடுநல்வாடை என்ற பாட்டுப், புறத்திணையேழனுள் வாகைத்திணைப்பாட்டு என்பதும் அதன் துறை, கூதிர்ப்பாசறை என்பதும் புலனாகும். ஆயினும் அவரே அப்பாடலின் கசுஅ-ஆம் அடிக்குப் பொருள் கூறுகின்ற பொழுது, "இஃது இவள் வருத்த மிகுதி தீர வேண்டிக் கொற்றவையைப் பரவுகின்றவள் கூற்றாயிற்று. கேட்பாயாக என்றது கொற்றவையை நோக்கி." என்று கூறியுள்ளார் இதனால் இப்பாடற்குத் துறை 'கொற்றவை நிலை' என்பதுவும் நச்சினார்க்கினியர்க்குக் கருத்தாதல் விளங்குகின்றது. மேலும்,

"இப்பாட்டுத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மண்ணசையாற் சென்று பொருதலின், இப்போர் வஞ்சியாகலின் வஞ்சிக்குக் கொற்றவை நிலை யுண்மையின், கொற்றவையை வெற்றிப் பொருட்டுப் பரவுதல் கூறினார். அது பாலைத்திணைக்கு ஏற்றலின்." என இப்பாடலினுரையை முடிக்கும் முடிவுரையில் கூறியுள்ளார். இதை நோக்கும் போது இப்பாடல் வஞ்சித்திணை யென்பதும் நச்சினார்க்கினியர் கருத்தாதல் புலப்படும்.

பாடலின் முன்னுரையில் வாகைத்திணை யெனவும் கூதிர்ப்பாசறை என்னும் துறையெனவும் விளக்கிய இவரே பின்னுரையில் வஞ்சித்திணை என்றும் கொற்றவைநிலை என்பது துறையென்றும் கூறியுள்ளார். மேலும் முன்னுரையில் அகத்திணைப் பாட்டன்று என்று காரணங்காட்டி வாகைத்திணையே என்று நிறுவி வந்தமையும் மறந்து, "கொற்றவையை வெற்றிப்பொருட்டுப் பரவுதல் கூறினார். அது பாலைத்திணைக்கு ஏற்றலின்." என்று இப்பாடல் பாலைத்திணையாம் என்பது போதர எழுதியுள்ளார். அது பாலைத்திணைக்கு ஏற்றலின் என்றது பாலைத்திணைக்குத் தெய்வம் கொற்றவை என்ற கருத்தாற் கூறினார் போலும். அவ்வாறு கருதியிருப்பின் அஃதும் இவர் கருத்திற்கு முரணானதே யாகும். என்னை? தொல்காப்பிய அகத்திணையியல் ஐந்தாம் சூத்திரத்தில், இவரே, கருப்பொருளாகிய தெய்வத்தை முதற்பொருளோடு கூறியது, அவை வந்த நிலத்தின் பயத்தவாய் மயங்குமாறுபோல மயங்காது இதுவே யென்றற்கும், கருப்

பொருளுடைத் தெனப்பட்ட பாலைக்குத் தெய்வத்தை விலக்கு தற்கும் என்றுணர்க'' எனப் பாலைத்திணைக்குத் தெய்வ மின்மையை விளக்கி யுண்மையான் என்க.

நச்சினார்க்கினியரின் இக்கருத்துக்களை நோக்கும்போது நெடுநல்வாடை இன்ன திணைக்குரிய பாடல் என்று அறுதி யிட்டுக்கூற எத்துணையோ நாட்கள் ஆராய்ச்சி செய்துள்ளார் என்பதும் அத்தகைய நெடிய ஆராய்ச்சி செய்தும் வெற்றிகாண முடியாது குழப்பமெய்தி யிருக்கின்றார் என்பதும் அக் குழப்பம் காரணமாகத் திணையில் துணிவு பிறவாது வாகைத்திணை என்றும் வஞ்சித்திணை யென்றும் பாலைத்திணை யென்றும் கூறியதோடு கூதிர்ப்பாசறை என்றும் கொற்றவைநிலை என்றும் துறையிலும் துணிவு பிறவாது கூறிச் சென்றுளார் என்பதும் தெளியலாம்.

## நெடுநல்வாடை புறத்திணைப்பாடலா ?

இனி, நச்சினார்க்கினியர் 'இப்பாட்டு அகமாகாது' என்பதற் குக் கூறிய காரணத்தை ஆராய்வோம்.

“ மக்க ணுதலிய அகனைந் திணையும்
சுட்டி யொருவர் பெயர்கொளப் பெறாஅர்'' (அகத்திணை - ருச)

என்று தொல்காப்பியர் கூறியுள்ள விதியின்படி அகத்திணைப் பாடல்களில் தலைமக்களின் இயற்பெயர் வரலாகாது என்பதுதான் அவர்காட்டும் சான்று. இது எல்லோர்க்கும் உடன்பாடேயாகும். இத்தகைய வரம்பு வேண்டியதே. ஏனெனின் ? இன்ன காலத்து இன்னவிடத்து இப் பெயருடையோர் இன்பத்துறைகளில் ஈடு பட்டிருந்தார் என்று எல்லோரும் அறியுமாறு இயற்பெயர் கூறி அறிவிப்பது சிறந்ததன்று. இக்காலத்தும் உண்மையாக நிகழ்ந்த நிகழ்ச்சிகளைச் சிறுகதைகளாகவோ பாடல்களாகவோ செய்ய விரும்புவோர் அந் நிகழ்ச்சிக்குரியோரது இயற்பெயர் கூறாது புனைபெயரான் கூறிச் செல்வதும் இக்கருத்தானேயாம். மேலைச் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர், “மக்களே தலைமக்களாகக் கருதுதற்குரிய நடுவண் ஐந்திணைக் கண்ணும், திணைப்பெயரான் கூறினன்றி ஒருவனையும் ஒருத்தியையும் விதந்து கூறி அவரது இயற்பெயர் கொள்ளப் பெறார்'' என்று பொருளெழுதியுள்ளார். “இது நாடக வழக்குப்பற்றி விலக்கியது'' என இயற்பெயரை விலக்கியதற்குங் காரணமும் வரைந்துள்ளார்.

இங்குக் காட்டிய தொல்காப்பியச் சூத்திரத்தும் அதற்கு நச்சினார்க்கினியர் எழுதியுள்ள உரையகத்தும் அகன் ஐந்திணை யில் தலைமக்கள் இயற்பெயர் கூறலாகாது என்பது பெறப்படு கின்றதே யன்றிச் சுட்டிப்பெயரோ காதிப்பெயரோ ...

என்பதும் தாரும் ஆறும் கூறலாகா தென்பதும் குறிப்பினும் குடிப்பெயர் கூறலாகா தென்பதும் பெறப்படவில்லை என்பது தெளிவு. இம் முறையையுளங் கொண்டு நெடுநல்வாடையை நோக்கின்,

'வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகம்' (கஎசு) என்பது தொல்காப்பியர் கூறிய விதிக்கும் அவ்விதிக்கு நச்சினார்க்கினியர் உரைத்த உரைக்கும் மாறுபட்டதாகத் தோன்றவில்லை என்பது தெளிவு. ஆயின், "பாண்டியன் அடையாளப் பூவாகிய வேம்பு கூறப்படுதலின் தலைவன் பாண்டியன் என்பது பெறப்படுகின்றது ஆதலால் அகப்பாட்டன்று" என்பது நச்சினார்க்கினியர் கருத்து. நெடுநல்வாடைத் தலைவன், நள்ளிரவிலும் பள்ளி கொள்ளாது பாசறைக்கண் விழுப்புண் பட்டோரைக் கண்டு உரையாடச் செல்லும்பொழுது அவன் சேனை முதல்வன் அப்புண்பட்டோரை முறைமுறை காட்டுகின்றான். அவன் கையில் வேல் காணப் படுகின்றது. அவ் வேலின் தலையில் வேப்பமாலை சூட்டப் பட்டுளது. என்பதை,

"வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகமொடு
முன்னோன் முறைமுறை காட்ட"

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. அவ்வளவே யொழிய தலைவன் வேப்பமாலை சூடியுள்ளதாகக் கூறப்படவில்லை. தலைவன் இயற்பெயரும் கூறப்படவில்லை. குடிப்பெயர்தானும் கூறப்படவில்லை.

சேனைத்தலைவன் வேலில் வேம்பு சூடியிருத்தல் கொண்டு தலைவன் பாண்டியன் என்றுணர்வது முடிந்த முடிபாகாது. பாட்டின் கீழ்க்குறிப்பில் காணப்படும், "பாண்டியன் நெடுஞ் செழியனை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடிய நெடுநல்வாடை" என்ற தொடரால் பாண்டியன் என்பதை யுணர்கின்றோம் என்பதுண்மை. படைத்தலைவன் வேலில் வேம்பு சூடியிருத்தலைக் கூறியதாலன்று. அடையாளமாலை வேந்தர்க்கே யன்றி அவ்வேந்தர்வழி நிற்கும் சிற்றரசர்க்கும் உரித்தாகக் கூறப் படுதலுண்டு. சேரவேந்தர்க்குரிய பனம்பூமாலை அதியமான் நெடுமானஞ்சியும் சூடியிருந்ததாக ஒளவையார் பாடியுள்ள

"ஈகையங் கழற்கால் இரும்பனம் புடையல்
பூவார் காவிற் புனிற்றுப்புலால் நெடுவேல்
எழுபொறி நாட்டத் தெழாஅத் தாயம்
வழுவின் றெய்தியும் அமையாய்" (புறநா - ௯௯)

என்ற புறப்பாட்டுப் பகுதியான் அறிக. இம்முறையால் பாண்டியனுக்குரிய வேம்பு மாலையும் அவன் வழி நிற்கும் வேறொ

பெருமையைச் சொல்லுவதாகவும் கொள்ளலாம். (தமர்விநா) அந்த ரக்ஷணைச் செயலையே தேவவைத்யர்களாக ப்ரஸித்திபெற்ற அச்விநீ தேவதைகளும் அடைகிறார்கள். மழைபெய்து இவ்வுலகை ரக்ஷிப்பவனாகையாலே வருணனையும், வைத்யம்செய்து தேவநலகை ரக்ஷிப்பவராகையாலே அச்விநீ தேவதைகளையும் எடுத்த இது, மற்றும் உலகில் காணப்படும் ரக்ஷகர்களனைவர்க்கும் உபலக்ஷணம். உலகில் ரக்ஷகர்களாகச் சொல்லப்படுமவர்களிடமுள்ள ரக்ஷணா தர்மமெல்லாம் இவனுடையதே எனகை.

"ராஜாவான வருணனும், அச்விநீதேவர்களும் பகவானுடைய ரக்ஷணச்செயலை அடைகிறார்கள்" எனகிறது, அவர்களும் அவனுடைய ரக்ஷணச்செயலுக்கு விஷயமாவதைச் சொல்லுகிறதாய், ரக்ஷகர்களாய் நினைக்கப்படும் தேவர்களும் அவனுக்கு ரக்ஷ்யர்களாகையாலே ஸர்வரக்ஷகன் அவனே என்று முடிவுகட்டுவதாகவும் கொள்ளலாம்.

அன்றிக்கே வேறுவிதமாகவும் பொருள்கொள்ளலாம. (மாருதஸ்ய) மருத்துக்களான ருத்விக்குகளின ஸமூஹத்தையுடையவனுடைய; அல்லது தேவர்களோடு ஸம்பந்தமுடையவனுடைய; அதாவது:—

"தே₃வாந் ப₄ாவயதாநேந தே தே₃வா ப₄ாவயந்து வ:।
பரஸ்பரம் ப₄ாவயந்த: ஶ்ரேய: பரமவாப்ஸ்யத₂॥" [கீதை]

[தேவர்களை யஜ்ஞத்தால் ஆராதியுங்கள்; அந்த தேவர்கள் (மழை முதலானவற்றாலே)உங்களை திருப்தி செய்யட்டும். இப்படி ஒருவருக்கொருவர் திருப்திசெய்வித்துக்கொண்டு சிறந்த நன்மையை அடையுங்கள்] என்று சொல்லப்பட்ட ஸம்பந்தமுடையவனுடைய. (வேத₄ஸ: அஸ்ய) மேதாவியான இந்த யஜமானனுடைய. (தம் க்ரதும்) ப்ரஸித்தமான யஜ்ஞத்தை; யஜ்ஞஸ்வரூபியான விஷ்ணுவை என்றபடி. 'யஜ்ஞோ வை விஷ்ணு:' என்று ஓதப்படுகிறதன்றோ. (வருண:—அஶ்விநா—ஸசந்தே) வருணன், அச்விநீதேவர்கள் முதலான தேவர்களனைவரும ஸேவிக்கிறார்கள். வருணனையும், அச்விநீதேவர்களையும்சொன்னது, அஷ்டவஸுக்கள், ஏகாதசருத்ரர்கள், த்வாதசாதித்யர்கள் முதலிய ஸகலதேவர்க்கும் உபலக்ஷணம்

"எண்மவர் பதினொருவர் ஈரறுவர் ஓரிருவர்
வண்ணமலரேந்தி வைகலும்—நண்ணி

தாகிய வையையாறுகிய குறிப்பினால் பாண்டியன் என்பது பெற வைத்த கலிப்பாட்டு அகப்புறம் ஆகும்போது இவையுள்ள பிறரும் சூடுதற்குரிய வேம்பு கூறிய நெடுநல்வாடை அகப்புறமு மாகாது புறத்திணையாயது என்பது பொருந்துமா ?

குறிப்பால் பாண்டியன் தலைவன் என்று பெறப்படுதல் மேற்கூறிய ஈரிடத்தும் ஒத்திருந்தும் ஓரிடத்துப் புறம் என்றும் பிறிதோரிடத்து அகப்புறம் என்றும் கூறியது முரணுமாறறிக. மேலும் கலித்தொகையில் வரும் "வையைதன் நீர் முற்றும் புரிசை சூழ் புனலூரன்" என்பதில் ஊரன் என்ற திணைப்பெயர் வந்துளது. இயற்பெயர் ஏதும் வரவில்லை. ஆற்றின் பெயரால் பாண்டியன் என்பதைக் குறிப்பால் உணரலாம் அவ்வளவே. நெடுநல்வாடையில் ஆறு கூறப்படவில்லை. ஆயின் தார் கூறப் படுகின்றது மேற்காட்டிய விதியில் தலைமக்கள் இயற்பெயர் கூற லாகாது என்று மட்டும் விளக்கிய நச்சினார்க்கினியர், மருதக் கலியிலும் நெடுநல்வாடையிலும் உரையெழுதும் பொழுது அதை மறந்து, இயற்பெயர் கூறப்படாத—குடிப் பெயரைக் குறிப்பால் பெறவைத்த அப் பாடல்களை அகப்பாடல்களாகக் கொள்ளாமல் அகப்புறம் என்றும் புறத்திணையாம் என்றும் கூறியுள்ளமை பொருந்தாதென்பது கூறவும் வேண்டுமோ? குடிப் பெயரானும் அகப்பொருள் தலைவன் கூறப்பெறுன் என்பதற்கு விதி யாண் டுளது? அங்ஙனம் கூறின் அப் பாடல் அகப் புறம் ஆகும் என் பதற்குத்தான் விதியாண்டுளது? தலைவனுடைய தாரும் ஆறும் கூறினும் அகமாகாது என்பதுதான் எவ்விதியால் பெறப் படுமோ? இங்ஙனம் நச்சினார்க்கினியர் கூற்றை ஆராய்ந்து பார்க் கின், தொல்காப்பியச் சூத்திரத்தில் அவர் கூறிய உரையோடு நெடுநல்வாடை முன்னுரையும் மருதக் கலியின் உரையும் முர ணுதல் நன்கு புலப்படும். அம் முரண்பாட்டை நீக்கித் தொல் காப்பியர் கூறியுள்ள விதியையும் அதற்கு நச்சினார்க்கினியர் உரைத்த உரையையும் மேற்கொண்டு நோக்குகின்ற பொழுது, நெடுநல்வாடை அகத்திணைப் பாடலே என்று கொள்வதில் இழுக் கில்லை என்பது பெறப்படும்

'வேம்பு தலையாத்த' என்ற குறிப்பால் பாண்டியன் குடி பெறப்படுதலின் இந் நெடுநல்வாடை புறத்திணையாகுமாயின் சாதியைக் குறிப்பால் விளக்கும் பாட்டுக்களும் அகமாகாமல் புறமாதல் வேண்டும்.

"தாமரைக் கண்ணியைத் தண்ணறுஞ் சாந்தினை." (கலி. ௩௨)

"முனிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்." (குறுந். ௧௬௭)

என்ற அடிகளையுடைய பாடற் பகுதிகளை எடுத்துக்காட்டி-(அகத்—உச-ரு) இது பார்ப்பானையும் பார்ப்பனியையும் தலைவராகக் கூறியது என்றும்,

"வருதும் என்ற நாளும் பொய்த்தன." (அகநா. கசச)

என்று தொடங்கும் பாடலைக்காட்டி "இம்மணி மிடை பவளத்து வேந்தன் தலைவனுயினவாறும், தான் அமரகத்தட்ட செல்வத்தையே மிக்க செல்வமாகக் கருதற்குரியார் அரசவருணத் தலைவியே என்பது முணர்க," என்றும், இந் நச்சினார்க்கினியரே விளக்கியுள்ளார். அகத்திணையியலில் இதில் 'தாமரைக்கண்ணியை எனப் பார்ப்பார்க்குரிய அடையாளப் பூக் கூறி யிருப்பதால் பார்ப்பனத் தலைவன் என்பது குறிப்பால் தெரிகிறது' என்பது அவர் கருத்து. திணைப் பெயரானன்றி அகபொருள் தலைவர்கள் சுட்டப் பெறூர் என்பது விதியாயின் குறிப்பால் சாதியை யுணர்த்தும் இப் பாடல்களும் அகப்பாட்டாதல் கூடாது. இவற்றை அகப்பாடல்கள் என்றே நச்சினார்க்கினியர் கொண்டுள்ளார் ஆதலின் குறிப்பால் குடியுணர்த்தும் நெடுநல்வாடையும் அகப்பாட்டாகும என்பது திண்ணிதாய் நிலைபெறுதல் காண்க.

மேலும், பொக்கமில் புலவராம் நக்கீரனர், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுடைய வீரச் சிறப்பை அகத்திணைப் பாடலில் வைத்து விளக்க வேண்டும் என்ற கருத்தால் இந் நெடுநல்வாடையை யியற்றியுள்ளார் என்பதை உளங்கொளல் வேண்டும். அப் பாடலில் பாண்டியன் இயற்பெயர் கூறின் அகத்திணை ஆகாமல் போகுமே என்று அஞ்சி அது கூறுது விடுத்துள்ளமையும் வேப்ப மாலையும தலைவனுக்குரியதாகக் கூறுது படைத் தலைவன் வேலுக்குரியதாகவே கூறியுள்ளமையுட் ஆழ்ந்து நோக்க வேண்டும். அவ்வாறு நோக்கின் நக்கீரர் கருத்து யாது என்பது நன்கு புலப்படும். அகத்திணைக்குரிய தலைவனைப் பாண்டியனை வைத்துப் புகழ வேண்டும் என்ற கருத்து நக்கீரர்க்கு இல்லையாயின், நச்சினார்க்கினியர் கூறுவது போலப் புறத்திணையாக அமைக்க அவர் விரும்பியிருந்தால், மாங்குடி மருதனர் பாடிய மதுரைக்காஞ்சிபோல அவன் இயற்பெயரும் பிறவும் பெறப்படப் புறத்திணையாகவே பாடியிருப்பர் என்பது தெளிவு. நுண்ணறிவுடையோரே பாண்டியன் இப் பாடற்றலைவன் என்பதை நோக்கியுணரும் வண்ணம் வேப்ப மாலையைப் படைத்தலைவனுக் குரியதாகக் கூறவேண்டிய நிலையும் அவர்க்கு ஏற்பட்டிராது. புறத்திணையில் இயற்பெயரும் மாலையும் பிறவும் எல்லாம் வெளிப்படையாகக் கூறலாமன்றே? தம்மால் புகழப்படும் தலைவன் இயற்பெயரைக் கூறுமையோடு அவன்

மாலையையும் அத் தலைவனுக்குரியதாகக் கூறுது நக்கீரர் பாடியது அகத்திணைக்குரிய விதி வரம்புக்கு உட்பட வேண்டும் என்னும் எண்ணத்தாலாகும்' என்பதை எளிதினுணரலாம். இவ்வாறு அகப் பாட்டில் பாண்டியன் நெடுஞ்செழியனை வைத்துப் புகழ வேண்டுமென்று விரும்பி அதற்கு இழுக்கு நேராவண்ணம் வேப்ப மாலையைத் தலைவனுக் குரியதாகக் கூறுது படைத்தலைவனுக்கே கூறிக் குறிப்பினுல் பாண்டியன் தலைவன் என்பதுணர வைத துள்ள நக்கீரனாரின் நுண்ணறிவை யுளங் கொள்ளாது நச்சினார்க் கினியர், 'இப் பாடல் அகமாகா தாயிற்று' என்று கூறியது சிறிதும் பொருந்தா தென்பது தெளிவு.

## நெடுநல்வாடை அகத்திணைப்பாடலே !

இந் நெடுநல்வாடையில் முல்லைத் திணைக்குரிய காரும் மாலையுமாகிய கால முதற் பொருள்களும் காடாகிய நில முதற் பொருளும் கூறப்படுகின்றன. முல்லைக்குரிய கோவலரும் ஆனிரையுமாகிய கருப் பொருள்களும் கூறப்படுகின்றன. "இன்னே வருகுவர் இன்றுணையோர்' எனச் செவிலியர் தலைவியைத் தேற்றுகின்றார்கள். தலைவியும் கண்ணீர்த் துளிகளைக் கையால் துடைத்துத் தெறித்துவிட்டுத் தன் துயரைக் குறிப்பால் காட்டி வேறென்றுங் கூறுது அமைந்திருக்கின்றாள். இதனால் முல்லைக்குரிய இல்லிருத்தல் என்னும் உரிப்பொருள் பெறப்படுகின்றது. தலைவனும் பாசறையில் இருக்கின்றான். இவ்வாறு முல்லைத் திணைக்குரிய முதல் கரு உரி என்ற முப்பொருளும் குறைவறப்பெற்று விளங்குகின்ற இப் பாடல் முல்லைத் திணைப்பாட்டே என்பது தேற்றமாதல் காண்க.

இனி, நச்சினார்க்கினியரும் இவ்வமைப்புகள் நிறையப் பெற்றுக் கூதிர்க்காலமும் பாசறையும் வந்துள்ள,

"மழையில் வான மீனணிந் தன்ன
குழைபமல் முசுண்டை வாலிய மலர

கூதிர் நின்றன்றால் பொழுதே காதலர்,
.........................................
வெஞ்சின வேந்தன் பாசறை யோரே." (அகநா. உசுச)

என்ற பாடலை அகத்திணையியல் பன்னிரண்டாம் சூத்திரத்தில் எடுத்துக்காட்டி "இம்மணி மிடை பவளத்துள் முல்லையுள் கூதிர் வந்தது," என்று கூறியுள்ளமையாலும் புறத்திணையியலுள் (எகூ-சூ) "இனி, இருத்தற் பொருள் முல்லை என்பதே பற்றிப் பாசறைக்க ணிருத்தலால் 'பாசறை முல்லை' எனப் பெயர் கூறு

வாருமுளர்" எனப் பிறர் கூற்றாகக் கூறி மறுப்பு யாதும் கூறாமல் விடுத்துள்ளமையால் கூதிர்ப்பாசறையை முல்லையென்று கொள்ளுதலும் பொருந்தும் எனபது அவர் கருத்தெனப் புலப்படுதலாலும், கூதிர்ப்பாசறை வந்துள்ள இந் நெடுநல்வாடை முல்லைத் திணைப்பாட்டு என்றலே பொருத்தமுடைத்து என்பது நச்சினார்க்கினியர்க்கும் கருத்தாதல் காண்க.

மேலும், கூதிர்ப் பாசறை வந்துள்ள வாகைத் நச்சினார்க்கினியரும் இளம்பூரணரும் காட்டியுள்ள பாட்டு,

"கவலை மறுகிற் கடுங்கண் மறவர்
உவலை செய்கூரை யொடுங்கத்—துவலை செய்
கூதிர் நலியவும் உள்ளான் கொடித்தேரான்
மூதின் மடவாள் முயக்கு." (பு. வெ. வாகை. ௧௫)

என்பதாகும். இப் பாடலில், பாசறையிலிருக்கும் தலைவன், தலைவியை நினையாதிருக்கின்றான் என்பது கூறப்படுகின்றதேயன்றி நெடுநல்வாடையில் கூறியிருப்பது போலத் தலைவியின் இயல்பு கூறப்படவேயில்லை என்பதை நோக்க வேண்டும். தலைவன், அகப்பகையாகிய காமத்தை வென்றான் என்று கூறுவதால் இப் பாடல் வாகையாகலாம். இதை முல்லைத் திணையென்று எவருங் கூறார். நெடுநல்வாடை, வாகைத் திணையாக வேண்டுமாயின் இப் பாடல் போன்று தலைவன் இயல்புமட்டுமன்றோ கூறியிருத்தல் வேண்டும்?

அவ்வாறின்றித் தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலை கூறுமுகத்தால் தலைவியின் கட்டிலும், கோயிலும், வாயிலும், நகரநெடுந் தெருக்களும், நகரைச் சூழ்ந்துள்ள நானிலங்களின் இயல்புகளும் கூதிர் காலத்துக் குளிரும், அக் குளிரால் உயிர்கள் உறும் துன்பமும் ஆகியவற்றை விவரித்து நூற்றறுபத்தேழு அடிகளால் கூறி ஏனை இருபது அடிகளில் பாசறை யியல்பும் ஓரடியில் செவிலியின் வேண்டுகோளும் கூறியுள்ள இப் பாடல் வாகைத் திணையாமா?

"வஞ்சி தானே முல்லையது புறனே." (புறத். ௬)

என்று தொல்காப்பியர் கூறியுள்ள கருத்துணர்ந்து நக்கீரனார், முல்லை என்னும் அகத்திணையையும் வஞ்சி யென்னும் புறத்திணையையும் ஒரே பாடலில், அகங்கை புறங்கைபோல அமைத்துக் காட்ட விரும்பி முன்னர் முல்லைத் திணையைக் கோப்பெருந்தேவிபால் வைத்து விளக்கிப் பின்னர் அம் முல்லைக்குப் புறமாகிய வஞ்சித் திணையைத் தலைவன்பால் வைத்து விளக்கியுள்ளார் என்பதை அப் பாடலின் அமைப்பைக் கண்டு தெளியலாம்.

இப் பாடல் முல்லைத்திணை என்பது விளக்கவே 'பொய்யா வானம் புதுப்பெயல் பொழிந்தென' எனக் கார்காலமாகிய முதற்பொருளையும் 'கொடுங்கோற் கோவலர்' என முல்லைக் குரிய கருப் பொருளையும் முதற்கண் கூறியுள்ளமை காண்க.

அகத்திணையும் புறத்திணையும் ஒருங்கு வைத்து ஒரு பாட லால் விளக்கும் தன்மையைக், கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடிய பட்டினப்பாலையால் நன்குணரலாம். 'வாகைதானே பாலையது புறனே' என்ற தொல்காப்பியச் சூத்திரத்திற் கியைய, அப் பாடலில் முதற்கண் பிரிதனிமித்தமாகிய பாலையை விளக் கிப் பின்னர்த் திருமாவளவன் தெவ்வர்க் கோச்சிய வேலைக்கூறு முகத்தால் அவன் பெற்ற வாகையை விளக்கியுள்ளமை காண்க.

இதுகாறுங் கூறியவாற்றால் நெடுநல்வாடை புறத்திணை யாகிய வாகைத்திணை ஆகாதென்பதும் அகத்திணையுள் முல்லைத் திணையாம் என்பதும் முல்லையைக் கூறுமுகத்தால் அதற்குப் புற மாகிய வஞ்சித் திணையையும் தலைவனிலை விளக்க உடன்கூறியுள் ளார் என்பதும் தொல்காப்பியத்திற்கு உரையெழுதும் பொழுது பொருத்தமாக உரை வகுத்து உதாரணமுங் காட்டிய நச்சினார்க் கினியர் ஏதோ மயக்கத்தால் மாறி எழுதியிருக்கின்றார் என்ப தும் விளங்கும்.

## பெருந்திருவாளர்

## சி. எஸ். இரத்தினசபாபதி முதலியாரவர்கள் பிரிவு

கோவை திரு. சி. எஸ். இரத்தினசாமி முதலியாரவர்கள் 15-9-56-ஆம் நாள் திடுமென இறைவன் திருவடிப் பேறுற்றார்கள். இவர்கள் மறைவு தமிழகத்துக்கு ஈடுசெய்ய வொண்ணாத பேரிழப் பாகும். இவர்கள் பெரும் பிரிவுக்கு பெரிதும் வருந்துகின்றோம். எம் வருத்தத்தை அவர்கள் குடும்பத்தார்க்கு வருந்தித் தெரிவித்துக்கொள்

இவர்கள் நம் தமிழ்மொழிக்கும், தமிழிசைக்கும் அருந்தொண்டுகள் பல புரிந்துள்ளார்கள். உலகில் மக்கள் தோன்றுவதும் மறைவதும் இயல்பு. ஆனால் செயற்கரிய செய்யும் திறலோர்கள் தம் பருவுடல் நீப்பினும் புகழுடல்பெற்று என்றும் பொன்றாது வாழ்வோராவர்.

இவர்கள் பெருஞ் செல்வக் குடியில் தோன்றினாலும் பொருள் தொகுப்பதையே கருத்தாகக் கொள்ளாமல் பல அறவழிகளில் பெரும் பொருள் ஈந்துள்ளார்.

இத்தகைய பெரியார் நல்லுயிர் இறைவன் திருவடி இன்பில் திளைப்பதாக.

# தென் குமரி

[திரு. கரு. நாகரத்தினம், கணியூர்]

குமரி என்றவுடன் கன்னியா குமரி முனையே யாவர் உள்ளத்திலும் தற்போது நின்று நிலவும். இருள் செறிந்திருப் பின், குமரி இருட்டு என்றும், காய் ஈனு வாழையைக் குமரிவாழை என்றும் அருகி வழங்குகின்றோம். திருமணம் ஆகாத கன்னி யரைக் குமரி என்றே வழங்குகின்றோம். இன்னும், கன்னி ஞாழல், கன்னி மதில் எனப் பல படியாக இலக்கியங்களிலே வழங்கப்படுமாறு அறிக. கன்னியா குமரி முனை என இரு பொருட்டொடர் அடுக்காது கன்னி முனை, குமரி முனை என்றும் வழங்குகின்றனர். ஆங்கிலத்திலும் (Cape Comorine) (Virgin-daughter) கன்னி என்ற பொருள்தரும் சொற்களாலேயே அமைத்து வழங்குகின்றனர்.

முனை என்ற சொல் குமரியோடியைந்து 'குமரிமுனை' என வழங்கிய வழக்காறு பிற்காலத்தே தான் எழுந்தது. என்னை? கடல்கோளுக்குப் பின்னர்த்தோன்றிய சங்க நூல்களெல்லாம் தென்குமரி, குமரி என்பவைகளையே வழங்குகின்றனவே தவிர குமரி முனை என்று குறித்ததாக அறிய முடியாது வேங்கடம், குமரி யாண்டுள்ளது என்பார்க்கு அறியக் காட்டுவதற்கு வட வேங்கடம், தென்குமரி என்று ஆசிரியர் அடைசொற் புணர்த் தார் என்பதை, 'வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்உலகத்து' என்று பனம்பாரனாரால் பாயிரம் செய்யப் பட்ட தொல்காப்பியத்திற்கு உரை வகுத்த நச்சினார்க்கினியர் உரையால் உணரலாம்.

முப்பெருங் கடல்கள் கூடும் இடம் குமரி முனையே. பண்டு இதே கடல்தான் ஆர்த்தெழுந்து எத்தனையோ தமிழ் நூல்களைக் கொள்ளைகொண்டு சென்றுவிட்டதே! கதிரவன் மறைவதையும், திங்கள்மண்டிலம் தோன்றுவதையும் ஒரே சமயத்தில் இங்குத் தான் காணமுடியும். அக் காட்சி எழில் மிக்க காட்சி!

தமிழ் கூறும் நல்லுலகத்தைப் பொறுத்தமட்டில், தென் குமரி என்பது தெற்கே உள்ள குமரி முனையைக் குறிக்கும். ஆனால், ஆஸ்திரேலியாவிலும், தென் ஆப்பிரிக்காவிலும் இருப் பவர்கட்கு இக் குமரிமுனை தென் குமரி ஆகாது. எனவே, ஆசிரியர்கள், உரையாசிரியர்கள் முதலிய பல்லோராலும் செப்பம் செய்யப்பட்ட நூல்களெல்லாம் வடவேங்கடம் - தென்குமரி

ஆயிடைப்பட்ட இமிழ்கடல் வேலித் தமிழ் நன்னாட்டிலேதான் பொலிவுற்றன என்பது போதரும்.

'ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்
தென்னங் குமரியொ டாயிடை
மன்மீக் கூறுநர் மறந்தபக் கடந்தே.' (பதிற். ௧௧)

என்றும்,

'வடதிசை எல்லை இமய மாகத்
தென்னங் குமரியொ டாயிடை யரசர்
முரசுடைப் பெருஞ்சமம்...' (பதிற். ௪௩)

என்றும் பதிற்றுப்பத்து கூறுகின்றது. இது தென்னன் குமரியாக இருந்து கால வழக்கால் தென்குமரி என்று ஆயிற்று; பின, இலக்கண-இலக்கியங்களிலும் இவ்விதமே ஏறிவிட்டதுபோலும் என்று கருத இடம் தருகின்றது. ஏனெனில், தொன்றுதொட்டுக் குமரி சூழ்ந்த பகுதிகளைப் பாண்டியர்களே ஆண்டுவந்தனர் என்பதையும், தென்னன் என்ற பெயர் அவர்கட்கே உரித்து என்பதையும நாமறிவோம். கன்னிபகவதி என்பது குமரிக் கோயில் தெய்வத்தின் திருப்பெயராகும். கி. பி. 12-ஆம் நூற்றாண்டில், பராந்தகதேவ பாண்டியன் தான் பிறந்த தைப்பூச நாளன்று ஆகும செலவுகட்காக நிலத்தை இக் கோயிலுக்குத் தானமாகக் கொடுத்தான என்பதைக் "கன்னி பகவதியார் சாசன"த்தின் மூலம் அறியலாம். இச் சாசனம், "ஸ்வஸ்திஸ்ரீ திரு வளர செயம் வளர தென்னவர் தம் குலம் வளர" என்று தொடங்குகின்றது. இது கிடக்க.

பாண்டியன், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை, நெட்டிமையார் என்னும் நல்லிசைப் புலவர்,

'செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே.' (புறம். ௯)

என்று பாராட்டுகின்றார். யாற்று நீரும், ஊற்று நீரும், மழை நீரும் உள்ளமையான் முந்நீர் என்பது கடலினையே குறிக்கும். அல்லது, மண்ணைப் படைத்தல், காத்தல், அழித்தல் எனும் முத்தொழில் உடைமையான் முந்நீர் என்பது கடலுக்காயிற் றென்றுமாம். ஆங்கு, ஆண்டுதோறும் கடல்தெய்வத்திற்கு விழா நிகழ்ந்தது. விழா நிகழ்ச்சி நின்றதால் கடல்கோள் ஏற்பட்டது. நோயும், துன்பமும் பெருகிக்கொண்டே இருந்தது. பின் அது நீங்கியது என்பதை "அன்று தொட்டுப் பாண்டிய நாடு மழை வறம் கூர்ந்து வறுமை எய்தி வெப்புநோயும், குருவும்

தொடரக் கொற்கையில் இருந்த வெற்றிவேற் செழியன் நங்கைக்குப் பொற்கொல்லா ஆயிரவரைக் கொன்று களவேள்வியால் விழவொடு சாந்தி செய்ய, நாடு மலிய மழைபெய்து நோயும் துன்பமும நீங்கியது,” என்ற சிலப்பதிகாரத்தின் உரைபெறு கட்டுரையால் அறியலாம்.

“புகார் நகரம் கடல் கொள்வதற்குக் காரணம், நாகநாட்டு மன்னன் மகள் பீலிவளை என்பவள், மணிபல்லவத் தீவினை எய்தித் தான் ஈன்ற குழவியைச் செட்டி கைத்தந்து புகார் நகரத்திற்கு விடுத்தாளாக, கலம் கடலில் கவிழ்ந்து போயிற்று. கலம் கெடுத்தோன் மன்னற்குக் கூற, அவன் அயர்வுற்றுத் தன் மகனைத் தேடிச் செல்லுதலிலே காலம் கடத்தினுகைத் தனக்குரிய இந்திர விழா எடுக்காது போனதால் மணிமேகலா தெய்வம் இட்ட சாபத்தால் புகார் கடல் வயிறு புக, யானும், சுதமதியும், மாதவியும் நின் பொருட்டுக் காஞ்சியை யடைந்தோம்,” என அவறண அடிகள் மணிமேகலைக்குக் கூறுகின்றார். மணிமேகலை நூலுள் பன்முறை இது வலியுறுத்தப் பெறுகின்றது. அதை ஆண்டுக் காண்க.

கொண்டாடிக் கொண்டிருந்த விழா இடையில் கொண்டாடாது நிறுத்தப்பட்டால் கடல்கோள் நிகழும் என்பது பண்டை வழக்கு. இதேபோல் விழா எடுக்காது போனதால்தான் குமரியும கடல் வயிறு புக்கது என ஊகிக்கப்படும். கடல்கோளில் எஞ்சியது தென்னிலங்கை ஒன்றே. இராமாயண கால முதல் இது கடல் சூழ்ந்த தீவாகவே விளங்குகின்றது. ஆயினும், அதன் வடிவம் மாறித்தான் இருக்கவேண்டும். கடல்கோளுக்கு முந்தி குமரி சூழ்ந்த பகுதியாகவோ அல்லது அதற்குத் தெற்கே இருந்த நிலப்பரப்பாகவோ இருக்கலாம். ஏனெனில், மனிதப் படைப்பு இங்கிருந்துதான் தொடங்கியது என கா. சு. பிள்ளை முதலிய வரலாற்றுப் பேராசிரியர்கள் குறித்துச் சென்றுள்ளனர். இதுவும் ஒருபுறம் கிடக்க.

புறநானூறு சுஎ-ஆம் பாட்டில் கோப்பெருஞ் சோழனை,

> “யாம் கையறு பினைய
> குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி
> வடமலைப் பெயர்குவை யாயின்.”

என்று பிசிராந்தையார் பாடுகின்றார். கடலை ஒட்டிய பகுதி கடல்துறை ஆயவாறு போல, குமரியை ஒட்டிய பகுதியே குமரித் துறை ஆகும். தண்ணீரின்றித் துறை ஏற்படுவதில்லை. மலைப் பகுதியாயின் அதற்குத் துறை என்ற பெயர் ஏற்படுவ

தும் இல்லை. எனவே, ஈண்டு துறை என்று குறிப்பனவெல்லாம், குமரி நதியினையே குறிக்கும் என்றறிக. ஏனெனில், குமரி என்பது யாற்றினைக் குறிக்கும் என்ற கொள்கை ஒருபால் நிலவுகின்றது. மற்றொருபால், அது மலையினைக் குறிக்கும் என்பதூஉம் நின்று நிலவுகின்றது. அஃது எவ்வாறு ஆயினும ஆருக!

" ..மாடலன் என்போன்
மாதவ முனிவன் மலைவலங் கொண்டு
குமரியம் பெருந்துறை கொள்கையிற் படிந்து
தமர் முதல் பெயர்வோன்...." (சிலம்பு. கரு: கச

என்று சிலம்பு கூறுகின்றது. மலைவலம்கொண்டு கொள்கையிற் படிவதற்கு மலையாகாமையான் ஈண்டுக் குமரியம் பெருந்துறை என்பது யாற்றினையே குறிக்கும். பிறண்டும் இளங்கோவடிகள்,

" மாமுனி பொதியின் மலைவலங் கொண்டு
குமரியம் பெருந்துறை யாடி மீள்வேன்."
(சிலம்பு, உஎ : ௬அ-௬௯)

" கொற்கைக் கொண்கன் குமரித் துறைவன்
பொற்கோட்டு வரம்பன் பொதியிற் பொருப்பன்."
(சிலம்பு, உ௫ : கக-கஉ)

என்று யாற்றினையே குறித்துள்ளார். அறவண அடிகள் மணிமேகலைக்கு ஆபுத்திரன் திறம் அறிவிக்கும்போது, " வாரணாசிமத்தில் உள்ள அபஞ்சிகன் என்னும் அந்தணன் மனைவி சாலி என்பவள் தீயொழுக்கத்தால் கணவனைப் பிரிந்து குமரியாடச் சென்றாள் ; வரும்வழியில் ஓர் குழவியை ஈன்றாள்," என்று கூறுகின்றார். இதனானும், குமரி என்பது ஓர் யாறே என்பது பெறப்படும்.

" நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாட்டு." (சிலம்பு, அ : க-உ)

என்பதில், தொடியோள் பௌவம்—குமரிக்கடல் என்று கூறினார் அரும்பத உரையாசிரியர். இதற்கு உரை வகுத்த அடியார்க்கு நல்லார், "தொடியோள்—பெண்பாற் பெயரால் குமரி என்பதாயிற்று ; ஆகவே, தென்பாற் கண்ணதோர் ஆற்றிற்குப் பெயராம் என்று கூறியவர், நெடியோன் குன்றமும் தொடியோள் நதியும் என்னாது பௌவம் என்றது தடநீர்க் குமரி வடபெருங் கோட்டின் காறும் கடல் கொண்டொழிதலால் குமரியாகிய பௌவம் என்றார் என்றுணர்க....அஃதற்றாக, வடக்கின்கண் வேங்கட மலை, தெற்கின்கண் குமரிக்கடல் எனக் குறியாற்

கூறினவர் கீழ்பால், மேற்பாற்கு எல்லை கூறாதது என்னையோ எனின், நெடுந்திசையாகிய வடபாற்கு எல்லை குன்றம் என்றும், தென்பாற்கு எல்லை குமரிப்பௌவம் என்றும் கூறினமையால், ஒழிந்த திசைகட்கு ஒழிந்த பௌவம் எல்லையாயிற்று என்பது தாயிற்று. என்னை?

"வேங்கடங் குமரித் தீம்புனற் பௌவமென்
றிந்நான் கெல்லை தமிழது வழக்கே."

என்றார் சிகண்டியாருமாகலின்," என்று கூறியதால் கடல் கோளுக்குப் பின், குமரியாற்றின் பெயர்போக, அப் பெயர் கடலுக்காயிற்று என்பது போதரும். எனவேதான் குமரிக்கடல் என்ற தொடரும் வழங்கலாயிற்று.

கடல்கோளுக்கு முந்திக் குமரிமலை இருந்ததாகவும், கடல் கொண்டது குமரி மலையையே என்றுங் கூறி,

"வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள." (சிலம்பு, கக: க௮-௨௦)

என்ற சிலப்பதிகார அடிகளையே குறிப்பிட்டு, இமயக்கோடு, திருச்செங்கோடு, வெள்ளியங்கோடு முதலிய போன்று குமரிக் கோடென்பது ஈண்டு மலையினையே குறிக்கும் என்பர். கோடு என்பதற்குக் கரை என்றார் அரும்பதவுரையாசிரியர். மலை என்றார் அடியார்க்கு நல்லார். அன்றி, பன்மலை யடுக்கம் என்று ஆசிரியர் அடைச்சொற் புணர்த்தமையானே குமரி,கோடென்பது தானே பெறப்படும். கோடும் என்ற உம்மைச் சிறப்பானே அக் கோட்டினின்றிழியும் யாறும், அது பாயும் பகுதியும் உள்ளடங் கியவாறு உய்த்துணர்ந்து கொள்க.

புலவர்கள், பிறரை வாழ்த்தும்போது யாற்று மணலினும் பலகாலம் வாழ்க என்றே வாழ்த்துகின்றனர். விரிகாவிரி, தண் ஆன் பொருநை, காஞ்சி, பஃறுளி முதலிய யாறுகள் ஆங்ஙனம் வாழ்த்தும்பொருட்டு அவர்கள் நாவை நோக்கி ஓடின. கடல் கோளுக்கு முந்தித் தெற்கே பஃறுளியாறு ஓடியது என்றும், அதனையும் வான்பகை பொறாது கடல் கொண்டது என்னும் மேற்குறித்த சிலப்பதிகார அடி, இறையனார் களவியலுரை முதலியவைகளாலும் அறியக்கிடக்கின்றது.

பஃறுளியாற்றின் தன்மையை, "........நிலந்தரு திருவிற் பாண்டியன் தொல்காப்பியம் புலப்படுத்து இரீயினான். அக் காலத்து அவர் நாட்டுத் தென்பாலி முகத்திற்கு வடஎல்லையாகிய பஃறுளி யாற்றிற்கும் குமரி என்னும் யாற்றிற்கும் இடையே எழு

நூற்றுக்காவதவாறும் இவற்றின் மலிவாமென்ன மலிந்த ஏழ்தெங்க நாடும், ஏழ் மதுரை நாடும், ஏழ் முன்பாலை நாடும், ஏழ் பின்பாலை நாடும், ஏழ் குன்றநாடும், ஏழ் குணகாரை நாடும், ஏழ் குறும்பனை நாடும் என்னும் இந்த நாற்பத்தொன்பது நாடும் குமரி கொல்லம் பன்மலை முதலிய நாடும் காடும் நதியும் பதியும் தடநீர்க் குமரி வடபெருங்கோட்டின்காறும் கடல்கொண்டொழிதலாற் குமரியாகிய பௌவமென்றார் என்றுணர்க" என்று சிலப்பதிகார அடியார்க்கு நல்லார் உரையால் உணரலாம்

இதுகாறும் கூறியவற்றால், கடல்கோளுக்கு முன்பு (கி. மு. நு000) தெற்கே குமரிமலை ஒன்று இருந்ததெனவும், ஆங்கே குமரியாறு பிறந்து தவழ்ந்து வந்தது எனவும், அதன் தெற்கே பஃறுளியாறு ஓடிவந்தது எனவும், இவ்விரு நதிகட்கும் இடையே பல நாடுகள் சிறந்து விளங்கி இருந்தன எனவும், பஃறுளியாற்றினைச் செம்மைப்படுத்திச் செயற்படுத்தியவன் முந்நீர் விழவு கண்ட நெடியோன் (புறம். க) எனவும், வடிவேல் எறிந்த வான்பகை பொறாது பஃறுளியாற்றுடன் பன்மலை யடுக்கத்துக் குமரிக்கோடும் கொடுங்கடல்கொண்ட பின்பும் (கி. மு. கஅ00) குமரித்துறை நெடுங்காலம் மக்கட்குப் பயன் அளித்துவந்தது எனவும், பின்பு காலம் செல்லச் செல்ல அத் துறையினையும் கொடுங்கடல் ஆட்கொண்ட பின்பே (கி. பி. உ00) குமரிமுனை தென்பாலுள்ள எல்லைக்குப் பெயராக அமைந்தது எனவும், இதற்குப் பின்னர் எழுந்த தமிழ்நூல்களெல்லாம் இதனையே தென்எல்லையாகக் கொண்டதெனவும், கன்னி பகவதியார் கோயில் எழுப்பப்பட்டு விழா நடந்துவருகின்றது எனவும் ஊகிக்கப்படும். அறிஞர் பெருமக்கள் நன்கு ஓர்ந்து தெளிவதனைத் தெளிவாராக!

## வழிபாட்டின் முதன்மை

**[திரு. சி. இராசகோபாலாச்சாரியார்]**

பழங்கால வழிபாட்டு முறையைப் பாராட்டிக் கடவுளைத் துதிபாடும் பாட்டுக்களைப் பாடுவதால் கடவுளின் திருமுன்பு நாம் அழைத்துச் செல்லப்படுகிறோம். வீட்டிலுள்ள குப்பை கூளங்களை அகற்ற வீட்டையும் பாத்திரங்களையும் சுத்தி செய்வதுபோல், மனத்திலுள்ள அழுக்கைப்போக்க வழிபாடு உதவும். வழிபாட்டின் மூலம் மன அமைதியும் மகிழ்வும் பெறலாம்.

# ஒழுக்கம்

[வித்துவான், திரு. சு. குமாரஸ்வாமி ஆச்சாரி, எம்.ஏ., மயிலம்]

(செல்வி சிலம்பு-௩௪, பரல்-௨, பக்கம் அ0-இன் தொடர்ச்சி)

சினம் தீமைதருவது, தவறுனது. ஆதலின், சினத்தை அழிக்க வேண்டும் என்பர். வெறுப்புகாரணமாகச் சினம் எழின் அங்ஙனம் கூறுதல் தக்கதேயாம். பிறர் தவறு செய்யுங்கால் இரக்கம் காரணமாக அவர்களைத் திருத்துவான் வேண்டிச் சினத்தலும் உண்டு. அச்சினம் நன்மையாகிய பயனையே தருவதால் ஒழிக்கத்தக்கதன்று. சிறுவர்களை நன்னெறிப் படுத்துவதற்கும் சினம வேண்டியதே. வேட்கை மக்கள் விரும்பும் பொருளைப் பெறுதற்குரிய ஆற்றலையளிப்பது. வேட்கையற்றவன் ஆண்மை யற்றவன். எனினும் வேட்கை அவாவாக மாறுதலால் துன்பம் தருகிறது. அவ் வேட்கையே தன்னலம் கருதா வாழ்க்கைக்கும் துணையாகிறது. நேர்மையான் எழும் சினததைத் தாய்தந்தையர் அறிவர். நேர்மையான விழைவினை (காதலை) நல்ல கணவனறிவான். நேர்மையான் எழும் அவாவினைத் தன்னலமற்ற தலைவன் அறிவான். நேர்மையான் எழும் அன்பைச் சான்றோர் அறிவர். நேர்மையான் எழும் தன்னலத்தினை ஒப்புரவாளன் அறிவான். இந் நெறிகளைப் பொறிவாயிலைந்தவித்தவரே—மன்னுயிரையும் தன்னுயிர்போலக் காண்பவரே அறிந்து கைக் கொளவர்.

**ஐந்தவித்தலின் பயன்**

பொறிவாயிலைந்தவித்தலால் சிக்கன உணர்ச்சி எழுகிறது. சிக்கனம் தன்னலத்துக்காக எழுவது. அச்சிக்கனமே பிறர் நலங்கருதி எழின் அறமாம். சிக்கனமும அறமும் ஒரு பொருளின் முன்புறமும் பின்புறமும் போன்றன. ஒன்றின்றி மற்றொன்று தழைக்காது. அறநெறியிற் பயன்படாது சேமித்து வைக்கப்படுவன அழிந்துபடும என்பது முந்தையோர் கருத்து. ஈயாமைக்கும் வரம்பிலா ஈகைக்கும் இடைப்பட்டது சிக்கனம். விருப்பு வெறுப்பு இரண்டிற்கும் இடைப்பட்ட நிலைமையது சிக்கனம். எப்பொருளால் எய்தும் பயனையும் அடையும்படி செய்யவல்லது சிக்கனம். எப்பொருளும் இன்பந்தரவல்லது என்பதை யறிவுறுத்துவது சிக்கனம். எங்கும் எப்பொருளினும் இன்பம் காணும் நிலையளிப்பதனுல் சிக்கனம் தன்னைத்தானறிதலால் வரும் ஞானத்தின் பயனும்.

தாவரங்களும் தம்மையன்றி மற்றையவற்றிற்கும் பயன் படும் சிக்கனத்தையுடையன. ஒன்று வெளிவிடுகிற வாயு மற்றொன்றிற்கு உணவாகிறது. ஒன்று வேண்டாமென்று ஒதுக்குவது மற்றொன்றிற்கு உணவாகிறது. எப்பொருளையும் சிவமயமாகக் காணும் அறிவின் பயனே சிக்கனமாம். நாம் செய்யும் ஒவ்வொரு வினையும் பயன்தந்தே தீரும் என்பதால் அறச்செயலில் செலவழிக்கும் பொருள் வீணாவதில்லை என்பது புலனும். அவற்றால் வரும் பயனை யடைந்தே திருவோம். ஆகையால் அறச்செயலை வீண்செயலாக (இழப்பாக)க் கருதவேண்டாம். பிறர்க்குப் பயன்படுத்தாமல் சேமித்து வைப்பவை—பதுக்கி வைப்பவை—பயனற்றனவாகவே கழியும். அவற்றைப் பிறர்க்கும் பயன்படும்படி அளிப்பதே நமக்குப் பயன்தருவதாம். ஊழ்வினைபற்றிய உணர்ச்சியே 'பாடுபட்டுத் தேடிப் பயன் நுகராமல் புதைத்து வைக்காதே' என்று நம்மை நல்வழிப் படுத்துகிறது.

**நாணமும் பழியும்**

தான் செய்யத் தகாதவற்றைச் செய்வது தவறு என்ற உணர்ச்சி எழுகிறபோது உள்ள மனநிகழ்ச்சியே நாணம். அவன் தவற்றினை எடுத்துச் சொல்லிப் பிறர் தூற்றுவதே பழித்தலாம். ஒருவனது உள்ளத்தே எழுவது நாணம். அது பற்றிப் புறத்தெழுவது பழி. ஆதலின், 'அகமும் புறமும் ஒன்றே யாம். ஒன்றைவிட்டு ஒன்று என்றும் விலகுவதில்லை,' என்பதை நாம் உணர்தல் வேண்டும். ஒருவனிடத்து அன்பு தோன்றின், அவனைச் சூழ்ந்தாரிடத்தும் அன்பு தோன்றுகிறது. ஒருவனிடத்துப் பகை தோன்றின், அவனைப் பிறர் பகைக்கின்றனர். ஒருவர்பாலெழும் உணர்ச்சியும் எண்ணமும் அச் சமயத்தேயே பிறரிடத்தும எழுவதால், உள்ளும் புறமும் ஒற்றுமைப்பட்ட வாழ்வே யாவர்க்கும் பயனளிப்பது. எப்பொருளையும் சிவமாகக் கருதி அன்புசெயல் வேண்டும் என்பதன் உண்மைமையை இதனாலுணர்க. தன்னலம் காரணமாகத் தோன்றும் விருப்பு வெறுப்பு தீமை பயப்பன. பிறர்நலம் காரணமாகத் தோன்றும் விருப்பு வெறுப்பு நன்மை பயப்பன. ஆதலின், பிறர்நலம் கருதிவாழும் நெறியே ஒழுக்கமாம். தன்னலம் அறுக்கின்ற நெறியே ஒழுக்கமாம். மலபரிபாகத்தை யருளவல்லது அதுவேயாம்.

**துன்ப நீக்கம்**

மனஅமைதி பெறுதற்காக நாட்டினை நீங்கிக் காட்டிலும் மலையிலும் வாழ்வது அறிவின்மையாகக் கருதப்படுகிறது

ஏனெனில், மனஅமைதி ஒருவருடைய உள்ளத்தில் உள்ளது, புறத்தே இருப்பதன்று. நமக்குத் துன்பம் தருபவர் மனைவி மக்கள் முதலியோராவர். தன்னலத்தொடு எழும் விருப்பு வெறுப்புகளே துன்பம் தருவன. உற்றார் உறவினரை வெறுத்தேகுபவன் துன்பத்தினின்றும் நீங்கான். ஒருகாலத்து ஒரு பொருள்பற்றி எழும் வெறுப்பே, பிறிதொரு காலத்துப் பிறிதொரு பொருளிடத்து வெறுப்பைத் தரும். ஒரு முறை வெறுப்புக் கிடங்கொடுத்தால் அவ்வுணர்ச்சி மேலும்மேலும் வளர்ந்து கொண்டேயிருக்கும். வெறுப்புக்கிடங்கொடுத்த உள்ளம் ஊசல் போன்றது. விருப்பும் அத்தகையதே. ஆதலின், விருப்பு வெறுப்பு இரண்டும் இல்லாத—இரண்டிற்கும் இடைப்பட்ட—வாழ்க்கையே துன்பத்தைப் போக்குவதாம். "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு, யாண்டும் இடும்பை யில"

எப்பொருளினும் இறைவனைக் காண்பார்க்குக் காடும்—நாடும் ஒன்றேயாம். அவர்கள் நன்மை தீமையென வேறுபாடறியார்; ஓடும் பொன்னும் ஒக்கவே காண்பர்; விடும் வேண்டா விறலினர். இன்பதுன்பங்களுக்குரிய காரணம் தெரிபவர், எங்குச் சென்றாலும் துன்பத்தை விலக்கமுடியாது என்பதை நன்குணர்வர். 'காசிக்குப் போனாலும் கர்மம் தொலையாது' என்பதோர் பழமொழி. குறுகிய மனப்பான்மையினின்றும நீங்கிவாழ்வதே துன்பநீக்க நெறியாம்.

"கங்கை யாடிலென் காவிரி யாடிலென்
கொங்கு தண்கும ரித்துறை யாடிலென்
ஒங்கு மாகட லோதநீ ராடிலென்
எங்கு மீச னெனாதவர்க் கில்லையே."

"கான நாடு கலந்து திரியிலென்
ஈன மின்றி யிருந்தவம் செய்யிலென்
ஊனை யுண்ட லொழிந்துவா னேக்கிலென்
ஞான னென்பவர்க் கன்றிநன் றில்லையே." (தேவாரம்)

**துறவு**

வேண்டுதல் வேண்டாமை யிலாது வாழ்தலே துறவறமாம். மனத்திண்மையான் வருவதே இது. இன்பநெறியும் இஃதே. எல்லாவிதமான ஆற்றல்களும் துறவினால் எழுவனவே. துறவில்லாது பிறர் போற்றும்வண்ணம் வாழ இயலாது; எவ்விதமான உயர்வும் அடையமுடியாது. துறவு உள்ளமின்றி எத்தகைய அரசியலும் நிலவாது. உலகத்தைப் பாதுகாத்து வளர்ப்பது துறவறநெறியேயாம். திருவள்ளுவர் வான்சிறப்பை

யடுத்து நீத்தார் பெருமை கூறியுள்ளதால் இது நன்கு விளங்கும். உள்ளத் துறவின்றி எத்தகைய ஆற்றலையும் பெறமுடியாது. உள்ளத் துறவில்லாதார்க்குத் தனக்குள்ளதைப் பிறர்க்கீயும் உள்ளம் வாராதன்றே! ஈகையை வளர்க்கும் துறவறமே ஆற்றலையளித்து, பிறரையும் பணியும்படி செய்வதாம். உடல் நலத்தையும் அறிவையும் வளர்ப்பதும் இதுவே. இறைபணி புரிவோர் எல்லாம் இரக்கமும் அன்பும் உடையவராய் உலகுக்கு உழைக்கின்றனர். வேற்றுமை யுணர்ச்சி யில்லாமையே துறவு என்பது ஒவ்வொருவரும் அனுபவத்தில் காண்பது. யாவராயி னும் ஒரேவிலை என்னும கொள்கையே வணிகர்க்குப் பெருமை யையும் நன்மையையும் அளிக்கிறது. காதலரிருவரும் ஒருவர்க் கொருவர் பணிந்து செல்வது வேறுபாட்டுணர்ச்சி யின்மையி னலேயாம் (துறவறத்தினலேயாம்.)

அவாவின்மையே — வேறுபாட்டுணர்ச்சி யின்மையே— பிறரைத் தம் வசபபடுத்துகின்றது. 'ஒரு குழந்தை தன் குடும்பத்திலுள்ளாரது அன்பையெல்லாம் எங்ஙனம் தன்பால் ஈர்க்கிறது' என்பதையும், அக் குழந்தையே பலவாண்டுகளுக்குப் பிறகு அவாவுடைய தாகின்றபோது முன்னிருந்த அன்பை எங்ஙனம் இழக்கின்றது என்பதையும் நோக்குக. ஆதலின், வேறுபாட் டுணர்ச்சியின்மையே—பிறர்க்கென வாழ்தலே— தெய்வத்தன்மை வாய்ந்த வாழ்க்கையாம்.

**துறவறநெறி**

> "எண்ணிய எண்ணியாங் கெய்துவா எண்ணியார்
> திண்ணிய ராகப் பெறின்."

ஒவ்வொருவரையும் மேனிலைக்குக் கொணர்வது அவரவரது உயர்வுடைய எண்ணங்களேயாம். எந்த நிலையை அடைய வேண்டுமென்று நினைக்கிறார்களோ, அதுபற்றி ஆழ்ந்த சிந்தனை யுடையாரானல் அவ் வந்நிலையை யடைந்தே தீருவா. "யாவர்க்கு மாம் பசுவுக்கொரு வாயுறை, யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி" என்றார் திருமூலர். உண்ணத் தொடங்கு முன் காக்கைக் குணவளிப்பது என்னும் கொள்கையும் துற வறத்தை—அறநெறியினை—மேற்கொள்க எனக் கற்பிப்பதே யாம். கடவுள்வழிபாட்டிற்கெனச் செல்லுமிடங்களில் ஏழை களுக்கு ஈதல் வேண்டும் என்பதும் இக் கருத்தினலேயாம. பிறர்க்கென வாழ்தல் வேண்டும் என்னும் எண்ணமுள்ளவர் காம இச்சையை ஒழித்தல் வேண்டும். இணைவிழைச்சினைத் தன் மனைவியோடெனினும் படிப்படியாகக் குறைத்து வருதல் வேண்டும். தன்னைப்போலத் தன் மனைவியும் பிறர்க்கென

வாழும் பேற்றினை யடைதல் வேண்டுமன்றோ! சுருங்கக்கூறின், சான்றாண்மையுடையராக வாழ்தலே துறவற வாழ்வாம்.

## உரிமையும் கடமையும்

உரிமை உயிர்கட்கியல்பு. உரிமையே பெருமையளிப்பது. அதற்குத் துணைசெய்வது கடமை. எதனையும் நினைத்தபடி செய்வது உரிமை. பிறர் துன்பத்தை நீக்குவது கடமை. உரிமை ஆற்றலளிப்பது. கடமை உலகிற்கு அஞ்சி வாழவைப்பது. ஒரு செயல் உரிமையை எழுப்புகிறது அதனினின்றும் கிளைக்கும் செயல் கடமை யுணர்ச்சியை எழுப்புகிறது. ஒருவன் மற்றொருவனுக்கு உதவி செய்கிறானெனில் உதவி செய்யப்பட்டவன் உதவிசெய்தவனுக்கு உதவும்கடமையை (கடனை)உடையவனாகின்றான். கடன், கடம், கடமை என்பன ஒருபொருட்கிளவிகள் 'கடமை' எனப் பொருள்படும் 'கடன்' என்னும் சொல் இக் கருத்தை விளக்குவது காண்க.

உரிமையும் கடமையும் ஒன்றையொன்று பற்றியிருப்பனவேயாம் உரிமையை யுடையவன் கடமை யுடையவனாகின்றான். கடமை யுடையவன் உரிமையையும் உடையவனாகின்றான். தாய் தந்தையர் தம் மக்களைக் காக்கும் கடமையுடையர் அவர்கள் அம் மக்களால் வணங்கப்படும் உரிமையையும் உடையவர். ஆசிரியர்கள், மாணவர்கள் அடங்கி நடக்கவேண்டு மென்கின்ற உரிமையையுடையர். அவர்கள், மாணவரை நன்னெறிப் படுத்துகின்ற கடமையையும் உடையர். இரண்டும் ஒன்றோடொன்று இணைந்தாலல்லது உலகம் நன்னெறியில் நிற்காது.

## ஒழுக்கமும் ஊழ்வினையும்

எண்ணம், இச்சை, செயல்களின் பயனே ஒழுக்கமாம். அவ் வொழுக்கத்தின் நிழல்போல் அமைவதே ஊழ்வினையாம். இச்சை செயல்களாற் போந்த ஒழுக்கத்தினின்றும் கிளைப்பதே ஊழ்வினையாம். உருவும் வடிவும்போல இரண்டும் ஒன்றற்கேற்ப ஒன்று அமைதல் வேண்டும். ஆதலின், ஊழ்வினையை ஒருவன் மாற்றவேண்டின், அதற்கேற்ப ஒழுக்கத்தைத் திருத்திக் கொள்ளுதல் வேண்டும். எண்ணம் திண்மைபெறின் எண்ணியதை எண்ணியாங்கு அடையலாம். ஆதலினால், ஒழுக்கம் திருந்துவதால் ஊழ்வினையையும் மாற்றியமைக்கலாம். "ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித், தாழா துஞற்று பவர்."

ஊழ்வினை யுணர்ச்சியும் மறுபிறப் புணர்ச்சியும் இல்லாத ஒழுக்கம் சிறகில்லாத பறவை போன்றதாம். அச்சமும் நம்பிக்

கையுமே இவ் வுணர்ச்சிகளை வளர்ப்பன. நாம் செய்யும் நற் செயல்களுக்கு மறுபிறப்பிலேனும் நல்ல பயனுண்டு என நம்பி யும், நாம் செய்யும் தீய செயல்களால் மறுபிறப்பிலும் நமக்குத் தீங்குண்டாம் என அஞ்சியும் வாழ்கின்ற வாழ்வே பிறர்க்குப் பயன்படும்படி வாழும் வாழ்வாம் தீவினைக்கு அஞ்சி வாழ்பவன் நல்லனவற்றை மேற்கொள்வானன்றோ! வினையுணர்ச்சி மறுபிறப் புணர்ச்சியையூட்ட அது மீண்டும் நல்வினை செய்யத்தூண்ட, அதனால் பிறவாநெறி கிட்டும் என்பது வெள்ளிடைமலை.

**உருவ வழிபாடு**

மக்கள் இளமை, வாலிபம், முதுமை ஆகிய வெவ்வேறு பருவங்களையுடையர். அறிவுநிலையினும் அவ்வாறே தாமசம், இராசசம், சாதவிகம் என அவைமுறையே வழங்கப்படும். ஒரு முதியவர் வெவ்வேறு பருவத்தையுடைய மக்களுக்கு, அவரவ ரது வயதிற்கேற்பத் தான் கருதியதைக் கூறுவதுபோல, ஞானி யும் தான் கருதியதை அவரவரது அறிவுக்கேற்ப உணர்த்துதல் வேண்டும். தாமச நிலையிலுள்ளவர்க்குத் தத்துவங்களை விளக்கி யுரைத்தல் இயலாது. ஆகையால் அக் கருத்துக்களை உருவகப் படுத்தி, பருப்பொருள்களின் நிலைகொண்டே உணர்த்துதல் வேண்டும் அதன்பொருட்டே கோயிலும் குறிகளும் அமைந் தன. இடைப்பட்ட (இராசச) நிலையிலுள்ளவர்களுக்காகவே புராணேதிகாசங்கள் எழுந்தன. ஞானியர் (சாத்விகர்)களுக்கு மெய்ப்பொருள் விளக்கமே தக்கதாம்.

புராண இதிகாசஙகள், போதுமான விளக்கம் பெறுதா ரிடம் அகப்பட்டு, உரியநோக்கத்தைப் பிறரறியாவண்ணம் அழிந்துபடும் நிலையிலுள்ளன. 'புராண இதிகாசங்கள் எல்லாம் பொய்யானவை, மெய்ப்பொருள் விளக்கமே வேண்டி யது' என உணர்த்தப்படுவாரது இயல்பு தெரியாதுணர்த்திப் பிறரையும் கெடுத்துத் தாமும் கெடுகின்றனர் சிலர். ஒரே பொருளைப் பலர் அறிவாராயினும் வெவ்வேறு விதமாக உணர வர். குழந்தை, வாலிபர், முதியவர் ஆகியோர்க்கு அவ்வொரு பொருளைப் பற்றியே வெவ்வேறு விதமான கருத்து எழுமே யன்றி ஒரேவிதமான கருத்து எழாது. ஒரு குழந்தையிடம் ஒரு பொற்காசு கிடைத்தால் அது அதனை விளையாட்டுக் கருவி யாகத்தான் கொள்ளும். வாலிபன் நல்ல அணியாகும் என்று தான் நினைப்பான், அல்லது அதனைப் பணமாக்கும் வழியைத் தான் கருதுவான். முதியவன், அதனால் மென்மேலும் வளம் மிகும்படி செய்வதற்குரிய முறையாது என்றுதான் ஆய்வான். முதியவன் தன் கருத்தைக் குழந்தைக்கும் வாலிபனுக்கும் அவர்கள் உளங்கொளுமாறு உரைத்தல் இயலாததுபோல,

ஞானியும் தாழ்நிலையி லுள்ளவர்க்குத் தானுணர்ந்த ஞானத்தை உணர்ந்தபடியே உணர்த்தலியலாது. மாணவர் பக்குவ முணர்ந்தே ஆசிரியர் உணர்த்த வேண்டும்.

ஆதலின், வெவ்வேறு நிலையிலுள்ளாரும் தத்தமக்கேற்ற முறைகளைப் பின்பற்றி வாழ்வதற்குத் தக்கதாகச் சமையம் அமைதல் வேண்டும். வாழுமிடத்திற்கும் காலத்திற்கும் தக்க படி ஒவ்வொருவர்க்கும் உணவு பல்வகை வேறுபாட்டோடு அமை கிறது. ஒரு குடும்பத்திலுள்ளவர்கள் ஒவ்வொருவர்க்கும் வேண் டியபடி தனித்தனி உணவமைக்க நேருமன்றோ! அங்ஙனமே சமையமும் அமைதல் வேண்டும். நீர் வேட்கையுற்றார்க்கு அவ ரவர் வைத்திருக்கும் பாத்திரத்தின் வடிவைக் கருதாது, அப் பாத்திரங்களில் நீர் அளிப்பதுபோல, மக்களது விருப்பத்திற் கேற்ற நிலையிலும் சமையம் அமைதல் வேண்டும். நீர் ஒன்றே பல்வகை வடிவுடைய பாத்திரங்களில் நிறைவதுபோல, ஒரே சமையக்கொள்கை பல்வேறு நிலையில் பரவுதல் வேண்டும் முதிய வர் குழந்தைகளை விளையாடலாகாதெனத் தடுத்துத்தியானத்தில் அமர்க எனக் கற்பிற்பது எங்ஙனம தவறனதோ அதேபோல— ஞானி தனனைப்போலவே மற்றவர்களும் ஞானநிலையை எளிதில்- அடைந்துவிட முடியுமென்று கருதி, ‘துறவற நிலையை யடைக’ எனல் தவறனதாகும். தாமச நிலையிலுள்ளவாகள் உருவ வழி பாட்டை மேற்கொள்வதும், இராசச நிலையிலுள்ளவர்கள் வேதா கம புராணேதிகாசங்களைக் கற்றொழுகலும, சாத்விக நிலையிலுள்ள வர்கள் தியானநிலையில் நிற்றலும் தடுக்கவொண்ணாத நிலைகளா கும் ஒரு மாணவன் ஒரு கணக்கின் விடையை மனதிலேயே கணித்துக் கூறுகின்றான். மற்றொரு மாணவன் அதே கணக் கிற்கு விடைகூறக் காகிதமும் பென்சிலும் பயன்படுத்துகின்றான். மனதிலேயே கணித்துரைப்பதும் காகிதம் பென்சில்கொண்டு கணக்கிட்டுரைப்பதும் ஒன்றாக ஆகும்போது எம்முறையைக் கையாண்டாலென்ன? என்ற எண்ணம் வரும். இரண்டனுள் ளும மனதிலேயே கணிப்பது சிறந்ததாகும் எனக் கூறலாமே ஒழிய, காகிதம் பென்சில்கொண்டு கணிப்பது குற்றம எனலாகா தன்றோ! ஆதலின், வேதாகமபுராணேதி காசஙகளைக்கற்றொழுக லும் உருவ வழிபாடும் தவறாயின எனக் கூறலாகாது என்பது நன்கு புலனும். ஒவ்வொருவர்க்கும் உருவ வழிபாடும் புரா ணேதிகாசங்களைக் கற்றொழுகலும் மெய்ப்பொருளுணர்தலும் இயல்பான் வேண்டப்படுவனவேயாம். இங்ஙனம பக்குவமறிந்து உபதேசிக்கும் சமையத் தலைவர்களுக்கு நாம் வணக்கஞ் செலுத்தி, அவர்கள் கூறிய நெறியினைப் பின்பற்றி யொழுகக் கடமைப்பட்டவராவோம்.

பயன் அளிப்பது படிமம் அன்று. அதன் துணையால் ஒருமுகப் படுகிற மனமே பயனளிப்பதாம். படிமத்தில் இன்பமில்லை. அப் படிமத்திடம்—அப்படிமம் குறிக்கும் மூர்த்தியிடம் வைத்த நம்பிக்கையே—மன அடக்கமே—இன்பம் தருவது. மனதை ஒருமுகப் படுத்துதற்கு உருவ வழிபாடு ஒரு கருவி, ஞானிகளுடைய படிமங்களும் படங்களும் அவரவர் மேற்கொண்ட ஒழுக்கங்களையும் மனஅமைதி நிலையினையும் நமக்கு நினைவூட்டுகின்றன. நமக்கும் அதனால் மன அமைதியும் நற்செயல் புரியும் எண்ணமும் எழுகின்றன. புலன்களைத் தொழிற்படுத்துவததாற்றான் அடக்கியாளமுடியும். ஆதலின், அவை செல்லும் போக்கிலேயே விடாது அவைகளை வேறு துறையில் திருப்புதல் வேண்டும். கண் இறைவடிவைக் காண்பதனாலும், செவி இறைபுகழைக் கேட்பதாலும தீயநெறியிற் செல்லாது திருந்தும். இதேபோல ஏனையபுலன்களும் இறை நெறியிற் செல்வதனால் நன்கு திருந்தும். மனம் ஒருமுகப்படும். ஒவ்வொருவரும் தமக்கு வேண்டிய உணவு, உடை முதலியவற்றைப் பெறுதற்கு வெவ்வேறு தொழில்களை மேற்கொள்கின்றனர். அதுபோல, விளையாட்டுநெறியாகிய உருவ வழிபாடும், உள்ளக் கிழியின் உருவெழுதி நோக்கும்—தியானநிலையும் தரும் பயன் ஒன்றும். உருவ வழிபாடு நம்மைத் தியான நிலைக்குத்தான் செலுத்துகிறது. ஆதலின் மெய்ப்பொருளை யுணர்த்தும் படிமங்களை ஏன் வணங்கலாகாது?

சில ஞானிகள் உருவ வழிபாடுகூடாது என்று கூறவில்லையா? என்று சிலர் கேட்கலாம். அவர்கள் மெய்ப்பொருளுணர்ச்சிக்கு—மன அடக்கத்திற்கு—உருவ வழிபாட்டை ஒரு கருவியாகக் கொள்ளவேண்டாமென்று கூறவில்லை; உருவ வழிபாட்டையே முடிந்த பொருளெனக் கருத வேண்டாம் என்று கூறுகின்றனர். ஆதாரயோகமின்றி நிராதாரயோகநிலையை யடைய முடியாதன்றோ! மன ஒருமைப்பாட்டிற்கு இசை, படம், புத்தகம் ஆகியவற்றைக் கருவியாகக் கொள்ளும் நாம் ஏன் உருவ வழிபாட்டைமாத்திரம் வெறுத்தல் வேண்டும்? விளையாட்டு வேண்டாமென்று கூறுபவர் குழந்தைகளை யெல்லாம் தடுக்க முடியுமா? அல்லது குழந்தைகளையெல்லாம் அறவே ஒழிக்க முடியுமா? அதேபோல, உருவ வழிபாட்டை அடியோடு போக்கிவிடமுடியாது.




குடியரசுத் துணைத்தலைவர் டாக்டர், எஸ். இராதாகிருஷ்ணன் அவர்கள், கழகத் துணைமேலாளர் திரு. இரா. கலியாணசுந்தரம் பிள்ளை (பி. எஸ்ஸி.) யிடம் திருக்குறள் பரிமேலழகருரை கவின்மிக்க கட்டிடத்தைப் பாராட்டி நற்சான்றிதழ் வழங்குதல்.

# நம் கழக நூற்கட்டட அமைப்புக்கு நற்சான்றிதழ்

நம் கழகவழி வெளி வரும் தண்டமிழ்நூல்களின் அச்சுக் கோப்பின் அழகமைப்பையும், அவையிற்றின் கண்கவர் வனப் பினவாய் மேலுறை அமைத்துக் கட்டடஞ் செய்துள்ள சிறப்பை யும் நம் மையஅரசியலார் நன்கு மதித்து அவைகட்காக ஆண்டு கள் தோறும் பரிசு வழங்கி வருகின்றனர்.

இவ்வாண்டும் அந் நன்முறையை வழக்காகக் கொண்டு நம் கழகவழி வெளிவந்த நூல்களுள், பொருளானும் அறநெறி முறையானும் உலக முவப்ப உயர்ந்தோங்கும் நூலான, 'திருக் குறள் பரிமேலழகருரை'யின் ரெக்சைன் கட்டட அமைப்பை மைய அரசியலார் கண்டு உவந்து பாராட்டி நற்சான்றிதழ் வழங்கி யுள்ளனர். அவ் விதழை நம் கழகத் துணைமேலாளர், திரு. இரா. கலியாண சுந்தரம் பிள்ளை பி. எஸ்ஸி 6—11—56-ஆம் நாள் தில்லி நகருக்கு நேரிற்சென்று, நம் இந்தியக் குடியரசின் துணைத் தலைவர் டாக்டர் எஸ். இராதாகிருஃச்ணன் அவர்கள் அன்புடன் வழங்க, அதை மன மகிழ்ந்து ஏற்று வாங்கிப் போந்தார்கள்.

பண்டைக் காலத்தில் நம் நறுந்தமிழ் மொழியிற் சிறந்த அகத்திணைப் பொருள் முற்றிய பெருங் குறிஞ்சி யெனப்பெயரிய குறிஞ்சிப்பாட்டினைப் புலனழுக்கற்ற அந்தணாளரான பொய்யா நாவிற் கபிலர் தமிழ் அறியாத வட நாட்டு ஆரியவரசன் பிரகத் தனுக்காகப் பாடி, அவன் அவிழ்ச்சுவையனைய நம் தமிழ்ச்சுவை புணர வைத்தனர். அச் செயல் போன்று நம் கழக வெளியமைப் பைக் கண்டேனும் நம் மைய அரசியலார் பாராட்டி நற்சான்றிதழ் வழங்கி நம்மை மகிழ்வுறுத்தற்கு மைய அரசினர்க்கு எம் வாழ்த் துரை கூறி, நன்றியறிதலையும் அறிவிக்கின்றோம்.

நூற் கட்டட மேலாளர் திரு. மாணிக்கசாமியையும், ஏனைய கட்டடத் தொழின்மையரையும், அவர்கள் கைவன் மைக்கு மகிழ்ந்து வாழ்த்துகின்றோம்.

கடந்த 27-2-56-ஆம் நாள் அனைத்திந்திய அச்சகத்தாரின் மாநாட்டில் இத் 'திருக்குறள்,' 'திருவாசக மூலம்' இவைகளின் கட்டடச் சிறப்பைப் பாராட்டி நற்சான்றிதழும் வெள்ளிக் கிண் ணம் (கப்) ஒன்றும் மனமுவந்து வழங்கியுள்ளனர். அவைகளை எம் கழகத்தில் காட்சிக்காக வைத்துள்ளோம்.

# இந்தியா : புதிய அமைப்பு




மொழிவழித் தனித்தனி மாநிலமாக மலர்ந்த பதினன்கு நாடுகளின் விளக்கப் படமும், நாட்டின் பரப்பளவும், மக்கள் தொகையும்.

| நாடு | பரப்பளவு (சதுரமைல்கள்) | மக்கள் தொகை (1951-ஆம் ஆண்டுக் கணக்குப்படி) |
|---|---|---|
| ஆந்திரம் | 1,05,962 | 3,12,59,815 |
| அஸ்ஸாம் | 85,012 | 90,43,707 |
| பீகார் | 67,300 | 3,88,27,517 |
| பம்பாய் | 1,90,919 | 4,82,65,120 |
| சம்மு-காசுமீரம் | 62,780 | 44,00,000 |
| கேரளம் | 15,035 | 1,35,49,118 |
| மத்தியப்பிரதேசம் | 1,71,201 | 2,60,95,680 |
| சென்னை | 50,110 | 2,99,74,936 |
| மைசூர் | 74,347 | 1,94,01,612 |
| ஒரிசா | 60,136 | 1,46,45,946 |
| பஞ்சாப் | 47,456 | 1,61,34,890 |
| இராசஸ்தான் | 1,32,078 | 1,59,46,731 |
| உத்தரப்பிரதேசம் | 1,13,409 | 6,22,15,742 |
| மேற்குவங்காளம் | 33,809 | 2,62,58,647 |

குறிப்பு: பீகார், மேற்கு வங்காளம் ஆகிய நாடுகளுக்குரிய புள்ளி உத்தேசமானவை.

# அன்பும் அருளும்

[திரு. ந. இரா. ஊரன்]

" அன்பெனும் பிடியு ளகப்படு மலையே
அன்பெனுங் குடில்புகு மரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே
அன்பெனுங் கரத்தம ரமுதே
அன்பெனுங் கடத்து ளடங்கிடுங் கடலே
அன்பெனு முயிரொளி ரறிவே
அன்பெனு மணுவு ளமைந்தபே ரொளியே
அன்புரு வாம்பர சிவமே."

—இராமலிங்க அடிகள்.

அன்புக்கு, பரிவு, நார், வாரம், ஈரம், பற்று, அளி, பாசம், புரிவு, ஆணம், நேயம் என்று பல பெயர்கள் உண்டென நிகண்டு கூறுகிறது. இப் பெயர்களுட் பல இலக்கியங்களோடேயே இருக்கின்றன. மக்களிடையே வழக்கிலில்லை. உலக வழக்கில் வாஞ்சை, பாசம், நேசம், பிரியம், ஆசை, தயவு, இரக்கம், கருணை, காருண்யம் என்றெல்லாம் வழங்கப்படுகிறது.

அன்பாவது யாது? அது உள்ளத்தின் கனிவாகிய இனிய தன்மை. சொல்லாலும் செயலாலும் பிற உயிர்கள்மாட்டு இனியனாய் இலங்கும் நீர்மை. அவ்வன்பு உள்ளத்து உள்ளெழுந்து ஊறி வருதலின் உள்ளன்பு எனப்படும். முறையே ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்ளுதலின் பரஸ்பர அன்பு எனப்படும். பிணிக்கும் சக்தியில் இதைவிடப் பெரிது பிறிதொன்றில்லை. அகவாழ்வாகிய இல்லறத்துக்கு இதுவே அடிப்படை. அகவாழ்வுக்கு அன்பு இன்றியமையாதது என்பதை நோக்கித்தான் அகப்பொரு ளிலக்கணஞ் செய்யவந்த இறையனுரென்னுந் தெய்வப் புலவர் தமது களவியல் நூலை அன்பின் ஐந்திணை என்றே தொடங்கினுர்.

அன்பின் தூய மாசற்ற தன்மையையும் வலிமையையும் நன்குணர்ந்த நந்தமிழகத்துச் சான்றோர்கள் கடவுளை அன்புருவாகவே வழிபட்டனர். இதனைச் சுருங்கக்கூறி விளங்கவைப்பது அன்பே சிவம் என்னும் முதுமொழியாகும். 'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்' என்று திருமூலரும் இடித்துக் கூறினர். டால்ஸ்டாய் என்னும் மேலைநாட்டுப் புலவ ரொருவரும் 'Where love is there God is' எனக் கூறிப்போந்தனர். அன்புருவாகிய இறைவன் தன்னை அன்பு செய்வாரிடத்துத் தானும் மிக்க அன்பைச் செலுத்துபவன். அன்பு செய்வாரை அறிவன் சிவன் என்னும் முதுமொழி இதனை நன்கு வலியுறுத்தும். மாணிக்கவாசக அடிகளும் தமது திருவாசகத்தில் இறைவனை

'அன்பருக்கன்பனே' என அழைக்கிறார். அன்புமிக்குடைய நெஞ்சத்தையே இறைவன் தனக்குரிய கோயிலாகக் கொண்டுள்ளான்.

"மாடத்து ளானலன் மண்டபத் தானலன்
கூடத்து ளானலன் கோயிலுள் ளானலன்
வேடத் துளானலன் வேட்கைவிட் டார்நெஞ்சின்
மூடத் துளேநின்று முத்திதந் தானே."

எனத் திருமூலரும் கூறினர். முழுமுதற் பொருளாகிய இறைவன் மாடங்களிலே இல்லை. மண்டபங்களிலே இல்லை. கூடங்களிலே இல்லை. கோயில்களிலே இல்லை. வேடதாரிகளின் நெஞ்சங்களிலேயும் இல்லை. பின் எங்கிருக்கிறான்? வேட்கை விட்டார் நெஞ்சந்தன்னில் தஞ்சம் புகுந்துளான். அன்பு நெஞ்சமே ஆண்டவனின் உறைவிடம். ஆயிரம் ஆண்டுகள் வெற்று யோக மிருப்பதைவிட அரைநிமிட நேரம் உண்மை அன்பு நிலையில் நிற்பதே சிறந்தது. 'என்பே விறகாய் இறைச்சி யறுத்திட்டுப், பொன்போற் கனலில் பொரிய வறுப்பினும், அன் போடு உருகி அகங் குழைவார்க்கு அன்றி, என்பொன் மணியினை எய்த வொண்ணுதே' என்றனர் திருமூலர். 'அன்பினுல் அடியேன் ஆவியோ டாக்கை ஆனந்தமாய்க் கசிந்துருக' என்றார் மணிவாசகப் பெருமான். ஆவியையும் ஆ(யா)க்கையையும்-அஃதாவது உயிரையும் உடலையும் ஒருங்கே உருகச்செய்து உலப்பிலா ஆனந்தத்தை எய்துவிப்பது அன்பே என்பது மணிவாசகரின் கருத்தாதல் உணர்க. 'அன்பைப் பெருக்கி எனதாருயிரைக் காக்க வந்த, இன்பப் பெருக்கே இறையே பராபரமே' 'என்புருகி நெஞ்சம் இளகிக் கரைந்து கரைந்து, அன்புருவாய் நிற்க அலந் தேன் பராபரமே' என்றார் தாயுமானர்.

ஆதலின், அன்புப்பெருக்கே இன்பப் பெருக்கு என்பதை உணரல் வேண்டும். அன்பைப் பெருக்குதல் வேண்டும். போலி அன்பு கூடாது போலி அன்பின் ஆதரவு கண்ணீரோடு நின்று விடும். கண்ணீரோடு அன்பு கழிந்துவிடக் கூடாது. ஒவ்வொரு சொட்டுச் செந்நீரிலும் அன்பு கலந்திருக்க வேண்டும். அன்பு கலவாத செந்நீர் செந்நீரன்று. அது புண்ணீரும் தண்ணீருமே ஆகும். உடலில் ஓடும் செந்நீர் முழுவதும் அன்பு நீராகவே அமைதல் வேண்டும். அத்தகைய அன்புநீர் ஓடும் ஆற்றில் இறங்கினல் அது அருட்கடலில் கொண்டுபோய் விடும்.

அருட்கடலிற் புகுந்த நாம், இனி அங்குள்ள நன் முத்துக்களை ஆய்ந்தெடுப்போம். நாம் மட்டும் நமக்கென வைத்துக் கொண்டு வாழ்வதற்காக அல்ல; பிறருக்கும் வாரி வாரி வழங்கத்தான், அருள்; அருளாவது யாது? அது அன்பின் முதிர்ச்சி.

நெஞ்சக் கடலின் ஆழத்திலே அன்பென்னும் அரிய சிப்பியிலே உண்டாகும் அழகு முத்தே அருள். ஆம்! அருட்புலவர் திருவள்ளுவரும்-'அருளென்னும் அன்பீன் குழவி' என்றே கூறினர். 'அருட்கு முதலாகி மனத்தின்கண் நிகழும் நேயம் என்று அன்பைச் சொன்னால் அன்பு காரணத்தால் தோன்றும் அளி என்று அருளைச் சொல்லுதல் வேண்டும்' (மணிமேகலைக் குறிப்புரை டாக்டர் உ. வே. சா. அவர்கள்)

தமர் பிறர் என்றெண்ணாது யாவர்மாட்டும் எவ்வுயிரின் மாட்டும் தூய அன்பைச் செலுத்தும் நிலையே அருள்நிலை. இந்நிலையில் நிற்பதற்கு ஒவ்வொருவரும் பயிலுதல் வேண்டும். மனிதப் பிறவியை இறைவனருளால் அரிதிற் பெற்றுக்கொண்ட ஒவ்வொருவரும் அருளையே நாடுதல் வேண்டும்; தேடுதல் வேண்டும். ஆதலாற்றான் 'அருட்செல்வம் செல்வத்துட்செல்வம்' என்றும், 'அருளற்றார் அற்றார்' என்றும் வள்ளுவர் கூறினர். அருட் செல்வத்தைப் பெறுவதற்கு அன்பொன்றே வழி. அன்புவழி-நின்றே-சென்றே அருளைப் பெறுதல் வேண்டும். இதனைக் கருத்தி விருத்தியேதான் அருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க அடிகளாரும் தமது ஆளுடைய வடிகளருண் மாலையில்,

"அன்புருவம் பெற்றதன்பின் அருளுருவம் அடைந்துபின்னர்
இன்புருவ மாயினை நீ எழில்வாத வூரிறையே."

என மனமுருகிப் பாடினர். பின்னும் உலகுக்கு அருட்பெருஞ் சோதியைக் காட்டி வைத்தவர் அஃது தனிப்பெருங் கருணையே, எனச் சொல்லியும் வைத்தனர். எனவே கருணையின் கனிவே அருள் என்பது தெளிவாயிற்று.

உலகமும், அன்புருவம் பெற்று அருளுருவம் அடைந்து பின்னர் இன்புருவம் ஆதற்கு இனியாகிலும் இராமலிங்க அடிகளார் போன்றாரின் வழியைப்பற்றி நின்று முயலுமாக.

"அருட்பெரு வெளியி லருட்பெரு வுலகத்
தருட்பெருந் தலத்துமே னிலையில்
அருட்பெரும் பீடத் தருட்பெரு வடிவி
லருட்பெருந் திருவிலே யமர்ந்த
அருட்பெரும் பதியே யருட்பெரு நிதியே
யருட்பெருஞ் சித்தியென் னமுதே
அருட்பெருங் களிப்பே யருட்பெருஞ் சுகமே
யருட்பெருஞ்சோதியென் னரசே."

—இராமலிங்க அடிகள்.

# கடல்

[நாகை, திரு. த. சி. வேலன்]

கடலே! கடலே! கவினார் கடலே!
அடல்சேர் உன்றன் ஆற்றலும் மாண்பும்
அளவிடற் கரிதே! அளவிடற் கரிதே!
கட்புலன் தன்னைக் கடந்து நின்று
கடத்தற் கரியை ஆனதால் உன்னைக்
கடலென மாந்தர் கழறினர் போலும்!
பண்பால் பயனால் பாங்குறு அளவால்
பரந்து கிடத்தலால் பரவை ஆனாய்
அவனியின் ஆழ்ந்த பகுதி ஆகி
ஆழி யெனவே அழைக்கப் பட்டாய்
உன்னிடைத் தோன்றும் உயரிய முத்தும்
பாங்குறு பவழமும் பயனுடை உப்பும்
பரதவர் கொள்ளும் பற்பல மீன்களும்
உழைப்பின் பயனும் எனுமோர் உண்மையை
உலகிற் குணர்த்த உன்னியே போலும்
வேலை யென்றே விளம்பினர் உன்னை
அளித்தல் காத்தல் அழித்தல் ஆகிய
முத்தொழில் உன்னிடைக் கண்ட முன்னோர்
முந்நீர் என்றே மொழிந்தனர் அன்றோ
என்னே நின்புகழ்! என்னே நின்புகழ்!
உலகியல் தன்னை உற்று நோக்கி
ஆய்ந்திடும் அறிஞர் அத்தனை பேர்க்கும்
உவமைக் கிடமாய் உறுதுணை புரிவாய்
உடல்பொருள் ஆவி உதவி உலகினை
உய்யச் செய்யும் உயர்ந்தோர் போல
உடல்பொருள் எனத்தகும் நின்படு பொருளையும்
ஆவி எனத்தகும் மாரியாம் முதற்பொருள்
அனைத்தும் ஈன்றே அவனி புரக்கும்
ஆற்றல் மிக்க அருங்கடல் நீயே!
ஆதலால் நின்திறம் அறைதற் கரிதே
வாழிய கடலே! வாழிய கடலே!

# செய்திகளும் குறிப்புகளும்

## (க) தமிழ்நாடு என வழங்க வடக்கிருந்து உயிர்நீத்த பெரியார்

சென்னை நகர்ப்பெயரை மாநிலமாககொண்டு விளங்கும் நம் தமிழகத்துக்குத் '**தமிழ் நாடு**' என்று பெயர் சூட்டவேண்டுமென விரும்பி, விருதுநகர் க பெ. சங்கரலிங்க நாடார் என்னும் பெரியார் கடந்த குலைத்திங்கள் 27-ஆம் நாள் உண்ணு நோன்பு தொடங்கினர்; அரசியலார் அவர் வடக்கிருத்தலைப் பொருட்டாக்கவில்லை; தவங்கிடந் சஙகரலிங்கனர், 77-ஆவது நாளாகிய 13—10—56 காலை 7 மணி அ வில் மதுரை மருத்துவ விடுதியில் தம் ஆவி நீத்தார்.

அன்று போலீசார் உடல் விசாரணை செய்த பின்னர் தத்தனேரி யில் அவர்தம் உடல் எரியூட்டப்பெற்றது அன்று அவருக்குத் தம் வருத்தத்தைத் தெரிவிக்கு முகமாக மதுரையில் பொதுமக்கள் ஊர் வலம் வந்தனர். சென்னையில் பச்சையப்பன் கல்லூரி மாணவர்கள் ஊர்வலம் நடத்தி, திருவல்லிக்கேணி கடற்கரையில் அவர், தமிழ்நாட் டுக்காக உயிர்நீத்தது குறித்துப் பாராட்டிப் பேசினர். பல ஊர்களின் தொழிலாளர் வருத்தம் தெரிவித்து ஊர்வலம் வந்து அன்னர் தியாகத் தைப் பாராட்டிப் பேசினர்.

**குறிப்பு**: பண்டைக்காலத்தில் புறப்புண நாணி வடக் உயிர்நீத்த கோப்பெருஞ்சோழன் வரலாறும், சிறையில் வாடிய சேரமான் கணைக்கால் இரும்பொறை நீர்வேட்கை தணிக்க விரைவில் நீர் தாரா மைக்காக மானத்தால் உயிர்நீத்த வரலாறும் இங்கே நினைவுகூரத்தக்கன வாம். தமிழர்கள் பண்டும் இன்றும் மானவீரர்களாக உளர் என்பதற்கு இன்னர் உயிர்த்துறப்பே சான்றாகும். மானவீரர் சங்கரலிங்கனரின் தன்மான உணர்ச்சியைப் பெரிதும பாராட்டி அவர் இழப்பிற்கு வருந்து கின்றோம். நம் தமிழக அமைச்சர்களும், சட்ட அவை உறுப்பினர்களும் அவர் உயிர் பிரியாவாறு செயலாற்ற முன்வராத தருக்குக்கு நெஞ்சு துணுக்குற்றுப் பெரிதும் வருந்துகின்றோம். அவர் உண்மையான கொள்கைகள் நிறைவேறுவதாக; நம் நாடு தமிழ்நாடாக மிளிர்வதாக; அவர் உயிர் அமைதியுறுவதாக; அஃது இறை திருவடி இன்பில் திளைப்பதாக.

## (உ) தமிழ்நாட்டின் வடவெல்லைப்போர்

கடந்த செப்டம்பர்த் திங்கள் 23-ஆம் நாள் தமிழரசுக் கழகத் தலைவர் திரு. ம. பொ. சிவஞான கிராமணியார் தம் குழாங்கள் மூலம் சட்டஅவை முன் ஆந்திர நாட்டுடன் இணைந்துள்ள நம் தமிழ்நாட்டுப் பகுதியான சித்தூர், புத்தூர், திருத்தணி முதலிய ஊர்களைத் தமிழ் நாட்டுடன் சேர்க்குமாறு கூறியும், இதை நடுநின்று ஆய்ந்து முடித்தற்கு எல்லைக்குழு அமைக்குமாறு கூறியும் மறியல் செய்தனர். அதற்காக கிராமணியார் உட்பட 500 பெயர்களை அரசினர் சிறையிட்டுப் பின் விடுவித்தனர். பின்னர் 14—10—56-ஆம் நாள்முதல் மீண்டும் அதற்காக ஒரு கிழமைவரை அஞ்சல் நிலையங்களில் மறியல் செய்தும், புகைவண்டி களைச் சங்கிலித்தொடர்களை இழுத்து நிறுத்தியும் கிளர்ச்சி செய்தபின், சென்னை அரசியலார் எல்லைகளை நடுநின்று அமைக்க வாக்குறுதி யளித்தனர். பின்னர் மறியல் தற்காலிகமாக நிறுத்தப்பட்டது. அவ்வாக்

குறுதி, மைய அரசினருக்குக் கடிதம் எழுதி எல்லைக்குழு மூலம் அல்லது மையஅரசினர் அமைச்சர் மூலம் தீர்த்துவைப்பதென முடிபு கூறியது.

**குறிப்பு :** மாநில அரசினர் தாமே இத்தகைய தொல்லைகள் நாட்டில் நிகழாதவாறு செய்தல் கடப்பாடாகும். 'பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும், கொல்குறும்பும் இல்லது நாடு' என்னும் வள்ளுவர் வாய்மொழியை நம் தமிழ்நாட்டு அமைச்சர்கட்கு நினைப்பூட்டுகின்றோம். மக்கள் கருத்தை ஓர்ந்து அதற்கேற்ப அரசியல் நடத்துதலே உட்பகை, பல்குழு முதலியன கிளைக்காததற்கு வழிகோலுவதாகும்.

## (ட) தாய்மொழிபற்றி நேரு கருத்து

ஏழாவது அனைத்திந்தியத் தேசிய மொழிப் பிரசார மாநாடு கடந்த 16, 17—10—56-ஆம் நாட்களில் செய்ப்பூரில் நிகழ்ந்தது. அம் மாநாட்டுக்கு நம் இந்திய நாட்டு முதல் அமைச்சர் நேரு அவர்கள் அனுப்பிய செய்தியில் குறிப்பிட்டுள்ளதாவது :

'இந்தி நம்நாட்டின் தேசிய மொழியாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. மாகாணங்களுக்கு இடையே இருக்கும் அரசியல் அலுவல் நடவடிக்கைகளில் ஆங்கிலத்திற்குப் பதிலாக இன்னும் சில ஆண்டுகளில் இந்திமொழியைப் பயன்படுத்தவேண்டும் என்று அரசியல் அமைப்புச சட்டத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. இது சரியானதேயெனினும், அரசியல் அமைப்புச் சட்டத்தின் இறுதிப் பகுதியில் குறிப்பிட்டிருக்கும் பதினான்கு மொழிகளும் நம் தேசிய மொழிகள்தாம் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. நெருங்கிய ஒத்துழைப்புக்கொண்டு அந்தப் பதினான்கு மொழிகளையும் நாம் பேணி வளர்த்தாக வேண்டும்' என்பதாம்.

**குறிப்பு** நேரு அவர்கள் இவ்வாறு செய்தி அனுப்பியுள்ளது போற்றற்குரித்து. சொல் வேறு செயல் வேறாக நிகழும்போது வருந்தற்குரியதாகின்றது. அவ்வந் நாட்டு மொழிகள் வளர்ச்சிக்காக ஒன்றுஞ் செய்யாது இந்தி ஒன்றையே வளர்க்க மறைமுகமாக மைய அரசியலார் மடிதற்று முன்னிற்பது வருத்தந்தருவதொன்றும். ஆகவே, தாய்மொழிகளே ஆட்சிமொழிகளாக அவ்வவ வட்டாரங்களில் நடப்பதற்கு அமைச்சர் கூறியவாறு வேண்டும் உதவிபுரிந்து கலைச்சொற்களை அவரவர் தாய்மொழியில் ஆக்குதற்குவேண்டும் உதவிகளை மைய அரசு அளிக்குமென நம்புகின்றோம்.

## (ச) தென்னிந்திய மொழிகள்பற்றி திரு. சுக்லா கருத்து

இவ் அக்டோர்த் திங்கள் 6-ஆம் நாள் ரேவாவிலிருந்து உஜ்ஜெயின் செல்லும் வழியில், விந்திய வட்டார முதலமைச்சர் எஸ். என். சுக்லா, போபால் இந்தி வித்தியாலயத்தைச் சேர்ந்த ஆசிரியர்கள் மாணவர்கள் கூட்டத்தில் பேசினார் ; அவர் பேசும்போது கூறியதாவது :—

" வட இந்தியப் பல்கலைக் கழகங்களில், தென்னிந்திய மொழிகளையும் கற்பிப்பதற்கு ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

அயல் நாட்டுமொழிகளைக் கற்பிப்பதற்குப் பல்கலைக்கழகங்களில் எல்லாவித வசதிகளும் செய்யப்படுகின்றன. ஆனால் நாட்டிலுள்ள வட்டாரமொழிகளைக் கற்பதற்கு எவ்வித ஏற்பாடுகளும் செய்யப்படவில்லை. இது மிகவும் வருந்துதற்குரியது. வரும்பயனை எதிர்பார்க்காத மனப்

பான்மையுடன் இந்திமொழியைப் பரப்பவேண்டும். இந்திமொழி பேசும் மக்கள் மற்ற மொழிகளையும் மனத்தயக்கமின்றிக் கற்கவேண்டும்.''

**குறிப்பு :** தென்னிந்திய மொழிகளுள் தலை சிறந்தது நம் தாய் மொழியாகிய தமிழ்மொழி. இது, கன்னடம் தெலுங்கு மலையாளம் முத லிய மொழிகட்குத் தாயாகவுள்ளது. இதிலிருந்து சில எழுத்துநிலை திரிந்தும் வடசொற்கள் மிகுதியாகக் கலந்துமே இம்மொழிகளாக வேறுபட்டன. அவைகளிலுள்ள வடசொற்களைக் களைந்துவிட்டால் எஞ்சியிருப்பன யாவுந் தூய தமிழ்ச்சொற்களேயாம். ஆகவே, திரு. சுக்லா அவர்கள் கூறிய முறைப்படி தென்னிந்திய மொழிகள் யாவற்றை யுமே பல்கலைக் கழகங்களில் பாடமாகவைக்காவிடினும் தமிழ் மொழியை யாவது பாடமாக அமைக்கவேண்டுவது முதன்மையாகும். தமிழ்மொழிக் கண், இலக்கண இலக்கியங்கள் மிக்குப் பல்கியுள்ளன; திருக்குறள் ஒன்றே அதன் சிறப்புக்கு முதல் எடுத்துக்காட்டாகும் ஆகவே, எல்லாப் பல்கலைக் கழகத்தார்களும் தமிழை ஏற்றுப் பாடத்தில் சேர்க்குமாறு விரும்புகின்றோம்.

(இ) சூயசுக் கால்வாய்ப் போராட்டம்.

கடந்த நான்கு திங்களுக்கு முன் எகிப்து நாட்டுத் தலைவர் திரு. நாசர், தம் நாட்டுப் பொருளாதார நலன் குறித்து சூயசுக் கால்வாயை எகிப்து நாட்டின் உடைமை யென்றும், அதன் மூலம் கிடைக்கும் கப்பற் சுங்க வருமானமனைத்தும் எகிப்து நாட்டிற்கே உரியது என்றும் அறிவித் தார். அமெரிக்கா, பிரிட்டன், பிரான்சு ஆகிய நாடுகள் இது கண்டு துணுக்குற்றன. எகிப்து மீது அழுக்காறு கொண்டு அதனை ஒறுத் தற்குப் பலவாறு முயன்றன. ஆனால் உலகின் கிழக்கு நாடுகள் பல, எகிபதின் செயலுக்குத் தக்க ஆதரவு காட்டின. இந் நிலையில் கடந்த 29—10—56-இல் இஸ்ரேயில் நாட்டுப் படைகள் திடுமென எகிப்தைத் தாக்கத் தொடங்கின. இதற்கு ஆதரவாகப் பிரிட்டனும் பிரான்சும் துணை வந்தன. போர் மூண்டது. வல்லரசுகளின் தாக்குதலால் எகிப்து பெருநட்டமடைந்தது. அதன் கப்பற் படைகளும் வானூர்திப் படைகளும் பெரிதும் அழிக்கப்பட்டன. இந் நிகழ்ச்சியால் அனைத்துலக மன்றத்தில் பெருத்த பரபரப்பு ஏற்படலாயிற்று. இந்தியா உருசியா முதலிய நாடுகள் வல்லரசுகளின் நடவடிக்கைகளைக் கண்டித்தன. ஐக்கிய நாட்டுப் பாதுகாப்பு அவை, போர் நிறுத்தத்திற்கான முயற்சியில் ஈடுபட்டது. பிரிட்டனுக்கும் பிரான்சுக்கும் அப் பாதுகாப்புஅவை, எச்சரிக்கை விடுத்தது. பிரிட்டனும் பிரான்சும் அவ் வெச்சரிக்கையை யும் புறக்கணிக்கத் தொடங்கின. இதன் விளைவாக மூன்றும் உலகப் போர் மூளுமோ என உலகம் அஞ்சிற்று. இந் நிலையில் உருசியா, மேலை நாடுகளை நோக்கி, ''எகிப்தில் மேலை நாடுகள் இங்ஙனம் போரில் ஈடு பட்டால் உருசியா வாளா இராது,'' எனவோர் எச்சரிக்கை விடுத்தது. இது மட்டுமன்றி உலகின் பல பகுதிகளிலும் பிரிட்டன், பிரான்சு, இஸ்ரேயில் ஆகிய நாடுகளுக்கு எதிராக எதிர்ப்பொலிகள் எழுந்தன. இவையிற்றின் விளைவாகத் தற்போது எகிப்தில் போராட்டம் நிறுத்தப் பட்டதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

**குறிப்பு :** உரிமை வேட்கையை நாடி உலகம் முன்னேறிக்கொண் டிருக்கும் இவ் வேளையில் பிரிட்டன் பிரான்சு முதலிய மேலை வல்லரசு கள், தமது ஆதிக்க வெறியை அடக்கிக் கொள்ளாவிடில் அவை தமக்குத் தாமே அழிவைத் தேடிக்கொள்வதாகவே முடியும்.

# மதிப்புரை

['தில்லைச் சிற்றம்பலவன் கோயில் வரலாறு': இச் சீரிய நூலை ஆக்கியவர் திரு. ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை, பி. ஏ., பி. எல். அவர்களாவர். இதன் விலை அணா பன்னிரண்டு.]

இந்நூல் தில்லைச் சிற்றம்பலவன் கோயில் வரலாறு என்று பெயர் பூண்டு விளங்கினும், தமிழக வரலாறாகவே திகழ்கின்றது. பல்லவ அரசன் சிம்மவர்மன் II (கி. பி. 550-575) முதல் நாளிதுவரையுள்ள வரலாறுகள் வரன்முறையாகக் கல்வெட்டுச் சான்றுகளுடன் தெளிவாகத் தரப்பட்டுள்ளன. அம்மட்டுமன்றிப் பல்லவர், சோழர், பாண்டியர், விசயநகரத்தார் முதலியவர்களுடைய ஆட்சி முறைகளும், தில்லைத் திருப்பணிகளும், போர் முறைகளும், வெற்றிகளும், வெற்றி நினைவூட்டாக எடுத்த திருக்கோபுரம் முதலிய திருப்பணிகளும், காஞ்சிபுரம் பச்சையப்ப முதலியார், செட்டிநாட்டரசர் முதலியோர் திருப்பணிகளும் வரலாறுகளும் செவ்விதிற் காணும் வாய்ப்பும் உள்ளன.

தில்லையம்பலவாணர் திருவுருவம், திருத்தொழில் முதலியவற்றின் சிறப்பியல்புகளும் திருமுறை முதலிய அருள்நூல் வாயிலாகவுள்ள திரு வரலாறுகளும் திருமுறைத் திருப்பதிகம் எங்ஙனம் பண்டைய மன்னவர்களால் போற்றப்பட்டனவென்பதும் நன்கு தெளியலாம். அண்ணாமலைப் பல்கலைக்கழகம் உள்ளிட்ட சூழவுள்ள திருக்கோவில் முதலிய சிறப்புக்களும் பிறவும் காட்டப்பட்டுள்ளன. தில்லைக் கோவிந்தராசப் பெருமாள் திருக்கோவில் வரலாறும் நன்கு அமைந்துள்ளது.

எல்லையிலா இன்பந்தரும் தில்லைநகர் காணச் செல்வார் ஒவ்வொருவர் கையிலும் இந்நூல் இன்றியமையாது இருத்தல் வேண்டும். இந்நூல் வரலாற்று நூல், இலக்கிய நூல், சிற்பத் திறங்காட்டும் சிறந்த நூல், தில்லை வழிகாட்டி நூல் எனப் பல பெயர் பொருந்தும் ஒரு நூலாகும். இந்நூல் கற்பார்க்கும் கற்பிப்பார்க்கும் பெருந்துணை புரியும். இதன்கண் அழகிய பலநிற ஓவியப் படங்கள் பல கண்ணைக்கவரும் வனப்புடன் காணப்படுகின்றன. தமிழகம் இதனைப் போற்றிப் பலனெய்துமாக.

['யோகத்திய உமா': இதன் ஆசிரியர் திரு. பி. பச்சையப்பன் அவர்கள் ஆவர். விலையிலா வெளியீடு. வெளியிடுவோர் தமிழ்நூல் நிலையம், வில்வாரணி (N. A.)]

இந்நூல் இக்காலத்துக்கு வேண்டிய நற்பான்மைவாய்ந்த நன்னூல் ஆகும். ஆங்கில முதலிய பிறமொழிச் சான்றோர் கடவுட்கொள்கையை இளைஞரும் அறிந்து ஈடேறும்பொருட்டு யாத்தமைத்த கொள்கையின் மொழிபெயர்ப்பாகும். மூலம்: தாருத்தம்மையார். மொழிபெயர்ப்பு எளிய இனிய செய்யுள் நடை. கண்ணிகள் நூற்று நாற்பதுக்குமேல் காணப்படுகின்றன. 'மான் குட்டி', 'இளமையும் முதுமையும்', 'நிலமெனும் ஒருதாய்', 'பொங்கல் வாழ்த்து' முதலிய செய்யுட் பகுதிகளும் இணைக்கப்பட்டுள்ளன. சிறந்த சொன்னயம் பொருள் நயங்கள் அமைந்தன. இதனை அனைவர்களும் வாங்கிக் கற்று ஆசிரியரவர்களால் இன்னும் பல நூல் வெளிவந்து தமிழ்த்தாய்க்கு அணிசெய்யப்படுமாறு துணைபுரிவார்களாக.



திருநெல்வேலித், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.




*சோழர் ஆட்சியின் தொடக்கக் காலத்திற்குரிய*
*வெண்கலத்தால் ஆக்கப்பட்ட*
**அம்பலவாணரின் திருவுரு**




சிலம்பு ௩௧ நவர் ஆண்டு ௧௯௮௭, கார்த்திகை பரல
டிசம்பர், 1956

# திருமூலர் - திருமந்திரம்

சித்தாந்தச் சைவத்திருமுறை பன்னிரண்டு என்ப. அவை முறையே திருத்தேவாரம் ஏழு, திருவாசகம் திருக்கோவையார் எட்டு, திருவிசைப்பா திருப்பல்லாண்டு ஒன்பது, திருமந்திரம் பத்து, பதினொராந்திருமுறை பன்னொன்று, திருத்தொண்டர் புராணம் பன்னிரண்டு என்ப.

இவற்றுள் திருத்தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம் ஆகிய திருப்பெயர்கள்ஆறு. இவை திருமுறை எண் பெறுங்கால் ஒன்று முதல் பத்து. கோவை எண் பெருங்கால் ஏழு, எட்டு, ஒன்பது, பத்து எனநான்கு. இவ்வாறு திருப்பெயாகளும் ஐவைந்து திருஎழுத்துக்களால் அமைந்துள்ளன. எனவே, சித்தாந்த சைவச் செந்தமிழ்த்திருமறைத் திருவைந்தெழுத்துப்போல் இவையும் அமைந்துள்ளமை பெரிதும் போற்றிப் புகழ்தற்கு உரியதாகும் திருத்தொண்டர் புராணத்தைத் திருக்கோவில் களில் திருமுறை ஓதுமாறு கட்டளையிடுங்கால் திருப்புராணம் என்றே வழங்கி வருகின்றனர். அம் முறையில் அதுவும் திருவைந்தெழுத்தாகும்.

திருநான் மறைமுடிவாம் மூவர் தமிழும் முறையே ஒருபுடை யொப்பாகச் சிறந்து அறம்பொருள் இன்பங்களையும் முனிமொழியாங்கோவை திருவடிப்பேற்றினையும், திருவாசகம் பற்றறுதியாகிய வீட்டினையும் குறிப்பனவாகும். வைப்பு முறைப்படி திருவாசகம் திருக்கோவையாரெனக் கூட்டி ஓதின் முறையே மூவர் தேவாரம், திருவாசகம், திருக்கோவையார் என ஐந்தாகும். இவ்வைந்தும் முறையே அறம் பொருள் இன்பம் வீடு பேறு என்

னும் ஐம்பொருளும் குறிப்பனவாகும். இம்முறையில் திருவாசகம் வீடாகவும், திருக்கோவையார் பேறாகவும் அமையும் மேலும் திருத்தேவாரம் செந்தமிழ்த்தனிச்சிறப்புத் திருமறையாகவும், திருவாசகம் அத்திருமறை முடிபாகவும், திருக்கோவையார் பெறுபேறாகவும் உளங்கொண்டு கிழமையுற நாளும் ஓதித் தொழுதுய்தல் சிறப்பென்க. பற்றறுதி—வைராக்கியம்.

திருத்தேவாரம் மூன்று திருக்கோவையார் திருவாசகம் இரண்டு ஆக ஐந்தும் 'சிவயசிவ' என்னும் திருவைந்தெழுத்தின் திருக்குறிப்புமாகும் ஆளுடைய பிள்ளையார் 'இருட்கடுவுண்டவ ரருளினராதலின் 'சி'கரத்தையும் ஆளுடைய அரசர் உலகமெல்லாம் ஈன்றாள் தன் திருவருளினராதலின் 'வ'கரத்தையும் குறிக்கும் வாய்மை பெறப்படும். ஆளுடைய நம்பி வல்வழக்கிட்டாட் கொண்ட திருவருளினராதலின் 'ய'கரமும், ஆளுடையடிகள் சிவனார் பாடவேண்டுமென வேண்டத் திருக்கோவையார் பாடியருளினராதலின் 'சி'கரமும் முன்னரே ஓதிய வழுத்துமுறைத் திருப்பாட்டாதலின் 'வ'கரமும் ஒக்கும் வாய்மையராவர். திருக்கோவையார் திருவடிப்பேற்றின் சிறப்பியல்பு தெளித்துக் காட்டும் திருமுறையாகும். இவ்வுண்மை வரும் திருமுறையான் உணர்க :

"வருவா சகத்தினின் முற்றுணாந் தோனைவண் தில்லைமன்னைத்
திருவா வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவைகண் டேயுமற் றப்பொருளைத்
தெருளாத வுள்ளத் தவர்கவி பாடிச சிரிப்பிப்பரே."
—கக. நம்பியாண்டார், கோயில் - ௩அ.

திருமூலர் சொல்லாகிய செந்தமிழ்த் 'திருமந்திரம்' தமிழாகமம் ஆகும். இவ்வுண்மையினை அகச்சான்றாகத் திருமூலநாயனார் அருளிச்செய்துள்ள வரும் திருமந்திரத் திருப்பாட்டான் உணர்க :

"நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியின் உள்ளே புகப்பெய்து போற்றிசெய்து
அந்தி மதிபுனை அரனடி நாடோறும்
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே." —திருமந்திரம்; ௭௩.

இத் தமிழாகமத்தின் விரிவே திருவுந்தியார் முதல் சங்கற்ப நிராகரணம் ஈறாகவுள்ள மெய்கண்ட நூற்கள் பதினான்கும் என்ப. அப் பதினான்கும் வருமாறு: க. திருவுந்தியார் உ. திருக்களிற்றுப்படியார் ௩. சிவஞானபோதம் ச. சிவஞானசித்தியார் ௫. இருபாஇருபஃது ௬. உண்மைவிளக்கம் எ. சிவப்பிரகாசம் அ. திருவருட்பயன் ௯. வினாவெண்பா க0. போற்றிப்பஃறொடை

கக. கொடிக்கவி கஉ. நெஞ்சுவிடுதூது கஙு. உண்மைநெறி விளக்கம் கச. சங்கற்ப நிராகரணம்.

செந்தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு ஓதப்பெற்று வந்தனவும், உலகினுக்கு உண்மை தந்தனவும், என்றும் தருவனவும், ஒருசொல்லாய்த் திகழ்வனவும் ஆகிய சிறந்த நூல்கள் ஐந்தென்ப அவை திருக்குறள், திருத்தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருமந்திரம என்பன. இவ்வுண்மை அருந்தவத் தமிழ் மூதாட்டியார் திருந்தியவுளத்தொடு பொருந்தவுரைத்த நல்வழித் திருப்பாட்டான் உணரலாம்:

"தேவர் குறளும் திருநான் மறைமுடிவாம்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
திருவா சகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்." —நல்வழி, சய.

இதன்கண் காணப்படும் 'மறைமுடிவாம்' என்னும் பாடமே நடுநின் றாய்வார்க்குப் பொருட்பொருத்தமுற அமைந்ததென்பது புலனாகாதிராது இப்பொழுது காணப்படும் 'மறைமுடிவும்' என்னும் பாடம் எந்தவகையானும் பொருந்துவதொன்றன்று. அது 'கருங்கொள்ளும் செங்கொள்ளும் தூணிப் பதக்கென்று, ஒருங்கொப்பக் கொண்டானும் ஊரன்' என்பதனையும் 'அருமறையைச் சிச்சிலி பண்டருந்தத் தேடும்' என்பதனையும் உற்றுணராமாக்கள் கூறும் வெற்றுரைக்குப் பொருந்து மேனும் நற்றிறம் படரும் வெற்றிசேர் நல்லார்க்கு எட்டுணையும் பொருந்தாதென்க.

'எவரேனும் தாமாக இலாடத்திட்ட, திருநீறும் சாதனமும்' உடையார் தேவர் எனப்படுவர். 'தாமாக' என்பது தாம் திருநீற்றுக்குரிய தேவனும் சிவனாக என்பதாம். 'திரு நான் மறை முடிவாம்' என்பதனைத் திருநான்மறையாம், மறை முடிவாம் என இணைத்துப் பொருள்கொள்க. அங்ஙனம் கொள்ளுங்கால் திருநான்மறையாம் மூவர்தமிழும், திருநான்மறை முடிவாம்' கோவை திருவாசகம் எனப் பொருள்வரும். 'அறம் பொருள் இன்பம்வீடு' அறையும் நூல் மறையும் மறைமுடிவும் எனப்படும். இவ்வுண்மை வரும் திருநெறிய தமிழ்த் திருப்பாட்டான் உணர்க:

"சுழிந்த கங்கை தோய்ந்ததிங்கள் தொல்லராநல் விதழி
சழிந்த சென்னிச் சைவவேடந் தானினைத்தைம் புலனும்
அழிந்த சிந்தை அந்தணாளர்க் கறம்பொருளின் பம் வீடு
மொழிந்த வாயான் முக்கணாதி மேயதுமுது குன்றே."
—சம்பந்தர்: க. ௧௩ - ௬.

இதன்கண் ஓதப்படும் 'கங்கை, திங்கள், அரா, இதழி என்னும் நான்கும் ஒருபுடையொப்பாக அறம் பொருளின்பம் வீடாகிய நான்கினையும் முறையே குறிப்பனவாகும், திருமூலர் சொல் இனம்பற்றி ஆகமம் ஆகும். 'சொல்' என்பது மந்திரம், அருமறை, செவியறிவுறூஉ, திருவார்த்தை, உபதேசம் என்பன வற்றை ஈண்டுக் குறிப்பதாகும். அவ் வுண்மை 'மனிதர்காள் இங்கேவம் ஒன்று சொல்லுகேன்' என்னும் அப்பர்பெருமான் அருள்மொழியான் உணரலாகும். அவர்தம் சொல் என்னும் அருள்மொழிக்கு மரபறியார் வெறுஞ் சொல்லெனக் கூறுவர். மரபினேர் அருமறையாகிய உபதேசமெனவே மொழிவர். அம் முறை திருமந்திரத்தின்கண் முதல் தந்திரத் தொடக்கத்து 'உபதேசம்' என்று ஓதியருள்வதாலும் உணரலாம்.

'ஒருவாசகம்' என்று உணர் என்பது ஒருசொல் என்று உணர் என்பதாகும். ஒருசொல், ஒப்புயர்வில்லா ஒருமெய்ப் பொருளையும் அப்பொருட்கு மீளா ஆளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி என்றும் பொன்றாப் பேரின்பந்துய்க்கும் வழிவகைகளையும் எடுத்து ஓதுவதில் முரணின்றி அரண் செய்யும் சொல் என்பதே ஆகும். பின் அது கருவியாகு பெயராய் நூலைக் குறிக்கும். மேலும் ஓரினப்பொருளை ஒருங்கெண்ணுவதே மரபாதலின், தமிழ் நூற்களுள்ளும் ஒத்த கருத்துடையனவற்றையே எண்ணும் இந்நிலைக்களத்து ஒவ்வாமையும் அயன்மொழியும் சேர்ந்த நான்கு வேதங்களின் முடிவும் கோடுதல் உரைமுறைக்கு எங்ஙனம் ஒவ்வும்? இவ் வுண்மை: 'செப்பினும் வினவினும் சினைமுதற் கிளவிக்கு, அப் பொருளாகும் உறழ்துணைப் பொருளே' என்னும் தொல்காப்பிய (கசு) நூற்பாவானும் உணர்க.

தமிழாகமமாகிய திருமந்திரம் முழுத்தமிழின்வழியே வந்த தென்பதனை வரும் திருப்பாட்டானும் உணர்க!

'குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் தன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டெனுச்சி
அடிமன்ன வைத்த பிரான்மூல னாகின்ற அங்கணனே.'

—கக. நம்பியாண்டார், திருத்தொண்டர்—ஙசு.

முழுத்தமிழ் - கலப்பிலாத் தூயதமிழ்; முழுமுதல் விழுப்பொருளாம் சிவபெருமான் திருவடியுண்மையினை மெய்ம்மையான் உணர்த்தி எய்துவிக்கும் நிறைத்தமிழ். படிமன்னு வேதம் - உலக வழக்கினும் நூல்வழக்கினும் நிலைபெற்றுள்ள தூயதமிழ் மறை.

சேக்கிழார் அடிகளும் சிவபெருமான் தான் தந்தருளிய ஆகமப் பொருளாகிய 'இறை உயிர் தளை என்னும் முப்பொரு ளுண்மையினைத் தகுதிவாய்ந்த தமிழ்மொழியின்கண் மண்ணின் மிசைத் திருமூலர் வாயிலாக வகுத்தருளினன் என ஓதினர். அது வருமாறு :

'தண்ணிலவார் சடையார்தாம் தந்தவா கமப்பொருளை
மண்ணின்மிசைத் திருமூலர் வாக்கினாற் றமிழ்வகுப்பக்
கண்ணியவத் திருவருளா லவ்வுடலைக் கரப்பிக்க
எண்ணிறைந்த உணர்வுடையார் ஈசரரு ளெனவுணர்ந்தார்.
—கஉ. திருமூலநாயனார், உரு.

இதன்கண் ஆகமப்பொருளை என்னும் ஓத்துக் காணப்படுதலால் திருமூலர் செந்தமிழின்கண் திருவருளால் வரைதற்குமுன் ஆகமம், பொருளளவாக வழங்கிவந்ததன்றி நூலளவாக வேறெம் மொழிக்கண்ணும் வரையப்படவில்லை என்பது போதரும்.

திருமந்திரத்தின்கண் குறிக்கப்படுவன நன்னெறி நான்மை நற்பொருளென்பதூஉம் அதன் வாயிலாகத் திருக்கோவில், திருத்தொண்டு, சிவனடி சேர்தல், சேர்ப்பித்தல் முதலிய முறைகளை விரித்து விளக்குவதென்பதூஉம் போதரும். இதனை, திருக்கோவில் தொண்டுசிவச் சேர்வுசேர்ப் பித்தல், உருக்குசிவ சிவமூலர் என்பதனுன் நினைவு கூர்க.

சேக்கிழாரடிகள் திருமந்திரம் நுதலும் பொருளினைக் கூறும் திருப்பாட்டு வருமாறு :

'ஊனுடம்பிற் பிறவிவிடம் தீர்ந்துலகத் தோருய்ய
ஞானமுதல் நான்குமலர் நற்றிருமந் திரமாலை
பான்மைமுறை யோராண்டுக் கொன்றாகப் பரம்பொருளாம்
ஏனெயெயி றணிந்தாரை ஒன்றவன்றான் எனவெடுத்து.'
—கஉ. திருமூலர், உசு.

அகச்சான்றாக வரும் திருப்பாட்டு வருமாறு :

'பிறப்பிலி நாதனைப் பேர்நந்தி தன்னைச்
சிறப்பொடு வானவர் சென்றுகை கூப்பி
மறப்பிலர் நெஞ்சினுள் மந்திர மாலை
உறைப்பொடுங் கூடிநின் றோதலு மாமே.'
—நூ0. திருமந்திரம் - கசஅ.

ஞானமுதல் நான்கு : அறிவு, செறிவு, நோன்பு, சீலம் என்பன.

தேவர்குறள் அன்பியலாம் உலகியலைச் சிறப்பாகவும் அருளியலாம் வீட்டியலைப் பொதுவாகவும் ஓதுகின்றது. மூவர்தமிழ்

அருளியலைச் சிறப்பாகவும், அன்பியலைப் பொதுவாகவும் ஓது கின்றன. முனிமொழியும் திருவாசகம் அருளியலைச் சிறப் பாகவும் இன்பியலைப் பொதுவாகவும் கூறுகின்றது. திருக் கோவையார் இன்பியலை அருளியல் அன்பியலோடு பொதிந்து ஓதுகின்றது. இன்பியல் - திருவடிப்பேறு.

திருமூலர் சொல் அன்பியல் அருளியல் இன்பியல் மூன்றிற் கும் இலக்கணம் ஓதுகின்றது. அன்பியலுக்கு இலக்கணமாக ஆட்சிமுறை, அறமுறை, ஒழுக்கம், கல்வி, வாழ்க்கை, வினைப் பயன், இம்மை உம்மை அம்மை முதலியனவும், அருளிய லிலக் கணமாகத் திருக்கோவிலமைப்பு திருக்கோவில் வழிபாடு, சிவ குரு, சிவனடியார் வழிபாடு முதலியனவும், இன்பியல் இலக்கண மாகத் திரிபுரம் முதலிய புராண நிகழ்ச்சிகள் வேறோர் உண்மை புணர்த்தும் உருவகக் கதைகளென்பதூஉம், திருவம்பல முதலிய சக்கர அமைப்புக்களும், அகத்தவ முதலிய யோக முறைகளும், திருவுருவ அமைப்புக்களும், நாள் வழிபாடு திருவிழா முதலிய சிறப்புக்களும், மந்திர மொழிகளும், கடவுள் மங்கலம், குட முழுக்கு முதலிய திருக்கோவில் திருப்பணிகளும், செந்தமிழ் மொழியானே நிகழ்தல் வேண்டும் என்னும் சீர்மைகளும், திருவைந்தெழுத்தின் விரிவுகளும், திருவடிப் பேற்றின் சிறப்பு முதலியனவும் கொள்ளும் உடன்பாட்டால் வரும் நன்மையும் கொள்ளா எதிர்மறையான் வரும் தீமையும் இதன்கண் ஓதப்பட் டுள்ளன.

தேவர் குறளும் எனத் தொடங்கித் திருமூலர் சொல்லும் என முடித்திருத்தலின் அவ் இருபெரும் நூலகளும் இலக்கண இலக்கியமாகத் திகழும் ஒரு பேருண்மையினைப் புலப்படுத்து வன காண்க. செந்தமிழ் மொழியினாலேயே திருக்கோவில் வழிபாடுகளனைத்தும் நடத்துதல் வேண்டுமென்னும் திருவுள்ளம் சிவபெருமானுக்கு உள்ளது. அதனாலேயே அவன் ஆகமப் பொருளைத் திருமூலர் வாயிலாக மொழிவித்து வெளிப்படுத்தி யருளினன். காலக் கொடுமையால் சாலமயங்கிய அயன்மொழி மருளினர் அதனைப் புறக்கணித்து ஒழித்துக்கட்டினர். அம் மட்டோ! அத் திருமந்திரச செந்தமிழ் அருள்நூலைப் புதைத்து மறைத்தும் விட்டனர். இவ்வுண்மை செவி வழக்காக ஆளுடைய பிள்ளையார் திருவாவடுதுறை வழிபாட்டிற்குச் சென்ற காலத்துப் பசிபீடத்தருகே தமிழ் மணக்கின்றதே என்று மொழிந் தருளினரெனவும், அதன்மேல் வெளிப்படுத்தப்பட்டதெனவும் ஆன்றோர் கூறும் உண்மை இருவகை வழக்கினும் நின்று நிலவுகின்ற மெய்ம்மைத் தன்மையான் உணரலாம். அத் தகைய புறக்கணிப்பு நிலைமையே ஆயிரத்து முந்நூற்றைம்

பது யாண்டுகள் கழிந்த இந் நாளிலும் இருக்கின்றது. இந் நெடுங்காலம் அந் நூல் வழக்கத்தில் வந்திருப்பின் அதற்கு வேண்டும் பேருரை சிற்றுரைகளும், வழிநூல் சார்பு நூல்களும் அளவின்றிப் பல்கிப் பெருகித் திகழ்ந்திருக்குமல்லவா! திருவருளால் தமிழில் ஆகமம் தோன்றியும் திருக்கோவில்களில் வடமொழியிலேயே இருப்பதும், அம்மொழியே ஆற்றலுடையது, அதனை மாற்றுதல் கூடாது என மருண்டு மறுப்பதும் திருவருள் நோக்கத்துக்கும் திருமுறைச் செல்வர் கோட்பாட்டிற்கும் முற்றும் மாறுபட்ட கொடுஞ் செயல்களாகும். சித்தாந்த சைவச்சிரியோர், இதனை மனங்கொண்டு மீண்டும் திருக்கோவில்களில் தமிழாகமத்தை நடைமுறைக்குக் கொண்டுவருவார்களாக அந்நாளே உண்மைச் சைவம் உலகிடைப் பரவி உலவா நற்பயனளிக்கும் பொன்னாளாகும்.

திருமந்திரச் செழுந்தமிழாகமம் மெய்கண்டான் தமிழாகிய சிவஞானபோத நூற்பாக்களுள் பத்தாம் நூற்பாவிற்குரிய இலக்கியமாகும். பத்தாம் நூற்பா,

> "அவனே தானே ஆகிய அந்நெறி
> ஏகன் ஆகி இறைபணி நிற்க
> மலமாயை தன்னொடு வல்வினை யின்றே."

என்பதாகும். ஈண்டு ஓதப்பெறுகின்ற 'இறைபணியே' திருமந்திரத்தின்கண் காரண காரியத் தொடர்பாய் ஓதப்பெறுகின்றது. இவ் வுண்மைகளெல்லாம் இப்பொழுது நம் கழகத்து அச்சாகிவரும் திருமந்திரத் தெளிவுரைக்கண் பரக்கக் காணலாம். ஒரு சிறிது ஈண்டும் விளக்குதும்.

செந்தமிழ் நாடொன்றே திருவடிஞானம் பெருந்தன்மை வாய்ந்த சீரியோர் அருளால் தோன்றுதற்கு வாய்ப்பானது என்பதும், தோன்றியவர் சிவபெருமானைத் திருவருள் ஆணைவழி நின்று அச் செந்தமிழால் பாடித் தொழுதல் வேண்டும் என்பதும், அதுவே சிவபெருமானுக்கு உண்மை உவப்பென்பதும் வரும் திருமந்திரத் திருப்பாட்டான் உணர்க.

> "பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
> முன்னைநன் றாக முயல்தவஞ் செய்கிலர்
> என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
> தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே." (௧௫௨)

தமிழிலன்றி அயன் மொழியிலும் தமிழரன்றி அயன்மொழிப் பற்றினரும் செய்யும் சிவ வழிபாடு சிறப்புடையதாகாதென்பது வரும் திருப்பாட்டானுணர்க.

"பேர்கொண்ட பார்ப்பான் பிரான்தன்னை அர்ச்சித்தாற்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாம்என்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே." (௭0உ)

"சத்தியம் இன்றித் தனிஞானந் தானின்றி
ஒத்த விடையம்விட் டோரும் உணர்வின்றிப்
பத்தியும் இன்றிப் பரன்உண்மை யின்றிப்
பித்தேறும் மூடர் பிராமணர் தாம்அன்றே." (அக)

செந்தமிழ்த் திருவைந் தெழுத்தே எல்லா முதன்மையும் எல்லா அருண்மையும் நிறைந்த ஆதிமந்திரம் என்பது வரும் பாட்டா னுணர்க!

"ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீர்உல குக்குயி ராவதும்
நன்றுகண் டீர்இனி நமச்சிவா யப்பழம்
தின்றுகண் டேற்கிது தித்த வாறே." (உகஉஉ)

முப்பொருள் உண்மையினைப் 'பதிபசுபாசம்' (கடுகூ) என ஓதும் திருப்பாட்டான் உணரலாம். இம் முப்பொருளுண்மை தொன்மைச் செந்தமிழ்ச் சான்றோர் நிலைநாட்டிய நன்மைக் குறிக்கோளாகும். அவ்வுண்மை ஏறத்தாழ ஆறாயிரம் ஆண்டுக்கு முன்னுள்ளதாகிய தொல்காப்பிய நூற்பாவான் உணர்க.

'வேண்டிய கல்வி யாண்டும்மூன் றிறவாது.' —தொல். (கஅஅ)

இதனை யாண்டும் வேண்டிய கல்வி மூன்றிறவாது எனக் கொண்டு கூட்டுக. மூன்று: இறை, உயிர், தளை.

இத்திருமந்திரத் தமிழாகமம் சித்தாந்த சைவ முழுமுத னூல். அவ்வுண்மையினைப் போதிக்கும் திருப்பாட்டு வருமாறு:

"ஞேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை
மாயத்தை மாமாயை தன்னில் வரும்பரை
ஆயத்தை அச்சிவன் தன்னை அகோசர
வீயத்தை முற்றும் விளக்கியிட் டேனே." (கஙு)

இதன்கண் முறையே உணரப்படும் பொருள், உணர்வு, உணர்பொருள், தூவாமாயை, தூமாயை, தூமாயையைத் தொழிற்படுத்தும் திருவருளாற்றல், அவ்வாற்றலைவிட்டு நீங்காச் சிவன், அவ்வாற்றலைத் தன்னுள் அடக்கித் தானாய்த்திகழும் தென்னாடுடைய சிவன் என எண்பெரும் பொருள்கள் ஓதப்

[என்னுடைய பிறப்பையும் செயல்களையும் எவனொருவன் இப்படி உண்மையாக அறிவானோ, அவன் இந்த தேஹத்தை விட்டு மறுபடியும் பிறப்பை அடைவதில்லை; அர்ஜுநா! அவன என்னையே அடைகிறான்] என்று தானே வாய்புலர்த்தும்படியான பெரும் பிறப்பையுடையவன்.

ஆக, இம்மந்திரத்தால் திருநாமஸங்கீர்த்தனப் பெருமை பேசப்பட்டதாயிற்று.

१२. प्र तत्ते अद्य शिपिविष्ट नामार्यः शंसामि वयुनानि विद्वान्।
तं त्वा गृणामि तवसमतव्यान् क्षयन्तमस्य रजसः पराके॥

**12. ப்ர தத் தே அத்₃ய ஶிபிவிஷ்ட நாம**
**அர்ய: ஶம்ஸாமி வயுநாநி வித்₃வாந்।**
**தம் த்வா க்₃ருணாமி தவஸமதவ்யாந்**
**க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே॥**

**பதவுரை:-ஶிபிவிஷ்ட**-*பரஞ்சோதியே!* **தே**-*உன்னுடைய* **தத்**—*ஸுப்ரஸித்தமான,* **நாம**—*திருநாமத்தை.* **அர்ய:**—*(யாகாதிகளை) செய்பவனும்* **வயுநாநி**—*மோக்ஷோபாயங்களை,* **வித்₃வாந்**-*அறிந்தவனான நான்,* **அத்₃ய**-*இன்று,* **ப்ரஶம்ஸாமி**-*மிகவும் துதிக்கிறேன்.* **தவஸம்**—*மிகவும் புதியவனும்,* **அஸ்ய ரஜஸ: பராகே**—*இந்த ப்ரக்ருதி மண்டலத்திற்கு அப்பால்,* **க்ஷயந்தம்**—*எழுந்தருளியிருக்கும்.* **தம் த்வா**—*அப்படிப்பட்ட உன்னை,* **அதவ்யாந்**—*அதிகுணனை யான்,* **க்₃ருணாமி**—*ஸங்கீர்த்தனம் செய்கிறேன்.*

சென்ற மந்திரத்தில் பேசப்பட்ட திருநாம ஸங்கீர்த்தனத்தைத் தானே அனுஷ்டித்துக் காட்டுகிறான இம்மந்திரத்தில்.

(ஶிபிவிஷ்ட) பரஞ்சோதிப் பெருமானே! 'நாராயணபரோ ஜ்யோதி:' என்று பரஞ்சோதியாக ஓதப்படுமவனே! (தே நாம) உன்னுடையதான நாமம். திருநாமத்துக்குப் பெருமை அவனுடையதாயிருக்கையேயாகும். ஓதுவார் ஓத்தெல்லாம எவ்வுலகத்தெவ்வெவையும் சாதுவாய் நின்புகழின் தகையல்லால் பிறிதில்லாமலிருக்கும்

வந்தான் என்பதும், அக் காலை அவன் பணியாற்றிய வேந்தனிடத்தில் வணிகன் ஒருவனைப் பிற நாட்டு ஒற்றன் எனக்காட்டித் தண்டிக்கச் செய்ததால் மறு பிறவியில் அவனும் கள்வன் என ஏசப்பட்டுக் கொல்லப்படுகிறான் என்பதும் சிலப்பதிகாரத்துள் காட்டப்பட்டுள்ளன. அவ்வாறு கொல்விக்கப்பட்ட சங்கமன் என்பான் மனைவி நீலி என்பவள் இட்ட சாபம் வந்து பட்ட காரணத்தால் கண்ணகி கோவலனை இழந்து கடுந்துயருற்றாள் என்று சிலப்பதிகாரம் காட்டுகிறது. இது திருக்குறளின் கருத்தினைத் தழுவி வந்த ஒரு நிகழ்ச்சியைக் காட்டுவது ஆகும். திருக்குறள் முற்பகலில் ஒருவன் பிறனுக்குத் தீமை செய்தால் பிற்பகலில் அது தானே வந்து விளையும் என்று கூறுகிறது. சிலப்பதிகாரத்திலிருந்து இப்பொழுது சொல்லப்பட்ட நிகழ்ச்சியோ சென்ற பிறவியில் ஒருவன் பிறனுக்குத் தீமை செய்தால் அது மறுபிறப்பில் அவனுக்கு வந்து துயர்விளைக்கும் என்பதைக் காட்டுகிறது.

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை."

என்பது மற்றொரு திருக்குறள். கடவுளைத்தொழுது கணவனையே கடவுள் எனக்கொண்டு வழிபட்டு அவனுக்கு ஆவன செய்து உதவுகின்ற மனைவி இட்ட கட்டளை இயற்கையுலகில் கூட நடைபெறும் என்பது போன்ற கருத்து இத் திருக்குறளில் அமைக்கப்பட்டு இருப்பதாகப் பன்னெடுங்காலமாகச் சொல்லப்பட்டு வருகின்றது. இக்குறளுக்கு இத்தகைய பத்தினிப் பெண்ணொருத்தி பெய்யெனப் பெய்கின்ற பெருமழையைப் போன்றவள் என்று கொண்டு அறிஞர் சிலர் பொருள் கூறி வருகின்றார்கள். எவ்வாறாயினும், இந்தக் குறளின் கருத்து சிலப்பதிகாரத்திற் செவ்வன் அமைக்கப்பட்டிருக்கிறது என்பது போதரும். கண்ணகி திருமணம் ஆன நாள்தொட்டுக் கணவனிடத்தில் சிற்றின்பத்தில் ஈடுபட்ட நேரம் அல்லாத பிற காலங்களில் அவனைத் தலைவன் போல், கடவுள் போல் கருதி வந்தாள் என்பது ஊகிக்கப்படுகின்றது. மனையறம்படுத்த காதையில் கண்ணகியும் கோவலனும் எவ்வாறு இல்லறம் நடத்தினார்கள் என்பது சொல்லப்படும் என எதிர்பார்த்தல் இயல்பு. ஆயினும், அக் காதையில் அவ் விருவரும் இன்ப வுலகில் எவ்வாறு திளைத்தனர் என்று காட்டப்பட்டிருக்கிறதே அன்றிக் கண்ணகி வீட்டில் உள்ள பணிகளை எவ்வாறு இயற்றினாள் என்பது சொல்லப்படவில்லை. பின்னர்க் கொலைக்களக்காதையில் வருகின்ற செய்திகளைக்கொண்டுதான் அவள் முன்னர்ப் புகார் நகரத்தில் கணவனோடு வாழ்ந்தகாலையில் எங்ஙனம் இல்லறம்

நடத்தி இருப்பாள் என்பதை ஒருவாறு ஊகித்தல் கூடும். மதுரையில் மாதரி என்ற இடைக்குலமகள் வீட்டில் தங்கி இருந்து சமைத்துக் கணவனை உண்ணும்படி அழைக்கின்றவள் "அமுதம் உண்க அடிகள்" என அழைத்தாள் என்பதாகவே உணர்கிறோம். அதற்கு முன்னதாக, அவள் அவனுடைய அடிகளைத் தொழுது வணங்கினாள் என்று இளங்கோவடிகள் கூறியுள்ளார்.

> "சுடிமலா அங்கையிற் காதலன் அடிநீர்
> சுடுமண மண்டையின் தொழுதனள் மாற்றி" (௧௬: ௩௮-௩௯)

என்று வருவதைக் காண்க. இவ்வாறு கணவனை வழிபட்டு வந்த அவள் சொற்கள் பொன்னேபோல் போற்றப்பட்டுச் செயற்பட்டன என்பது சிலப்பதிகாரத்தால் அறியக்கிடக்கின்ற செய்தி. இத்தகைய பெருமையை உடைய காரணத்தால் இவள் தேவர்களையும் ஏவல் கொண்டாள் என்பது கூறப்பட்டு இருக்கிறது. குற்றம் ஒன்றும் செய்திலாத தன் கணவன் கொல்லப்பட்டானே என வருந்தி ஞாயிற்றைநோக்கி "என் கணவன் கள்வன் தானோ?" என்ற வினவை இவள் எழுப்ப, ஞாயிறும் "கள்வன் அல்லன உன கணவன" என்று விடை இறுததததாகச் சிலப்பதிகாரம் கூறுகிறது. பின்னர், அவனுக்குத் தவறு இழைத்த மதுரைமாநகரத்திடம் சீறி மதுரைக்குத் தீ ஊட்ட இவள் முற்பட்டபொழுது இவளது ஏவலைக் கேட்க அங்கியங் கடவுள் எதிர் வந்தான் என்று சொல்லப்பட்டுள்ளது. "இந்நகரைத் தீப் பற்றுக" என அவள் உரைத்தவுடன் அங்கியங் கடவுள் எதிரிலே வந்து "யார் நீங்கலாக?" எனக் கேட்டான் இவ்வாறு ஞாயிற்றையும், அக்கினியையும் ஏவல் கொண்ட இவள் முன்னர், மதுரைக்குரிய கடவுள் கூட தோன்றுதற்கு நாணுகின்ற நிலை கட்டுரைகாதையில் காணப்படுகிறது. மதுரையை எரித்த சீற்றத்தோடு செல்லுகின்ற இவள் முன்னர்த்தோன்றி மதுரையை அழலினின்று விடுதலைசெய்துகொள்ளவேண்டும் என விரும்புகின்ற மதுராபுரியென்னும் தெய்வம், இவள் முன் தோன்றாது பின்னாலேயே தோன்றி இவள் செவ்வியறிந்து பேசுதற்கு முயன்றது எனச் சொல்லப்பட்டுளது. அத் தெய்வம், "முன்னிலை ஈயாள் பின்னிலை தோன்றி," "மாதராய்" என்றும், "அணி இழாய்" என்றும், "நங்கை" என்றும், "பைந்தொடி" என்றும், "பெருந்தகைப் பெண்" என்றும், "தோழி" என்றும் பலவாறு விளிக்க, இவள் "என் பின் வருகின்ற நீ யார்?" என்று திரும்பிப் பாராமலேயே கேட்க, இவள்மாட்டுத் தன் குறையைச் சொல்லலுற்றது எனப் படிக்கிறோம். மதுராபுரித் தெய்வத்தின் குறை வேறொன்றுமில்லை. மதுரையின் எஞ்சிய பகுதிகளையாவது தீக்கிரையாக்காமல் பாதுகாக்க வேண்டும் என்பது அதனுடைய

நோக்கம். அன்றியும், கண்ணகிக்குக் கோவலனுடைய பண்டை ஊழ்வினை வந்து உருத்து ஊட்டிய விதத்தை விளங்கச் சொல்ல வேண்டும் என்பதும் நோக்கம். இதனை இவளுடைய செவ்வி நோக்கிச் சொல்வதற்காக அத் தெய்வம் காத்திருந்தது என்றால்,

"தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்."

ஆகிய ஒரு பெண்மகளுடைய ஏவலைச்செய்தற்குத் தேவரும, முனிவரும், பிறரும எவவாறு காத்துள்ளனர் என்பது நன்றாக விளங்கும் அன்றோ?

" ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு." (சுசஉ)

என்பது மற்றொரு திருக்குறள். ஒருவர்க்குச் செல்வம் விளைவதும், கேடு வந்து உறுவதும் அவர் கூறும் சொற்களால் ஆகும் என்பது இக் குறளின் கருத்து. இதைப் பொதுமக்கள் "ஆவதும் சொல்லாலே, அழிவதும் சொல்லாலே" என்ற பழமொழி வாயிலாக அறிந்துள்ளார்கள். அல்லாமலும், "யாரால் கேடு? வாயால் கேடு" என்ற பழமொழியும் இதனையே விளக்குவது. சிலப்பதிகாரத்தில் இக்கருத்து தெளிவுபடுத்தப் படுகின்ற இடங்கள் சில உள. பாண்டிய மன்னன் குற்றம் செய்திலாத கோவலனைக் கொன்றதற்குக் காரணம் அவனுடைய சொல்லின் கண் சோர்வு என்பது அறியப்படுகிறது. இதனை இளங்கோ வடிகள் அழகாக அமைத்துள்ளார்

" தாழ்பூங் கோதை தன்காற் சிலம்பு
கன்றிய கள்வன் கையது ஆகில்
கொன்றச் சிலம்பு கொணர்க ஈங்கென." (கசு : கருக-ரு)

என்ற அடிகளில், "கொன்றச் சிலம்பு" என வருவது
சிலம்பு" என்றதற்குப் பதிலாக அவனாற் கூறப்பட்டது என்பது அறிஞர் துணிவு. தன் மனைவியின் காற்சிலம்பைக் கவர்ந்து கொண்ட கள்வன் அகப்பட்டுள்ளான் எனக் கேள்வியுற்றதும், அரசன் "அச் சிலம்பு கூறப்படும் அம் மனிதன் கையில் உளதாயின், அவனைக் கொல்லும் பொருட்டு இவ்விடம் கொண்டு வருக" எனச் சொல்லக் கருதினன். ஆயினும், "கொல்லச் சிலம்பைக் கொணர்க" என்பதற்குப் பதிலாக, "கொன்று அச் சிலம்பைக் கொணர்க" என்று கூறி விட்டான். இதனால் பெருந்தீமை விளைந்தது. "கொன்றச் சிலம்பு கொணர்க" என்பதற்கும், "கொல்லச் சிலம்பு கொணர்க" என்பதற்கும் பெரிய வேறுபாடு உண்டு என்பது வெளிப்படை. "கொன்றச் சிலம்பு கொணர்க" என்றால், மனிதனைக் கொன்று விட்டுச் சிலம்பினைக் கொண்டு

வருக என்பது பொருள். "கொல்லச் சிலம்பு கொணர்க" என்றால், அம் மனிதனைக் கொல்லும பொருட்டுச் சிலம்பினைக் கொண்டு வருக என்பது பொருள். பாண்டியனுடைய சொற் சோர்வு காரணமாக அவனுக்குப் பெருங்கேடு நேர்ந்தது என்பது இச் செய்தியால் நன்கு உணரப்படும் இது, மேலே குறிப்பிடப் பட்ட திருக்குறளுக்குத் தக்கதொரு சான்றாகும்.

அன்றியும், வட நாட்டில் ஆண்டுவந்த பாலகுமரன் என்பான் ஒருவனுடைய மக்கள் கனகன், விசயன் என்ற இருவர் சொல்லின்கண் சோர்வுபட்ட காரணத்தால், செருக்கு அடக்கி முடித்தலை நெரிக்கப்பட்டு உணரும்படி செய்யப்பட்ட னர் என்பது சிலப்பதிகாரம் காட்டுகின்ற மற்றொரு செய்தி. எவரோ ஒருவரது திருமண வீட்டிலே இருந்தவண்ணம் பொழுதுபோக்காக, கனக விசயர் பேசிய பேச்சிலே தமிழ் நாட்டு மன்னர் அருந்திறனைக் குறைகூறிப் பேசினர். இச் செய்தியைக் கேள்வியுற்ற செங்குட்டுவன் சீற்றங்கொண்டு எழுந்து அந் நாடு சென்று அவரை வென்று அவா முடித்தலை நெரியும்படி கல் ஒன்றைச் சுமத்திக் கண்ணகியின் படிமத்திற் கெனக் கொண்டு வந்தான் எனச் சிலப்பதிகாரம் சொல்லுகிறது. கால்கோள் காதையில் செங்குட்டுவன் சஞ்சயன் என்பானிடம் கூறுவதாக வருகின்ற பகுதியில்,

"பால குமரன் மக்கள் மற்றவர்
காவா நாவிற் கனகனும் விசயனும்
விருந்தின் மன்னர் தம்மொடுங் கூடி
அருந்தமிழ் ஆற்றல் அறிந்திலர் ஆங்கெனக்
கூற்றம் கொண்டுஇச் சேனை செல்வது" (கடுஅ · சுஉ)

என்பது உரைக்கப்படுகிறது. இவ்விடத்தில், கனகனும் விசய னும் தம் நாவினை வாளா வைத்திருந்தால் செங்குட்டுவனுடைய சீற்றத்திற்கு ஆளாகி இருக்கமாட்டார்கள் என்பது இளங்கோ வடிகளால் காட்டப்பட்டுள்ளது. எனவே, ஆக்கமும் கேடும் தன்னால் வருவதால் சொல்லின்கண் சோர்வினை ஒருவர் காத் தோம்பல் வேண்டும் என்ற திருக்குறள் அழகுபட ஈண்டு எடுத் துக் காட்டப்பட்டமை ஒருவரால் அறியப்படும்.

"இன்னாசெய் தாரை யொறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்" (௩கச)

என்னும் திருக்குறள் சிலப்பதிகாரத்தால் ஒளிபெற்றுள்ளது. கண்ணகிக்குக் கோவலன் இன்னாமை செய்தான் என்றே ஒப்புக் கொள்ளுதல் வேண்டும். மணந்த அவளோடு சில ஆண்டுகள் கூடி வாழ்ந்து பிற்பாடு அவளினின்று நீங்கிக் கணிகையர்

குலத்து மாதவிமாட்டுப் பெரு நட்புப்பூண்டு, விடுதல் அறியா விருப்புடையன் ஆயினன். இல்லினுள்ளே கண்ணகி வருத்தம் உற்று இருந்தாலும், அவளைப்பற்றிக் கோவலன் கவலை கொண்டான் அல்லன். கண்ணகிக்குத் தன் கணவன் தன்னுடன் இல்லையே என்றதனல் வருகின்ற வருத்தத்தைக்காட்டிலும், அவன் இவளைப் பிரிந்து வேறொருத்தி மாட்டு நட்புப் பூண்டுள்ளான் எனப் பிறர் கூறும் ஏச்சுரையே பெரு வருத்தத்தைத் தந்திருத்தல்வேண்டும். அத்தகைய இன்னமைகளைக் கோவலன் அவளுக்குச் செய்திருந்தானே ஆனலும், கண்ணகி அவனிடம் முழு அன்போடு நடந்து வந்துள்ளாள் என்பதே சிலப்பதிகாரம் காட்டும் செவ்விய நிலை. வேறொரு மகளாயின், கணிகை விட்டிலிருந்து வருத்தத்தோடும், ஏமாற்றத்தோடும் கணவன் திரும்பி வந்த பொழுது முகம் சுளித்து வெறுத்து ஒதுக்கியிருப்பாள். கண்ணகியோ, கோவலன் தன்னுடைய குன்றம போன்ற பெரும் பொருள்கள் எல்லாம் தொலைந்தனவே என வருந்தி உரைத்த வேளையில், மேலும் மாதவிக்குப் பொருள் கொடுக்க இயலாது கணவன் வருந்துகின்றானே என நினைந்து, அவனுக்குத் தன்னுடைய சிலம்புகளை அவன் கேளாமலே எடுத்துத் தந்தாள் என்பது வியக்கத்தக்கது. அவ்வாறு கொடுத்த பொழுது உளமகிழ்ச்சியோடு அவள தந்தாள் எனக் கூறபபட்டுள்ளது.

"நலங்கேழ் முறுவல் நகைமுகம் காட்டி" (க: எஉ)

என்று இதனை அடிகள் கூறுகின்றார். அன்றியும், அச் சிலம்புகளை எடுத்துக்கொண்டு மதுரை மாநகர் புகுந்து அந்தச் சிலம்பின் விலைப்பொருளை முதலாகவைத்து வாணிகஞ்செய்ய எண்ணியுள்ளேன் எனக் கோவலன் கூறி, உடன் வருக என்றவுடன் அவளும் புறப்பட்டுவிட்டாள். அவள்மாட்டு அன்பிலாதவனும் தன்னைப் பல்லாண்டுகள் பிரிந்து இருந்தவனும் ஆகிய கணவன் "உடன் புறப்பட்டு வருக" என்றவுடன், மறுத்து உரை ஒன்றும் சொல்லாமல் அவள் அவனோடு புறப்பட்டுச் சென்றமை, அவளுடைய பெருமையை விளக்குகின்றது. அவள் இவ்வாறு அவனிடம் அன்பு செலுத்துதற்கு உரிய பெற்றியன் கோவலன் அல்லன் என்பது நூலினல் அறியப்படுகிறது. கோவலனே இதனைப் பிறிதோரிடத்தில் ஒப்புக்கொள்கிறான். கொல்லப்படப்போகிறேன் என்பது தெரியாமலே வீட்டினின்று வெளியாகிற கோவலன், கடைசிமுறையாக மனைவியினிடத்திலிருந்து பிரியாவிடை பெற்றுச் செல்ல இருக்கின்ற கோவலன் இவளால் அமுதூட்டப்பட்டுப் பிறகு மகிழ்ச்சியோடு உரையாடிக் கொண்டிருக்கின்ற வேளையில்,

“சிறுமுதுக் குறைவிகருச் சிறுமையுஞ் செய்தேன்
வழுவெனும் பாரேன் மாநகா மருங்கீண்டு
எழுகென எழுந்தாய் என்செய்தனை” (௧௬: ௬௮ - ௭0)

என்று கூறி அவளிடம் ஒப்புக் கொள்கின்றான். “உனக்குப் பெரிய தீமை செய்தேன். அதனால் வரக்கூடிய குற்றங்கள் தீமைகள் ஆகியவற்றை ஒரு சிறிதும் எண்ணிலேன். மதுரை மாநகருக்கு நீ எழுக என்னுடன் என்றதும், என்னை நம்பி எழுந்து வந்துவிட்டாயே உன் அன்பு இருந்தவாறு என்னே!” என்றவாறு கோவலன் கூறினன் என்பதே கருத்து. இந்த இடத்தில், கண்ணகிக்குத் தான் இன்னமை செய்தவன் என்பதை அவனே ஒப்புக் கொள்ளுகின்றான். அதற்குரிய தண்டனை கோவலனைக் கண்ணகி வெறுத்தல் என்பதுதான். ஆனால், அந்தத் தண்டனையை அவள் தராது அவன் நாணும்படி அவனுக்கு இனிமை செய்துவிட்டாள் என்பது அவனோடு அவள் உடன் வந்தமையால் அறியப்படும். இதனால்,

“இன்னாசெய் தாரை யொறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்”

என்ற திருக்குறளுக்கு அழகிய இலக்கியமாக இச்செய்தி அமைதலை அறிதல் கூடும்.

கோவலன் மதுரையில் மாதரி வீட்டில் கண்ணகி சமைத்து அன்புடன் உணவு ஊட்டிய பிற்பாடு அவளைநோக்கித் தான் முன்னர்ச் செய்ததற்கு இரங்கி வருத்தத்தைத் தெரிவிக்கின்றான். “என் தாய் தந்தையர் கூறிய சொற்களைக் கேளாது போயினேனே, வறுமொழி பேசிய மாக்களோடும், பயன் இல சொல்லிய பரத்தரோடும் கூடி, நன்னெறியில் செல்லாது நாளைக் கழித்தேனே. உனக்குப் பெருத்த தீமை இழைத்தேனே” என்று எல்லாம் உளைந்து, நைந்து உருகுகிறான் என்று சிலப்பதிகாரத்தால் அறிகிறோம். இது நமக்கு எதனை நினைவுபடுத்துகின்றது என்றால் திருக்குறளில் வரும்,

“எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று” (௬௫௫)

என்ற அடிகளையே ஆகும்.

(தொடரும்.)

# தோசை

[திரு. கோவைகிழார்]

தோசை என்பது நமது சிற்றுண்டிகளில் ஒன்று. காலை நேரத்திலும் மாலை இடைவேளையிலும் அதனை வெகு இன்பமுடன் உண்போம். அரிசிமாவை அரைத்து உழுந்துமாவை உடன்சேர்த்துத் தோசைக்கல்லில் பரப்பிச் சுடுவோம். இரண்டு முறை திருப்புவதால் நன்றாகவெந்து சுவையை மிகைப்படுத்தும். கல்லிலிருந்து எளிதில் எடுப்பதற்காக எண்ணெயோ, அல்லது நெய்யோ கல்லுக்குத் தடவிச் சுடுவர். இந்தத் தின்பண்டம் தென்னாடுகளில் மட்டும் பண்டைய நாள்முதல் இருக்கின்றது. வடநாட்டில் இருக்கவில்லை அண்மையில்தான் அங்குச் சென்று இருக்கிறது. இது தென்னாட்டுப் பொருள் ஆதலின், அதன் பெயரும் தென்னாட்டுப் பெயராக இருக்க வேண்டும். வடநாட்டுப் பெயராக இருக்கக் காரணம் இல்லை. ஆனாலும் இச் சொல் எந்த மொழியிலிருந்து வந்ததெனறு நிச்சயமாகச் சொல்ல ஆதாரம் இல்லை.

தோசை என்பதைப்பற்றி ஒரு கர்ணபரம்பரை நாட்டுக் கதையும் உண்டு. அதனை ஒட்டியே அச் சொல்லுக்கு இலக்கணம் வகுத்துப் பொருளும் உரைப்பார்கள். தோ+ஓசை= தோசை என்றும், தோ+சொய்=தோசை என்றும் கூறுவார்கள். தோ என்றது துவி என்ற வடமொழியின் திரிபு என்றும், அதற்கு இரண்டு என்ற பொருள் என்றும் கூறி, இருமுறை சொய் என்ற ஓசை அது சுடும்போது உண்டாகிற படியால் அப் பொருள், தோசை என்று பெயர் பெற்றது என்பர். துபாஷ்=துவி+பாஷி—இரண்டு மொழிகள் பேசுபவன் என்பது இதைப்போன்ற ஒரு சொல். இதைக் குறித்த கதை வருமாறு.

ஒரு வாணிபன் ஆருடம் கற்று வருவதாகத் தன் மனைவியிடம் கூறிக் கட்டுச் சோறு கட்டிக்கொண்டு சென்றான். அவன் போனபிறகு மனைவி தோசை மாவு அரைத்துத் தோசை சுடத் தொடங்கினாள் கணவனோ வெளியூர் சென்றவன் சகுனத் தடை நேரிட்டு வீடு திரும்பினான். நேர் வழியில் செல்லாமல் மனைவிக்குத் தெரியாமல் பின் வாயில் வழியே வீடு திரும்பி அட்டாலி ஏறி அவ்விடம் பதுங்கிக்கொண்டு மனைவிசெய்யும் செயல்களை வேவுபார்த்துக்கொண்டு இருந்தான். அன்று மனைவி தோசை சுடுவதைக்கண்டு அதனை எண்ணத் தொடங்

கினன். இரண்டு சொய்யுக்கு ஒரு தோசை என்று கணக்கிட்டு 32 என்ற ஒலிகேட்டுப் பதினறு தோசை என்று கணக்கிட்டான். மாலை அட்டாலியிலிருந்து மனைவிக்குத் தெரியாமல் வெளிவந்து வீடு தட்டினன். மனைவி அவனை வரவழைத்துச் சென்ற நோக்கம் நிறைவேறிற்ற என்று வினவினள். ஆம், ஆருடம் கற்றுக் கொண்டேன். நீ இன்று பதினறு தோசை சுட்டாய் என்றான். அவள் திடுக்கிட்டு இவனிடம் இனி நமது திருட்டுச் செல்லாது என்று எண்ணி அடங்கி ஒடுங்கி இருந்தாள். இது ஒரு பரம்பரைக்கதை. இதன்படி தோசை என்றால் இரண்டு ஒலிகள் என்று பொருள்படும். ஆகவே இச் சொல் வடநாட்டுச் சொல் ஆகின்றது. அது சரியா?

வடநாட்டிலிருந்தும் பல தின்பண்டங்கள் தெற்கே வந்து விட்டன. அவைகளின் பெயர்களும் வடநாட்டுப் பெயர்களே. லட்டு, ஜிலேபி, சப்பாத்தி, குலாப்ஜான், இவை எல்லாம் வடநாட்டுப் பொருள்கள். தென்னட்டிலிருந்து சில பண்டங்கள் வடக்கே சென்றிருக்கின்றன. அவைகளில் இட்டலி, தோசை, சாம்பார், மிளகுரசம், முதலியன. ஆகவே இவைகள் தென்னட்டுச் சரக்காகவும் பெயராகவும் இருக்கவேண்டும்.

தோசை என்ற சொல் தமிழில்மட்டும் அன்றித் தெலுங்கு, மலையாளம், கன்னடம் இவைகளிலும் தோசை, தோசா என்றே வழங்குகிறது. ஆகவே இச் சொல் பண்டைத் தமிழ் அல்லது திராவிடச் சொல்லாக இருக்கவேண்டும். அப்படியாயின் இலக்கியங்களில் எங்கேயாவது வந்திருக்கிறதா? இதனைத் தேடிப் பார்த்து ஆராய வேண்டும். எனக்குத் தெரிந்த இரண்டு இடங்களை எழுதுகிறேன். (1) விறலிவிடு தூதில் :—

"வடை சுகியன் தோசை வகைகள்" என்று ஓர் அடியில் காண்கிறோம். ஆனல் இந்நூல் இரண்டு மூன்று நூற்றாண்டு அளவில் உண்டாக்கப்பட்டது. இனி, கல்வெட்டில் இச்சொல் வந்துள்ளது. காஞ்சிபுரம் தேவராச சுவாமி கோவிலில் உள்ள கல்வெட்டு 614/1919 ஒன்றின் படி அக்கோயிலுக்கு ஓர் அன்பர் தோசைக்கட்டளை ஒன்று ஏற்படுத்தியதாகக் கண்டிருக்கிறது. அது நடந்த ஆண்டு 1542 கி—பி. அந்தக் கல்வெட்டு கோயில் சாதனங்கள் புத்தகம் I ப. 326-ல் அச்சிடப்பட்டுள்ளது. அச்சுதராயர் ஆட்சிக்காலத்தில் காஞ்சிபுரம் திருவத்தியூர் அருளாளர்பெருமாள் கோவில் பண்டாரத்தார் ஏகாதசி தோறும் பெருமாள் கிராமப்பிரதட்சிணம் எழுந்தருளித் திரும்ப கெருட மண்டபத்தில் எழுந்தருளி அமுதுசெய்தருள தோசைப்படி கட்டளை இட்டுப் பொலியூடாகக் கொடுத்த பணம்

250 இந்தப் பொலியூட்டைக் கொண்டு 35 தோசை விதம் 24 ஏகாதசிகளுக்குக் கொடுக்கவேண்டும். இது தவிர யாராருக்கு எததனை தோசை என்ற கணக்கும் அக் கல்வெட்டில் இருக்கிறது. காஞ்சிபுரத்து இட்டலி பேர் போனது. அதுபோல் தோசையும் பேர்போனது போலும்.

நான்கு நூற்றாண்டுகளுக்கு முன்னமே காஞ்சியில் தோசை ஒரு சிறந்த தின்பண்டமாகவும் அது மூர்த்திகளுக்கு நைவேத்தியம் செய்யும் பக்குவம் பெற்றிருந்ததெனவும் இதனால் அறியலாம்.

கோயில்மூர்த்திகளுக்கு அளிப்பது என்றால் அப் பொருள் நாட்டுப் பொருளாகவும், பண்டைக்காலம் முதல் வழங்கி வந்ததாகவும், புதிதாக புகுத்தப்படாததாகவும் இருக்கவேண்டும். உதாரணமாக வெளிநாட்டுச் சரக்குகளான மிளகாய், புகையிலை, உருளைக்கிழங்கு, மலைத்தக்காளிகள் முதலியவைகளைக் கோயில்கள் ஏற்பதில்லை; வினியோகமும்செய்யக்கூடாது. ஆனால் தோசை மிகப் புனிதமானது. அருளாளர் பெருமாள் கோயிலில் வினியோகம் செய்வதினால் அது நமது நாட்டுப் பண்டைச்சரக்கே என்று அறிய வேண்டும். மற்றும் அச் சொல் தமிழ்ச்சொல்லாகவும் இருந்திருக்க வேண்டும். ஆகவே தோசை என்ற சொல்லைத் தனித்தமிழ்ச் சொல் என்று கொள்வதில் ஐயமில்லை.

இச் சொல் எவ்வாறு உண்டாயிற்று. வேறு இலக்கியங்களில் வந்ததா என்பதைப்பற்றி நண்பர்கள் தெரிவிப்பார்களாக.

## ஆராய்ச்சித்துறைத் தலைவர்

கொழும்பு அரசினர் ஆசிரியர் கலாசாலைத் தமிழ்ப் பேராசிரியருந் தமிழ்மறைக் கழகத்தலைவருமான "செந்தமிழ்க் கலைமணி" வித்துவான், பண்டிதர் கா. பொ. இரத்தினம், பி.ஏ. ஆனர்சு (இலண்டன்) எம்.ஏ., பி.ஓ.எல். (சென்னை) அவர்கள் இலங்கை அரச கருமமொழி அலுவலகத்தில் ஆராய்ச்சி அதிகாரியாக (Research Officer) நியமிக்கப்பட்டுளர். தமிழிலே ஆட்சிச்சொற்களை அமைக்கும் பணி இனி, அவர் பொறுப்பில் நடைபெறும்.

# [1]கலைக்களஞ்சியம்

[திரு. கா. பொ. இரத்தினம்]

சென்னைத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தினர் கலைக்களஞ்சியம் வெளியிடும் பணியிலீடுபட்டுளர் என்பதை யாவரும் அறிவர். முன்னர் இருதொகுதிகளை அவர்கள் வெளியிட்டுளர். இப் பொழுது மூன்றாந் தொகுதியை வெளியிட்டிருக்கின்றனர்.

இம் மூன்றும் தொகுதியில் 756 பக்கங்கள் உள. 223 அறிஞர்கள் கட்டுரை எழுதியுளர். கட்டுரைகளை விளக்குதற்கு 395 படங்கள் சேர்க்கப்பட்டுள. ஆறு மூவண்ணப் படங்களும், 23 நிழற்படங்களும் இத் தொகுதியில் உள. இத் தொகுதி "க" முதல் "குடிப்பள்ளி" வரையும் உள்ள பொருள்களைப் பற்றிக் கூறுகிறது

முந்திய இரு தொகுதிகளையும் போலவே இத் தொகுதியை யும் சிறப்பாக வெளியிட்டுளர். இத் தொகுதி இரண்டினக் காகிதங்களில் அச்சிடப்பட்டுளது. ஓரினக் காகிதத்தைப் பயன் படுத்தியிருப்பின் நன்றாயிருக்கும்.

கட்டுரைகளை எழுதிய அறிஞர்களின் தமிழ்ப் புலமைக் கேற்பக் கட்டுரை நடைகள் வேறுபட்டுள. பல கட்டுரைகளில் வாக்கியப் பிழைகளும் மரபுப் பிழைகளுங் காணப்படுகின்றன. "சோடா உப்பை அடிக்கடி நீரிற் போட்டுக் கொடுத்தால் இரும லின் வேகம் குறையும்." (ப. 4) எனும் வாக்கியம் "சோடா உப்பை நீரிற் கரைத்து அடிக்கடி கொடுத்தால் இருமலின் வேகங் குறையும்" என்றிருப்பின் தெளிவாயிருக்கும்.

"தென் இமயமலையில் கங்கோத்திரி என்னும் இடத்துக்குக் கடல்மட்டத்திலிருந்து 13, 800 அடி உயரதத்துக்கு மேலுளள பனிக்குகையில் பாகீரதி ஆறு தோன்றுகிறது." (ப. 6) இவ் வாக்கியத்தின் பொருள் தெளிவாக அமையவில்லை. இதனைத் "தென் இமயமலையில், கங்கோத்திரி என்னும் இடத்திலேயுள்ள தும், கடல் மட்டத்திலிருந்து 13, 800, அடி உயரமானதுமான பனிக்குகையில் பாகீரதி ஆறு தோன்றுகிறது," என்று அமைத் திருக்கலாம். அவ் வாற்றுடன் ஜான் ஹவி, அளகநந்தா என்ற ஆறுகள் சேர்ந்து கங்கை ஆறுகின்றது. (ப-6) இவ்வாக்கியத் தின் எழுவாய், பன்மை; பயனிலை, ஒருமை 'கீழ் நாட்டுக்கலை

---

1. இலங்கை வானொலியில் ஒலிப்பரப்பிய ஆய்வுரை.

நிலையம்' என்பது “கிழநாட்டுக் கலை நிலையம்” (ப. 731) எனப் பிழையாகப் பதிக்கப்பட்டுளது. (ப. 731)

'கடடடக் கற்கள் இந்தியாவில் அதிகம் பயனுகின்றன" இந்த வாக்கியம் போன்ற பிழையான வாக்கியங்கள் நூலிற் பலவுள. 10-ம் நூற்றூண்டு (ப. 5) என்று எழுதியதைப் போன்றே 1-ம் மாதவன் (ப. 5) கி. பி. 1030-ல் (ப. 8) என்பவற்றையும் 1-ஆம் மாதவன் என்றும் கி. பி. 1030-இல் என்றும் எழுதியிருத்தல் வேண்டும்.

வடமொழிச் சொற்களைத் தமிழில் எழுதும் பொழுதும் ஒரு முறையைப் பதிப்பாளர்கள் தழுவியிருப்பதாகத் தோன்ற வில்லை. தனித்தமிழ்ச் சொற்கள் வட சொற்கள் என்பவற்று டன் வடமொழிச் சொற்களையும் அவற்றின் உருவத்திலே ஆண்டிருக்கிறார்கள். இச் சொற்களின் கருத்தையுடைய தமிழ்ச் சொற்களையோ, இச் சொற்களை வட சொற்களாக்கியோ ஆண் டிருந்தால் ஓர் ஒழுங்கு அமைந்திருக்கும். வடமொழிச் சொற் களிற் சிறவற்றை வட சொற்களாகவும் சிலவற்றை அப்படியே பச்சைப் படியாகவும் ஆண்டிருப்பது பொருத்தமற்றது. ரோமம், லக்ஷம், அம்சங்கள், நிர்மணம் என்பவற்றை உரோமம், இலட்சம், அமிசங்கள், நிருமாணம என்று ஆண்டிருப்பவர்கள், விகாரைகள் என்பதை விஹாரங்கள் என்றும், அத்தம் என்றதை அஸ்தம் என்றும் எழுதியிருப்பதேனோ? காங்கிரஸ், வட்டமேஜை, ராஜி, ஜலசந்தி முதலிய பலசொற்கள் இவ்வினத்தைச் சேர்ந்தவை.

இங்கிலண்டு என்பதை இங்கிலாந்து என்று ஆளுகிறவர் கள், பிரிட்டிஷ்காரர் என்பதைப் பிரித்தானியர் என்று ஆண்டி ருந்தால் எவ்வளவு பொருத்த மாயிருக்கும்.

Metre என்பதை மீட்டர் என்று ஆக்கிய பின் 'Metre System' என்பதை மெற்றிக் முறை என்பதிலும் மீட்டர்முறை என்பதுதான் பொருத்தமானது; தமிழ்மரபுக்கு ஏற்றது. வாடிங்க கட்டளைத் தழுவியது. (ப. 251) எனும்இத் தொடரி லுள்ள பெயரைத் தமிழர் தம் வாயினல் ஒரு சொல்லாக இடை யீடு படாமல் உச்சரித்தல் முடியுமா? பிறமொழிச் சொற் களின் உச்சரிப்பைத் தமிழ் எழுத்திலுங் கிரந்த எழுத்திலும் எழுதுதல் பயனற்ற செயல். அவற்றைத் தமிழுருவாகத் திரித்து எழுதுதல் வேண்டும். “இந்தியக் காடுகள் பற்றிய பொதுசர்வே இந்நூற்றூண்டின் தொடக்கத்தில் 'டிருப்' என்பவர் எழுதிய இந்தியக் காடு வளர்ப்புக் கலை என்ற நூலில் காணப்படுகிறது.”

'சர்வே' என்ற சொல் இவ்வாக்கியத்தின் அழகைக் கெடுக்கிறது.

"காரைக்குடி, தென்னிந்தியாவில் இராமநாதபுரம் மாவட்டத்தில் திருப்பத்தூர் தாலுகாவிலுள்ள பட்டணம்," என்ற வாக்கியத்தில் ஜில்லா என்பதை மாவட்டம் என்று குறித்திருப்பது போற்றத்தக்கது. ஆனால், தாலுகாவை மாற்றாமல் ஏற்றுக் கொண்டிருப்பது வெறுக்கத்தக்கது. இத்தகைய கலப்புக்கள் இத் தொகுதியிற் பலவுள.

பக்கம் 36-இல், Habeas—Corpus எனுஞ் சொல் ஆள் ஆஜர்க்கட்டளை என்றும் Certiorari Writ எனுஞ் சொல் தாஸ்தாவேச ஆஜர்க்கட்டளை என்றும் மொழிபெயர்க்கப்பட்டுள. Mandamus Writ என்பது ஆணைக்கட்டளை எனவும், Writ of Prohibition என்பது தடைக்கட்டளை எனவும், Quo warranto Writ என்பது யாதுரிமைக்கட்டளை எனவுங் குறிக்கப்பட்டுள. இவற்றைப்போலவே Habeas Corpus என்பதை ஆட்கொணர் கட்டளை எனவும் Certiorari Writ என்பதை ஆவணங்கொணர் கட்டளை எனவும் மொழிபெயர்த்திருந்தால் எவ்வளவு பொருத்தமாயிருக்கும்? ஆட்கொணர்கட்டளை எனுந் தொடர் சென்னை அரசினர் வெளியிட்ட கலைச் சொற்றொகுதியிற் காணப்படுகிறது.

Conservative Party என்பதை 'கன்சர்வெட்டிவ்' கட்சி என்றும் Labour Party என்பதை தொழிற்கட்சி என்றும் எழுதி யிருக்கிறார்கள். 'கன்சர் வெட்டிவ்' கட்சி என்பதைப் பழமை தழுவுங் கட்சி என்றோ பிறவாறோ மொழிபெயர்த்திருந்தாற் பொருத்தமாயிருக்கும். Memorandum of Association என்பதைக் கம்பனி அமைப்பு யாதாஸ்து என்று மொழிபெயர்த்திருப்பதும் பொருத்தமற்றது. Black water fever என்பதை கருநீர்க்காய்ச்சல் என்று மொழிபெயர்த்தவர்கள் Cholera என்பதைக் 'காலரா' என்று எழுதியது வியப்பாகவிருக்கிறது; கவர்னர், டைரெக்டர்கள், ஏஜெண்டு, பார்லிமெண்டு, சீனியர் முதலிய பல ஆங்கிலச் சொற்கள் வரையறையின்றிப் பல இடங்களிலும் உபயோகிக்கப்பட்டுள்ளன. 'கக்குசு' என்று ஆளப்பட்டிருக்கும் சொல்லை இலங்கையிலே 'கக்கூசு' என்கின்றனர். எனினும், மலசலகூடம் என்பதே பெருவழக்கிலுள்ள சொல்.

பிற நாட்டாருடைய பெயர்களையும், பொருள்களையும், விஞ்ஞானச் சொற்களையும் தமிழிலே எழுதும்பொழுது அவற்றக்கருகிலே ஆங்கிலச்சொற்களையும் குறிப்பிட்டுளர். இம் முறையிற் சில இடங்களிலே தவறுகள் உள. சில சொற்களைக் குறிக்கும் ஆங்கிலச்சொற்கள் இடப்படவில்லை. காலின்ஸ்

மைக்கேல் (ப. 611), காரவ் (ப. 538), காவரா (ப. 606), காப்பி (ப-500), பிதாகரஸ் (ப. 141); தேவிஸ், கான்ட் இம்மனுவல், கிச்சிலி சிட்ராஸ் முதலிய பலவற்றினைக் குறிக்கும் ஆங்கிலச் சொற்கள் குறிப்பிடப்படவில்லை. கவர்னர், கன்சர்வேட்டிவ் கட்சி முதலிய ஆங்கிலச்சொற்களை ஏற்றுக்கொண்டு அவற்றுக்கு விளக்கம் எழுதுதலினும் அவற்றுக்குரிய மாகாணத் தலைவர்; பழமை தழுவுங் கட்சி முதலிய தமிழ்ச்சொற்களுக்கு விளக்கம் எழுதுதலே தமிழுக்கு முதன்மையளிக்குஞ் செயலாகும். இத்தகைய ஆங்கிலச் சொற்களையும் உரிய இடத்திற் குறிப்பிடல் வேண்டுமெனின், இச் சொற்களை மாத்திரங் குறிப்பிட்டு இவற்றின் விளக்கத்துக்கு இவற்றுக்குரிய தமிழ்ச் சொற்களைப் பார்க்க எனக் குறிப்பிடலாம் கிண்டர்கார்ட்டின் என்பதற்குப் 'பார்க்க குழந்தைப் பள்ளி' என்று குறிப்பிட்டிருப்பது (ப. 59) இதற்கு உதாரணமாக அமைந்துளது.

இலங்கையிலுள்ள நகரங்கள் முதலியனபற்றி எழுதும்பொழுது முந்திய தொகுதியில் சேர்ந்த பிழைகளைப் போலவே இத் தொகுதியிலும் பல பிழைகள் காணப்படுகின்றன. சொற்பிழைகள் மாத்திரமன்றிப் பிழையான கருத்துக்களும் இடம் பெற்றுள்ளன. கண்டி என்பதைப்பற்றி எழுதி இருப்பதை முதலிற் பார்ப்போம்.

"கண்டி—இலங்கையில் கொழும்பிற்கு வடமேற்கில் 85 மைல் தொலைவிலுள்ள பட்டணம். புகை வண்டி நிலையம் உடையது. கடல் மட்டத்திலிருந்து 1,700 அடி உயரத்திலுள்ளது. இலங்கையிலுள்ள மலைவாச நகர்களில் இதுவே மிகுந்த எழிலுடையது. இதன் முன்னுள் பெயர் செங்கடகலா ஸ்ரீ வர்த்தனபுரம் என்பது. போர்த்துக்கேசியர் இது இருந்த மாகாணத்தின் பெயராகிய 'கண்டி உதா ரிதா' என்பதை வைத்து இதைக் கண்டியா என்று வழங்கிவந்தனர். இதைச் சிங்களவர் இப்போது மகாநுவாரா (பெரிய நகரம்) என்று அழைப்பர். இந்நகரம், இறுதிக் கண்டிமன்னன் 1806-ல் உண்டாக்கிய ஏரியின் கரையிலுள்ளது. இங்குள்ள தலதா-மலகாவா (Dalada Maligava) என்று பௌத்த கோயிலிலுள்ள புத்தர் பல்லைப் பார்ப்பதற்காக ஆயிரக்கணக்கான மக்கள் வந்து போவர். இப் பல் இந்தியாவிலுள்ள கலிங்கத்திலிருந்து கி. பி. நாலாம் நூற்றுண்டில் கொண்டு வரப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. அருகிலுள்ள பேராதனையிலுள்ள தாவரத் தோட்டம் பேர் பெற்றது. இதன் மூன்று பக்கத்திலும் மகாவெல்லி கங்கா என்னும் ஆறு ஓடுகின்றது. பண்டைச் சுதேச மன்னர்களின் மாளிகைகள் சிதைந்து கிடக்கின்றன. அவர்களுடைய அரி

பணியை ஆங்கிலேயர் 1934-ல் இலங்கை அரசாங்கத்தினிடம் தந்தனர்.''

கண்டியைப்பற்றிய இந்தப் பந்தியில் முதலாவது வாக்கியம் முழுதும் பிழை. கொழும்புக்கு வடமேற்கில் இந்து சமுத்திரம் தான் இருக்கிறது. கண்டி கொழும்புக்கு வடகிழக்கில் 72-மைல் தூரத்தில் உள்ளது என்பதைப் பாடசாலைச் சிறுரும் அறிவர். இதனைப் பிழையின்றி எழுத முடியாது இடர்ப்படுகின்றனர். கலைக் களஞ்சியத்தைத் தொகுத்தவர்கள் தலதா மாளிகை என்ற வழக்கை விடுத்துத் தலதா மலகாவா என்கின்றனா. மகாவலி கங்கை என்பது தமிழ் இலக்கியத்திலும் பயிலுஞ் சொல் இதனை மகாவெல்லி கங்கா என்று எழுதியுளர்.

கதிர்காமத்தைப் பற்றி எழுதிய குறிப்புக்களைச் சிறிது விரித் தெழுதியிருத்தல் வேண்டும். தமிழர்களின் வழிபாடு பற்றி ஒன்றுங் குறிப்பிடப் படவில்லை. சிங்களமக்களோடு தொடர்பு படுத்தியிருக்கிருர்களே யன்றித் தமிழ்மக்களோடும் சைவசமயத்தோடும் அத் தலத்தைத் தொடர்பு படுத்தவில்லை. அத் தலத்தின் மேலுள்ள பிரபந்தங்கள் சிலவற்றையாதல் குறிப்பிட்டிருத்தல் வேண்டும் "கதிர்காமம்" என்னும் சொல் கதிருகாமம் என்னும் சிங்கள மொழியின் திரிபு என்றும், கதிர் காமம் என்னும் தமிழ்ச்சொல்லே யென்றும் வேறு பலவாறு கூறுவர் ''—இவ் வாக்கியத்தில் பல பிழைகள் உள.

கீரிமலை என்ற சொல், இத் தொகுதியில் இடம் பெறவில்லை. யாழ்ப்பாணத்திலுள்ள இந்தத் தலம் சரித்திர—சமயப் பிரசித்தி யுடையது; புராணத் தொடர்புடையது. இதைச் சேர்க்காமல் விட்டதற்குரிய காரணம் யாதென்பது புலப்படவில்லை.

கல்வி என்னும் தலைப்பில், தமிழ்நாட்டுக் கல்விபற்றிச் சிறிது விரிவாக எழுதியிருத்தல் வேண்டும். இந்தியக் கணிதம் எனுந் தலைப்பின்கீழ், தமிழ்நாட்டிற் கணிதம் என்றெரு துணைத் தலைப்பிலே தமிழ்நாட்டிற் கணித அறிவு எவ்வாறு விளங்கியது என்பதையும், காணி, முந்திரி, முதலிய பின்னங்கள் எவ்வாறு பயன்படுத்தப்பட்டன என்பதையும், கல்வெட்டுக்களில் எவ்வித அளவைகள் குறிக்கப்பட்டுள்ளன என்பதையும் பிறவற்றையும் விளக்கி இருத்தல் வேண்டும்.

கலங்கரை விளக்கம் போன்ற பழந்தமிழ்ச்சொற்களின் நுட்பமான கருத்தையும் விளக்குதல் நன்று. கலங்களைக் கரையும் (அழைக்கும்) விளக்கு என்ற கருத்துக் கலங்கரை விளக்கம் என்பதை விளக்கும் பகுதியிற் சேர்க்கப்படவில்லை.

கலைக்களஞ்சியம் போன்றதொரு பெரும்பணியை முதன் முறையாகச் செய்பவர்களுக்குப் பல வசதிக் குறைவுகள் உண்டென்பதை எவரும் ஏற்றுக்கொள்வர். இவற்றையெல்லாம் பொருட்படுத்தாது கலைக்களஞ்சியத்தைத் தொகுப்போர் செய்யுந் தொண்டைப் போற்றி ஆதரவளிக்க வேண்டியது தமிழ் மக்களுடைய கடமையாகும்.

பல பொருள்களையும் அகரவரிசைப்படுத்தி அவற்றைப் பற்றிய விபரங்களைத் தருவதிலேயே கலைக்களஞ்சியத்தை அமைப்போர் மிகுதியும் ஈடுபடல் வேண்டும் என்பது உண்மையே எனினும் அவற்றைப் பற்றிய விபரங்களை எழுதுவதிலும், எழுதுவதற்குப் பயன்படுத்துஞ் சொற்களைத் தெரிந்தெடுப்பதிலும் சிறிது கருத்துச் செலுத்தப்படல் வேண்டும். இத் துறைகளிற் போதிய கருத்துச் செலுத்தப்படவில்லை என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன். கலைக்களஞ்சியத்தை ஆக்கி வெளியிடுவோரைக் குறைகூறுவதற்காக யான் இதனைக் குறிப்பிடவில்லை. அவர்கள் சிறிது முயன்றால் இக் குறைகளையும் நீக்கலாம் என்பதை ர்த்தவே விரும்புகிறேன்.

தமிழிலே கலைக்களஞ்சியத்தை நல்ல முறையில் வெளியிடுவதற்குப் பல்லாயிரக் கலைச்சொற்கள் இன்றியமையாதன. கலைச்சொற்கள் சில வழக்கிலுள. சென்னை அரசினரும், சென்னைமாகாணத் தமிழ்ச்சங்கத்தினரும் இலங்கை அரசினரும் தமிழ்ச்சொற்களை ஆக்கி வெளியிட்டுளர். இவற்றிலே பொருத்தமானவற்றை எடுத்தாளுவதுடன் சில அடிப்படை விதிகளை உருவாக்கி அவற்றைத் தழுவிப் பல சொற்களை ஆக்கிக் கொள்ளுவது இன்றியமையாதது. இப்படிச்செய்தால், கலைக் களஞ்சியத்தில் ஆளப்படும் சொற்கள் ஆதாரவிதிகளுக் கமைந்து தமிழ்ச்சொற்களோடு இசைந்து தமிழை வளப்படுத்தும் தகுதியுடையனவாக விளங்கும். பிறமொழிச்சொற்களை மொழி பெயர்த்தோ, தமிழோசைப்படுத்தியோ ஆளுதல் வேண்டும். இதற்கு இலங்கை அரசினர் வெளியிட்ட கலைச்சொற்கள் வழி காட்டுகின்றன.

இதனுடன் மேல்வருவனவற்றையுங் கருத்திற்கொண்டு ஆவனசெய்தால் இங்கே குறிப்பிடப்பட்டன போன்ற பிழைகளையுங் குறைகளையும் நீக்கக் கலைக்களஞ்சியத்தைச் சிறப்பாக வெளியிடலாம்.

(1) பல பொருள்களைப் பற்றியும் அறிஞர்கள் எழுதியனுப்பும் கட்டுரைகளின் உரைநடையைத் தகுதி சான்ற புலவர்கள் திருத்தியமைத்தல் வேண்டும்.

(2) பிற நாட்டிலுள்ள பொருள்களைப் பற்றி எழுதியவற்றைத் திருத்திச் சீர்படுத்துவதற்குப் பிற நாட்டறிஞர்களின் உதவியைப் பெறுதல் வேண்டும். (இலங்கையோடு தொடர்புடையவற்றில் எப்பொழுதுமே பிழைகள் ஏற்படுகின்றன.)

(3) தமிழகத்தில் வழங்கிவரும் ஆங்கிலச்சொற்களையும் வைத்துக்கொள்ள விரும்பினால் அவற்றை உரிய இடங்களிற் குறிப்பிட்டு, அவற்றிற்குரிய விளக்கத்துக்கு அவற்றைக் குறிக்குந் தமிழ்ச்சொற்களைப் பார்க்குமாறு கேட்கலாம்.

(4) பிறநாட்டுப் பொருள்கள், மக்களின் பெயர்கள் முதலியவற்றைக் குறிக்கும் ஆங்கிலம் முதலிய மொழிகளின் சொற்களை, அவற்றைக் குறிக்க ஆளும் தமிழ்ச் சொற்கள் எல்லாவற்றுக்கும் பக்கத்தில் அடைப்புக்குறிக்குள் இடுதல் நன்று. பலவற்றுக்கு இட்டுச் சிலவற்றுக்கு இடாது விடல் பொருத்தமற்றது.

---

# கொடியோய் ஒழிக!

[வித்துவான் திரு. பழநிமகாதேவன்]

அச்சோ அழுக்கா றென்னும் கொடியோய் !
நிச்சயம் நீநிறை நெஞசம் நீற்றறை,
கருக்கித் தேய்த்து உருக்குலைவு உடலை,
நின்னை ஏலார் மகிழ்ச்சியின் மேலார்
அகந்தை[1] என்னும் அரக்கி மகள்நீ,
கொலைபழி தீர்த்தல்[2] கொள்கையா உடையை,
மறைமுக வஞ்சனை[3] சூழ்தலும் நின்னால்,
நிறையறம் அதற்கு நிலைத்த பகை, ஆத்மனின்
அழுக்கும் புழுவும் வழுக்குசேற் றிடம்[4]நீ,
கொடிய நாக விடம்நீ, கொடிய
இரச தாதுவாம் விரச வெள்ளி[5]போல்
தசையென் புள்ளீடு[6] நசையுறத் தின்பை,
ஓஓ கொடியோய் ! ஒழிகநீ என்றுமே !!

---

1. Pride
2. Revenge
3. Sedition
4. Filthy seime of the soul
5. Mercury or quicksilver (பாதரசம்)
6. Flesh and marrow of the bones

# 'காரம், காரன், காரி'

[திரு. ஞா. தேவநேயன்]

வடமொழியை அடிப்படையாகக்கொண்டு தூய தென்சொற்கட்கும் வேர் காணும் வழூஉவழக்கம், தமிழகம் அகவிருளில் முழுக்கப்பட்டிருந்த இடைக்காலத்தில் தோன்றி, இன்றும் தொடர்கின்றது. இயல்பிலும் போக்கிலும், வடமொழியும் தென்மொழியும் வடக்கும் தெற்கும்போல் நேர்மாறானவை. தமிழ் திரவிடத்திற்குத்தாயும் ஆரியத்திற்கு அடிப்படையுமாதலால், பல வடசொற்குத் தமிழை அடிப்படையாகக் கொண்டு வேர் காணமுடியுமேயன்றி, வடமொழியை அடிப்படையாகக் கொண்டு எத தமிழ்ச்சொற்கும் வேர் காணமுடியாது. இவ் வுண்மையை அறிந்தே, கால்டுவெல் கண்காணியாரும், தமிழ்ச்சொற்கட்கெல்லாம் தமிழ்முறையிலேயே அமைப்புக் கூறவேண்டுமென்றும், அங்ஙனம் கூற வியலாதபோதே வட மொழித்துணையை நாடவேண்டுமென்றும், அங்கும் வட மொழித்துணையை நாடுவதைவிடத் தமிழ்வேர் அடையாளமின்றி மறைந்துவிட்டதென்று கொள்வதே பொருத்தமென்றும் கூறிப்போந்தார்.

மொழியாராய்ச்சியில்லாதார் வடசொல்லென மயங்கும் தென் சொற்களுள், 'காரன், காரி' ஈறுகளும் அடங்கும். இவை 'காரம்' என்னும் தென்சொல்லடியாகப் பிறந்த ஆண்பால் பெண்பாற் பெயரீறுகள். செய் என்னும் ஏவற்பொருள்படும் 'க்கு' என்னும் வடசொல்லினின்று, 'காரன் காரி' யீறுகள பிறந்திருப்பதாக, வடமொழியாளரும் அவர் வழியினரும் கொள்வர். இதன் புரைமையை விளக்கிக் காட்டுவல்.

'காரன் காரி' யீறுகட்கு அடியான காரம் என்னும் தென்சொல், கடு என்னும் அடிவேரினின்று பிறந்ததாகும். கடுத்தல் மிகுதல், மிகுதற் கருத்தினின்று கடுமை, வன்மை, வலி, எரிவு, வெம்மை, விறைப்பு, சினம் முதலிய கருத்துக்கள் முறையே தோன்றும். உப்புக்கடுத்தல், கடுங்காற்று, வயிற்றுக்கடுப்பு, கடுவெயில், காட்டமாயிருத்தல், முகங்கடுத்தல் முதலிய வழக்குக்களை நோக்குக.

கடு என்னும் சொல்லே கடி என்னும் உரிச்சொல்லாகத் திரியும். குற்றுகரமும் முற்றுகரமுமான பல ஈற்றெழுத்துக்கள் இகரமாகத்திரிதல் இயல்பு. எ.—டு: பஞ்சு—பஞ்சி, வடு—

வடி (மாம்பிஞ்சு) கடி என்னும் உரிச்சொற்குத் தொல்காப்பிய மூம நன்னூலும் கூறும் பொருள்களெல்லாம், கடு என்னுஞ் சொல்லுக்கும் இடுத்தல் அல்லது பொருந்துதல் காண்க.

கடி என்னும் சொல்லும் பின்னர்க் கரி என்று திரியும். டகரம் ரகரமாதல் பன்மொழிக்குப் பொதுவான போலித் திரிபாம்.

| தமிழ் | | தமிழ் | தமிழ் | | ஆங்கிலம் |
|---|---|---|---|---|---|
| படவன் | — | பரவன் | குடகு | — | Coorg |
| அடுப்பங்கடை | — | அடுப்பங்கரை | கவடி | — | Coory |

கடு என்னும் சொற்குப்போன்றே அதன் திரிவுகளான கடி கரி என்பவற்றிற்கும், மிகுதல் என்பதே அடிப்பொருளாம். உப்புக்கரித்தல் என்னும் உலக வழக்கில், கரித்தல் என்பது மிகுதற்பொருள் தருதல் காண்க கரித்தல் என்பது, தன்னளவில், மிகுதற்பொருளுணர்த்துமேயன்றி, சென்னைப் பல்கலைக் கழக அகராதியிற் குறித்துள்ளதுபோன்று உப்புக்கரித்தல் என்று பொருள்பட்டுவிடாது. அவ் அகராதியிற் குறிக்கப் பட்டுள்ள முதற்பொருள் வருமாறு :—

"To be Saltish to the taste ; உப்புச்சுவை மிகுதல்.
இந்தக்கறி உப்புக்கரிக்கிறது."

இதில் விளக்க எடுத்துக்காட்டு, 'இந்தக்கறி கரிக்கிறது' என்றிராமல், 'இந்தக்கறி உப்புக்கரிக்கிறது' என்றிருப்பதே, கரித்தல் என்பதற்கு மிகுதற்பொருளே உண்மையைக் காட்டு தல் காண்க.

கரி என்னும் வினைப்பகுதி, முதனிலை திரிந்து விகுதியேற் கும் முறையில் காரம் என்று தொழிற்பெயராம்; படி என்பது பாடம் என்றாவதுபோல். காரம் என்னும் சொற்கு, மிகுதி, வன்மை, கடுமை, உறைப்பு, சினம் முதலியன பொருளாம். அவற்றுள், வன்மைக் கருத்தினின்று, முறையே வலிமை ஆள் வினைத்திறன் (அதிகாரம்), உரிமை முதலிய பக்கக்கருத்துக்கள் தோன்றும்.

எந்தப்பொருளும் அளவில் மிகுவதாலேயே வலிமை யடையும்.

"நீர்மிகிற் சிறையு மில்லை தீமிகின்
மன்னுயிர் நிழற்று நிழலு மில்லை
வளிமிகின் வலியு மில்லை"

என்று புறங்கூறுதல் (௫௧) காண்க.

அகக்கரண வாற்றலாகிய உளவலி புறக்கரணவாற்றலாகிய உடல்வலி ஆகிய இரண்டனுள், முதலில் தோன்றியது உடல் வலியே. பொதுவாக, உடற்பருமனே உடல்வலிக்குக் காரண மாகும். உடல்வலியால் ஒருவன் ஒருபொருளைக் கைப்பற்றி யாளலாம். அவ் ஆட்சியே அவனுக்கு அப் பொருள்மேல் அதிகாரத்தைக் காட்டும். அவ் அதிகாரமே உரிமையாம். ஒரு வன் தன் வலிமை மிகுதியால் இன்னொருவன் பொருளிற்குக் கூட அதிகாரியாகலாம். 'வலிமைக்கு வழக்கில்லை' என்பது இன்றும் உண்மையான பழமொழியாகும்.

அகக்கரண வாற்றலும், அறிவின் அல்லது ஊக்கத்தின் மிகுதியேயன்றி வேறன்று. ஆகவே, இருவகை வலியுள் எதுவா யினும ஒன்றன் மிகுதியே. அம் மிகுதியினாலேயே அதிகாரம் அல்லது உரிமையுண்டாம். வலிய பகையை எளியவன் வெல்லு தற்குக் காரணமான சூழ்ச்சி வலியும் மதித்திற மிகுதியே.

ஓர் இடத்திற்கு அல்லது பொருட்கு எங்ஙனம் ஒருவன் தன் உடல்வலி மிகுதியால் அதிகாரியாவனோ, அங்ஙனமே ஒரு நூலிற்கும் அல்லது அறிவுச்செய்திக்கும் ஒருவன் தன் அறிவு மிகுதியால் அதிகாரியாவன்.

இங்ஙனம், மிகுதிக் கருத்தினின்று உரிமைக் கருத்துத் தோன்றியிருப்பதால், அவ்விரு பொருளையும் முறைப்படி யுணர்த்தும் காரம் என்னும் சொல்லினின்று, ஓர் இடத்திற்கோ பொருட்கோ தொழிற்கோ நிலைமைக்கோ அதிகாரம் அல்லது உரிமை யுணர்த்தும் 'காரன்' 'காரி' என்னும் இருபாற் பெய ர்றுகள் தோன்றியுள்ளன.

அம்பலகாரன், அருமைக்காரன், ஆட்டுக்காரன், ஆப்பக் காரி, ஆனைக்காரன், எண்ணெய்க்காரன், எழுத்துக்காரன், ஓடக் காரன், கட்சிக்காரன், கடன்காரன், கடைக்காரன், கப்பற்காரன், கறிக்காரன், காட்டுக்காரன், காய்ச்சற்காரன், காரியக்காரன், காவற்காரன், காவடிக்காரன், குச்சுக்காரி, குடிகாரன், குடிசைக் காரன், குடைக்காரன், குதிரைக்காரன், குப்பைக்காரன், குழற் காரன், குறிகாரன், குறும்புக்காரன், கூலிக்காரன், கெட்டிக் காரன், கொட்டுக்காரன், கொடுமைக்காரன், கொத்துக்காரன், கொல்லத்துக்காரன், கொல்லைக்காரன், கொலைகாரன், கொள்ளைக் காரன், கோடரிக்காரன், கோபக்காரன், கோழிக்காரன், சட்டைக்காரன், சண்டைக்காரன், சவாரிக்காரன், சாணைக்காரன், சிரங்குக்காரன், சுண்ணாம்புக்காரன், செய்கைக்காரன், சேலைக் காரன், சொந்தக்காரன், தட்டுக்காரன், தடிக்காரன், தண்டற் காரன், தண்ணீர்க்காரன், தயிர்க்காரி, தீட்டுக்காரன், துன்ன

காரன், தையற்காரன், தொந்தரவுகாரன், தொள்ளைக்காரன், தோட்டக்காரன், நாடகக்காரன், நிலத்துக்காரன், நுங்குக் காரன், நோவுக்காரன், பகைகாரன், பட்டக்காரன், பண்ணைக் காரன், பணக்காரன், பன்றிக்காரன், பாற்காரன், பிள்ளைக்காரி, புள்ளிக்காரன், புளியங்காரன், புன்செய்க்காரன், பூக்காரன், பெரியதனக்காரன், பெருமைக்காரன், பேராசைக்காரன், பொடிக் காரன், பொறுமைக்காரன், மருந்துக்காரன், மாட்டுக்காரன், மீசைக்காரன், முட்டைக்காரன், முறைகாரன், மேளகாரன், வண்டிக்காரன், வயிற்றுவலிக்காரன், வளையறகாரன், வாத்துக் காரன், வீட்டுக்காரன், வீணைக்காரன், வெள்ளைக்காரன், வேட்டைக்காரன், வேலைக்காரன், வேளைக்காரன் முதலிய நூற்றுக்கணக்கான பழம்பெயர்களும், இனிமேற் புதிது புதி தாகத் தோன்றும் இத்தகைய பிற பெயர்களும், ஒன்றற்குரிமை பூண்டவரை யுணர்த்துவனவேயன்றி, ஒன்றைச்செய்பவரை புணர்த்துவன வாகா.

ஆப்பக்காரி, எண்ணெய்க்காரன், காரியக்காரன், சண்டைக் காரன், தையற்காரன், பெரியதனக்காரன், மருந்துக்காரன், வேட் டைக்காரன் முதலிய தொழில்பற்றிய பெயர்கள் ஒரு பொருளைச் செய்பவரை யுணர்த்துதற்குப் பொருந்தினும்; ஆட்டுக்காரன் காய்ச்சற்காரன், கோழிக்காரன், சிரங்குக்காரன், தண்ணீர்க் காரன், நிலத்துக்காரன், பாற்காரன், மீசைக்காரன், முட்டைக் காரன், வண்டிக்காரன், வீட்டுக்காரன் முதலிய பலபெயர்கள் அப் பொருட்கு எள்ளளவும் பொருந்தாமை காண்க. மேலும், ஆளின்றியிருக்கும் ஒரு பொருளை ஒருவன் கண்டவுடன், அப் பொருட் பெயரோடு காரன் அல்லது காரியீறேற்றி, அப் பொருட்கு உரியவரைப் பற்றி வினவுவதேயன்றி, அதனைச் செய் பவரைப்பற்றி வினவுவது இயல்பன்று. செய்பவரைப்பற்றி அறிய விரும்பின் செய்பவர் என்னும் வினையாலணையும் பெய ரையே யன்றி, காரன் அல்லது காரியீற்றை அப் பொருட்பெய ரொடு சேர்த்துக் கூறார். மேலும் காலன் காலி, காதன், காதி, நாகன், நாகி, மருதன், மருதி என்பனபோலக் காரன் காரி என் பனவும், தமிழ்ப் பாலீறை ஏற்று நிற்றல் காண்க.

வண்டிக்காரன், வீட்டுக்காரன் முதலிய பெயர்கள், சில விடத்து உண்மையான அல்லது நிலையான உரிமையாளரைக் குறியாவிடினும், வேலைக்காரனும் வாடகைக் குடித்தனக்கார னும் போல்வார் சிறு போதைக்கேனும் ஆட்சியளவில் உரிமை யாளர் போன்றிருப்பதால், உரிமைக் கருத்தை விட்டவையாகா.

கரி என்னும் வினைச்சொல், அதி என்னும் முன்னொட்டுப் பெற்று அதிகரி என்றும் நிற்கும். அதி என்னும் முன்னொட்டு

வடசொல்லாகவே தோன்றினும், அதிகன் என்றொரு கடைவள்ளல் பெயரிருந்தமையும், அதனம என்னும் வடிவம் வடமொழியிலில்லாமையும், அதுங்குதல் (மொய்த்தல்) அதைத்தல் (வீங்குதல், பருத்தல்) முதலிய தொடர்புச்சொற்கள் தமிழிலிருத்தலும், அதிநுட்பம் என வள்ளுவரால் ஆளப்பெற்றமையும், சற்றுக் கவனிக்கத்தக்கன.

கரி என்னும் தனிச் சொற்போன்றே அதிகரி என்னும் கூட்டுச்சொல்லும், மிகுதிப் பொருளையே அடிப்படையாகக் கொண்டதாகும். அதிகரித்தல்-மிகுதல். அதிகாரம் என்பது, அதிகரிததல் என்னும் தொழிற்பெயரின் ஏனைய வடிவம்

பண்டை வழக்கில், ஒரு நூலின் பெரும் பகுதி படலம் என்றும், அதன் உட்பிரிவு ஒத்து என்றும் கூறப்பட்டன.

"இனமொழி கிளந்த ஓத்தி னானும்
பொதுமொழி கிளர்ந்த படலத் தானும்." (செய்யுளியல்-கசுக)

என்பது தொல்காப்பியம். இதனையே நன்னூலாரும்,

"நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்."

"ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரி னதுபடல மாகும்." (கசு, கஎ)

என மேற்கொண்டனர்.

தொல்காப்பியர் காலத்திலிருந்து, படலம் என்னும் பெரும் பகுதி அதிகாரம் என்றும், ஒத்து என்னும் சிறுபகுதி இயல் என்றும், வழங்கி வருகின்றன. அதிகாரம் என்பது அதிகரித்தல் என்னும் அதன் அடிப்படைப் பொருள்பற்றியே படலம் என்னும் பெரும் பிரிவைக் குறிப்பதாகும். அதிகரித்த பகுதி அதிகாரம் சிலப்பதிகாரம் என்பதும், சிலம்பு காரணமாக அதிகரித்த செய்தியைக் கூறுவது என்னும் பொருளதே.

காரம் என்னும் சொற்போன்றே அதிகாரம் என்னும் சொல்லும், மிகுதிப்பொருளை அடிப்படையாகக் கொண்டு, இருதிணைப் பொருள்களுள்ளும் ஒன்றையோ பலவற்றையோ ஆளுமுரிமையை அல்லது திறத்தை உணர்த்துவதாகும். வடமொழியில், அதிகாரம் என்னும் சொற்கு, ஆட்சி உரிமை முதலிய வழிப்பொருள்கள் கூறப்படுகின்றனவே யொழிய, மிகுதல் அல்லது அதிகரித்தல் என்னும் அதன் அடிப்படைப் பொருள் கூறப்படு

கின்றிலது. அதோடு, மகனிலிருந்து தந்தை வந்தான் என்பது போல், அதிகாரம் என்னும் தொழிற்பெயரினின்று அதிகரி என்னும் வினைப்பகுதியைத் திரிப்பர் வடநூலார்.

இங்ஙனம் பின்னேக்கிய முறையிலேயே, அகங்கரி இளக்கரி என்பனவும், சென்னைப் பல்கலைக்கழக அகராதியில், முறையே அகங்காரம் இளக்காரம் என்னும் தொழிற்பெயர்களினின்று திரிக்கப்பட்டுள. அகங்கரித்தல் என்பது மனங்கடுத்தல் அல்லது தருக்குதல்; அகம் - மனம், கரித்தல் - மிகுதல். அகங்கரிப்பது அகங்காரம். வடமொழியில், அகங்காரம் என்பது நான் என்னும் அகப்பற்று. அகம் நான். காரம் செயல் எனது என்னும் புறப்பற்றை மமகாரம் என்பது போல, நான் என்னும் அகப்பற்றை அகங்காரம் என்பர். மம - எனது. இங்ஙனம் வடமொழி யகங்காரமும் தென்மொழி யகங்காரமும் சொல்லாலும் பொருளாலும் வேறுபட்டிருக்க, அவற்றை வடிவொப்புமை பற்றி ஒன்றெனக்கொள்வது அறியாமையேயாம். இளக்கரி என்பது இளம் கரி என்னும் இருசொற் கூட்டாகும். இளக்கரிப்பது இளக்காரம், இளம்-மென்மை, கரித்தல்-மிகுதல். உப்புக்கரித்தல் என்னும் கூட்டுச் சொல்லிலுள்ள வருமொழியே, அகங்கரித்தல் இளக்கரித்தல் என்பவற்றிலுள்ளதும் என அறிக. இளக்காரம் போன்றதே வலக்காரமும் வலக்கரிப்பது வலக்காரம். வலம் - சூழ்ச்சி, வலிமை

அதிகாரம் அதிகாரி என்னும் பொருளிலேயே காரம் காரி என்பனவும் பண்டைக்காலத்தில் வழங்கிப் பின்பு வழக்கற்றுப் போனதாகத் தெரிகின்றது. காரன் அல்லது அதிகாரன் என்பது ஆண்பாற் பெயராகவும், காரி அல்லது அதிகாரி என்பது பெண்பாற் பெயராகவும், இருந்திருக்கலாம். காரன் காரி என்பன அதிகாரப் பொருளை இழந்தபின், இருபாற்பெயரீறுகளாக வழங்கிவருகின்றன.

இதுகாறுங் கூறியவற்றால், காரன் காரி என்னும் உயர்திணைப் பெயரீறுகள், உரியவரை யுணர்த்தும் தென்சொல்லேயன்றிச் செய்யப்படுவதை யுணர்த்தும் வடசொல்லல்லவென்பதைத் தெற்றெனத் தெரிந்துகொள்க.

காரம் என்னும் சொல், கடு என்னும் வினையின் திரிவான கரி என்னும் பகுதியடியாய்ப் பிறந்த தொழிற்பெயராய், வன்மை, அதிகாரம், வலி, எரிவு, வெம்மை, உறைப்பு, சினம் முதலிய கடுங்குணங்களை யெல்லாம் உணர்த்தும தூய தென் சொல்லாயிருந்தும், க்ஷார என்னும் வடசொல்லின் திரிவென்று சென்னைப் பல்கலைக்கழக அகராதியிற் குறிக்கப்பட்டுளது.

வரி (tax) என்னும் தென்சொல்லைப் பலி (Sacrifice) என்னும் வடசொல்லின் திரிவாகக் காட்டுவதோடமையாது, அதைத் தன் சிறப்புக்களுள் ஒன்றாகத் தன் முகத்திலேயே எடுத்துக்காட்டிப் பெருமை கொள்ளும் அகரவரிசைக் களஞ்சியம், வேறெதைத்தான் கூறாதென்க.

மொழிநூல் மனப்பான்மையும் நடுநிலையும் பொது மதியும் (Common Sense) ஒருங்கே யுடையாரெல்லாம் காரம் என்னும் சொற்கு யான் காட்டியுள்ள பொருளடைவையும் அதன் பொருத்தத்தையும் ஒப்புக்கொள்வா ரென்று நம்புகின்றேன்.

# வள்ளுவனே, மீண்டும் வாராய்!

["நெல்லைச் சித்தன்"]

பெண்ணுரிமை எனும்பெயரால் பெண்மை கெட்டுப்
பேராசைப் பேயாட்டம் ஆடு கின்ற
பெண்ணினையும் காதலித்துக் கூட்டிக் கொண்டு
பொருளீட்டும் ஆண்கடனை மறந்து விட்டே
உண்ணுகின்ற பருக்கைக்காய் வீட்டைக் காத்து
ஓயாது புறங்கூறிப் பொய்த்து வாழும்
கண்ணாவி இல்லறமாம் காலம் மாறக்
கருத்தளிக்க வள்ளுவனே, மீண்டும் வாராய்! (க)

பல்லாண்டும் பலபொருளும் செலவு செய்து
பார்வைபோ(டு) உடலையும் கெடுத்துக் கொண்டு
கல்வியெனும் பெயராலே கற்ற வெல்லாம்
கருதரிய அடங்காமை, ஒழுக்க மின்மை
பொல்லாங்கே எவருக்கே சூழு கின்ற
புன்மனமும், எப்பொழுதும் பொய்சொல் நாவும்
எல்லாமும் தீயகுணம் அன்றி உண்டோ?
இவைமாற வள்ளுவனே, மீண்டும் வாராய்! (உ)

அறமில்லை; பொருளில்லை; இன்பம் இல்லை;
ஆன்றோரின் வழிவந்த இனம்நாம் என்னும்
திறமான கருத்தில்லை; தொன்மை வாய்ந்த
தீந்தமிழ்நம் மொழியென்னும் சிந்தை இல்லை;
கறங்குகின்ற காலமென்னும் ஆழி தன்னில்
கன்னல்நிகர் தமிழ்மொழியும் தமிழர் தாமும்
அறவொழியத் திருவுளமோ? அஃதின் றாயின்
வாழ்வளிக்க வள்ளுவனே, மீண்டும் வாராய்!

# மகளிர் மனம்

[திரு. சே. வேலாயுதபிள்ளை, பி. ஏ. (ஆனர்சு)]

தெய்வப்புலமைத் திருவள்ளுவர் அருளிய திருக்குறளிற் கூடாநட்பு என்னும் அதிகாரத்தின் இரண்டாஞ் செய்யுள் சிந்தனையாளரின் சிந்தனையைத் தூண்டவல்லதாய் இருக்கின்றது.

"இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர
மனம்போல வேறு படும்." (அ௨௨)

என்பதே அக் குறள்வெண்பா. இதன்கண், தமது அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும் புறத்தாற் கூடியொழுகுவாரின் நட்பானது என்றும் ஒருபடித்தாகாது வேறுபடும் என்பதைக் கூறவந்த வள்ளுவர், அவ்வாறு வேறுபடுவதற்கு உவமையாக மகளிர்மனத்தைக் கூறியிருக்கின்றார். இக் குறளுக்கு உரையெழுதிய பழைய ஆசிரியர்களுள் மணக்குடவரும், பரிமேலழகரும், காளிங்கரும் ஒத்த கருத்துடையராகக் காணப்படுகின்றனர். பரிதியாரே மாறுபட்ட கருத்துடையரா யிருக்கின்றனர். முற்கூறிய மூவரும் 'மகளிர்' என்ற சொற்குப் 'பெண்பாலார்' எனப் பொதுவகையிற் பொருள்கூறுகின்றனர். பரிதியாரோ அதற்கு 'இருமனப் பெண்டிர்' எனப் பொருள் கூறுகின்றார். இப் பரிதியார் உரையைப் பின்பற்றியே திருக்குறளுக்கு இஞ்ஞான்று உரையெழுதுவாரெல்லாம் இக் குறட்பாவுக்கும் உரை கூறுகிற்பர். இவ்வாறு இருவகையாகக் கூறப்படும் உரைகளில் எது மெய்யானது என்று ஆராய்வது அறிஞர் கடன். முதற்கண், பழைய உரையாசிரியன்மார் தம் உரைப்பகுதிகளைச் சிறிது நோக்கி மேற்செல்வாம். 'நட்டோர் போன்று மனத்தினான் நட்பில்லாதார் நட்பு, பெண்மனம்போல வேறுபடும்' என்பது மணக்குடவரின் உரைப்பகுதியாகும்.

'தமக்கு உற்றார் போன்று உறாதாரோடு உளதாய நட்பு இடம் பெற்றாற் பெண்பாலார் மனம்போல வேறுபடும்' என்பது பரிமேலழகரின் பொழிப்புரை. அவர் தமது விசேடவுரையில் "அவர் மனம் வேறுபடுதல் 'பெண்மனம் பேதின் றொருப் படுப்பேனென்றும், எண்ணில் ஒருவன்' என்பதனானும் அறிக" எனத் தங்கூற்றுக்கு ஆதாரங் காட்டுகின்றனர்.

காளிங்கரும் பரிமேலழகர் உரையை ஒட்டியே எழுதியுள்ளார். 'புறத்து ஒருவரோடு ஒத்தார் போன்று ...

அவ்வினம் இல்லாதார் நடிக்கும் நடிப்பு, மகளிர் தமது உள்ளம் போல் இடங்காணின் வேறுபட்டுவிடும்' என்பது அவர்தம் உரை. காளிங்கர் விசேட உரையாக, 'பொது மகளிர் என்றது மகளிர் எனப் பொதுவகையாற் கூறியது குலமகளிரும் குணம் கெடுதல் கூடும் என்பது குறிப்பு என்று அறிக' என எழுதி யிருப்பது ஊன்றிச் சிந்திக்க வேண்டியது.

இனிப் பரிதியாரின் உரை வருமாறு: 'இனம் போலக் கூடியிருக்கையிலேயே மனம் பகையாயினார் உறவு, இருமனப் பெண்டிர் போலும்' என்பது அது.

இருமனப் பெண்டிரின் உள்ளம் வேறுபடுவது யாவர்க்கும் தெரிந்த தொன்று. அவர், பொருள் வேட்கையாற் றம்மை அணைவார்மாட்டு உள்ளன்பு இல்வழியும் இருப்பார்போல நடிப்போரேயாவர். இதனால் அகத்தே நட்பில்லாது, தங்காரியம் கைகூடுதற்காகப் புறத்தே நட்புக் கொண்டொழுகுவார்க்குப் பொதுமகளிரை உவமை கூறுதல் பொருத்தமானதே. இப் பொருத்தம் நோக்கியே பரிதியார் இங்கு இருமனப் பெண்டிர் எனப் பொருள் கொண்டாராகல் வேண்டும். மேலும், இஃ தொன்று இவ்வாறு உரையெழுதுவார் வேறும் ஒரு காரணம் கூறுப. பெண்பாலார் மனம் ஒருநிலையில் நில்லாது வேறு படும் என்னும் கருத்தை ஒப்புக்கொள்ளின், அது பெண்மைக்கு இழுக்காகுமன்றோ? யாண்டும் பெண்ணின் பெருமையே பேசும் வள்ளுவர், இங்கே பெண்மைக்கு இழுக்கான தொன்றைக் கூறு ரன்றே. எனவே, இங்கு வள்ளுவர் கருதியது பெண்பாற் பொதுமையையன்று, பொதுமகளிரையேயாம் என, அவர் வாதிப்பர். ஆயின் இவ் வாதம் பொருந்துமாறில்லை.

மகளிர் என்னும் சொல், பெண்பாற் பொதுமை சுட்டுவ தொன்று; அது குலமகளிர் பொதுமகளிர் என்னும் இருநிலை யார்க்கும் பொதுவானது. எனினும் அச்சொல் அடையின் றித் தனித்து நிற்கும்போது ஒழுக்கத்தின் இழிந்த வரைவின் மகளிரைச் சுட்டாது, ஒழுக்கம் பேணும் குலமகளிரையே சுட்டுதல் மரபு.

" சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை " (௫௭)

என்னுங் குறளில் வள்ளுவர் வழக்கே இதனை வலியுறுத்தும். மற்று, ஒழுக்கத்தின் இழிந்தாரைக் குறிப்பதற்குப் 'பண்பின் மகளிர்' என்றும், 'பொருட் பெண்டிர்' எனறும், 'மாயமக ளிர்' என்றும், 'வரைவிலா மாணிழையார்' என்றும், 'இரு

மனப் பெண்டிர்' என்றும் வள்ளுவர் அடைகொடுத்து வேறு பிரித்துக் காட்டுவர். இவ்வாறு பிறவிடமெல்லாம் குலமகளிரி னின்றும் பிரித்துணர்தற்கு அடைகொடுத்து வழங்கும் வள்ளு வர், இங்கே மட்டும் அடைகொடாதது ஏன்? பொதுமகளி ரைக் குறிப்பதற்குப் பெண்பாற் பொதுமையான சொல்லொன் றினைப் பயன்படுத்தல் குற்றமன்றோ? வள்ளுவர், கருதியதைத் திட்ப நுட்பமாகக் கூறும் வன்மை படைத்தவரன்றே! பொது மகளிர் என்பதே அவர்க்குக் கருத்தாயின், ஐயத்துக் கிடமின் றிப் பொருள் வரையறையுடைய சொல்லொன்றினைப் பெய்திருப் பாரே. செய்யுள் நோக்கி இவ்வாறு செய்தார் எனச் சொல்ல லாமோ? அது வள்ளுவர் புலமைக்கே வழுவாய் முடியுமன்றே! வள்ளுவர் இங்கே பொதுமகளிரையே கருதினராயின், அப் பொருள் தருவதொரு சொல்லை வைத்துக் குறளை யாத்திருப் பர். அவர் அங்ஙனம் செய்யாமையின் அவர்க்கது கருத் தன்று என்பது தேற்றம். எனவே, இக்குறளுக்கு மணக் குடவரும், பரிமேலழகரும், காளிங்கரும் கொண்ட உரையே உண்மையுரையெனப் படுகின்றது.

இவ்வாறு பொருள்கொள்ளின் அது பெண்மைக்கு இழுக் காகாதோ என்பது அடுத்த கேள்வி. இழுக்காகாதென்றே கொள்க எங்ஙனமெனிற் கூறுதும்.

வள்ளுவரின் குறளை அழுந்திக் கற்றால், அவர் ஆண் பெண் இயல்புகளை, இக் கால உடல் நூலாரும் உள நூலாரும் கண்டு வியக்கத்தக்க முறையில், நுணித்து ஆராய்ந்து அறிந்தவர் என்பது புலப்படும். பெண்மை பற்றிய ஆராய்ச்சியை மட்டும் இங்கே எடுத்துக் கொள்வோம். இலட்சிய நோக்கம் உடைய வரே யெனினும் வள்ளுவர் நிலவுலக இயற்கையை மறந்தவ ரல்லர். சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல அமைந் தொருபாற் கோடாத நெறியினராதலால், அவர் இல்லாத பெருமையைப் பெண்பாலார்க்கு ஏற்றிச் சொல்லவில்லை. உள்ளதை உள்ளவாறே கூறுகின்றார். அவர் பெண்பாலாரில் மூவகை நிலையினரைக் காண்கின்றார். அவரை முறையே சாதா ரண நிலையினர், உயர்நிலையினர், இழிநிலையினர் எனக் கூறலாம். சாதாரண நிலையினின்று கற்பென்னும் திண்மை வாய்க்கப் பெற்றவரே உயர்நிலையினர். இக் கற்பென்னும் திண்மை எல்லா மகளிர்க்கும் எளிதில் வாய்ப்பதொன்றன்று. அஃது அரிதில் வாய்ப்பதொன்றேயாம். எனவேதான் வள்ளுவர்,

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மை யுண்டாகப் பெறின்" (குஎ)

எனக் குறள் வகுத்தார். பெறின் என்று கூறியமையால் அவ்வாறு பெறுதல் அரிது என்பது குறிப்பாகும். அத்தகைய அரும்பெறற் கற்பைப்பெற்ற பெண்ணே மண்ணிற் றெய்வமென மதிக்கப்படுவள்: அவளே உரைசால் பத்தினி: அவளுக்கே உயர்ந்தோர் ஏத்துதல் செய்வர். இத்தகைய திண்மை வாய்ந்த பெண்மையினும் பார்க்க உயர்ந்ததொன்று மற்றில்லை என்பது வள்ளுவர் முடிபு. இத்தகைய உயர்நிலை மகளிரையே வள்ளுவர் 'ஒருமை மகளிர்' எனப் பிறவிடத்தும் குறித்துள்ளார். ஆண்மகன் ஒருவன் நிறையில் வழுவாமற் றன்னைத் தான் காத்துக் கொண்டொழுகுவானாயின் அவன்மாட்டுப் பெருமை உண்டாகும் எனக் கூறவந்த வள்ளுவர், அதற்கு உவமையாக ஒருமைமகளிரையே கூறுகின்றார்.

"ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு" (கஉ)

'உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை' எனத் தொல்காப்பியர் உவமைக்குக் கூறிய இலக்கணத்தை மனத்துக்கொண்டு நோக்கின் ஒருமைமகளிர்க்கு வள்ளுவர் கொடுத்துள்ள மதிப்பு விளங்கும்.

இனி, சாதாரண நிலையினின்றும் இழிந்தவரே வரைவின் மகளிராவார். அவரைப்பற்றி அதிகம் கூறல் வேண்டா. அவருடைய மனத்தைப்பற்றி வள்ளுவரும் கூறியுள்ளார்; பிறரும் கூறியுள்ளனர். சாதாரண நிலையிலுள்ள மகளிர் மனம் ஊசலாடும் இயல்பினது. இஃது அவர்தம் இயற்கை. இவ்வியற்கையை வெல்லவல்லவரே ஒருமை மகளிராவர். இக்கால உடல், உளநூலார் ஆராய்ந்து இவ் வுண்மையை நிலைநாட்டியுள்ளனர். இதற்கு அவர் கூறும் விளக்கத்தையும் சிறிது காண்பாம்.

மக்களின் உள்ளத்துக்கும் உடலுக்கும் மிக நெருங்கிய தொடர்புண்டு. ஒன்றையொன்று தாக்கவல்லது. உடலுக்கு ஏற்படும் ஊறு உள்ளத்தைத் தாக்கும்; அவ்வாறே உள்ளத்துக்கு ஏற்படும் ஊறு உடலைத் தாக்கும். இஃது அடிப்படையான ஓர் உண்மை. ஆண்களின் உடலமைப்புக்கும் பெண்களின் உடலமைபபுக்கும் வேறுபாடு பெரிதுமுண்டு. இருவேறு தொழில்களைச் செய்தற்காக இயற்கையானது இருபாலார் உடலையும் இருவேறு வகையில் அமைத்துள்ளது. ஆணின் உடல் வன்மை வாய்ந்தது; பெண்ணின் உடல் மென்மை மேவியது. இதனால் ஆணின் உள்ளம் பெண்ணின் உள்ளத்தை விட உறுதி கூடியது என்பது பெறப்படும். பெண்ணின்

உடலின் மென்மைக்குத் தக, அவள் உள்ளமும் நொய்யதா ...... இவ்வாறுள்ள உள்ளம் சூழ்நிலைச் சார்பால் ...ருவில் மாறுபடுகின்றது இதனைவிட வேறு காரணம் ஒன் ...ம் உண்டு அஃது ஆண் பெண் ஆகிய இருபாலார் உடலி ...ள்ளே நிகழும் இரசாயனத் தொழிற்பாடு பற்றியது. இது ...வளர் சிதை மாற்றம்' (Metabolism) எனப்படும் உயிர்கள், உணவு காற்று நீர் முதலிய வெளியிலுள்ள பொருள்களை உட் ...கொண்டு அவற்றைச் சத்தியாக மாற்றும் தொழிலையே இப் ...தம் குறிக்கின்றது. இந்த இரசாயனத் தொழிற்பாட்டில் ஆணுக்கும் பெண்ணுக்கும் வேறுபாடுண்டு. உணவுப் பொருள் ...களைச் சத்தியாக மாற்றும் தொழில், பெண்ணின் உடலிலும் ...பார்க்க, ஆணின் உடலில் விரைவாக நிகழ்கின்றது. பெண்ணின் உடல், சத்தியை அதிகநேரம் சேமித்து வைத்திருக்கின்றது. இத்தகைய இரசாயனத் தொழிற்பாட்டில் ஒன்று, உட்கொள் ...ளும் உணவிலிருந்து 'கல்சியம்' என்னும் உப்பைப் பிரித் ...தெடுத்தலாகும். பிள்ளைமைப்பருவத்தில் ஆண் பெண் இரு ...பாலார் உடலிலும் இவ் வுப்பு எலும்பின் வளர்ச்சிக்காகப் பயன் படுத்தப்படுகிறது. பின்னர் யௌவனப் பருவத்தில் இனப் பெருக்க உறுப்புக்களின் தொழிற்காகப் பயன்படுகின்றது. இவ் வுப்பு ஆணைவிடப் பெண்ணுக்கே அதிகம் வேண்டியிருக் ...கின்றது. சிறப்பாக அவள் கருவுற்றிருக்கும்போது, உள்ளே வளரும் குழந்தையின் எலும்புச்சட்டம் அமைப்பதற்கு இவ் வுப்பு அதிகம் தேவைப்படுகிறது. கருவுயிர்த்த பின்னர் முலை ...யிற் பால் உண்டாவதற்கும் இவ் வுப்பு வேண்டப்படுகின்றது. இவ் வுண்மைகளின் விளைவுகள் இரண்டு. ஒன்று: ஆணிலும் ...பார்க்கப் பெண்ணுக்கு அதிகக் 'கல்சியம்' உப்புத் தேவை. இரண்டு: பெண்ணுக்கு ஏனைய வேளைகளிலும் பார்க்கச் சில வேளைகளில் இவ் வுப்பு மிக அதிகமான அளவிற்றேவை. எனவே பெண்ணின் 'வளர்சிதை மாற்றம்', எனறும் ஒரு ...படித்தாயிராமற் காலத்துக்குக் காலம் வேறுபடும் இயல்பினது. அவளின் உடல் சில வேளைகளிற் கூடுதலாகவும், மற்றுஞ் சில வேளைகளிற் குறைவாகவும் கல்சியம் உப்பைத் தயாரிக்கின்றது. இந்த இரசாயனத் தொழிற்பாட்டில் உள்ள ஒழுங்கற்ற தன்மை அவளின் உள்ளத்தையும் தாக்குகின்றது. இதனாற்றான் பெண்கள் மனம் ஒருநிலையில் நில்லாது ஊசலாடும் இயல் ...புடையதாகின்றது. மகளிர்மனம் வேறுபடுவதற்கு இக் கால ...டல், உளநூலார் கூறும் விளக்கம் இதுவாகும். இயற்கையின் ...நியதி இதுவாதலின், இதை ஒப்புக்கொள்வதாற் பெண்மைக்கு இழுக்கொன்றும் இல்லை. இயற்கையிலேயே ஊசலாடும் உள்ளம் பெற்ற மகளிர், கல்வியினாலும் சார்பினாலும் அவ் வுள்ளத்தை

ஒருவழிநிறுத்தி, நிறையென்னும் திண்மையைப்பெற்று, இயற்கையையே வென்றும் விடலாம்.

இந்த உண்மைகளையெல்லாம் தம் நுண்மாண் நுழை புலனாற் கண்ட வள்ளுவர் ஒருமை மகளிரையும் இருமனப் பெண்டிரையும் வேறு பிரித்துக் கூறவே, சாதாரண நிலையிலுள்ள மகளிரும் அவர்க்கு உடன்பாடென்பது போதரும். இக் கட்டுரைத் தொடக்கத்தே காட்டிய குறளில் மகளிர் என்னும் சொல், இச் சாதாரண நிலையினரையே குறிக்கின்றது. இக் குறளிற் கூடா நட்புக்கும் மகளிர்மனத்துக்கும் ஒப்புமை வேறுபடும் அளவிற்கே கூறப்பட்டதென்க.

## இரங்கற்பாக்கள்[1]

[ திரு மெ. வெ. வேலப்ப செட்டியார். ]

என்குருவே நின்மாதா இறந்ததனை
யானறிந்து வருந்து கின்றேன்
முன்புவினை அளவிருந்து முடிகின்ற
படியாக முடிந்த தந்தோ!;
துன்புகழிந் தவருயிர்தான் பேரொளியிற்
கலந்திலங்கித் துலங்கி நாளும்
இன்புமிகு சாந்திபெற இறைவனடித்
தாள்நிழற்கு ஏகிற் றேதான். (க)

உன்னைவளர்த் தாளில்லை உயர்தமிழை
வளர்த்தளித்தாள் உலகத் திற்குப்
பின்னைவளர்த் தாள்என்னை? பிறங்குதமிழ்
நிஅளித்த பெட்பி னாலே;
தன்னையினம் வளர்த்தற்குத் தானறியாத்
தகைமையினாள் தரணி தன்னில்
முன்னைவளத் தார்ந்துவரும் முதுமைவளத்
தான்மறைந்து முடிந்திட் டாளோ. (உ)

1. திரு. ச. அ. இராமசாமிப் புலவரவர்களின் அருமை அன்னையார் பிரிவுக்கு இரங்கிக் கூறியது.

# മലയാളം—இரு பண்பாட்டின் கலப்பாகும்[1]

[திரு. இரா. கதிர்வேல்முருகன்]

இன்று கேரளம் என வழங்கப்படுவது தமிழகத்தின் ஒரு பகுதியே யாகும். சேரநாடு, മലനാടു எனத் தமிழகத்தாரா லும் മലബാർ (Malabar) என வெளிநாட்டாராலும் அழைக்கப்பட்ட தமிழர்வாழ் தமிழகத்தின் ஒரு பகுதியே கேரள மாகும். 'மலையாளம்' என்ற சொல் தொடக்கத்தில் நாட்டை மட்டுமே குறித்தது மிக அணிமைக்காலம் வரை இச் சொல் ஒருமொழியைக் குறிக்காது நாட்டையே குறித்துநின்றது. അമരം തമിഴ്ക്കൂത്ത് (Amaram Tamilkkuttu) നമ്പിയാർ തമിഴ് (Nampyar Tamil) തമിഴൈക്കൊണ്ടു അറിയിക്കിന്റേൻ (Tamilayakontu ariyikkinren) என்ற இன்றைய வழக்காற்றுச் சொற்கள் 'தமிழ்' தான் தாயக மொழி என்பதைத் தெள்ளத் தெளிய விளக்கி நிற்கின்றன. கேரளநாடு எவ்வளவு தொன்மை வாய்ந்ததோ அவ்வளவு தொன்மை வாய்ந்தது தமிழ்மொழி. தொன்று தொட்டே தமிழ்மொழி பயின்று வந்தாலும் அதனை 'மலையாளம்' என்று ஒரு தனி மொழியாக்கிப் பெயரிட்டுக் கேரளத்தார் அழைப்பது நூற்றைம்பது ஆண்டுக்குட்பட்ட வழக்கே யாகும்.

கல்வெட்டுக் குறிப்புக்களும், இலக்கியச்சான்றுகளும் கி. பி. 825-ஆம் ஆண்டு தொடங்கி நடைபெறுகின்ற கொல்லம் ஆண்டு தொடங்குதற்கு முன்புவரை, தமிழ்மொழியே சேர நாட்டில் நிலவியது என்பதை வலியுறுத்துகின்றன. மேலும் அதனின் வேறாய மொழி பயின்றது என்பதற்கு ஒரு சிறிதும் ஆதாரம் தருகின்றில. சேர நாட்டுப் புலவர்களின் இலக்கியங்கள் யாவும் தூய தமிழிலேயே யாக்கப்பட்டு இன்றுள்ள பண்டைத் தமிழ் இலக்கியத்தில் தனியிடம்பெற்று ஒளிவிட்டு மிளிர்கின்றன. கூர்ந்து நோக்கின் இவை மலையாளிகளின் இலக்கியங்களுமாகும். எடுத்துக்காட்டாகச் சேரநாட்டு இளங்கோ இயற்றிய செந்தமிழ்க் காப்பியமாம் **சிலப்பதிகாரம்** தமிழகத்தின் ஐம்பெருங் காப்பியங்களில் தலைசிறந்த தொன்று. இச் சிலப்பதிகாரம் மலையாளிகளின் இலக்கியமு மாகும் என்பதைத் தன் சாதி, மதம், மொழி, பண்பாடு என்ற குறுகிய நோக்கம் விடுத்து, மொழியின் இயல்பை உள்ளது உள்ளபடி உணரவல்ல

1. சென்னைப் பல்கலைக்கழக மலையாள மொழித்துறைத் தலைவர் உயர்திரு டாக்டர், எஸ். கே. நாயர் (Dr. S. K. Nayar) எழுதிய கட்டுரையினைத் தழுவியது.

வனும் மொழியின்பால் பற்றுக் கொண்டுள்ளவனும் ஆகிய எந்த மலையாளியும் உணர்வான். உணர்வதோடு தொன்றுதொட்டு வரும் தன்னுடைய பெருமையும் மரபும் இழத்தற்கு வருந்துவான்.

மேற்குத் தொடர்ச்சி மலைத்தொடருக்கு மேற்கிலும் கிழக்கிலும் ஏற்பட்ட அரசியல், சமுதாய பண்பாடு முதலியவற்றால உண்டாய மாற்றங்களின் விளைவே இன்றைய மலையாளிகள், தமிழர்களிடையே நிலவும் வேறுபாடு. ஆரிய திராவிடக் கலப்பே பெருத்த மாற்றத்திற்குக் காரணமாய் அமைந்தது ஆரியம் இந்தியாவின் ஏனைப் பகுதிகளினின்று வேறுபட்ட புதியதொரு முறையில் தன் ஆதிக்கத்தைச் செலுத்திக் கேரளத்தில் புதிய சாதி, நாகரிகம், பண்பாடுகளை ஏற்படுத்தியதோடு நில்லாமல் புதிய மொழியொன்றையும் தோற்றுவித்தது. மலையாளிகளின் மலையாள மொழி வேரூன்றத் தொடங்கிய காலமும இதுவே. இயற்கையும் செயற்கையும் பின்னிப் பிணைந்த மூன்றுவித மொழிப் பாகுபாடுகள் இக் காலத்தில்தான் வழக்கிற்கு வரத் தொடங்கின.

முத்தும் பவளமும் ஒருசேரக் கோத்த ஆரம்போல் ஆரியமும் தமிழும் இடையிடையே மிடைந்த மணிப்பிரவாள நடை தோன்றிற்று. உயர்சாதி இந்துக்கள், நம்பூதிரிப் பிராமணர்கள், சத்திரியர்கள் போன்றோர் இம் மணிப்பிரவாள நடையைப் போற்றிப் புரந்ததோடு பெரிதும் வடமொழி கலந்து எழுதுவதே ஏற்றம் எனவும் எண்ணி அதனை நடைமுறையில் பெருவரவிற்றாய்க் கையாண்டனர்.

இரண்டாவது மாறுபாடு செந்தமிழும், கொடுந்தமிழுமாகும. இலக்கியங்களிலும் எழுத்திலும் கையாளப்பட்ட செப்பமுடைய மொழி செந்தமிழாகும். எழுத்தில் வாராது பேச்சளவில் எல்லோராலும் பேசப்பட்ட மொழி கொடுந்தமிழாகும்.

மூன்றாவதாக உள்ள மொழி மணிப்பிரவாளம், செந்தமிழ், கொடுந்தமிழ் இவற்றின் கூட்டுக்கலவையாய்க் கொச்சை நடையுடைத்தாய்ப் பேச்சளவில் நின்றது. இத்துடன் அராபி, பார்சி, உருது, பிராகிருதம் போன்ற இந்திய மொழிகளும், டச்சு, போர்ச்சுகல் போன்ற வெளிநாட்டு மொழிகளும் தஙகள் பங்கிற்குத் தங்கள் மொழிச்சொற்களை வாரி வழங்கிப் புதிதாகத் தோன்றும் மொழியின் சொல்வளத்தைப் பெருக்கின. பதினாறும் நூற்றாண்டிற்குப் பின்னரே இன்றைய மலையாளம் முழு உருப்பெற்று மலர்ந்தது. அன்று தொடங்கிய மலையாள மொழி இன்றுவரை மாற்றமின்றி உள்ளது.

கேரளநாட்டு மொழிவரலாற்றை மூன்று பிரிவுகளுள் அடக்கலாம். (1) ஒன்பதாம் நூற்றாண்டு முடியச் சிறிதும் மாற்றமற்ற தமிழ்மொழியே பேசப்பட்டது. (2) ஒன்பதாம் நூற்றாண்டு தொடங்கிப் பதினாறும் நூற்றாண்டு முடியவுள்ள காலம் மொழி குழம்பிய காலம். இவ் இடைப்பட்ட காலமே தமிழ் ஆரியக்கலப்பால் சிதைவுண்டு சீர்குலைந்து தமிழின் வேறாய புதியதொருமொழி உருப்பெறத்தொடங்கியது. இதுவே பின்னர் மலையாளமாயிற்று. (3) அதன்பின்னரே தற்காலம் நிலவும் மலையாளம் கால்கோள் கொள்ளத் தொடங்கித் தன்னாட்சியைப் பரப்பியது.

முதற்காலத்தைச் சார்ந்த, அஃதாவது ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முந்திய இலக்கியங்கள் ஏதும் கிடைக்கப் பெறவில்லை. தோரம் பாட்டுகள் (Torram Pattukal) என்ற பத்திப் பாடல்கள் இக் காலத்தைச் சார்ந்தன என்கின்றனர் ஒரு சில ஆராய்ச்சியாளர்கள். ஆயின், இதனை வலியுறுத்தும் வரலாற்றுச் சான்றோ மொழிவழித் துணையோ ஏதும் இல்லை. குலசேகர மன்னனின் அவைக்களப் புலவராகத் திகழ்ந்தவர் என்று எண்ணப்படும் தோளன் (Tolan) என்பவர்மேல் ஏற்றி அவர் இயற்றியதாகக் கூறப்படும் கவிதைகள் இக் காலத்தன என்ப ஒருசாரார். தோளனைப் பற்றியும் அவர் இயற்றிய இலக்கியம் பற்றியும் சான்றுகொண்டு துணியும் அளவிற்கு ஏதும் இல்லை.

இடைப்பட்ட மொழிகுழம்பிய காலத்தில்—அஃதாவது ஒன்பதாம் நூற்றாண்டுக்கும் பதினாறும் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் தகுதி வாய்ந்த இலக்கியங்கள் தோன்றலாயின. இதனை மொழியின் வளர்ச்சி அடிப்படையில் மணிப்பிரவாளம் என்றும் பாட்டு, வைசிக தந்திரம் (Pattu, Vaisika Tantram) என்றும் பகுக்கலாம். இவற்றுள் பின்னது பண்டுதொட்டுப் பயின்று வருவது. இருநூறு வடமொழியாப்பில் யாக்கப் பெற்ற சுலோகங்களே தொடக்ககால மணிப்பிரவாள நடை இலக்கியமாக இன்று விளங்குகின்றன. இன்றும் நின்று நிலவும் உன்னி நீலி சந்தேசம் (Unni Neeli Sandesam) இந்தக் காலத்தில் தோன்றிய தலையாய உயரிய இலக்கியமாகும். காலத்தில் முந்தியதும் கீர்த்தியால் உயர்ந்ததுமான இராமாயணக் காவியத்தைத் தழுவிய இராம சரித்திரம் பாட்டென்ற பகுதியைச் சார்ந்தது. இராம சரித்திரம் பதின்மூன்றும் நூற்றாண்டிலும், உன்னி நீலி சந்தேசம் பதினான்காம் நூற்றாண்டிலும் தோன்றியனவாகும். காவிய அமைப்பில் அமைந்த காதற்சுவை மிக்க மணிப்பிரவாள நடைபயின்ற சந்திரோஸ்த்தவம் (Chandrotsavam) என்ற நூலும் இக் காலத்ததே யாகும்.

இராமாயணம், மகாபாரதம், பாகவதம் முதலிய നിരണം (Niranam) என்னும் கவிதை முறையில் யாக்கப்பட்ட நூல்களும் இக் காலத்தனவேயாகும். இவைகளில் கையாளப்பட்ட கலப்பு மொழி ഭാഷാമിശ്രം (Bhashamisram) என்று வழங்கப்பட்டது. இக் காலத்தில் தோன்றிய இலக்கியங்கள் தமிழ் அல்லது வட மொழியின் மாற்றுருவாகவே தோற்றமளித்தன. தனிமூல நூலாக எதும் தோன்றவில்லை. இக் காலத்தில் தோன்றிய ചെറുശ്ശേരി നമ്പൂതിരി (Cherussery Nampoothiri) யால் இயற்றப் பட்ட കൃഷ്ണപ്പാട്ട് என்ற கவிதை முதல் மூலநூலாகும். இது மெருகிடப்பட்ட புதுமையுடன் விளங்கிய காரணத்தால் அதற்குரிய பழமையுடன் விளங்கவில்லை இதன் மொழிநடை யும் சற்றுப் புதுமை வாய்ந்தது.

துஞ்சத்து எழுத்தச்சன் மலையாள மொழியின் தந்தை என் றழைக்கப்படுகிறார். கேரளமொழியைச் செப்பஞ்செய்து சீர் படுத்தி ஓர் உருக்கொடுத்து நிலைபெறச்செய்த பெருமை இவரையே சாரும். இதன்பொருட்டு இவர் மலையாளிகளின் நன்றிக் குரியவராகிறார். இவர் இயற்றிய ആദ്ധ്യാത്മ രാമായണം, മഹാഭാരതം (Adhyatma Ramayanam Mahabbharatham) என்னும் இரண்டு நூல்களும் இல்லா இல்லங்கள் கேரளத்தில் இல்லை எனலாம். நாள்தோறும் இராமாயணம் ஓதுவதை ஒவ் வொரு இந்துவும் தன் மதக் கடமையாகக் கைக்கொண்டனன். அரசியல் அடிப்படையில் பல சிறு சிறு எல்லைகளுக் குட்பட்டுச் சிதறுண்டு கிடந்த கேரளம் எழுத்தச்சன் இயற்றிய மத நூலுக்கு மதிப்பளிக்கத் தொடங்கியவுடன் அவர் ஆயுட் காலத்திலேயே ஒன்று சேரலாயின. மொழி, பண்பாடு, மதம் மூலமாகக் கேரளத்தாரை ஒன்றுபடுத்த வழியமைத்து ஒன்று சேர்த்த பெருமை எழுத்தச்சனையே சாரும். இவ் வொற்றுமை காலப்போக்கில் அரசியல் ஒற்றுமையை நிலைநாட்டப் பாதை வகுத்தது. அவர் உருவாக்கிக் கையாண்ட மொழியே சாதி மதம் கடந்து மலையாளிகளின் மத்தியில் இன்றும் பேசப்படு கின்றது.

எழுத்தச்சன் காலத்திற்குப் பின் உயரிய இலக்கியப் பகுதி கள் மலையாளத்தில் தோன்றி வளரலாயின. ചമ്പു (Champ) என்ற வடமொழி இலக்கிய மாற்றுருவின் பொற்காலமாகப் பதி னேழு பதினெட்டாம் நூற்றாண்டு விளங்கியது. இந்த நூற் றூண்டில் தான் ആട്ടകഥാ സാഹിത്യം (Attakatha Sahityam) என்ற கதகளி நாடக நூல் முதன் முதலாகத் தோன்றியது. இக் காலத்தே ஆட்டகதா இயற்றுவதை ஏற்றமாக் கொண்டனர். எனவே, பல ஆட்ட கதாக்கள் தோன்றின. குஞ்சன் நம்பியா

ரால் இயற்றப்பட்ட துள்ளல் சாகித்தியம் (Tullal Sahityan) என்னும் பழைமை தழுவிய இலக்கியம் பதினெட்டாம் நூற்றுண்டின் மத்தியில் பரவத் தொடங்கியது. துள்ளல் இலக்கியம் மலையாள மொழியின் அமைப்பு, உட்கருத்து முதலியவற்றில் பெரியதொரு புரட்சியைத் தோற்றுவித்தது. எப் பொருளையும் எளிமையுடன் விளக்குவது; உட்பொருள் எவ்வளவு பின்னிக் கிடந்தாலும் அதனை எவ்வளவு எளிமையாக மொழியில் விளக்க முடியுமோ அவ்வளவு எளிமையாக மொழியில் விளக்குவது என்ற நிலை தோன்றிற்று. புலவனின் ஆற்றலைப் புலப்படுத்தும் கருவி, கவிதை என்ற நிலைமாறிக் கவிதை சமுதாய நலனுக்கு உறுதுணையாயுள்ளது என்ற நிலை குஞ்சன் நம்பியார் காலத்தில் தோன்றியது. துள்ளல் இலக்கிய ஆசான் மலையாள முற்போக்கு இலக்கிய வழிகாட்டியாய் அமைந்தவர் ஆவர்

குஞ்சன் நம்பியாருக்குப்பின் ஒரு நூற்றுண்டு மலையாள இலக்கியத்தின் இருட்காலமாக இருந்தது. 19-ஆம் நூற்றுண்டின் இறுதியில் தோன்றிய கேரளவர்ம வலிய கோயில் தம்பிரான் அரசகவியாகவும் கவிகளின் அரசாகவும் விளங்கி மலையாள இலக்கிய மறுமலர்ச்சியை உண்டு பண்ணினர். இவர் காலத்தில் தான் முதன் முதலாக நவினங்கள், கட்டுரைகள், சிறுகதைகள், இலக்கிய ஆராய்ச்சி, வழிச் செலவு நூல்கள் முதலிய தற்கால உரைநடை நூல்கள் தோன்றலாயின. என்ற போதிலும் மகா காவிய, கண்ட காவிய (Mahakavyas, Khandakavyas) நடையில் இயற்றப்படும் கவிதைகளும் நாடகங்களுமே பெருமையும் பீடும் உடையதாய் விளங்கின.

குமரன் ஆசான், உள்ளூர்ப் பரமேசுவர அய்யர், வள்ளத் தோல் நாராயணமேனன் முதலிய கவிஞர்கள் இருபதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் மலையாள இலக்கியத்தில் கவிதை வளத்தைப் பெருக்கினர். அவர்களைப் பின்பற்றித் தற்காலப் புதினக் கருத்துக்களைக் கவிதை உருவில் அளிப்போர் பலர் இன்றுள்ளனர். இன்றையக் கவிதை உலகம் சற்றுப் பிற்போக்கு நிலையில் உள்ளது எனலாம். இன்றைய கவிஞர்கள் பெரும்பாலும் இளைஞர்களாய்ப் பகுத்தறிவுவாதிகளாய்ச் சீர்திருத்தம் பேசுபவராய் இருப்பதனல் அவர்கள் கவிதைகளில் கற்பனைவளம் குறைந்துள்ளன. பொதுவாக இவர்கள் இயற்றும் கவிதைகளில் பெரும்புலமை தென்படவில்லை.

1935-ஆம் ஆண்டில் முற்போக்காளர்கள் ஒன்றுகூடி மலையாள இலக்கியங்கள் பொருளாதார சமுதாய முன்னேற்றம் காணவேண்டி ஒரு குழு அமைத்துக்கொண்டனர். இதில் எழுத்தாளர் ஏனை இலக்கிய உலகில் ஈடுபட்டோர் உறுப்பினராயுள்ள

னர். பல அரசியல் கொள்கையாளரும் மாறுபட்ட கருத்துடையவர்கள் பலரும் இதில் அங்கம் பெற்றுள்ளனர். இன்று மலையாளம் சிறந்த கதை, நவீனம் முதலிய எழுதும் பல எழுத்தாளர்களைப் பெற்றுள்ளது. அனைத்திந்தியச் சிறுகதைப் போட்டியில் ஒரு மலையாள இளைஞன் முதற்பரிசு பெற்றமை இங்குக் குறிப்பது பொருத்தமாகும் சிறுகதை உலகில் மலையாளம் உயரிய இடம் பெற்றுள்ளது. கேரளத்தார் கணக்கிட்டு எண்ண முடியாக் காலந்தொட்டே நாடகக்கலையில் வல்லுநராய் விளங்கி வந்திருக்கின்றனர் இயல், இசை, கூத்து என்ற முத்தமிழுள் ளும் சேரநாடு கூத்திற்குச் சிறப்பிடமாய் விளங்கியது என்பது இதனை மெய்ப்பிக்கும்

மலையாள உரைநடை இலக்கியம் எல்லாத் துறைகளிலும் தற்போது வளர்ச்சி யடைந்து வருகிறது. பல எழுத்தாளர்கள் தற்போது வெளிநாடு சென்று மீளுவதால் பல வழிச்செலவு நூல்கள் மலையாளத்தில் தோன்றியுள்ளன. அவ்வண்ணமே வரலாறு, இலக்கிய ஆராய்ச்சி, விஞ்ஞானம் இன்னோரன்ன பல துறைகளிலும் பல உரைநடை நூல்கள் தோன்றியுள்ளன; தோன்றுகின்றன. தனக்கெனப் புதியதொரு நாட்டை வகுத்துக்கொண்ட இன்றைய கேரளம், இலக்கிய வளத்தைப் பெருக்கி முன்னணி மொழிகளில் மலையாளமொழி தனக்குரிய உயரிய இடம் பெற்றுத் திகழுமாக.

## மழைநீர் மாசற்றதல்ல

மழைநீர் தூய்மையானதென்று சிலர் கருதுகிறார்கள். இது உண்மையல்ல. காற்றில் தூசித் துகள்கள் இருப்பதால்தான் நீரின் ஆவி அவற்றைச் சுற்றி ஒன்று திரண்டு துவலைகளாக மாறி மழையும், பனியும் பெய்ய முடிகின்றதென்பதை விஞ்ஞானிகள் மெய்ப்பித்துள்ளனர். எனவே, மழைத்துளி ஒவ்வொன்றிலும் பல தூசித் துகள்கள் உள்ளன.

மழைநீரைக் காய்ச்சி ஆவியாக்கினால் அடியில் தூசி படிந்து எஞ்சி நிற்கும். காற்றிலிருந்து மழைத்துளி தூசியைத் திரட்டிக்கொண்டு வருகிறது. தொழிற்சாலைகள் இருக்கும் நகர்களில் காற்றில் கரித் துகள்களும் ஏனைய பொருள்களும் மிகுதியாகக் கலக்கின்றன. மழைநீர் இவற்றை உடன்கொண்டு வருகிறது.

நகர்களிலிருந்து நெடுந்தொலைவில் உள்ள மலைகளில் பெய்யும் மழைநீர் கூடத் தூய்மையானதல்ல. அங்குக்கூட ஒரு லிட்டர் மழைத் தண்ணீரைக் காய்ச்சி ஆவியாக்கினால் 0·04 கிராம் எடையுள்ள திடப்பொருள் அடியில் படிகின்றது. ஆதலால் தூய்மையான நீரைப் பயன்படுத்த வேண்டியவைகளில் மழைநீரைப் பயன்படுத்துதல் கூடாது.

—**சோவியத்துச் செய்தி.**

# செய்திகளும் குறிப்புகளும்

(க) அரியலூர் அருகே புகைவண்டித்தொடர் வீழ்ச்சி

கடந்த 22-11-56 இரவு சென்னையை விட்டுப் புறப்பட்ட தூத்துக்குடி விரைவுப் புகைவண்டித் தொடர், மறுநாள் (23-11-56) காலை 5-20 மணி அளவில் அரியலூருக்கும் கல்லத்துக்குமிடையேயுள்ள மருதையாற்றுப் பாலத்தின்மீது சென்றுகொண்டிருக்கையில், திடீரெனக் கவிழ்ந்தது. எஞ்சினும் ஏழு தொடர்வண்டிகளும் ஆற்று வெள்ளத்தில் மூழ்கின. அவற்றுள் பெண்கள் பகுதியொன்று உட்பட நான்கு வண்டிகள் மூன்றாம் வகுப்பு வண்டிகள்; வேறு இரண்டு, முதல் - இரண்டாம் வகுப்புக்கள் ஆகிய ஏழாவது, உதவி கார்டு, பார்சல் வண்டிகளாகும். இந்த ஏழு வண்டிகளும் இயல்பாக 300 மக்களைக் கொண்டதாக இருக்குமாம். இப்பெருங்கேட்டில் சிக்கி உயிர் இழந்தோர் தொகை 152 என்று கணக்கிடப்படுகிறது. மேலும் நூற்றுக்கணக்கான மக்கள் காயமுற்றனர் என, அரசினர் அறிக்கை வழியாகத் தெரிகின்றது.

**குறிப்பு:** மருதையாற்றுப் பாலம் மழையின் காரணமாகப் பழுதுபட்டு உடைப்பு ஏற்பட்டிருந்ததால் இவ்வீழ்ச்சி ஏற்பட்டது என்று கூறப்படுகிறது. இது மிக மிக வருந்தத்தக்க செய்தி. நூற்றுக்கணக்கான மக்களின் உயிரைப் போக்கும் அளவில் பாலம் பழுதுபட்டிருந்த நிலையறியாத புகைவண்டித்தொடர் ஆட்சி முறை அதனினும் வருந்தத்தக்கது. என் செயலாம்! உயிரிழந்த மக்களின் உற்றார், உறவினர், நண்பர் ஆகியோர்க்கு எமது ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

(உ) தமிழ்நாட்டுத் துறவிகளின் கஉ-ஆவது மாநாடு

கடந்த 17-11-56-ஆம் நாள் திருவண்ணாமலையில் சத்திவிலாச மண்டபத்தில் தமிழ்நாட்டுத் துறவிகள் மாநாடு சிறப்புற நடைபெற்றது. அம்மாநாட்டுக்கு உயர்திரு. சங்கரானந்த சுவாமிகள் தலைமை தாங்கினார்கள். அன்று காலையில் ஏறக்குறைய 500 துறவிகள் சா. நா. சாதுக்கள் சத்திரத்திலிருந்து ஊர்வலம் வந்தனர். தலைவர் முன்னுரைக்குப் பின்னர் பலர் சொற்பொழிவாற்றினர். இறுதியில் சுவாமி அருணகிரி நாதர் நன்றி கூற மாநாடு இனிது முடிந்தது. டி மாநாட்டில பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அவற்றுட் சில:

(க) "சென்னை இராச்சியத்திற்குத் தமிழ்நாடு என்று பெயர்வைக்க வேண்டுமென்றும், தமிழ்நாட்டின ஆட்சிமொழி தமிழாக இருக்க வேண்டுமென்றும் சென்னை அரசியலாரை இம்மாநாடு வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறது."

(உ) "தமிழ்நாட்டுக் கிறித்துவ பிரசாரகர்கள் நம் சமயத்தைச் சார்ந்த தேவாலய திருவிழாக்களிலும் சிற்றூர்களிலும் நகரங்களிலும் வீடுவீடாகச் சென்று பலவந்தமாகப் பிரசாரம் செய்து நம்மக்களை மத மாற்றஞ் செய்து வருவதை இம்மாநாடு வன்மையாகக் கண்டிக்கிறது."

(ஈ) "இனி மேலும் மக்களை மதமாற்றம் செய்வார்களாகுல் இச்சங்கத்தைச் சார்ந்த துறவிகள் கிறித்துவர்களிடையே எதிர்ப்புப் பிரசாரஞ் செய்து அவர்களையும் அவர்கள் சமயத்தையும் மிக எதிர்த்துப் போராடுவர் என இம்மாநாடு எச்சரிக்கின்றது" என்பனவாம்.

**குறிப்பு:** துறவிகள் செய்த முடிவுகளைப் பெரிதும் பாராட்டுகின்றோம். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என வாழ்ந்து அன்புநெறி, கடவுள் நெறிகளைப் பரப்பி ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க மக்கட்கு அறிவுறுத்த வேண்டும் கடமை துறவு பூண்டோர்க்கு உரியன. அவ்வாறிருந்தும் நாட்டுப்பற்றாலும் மொழிப் பற்றாலும் நம் நாட்டுக்குத் தமிழ்நாடு எனப் பெயரிடவும், தமிழ்மொழியை ஆட்சிமொழியாக ஆக்கவும். அரசியலாருக்குத் தீர்மானம் மூலம் அறிவூட்டியிருப்பது போற்றற்குரித்தாகும். தொடர்பு நீத்த துறவிகட்கு இருக்கும் நாடு, மொழிகளைக் குறித்த பற்றுக்கூட இன்றிப் பற்று விட்டிருக்கும் நம் மாநில அமைச்சர்களின் தருக்குக்கும் கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடா மடமைக்கும் வருந்துகின்றோம்.

(உ) சைவ சபை, பாளையங்கோட்டை

இச்சபைக் கூட்டம் கடந்த 25-11-56-ஆம் நாள் பாளையங் கோட்டை நகர்மன்றத் தலைவர் திரு எம். எஸ். மகாராசபிள்ளையவர்கள் தலைமையில் நிகழ்ந்தது. அதுகாலை, கந்தக்களஞ்சியம் திரு. எம். சோமசுந்தரம் பிள்ளை, நெல்லை தி. தா. இந்துக் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர். திரு ச. கணபதி முதலியார், திருக்குறள் மணி, திரு. அ. க. நவநீத கிருட்டிணன், அட்வகேட், திரு. கே. சக்கரபாணி நம்பியார் முதலியோர் அரிய சொற்பொழிவாற்றினர். அதுகாலை ஷை சபை அமைச்சர் திரு ச. சொக்கலிங்கம்பிள்ளை உருவப் படம் திறந்துவைக்கப்பட்டது. இசைவாணர் திரு. அ. சண்பகம் பிள்ளையை ஆசிரியராகக் கொண்ட தேவார பாடசாலை ஒன்று ஷை உருவப் படத் திறப்புவிழாவின் நினைவுக்குறியாகத் திறந்து வைக்கப்பட்டது. ஷை பாடசாலை நன்முறையில் பயன்பட எல்லா மடாதிபதிகளுக்கும் பொருள் முதலிய உதவிசெய்யுமாறு தீர்மானம் ஒன்று நிறைவேற்றப் பட்டது.

**குறிப்பு:** இத்தகைய சபைகள் நம் சைவசமயத்துக்கும், ஒழுக்க நெறிகட்கும் வேண்டும் தொண்டு புரிவது கடமையாகும்.

(ச) நகராண்மைக் கழகத்தின் புதுத்தலைவர்

கடந்த திங்கள் இறுதியில் நடைபெற்ற சென்னை நகராண்மைக் கழகத்தலைவர் தேர்தலில், காங்கிரசு உறுப்பினரும் முத்தியாலுப் பேட்டை வட்ட உறுப்பினருமான திரு. கே. என். சீனிவாசன் அவர்கள் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார். திரு கே. இராமதாசு என்பவர் உதவித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

**குறிப்பு:** நகராண்மைக் கழகப் புதுத்தலைவர்களை வாழ்த்தி வரவேற்கிறோம். இத்தலைவர்கள் நகரமக்களின் நல்வாழ்வில் நாட்டம் செலுத்தி நல்ல பணிகள் பல செய்வார்கள் என எதிர்பார்க்கின்றோம்.

# மதிப்புரை

சேக்கிழார் பெரியபுராணம் (ஆங்கிலம்) :

[ஆசிரியர் ஜே. எம். நல்லசாமிப் பிள்ளை. மறைத்திரு. டாக்டர். ஜி. யு. போப் அவர்களின் திருஞானசம்பந்தர், சுந்தரர், சண்டேசுவரர் வாழ்க்கை வரலாறுகளுடன் இணைத்து மறுவெளியீடாக வெளியிடப் பட்டது. தமிழ்ப் பல்கலைக்கழக வரிசை எண் 4. அச்சகத்தார் இராசன் அண்டு கோ, சென்னை 1. 1955. விலை ரூ. 3.]

பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை, எம். ஏ. எம் எல் அவர்கள் ஆங்கில அணிந்துரை; வெளியீட்டாளர் ஜே. என். இராமநாதன் (ஆசிரியர் புதல்வர்.) குறிப்பு முன்னுரை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம் சார்ந்த ஜே எம். சோமசுந்தரம் குறிப்புரை ஆகியவற்றுடன் கூடியது.

இந்நூல் தமிழக வரலாற்றிலும் சமய வாழ்விலும் இலக்கியத் திலும் முதலிடம் வகிக்கும் பக்தி இயக்கத் திருவேடான பெரியபுராணம் என்னும் திருத்தொண்டர் புராணத்தையும் அதன் காவியப் பேராசிரிய ரான கவிஞர் சேக்கிழாரையும் ஆங்கில மொழிமூலம் அறிவுலகுக்கு அறி முகப் படுத்தும் ஒரு சீரிய ஏடு ஆகும். இதன் ஆசிரியர் ஜே. எம். நல்ல சாமிப் பிள்ளையவர்களும் அவர் புதல்வரான வெளியீட்டாளர் ஜே. என். இராமநாதன் அவர்களும் சைவ ஆகமங்களாகிய மெய்ஞ்ஞான நூல்களை யும் சைவத்தையும் தற்கால உலகுக்குப் பல நூல்கள் வாயிலாக எடுத்து விளக்கியவர் ஆவர். இந் நூலில் பெரியபுராணக் கதைத் தலைவர்களான தனியடியார் அறுபத்துமூவருள் நாற்பத்திருவர் வரலாறுகளையும், தொகையடியார்களுள் தில்லைவாழ் அந்தணர், அப்பாலும் அடிசார்ந்தார் ஆகியவர்கள் வரலாறுகளையும் எளிய ஆங்கிலநடையில், ஆங்கில அறி வுலகுக்குத் தேவைப்படும் இடை ஆராய்ச்சி விளக்கங்களுடனும், உணர்ச்சி யார்வத்துடனும் ஆசிரியர் சுருக்கமாகவும் விளக்கமாகவும் தந்துள்ளார். இவை தவிர நூலின் முகப்புரையிலும் பின்சேர்க்கையிலும் வெளிநாட் டாராய்ச்சியாளருக்கு உதவும் முறையில் பல செய்திகளைத் தொகுத் துணர்த்தியுள்ளார். முகப்பில் இடம்பெறும் சித்தாந்த சாத்திரப் பட் டியல், பெரியபுராணச் சருக்க, இயல் வகுப்புமுறைக் கண்ணாடி ஆகிய வையும், பிற்சேர்க்கையில் தரப்படும் திருமுறை வகுப்பு வரிசையிலாம் பெரியபுராண நூலாசிரியர் சேக்கிழார் வரலாறு, அவர் முன்னூலாசிரிய ரான நம்பியாண்டார் நம்பி வரலாறு ஆகியவையும், நூலின் ஆதாரமூலம் பற்றிய குறிப்பும் இத்தகையவை.

நூல் தொடஙகுமுன் தில்லை அம்பலவாணர் கலைப்படிவமும் முதற் பக்கத்திற்கு எதிராகக் காட்சி யளிக்கின்றது. அடியார்கள் வரலாறுகள் பலவற்றுக்கும் இடையிடையேயும் நூலிறுதியிலேயும் கோயில்களில் காணலாம் கதைசசித்திரப் படிமங்களும் அவைபற்றிய முக்கிய பாடல் களும் தரப்படுவது நூலின் காவிய, ஓவியக் கலைச் சுவைகளையும் வர லாற்று மதிப்பையும உயர்வுபடுத்துகிறது.

தற்போதைய வெளியீட்டில் பிற்சேர்க்கையின் பகுதிகளாகவே மேலைநாட்டுத் தமிழ் இலக்கிய ஆர்வலரும் ஆராய்ச்சியாளரும் மொழி

பெயர்ப்பாளருமான டாக்டர் ஜி. யு. போப் அவர்களின் சீரிய எழுத்தோவியங்களாகத் திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி, சண்டேசுவரர் ஆகியவர் வரலாறுடன் தரப்பட்டுள்ளன. ஆசிரியர் கீழைநாட்டு அறிவாராய்ச்சி நோக்குடன் இணையாக ஒரு மேலைநாட்டு ஆர்வலர் ஆராய்ச்சி நோக்கும் அருகருகே தரப்படுவது. இந்நூலின் மொத்தச் சுவையையும் நடுநிலை புணர்வையும் நன்கு பெருக்கிக் காட்டுகிறது. ஜீ. யு போப் அவர்களின் வரலாறுகளிலும் தக்க தமிழ்ப்பாடல்களின் சான்றுகளும் கதை சித்திரிக்கும் ஓவியங்களும் இடம் பெற்றுள்ளன.

முன்னுரையுடனும் முகப்பு இவைகளுமாக ஆசிரியர் ஜே. எம். நல்லசாமிப் பிள்ளை நடராசர் உருவப் படப் பக்கங்கள உட்பட 32 பக்கங்களும், நூல் 144 பக்கங்களும், பிற்சேர்க்கையான வரலாறுகளும் ஆராய்ச்சிக் குறிப்புகளும் அதைத் தொடர்ந்து 22 பக்கங்களும் இறுதிச் சேர்க்கையாக திருப்பனந்தாள் தம்பிரான் அவர்களின் தமிழ் சைவத் திருத்தொண்டு பரிசுகளின் தொகை மதிப்புவிவரங்கள் 18 பக்கங்களும் இவ் வேட்டின் உள்ளடக்கமாக உள்ளன.

பெரியபுராணத்தைச் சமய நோக்கின் கோணங்கொண்டே ஆசிரியர் பெரிதும் கண்டு அரிய விளக்கம் தந்துள்ளார். ஆங்காங்கே அறிவு நோக்குடையார்க்குரிய உட்பொருள் விளக்கங்களைத் தந்ததுடன், அவ்வுட்பொருள் விளக்கமுடன் பிறப்பட்ட பகுத்தறிவு காலத்துக்குரிய பழமை புதுமைப் படைப்பல்ல, மிகப்பழமைவாய்ந்த திருமூலர் திருமந்திரத்திலும் உபநிடதங்களிலும் காணப்பட்டவையே என்றும் அழகுற ஆசிரியர் விளக்கியுள்ள திறம்பாராட்டுதற்குரியது. ஆனால் சேக்கிழார் கவிநயத்திலும், காவிய நடத்திலும் ஆசிரியர் மிகுதி கருத்துச் செலுத்தியிருந்தால், சேக்கிழாரையும் சைவ நூல் இலக்கியங்களையும் அவர் உலகுக்கு இன்னும் முழுநிறைவுபட அறிமுகப்படுத்தியிருக்கக்கூடும் என்று கூறாதிருக்க முடியவில்லை. கம்பராமாயணத்திற்குப் பல அறிஞர் செய்துள்ள இப் பணி, பெரியபுராணவகையில் பெரிதும் குறைபட்டுள்ளது என்றே தோற்றுகிறது பெரியபுராணம் சமய ஏடுமட்டுமல்ல, பேரிலக்கியச் செல்வம். கம்பராமாயணத்திற்குத் தூண்டுதல் தந்த இலக்கிய முதல்நூல் என்பதை ஆசிரியர் சுட்டிககாட்டினும், நூல் முழுவதும் இது வலியுறவுடன் தனிக்கூறாக விளக்கப்படவேண்டும் என்று கருதுகிறோம்.

கா. அப்பாத்துரைபிள்ளை, எம். ஏ. எல். டி.



திருநெல்வேலித், தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.

## ஆட்சிச் சொல்லாக்க உட்குழு



திருவாளர்கள் கோதண்டபாணி பிள்ளை, இ. மு. சுப்பிரமணிய பிள்ளை, S. வேங்கடேசுவரன், மா. அனந்தநாராயணன், R. V. கிருஷ்ண ஐயர்.

# சென்னை ஆட்சிச் சொல்லாக்கக் கழகம்

(முதல் வரிசை) திருவாளர்கள் கோதண்டபாணி பிள்ளை, ரெ. து. சுந்தரவடிவேலு, இரா. பி. சேதுப் பிள்ளை, S. வேங்கடேசுவரன, மா. அனந்தநாராயணன், R. V. கிருஷ்ண ஐயர். இ. மு சுப்பிரமணிய பிள்ளை.

(இரண்டாம் வரிசை) அ. முத்தையா. T. K. சங்கரவடிவேலுப் பிள்ளை, சொ. அமிர்தகணேச முதலியார், மு அ. குற்றாலலிங்கம் பிள்ளை. N. விநாயகம்




சிலம்பு ௩௧ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௭, மார்கழி
சனவரி, 1957 | பரல் ௫

# தமிழே ஆட்சிமொழி

செந்தமிழ்த் திருமிக்க நன்னாடு; நாவலரும் காவலரும் நானிலம் புகழ நலமலிந்த பொன்னாடு; திங்கள் மும்மாரி செழிப் புறப்பெய்து எங்கும் வளங்கொழிக்கும் எழில் நாடு; தண் பொருந்யாறும், வண்டமிழ் அறிநத வையைப் பேரியாறும், பொன்கொழித்துப் போதுதாங்கிவரும காவிரிக் கவினார்யாறும், வற்றாவளத்தை வளர்க்கும் நாடு; தமிழ் தழீஇய சாயலவர் எழில் மிக்க இயல் நாடு; கற்புக் கடம்பூண்ட காரிகையாரின் கவின் வளர் திருநாடு; தமக்கென வாழாத் தண்ணளிமிக்க தக்காரைக் கொண்ட தண்ணாடு; தமிழ்ப்பாட்டிசைத்து வண்டுகள் பாட, புள்ளும் விலங்கும் பொற்புடன்கேட்டுக் களிதுளும்பப் பொன்றா வண்மை நின்ற இன்னாடு; முல்லைக்குத் தேரீந்த முதல் நாடு; தோகைக்குப் பொற்கலிங்கம் ஓகையோடளித்த உயர் நாடு; இத் தகைய காணினும் கேட்பினும் கருதினும் களிதரும் நாடு எந்நாடு? அஃதே எம் நாடாம் இன்றமிழ் நாடு; செந்தமிழ் நாடு; வண்டமிழ் நாடு. இந்நாட்டின் பெயரைக் கேட்பினும் இன்பத் தேன்வந்து காதிற்பாய்வதைக் கண்டார் அன்று நம் பாரதியார்.

அத்தகைய மகிழ்ச்சிப் பொங்கலைப் பொங்கித்தர எம் தமிழ் மொழித்தாய் இற்றை ஞான்றை ஆட்சிமொழியாக அரியணை யேறினாள். தண்ணார் தமிழ் அளிக்குத் தனிக்காவலராய பாண்டி மன்னரும், செய்யாகூறிக் கிளவாப் பொய்யா நாவிற் புலவரும் வளர்த்துச் சங்கத்தொட்டிலில் தவழ்ந்தாடி வளர்ந் தாள் நம் தமிழ் நங்கை; உலப்பிலாக் காலமெல்லாம் பாரெங்கும் தன் ஆட்சிகொண்டு நிலவினாள்.

இத்தகைய எம் தமிழ்த்தாய் வினையுலப்ப வேறாகி வேற்ற வருக்கடிமையாயினள் ; அடிமையாக்கப்பட்டாள் ; பன்னூற்றாண்டுக்காலம் தன்மக்களும் பிறமக்களும் புறக்கணிக்கத் துச்சிற் கிடந்தாள் ; துயின்றாள் ; அவள் தன் செந்நா ஒடுக்கப்பட்டு அடங்கிக் கிடந்தது ! அதனால் கலைக்கழகங்களில்—இசையரங்குகளில்—முறை மன்றங்களில்—கூத்தியற் கூடங்களில்—வேத்தியலவைகளில்—சட்ட அவைகளில்—சொல்லாட்டு அவைகளில்—சொற்பொழிவு நிலையங்களில் — நடமாடாது ஒதுக்கடிக்கப்பட்டாள். இவள் ஆட்சிகொள்ளப் பன்னெடுங்காலம் தமிழ் வீறுகொண்ட நம் தமிழக மக்கள் வேணவாக்கொண்டு நின்றனர். வாய்ப்பு நேரும்போதெல்லாம மெல்லமெல்ல அவள் தன் இயல்பு பெற முயன்றே போந்தனர்.

எனினும் வேற்று நாட்டான் ஏற்ற வெங்கோல் வன்மையால் இயலாது காலங்கடந்தது. கடக்கக் கடக்க வேற்றவர் மொழி கலை நாகரிகம் யாவும் எல்லாத் துறைகளினும் மேலிவர்ந்து நிற்கத், தமிழக மாண்பு மங்கி இருள் மண்டிற்று. தமிழ்த்தாய் மக்களெல்லாம் தமிழ்மொழியிற பேசக் கூசினர்; கற்க நாணினர்; எழுத ஏக்கமுற்றனர். அற்றை ஞான்றை இளவள ஞாயிறெனப்ப நம் தமிழ்நாட்டு வீரர் திரு. வ. உ. சிதம்பரனாரவர்கள் போன்ற பேரறிஞர்கள் தோன்றி நாட்டுவிடுதலை இயக்கக்கிளர்ச்சி எழுஇ, அவர்தம் வேட்கைப்பெருக்கம், வீறு, ஏனையரை வெல்ல நம் இந்திய நாடெடங்கும் ஒருமுகமாக விடுதலைபெற, அவரும் நம நாட்டைவிட்டேகி விடுதலையுற்றனர். அதன்பின்னர் நம்நாடு, மைய அரசு ஆட்சிகொள 1947 ஆகஸ்டுத் திங்கள் 15-ஆம் நாள் முதல் தன்னுரிமை நாடாகத் திகழாநின்றது.

ஒத்துழையாமைத் தத்துவத்தை உலகில் நிறுவிய காந்தியடிகளின் கொள்கைப்படி மொழிவழி மாநிலம் அமைய வேண்டுமென அவ்வம் மாநிலமக்கள் விரும்பினர் ; மைய அரசினரை வேண்டினர் ; அவர் செவிசாய்த்தாரில்லை ; மக்கள் மொழிப் பற்றுக்கிளர்வினால் வடநாடு தென்னாடு கடந்த 1956-ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் க-ஆம் நாள் தனித்தனி மாநிலங்களாகப் பிரிந்து அவ்வவை தனித்தனி ஒவ்வொரு நாடுகளாயின. எனினும், நம் தமிழ் மாநிலம் மட்டும் 'சென்னை ராச்சியம்' என்றே என்றும்போல் இருந்து வரலாயிற்று.

ஆயினும் மொழியாவது ஆட்சி மொழியாக ஆக்கப் பெறுமானால் பேரும் ஊரும் பிறவும் திருந்தித் தானே தமிழ் நாடாக மிளிரும் என்பது யாம் நெடுநாட்கள் எண்ணி எண்ணி எமக்கு வலிவுற்ற கொள்கையாகும். இக் குறிக்கோளைக்கொண்டே ஓய்வு பெற்ற மாவட்ட நீதிபதி திரு. ஆ. கசபதி நாயகர் பி.ஏ., பி.எல்.,

எம். எல். சி. அவர்கள் தலைமையின்கீழ் 20-12-53-ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமையன்று சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகச் செலவில் சென்னைமாகாணத் தமிழ்ச்சங்கத்தின் சார்பில் சென்னை அண்ணாமலைமன்றத்தில் ஆட்சிமொழி மாநாடு ஒன்றை நடத்துவித்தோம். அம்மாநாட்டில் நம் மாநில அரசியல் துறைகள் எல்லாவற்றினும் தமிழே ஆட்சிமொழியாக இருத்தல் வேண்டுமென்று சட்டம இயற்றுமாறு அரசியலாரை வேண்டித் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பின்னர் 11-4-54-ஆம் நாள் செடி கசபதி நாயகரவர்கள் தலைமையில் முன்னாள் நம மாநில அமைச்சர் திரு. ஓ பி. இராமசாமி ரெட்டியாரவர்கள் திறந்துவைக்க முத்தமிழ்க்காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தமிழ்நாட்டுக் கொடியை ஏற்றுவிக்கப் பெண்ணாகடத்தில் மாநாடு இரண்டாவதாக நடத்துவித்தோம். அதிலும தமிழ்மொழி ஆட்சிமொழியாக வேண்டுமெனத் தீர்மானம் நிறைவேற்றியதுடன், நம் நாட்டுக்குச் சட்டத்தின் வழியாகத் 'தமிழ்நாடு' எனப் பெயரிடுமாறும் தீர்மானம் நிறைவேற்றியுள்ளோம்.

அப்பால் நம் சென்னைமாகாணத் தமிழ்ச்சங்கத்தின் வழியாக ஆட்சிச் சொற்களை ஆங்கிலமொழிச் சொற்கட்கேற்ற தூய செந்தமிழ்ச் சொற்களாகச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையாபிள்ளை யவர்களும், சங்க அமைச்சர் திரு இ மு. சுப்பிரமணியபிள்ளை அவர்களும முயன்று ஆக்கப்பெற்று, அச்சிட்டு நூலுருவாக்கி, 21-12-56-ஆம் நாள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. டி. எம். நாராயணசாமி பிள்ளையவர்கள் தலைமையில் சென்னை இராசாசி மன்றத்தில் ஆட்சிமொழி ஒப்படைப்பு விழா நிகழ்த்தி நம், மாநில அமைசசர்களிடம் அதனை ஒப்படைத்தோம்.

முன்னர் 1941-ஆம் ஆண்டிலேயே ஆட்சிச் சொற்களைத் தமிழாக்கஞ்செய்து 'ஆட்சிச்சொல் அகரவரிசை' யென்னும் பெயரால் நூல் ஒன்று வெளியிட்டுள்ளோம். மக்கள் அந்நூலை யேற்றுக் கையாண்டு வருகின்றனர். அந்நூல் செலவாகி ஆகி 1955-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் அதனை ஐந்தாம் பதிப்பாக வெளியிட்டுளளோம். அண்மையில் 'நகராட்சி முறை' என்னும் நூலைத் திருச்சி நகராண்மை ஆட்சித் தலைவராகப் பணியாற்றி வந்த திரு. கி. இராமலிங்க முதலியாரவர்கள் ஆக்கித்தந்து நம் கழக வெளியீடாக வெளியிட்டுள்ளோம். தமிழ ஆட்சிமொழியாக மிளிர முனைந்தவர்களில் திரு. முதலியாரவர்கள் முதலிடம் பெறத்தக்கவர்க ளாவார்கள். இவ்வாறு ஆண்டுதோறும் திங்கள் தோறும் கிழமைதோறும் நாள்தோறும் நங்கழகமே தொடர்ந்து

# பொங்குக பால்!

[திரு. புலவர் - 'அரசு']

பொங்குகபால்! பொங்குகபால்! எங்கும் இன்பம்
  பொங்குக! மெய்ச் சமநெறியும் பொங்கி வாழ்க!
எங்குநறு மணம்பரப்பித் தமிழ்ப்பூஞ் சோலை
  இயலிசைநா டகமலர்பூத் தினிய தேனைப்
பொங்குக!செந் தமிழறிந்த புலமை வண்டு
  பொருந்தியந்தத் தேனுகர்ந்து களித்துப் பாடி
எங்குநறுந் தமிழ்வழிய இநூல்கள் சேமித்
  தினியதமிழ்த் தேனெவர்க்கும் ஊட்டி வாழ்க! (௧)

பன்னெடுநா ளடிமைமொழி யாகி யிங்குப்
  படர்மொழியின் ஆட்சியிலே நைந்து தேய்ந்து
தன்னுரிமை யிழந்ததமிழ் மக்க ளாலுந்
  தளர்வுற்ற செந்தமிழ்த்தாய் இன்னல் நீங்கித்
தொன்முதுவள் ளுவன்மறையை முடியாக் கொண்டு
  தூயதமி ழணையமர்ந்தே அரசு கொண்டாள்!
அன்னையவள் மனமினிதே பொங்கி வாழ்க!
  அணிமலர்தூய் வாழ்த்திடுவோம் இன்னே வாரீர்! (௨)

எங்கள்தமிழ் வாழ்க!எனிற் பிறமொ ழிக்கோர்
  ஏச்சுண்டோ இனியதமிழ்த் தொண்டு செய்வோர்
பொங்குகளி வெறியர்களோ? தமிழ்நா டென்றே
  புகல்வதுவும் வெறியாமோ? என்னே! என்னே!
எங்குமுள மொழிகளைப்போல் தமிழ்மொ ழிக்கும்
  ஏற்றமுறப் பணிபுரிதல் இழிவே யாமோ?
பொங்குக!செந் தமிழ்முப்பால்! பொங்கி யின்பம்
  புதுமைநறு மணம்பரப்பிப் பொருந்தி வாழ்க! (௩)

செந்தமிழ்ச்செய் விளைத்ததமிழ்ச் செந்நெல் குற்றிச்
  செம்மையுறச் செய்ததமி ழரிசி தன்னைச்
செந்தமிழான் பெய்தநறும் பாலி லிட்டுச்
  செந்தமிழன் னைக்கெனவே செய்த தீம்பாற்
செந்தமிழ்ச்சோ றழகுதரு மஞ்சட் கொத்துஞ்
  செங்கரும்பு முக்கனியும் படைத்து நின்று
செந்தமிழ்ப்பால் பொங்குக!செந் தமிழ்ப்பால் பொங்கிச்
  செந்தமிழ்வா ழிய!எனவே செப்பு வீரே! (௪)

# தமிழிசை விழாவில் தலைமைப்பேருரை*

## [டாக்டர், திரு. மு. வரதராசனார்]

*தமிழிசையின் பழமை*

பழங்கால நாகரிகத் துறைகளை ஆராய விரும்பும் அறிஞர் எவரும் இந்திய நாட்டை மறக்க முடியாது. அவற்றுள் பழங் காலக் கலை வளர்ச்சியை ஆராய விரும்புவோர் தென்னிந்தியா வையே நாடி வரவேண்டும். ஆயிரத்திருநூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட இசைக்கலை வளர்ச்சியைப் பற்றி அறிய விழையும் எந்த நாட்டு அறிஞரும் தமிழ நாட்டு இசைச் செல்வத்தையே நாடவேண்டும். இசைத் துறையில் தமிழ்நாடு இத்தகைய பழமைச் சிறப்புப் பெற்றுள்ளது. தமிழர்கள் தம் மொழியை வழி வழி யாகப் போற்றிக் காத்து வந்துள்ளனர். அதனால்தான், இன்று கி. பி. முதல் நூற்றாண்டைச் சார்ந்த பரிபாடலிலும், கி. பி, இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த சிலப்பதிகாரத்திலும் இசை பற்றிய குறிப்புக்கள் நிரம்பி யிருத்தலைக் காண்கின்றோம்; கி. பி. ஏழு எட்டு ஒன்பதாம் நூற்றாண்டுகளில் எழுந்த தேவாரம், நாலாயிரம், திருவாசகம் முதலான பழைய இசைப் பாடல்களின் தொகுப்புகளையும் பெற்றிருக்கின்றோம். திருவிசைப்பா என்ற பெயரால் வேறொரு தொகுப்பும் உள்ளது. அடியார்க்கு நல்லார் முதலான உரையாசிரியர்களின் குறிப்புக்கள், நாம் இழந்துவிட்ட தமிழிசை நூல்கள் பலவற்றை நினைவூட்டுகின்றன. அவற்றுள், "இசை நுணுக்கம்" என்ற நூல் ஒன்று அதன பெயரை நினைத் தாலும் நெஞ்சம் ஏங்குகின்றது.

*தமிழ்நாட்டில் இசைச்செல்வம்*

தமிழ்நாட்டுக் கோயில்களில் தமிழிசை பெற்றிருந்த சிறப்பு இத்தகையது என்பதைக் கல்வெட்டுக்கள் காட்டுகின் றன. புதுக்கோட்டை நகரை அடுத்த குடுமியா மலையில் உள்ள கோயிற் சுவரின் கல்வெட்டுக்கள் இசையிலக்கணத்தை எடுத் தோதுகின்றன. கி. பி. ஏழாம் நூற்றாண்டில் கோயிற்சுவரில் இசையைப் பொறித்துவைக்கும் அளவிற்குத் தமிழ்நாட்டில் இசைக்கலை உயர்ந்தோங்கி யிருந்தது. இசைக் கலைக்கு இத் தகைய சிறப்பு வேறு எங்கும் வாய்த்ததாகத் தெரியவில்லை. சங்க காலத்துச் சிறுபாணாற்றுப் படையும் பெரும்பாணாற்றுப்

---

* தமிழிசை பதினைன்காம் விழாவில் 21-12-'56 அன்று ஆற்றிய தலைமைப் பேருரை.

படையும், பாணர், விறலியர் என்னும் இசைக் கலைஞரின் வாழ்வை எடுத்துரைக்கும் வாயிலாக இசையின் சிறப்பையும் யாழின் வெற்றியையும் விளக்குகின்றன. பொருநராற்றுப்படையும் கூத்தராற்றுப் படையும் அவ்வாறே யாழ்க் கருவி பற்றியும் மற்ற இசைக் கருவிகள் பற்றியும் பற்பல குறிப்புக்கள் தருகின்றன. ஆடலுக்கும் பாடலுக்கும் அக்காலத்துத் தமிழ் வேந்தர் அளித்த சிறப்புகளைக் கண்டு இயற்றமிழ்ப் புலவரும் தம்மைப் பாணராகவும் விறலியராகவும் கற்பனை செய்து பாட்டுப் பல பாடியுள்ளனர். அவ்வையார் அதிகமானைப் பாடிய விறலியாற்றுப் படையும் நாஞ்சில் வள்ளுவனைப் பாடிய பரிசில்விடையும் இங்குக் குறிப்பிடத் தக்கனவாகும். இசையிலக்கணத்தைப் பற்றிப் பழந்தமிழ் இலக்கண ஆசிரியர் தொல்காப்பியனார் "இசையொடு சிவணிய நரம்பின் மறை" என்று குறிப்பிட்டதனால், பழந் தமிழர் இசைக் கலையை மறை போல் போற்றிவந்த சிறப்பும் புலப் படுகிறது. திருநாவுக்கரசர் கடவுளின்பத்தோடு ஒப்பிட்டுப் பாடியபோது, மாலை மதியம், வீசுதென்றல், வீங்கிள வேனில், வண்டறை பொய்கை ஆகிய இயற்கையின் இன்ப விருந்துகளோடு மாசில்லாத வீணையின் இசையை ஒருங்கு வைத்துப் போற்றியதும் இங்கு உணரத்தக்கதாகும். காரைக்காலம்மையார் இசைக் கலையில் வல்லவராக விளங்கியவர். சுந்தரமூர்த்தி நாயனாரின் அன்னையார் 'இசை ஞானியார்' என்று பெயர் குறிப்பிடப்படுகிறார். நல்ல குடும்பத்து அம்மையார் ஒருவர்க்கு இத்தகைய பெயர் அமையுமளவிற்குத் தமிழ்நாட்டில் இசைச் செல்வம் பெருகி யிருந்த காலம் அது.

**சிலம்பு ஒலிக்கும் பண்**

பழந்தமிழ் நூல்கள் யாவற்றினும், கலைச் செல்வக் குறிப்புக்கள் தந்து அறிஞர்க்குப் பெருவியப்பூட்டுவதில் சிலப்பதிகாரம் இணையற்றதாகும். அதன் உரையாசிரியர்கள் தந்துள்ள விளக்கங்கள் ஆராய்ச்சியாளர்க்கு அரிய கருவூலங்களாக உள்ளன. சிலப்பதிகாரத்தில் அரங்கேற்று காதையில் யாழாசிரியனின் அமைதி கூறும் இருபத்தைந்து அடிகளுக்கு விரிவுரையாக 'யாழ்நூல்' என்ற பெரு நூல் தமிழ்ச் சான்றோர் விபுலாநந்த அடிகளால் இயற்றப்பட்டது எனின், பழந்தமிழரின் கலைச் சிறப்பினை என்ன என்று புகழ்வது? "இசைக் கலைஞர்களும் அறிவாளிகளும் ஆராய்ச்சியாளர்களும் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்ட 103 பண்களையும் ஆராய்ச்சி செய்து தற்போது என்னென்ன ராகங்களாகின்றன என்பதையும் விளக்கினால் தமிழுலகத்திற்கும் இசையுலகத்திற்கும் பேருதவியாக இருக்கும் என்பது திண்ணம்" என்று இசைப் பேராசிரியர் சங்கீத கலாநிதி முடிகொண்

டான் வெங்கடராமய்யர் போற்றிக் கூறுகின்றார். இசைப் புலவர் திரு. வீணை S இராமநாதன் அண்மையில் அரிதின் ஆராய்ந்து வெளியிட்டுள்ள 'சிலப்பதிகாரத்து இசை நுணுக்க விளக்கம்' என்னும் நூலைக் கண்ணுற்றபோது, தமிழ் முனிவரான இளங் கோவடிகளின் இசைப்புலமையை எண்ணி எண்ணி வியந்தேன். மதுரையில் கண்ணகியும் கோவலனும் சென்று தங்கிய ஆய்ச்சி யின் வீட்டின் அருகே ஆயர்மகளிர் ஆடிய குரவைக் கூத்தை விளக்கப் புகுந்த இளங்கோவடிகள், அந்த ஆடலின் வாயிலாகத் தமிழரின் பாடற்கலை நுட்பங்களைப் புலப்படுத்திய சிறப்பை இசையுலகம் என்றும் மறவாமல் போற்றுதல் வேண்டும்.

பண் ஆராய்ச்சி

இந்நூலின் உரையில் அடியார்க்கு நல்லார் விளக்கிய 103 தமிழ்ப் பண்களைப் பற்றி இன்று அறிவோர் எத்தனை பேர்? அந்தத் தமிழ்ப் பண்கள் பிற்காலத்தில் படிப்படியே மறக்கப் பட்டன. தேவார காலத்திலும் அந்தப் பண்கள் இருந்தன. நாயன்மார்களும் ஆழ்வார்களும் தமிழ்ப் பண்களிலேயே தம் தம் பக்திப் பாடல்களைப் பாடியருளினர். அந்தப் பண்முறையும் அடுத்த சில நூற்றாண்டுகளில் எவ்வாறோ போற்றுதல் குறைந்து மறக்கப்படுவதாயிற்று சோழ வேந்தன் இராசராசன் அபயகுல சேகரன் அவற்றைப் போற்றிக் காக்கவேண்டும் என்னும் ஆர்வம் கொண்டு முயன்றபோது, அந்தப் பண்களைப பாடிவந்த திரு நீலகண்ட யாழ்ப்பாணருடைய குடும்பவழி வந்த பாடினியை நாடவேண்டியதாயிற்று அன்று, அந்தக் கலைச் செல்வி வருத்து உதவிய முறைப்படி தேவாரத்தில் இன்று 24 பண்கள் உள்ளன. அவற்றை இன்றுவரையில் விடாமல் பாடிவருபவர் ஓதுவார் மரபினர். அவர்கள் வழி வழியாகக் கற்றுப் பாடிக் காத்துவரும் முறை இன்று நம் ஆராய்ச்சிக்குப் பேருதவியாக இருந்து வரு கிறது. சிலப்பதிகாரத்தில் பெயரளவில் அறிந்த தமிழ்ப் பண் களுள் சிலவற்றை இன்று இந்த ஓதுவார் ஓதுமுறையால் செவி குளிரக்கேட்டு அறிய முடிகிறது எனலாம். தமிழிசைச் சங்கத் தின் பெருமுயற்சியால் நடைபெறும் பண் ஆராய்ச்சிக் கூட்டம் இவ் வகையில் இசையுலகுக்குப் பேருதவி புரிந்து வருகிறது. ஆயினும் ஒரு குறை உள்ளது. காந்தாரம், பியந்தைக்காந்தாரம், கொல்லி, கொல்லிக்கௌவாணம் என்னும் நான்கு பண்களைப் பற்றிய ஆராய்ச்சியில் நான்கும் நவரோசு ராகத்தில் பாடப்படுதல் அறிகின்றோம். நான்கும் தனித்தனிப் பண்களாகத் தேவாரத் தில் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் இந்த நான்கு தேவாரப் பண்களையும் ஓதுவார்கள் ஒரே இசையில் பாடுகிறார்கள். இவ் வாறு பாடுவதைக் கேட்கும்போது, இடைக்காலத்தில் அவர்களை

யைக் கடந்து சில திரிபுகள் ஏற்பட்டிருத்தல் கூடும் எனக் கருதத் தோன்றுகிறது.

இவ்வாறு காலப்போக்கில் சிறுசிறு திரிபுகள் ஏற்படுதல் இயற்கையே. இவற்றை இன்று ஆராய்ச்சிப் புணை கொண்டு கடந்து சென்று, அன்று அந்தப் பாடினியம்மையார் வகுத்த பண்களின் உண்மையை உணர்தல் அரிது. ஆயினும் ஒருவகையில் ஆறுதல் உள்ளது. சிலப்பதிகாரத்தில் பெயர்களாக அறிகிறோம்; தேவாரத்தில் உருப்படிகளாகப் பெற்றுப் போற்றிக் கொடுத்து வைத்துள்ளோம். இந்த மகிழ்ச்சி நமக்கு ஊக்கம் அளிக்கிறது. இவ்வாறு பழைய உருப்படிகளாக உள்ளவை சென்ற நூற்றாண்டில் அல்லது அதற்கு முந்திய நூற்றாண்டில் தோன்றியவை அல்ல. அவை ஆயிரத்திருநூறு ஆண்டுகளுக்கு முற்பட்டவை. "மனிதனுடைய சரித்திரத்தில் 1,200 வருடங்களுக்கு முன் எந்த விதமான சாஸ்திரீய சங்கீதம் (Classical Music) இதர தேசங்களில் இருந்தது என்று கூறுவதற்குப் போதுமான சான்றுகள் இல்லை" என்று கூறுகிறார் இசைக்கலைப் பேராசிரியர் திருவாளர் சாம்பமூர்த்தி அவர்கள். அதனால் தேவாரப் பண் ஆராய்ச்சி மேனாட்டு இசைப் புலவர்களின் ஆராய்ச்சிக்கும் உரியதாகும் என்று அவர் பெருமையுடன் கூறுகிறார்.

புதுப்பெயரில் மோகம்

பழைய பண்களின் பெயர்கள் மறக்கப்பட்டன. நைவளம் என்னும் தமிழ்ப் பண்ணின் அழகிய பெயர் மறக்கப்பட்டு, நாட்டபாஷா ஆகி, அதுவே பிறகு நட்டபாடை என்ற பெயருடன் வந்து சேர்ந்ததுபோல், பண்களின் பெயர்கள் மறக்கப்பட்டு, இராகங்கள் வந்து சேர்ந்தன. அதனால் பிற்கால இராகங்கள் பழைய பண்களிலிருந்து வளர்ந்து அமைந்தவைகளே என்னும் உண்மையும் புறக்கணிக்கப்பட்டது. கருநாடக இசை என்பது புதிதாக முளைத்த ஒன்றுபோலவும் கருதப்படலாயிற்று. இவ்வாறு நேர்ந்த தவறுகளை—குற்றங்களை—களையும்பொருட்டுத் தோன்றிய இயக்கமே தமிழிசையியக்கமாகும். தமிழிசை ஐந்தாவது விழாவின்போது அறிஞர் ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி) அவர்கள் கூறிய கருத்தை இங்கு நினைத்துப் போற்றுதல் வேண்டும். "கர்நாடக சங்கீதம் என்று வழங்கும் தென்னாட்டு இசைக்கலை, தமிழ மக்களின் பரம்பரைச் சொத்து. சிலப்பதிகாரக் காலத்துக்கு முன்னிருந்து தமிழ்நாட்டில் இந்த இசைக்கலை உருவம் பெற்று வளர்ந்து வந்தது" என்று அவர் கூறியுள்ளார். ஆகவே கருநாடக சங்கீதம் என்பது தமிழிசைக்குப் பிறர்

வைத்த பெயரே என்று உணரவேண்டும். தின்பண்டங்கள் முதலியவற்றிற்கும் இவ்வாறு பழம் பெயரைக் கைவிட்டுப் பிறர் வைக்கும் புதுப் பெயரைப்போற்றிக் கூத்தாடும் வழக்கம் இன்றும் நம்மிடையே இருப்பதைக் காணலாம்

பாரதியாரின் எச்சரிக்கை

தமிழரின் பரம்பரைச் சொத்தாகிய இத்தகைய கருநாடக இசை இன்று தமிழமக்களின் வாழ்வில் நெருங்கிய உறவுகொண்டிருப்பதாகத் தெரியவில்லை. இதற்குக் காரணம் என்ன? கருநாடக இசை என்றால், தெலுங்குப் பாட்டுக்கள் என்ற அளவிற்கு நாட்டில் ஏற்பட்டுள்ள ஒரு மயக்கமே ஆகும் இதற்குக் காரணம், நூற்றெழுபது ஆண்டுகளுக்கு முன் தெலுங்கு மொழியில் இசைமாரி பொழிந்த தியாகய்யரே என்று சிலர் அறியாமையால கூறுவர். தியாகய்யர் ஏன் தெலுங்கு மொழியில் பாடினார் என்ற காரணத்தை உணர்ந்தால், அவ்வாறு யாரும் கூறமாட்டார். இசைக்கலைப் பெருமானாகிய அவருக்குத் தாய்மொழி தெலுங்கு. இசை உள்ளத்தைத் தொடவேண்டுமானால், நாத மாத்திரையாய் விளங்கும் சங்கீதமாக மட்டும் இருந்தால் போதாது என்று தெளிந்து, தாய்மொழியில் உள்ளத்தைத் தொடும் சாகித்தியங்களை இயற்றியருளியவர் அப் பெருமான். இந்த அரிய உண்மையைப் பிற்காலத்தார் உணர்ந்திருந்தால், அவர்களும் தாய்மொழியின் சாகித்தியங்களே உள்ளத்துணர்ச்சிக்கு ஏற்றவை என்று தெளிந்து தம் தாய்மொழியாகிய தமிழில் உருப்படிகளைப் போற்றி வளர்த்துத் தமிழிசையைப் பரப்பியிருப்பார்கள். இந்த உண்மையைத் தெளிந்த காரணத்தால்தான், மகா வைத்தியநாதய்யர், கோபாலகிருஷ்ண பாரதியார், முத்துத்தாண்டவராயர் முதலான இசைக் கலைஞர்கள் தமிழில் கீர்த்தனைகள் பாடி இசைமரபை வளர்த்தார்கள். இந்த உண்மை விளங்காமல் கண்மூடிப் பற்றுக் கொண்டவர்கள், தெலுங்குப் பாட்டுக்களையே தொடர்ந்து பாடிக் கருநாடக இசையின் பெரும்பயனைப் பலரும் பெறாதவாறு செய்துவிட்டனர். இந்த மயக்கத்தின் பயனாக, தமிழர்கள் கூடிய இசையரங்குகளில் தமிழர்க்கு விளங்காத தெலுங்குப் பாட்டுக்களையே பாடி நிரப்பும் வழக்கம் வளர்ந்தது. அதனால் விளைந்தது என்ன? தமிழரின் பரம்பரைச் சொத்து, தமிழர்க்கே உதவாமற் போயிற்று. இந்த மயக்கத்தையும் மாறுதலையும் உணர்ந்த பாரதியார்—'வீணை செய்யும் ஒலியில் இருப்பாள்', 'மாதா தீங்குரற் பாட்டில் இருப்பாள்,' 'கீதம் பாடும் குயிலின் குரலைக் கிளியின் நாவை இருப்பிடம் கொண்டாள்' என்றெல்லாம் கலைமகளை வழிபட்ட பாரதியார்—மனம் நொந்து பின்வரும் எச்சரிக்கை விடுத்தார்:—

“வித்வான்கள் பழைய கீர்த்தனங்களைப் பாடம் பண்ணிப் புராதன வழிகளைத் தெரிந்துகொள்ளுதல் அவசியம். ஆனால் தமிழ்ச் சபைகளிலே எப்போதும் அர்த்தம் தெரியாத பிற பாஷைகளிலே பழம் பாட்டுக்களை மீட்டும் மீட்டும் பாடுதல் நியாயமில்லை. அதனால் நமது ஜாதி சங்கீத ஞானத்தை இழந்து போகும்படி நேரிடும்.”

**வானொலியில் தமிழிசை**

பாரதியாரின் இந்த அறிவுரை அறிஞர்களின் உள்ளத்தில் பதிந்து, படிப்படியாக நாட்டில் நல்ல மாறுதலை விளைத்து வருகிறது. இசையரங்குகள் போற்றத்தக்க வகையில் திருந்தி வருகின்றன. தமிழ்ப் பாட்டுக்களையே மக்கள் விரும்பிக் கேட்டுப் போற்றி வருகின்றனர். அதனால் தமிழ்ப் பாட்டுக்களே மிகுதியாகப் பாடப்பட்டும் வருகின்றன ஆனால், திருந்தாத நிலையம் ஒன்று இன்றும் இருந்து வருகிறது. செல்லுமிடமெல்லாம் அதுபற்றிப் பலர் குறைகூறக்கேட்டுக் கேட்டு வருந்தியுள்ளேன். சனநாயக நாட்டில் மக்களின் விருப்பம் அறிந்து மக்களுக்குத் தொண்டு செய்யவேண்டும் என்னும் நோக்கத்தை மறந்து, வானொலி நிலையம் சென்னையிலும் திருச்சியிலும் ஓயாமல் தமிழல்லாத பாட்டுக்களை நிரப்பி வருகிறது தமிழ்ச் சாகித்தியங்கள் மட்டுமே அறிந்து பாடும் இசைக் கலைஞர்க்கு உரிய இடம் தருவதில்லை. தமிழிசை வளர்க்கும் குற்றத்தால் முதல்தரமான கலைஞர்க்கும் ஊதியத்தைக் குறைத்து அவர்களின் நிலையையும் குறைத்து வருகிறது. எவ்வளவு வேண்டுகோளையும் புறக்கணித்து நடக்கும் சர்வாதிகார அமைப்பு என்னும் பெயரும் பெற்று வருகிறது. பிறமொழிப் பாட்டுக்கள் அறவே விலக்கப்படவேண்டியதில்லை தியாகய்யர் போன்ற கலைச் செல்வர்களின் பாட்டுக்கள் பழம் பெருமை விளக்கும் வகையில் பாடப்படவேண்டும். ஆனால், அந்த நிகழ்ச்சிக்கு ஓர் இடம் வேண்டும்; ஓர் அளவு வேண்டும் அந்த நிகழ்ச்சியே பெரும்பான்மையாக இருத்தலாகாது. அது காரணமாகத் தமிழ்மக்களின் இசையார்வத்தைப் புறக்கணிப்பது தகாது. “எப்போதும் அர்த்தம் தெரியாத பிற பாஷைகளிலே பழம் பாட்டுக்களை மீட்டும் மீட்டும் பாடுதல் நியாயமில்லை” என்ற பாரதியாரின் எச்சரிக்கையை அவர்கள் இனியாவது பொருட்படுத்தவேண்டும். “நமக்குத் தெரியாத மொழியில் இசையை அனுபவிக்க எண்ணுவது, மனைவியிடம் வக்கில் வைத்துப் பேசுவதற்கு ஒப்பாகும்” என்ற கவிஞர் தாகூரின் கருத்தையும் அவர்கள் அடிக்கடி நினைத்துப் பார்க்கவேண்டும்.

### பாடலுக்கிடையே சுரம்

பாட்டு, பண்பட்ட உணர்ச்சியின் வடிவமாக எழுவது. உணர்ச்சி குன்றும்போது பாட்டின் தரம் குறைகிறது. தாய் மொழிப் பாட்டில்தான் உணர்ச்சி உள்ளத்திலிருந்து இயல்பாக எழுந்து விளங்க முடியும். பிற மொழிப் பாட்டில் போலி நடிப்புக்கு உள்ளம் இரையாகக்கூடும். அதனால் சில தவறுகளும் விளையக்கூடும். ஒன்று மட்டும் இங்கே குறிக்க விரும்புகிறேன். இன்று சிலர் பாடல்களுக்கு இடையே பொருந்தாத இடத்தில் சுரம் போடுவதைக் கேட்கின்றோம். அதுவும் அளவு மீறி நீண்டு செல்கின்றது. உருக்கமான பாடலுக்கு இடையே, பல்லவியும் அநுபல்லவியும் கடந்த பிறகு, ஒருவர் சுரம் போடும்போது, இசையின் உணர்ச்சியே கெடுகிறது பாட்டின் உணர்ச்சி முழுதும் போய், பாட்டும் பொருளும் மறக்கப்பட்டு, பாடுகின்றவரின் திறமை மட்டுமே புலனாகின்றது உயர்ந்த கலைக்கு இது பொருந்தாது. சிறந்த ஓவியத்தைக் காணும்போது, காணும் அந்நேரத்தில், காண்பவனும் கலைஞனும் மறக்கப்பட்டு, ஓவியத்தின் உணர்ச்சி மட்டுமே நெஞ்சில் நிற்கவேண்டும். அது போலவே, உயர்ந்த இசை பாடப்படும்போதும், கேட்பவனும் பாடுபவனும் மறக்கப்பட்டு, இசை உணர்த்தும் உணர்ச்சி மயமாக ஆக வேண்டும். உருக்கமான பாட்டினிடையே சுரம் போடும்போது இந்த நிலை தடுமாறுகிறது. இயற்றமிழில் உணர்ச்சி குன்றிய சித்திரகவிகளைப் போற்றிய காலம் ஒன்று உண்டு. அது போன்றதே இசைக் கலையில் பொருந்தா இடங்களில் அளவு கடந்து சுரம் போடும் வித்தையுமாகும். பாரதியார் முதலான பெருங்கவிஞர்கள் தம் திறமையைக் காட்டுவதற்கென்று சித்திர கவிகளை இயற்றவில்லை. தியாகய்யர் போன்றவர்களும் திறமை காட்டச் சுரம் போடும் வித்தையைக் கையாண்டிருக்கமாட்டார்கள் என நம்புகிறேன். இதைவிடப் பல்லவியைப் பன்முறை பல நயம்பட பாடி உணர்ச்சியைப் பெருக்குதல் இசையரங்குகளை அழகுபடுத்த வல்லதாகும். தாய்மொழிச் சாகித்தியங்களை உணர்ந்து பாடும் நெறியைப் போற்றியிருந்தால் இதுபோன்ற தவறுகளுக்கு இடமிருந்திருக்காது.

### ஓதுவாரைப் போற்றுவோம்

எவ்வாறோ மயக்கம் எழுந்தது; அது மறைந்தே தீரும். அரசியல் உரிமை பெற்ற நாட்டில், மொழி கலை முதலியவை இயற்கையான வளர்ச்சி பெறுதலை யாரும் தடுக்க முடியாது. ஆனால் சென்ற தலைமுறையில் இந்த மயக்கத்திற்கு இடங்கொடுத்த தமிழர்களை நினைந்து வருந்த வேண்டியுள்ளது. அவர்கள் தம்

முன்னோர்களே ஆயினும், ஒருவகையில் கடமை யுணர்ச்சி குறைந்தவர்கள். தாய்மொழிப் பாட்டுக்களைத் துக்கடா என்னும் இழிந்த பெயர் பெறுமாறு புறக்கணித்து விட்ட குறை, விளங்காத பாட்டுக்களைக் கேட்டுக் கேட்டு வீணே தலையாட்டிப் பொருள் கொடுத்துப் போற்றிய குறை, தேவாரப் பண்களையும் மற்றத் தமிழிசைப் பாட்டுக்களையும் பாடிப் போற்றாமல் புறக்கணித்த குறை ஆகிய இந்தக் குறைகளை நினைந்து வருந்த வேண்டியுளது. எல்லாவற்றிலும் பெரிதாக உள்ள குறை ஒன்று: அதாவது, வழிவழியாகத் தேவாரம் ஓதித் தமிழ்ப் பண்களைக் குடும்பச் செல்வமாகப் போற்றி வந்த ஓதுவார் பரம்பரைக்கு நாம் செய்து வரும் இழுக்கு. ஒரு கோயிலில் மாதம் நான்கு ரூபாய்ச் சம்பளத்திற்குத் தேவாரம் ஓதவேண்டும் என்று ஓதுவாரை நியமிக்கிறோம் என்றால், இந்தத் தமிழிசைச் செல்வத்திற்கு நாம் தரும் மதிப்பு என்ன என்று பாருங்கள்! பல இடங்களில் ஓதுவார்களின் நிலை இது என்று கேட்டறிந்து வருந்தினேன் "பணத்தால் மதிப்பதா மதிப்பு?" என்று கேட்கலாம் உண்மையே ஆனால் விளைவை எண்ணிப் பார்க்கவேண்டும் ஓதுவார்களின் நிலை இவ்வாறு இருப்பதால், வயிறு வளர்க்கவும் ஊதியம் போதாமல வருந்தி நொந்து வாடும் அவர்கள், "இந்த வாழ்வு எம மக்களுக்கு வேண்டாம்" என்று, தம் மக்களுக்குத் தேவாரம பயிற்றாமல் விடுகின்றனர். ஆகவே தேவாரம் ஓதுவார் தொகை குறைந்து வருகிறது. நம நாட்டுப் பழங்கலைகள் பல இக் காரணத்தால் அழிந்து மறைந்தன என்பதை இங்கு எண்ணிப் பார்த்தல் வேண்டும். எதைப் போற்றுகிறோமோ அது வளரும்; போற்றுதலுக்குப் பொருள் ஒருவகை அறிகுறி. பழந் தமிழ்நாட்டில் வேந்தர்களும் வள்ளல்களும் கலைஞர்களுக்கு யானையும் குதிரையும் தேரும் பொற்றாமரையுமாகப் பரிசுகள் வழங்கினார்கள்; அதனால் தான் கலைகள் காக்கப்பட்டன. வாய்க்கும் வயிற்றுக்கும் எட்டாத சில்லறைக் காசைப் பழந்தமிழிசைக்கு—தெய்வத் தமிழிசைக்கு—தேவார இசைக்கு நாம் வழங்க முற்பட்டோம்; அதனால் இந்தக் கலையும் மங்கி மறைவதுபோல் உள்ளது. இந் நிலையிலிருந்து தமிழிசையைக் காப்பதும் இன்றியமையாத கடமையாகும்.

*சங்கீத சந்திரிகை*

இந்தக் குறைகளுக்கு இடையே செந்நெறி காட்டும் சான்றோர்களும் சிலர் இருந்து தொண்டு செய்துவந்தனர். ஐம்பத்து நான்கு ஆண்டுகளுக்கு முன் எஸ. மாணிக்க முதலியார் என்பவர் வடமொழிச் சங்கீத இலக்கண நூல்களை நன்கு ஆராய்ந்தவராய், தமிழில் சாகித்தியங்கள் விளங்கச் செய்யவேண்டும்

நன்றும் பெரு நோக்கம் கொண்டு சங்கீத சந்திரிகை என்ற நூலை இயற்றியுள்ளார். அதில் தேவாரம், பிரபந்தம், திருவாசகம், கைவல்ய நவநீதம், திருமந்திரம், தாயுமானவர் பாடல், கந்தரனுபூதி, பட்டினத்தார் பாடல் முதலிய 50 நூல்களிலிருந்து 650 அருமையான பாட்டுக்களைத் திரட்டி மேளகர்த்தா முறையை ஒட்டிய இராகங்களுக்கு ஏற்றவாறு சுரப்படுத்தி அச்சிட்டுள்ளார். "இவை தாளக் கட்டுப்பாட்டுடன் அமைக்கப்பட்டன அல்ல ஆயினும், அப் பாட்டுக்களைத் தாளக் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்திப் பல இராகங்களில் யாவரும் பாடவும் வாத்தியங்களில் வாசிக்கவும் வசதிப்படுத்தி வைத்தல் யாவரும் கொண்டாடத் தக்க அரிய விஷயமே என எனக்குப் புலப்பட்டு,.... ........ஸ்வர சாஹித்தியமாக மிகவும் தெளிவாய் எழுதப்பட்டுள்ளன" என்று காரணக் குறிப்பும் பொறித்துள்ளார் அந்நூலுக்கு டாக்டர் உ. வே. சாமிநாதய்யர், வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார், ஈ. கதிரைவேற் பிள்ளை, திருமயிலை சண்முகம் பிள்ளை, பூவை கலியாண சுந்தர முதலியார் முதலிய பேரறிஞர்கள் சாத்துக் கவிகளும் தந்து அம் முயற்சியைப் போற்றியுள்ளனர். ஆயினும் அவர்க்குப் பின் நெடுங்காலம் வரையில் இசையரங்குகள் (கச்சேரிகள்) சிறிதும் திருந்தாமல் அவர் பாராட்டிய தமிழ்ப் பாடல்கள் துக்கடாக்களாகவே நின்றிருந்த நிலை வருந்தத்தக்கது ஆகும்.

பாட்டும் கூத்தும்

இசை உருவமற்றது. அதற்கு உருவம் கொடுத்து வாழ வைப்பவை இரண்டு. ஒன்று பாட்டு (சாகித்தியம்); மற்றொன்று கூத்து (நடனம்). பாட்டும் கூத்துமாகிய இரு கலைகளும் இசையை உயிராகக்கொண்டவை. அதனாலேயே பழங்காலத்து ஆடல் பாடல் கலைஞராகிய பாணரும் விறலியரும் பொருநரும் கூத்தரும் இசையைப் பெரிதும் போற்றி வந்தார்கள். பிற்காலத்தே இசைக் கலையை விட்டுத் தமிழ்ப் புலவர் பிரிந்தனர்; நடனக் கலையை விட்டுத் தமிழ்ச் சான்றோர் பிரிந்தனர். இப் பிரிவினால் ஆடல் பாடலாகிய இரு கலைகளுக்கும் வீழ்ச்சி நேர்ந்தது. அவற்றிற்குப் புத்துயிரளித்துப் போற்றும் நல்ல நூற்றாண்டு இது. நடனக் கலை மீண்டும் நாகரிகக் கலையாக உயர்வு பெற்று வருகிறது. தாய்மொழிப் பாட்டும் முன் போல் தலைமை பெற்றுச் செழித்து வருகிறது.

நினைந்து போற்றுவோம்

இத்துறையில் உருப்படியான பணிசெய்ய வேண்டும் என்று பரந்த மனப்பான்மையோடு திட்டமிட்டுச் செயலாற்றிய

சான்றோர் இராசா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களையும், அவர்க்கு உறுதுணையாய் இருந்து தமிழ்த் தொண்டு புரிந்த அறிஞர் சர் ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்களையும் நன்றியுணர்வோடு நினைந்து போற்றல் வேண்டும். சென்ற ஆண்டு வரையில் நம்மோடிருந்து தமிழிசை வளர்ச்சிக்கு உறுதுணை புரிந்த பெரியார் சி. எஸ். இரததினசபாபதி முதலியார் அவர்களும் நம் நினைவில் நிற்கிறார்கள். தந்தையாரின் வழிநின்று தமிழிசை என்றால் தயங்காது முன்வந்து வேண்டுவன புரியும் செட்டிநாட்டரசர் இராசா சர் முத்தையா செட்டியார் அவர்களும் அவர்களின் குடும்பத்தாரும் செய்து வரும் அரிய தொண்டுகள் போற்றத்தக்கனவாகும். பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு மொழி வழியாகத் தமிழ்நாடு அமைந்துள்ள ஆண்டு இது. இந்த ஆண்டில் இந்தத் தமிழிசை விழா பெருமிதத்தோடும் பெருமகிழ்ச்சியோடும் நடைபெறுவதாக.

## கவிஞன்

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

கட்டுப் படாதவன் கவிஞன்—யாரும்
 காணாஒண் ணாததைக் காட்டுவான் கவிஞன்
தட்டுப் படாதசொல் லொழுங்கால்—கவிக்
 கலையாறு பாய்ச்சுவான் கவிஞன்.

எட்டுத் திக்கும் இருகண்ணால்—அளந்து
 இயற்கையை விரிப்பான் கவிஞன்
தொட்ட பொருளினில் அழகை—எவரும்
 தோய்ந்திடச் செய்பவன் கவிஞன்.

சிங்கம் புலிகளைக் காண்பான்—நன்கு
 சிரிக்கும் முல்லையும் காண்பான்
தங்க மனைகளைக் காண்பான்—மிகத்
 தாழ்ந்த குடில்களும் காண்பான்.

மன்னர் உள்ளமும் தேர்வான்—நலியும்
 மக்கள் உள்ளமும் ஓர்வான்
சொன்னால் நன்றையே சொல்வான்—வெறும்
 சோம்பல்என் பதையே காணான் !

# ஆட்சிச்சொல் அகராதி அறிக்கை*

## கலைச்சொற்களும் அரசாங்கமும்

நமது சங்கம் 11—6—1934-ல் தோன்றியது; தோன்றிய உடனே பதிவு செய்யப்பெற்று இருபத்திரண்டு ஆண்டுகளாகத் தமிழ்ப்பணிபுரிந்து வருகின்றது; அன்று தொட்டுக் கலைச் சொல்லாக்கத்தில் ஈடுபட்டு அதற்கென்றே நான்கு பெரிய மாநாடுகள் நடத்தி 1938-ல் "கலைச்சொற்கள்" என்ற நூலைச் சென்னை, திருவாங்கூர் ஆகிய பல்கலைக் கழகங்களின் பொருளுதவி கொண்டு வெளியிட்டது. சென்னை அரசாங்கம் அந் நூலைப் பாராட்டி, மாகாணப் பொதுக்கல்வி இயக்குநர் (Director of Public Instruction) வழியாகத் (எண் 45290 B-3; 9-11-1938) தமிழ்நாட்டிலுள்ள உயர்நிலைப்பள்ளிகளுக்கெல்லாம் அரசாங்கச் செலவில் ஒவ்வொரு படி வாங்கி அனுப்பி, அச் சொற்களை ஆசிரியர்கள் தாராளமாகப் பயன்படுத்திக் கணக்கு, அறிவியல், வரலாறு, உடல்நூல் முதலிய பாடங்களையெல்லாம் கற்பித்தல் வேண்டுமென்று சுற்றுாணை அனுப்பியது. அவ்வாண்டில் இராச பாளையத்தில் நடைபெற்ற தமிழ்நாட்டுக் காங்கிரசு மாநாடு நமது சங்கப்பணியைப் பாராட்டித் தமிழ்மக்களனைவரும் சங்கத்துக்குப் பெருந்துணை புரியவேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றியது. 1946-லும் சென்னை அரசாங்கம் நமது சங்கம் குறிப்பிட்ட பெரியார்களைத் தமிழ்க் கலைச்சொல்லாக்கக் கழகத்திற் சேர்த்துக், கலைச்சொற்களைத் திருந்த ஆராய்ந்து முடிவு செய்து வெளியிட்டுத் தமிழ்நாட்டு உயர்நிலைப் பள்ளிகளிலெல்லாம் அவைகளைப் பயன்படுத்தியே பாடங்களைக் கற்பித்தல் வேண்டுமென்று சுற்றுாணை அனுப்பியது. நமது சங்கப் பணிகளின் விளைவாகிய இவ் விரண்டு கலைச்சொற்களையும் அடிப்படையாகக்கொண்டே இப்போது இலங்கை அரசாங்கம் கலைச் சொற்களை ஆக்கி வெளியிட்டு வருகிறது.

## ஆட்சிமொழி மாநாடு

சென்னை மாகாணத் தமிழர் பதினொன்காவது மாநாடு திருநெல்வேலியில் 18—10—1953-ல் முன்னாள் அமைச்சர் பொன்னம்பல தியாகராசன் (Sir P. T. Rajan), எம். ஏ., பார். அட். லா, எம். எல். ஏ., அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அம்

* சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கச் சார்பில் ஆக்கிய தமிழ் ஆட்சிமொழிச் சொல் நூலை சென்னை அரசியலாரிடம் ஒப்படைக்க 21-12-1956 இல் சென்னை இராசாசி மன்றத்தில் நிகழ்ந்த ஒப்படைப்பு விழாவில் வெளியிட்ட அறிக்கை.

மாநாட்டின் தீர்மானப்படி நமது சங்கம் 20—12—1953-ல் சென்னையில் அண்ணாமலை மன்றத்தில், முன்னாள் நீதிபதி திருவாளர் அ. கசபதி நாயகர், பி.ஏ.,பி.எல்., எம்.எல்.சி., அவர்கள் தலைமையில் ஆட்சிமொழி மாநாட்டினை மிக வெற்றியாக நடத்தியது. அதில் காங்கிரசு, திராவிடக்கழகம், திராவிட முன்னேற்றக்கழகம், பொதுவுடைமைக்கட்சி, தனிப்பட்ட பெரியார், பெரும்புலவர்கள் ஆகிய பல இயக்கத்தலைவர்களும் ஒரு முகமாகக் கலந்து பங்கு கொண்டார்கள். "முழு உரிமை பெற்ற நமது தமிழகத்தின் ஆட்சி தமிழிலேயே நடைபெறுதல் வேண்டும்" என்ற தீர்மானம் நிறைவு பெற்றது. ஆட்சிமொழி மாநாட்டினை நடத்துவதற்குத் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் பெருந்துணை புரிந்தார்கள்.

## நெல்லையில் ஆட்சிச் சொல்லாக்கக்கழகம்

### தொடங்குதல் விழா

"உயர்நிலைப் பள்ளிகளில் தாய்மொழி வழியாகவே பாடங்களெல்லாம் கற்பிக்கப் பெறுதல்வேண்டும்" என்ற அரசாங்க ஆணை வெற்றியாக நடைபெறும்பொருட்டு அரும்பாடுபட்டு முன் கலைச்சொற்களை ஆக்கி வெளியிட்டு உதவியதுபோல, இப்பொழுதும் அரசாங்க ஆட்சியைத் தமிழிலே நடத்துவதற்குத் தகுந்த துணைபுரியும் பொருட்டு நமது சங்கம் 30—1—1955-ல் நடைபெற்ற ஆண்டுப் பொதுக்கூட்டத்தில் "ஆட்சிச்சொல் அகராதியை ஆக்கித் தமிழ்நாட்டின் ஆட்சி தமிழிலே நடைபெறுவதற்கு ஆவன செய்யவேண்டும்" என்று தீர்மானித்தது. அதனை நிறைவேற்றும்பொருட்டுச் சங்க அமைச்சரவர்கள் சங்கத் தொழிற்கழக உறுப்பினர் டாக்டர் D. R. அண்ணாமலைப் பிள்ளை, L. C. P. S., L. M. S. S. A., M. R. A. S. (London) அவர்களுடன் சேர்ந்து பாளையங்கோட்டையில் பெருமாள்புரத்தில் 11-4-1955 திங்கட்கிழமை மாலை 4 மணிக்கு முன்னாள் நீதிபதி திரு. நா. கோமதிநாயகம் பிள்ளை, பி.ஏ.,பி.எல்., அவர்கள் தலைமையில் ஆட்சிச்சொல்லாக்கக் கழகத்தை அமைத்தார்கள். சங்கத் தொழிற்கழகம் அதனை 17—4—1955-ல் ஏற்றுக்கொண்டதுடன் 21—4—1955 வியாழக்கிழமை அன்று திருநெல்வேலியிலுள்ள இந்துக் கல்லூரியிற் பேரவை கூட்டி, அப்போது நெல்லை மாவட்ட ஆட்சித்தலைவராக இருந்த திருவாளர் S. M. பால கிருட்டிண பிள்ளை, I. A. S., அவர்களைக்கொண்டு அக் கழகத் தொடங்குதல்விழாவை மிக்க சிறப்பாக நடாத்தியது. அக் கழக உறுப்பினர் அனைவரும் நாட்டாட்சியின் பல துறைகளி

னும் பல்லாண்டுகள் பணியாற்றிய தலைமை அலுவலாளராக அமைந்தது பெரிய வாய்ப்பே. அவர்களைப்பற்றிய விவரத்தை அறிக்கை முடிவிற் காண்க.

ஆட்சிச்சொற் சுவடியில் ஆட்சிக்கு வேண்டிய பல சொற்களும், சிலர் மிகை யெனக் கருதக்கூடும் சொற்களும் இடம்பெற்றுள்ளன. ஆட்சிக்கு வேண்டிய சட்டக் கலைச்சொற்களும் சேர்க்கப்பெற்றுள்ளன. இவைகளைக்கொண்டு ஆட்சித்தேவைகள் யாவும் தமிழிலேயே விளக்கக்கூடும்.

இதனை ஆக்குவதில் முதன்மையாக மேற்கொள்ளப்பெற்ற கொள்கை, வடமொழியானாலும் சரி, உருது ஆங்கிலம் முதலிய பிற மொழிகளானாலும் சரி மக்கள் எளிதாக அறிந்துகொள்ளக் கூடிய சொற்களையே முதன்மையாகக் கொளளவேண்டும் என்பது. அவ்வாறான சொற்கள் தமிழிலும் வடமொழி முதலிய வேறு எந்த மொழியிலும் சமமாக வழங்குவவானால் தமிழ்ச் சொற்களையே முதன்மையாகத் தேர்ந்துகொள்ளுதல் வேண்டும். தமிழாட்சிச் சொற்கள் தமிழாகவே இருக்கவேண்டும் என்பதை அறிஞர் யாவரும் மறுக்கமாட்டார்கள்.

பிறமொழிச் சொற்களுக்கு ஈடாக நல்ல தமிழ்ச் சொற்கள் பக்கத்தில் அடைப்புக்களில் தரப்பெற்றுள்ளன. இவைகள் நன்கு வழங்கித் தமிழ்நடையைச் சிறப்பிக்கக்கூடியன. இவைகள் பழக்கத்தில் நிலைபெறும்போது பிறமொழிச் சொற்கள் தாமாக வழக்கிறந்துபோம். உதாரணம் பின் வருமாறு:— சில்லாக் கலெக்டர் (மாவட்ட ஆட்சித்தலைவர்), மசோதா (சட்டமூலம்), சூரியகிரகணம் (இரவிமறைவு), சந்திரகிரகணம் (திங்கள் மறைவு). சில்லாக் கலெக்டர், மசோதா, சூரியகிரகணம், சந்திர கிரகணம் என்பன இப்போது பலரும் அறிந்த பிறமொழிச் சொற்கள். மாவட்ட ஆட்சித் தலைவர், சட்டமூலம், இரவி மறைவு, திங்கள்மறைவு என்பன நல்ல தமிழ்ச்சொற்கள்; பிற்காலம் இவை நன்கு வழங்கக்கூடியன. இவை வழங்கும் காலம்வரை இப்போது வழக்கிலுள்ள சில்லாக் கலெக்டர்போன்ற சொற்களை நாம் பயன்படுத்தியே ஆகவேண்டும். இவைகளை எழுதும்போது தமிழ்மரபுப்படி தமிழ் எழுத்துக்களில் எழுதுதல் வேண்டும்.

"ஜில்லா" என்பதைச் "சில்லா" என்றும், "மாஜிஸ்டிரேட்" என்பதை "மாசிஃச்டிரேட்டு" என்றும், "போலீஸ்" என்பதைப் "போலீசு" என்றும், "கிரஹணம்" என்பதைக் "கிரகணம்" என்றும்தான் எழுதுதல் வேண்டும். க்ஷ, ஸ, ஷ, ஜ, ஹ என்பன கிரந்த எழுத்துக்கள். இவைகளைத் தமிழிற்

கலந்து எழுதுவது தவறு. "க்ஷ"வை "ட்ச" என்றும், "ஸ்" ஐ "த்" என்றும், "ஷ்"ஐ "ட்" என்றும், "ஜ"வைச் "ச" என்றும், "ஹ"வைக் "க" என்றும்தான் தமிழில் எழுதுதல் மரபு. "ஸ்" என்பதை "த்" என்று எழுதுதல்தான் மரபு என்றாலும் சிலர் "ஸ்" ஒலியைத் தமிழில் எழுதுதல் வேண்டும் என்று விரும்புகின்றனர். அதன்படி "ஸ்" என்பது "ஃச்" என்று குறியிட்டுச் சில இடங்களிற் குறிக்கப்பெற்றுள்ளது. உதாரணம:

Bus, பஸ், பஃச்; Magistrate, மாஜிஸ்டிரேட் மாசிஃச்திரேட்டு. "F" என்ற ஆங்கில எழுத்தொலி பலரால் "ஃப" என்று குறிப்பிடப் பெறுகிறது. உதாரணம்: Africa, ஆஃப்ரிக்கா; இதனை ஆபிரிக்கா என்று வழங்குவதே தமிழ்மரபு

## நெல்லை ஆட்சிச்சொல்லாக்கக் கழகப்பணி

சங்க அமைச்சர் டாக்டர் இ மூ. சுப்பிரமணிய பிள்ளை அவர்களும் தமிழ்ப்பேராசிரியர் ஆ அருளப்பன் பி.ஏ., அவர்களும் பல நாட்கள் ஒவ்வொரு தடவையிலும் பலமணி நேரங்கள் திருநெல்வேலி இந்துக்கல்லூரியில் கல்லூரி ஆட்சிச்செயலாளரவர்கள் அறையிற்கூடி, சங்க அமைச்சரவர்களால் திரட்டப்பெற்ற ஆங்கில ஆட்சிச்சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச்சொற்களைக் கண்டு அமைத்தார்கள். அச் சொற்களையே ஆட்சிச் சொல்லாக்கக் கழகத்தார் ஆராய்ந்து முடிவு செய்தனர். கழகக் கூட்டங்கள் பெருமாள்புரத்தில் நடைபெற்றன. முப்பதெட்டுத் தடவைகளில், ஒவ்வொரு தடவையிலும் குறைந்தது இரண்டரை மணி நேரங்கள், ஆராய்ச்சி நடைபெற்றது. ஒவ்வொரு தடவையிலும் கூட்டத் தொடக்கமுதல் முடிவு வரையில் கழகத்தலைவர், திரு. தா. கோமதிநாயகம் பிள்ளையவர்கள் உடனிருந்து ஆராய்ந்தமை குறிப்பிடத்தக்கது. பேராசிரியர் ஆ. அருளப்பன் அவர்கள் காட்டிய பேரூக்கம் மிகப் பெரியது. 1—8—1955-ல் காலையில் ஆட்சிச் சொல்லாக்கம் நிறைவு பெற்றது.

## பாராட்டு விழா

9—8—1955-ல் இந்துக்கல்லூரியில் ஒரு பொதுக்கூட்டம் இராவ்பகதூர் மு. அ. குற்றாலலிங்கம் பிள்ளை, பி. ஏ., (ஓய்வு பெற்ற சென்னை அரசாங்க உணவுச் செயலாளர்) அவர்கள் தலைமையிற் கூடி ஆட்சிச் சொல்லாக்கக் கழகத்தார் தொண்டினைப் பாராட்டியது.

## மேலும் ஆட்சிச்சோற்கள் ஆராய்ச்சி

திருச்சி மாவட்ட ஆட்சித்தலைவர் திருவாளர். R. S. மலையப்பன், I. A. S, அவர்கள் 9—8—1955 (Rc. C. 4/10027/55) கடிதத்துடன் தங்கள் வேலைநிலையத்தில் அமைக்கப்பெற்ற ஏறத்தாழ ஐந்நூறு ஆங்கிலச் சொற்களுக்கேற்ற தமிழ் ஆட்சிச் சொற்களை அனுப்பியுதவினார்கள். அவை 29—8—1955, 30—8—1955, 1—9—1955, 2—9—1955 ஆகிய நாட்களில் ஆட்சிச் சொல்லாக்கக் கழகத்தாரால் ஆராய்ந்து முடிவு செய்யப் பெற்றுச் சேர்க்கப்பெற்றன.

## அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

அண்ணாமலைப் பல்கலைக்கழகம் அன்பு கூர்ந்து நமது ஆட்சிச்சொல்லாக்கக் கழகப் பணியினை ஆதரிப்பதற்கு அறிகுறியாக 5—11—1955-ல் (RoC. 1799 E) ரூபாய் இருநூற்றைம்பது அனுப்பி வாழ்த்தி யருளியது.

## வெளியீட்டு விழா

ஆட்சிச்சொல் அகராதி அச்சிடப்பெற்று, திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் 5—12—1955-ல் கூடிய அறிஞர் பேரவையில் அரங்கேற்றப்பெற்றது. அவ் விழாவிற்குத் தலைமை தாங்கியவர் நெல்லை மாவட்ட ஆட்சித்தலைவர் திரு. R. V. இராமன், I. A. S, அவர்கள். அதனைத் தொடங்கி வைத்தவர் தென் மாவட்டங்களின் கல்வி அதிகாரி, திரு. கோபால ஐயர், எம்.ஏ., எல்.டி., அவர்கள். திருநெல்வேலி மேற்கு மாவட்டக் கல்வி அதிகாரி திரு. பாலகிருஷ்ண முதலியார், பி. ஏ., எல். டி., அவர்கள் ஆட்சிச் சொற்களை வெளியிட்டுப் பேருரை நிகழ்த்தினார்கள். அச் சொற்களுக்குத் தகுந்த திருத்தங்கள் கூறுபவர்களிற் சிறந்த முதல் மூவருக்குமட்டும் பரிசுகள் வழங்கப்பெறும் என விளம்பரம் செய்யப்பெற்றது. இருபத்துமூன்று பெரியார் திருத்தங்கள் அனுப்பியிருக்கிறார்கள்.

## சென்னை ஆட்சிச்சொல்லாக்கக் கழகம்

சங்க அமைச்சரவர்கள் சென்னைக்கு வந்து திருவாளர்கள் S. வேங்கடேசுவரன், I. C. S., அவர்கள், மா. அனந்த நாராயணன், I. C. S., அவர்கள், T. K. சங்கரவடிவேலுப் பிள்ளை, I. A. S, அவர்கள், பேராசிரியர் இரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் முதலிய பெரியார்களோடு கலந்துபேசிச் சென்னையில் ஆட்சிச் சொற்களை ஆராய்ந்து முடிவுசெய்யும் கழகத்தை அமைக்கும் திட்டத்தை வகுத்துத் தெரிவிக்க, சங்கத் தொழிற் கழகம் 30—1—1956-ல்

சென்னை ஆட்சிச் சொல்லாக்கக் கழகத்தை அமைத்தது. அதன் தலைவர் திரு. S. வேங்கடேசுவரன், I. C. S., அவர்கள். அதன் உறுப்பினர் விவரம் முன்னர்க் காண்க.

## சென்னை அரசாங்கம்

27—11—1954-ல் நமது சங்கம் சென்னையில் வைத்து இப் பணி தொடக்கப்பெறும் என முழு ஆதரவு கேட்டு அரசாங்கத்திற்கு எழுதியது. பின் திருநெல்வேலியில் இப் பணி நடப்பதற்குப் போதுமான வாய்ப்பு இருப்பதை யறிந்து நமது சங்கம் 23—4—1955-ல் சென்னை அரசாங்கத்திற்கு எழுதி முழு ஆதரவும் அருள வேண்டிக்கொண்டது.

திருநெல்வேலியில் கிழக்கு மாவட்டக் கல்வித் தலைவர் திரு. கி. வேங்கடசுப்பிரமணிய ஐயர், எம். ஏ., எல். டி., (அரசு ஆணை எண் 1317 55 நாள் 23—3—1955) அவர்களையும், இந்து அறநிலைய உதவி ஆணையாளர் திரு. ம. இரா. சண்முக சுந்தரம் பிள்ளை, பி.ஏ.,பி.எல்., (அரசாணை எண் 391 நாள் 9—6—1955) அவர்களையும் ஆட்சிச் சொல்லாக்கக் கழகத்திற் கலந்து பணிபுரியுமாறு சென்னை அரசாங்கம் ஆணை அனுப்பி ஆதரித்தது. பின் நெல்லைமாவட்ட ஆட்சித் தலைவரவர்கள் வழியாக நமது ஆட்சிச் சொல்லாக்க நிலையை அறிந்து (எண் 2781/54—11 நாள் 27—10—1955) வேண்டும் துணைபுரிய முன் வந்தது. அரசாங்கக் கருத்துக்கு இசைந்து பணிபுரிவதாக 26-11-1955ல் நமது சங்கம் நெல்லை மாவட்ட ஆட்சித் தலைவர் வழி அரசாங்கத்திற்கு மறுமொழி அனுப்பியது.

4—2—1956-ல் சங்கம் எழுதிய விண்ணப்பத்தின் பயனைச் சென்னை அரசாங்கம் தமிழகத்திலுள்ள மாவட்டங்களின் ஆட்சித் தலைவர்கள் யாவருக்கும் ஆட்சிச் சொற்களில் இவ்விரண்டு படிகள் அனுப்பி ஆராய்ந்து நல்ல திருத்தங்கள் கண்டு சங்க அமைச்சரவர்கட்கு அனுப்பும்படி (எண் 799/56-1) நாள் 11—2—1956-ல் ஆணை அனுப்பியது. சென்னை, செங்கற்பட்டு, வடார்க்காடு, தென்னார்க்காடு, சேலம், நீலகிரி, கோயமுத்தூர், தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி ஆகிய பன்னிரண்டு மாவட்ட ஆட்சித் தலைவரும் ஆங்காங்கே உட்குழுக்கள் அமைத்து ஆராய்ந்து திருத்தங்களை அனுப்பி உதவினார்கள்.

சென்னை வருவாய்த் துறை அலுவலகத்தில் (Board of Revenue) சொல்லாக்கக் கூட்டங்கள் நடத்துவதற்கு 21—2—1956-ல் அரசாங்கம் இசைவாணை அனுப்பியதோடு 27—2—1956 எண் 773 ஆணையால் சங்கத்திற்கு இப் பணிக்

ாக ஓராயிரம் ரூபாய் அடையாள நன்கொடை வழங்கியது; பின் 22—6—1956-ல் எண் 2207 ஆணையால் சங்கம் அமைத்துள்ள சென்னை ஆட்சிச் சொற் கழகத்தை ஏற்றுக்கொண்டது.

## சென்னைக் கழகப்பணி

சென்னை ஆட்சிச்சொல்லாக்கக் கழகம் முதன் முதலாகச் சென்னைச் சேப்பாக்கம் வருவாய்த்துறை அலுவலகத்தில் திரு. S. வேங்கடேசுரன், I. C. S., அவர்கள் தலைமையில் 16-5-1956-ல் கூடிச் சொற்களை ஆராய்ந்தது. 17—5—1956-ல் நடைபெற்ற கூட்டத்தில் அந்த இரண்டு நாட்களிலும் ஆராய்ந்து கண்ட முறையில் சொற்களை ஆராய்ந்து முடிவு கூறும்படி திரு. மா. அனந்தநாராயணன், I. C. S., அவர்கள் தலைமையில் திருவாளர்கள் R.V. கிருஷ்ணையரவர்கள், K. கோதண்டபாணி பிள்ளையவர்கள், அமைச்சரவர்கள் ஆகிய மூவரையும் உறுப்பினராகக் கொண்ட உட்குழு அமைக்கப்பெற்றது.

உட்குழுக் கூட்டங்கள் 16-7-1956-ல் தொடங்கிச் சட்டக் கல்லூரியில் நடைபெற்றன. 27—7—1956-ல் உட்குழு தனது பணியை நிறைவு செய்து அறிக்கையுடன் சொற்களை ஆட்சிச் சொற் கழகத்திற்கு அனுப்பி வைத்தது.

16—8—1956-ல் ஆட்சிச்சொல்லாக்கக் கழகம் வருவாய்த் துறை அலுவலகத்திற் கூடி உட்குழுவினர் அறிக்கையை ஆராய்ந்து ஏற்றுக்கொண்டது. 21—8—1956-ல் தலைவர் திரு. வேங்கடேசுவரனவர்கள் மாளிகையில் நடைபெற்ற கூட்டத்தில் திருவாளர்கள் இரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் (தலைவர்), T. K. சங்கர வடிவேலுப் பிள்ளையவர்கள், சொ. அமுதகணேச முதலியாரவர்கள், K. கோதண்டபாணிப் பிள்ளையவர்கள், அமைச்சரவர்கள் ஆகிய ஐவர்குழு சொல் திறன் ஆராய்வதற்காக அமைக்கப்பெற்றது.

இதன் கூட்டங்கள் 8—9—1956-ல் தொடங்கிப் பல்கலைக் கழகத்திலும், செஞ்சிலுவைச் சங்கத்திலும், கோட்டை அரசாங்க அலுவலகத்திலும், பெரும்பகுதி திரு. T. K. சங்கர வடிவேலுப் பிள்ளையவர்கள் மாளிகையிலும் நடைபெற்றன. திட்டமான சொற்கள் அமைக்கப்பெற்றன. 14—10—1956-ல் இந்த உட்குழுப்பணி நிறைவுபெற்றது.

ஆட்சிக்கு இன்றியமையாது வேண்டும் சட்டக்கலைச் சொற்களைப் பொறுக்கித் தரும்படி திரு மு. அ. குற்றாலலிங்கம் பிள்ளையவர்கள் கேட்டுக்கொள்ளப் பெற்றார்கள். அதற்கு உதவியாக [illegible] மா. அனந்த நாராயணனவர்கள் தாம் திரட்டிவைத்

திருக்கும் மூவ்வாயிரத்திற்கு மேற்பட்ட சட்டக்கலைச் சொற்களைத் தந்துஉதவினார்கள். எண்ணூறு சொற்கள் வரை பொருக்கு திரு. குற்றாலலிங்கம்பிள்ளை யவர்கள் அமைச்சரவர்களுடன் 31-8-56, 1-9-56, 2-9-56 ஆகிய மூன்று நாட்களும் ஆராய்ந்து முடிவுசெய்து சென்னைக் கழகத்திற்கு அனுப்பி யுதவினார்கள். அச் சொற்களைத் திருவாளர் மா. அனந்த நாராயணனவர்கள், T. K. சங்கர வடிவேலுப்பிள்ளையவர்கள், R V. கிருஷ்ணைய ரவர்கள் ஆகிய மூவரும் திருந்த அமைத்துத் தந்தார்கள்

ஆட்சிச்சொற் கழகம் 21—10—1956-ல் கூடி இரண்டு உட்குழுக்களும் திருந்த அமைத்துத் தந்த சொற்களை ஆராய்ந்து ஏற்றுக்கொண்டது. அச் சொற்களே இன்று நமது சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் சார்பாக, சங்கத் தொழிற்கழக உறுப்பினரும், ஆட்சிச்சொற்கழகத் தலைவருமாகிய திருவாளர் S. வேங்கடேசுவரன், I. C. S, அவர்களால், நமது சென்னை அரசாங் கத்திற்காக அதன் தலைமை அமைச்சர் திருவாளர் காமராசரவர் களிடம், ஏனைய அமைச்சர்களும், அரசாங்கச் செயலாளர்களும, தமிழ்ப்பெருமக்களும் கூடியிருக்கின்ற இப் பேரவையில் ஒப்பு விக்கப் பெறுகின்றன.

## இனி நடைபெற வேண்டிய பணி

ஒருவாறு ஆட்சிச் சொற்கள் அமைக்கப்பெற்றுள்ளன. சொற்கள் பழகித் திருந்தி நிலைபெறுதல் வேண்டும். ஆட்சி தமிழில் எளிதாக நடைபெறுதல் வேண்டும்.

அலுவலகக் கையேடுகளும் (Manuals), விதித்தொகுப்புக் களும் (Codes), நிலையாணைகளும் (Standing orders) தமிழில் அமைக்கப்பெறுதல் வேண்டும். மொழிபெயர்ப்பாளர் இருப்ப தோடு அவ்வத்துறைகளில் வல்லவர்களை ஆராய்ந்து கண்டு அவ் வவர்களிடம் இப் பொறுப்பினைத் தந்து மிக விரைவாக இவை களையெல்லாம் தமிழில் ஆக்கி அச்சிட்டு வெளியிடுதல் இன்றி யமையாதது. இவ் வழியில் அரசாங்கத்திற்கு வேண்டும் துணை யெல்லாம் புரிய நமது சங்கம் எப்போதும் சித்தமாக இருக்கிறது.

முன் உயர்நிலைப் பள்ளிகளில் தாய்மொழி வழியாகக் கல்வி நடைபெறுவதற்கு நமது சங்கம் இடைவிடாது முயன்று கலைச் சொற்களை அமைத்துத் தந்ததுபோல இனி, கல்லூரிக் கல்விக்கும் துணைபுரிய நமது சங்கம் முன்நின்று பணிபுரியும் கடமையுடை யது. அரசாங்கமும், பல்கலைக்கழகங்களும் இந் நிலை காணத் துணைபுரியும் என நமது சங்கம் எதிர்நோக்கி நிற்கின்றது.

# நச்சுக்கோப்பை*

## (நாடகம்)

[திரு. வில்லிவாணன்]

## ஆசிரியர் தெனிசன் வரலாறு

தெனிசன் 1809-ஆம் ஆண்டு ஆகஸ்ட்டு மாதம் 6-ஆம் நாள் பிறந்தார். அவருடைய தந்தையார் சமயச் சொற்பொழிவாற்றும் ஆசிரியர். அவர் கவியியற்றுவதிலும், சித்திரம் வரைவதிலும், வண்ணங்கள் தீட்டுதல், இசைபாடுதல் முதலிய பல துறைகளிலும் வல்லுநராவர். அவருடைய தாயார் பக்கத்தூரில் இருந்த சமய போதகர் ஒருவரின் மகள்

தெனிசனுக்கு நான்கு சகோதரிகளும், இரு தமையன்மார்களும் இருந்தனர். இவர் தம் ஏழாம் வயதில் பள்ளிக்குச் சென்றார்; இரண்டாண்டுகட்குப்பின் வீட்டிலேயே தம் தந்தையாரிடம் கல்வி பயின்று வந்தார் 1826-இல் பதினேழாம் வயதில் தம் தமையனுடன் "இரு சோதரர் இயற்றிய பாக்கள்" என்ற பெயரில் கவிதைத் தொகுதியை வெளியிட்டார்; பின் 1828-இல் கல்லூரிக்குச் சென்றார். முதலில் கல்லூரியின் சுற்றுச்சார்பு இவருக்குப் பிடிக்காதிருந்தது பின் பலர் நண்பர்களாகிச் செம்மையுறப் பயின்றார். ஆனால் பட்டம் ஒன்றும் பெறவில்லை. கல்லூரியினின்றும் நீங்குதற்கு முன் 'கவிப்பாடற்றொகுதி" என்ற தலைப்பில் ஒரு நூல் வெளியிட்டார். அது நண்பர்களால் பாராட்டப்பட்டதாயினும், விவாதத்துக்கிடனாயிற்று. இவற்றில் சில நீக்கப்பெற்றுப் பின் பெருநூல் தொகுதியில் இடம் பெற்றன

1831-இல் தெனிசன் தந்தையார் இறந்தார்; 1832-ல் இரண்டாந் தொகுதியாகச் சில பாக்களை இயற்றி இவர் வெளியிட்டார். இத் தொகுதியில் உயரிய பல நூல்கள் வெளிவந்தன. 1833-இல் தம் தங்கையை மணப்பதாக இருந்த இவருடைய நண்பர் ஆலம் என்பவர் இறந்து போனார். இதனால் மிக வருந்திய கவிஞர் "நினைவு மாலை" என்ற பெயரில் பெருநூல் ஒன்று இயற்றினார். முதலில் ஒரு சிறுபகுதியே எழுதி முடிக்கப்பெற்றதென்றும், பின் பதினேழு ஆண்டுகளில் முற்றுப்பெற்றதென்றும், அதுவே தெனிசனின் மிகப் பெரிய பாடல் என்று சொல்லும் பெருமை வாய்ந்ததென்றுங் கூறுவர்.

---

* மூலம்: தெனிசன்கவி; மொழிபெயர்ப்பு: திரு. வில்லிவாணன்.

1842-இல் மூன்றும் தொகுதிப் பாடல்கள் வெளியாயின. பெரும் புலவர்கள் பலர் இப் பாடல் தொகுதியைப் பாராட்டினர். இதற்கிடையே தெனிசனின் பொருள்நிலை, கீழ்நிலையை யடைந்து வருவது கண்டு நண்பர்கள் முயன்று அரசினரிட மிருந்து ஆண்டுவருவாயாக ஒருதொகையினைப் பெற்றுத் தந்தனர். இதன் பயனாக வெளிநாட்டுச் சுற்றுப்பிரயாணம் செய்தார். பின் 1847-இல் 'பிரின்ஸஸ்' என்னும் நூலை இயற்றி வெளியிட்டார். 1850-இல் இவருக்குத் திருமணம் நடை பெற்றது. அவ் வாண்டிலேயே அரசவைக் கவிஞராக ஆக்கப் பெற்றார். 1867-இல் தமக்கென ஒரு வீடு கட்டிக்கொண்டு வாழ்ந்து வரலானார்.

1883-இல் தெனிசனுக்குப் 'பெருமான்' என்னும் பட்டம் வந்தது. 1889-இல் பிரவுனிங் கென்னும் கவிஞர் இறந்தார். அவரைப்பற்றிய இரங்கலை நன்கு பாடிமுடித்தார். தம் முதுமைக் காலத்துச் சமயப்பற்று மிக்கவராக இருந்து 1892-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 6-ஆம் நாள் இவர் புகழுடம் பெய்தி

## கதை வரலாறு

புளூடார்க் என்னும் புலவர் கி. மு. 41-54-இல் ஆண்ட ரோமப் பேரரசர் காலத்தவர் என்பர். அவர் அழகிய வாழ்க்கை வரலாறுகளை எழுதியுள்ளார். வேறு பல நூல்களும எழுதி யிருக்கிறார். அவற்றுள் 'பெண்களின் கற்புடைமை' என்பதும் ஒன்று. அதில் வரும் வரலாறு வருமாறு :

" கலாதிய நாட்டில் இருபெருஞ் சிற்றரசர்கள் இருந்தனர். ஒருவன் சினாதன். மற்றவன் சினாரியன். இருவரும் உறவினர். சினாதனுக்குக் கம்மா என்ற மனைவி இருந்தாள். அவள் அழகி. நல்ல பருவத்தினள். கற்புக்கரசி. அறிவு ஆற்றல் களில் புகழ்வாய்ந்தவள். அவளுடைய நற்குண நற்செய்கை களைக் குடிகள் போற்றி மகிழ்ந்தனர். மேலும் அந் நாட்டுத் தேவதைக்குப் பூசை செய்து திருவிழா நடத்துவதில் பெரும் பங்குகொண்டதால் குடிமக்களுக்கு அவள்மீது மிகவும் மதிபபிருந்து வந்தது.

" சினாரியன் அவள்மீது காமுற்று எவ் வழியிலேனும் அவளைப் பெற விரும்பினான். வஞ்சகத்தால் சினாதனைக் கொன்று விட்டுக் கம்மாவை மணந்துகொள்ள வேண்டினான். இதற் கிடையில் கம்மா அந் நாட்டுத் தேவதையின் கோயிலில் இருந்துகொண்டு கைம்மை நோன்பு நோற்று வந்தாள்.

“கம்மா தன் கணவன் சினதனுக்குச் சினாயன் இழைத்த தீங்கினை மறக்கவில்லை. எனினும், தக்க காலத்தை எதிர் பார்த்த வண்ணமிருந்து வந்தாள். ஆயின், சினாரியன் கம்மாவை எவ்வாறேனும் மணக்க வேண்டினன். அவ னுடைய நண்பர்களும் உறவினரும் அவளை அன்புடன் நடத்திச் சினாரியன் கருத்துக்கு இணங்குமாறு வேண்டினர். எனவே இணங்குவதாகக் காட்டி, தேவதையின் கோயிலில் மண உறுதிப்பாட்டை வெளியிடுவதாகக் கூறினள். இதனைச் செவியேற்று மகிழ்ந்த சினாரியன் கோயிலுக்கு வரவும், அவனை வரவேற்றுத் தேவியின் அருள் நீரென நஞ்சு கலந்த நீரைத் தானுங் குடித்துப் பின் சினாரியனுக்குங் கொடுத் தாள். அவன் வாங்கிக் குடித்தபின் கடவுளை வணங்கி எழுந்தவளாய்த், “தெய்வமே! இவ்வுலக வாழ்வில் ஒரு நலனுங் காணேதேன் இவ்வஞ்சத்தை யேனுந் தீர்த்துக் கொள்ள அருளினையே. என் கணவனுடன் சேர்தற்கருள். இவன் மணவினைக்கு மாறுகப் பிணவினையில் புதையட்டும்” என்ருள். கேட்ட சினாரியன் நஞ்சு நீங்க முயன்றும் இயலாதவனாய் மாண்டான். மறுநாள் வரையில் இருந்து கம்மா வென்னுங் கற்புக்கரசியும் இறந்தாள்”

தெனிசன் எழுதிய கதையில் ரோம அரசினரின் தலையீடு வருகிறது. நாடகத்திற்குப் புதுக் கருத்துக் கொடுக்கவும், சினாரியனின் வாழ்க்கையினை விரித்து விளக்கவும் இவ் வாக்கம் பயன் பட்டது போலும்.

கலாதிய நாடு கிறித்து பிறப்பதற்கு முந்நூறு ஆண்டு கட்குமுன் ஆசியா மைனரில் சிலர் குடியேறியவரின் ஒருநாடு. அவர்கள் பெரும்பாலும் கிரேக்கரின் பழக்க வழக்கங்களைக் கைக் கொண்டனராயினும் தம் மொழியையும், ஆட்சிமுறை முதலிய வற்றையும் விடாது கடைப்பிடித்து வந்தனர். கலாதியர் மூன்று பிரிவினராகி, ஒவ்வொரு பிரிவினரும் தம் நாட்டை நான்கு பங்காக்கி, ஒரு பங்கிற்கு ஒரு அரசாக ஆட்சி நடத்திவந்தனர்.

இனி, இந் நாடகத்தில் வரும் ‘அத்தமியாள்’ என்னும் தெய்வம் கிரேக்க புராணங்களின்படி சீயஸ், லிதோ என்னும் இருவருக்கும் பிறந்தவள். அப்பாலோவுடன் பிறந்த இரட்டைப் பிறவி. அவளுக்கு வில்லும் அம்பும் உண்டு. தொற்று நோயி னைப் பரப்பி மக்களை மாளச்செய்வாள். ஆடு மாடுகளுக்கும், குறிப்பாகப் பெண்களுக்கும் துன்பத்தை உண்டாக்குவாள். நோயினின்று மக்களைக் காக்கவும் நிலஞ் செழிப்படையச் செய்ய வும் வல்லவள். அவளுக்குத் திருமுடியும் பன்முலையும் உண்டு என்பதனல் நாட்டைக் காப்பவள் என்பது பெறப்படும்.

## நாடக உறுப்பினர்

### கலாதியர்

சிஞரியன் : ஒரு நான்கு மாநிலத்துக்கு முன்னாளரசன்.
சிஞதன் : ஒரு நான்கு மாநிலத்துக்கு அரசன்.
மெய்க்காப்பாளன் :
சிறுவன் :
காவற்கன்னி :
சந்திரிகை :
கம்மா : சிஞதன் மனைவி. கைம்மை நோன்பு நோற்பவள்.

### ரோமர்கள்

அந்தோனியன் : ரோமப் படைத்தலைவன்.
புபிலியன் :
உயர்குடிப்பிறப்பாளன் :
செய்தி சொல்வோன் :

# முதற் களம்

## முதற் காட்சி

இடம் : கலாதிய[1] நகரத்தின் செய்மைத் தோற்றம்.

[திரை தூக்கியதும், சந்நியாசினிகள் கோயிலில் பாடுவது கேட்கிறது. குன்றுகளின் பக்கத்துள்ள வழியில் கொடிமுந்திரியை, ஒரு சிறுவன் பறித்துக்கொண்டிருப்பது தெரிகிறது. ரோமப் படையினர்களில் ஒரு கூட்டம் விலங்கிட்டுச் சிறைப்படுத்தி ஒருவனை நடத்திக் கொண்டு அவ் வழியே சென்று மறைகிறது. சிஞரியன் வருகிறான். சுற்றிப் பார்க்கிறான். பாட்டு நிற்கிறது.]

சிஞரியன்[2] : அவள் வாழும் நகரம் செழிப்பு மிக்கது; பழமரங்கள் நிறைந்துள்ளன; மூன்று ஆண்டுகட்குமுன் நான் ரோமாபுரிக்கு ஓடியபோது அவள் இவ் வழியில் தான் என்னைக் கடந்து சென்றாள். அப்போது பஜனைப் பாடகர்களுடன் மெல்லப் பாடிக்கொண்டு சென்றாள். ஆ! தெய்வமே! அவள் என் விதியை வகுப்பவளாகிவிட்டாள்.

---

1. கலாதிய நகரம் இன்னது என்று சொல்லவில்லை. ஆயின் ஒவ்வொரு பிரிவினருக்கும் ஒரு தலைநகரம் உண்டு.
2. சிஞரியன் சொல்வது தனிமொழி (Soliloquy).

இல்லையேல், அவளுடைய சொந்த நகருக்கே நான் திரும்ப வருவேனு.[1] இப்போது அவள் சினுதனை மணந்துகொண்டு விட்டாள். அவன் சதிகாரனுயின், ரோமாபுரியினர் அவனை விலங்கிட்டுப் பிடித்துக்கொண்டுபோவர். அல்லது நான் அவனைக் கொல்லத்தான்வேண்டும் அப்போது தான் அவளை நான் அடையக்கூடும். எங்கள் குடியின் எளிமை யும் பிறவும் என்னுல்தான் ரோமாபுரியினருக்குத் தெரிந் தன. அவர்கள் எங்களை இப்போது எளிதில் நசுக்கிவிட இயலும். ஆ! பாழானகுலமே, நின்னை ஒரு காலத்தில் பாழாக்கி வஞ்சம் தீர்த்துக்கொள்ள விரும்பினேன். சரி இநதக் கோப்பை—என் வாழ்நாளில் இப்போதுபோல் ஒரு பெண்ணுக்காகக் காம வயப்பட்டதில்லையே! (தன் அங்கி யிலிருந்து ஒரு கோப்பையையும் சீட்டையும் வெளியில் எடுக்கிறுன்.) என்ன எழுதியுள்ளேன். (படிக்கிறுன்.)

"சினுதன் மனைவி கம்மாளுக்கு நான்மாத் தலைவன் எழுதுவது :

நான, நம் அத்தமியாள்[2] என்னும் நம் பெருந்தெய்வத்தின்மேல் பத்தி பூண்டிருப்பவன். சில ஆண்டுகட்குமுன் நீ அத் தெய்வத்திற்கு வழிபாடு செய்ததைக் கண்டேன். அது முதல் உன்மீது எனக்கு மதிப்பு மிகுந்துவிட்டது. எனவே இத் தெய்வக்கோப்பையை உனக்குப் பரிசாக அனுப்பு கிறேன். நம் தெய்வத்தின் கோயில ஒன்று தீக்கு இரை யானபோது மீட்கப்பட்ட கோப்பை இதுவாகும். இது நம்மவர் திருமணததின்போது மிகவும பயன்படுவது. இதனைப் பெற்றுக்கொள்ளவேண்டுகிறேன்.

)ஙஙனம :

"ரோம ஆட்சியினரிடம் வலுக்கட்டாயத் தால் சேவை செய்யும் கலாதியன். இப் போது தன் பெயரை வெளியிட்டுக் கொள்ள இயலாதவன்."

(திரும்பி அச் சிறுவனைப் பார்க்கிறுன்.) பையா! உனக்குத் தெரியுமா?

**சிறுவன் :** இக் கொடிமுந்திரி அவர் வீட்டுக்குத் தான். அவரு டைய வீடு கோயிலுக்கு மிக அருகேதான் இருக்கிறது

1. சினுரியனை நாட்டுமக்கள் நாட்டைவிட்டுத் துரத்திவி செய்தியைக் கதைச சுருக்கதில் பார்க்க.

2. அத்தமியாள் என்னும் தெய்வத்தைப் பற்றிய வரலாற்றினை கதை விளக்கத்திற் பார்கக.

சினாரியன்: அங்கேயா?

சிறுவன்: ஆம் ஐயா.

சினாரியன்: இந்தக் கோப்பையையும், கடிதத்தையும் கம்மாவிடம் கொடு.

சிறுவன்: அவ்வம்மையார் சினாதருடன் வேட்டைக்குச் சென்றிருப்பார்களே.

சினாரியன்: சென்றிருக்கட்டும். நீ இவற்றை அவள் வீட்டில் கொடுத்துவிடு. (கோப்பையையும் கடிதத்தையும் கொடுக்கிறான்.)

சிறுவன்: அப்படியே ஐயா.

[வாங்கிக்கொண்டு செல்கிறான். அந்தோனியார் வருகிறார்.]

அந்தோனி: (போகும் சிறுவனை வழியில் பார்த்து) அந்தச் சிறுவன் எங்கே ஓடுகிறான்? (சினாரியனைப் பார்த்து) அந்தக் கோப்பை தீயிலிருந்து மீட்கப்பட்டதே அதுவா?

சினாரியன்: ஆம். சினாதன் மனைவிக்கு அதனை அனுப்பியிருக்கிறேன். அவளுக்குக் கணவன்மீது அன்பு ஒருபக்கமும், அத்தமியாள்மீது பக்தி ஒரு பக்கமும் உண்டு. நீ இங்கு வந்திருப்பது, சினாதனிடமிருந்து கப்பம் வாங்கிக்கொண்டு போக அல்லவா? அவன் நீண்டகாலமாகச் செலுத்துவதில்லையே. அவனோ, நாட்டுப்பற்றுடையவன். எனவே, அவன்மீது நடவடிக்கை எடுத்தால் மக்கள் எழுச்சிக்கு உதவி செய்ததாகிவிடும் என்று அஞ்சுகிறாய். ஆயின் அவன் துரோகி என்பதற்குச் சான்றாக இக் கோப்பை அங்கிருப்பின் நல்லதன்றோ? அதனால்தான் அனுப்பியுள்ளேன்.

அந்தோனி: நீ நினைப்பதுபோல் ஆயின், இந்த நான்மாக்களனைத்தும் தமக்குள் பிளவுபட்டுப் பாழாகாமல் ஒருவன்கீழ்வந்துவிடும். ரோமப் பேரரசுக்குக்கீழ் இவைகளை ஆண்டு நலமுறுவான். நாடும் செழித்துவளரும். இந்நாடு உனக்குத்தான் கிடைக்குமென்று கேள்விப்படுகிறேன்.

சினாரியன்: 'அரசு! முடி!' அவ்வாறு பேசிக்கொள்கிறார்கள்? (அந்தோனியர் ஆம் என்பது காட்ட தலையை அசைக்கிறார்) நன்று; எனக்கு அரசு கிட்டுமாயின் நாட்டுக்கு நல்லது செய்வேன். ரோமநன்மகனைவிட அப் பேரரசுக்கு நான் மிகவும் உண்மையுடன் உழைப்பேன்.

[கம்மா வருகிறாள். திரும்பி, அவள் வருவதைப் பார்க்கிறான்.]

**நம்பா:** (தோழியிடம்) அவர் எங்கே, பெண்ணே ?

**தோழி:** உங்களுக்கு அருவி விழுமிடம் தெரியாதா அம்மா, அங்கே தான்.

**நம்பா:** மான் அங்கிருக்கிறதா ?

**தோழி:** மலையடிவாரத்தில், புதர் அடர்ந்த இடத்தில் நேற்றுப் பார்த்தேன்.

**நம்பா:** அப்படியாயின், மலையின்மீது சென்று வேட்டையாடுவதைப் பார்ப்போம்.

[மலைமேல் சென்று மறைகின்றனர்.]

**சினூரியன்:** (அவளைச் சற்று நேரம் உற்றுப்பார்த்த பின் தனியே) ஜூனோ போன்று மார்பு; கூரிய கண் வீனஸ் போன்று; முகமும் திருவும் ஈடில்லாதது!

**அந்தோனி:** என்ன ? சினூரிய ! அவளை ஏன் அவ்வளவு கூர்ந்து பார்க்கிறாய் ?

**சினூரியன்:** பல ஆண்டுகளுக்கு முன் பார்த்தது. அதன்பிறகு மாறுதலடைந்துள்ளாளா என்றுதான் பார்க்கிறேன்.

**அந்தோனி:** (ஏளனமாய்) காதலா ?

**சினூரியன்:** அவளைச் சினாதன் மணந்துகொண்டபோது பொறாமைப் பட்டேன்.

**அந்தோனி:** அவளுக்குத் தெரியுமா ?

**சினூரியன்:** அவளுக்கா—என் முகமே அவளுக்குத் தெரியாதே.

**அந்தோனி:** சினாதனுக்குத் தெரியுமா ?

**சினூரியன்:** அவனுக்குந் தெரியாது.

**அந்தோனி:** ரோம் நகரத்தில் கேள்விப்பட்டேன். உன்னை உங்கள் நாட்டில் விரும்புவதில்லையாமே. ஒரு பெண்ணிடம் பொருந்தாக் காமங் கொண்டதால் ஒழுங்கற்று நடந்து கொண்டாயாம். தார்க்குன்[1]..........

---

1. தார்க்குன் (Tarquinius Superbus) (Turquin the Proud) ரோமராஜ்யத்தை யாண்ட கடைசி அரசன் கொலாதினன் (Collatinus) என்பானின் மனைவியைக் கற்பழிக்க முயன்றனன் என்று தார்க்குனின் மகனைக் கொடுமைக்குள்ளாக்கினர். அதனால் அரசனையும் அவன் குடும்பத்தினரையும் நாடுகடத்தினர் (கி. மு. 510-இல்). பின்னர் பலமுறையும் நாட்டைக் கைப்பற்ற இயலாமற் பின் கி. மு. 490 இல் இறந்தனன் என்பது வரலாறு.

**சிஞரியன் :** தார்குன் போல என்று சொல்கிறாய்; முடியணிந்து கொள்ள அன்றோ வந்துள்ளேன்.

**அந்தோனி :** தார்குன் போன்றே முடியணிந்துகொள்ளாது போகவுமகூடும். நேர்வழியில் செல்லவில்லையேல், உனக்கு நன்மை கிட்டாமலும் போகலாம். காமவயப்பட்டு, மண்ணாசை மிகுந்து வழிதவறி நடந்துகொண்டால், ரோமப் பேரரசு நின்மீது வைத்துள்ள மதிப்பினை இழந்து வீழ்வாய்.

**சிஞரியன் :** அவ்வாறெல்லாம் நினைத்து அஞ்சாதே. நான் விரும்பும் பெண்களை அடைந்தே தீர்வேன். ரோமப் பேரரசுக்கு உண்மையாளனாகவும் இருப்பேன்.

**அந்தோனி :** (தனக்குள்) இவ்விழிஞனை வெறுக்கிறேன். நம் அரசினர் ஏன் இவ் இழிதகையோருடன் தொடர்புகொண்டுள்ளனர். எவ்வாறேனும் கிடக்க. நான் அவர்களுக்கு அடங்கித்தான் நடக்கவேண்டும் (வெளிப்படையாக) நல்லது; நீ நினைப்பதுபோல் எல்லாம் நன்கு நடைபெறட்டும்.

**சிஞரியன் :** சென்று வருகிறேன்.

**அந்தோனி :** (நிறுத்தி) சற்றுப்பொறு. சினதனைத் தொடர்ந்து சென்று அவன் வஞ்சகன் என்று காணின், இந்தக் கட்டளையை வைத்துக்கொண்டு மேல்செல். (ஒரு கட்டளைக் கடிதத்தை வெளியிலெடுத்து நீட்டியபடி) அவனைக் கைது செய்ய இது உதவும்.

[கையெழுத்திட்டுக் கொடுக்கிறார்]

**சிஞரியன் :** பெண்! அறிவு தெளிந்தவனானேன். வலைவீசியாயிற்று. (சினத, சினத என்ற குரல் கேட்கிறது; பின் ஊது குரல் கேட்கிறது.) சினதன் வருகிறான். உமியைக்கொண்டு அரிசியைப் பார்க்க வேண்டுமாயின் மிக வெள்ளை மனத்தையுடையவன். அன்பும் தந்திரமும் கொண்டு பெண்களை வயப்படுத்துபவன் அல்லன். நான் அவனுடன் வேட்டையில் சேர்ந்துகொள்வேன். அதனால் நான் சிறிது பயனடையவும் கூடும். அவளையும் பார்க்கலாம் அன்றோ? அவனுடன் யார், யார் இருப்பர். அங்குத் தெரிந்தவர்கள் யாரும் காணேம். இருப்பினும் நான் ரோம அரசுக்கு ஆள். எனவே என்னைத் தொட அஞ்சுவர். அஞ்சாமல் செல்வேன். (சினதன், வேடர்கள், வேட்டைநாய்களுடன் வருகின்றனர்.) நல்லவரே, வெற்றி கிட்டட்டும். நீங்கள் காட்டில் வேட்டை யாடுங்கால் என்போன்ற ரோம அரசினருக்குத் தொல்லை கொடுக்காமற் செல்லுங்கள்.

**சிறுநன்** : ஏன்? என்ன செய்யப் போகிறாய்?

**சிறுரியன்** . வேட்டையாடுவது எனக்கு இளமையிலிருந்தே பிடித்த விளையாட்டு. இந்த விளையாட்டில் கலந்துகொள்ள விரும்புகிறேன்.

**சிறுநன்** : உன் பெயர்?

**சிறுரியன்** : திராதன்.

**சிறுநன்** : ரோமப் பெயரல்லவே!

**சிறுரியன்** : கிரேக்கப் பெயர், அரசே! நாம் கிரேக்க காலிய வழியினரன்றோ? (தொலைவில் கூச்சலும் கொம்பூதலும்)

**சிறுநன்** : ஆ! மான்! (சிறுரியனிடம்) உனக்கு வில்லில்லையா? அடே! அவருக்கு வில்லும் அம்பும் கொடு. தொடர்ந்து வா!

[செல்கிறான், வேடர்கள் பின் செல்கிறார்கள்.]

**சிறுரியன்** : வழி தெரியுமட்டும் மெல்லத்தான் செல்லவேண்டும். இருட்டில் இது முதற்படி[1] நான் எதிர்பார்த்ததற்குமேல் கைகூடியது, எனக்கே வியப்பாக இருக்கிறது. (தொலைவில் கூச்சலும், கொம்பூதலும்) இலோ! இலோ!

[செல்கிறான். பெருங் குரல்களும், கொம்பூதலும்]

(தொடரும்)

1. இருட்டில், மெத்தைப்படிக்கட்டி லாதல் அன்றி ஏணிப்படிகளி லாதல் கருத்துடன்தான் செல்லவேண்டும். கடைசிப் படிக்குவந்து விட்டோம் என்று நினைத்துத் தவறிக் காலைவைத்துவிட்டால் விழுந்து விடவேண்டியதே.

# தமிழகப் பள்ளியெழுச்சி

[திரு. புலவர் 'அரசு']

வாழிய வாழிய செந்தமி ழகமே!
        வளமிகப் பல்கி மகிழ்ந்துற வாழி!
ஏழிசை சூழ்குழல் யாழு முரன்றே
        எங்கும் நிறைந்திங் கிசைப்பது காணாய்!
ஊழியல் வெவ்விருள் மென்மெல நீங்க
        ஓங்கும் அறிவெழில் ஞாயிறு தோன்றித்
தாழினை நீக்கவந் திட்டது சற்றே
        தமிழக மே! பள்ளி எழுந்தரு ளாயே!

வடவேங் கடந்தென் குமரி யெனவே
        வைத்த தமிழக வெல்லை குறைய
இடமது தேண்டிவந் தோர்குடி யாகி
        இடங்கொண் டதைக்கண்டு மின்னுந் துயின்றால்
மடமை வளர்ந்து மடிமை பெருகி
        வாழ்வது தேயும்; மனத்தெளி வெய்தாய்!
தடமலர்ப் பொய்கைகள் வண்டு முரலுந்
        தமிழக மே! பள்ளி யெழுந்த ருளாயே! (௨)

சீரிய லுந்தனித் தமிழ்மொழி நன்கு
        செழிக்க விரும்பிய மக்க ளொருபால்;
ஆரிய முந்தமி ழுங்கலந் தனறி
        அமைகில தென்னு மகத்தின ரொருபால்;
பாரிய லாங்கில முங்கலந் திண்டிப்
        பகர்ந்து குழைந்திடும் பண்பின ரொருபால்;
தாரிணி தேனிற்குச் சூட்ட நிற்கின்றார்
        தமிழக மே! பள்ளி யெழுந்த ருளாயே! (௩)

யாதும்நம் மூரிங்கே யாவருங் கேளிர்
        என்றுரைக் கும்மொழி யாங்கொண்ட தாலே
தீதுகொண் டோமன்றி நன்றறி யோமிச்
        செம்மொழி மெய்ம்மொழி யாகுதல் வேண்டும்
கோது புரியும் பிறருற வாலே
        குடிகொளும் நாடும் குறைந்திட்ட தெல்லை!
சாதுயர் நீங்கிக் களிப்புற வினனே
        தமிழக மே! பள்ளி யெழுந்தரு ளாயே! (௪)

இன்னல் நிறைந்திட்ட நாடிது வாக
எவரு மறிந்தனர் ; உள்பொரு ளீதே ;
மன்னு மரசினர் மேற்குறை கூறும்
மக்களும் மக்களின் ஒத்துழைப் பின்றென்
றின்ன மொழியும் அரசின ருந்தான்
இத்தமிழ் நாட்டி லிருக்கின் றனர்காண்
தன்னலம் விட்டிந்த நாடு செழிக்கத்
தமிழக மே! பள்ளி யெழுந்தரு ளாயே ! (௫)

ஆங்கில ஆட்சியின் போதம் மொழியே
ஆட்சி மொழியென ஆயின தாலே
பாங்குறு செந்தமிழ் வெஞ்சிறை யுற்றுப்
பண்பும் அழகும் அடிமைப்பட் டெய்த்துத்
திங்கினை யெய்திய தங்நிலை யெல்லாந்
தேய்ந்தது ; செந்தமி ழாட்சி யும்பெற்றுத்
தாங்கிய தின்ப எழிலணி யெல்லாம் !
தமிழக மே! பள்ளி யெழுந்தரு ளாயே ! (௬)

வள்ளுவ னென்றொரு நன்மகன் தன்னை
மாநிலம் போற்றிடப் பெற்றிட்ட அன்னாய் !
தெள்ளிய செந்தமிழ் வள்ளுவன் செய்த
திருக்குற ளின்வழி யாங்கள் நடக்க
உள்ளுகின் றேமதற் கொற்றுமை வேண்டும் ;
உன்னரு ளின்றி யுறுவது முண்டோ ?
தள்ளுத லின்றி யினிதெமைக் காக்கத்
தமிழக மே! பள்ளி யெழுந்தரு ளாயே ! (௭)

சென்னை யைப்போன்ற இனிய நகரஞ்
செந்தமிழ் நாட்டின் தலைநக ராக
மன்னிய தின்பக் களிப்பை யெமக்கு
வாரிவ ழங்கிய தாயினும் அன்னாய் !
நன்னருள் சீர்பெறு தலைநக ரெங்கும்
நாடுறின் ஆங்கிலமே, தமிழ் காணோம் !
தன்னை யறிந்திந்தச் சென்னை செழிக்கத்
தமிழக மே! பள்ளி யெழுந்தரு ளாயே ! (௮)

ஆய்கலை மற்றை மொழிகளி லுள்ள
யாவுந் தமிழிற் பெயர்த்திடல் வேண்டும் ;
வாய்மை யுறக்கலை கற்குங் கலைஞர்
மாண்புறு செந்தமிழ்ப் பட்டங்க ளெய்தித்

தூய்மை யுறத்தமிழ் நாடினி தோங்கத்
தொண்டு புரிந்து களிப்புறல் வேண்டும்;
தாய்மொழி வாழ்வு தழைக்கும் பணிக்குத்
தமிழக மே!பள்ளி யெழுந்த ருளாயே! (௯)

இந்தநன் னாட்டின் இளைஞர்க ளெல்லாம்
இனிய தலைவர்க ளாகியிந் நாட்டை
முந்துறு செல்வநன் னாடிது வென்ன
மொழியும் படிநற் பணிகள் புரியச்
சிந்தை கொளும்படி யூக்குதல் வேண்டும்;
திண்ணிய ராகி யறிஞரு மாகித்
தந்தம் பணியை யியற்றுதல் வேண்டும்;
தமிழக மே!பள்ளி யெழுந்தரு ளாயே! (௰)

அமிழ்தினு மினிய தமிழ்மொழிப் பற்றோர்
ஆர்வம் மிகுந்தோர்க ளாமிவர் தம்மைத்
தமிழ்வெறி கொண்டவ ரென்று பழித்துத்
தாக்குகின் றார்தக வேது மறியார்;
தமிழ்மொழி வாழத் தகவு விழைதல்
சாற்றும் பிறமொழி யின்வெறுப் பாமோ?
தமிழ்தமி ழென்று முழங்கிட வின்னே
தமிழக மே!பள்ளி யெழுந்தரு ளாயே! (௧௧)

எங்குந் தமிழி னியலொலி கேட்க,
எங்குந் தமிழி னிசையொலி கேட்க,
எங்குந் தமிழ்க்களிக் கூத்துக் கவின,
எம்மொழி யின்கலை யுந்தமிழ் தேங்க
எங்குந் தமிழர்கள் மற்றவ ரோடே
இன்ப உறவுகொண் டேமுற்று வாழச்
சங்கு முழங்கிய தின்னுந் துயிலேன்?
தமிழக மே!பள்ளி எழுந்தரு ளாயே! (௧௨)

# பண் ஆராய்ச்சி, தலைமையுரை*

[பேராசிரியர், திரு. பி. சாம்பமூர்த்தி]

முன்காலத்திலிருந்து நமக்கு வந்துள்ள இசைநிதிகளில் தேவாரம் ஒன்றாகும். ஈசனுடைய அருளினால், நாயன்மார்கள் திருவாய் மலர்ந்தருளிய தேவாரப் பதிகங்கள் இந்திய இசைவரலாற்றின் ஆதி உருப்படிகளெனலாம். சென்ற வருடங்களில் நடைபெற்ற ஆராய்ச்சியின் மூலமாகத் தேவாரப் பண்களைப் பற்றிய பல அருமையான விடயங்கள் தெளிவாயின. பண்களின் அமைப்பு, அவைகளுக்கு உருவம் கொடுக்கும் கமகங்கள், நுட்ப சுருதிகள் முதலியன ஆராயபபடடன.

'இசைக் கருவி நிலையம்' என்னும் அமைப்பு இங்கு நிறுவப்பெற்றிருப்பது, இசை வரலாற்றிலேயே ஒரு தலைசிறந்த நிகழ்ச்சியாகும். அண்ணாமலை மன்றத்திலுள்ள இந்த நிலையம்தான் இந்தியாவிலேயே முதலாவதாகும். 150 இசைக் கருவிகள் இங்கே சீரான முறையில் வைக்கப்பட்டுள்ளன. எந்த நேரத்திலும் எந்தக் கருவியை வேண்டுமானாலும், எடுத்து வாசித்து அக்கருவியின் நாதவர்ணம், ஸதாயி எல்லை முதலியவற்றை அறிந்துகொள்ளலாம். இந்தியாவிலுள்ள பல அறிவாளிகளும, அயல்நாடுகளிலிருந்து இந்தியாவிற்கு வந்த பல அறிவாளிகளும், இசைக் குழுவினரும் இங்குள்ள இசைக் கருவி நிலையத்தைப் பார்த்துத் தங்களுடைய மகிழ்ச்சியையும், பாராட்டுதலையும் தெரிவித்துள்ளார்கள்.

இன்று "தேவாலயங்கள் அரிய இசைக் கருவூலம்" என்னும் பொருளைப்பற்றிக் கூற விரும்புகிறேன் ஒரு நாட்டின் சங்கீதத்தை இலக்கணம், இலக்கியம், இசைக்கருவிகள் எனும் மூன்று பிரிவுகளின் கீழ்ப் படிக்கலாம். தேவாலயங்களில் இம் மூவகை இசைப் பிரிவுகளையும் நன்றாக வளர்த்துள்ளார்கள்.

உயரிய நோக்கத்துடனும், கலாதீர்க்க தரிசனத்துடனும், நம் முன்னோர்கள் ஆலயங்களைக் கட்டியுள்ளார்கள். இதனுடைய உண்மையை அறியவேண்டுமானால், ஒருவர் தென்னிந்தியாவிலுள்ள எல்லாத் திருக்கோயில்களையும் பார்க்கவேண்டும்; இரயில்வே ஸ்டேஷன்களுக்குப் பல மைல்களுக்கு அப்பாலுள்ள தேவாலயங்களையும், பஸ் வழியிலிருந்து பல மைல்களுக்கு அப்பா

---

* 25—12—56 அன்று தமிழிசைச் சங்கம் பதினான்காம் விழாப் பண்ஆராய்ச்சி ஏழாம் கூட்டத்தில் ஆற்றிய தலைமையுரை.

னுள்ள தேவாலயங்களையும் பார்க்கவேண்டும். அந்த ஆலயங்களுடைய அமைப்பு, சிற்ப வேலைகள், கல்வெட்டுக்கள், உற்சவ சம்பந்தமான இசை, நடனம் முதலியவைகளையும் கவனிக்க வேண்டும்.

புதுக்கோட்டையைச் சேர்ந்த குடுமியாமலையிலுள்ள கல்வெட்டிலிருந்து, 1,200 ஆண்டுகளுக்கு முன்னமேயே இசையை எழுதுவதற்கு ஒருமுறை இருந்ததெனத் தெரிகிறது. ஸ்வரங்களின் விக்ருதி பேதங்களை ஸ்வர எழுத்தின் உயிர் மாற்றங்களைக் கொண்டு காண்பிக்கப்பட்டன என்பது தெளிவாகிறது. சிதம்பரம், விருத்தாசலம் கோயில்களின் கோபுரங்களிலும், தஞ்சை பிரகதீஸ்வரர் கோவில் கோபுரத்திலும தாண்டவச் சிலைகள் செதுக்கப்பட்டுள்ளன. சிதம்பரம் கோவிலில் ஒவ்வொரு சிலையின்கீழும், அந்தத் தாண்டவத்தை விளக்கும் ஸ்லோகம் பொறிக்கப்பட்டிருக்கிறது. த்விகுணத்வம், குரல் திரிபு முதலிய இசைத் தத்துவங்களைத் தாடபத்ரி, சுசீந்திரம், திருநெல்வேலி முதலிய ஊர்களிலுள்ள கோவில்களிலிருக்கும் இசைக் கம்பங்களின் மூலம் விளக்கியிருக்கிறார்கள். திண்டுக்கல்லுக்கு அருகிலுள்ள தாடிக்கொம்பு என்னும் க்ஷேத்திரத்தில் உதாத்த அநுதாத்த, ஸ்வரித ஸ்வரங்களைக் கொடுக்கும் இசைத் தூண்கள் உள. வேத கோஷ்டியினர் வேதங்களைக் கானம் செய்யுங் காலத்தில், இந்த இசைக் கம்பங்களைப் பக்க மேளமாகப் பயன் படுத்துகிறார்கள். அண்மையில் சென்னைக்கு வந்திருந்த திபெத்தின் லாமாக்கள் பாடிய கடவுள் வாழ்த்தும் இந்த உதாத்த, அநுதாத்த, ஸ்வரித ஸ்வரங்களையே தழுவியிருந்தது. நான்குனேரிக்கு அருகிலுள்ள சண்பகராம நல்லூரில் உள்ள கோவிலில் ஒரு கல் தூணில் இசைக் குழாய் ஒன்று குடையப்பட்டிருக்கிறது. அந்தக் குழாயில் ஒரு பக்கத்திலிருந்து ஊதினால் சங்கு நாதமும், மற்றொரு பக்கத்திலிருந்து ஊதினால் எக்காள நாதமும் கேட்கிறது. தினசரி பூசை வேளைகளில் சங்கு, எக்காளம் என்னும் கருவிகளை வாசிக்காமல், இந்த இசைத் தூணிலுள்ள குழாயை ஊதியே இவ்விரண்டு கருவிகளின் நாதங்களையும் எழுப்புகிறார்கள். திருமெய்யம் க்ஷேத்திரத்தில் யாழின் சிற்பம் உள்ளது. நாகார்ச்சுனகொண்டா, சாஞ்சி, உதயகிரி ஆகிய ஊர்களிலும் யாழின் சிற்பத்தைக் காணலாம்.

மைசூரைச் சேர்ந்த திருமகூடலு என்னும் ஊரிலுள்ள அகஸ்தீஸ்வரர் ஆலயத்தில் பிடிலைப்போன்ற வில்லினால் வாசிக்கப்படும் வாத்தியம் ஒன்று உள்ளது. இந்தச் சிற்பம் பத்தாம் நூற்றாண்டில் ஏற்பட்டது. பிடில் வாத்தியம் ஐரோப்பாவில் தோன்றுவதற்கு முன்னமேயே, வில் வாத்தியம் நம் நாட்டில்

இருந்ததென்பதற்கு இந்தச் சிற்பமே நல்ல சான்றாகும். கெத்து வாத்தியத்தை வாசிக்கும் சிற்பம் ஒன்றை, மைசூரைச் சேர்ந்த ஹளேயலூரிலுள்ள கோவிலில் காணலாம். வீணையின் உற்பத்தியையும் வளர்ச்சியையும் கோயில்களிலுள்ள சிற்பங்களினின்றும் நன்றாக உணரலாம். மைசூரைச் சேர்ந்த ஹளேபேட் என்னும் ஊரிலுள்ள கோவில் சிற்பத்தில், வீணையில் தண்டின் இடது பாதிக்கு மட்டும் மெட்டுக்கள் உள்ளதைப் பார்க்கலாம். திருப்பட்டீச்சுரத்திலுள்ள சிற்பத்தில்தான் முதன் முதலில் கற்காலத்திய வீணையின் மெட்டுக்களின் அமைப்பையும, வாசிக்கும் நிலையையும் காணலாம். தேவாலயங்களில் உள்ள மூர்த்திகளைப் பற்றிய பாடல்களைப் பல இசைப்புலவர்கள் பாடியுள்ளார்கள் பக்தி சம்பந்தமான பாட்டுக்களைத்தான் தேவாலயங்களில் போற்றினார்கள் என்பது தவறு. கலை சம்பந்தமான உயரிய சங்கீதத்திற்கும் ஆதரவு அளித்திருக்கிறார்கள். ஆண்டு விழாக் காலங்களில், சிறந்த நாகஸ்வர வித்வான்களைக் கொண்டு கச்சேரிகள் நிகழ்த்தியிருக்கிறார்கள். திருவிழாக் காலங்களில் நடத்தப்பட்ட இசை நாடகங்களிலும், நிருத்திய நாடகங்களிலும், பண்டிதர்கள், பாமரர்கள் எல்லோரும் விரும்பி அனுபவிக்கக்கூடிய இசைப் பாட்டுக்கள் இருந்தன. வெற்றியுடன் திரும்பிவந்த ஒரு பெரும்படையை எப்படி ஆடல் பாடல்களுடன் வரவேற்றார்கள் என்பதைத் திருக்கோடிக்காவல் கோவிலிலுள்ள கோபுரச் சிற்பங்களில் மிகத் தெளிவாகக் காணலாம். யானை, குதிரை, தேர், காலாள் என்னும் நால்வகைப் படைவகுப்புக்களை இந்தச் சிற்பங்கள் தெளிவாக்குகின்றன.

திருக்குற்றாலக் குறவஞ்சி, கும்பேசர் குறவஞ்சி, விராலிமலைக் குறவஞ்சி, அழகர் குறவஞ்சி போன்ற குறவஞ்சி நாடகங்களில இசையும் சாகித்யமும் நன்றாக அமைந்துள்ளன.

தஞ்சை மாவட்டத்திலுள்ள சப்தவிடங்க க்ஷேத்திரங்களில் நடைபெறும் பல்லக்கு நடனங்களில் அரிய சொற்கட்டுக்களையும், ஜதிக் கோவைகளையும் கேட்கலாம்.

தென்காசி, திருக்குற்றாலம் க்ஷேத்திரங்களில் திருவாதிரைத் திருவிழாவன்று "தாண்டவ தீபாராதனை" என்னும் ஒரு அரிய நிகழ்ச்சி நடைபெறுகிறது. குருக்கள், ஏற்றிய விளக்கைக் கையிலேந்திக் கொண்டு, நாகஸ்வரத்தில் வாசிக்கும் இசைக்குத் தகுந்தாற்போல் நடனம் புரிகிறார். அந்த இசை ஆனந்தபைரவி இராகத்தில் அமைந்துள்ளது. அந்த இசையின் முற்பகுதி ஆதி தாளத்திலும், பிற்பகுதி சாபு தாளத்திலும் உள்ளது. நாகஸ்வரத்துடன் மிருதங்கம், குச்சியை உபயோகிக்காமல்

தவில், சங்கு, ஒத்து, தாளம் ஆகியவை வாசிக்கப்படுகின்றன. தாண்டவ தீபாராதனையைப் பார்க்குங்கால் நமக்கு அரியதோர் உணர்ச்சி ஏற்படுகிறது.

பஞ்சமுக வாத்தியம், தந்த நாகஸ்வரம், கல் நாகஸ்வரம் போன்ற அரிய வாத்தியங்களைத் தேவாலயங்களில் உபயோகிக் கிறார்கள். திருவனந்தபுரத்திலுள்ள அனந்தபத்மநாப சுவாமி கோவிலில் தங்க மணிகள் உள. அவைகளின் நாதம், திருஞான சம்பந்தருக்கு ஈசனருளிய பொற்றாளத்தின் நாத வர்ணத்தை நினைவூட்டுகிறது. சிதம்பரத்தில் சிவகாம சுந்தரி அம்மன் தேவாலயத்தின் பிரகாரத்தில் உள்ள நாட்டியச் சிற்பங்கள், பண்டைக் காலத்தில் ஆடுபவர்கள் என்ன உடையை அணிந் தார்கள், எவ்வாறு அணிந்தார்கள், என்னென்ன ஆபரணங்கள் பூண்டார்கள், எவ்வாறு கைகயலங்காரங்களைச் செய்து கொண் டார்கள் என்பன போன்ற விடயங்களைத் தெளிவாக்குகின்றன.

இந்திய இசை வரலாற்றில் வெவ்வேறு காலங்களில் தோன்றின ஆடல் பாடல் வகைகளைத் தேவாலயங்களே காப் பாற்றி வந்தன. பண்டைக் காலத்துக் காதிக கானத்தை சிரங் கத்தில் நடைபெறும் அரையர் நடன கானத்திலும், திருப்பதி யில் விடியற்காலையில் பாடப்படும் சுப்ர பாதத்திலும் கேட்கலாம்

தேவாலய சங்கீதத்திலும் நடனத்திலும் எல்லோரும் ஆர்வம் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன். தேவாலயங்களில நடைபெற்ற இசை நாடகங்களையும் நிருத்திய நாடகங்களையும் மீண்டும் நடத்துவதற்கு வேண்டிய முயற்சிகளை எடுத்துக் கொள்ளுமாறும் கேட்டுக் கொள்ளுகிறேன். சங்கீதமும், நடன மும் அனுட்டான கலைகளாகும். அவற்றைக் காப்பாற்றுவதற்கு இசையிலும் நடனத்திலும் ஆர்வமுள்ள பலபேர்கள் முன்வர வேண்டும.

தமிழ் இசைச் சங்கம் இசைவளர்ச்சிக்குப் பல புதிய துறை களில் பெரிய தொண்டாற்றி வருகின்றது. இன்று நடைபெற விருக்கும் சர்வ வாத்திய நிகழ்ச்சி இதற்கு ஒரு சான்றாகும். இச் சங்கம் எதிர்காலத்திலும இசைவளர்ச்சிக்கு அரிய பல தொண்டுகள் செய்து ஓங்கவேண்டும் என இறைவனை வேண்டு கிறேன்.

# திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கட்குப்
# பட்டமளிப்புப் பாராட்டுவிழா

செந்தமிழ்த் திருநாட்டுக்கும் மொழிக்கும் தொண்டு செய்து போதரும் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களைப் பாராட்டத் திருச்சிராப்பள்ளித் தமிழ்ச்சங்கச் சார்பில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் உயர்திரு. தி. மூ. நாராயணசாமி பிள்ளை எம். ஏ., பி எல்; எம், எல். சி. அவர்கள் தலைமையின் கீழ் நிகழும் திருவள்ளுவர் யாண்டு ௧௯௮௭ மார்கழித் திங்கள் ௨-(16—12—56) ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை காலை 9-மணிக்குத் திருச்சிராப்பள்ளித் தேவர் மன்றத்தில் கூட்டம் துவங்கியது.

அஃதுகாலை, குருவியன் குளம் சேர்வை பூங்காவிலிருந்து திரு. கி.ஆ.பெ.வி. அவர்களை ஊர்வலமாகத் தேவர் மன்றத்துக்கு அழைத்துவரப் பெற்றது. அதன்பின் காலை 9-30 மணியளவில் இறைவணக்கத்துக்குப்பின் தலைவர், முன்னுரையாக விசுவநாதம் அவர்களின் தொண்டினைப் பாராட்டிப் பேசினார்கள். பின்னர் விசுவநாதம் அவர்கட்கு 'முத்தமிழ்க் காவலர்' என்னும் பட்டம் சங்கச்சார்பில் வழங்கப்பெற்றது அப்பால் அப் பட்டம் பொறிக்கப்பெற்ற பொற்பதக்கத்தை பொன்ஞாணுடன் நாவலர், கணக்காயர், டாக்டர், உயர்திரு. ச. சோமசுந்தர பாரதியாரவர்கள் தம் திருக்கைகளால் அணிவித்தார்கள். பின்னர் அறிஞர்கள் பலர் தம் பாராட்டுரைகளை நிகழ்த்தித் தம் அன்பை மலர் மாலையாக்கி விழாச் சிறப்பினர்க்கு அணிமாலை யாக்கினார்கள். திரு. விசுவநாதம் அவர்கள் தமக்குச் சிறப்புச் செய்தமைக்கு மகிழ்ந்து, சங்கத்தார்க்கும், தலைவர் முதலிய யாவர்க்கும் தம் அன்புரையைக் கூறினார்கள். தமிழக வாழ்த்துடன் விழா இனிது நிகழ்ந்து முடிந்தது.

நம் தமிழகத்தில் பாராட்டுக்குரியர் ஒரு சிலரே. அவர்களுள் விரல்விட்டு எண்ணத்தக்கவர்களில் ஒருவராக நிரலில் நிற்கத்தக்கார், திரு. விசுவநாதம் அவர்கள். மனம் வேறு சொல் வேறு ஆகத் திரிதரும் இவ்வுலகத்து உண்மையோடு தமிழுக்கென வாழ்ந்து அரும்பணி புரியும் அவர்கட்கு முத்தமிழ்க் காவலர் என்னும் பட்டஞ்சூட்டி மகிழும் குழுவில்யாமும் இணைந்து மகிழ்கின்றோம். பட்டம் பெற்ற திரு. விசுவநாதம் அவர்கட்கு எம் பாராட்டையும் வழங்கி அவர்கள் பழிதீர் செல்வமொடு வழி வழி சிறந்து வாழிய நன்னீர்க் காவிரி மணலினும் பலவே என வாழ்த்துகின்றோம்.

## திருவாவடுதுறை நாதசுர வித்துவான்

# டி. என். இராசரத்தினம் பிள்ளை மறைவு

தமிழ் நாட்டின் தலைசிறந்த நாதசுரவித்துவானாக இலங்கிய திரு. டி. என். இராசரத்தினம் பிள்ளையவர்கள் சென்னை அடையாறு காந்தி நகர் 3-ஆவது மெயின் ரோடிலுள்ள தம் இருக்கையிடத்தில் 12-12-56 ஆம் நாள் காலையில் இதயநோய் காரணமாக இறையடிப் பேறுற்றார்கள். அவரின் பெரும் பிரிவு குறித்துப் பெரிதும் வருந்துகிறோம்

இவருக்கு அகவை 59. விளம்பி ஆண்டு ஆவணித் திங்களில் திருமருகலில் பிறந்தார். இவரின் தந்தையார் பெயர் குப்புசாமி பிள்ளை; இவரும் சிறந்த நாதசுரவித்துவான். இராசரத்தினம் பிள்ளை சிறந்த இசைப்புலவர் மரபில் தோன்றியவர்; காலஞ்சென்ற திருமருகல், திரு. நடேசப் பிள்ளையின் மருகர். அவர் தங்கை மகனே இவர்; இவர் திருவாவடுதுறையில் வளர்ந்தோராவர். இவர் முதல் முதல் பயிற்சி செய்தது வாய்ப்பாட்டு; திருக்கோடிக் காவல் பிடிலில் சிறந்த மேதையான திரு. கிருஷ்ணையரிடம் தம் 15-ஆவது அகவையில் வாய்ப்பாட்டுப் பயிற்சி பெற்றார். அப்பால் திருவாவடுதுறை மார்க்கண்டம் பிள்ளை என்னும் நாதசுர வித்துவானிடம் நாதசுரப் பயிற்சி செய்யப் புகுந்தார் பின்பு அதில் நற்பயிற்சி கொண்டு சிறந்தவரானார். திருவாவடுதுறை ஆதீனத் தலைவர், அம்பலவாண பண்டார சன்னிதியவர்கட்குத் திருமருகல் நடேசப் பிள்ளையிடம் அளவற்ற அன்புண்டு. அதனால், திரு இராசரத்தினம் பிள்ளைக்கு ஆதீனத்தின் ஆதரவு கிட்டிற்று; அவ் ஆதீன நாதசுரவித்துவானாக ஏற்றுக்கொள்ளப் பெற்றார்: அதுமுதல் திருவாவடுதுறை ஆதீனவித்துவானாகவே இருந்துவந்தார்.

இவர் நாதசுரத்தில் தோடி இராகம் வாசிப்பதில் தமக்கு ஒப்பாரு மிக்காருமின்றி விளங்கினார். இவர் வாசிக்குங்கால், இவர்தம் நாதசுரக் கருவியின் இனிய தனியொலி எத்தகைய வன்னெஞ்சரையும் உருக்கி மெய்ம்மறக்கச் செய்யும் பெற்றியுற்றதென்றால் அது மிகையாகாது.

நம்நாடு 1947 ஆகஸ்டுத் திங்களில் விடுதலை பெற்றுத் தில்லியில் நாடு ஒப்படைப்பு விழா நிகழ்ந்தகாலை, நாட்டை ஒப்புக்கொண்ட அனைத்திந்திய முதலமைச்சர் திரு. சவகாலால் நேருவுக்குத் திருவாவடுதுறை ஆதீனத் தலைவரவர்கள், பொன்னாற் செய்த செங்கோலனுப்பிப் பாராட்டியபோது அப்பாராட்டுக்கு நாதசுரம் வாசிக்கச் சென்று அங்கே தம் இசைப்பெருமையை உணரவைத்தவர் நம் இராசரத்தினம். இத்தகைய பண்பினால் இவருக்கு நாதசுரச சக்கரவர்த்தி யென்றும், இசையுலகசோதி யென்றும் பட்டங்கள் சூட்டி நாட்டுமக்கள் மகிழ்ந்தனர்.

சீரும் சிறப்பும் வாய்ந்த திரு. டி. என். இராசரத்தினம்பிள்ளை அவர்கள் பிரிவு, இசையுலகுக்கும் கலைஞர் கூட்டத்துக்கும் சிறப்பாகத் தமிழ் நாட்டுக்கும் ஈடும் எடுப்புமற்ற பேரிழப்பாகும். என்னே! உலகம்! நெருநல் உளனொருவன் இன்றில்லையென்னும் பெருமையுடையதாதலால், நம் இராசரத்தினம் பிள்ளையையும் இழந்து நின்றது.

அவர்தம் பிரிவுக்கு வருந்திப் புன்கணுற்றலமரும் அவர்தம் குடும்பத்தார்க்கு எம் பரிவுரையை ஆழ்ந்த வருத்தத்துடன் தெரிவித்து அவர்கள் ஆறுதல்பெற விழைகின்றோம். அவர்தம் நல்லுயிர் இறையடியின்பில் திளைத் தின்புறுவதாக.

# அருட்டிரு. இராமானந்த அடிகள் இறையடிப்பேறு

. சு. அ. இராமசாமிப் புலவர்]

**தோற்றம்**

சிரவணபுரத்தில் கௌமாரமடாலயத்தை நிறுவியுள்ள இராமானந்த அடிகள் என்னும் இப் பெரியார், கொங்கு நாட்டில் உள்ள கோயமுத்தூரையடுத்த சிரவணம்பட்டி என்னும் சிரவண புரத்தில் ஆங்கிலம் 1858—க்குச் சரியான காளயுத்தி ஆண்டு புரட்டாசித் திங்கள் இருபத்தாறும் நாள் தோன்றியருளினார். தந்தையார் பெயர் வேலப்பக் கவுண்டர். தாயார் பெயர் ஆண்டாளம்மாள். இவர்களுடைய குடும்பம் பெருஞ் செல்வமும் குடிவளமும் உடையது.

**கல்வி**

இளம்பருவத்திலேயே பள்ளிக்கனுப்பப்பட்டுக் வேண்டிய நூல்களைக் கற்றார். இவரிடம் இயற்கையிலேயே நல்லியல்புகள் பல அமைந்திருந்தன கடவுள்வழிபாடு பெரியோர்நேயம் நூலாராய்ச்சி முதலியவைகளிற் சிறந்து விளங்கினார். பழநியம்பதியில் மேவிய தண்டபாணிப் பெருமானிடத்தில் அளவற்ற அன்புடையவர். அப்பெருமானே குரு வடிவங்கொண்டு வந்து தம்மை ஆட்கொண்டருள வேண்டு மென்று பலகாலும் வேண்டிப் பணிந்தனர். இவ்வாறு வேண்டிக் கொண்டு அடிக்கடி பழநிக்குச் சென்று வருதலை மேற்கொண் டிருந்தார். ஒருமுறை சென்று ஆட்கொண்டருள வேண்டு மென்று வேண்டிநின்றபோது, "மறுமுறை வருங்கால் பழநி எண்ணம் கைகூடும்" என்று இவருள்ளம் உணருமாறு பழநி யாண்டவர் உணர்த்தியருளினர்.

**அருள் பெறல்**

அந் நாளில் திருநெல்வேலியில் தோன்றி முருகன் திருவருள் பெற்று விளங்கியிருந்த முருகதாச சுவாமிகள் திருப்புகழ்ச் சுவாமிகள் என்ற தண்டபாணியடிகளின் பெருமையைப் பலரா லும கேள்வியுற்றனர். அப்பெரியார் இயற்றியருளிய நூல்கள் பலவற்றையும் ஓதினர். அவரையே ஞானாசிரியராக அடைய வேண்டுமென்று உள்ளத்தில் உறுதிகொண்டனர். மறுமுறை பழநிக்குச் சென்றார். அக்காலைத் தண்டபாணியடிகள் அங்கு எழுந்தருளியிருந்தனர். அவரையடைந்து வணங்கிப் போற்றித் தம்மை ஆட்கொண்டருளவேண்டும் என்று குறையிரந்து

நின்றனர். தண்டபாணியடிகள் இவருக்கு ஆறெழுத்து அருமறையை உரைத்தருளினர். அதுமுதல் நாளும் தண்டபாணியடிகளையே தண்டபாணிக்கடவுளாகக்கொண்டு வழிபாடியற்றலை மேற்கொண்டார். புதிய பாடல்களை இயற்றுந் திறமும் இவருக்குண்டாயிற்று. முருகப்பெருமான்மீது புகழ்ப்பாக்கள் பலவற்றை எளிமையாகவும் இனிமையாகவும் பாடலானர்.

திருமணம்

இந்நிலையில் உலகியல் முறைப்படி இவருக்குத் திருமணம் நடைபெற்றது. சிலகாலம் இல்லறத்தில் இருந்தார். இவருடைய உள்ளம் துறவு நிலையையே நாடியது.

துறவறம்

"பற்றிலையாயின் அவையினில் இருப்பேன்?" என்று பெரியோர்கள் கூறியுள்ளனர். இப்பெரியாருக்கு இல்லறப் பற்று இல்லாமற்போகவே தவநெறிக்கேற்ற துறவுக்கோலம் பூண்டார். தனியிடம் ஒன்றை அமைத்து, அதில் ஆனைமுகக் கடவுள் தண்டபாணி ஆகிய கடவுளரின் திருவுருவங்களை நிறுவி வழிபாடியற்றத் தொடங்கினர். தோத்திர நூல் அறநூல் முதலியவைகளையுஞ் செய்யலானர்.

திருவுருத் தொண்டு

குருநாதரான தண்டபாணியடிகள் நடுநாட்டிலே விழுப்புரத்திற்கு அண்மையிலே உள்ள திருவாமாத்தூர் என்னுஞ் சிவப் பதியிலே முருகன் திருவடிநீழலை யடைந்தனர். அவருக்குத் திருக்கோயில் முதலியன அமைத்துப் பூசை முதலியவைகட்கும் தகுந்த ஏற்பாடுகளைச் செய்தார் ஞானசிரியர் இயற்றியருளிய நூல்கள் பலவற்றை அச்சிற்பதித்து எங்கும் பரவுமாறு செய்தார். குருவின் புதல்வரான செந்தில்நாயக அடிகளைக் கொண்டும் தம்முடைய மாணவரான கந்தசாமி அடிகளைக் கொண்டும் அந்நூல்களைப் பேரவைகளில் விளக்கச்செய்து பலரை நல்வழிப்படுத்தினர். சற்குருநாதர்மீது அடைக்கலப் பதிகம், சற்குரு பதிகம் என்பவைகளைப் பாடித் துதித்தார். கௌமார சமயத்தை விளக்கும் அவை ஒன்றை ஏற்படுத்தி வெள்ளிக்கிழமைகள் தோறும் சொற்பொழிவுகள் முதலியன நடைபெறச் செய்தார். இப் பெரியாரிடம் அருளுரை பெற்றுச் சிறப்படைந்த அன்பர்கள் பலராவர்.

நூல்கள்

இப் பெரியாரால் இயற்றப்பெற்ற நூல்களுள் ஆத்துமாராம சரித்திரம் என்னும் உரைநடை நூலும் ஒன்று. இஃது ஒரு

வாடாறு போல விளங்கித் தத்துவக்கருத்தை விளக்கும் தனிச் சிறப்புடையது. மற்றும் இப் பெரியாரால்,

1. தியான செபம்  4. உந்தி
2. திருப்புகழ்  5. குறள்
3. தயாநிதிக கண்ணி  6. சண்முகமாலை
7. அந்தாதி, கீர்த்தனை

முதலிய பல அரிய நூல்கள் இயற்றப்பெற்றுள்ளன. இப் பெரியார் இயற்றிய நூலின் பாடல்களிற் சிலவற்றைக் காண்க

### அடைக்கலப்பத்து

*பூவேறிய மணமே! உயர் பொன்னேறிய மாற்றே!*
*நாவேறிய சுவையே!எல்லா நலமேவிய பொருளே!*
*சேவேறிய முதலே! பசுஞ் சிகியேறிய தேவே!*
*கோவே! எனை ஆள்வாய்என்றன் குருவே! அடைக் கலமே.*

முருகன் தமக்கு அருள்செய்த காட்சியை விளக்கிக் கூறிய வெண்பா.

*குமரன் குழந்தை உருவாய்க் குலவி*
*அமரும் காண்டற் கரிதாய்த்—திமிரமறச*
*செய்த திருநடமென் சிந்தை அறியும் அன்றிப்*
*பொய்யர் அறியாப் புகழ்.*

**திருவருட் பேறு**

*'அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்*
*இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே'*

என்னும் முதுமொழிப்படி உலக நலங்கருதி அன்புப்பணியும் அருட்பணியும் புரிந்து வந்த அடிகள் தமது நூறுவது ஆண்டில் யாதொரு நோயுமின்றிக் கண்டோர் வியப்புறுமாறு திருவள்ளுவர் யாண்டு கக௯அஎ, மார்கழித் திங்கள் எ (21-12-1956)-ஆம் நாள் வெள்ளிக்கிழமை ஆயிலிய நன்னாள் மாலை ரு மணி அளவில் இறைவன் திருவடிப் பேறெய்தினார்கள். அவர்களின் அருளுருவத் திருமேனியை அடிகளார் முன்பே மொழிந்த ஆணையின் வண்ணம் அவர்களது திருவுருவப் படம் வைத்து வழிபட்டு வந்த கோயிலின் கீழாக முன்னரே அமைக்கப்பட்ட குகைக்கோயிலில் அருட்பெருந் திரு கந்தசாமி சமாதியின் பக்கலில் பெருமக்கள் பல்லாயிரர் சூழ்ந்து நின்று வணங்கி வழிபாடாற்ற ஒரு பெட்டியில் அடக்கி அடக்கஞ்செய்யப்பட்டது.

அருட்பெருந்திரு அடிகளார் பொன்னுடல் நீத்து அருளுருவப் புகழுடல் பெற்று இறையடிப் பேறுற்றமை குறித்துப் பெரிதும் கவல்கின்றோம்; அவர்கள்பிறவா இறவாப் பேரின்ப வாழ்வு பெறுகவென இறைவனை வேண்டி வாழ்த்துகின்றோம்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) வடக்கெல்லைத் தூதுவர் படஸ்கர் வருகை

தமிழ் நாட்டுக்கும் ஆந்திர நாட்டுக்கும் இடையே உண்டாகியுள்ள எல்லைச் சிக்கல்களைத் தீர்ப்பதற்கு மைய அரசினரால் அனுப்பப்பட்ட நீதிபதி படஸ்கர் சென்னைக்கு வந்து சேர்ந்தனர். அவரிடம் நம்நாட்டு அமைச்சர்கள் அதுபற்றிய அறிக்கையைக் கொடுத்துள்ளனர். தமிழரசுக் கழகத் தலைவர் திரு. ம. பொ. சி.யும் ஷை குழுவினரும் கண்டு படஸ்கருடன் உரையாடி மனுவொன்றுங் கொடுத்துள்ளனர். அதில் வடக்கெல்லையில் தமிழ் நாட்டுடன் சேரவேண்டிய தாலுகாக்களைச் சேர்த்துத் தமிழகத்தோடு இணைக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டுள்ளனர். அதற்கு அவர் மறுமொழி கூறுகையில் தமிழ்நாடு ஆந்திரநாட்டு எல்லைச் சிக்கல்களை விரைவில் நலம்பெறு வழியில் தீர்க்கப் பெருமுயற்சி செய்வதாகக் கூறினர்.

**குறிப்பு:** படஸ்கர் நம் தமிழ் நாட்டுடன் சேரவேண்டிய பகுதிகளை மக்கள் கணக்கு, பூகோள அமைப்பு, மொழிபேசுவோர் எண்ணிக்கைகளைக் கொண்டு நடுநின்று ஆராய்ந்து தீர்ப்புக் கூறுவாரென எண்ணுகின்றோம்.

## (உ) திருவாசக வெளியீட்டு விழா

அண்மையில் மர்ரே கம்பெனியார் வெளியிட்டுள்ள திருவாசக வெளியீட்டு விழா கடந்த 15—12—5\-ஆம் நாள் சென்னை மயிலைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில், டாக்டர். திரு. சர். சி. பி. இராமசாமி ஐயரவர்கள் தலைமையின் கீழ் நடைபெற்றது. அப்போது அவர், 'வேதாந்தத்தின் சிறப்பான அம்சம் சைவ சித்தாந்தம்' என்றும், 'அதன் உட்பொருளைத் திருவாசகப் பாடல்கள் இனிது விளக்குகின்றன' என்றும் கூறினர். நீதிபதி சோமசுந்தரம் அவர்கள் அவ் விழாவில் கலந்துகொண்டு பேசுகையில், 'துன்பங்களை நீக்கி ஆனந்தத்தில் ஆழ்த்தும் தேன் திருவாசகம்' என்றும், 'இத்தகைய மணிவாசகத்தைச் சந்தி பிரித்துப் பாமரருக்கும் புரியும் வகையில் மர்ரே கம்பெனியார் இப் புத்தகத்தை வெளியிட்டிருப்பது பெரிதும் போற்றத் தக்க' தென்றும் கூறினர். பின்னர்த் தலைவர் முடிவுரைக்குப்பின் விழா முடிவுற்றது.

**குறிப்பு:** மர்ரே கம்பெனியார் திருவாசகம், நாலாயிரப் பிரபந்தம் போன்ற நூல்களை வெளியிட முன்வந்தமைக்குப் பாராட்டுகின்றோம். ஆனால் பாட்டு என்பது சீர்களும் தளைகளும் ஒன்றுபட்டிருப்பதேயாகும். ஷை கம்பெனியார் சந்திகளைச் சந்து சந்தாகப் பிரித்துச் சந்திக்கு விட்டிருப்பது வருந்துதற்குரிய தொன்றாகும். சந்தி பிரித்தலென்பது பாநயங் குன்றாமல், பாடினால் தட்டுத்தடங்கலின்றியிருப்பப் பிரிப்பதே நன்றாகும். மனம்போன போக்கில் ஒவ்வோரெழுத்தாகப் பிரிக்க முற்பட்டால் பாடலுமாகாது; வசனமும் ஆகாது; திரிசங்கு சுவர்க்கமாக முடியும். இவ்வெளியீட்டார் நன்று செய்வதுபோற் காட்டி மறைமுகமாகத் தமிழுக்குக் கேடு செய்வதாகவே தோன்றுகின்றது. இவ்வாறு பிரித்தால் அதைப் பாட்டென்பதா உரையென்பதா? உலகமக்கள் இதுவே நன்றென்னலாம், எதைத்தான் நன்றென்று

சொல்லவில்லை. அதற்காகக் கண்மூடித்தனமாகப் பிரித்து அருள்நூல் களைக் கெடுப்பதும், அதற்குப் பாராட்டெடுப்பதும் மிகமிக அருவருக்கத் தக்க தொன்றாகும். இத்தகைய செய்தக்க தல்லாத வழிகளில் செல்லாது நல்ல வழியில் இனியேனும் பணியாற்றுவார்களென நம்புகின்றோம்.

(ட) திரு. ச. இராசகோபாலாச்சாரியார் அறவுரை

கடந்த 25—12—56 ஆம் நாள் ஆக்ரா பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழா நிகழ்ந்தது. அதில் திரு. ச இராசகோபாலாச்சாரியார் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம் வருமாறு —

விஞ்ஞானமும் குடியிருப்பும் விரிந்து பரந்திருக்கும் மேற்கில் மனிதர்கள் உலக இன்பங்களினால் முற்றிலும் கவரப்பட்டிருக்கிறார்கள் இதற்கெதிராகக் கார்லைல் தமது குரலையெழுப்பினார்.

நாம் இப்போது கடவுளை அடியோடு மறந்து விட்டோம். இதைத்தான் கார்லைலும் சொன்னார். குடியிருப்பு ஆட்சிகள் இப்போது மறைந்து ஒழிந்துவிட்டன. விஞ்ஞானம் எங்கும் மலிந்துகாணப்படுகிறது. மேற்கில் புதிய அறிவும் கலையும் எங்கும் உதயமாகிக் கொண்டிருக்கின்றன. ஆனால் கீழை நாடுகளில் கடவுளை மறந்ததனால் அரசாங்கங்களும் சட்டங்களும் அவதியுறுகின்றன....... ..எனவே, பள்ளிக்கூடப் பாடத்திட்டத்தில் மதபோதனையும் சேர்க்கப்பட [illegible]ும் என நான் விரும்புகிறேன். பிரிட்டனிலுள்ள குழந்தைகளுக்கு மதபோதனை ஒருவாறு கொடுக்கப்படுகிறது. எனவே, நம்முடைய நாட்டு மக்களின் ஒழுக்கம் கீழ்த்தரமான நிலையை அடையாமலிருக்க வேண்டுமானால் நாம் நம் பிள்ளைகளுக்காக அமைத்து நடத்தப்படுகிற பள்ளிகளிலெல்லாம் மதபோதனை செய்யப்படவேண்டும் என்பதாம்.

# மதிப்புரை

(க) இலங்கையில் இன்பத்தமிழ்

[இதன் ஆசிரியர் திரு. க. பொ. இரத்தினம் அவர்கள் ஆவர். (செந்தமிழ்க் கலைமணி, வித்வான், பண்டிதர், பி. ஏ ஆனர்சு (இலண்டன்), எம். ஏ., பி. ஒ. எல். (சென்னை), தலைவர், தமிழ்மறைக் கழகம். இதன் விலை ரூபா. 1-8-0 பிரசுரம்: கலைவாணி புத்தக நிலையம், கண்டி. விற்பனை உரிமை: பாரி நிலையம், 59. பிராட்வே, சென்னை-1 ]

இந்நூல் இலங்கையில் இன்பத்தமிழ் எவ்வாறு தொன்றுதொட்டுப் புலவர்களால் வளர்ந்ததென்பதும் அந் நாட்டுப் பெருமக்கள் புலவர்களையும் மொழியையும் நூலையும் எவ்வெவ்வாறு போற்றி ஒழுகினர் என்பதையும் செவ்விய எளிய இனிய மொழிகளால் விளக்குகின்றது. அகச்சான்று புறச் சான்றுகளால் பல மேற்கோள்களும், கல்லெழுத்துக்களும், காணப்படுகின்றன. கணகவர் வனப்பினதாயுள்ள வரலாற்று நினைவு ஓவியங்களும், புலவர் பெருமக்களின் ஓவியங்களும் காணப்படுகின்றன. இஃதோர் அரிய வரலாற்று ஆய்வுநூலாகும். இதனைத் தமிழ் நம்புவார் அனைவரும் வாங்கிக் கற்று இன்புறுவாராக.

புலவர் பெருமானின் குடும்ப வாழ்க்கை யுள்ளிட்ட எல்லா நிலைகளை யும் படம் பிடித்துக் காட்டுவது போன்று அமைந்த இந் நூலின்கண் கண்கவர் வனப்பினதாகவும் கருத்தைவிட்டகலாக் கருவூலமாகவும் பல நிழலோவியப் படங்கள் காணப்படுகின்றன. தாளாண்மையின் பேறு பேற்றுச் சான்றிதழ்கள பல நின்று நினைவூட்டி இன்புறுத்தி எழுக இனிய முயற்சியில் என்று ஆக்கமொடு ஊக்குகின்றது.

(உ) சிப்பி ஈன்ற முத்து

[ஆக்கியோர்: திரு. மைக்கல் பிரான்சிஸ், சே. ச. அவர்களாவர். இதன் விலை அணா மூன்று. கிடைக்குமிடம்: திரு. இருதயத்தூதன் காரியாலயம், செயின்ட் மேரீச. தபால் பெட்டி 56, மதுரை.]

இந்நூல் தன் பெயருக்கு ஏற்ற முறையில் சொல்லாலும் பொருளாலும், எளிமை இனிமை திட்பநுட்ப நடைமுறையாலும் முத்தெனவே அமையப் பெற்றுள்ளது. கிறித்தவ மெய்யன்பர்கள் நம் தமிழ்மொழிக்குச் செய்துள்ள அரும்பெருந் தொண்டுகள் அளப்பில. அவற்றுள் முனிவரெனத்தகும் தனிபெருஞ் சான்றோர் 'வீரமாமுனிவ'ராவர். அவர் செய்தளித்த இலக்கண இலக்கியச் செய்யுள் நூல்களும் உரைநடை நூல்களும் எண்ணில. அவற்றுள் தலை சிறந்தது 'தேம்பாவணி'. அந் நூல் கிறித்து பெருமான் திருவரலாற்றைப் பழைய புராண முறைப்படி எல்லாச் சிறப்பும் அமையப் பெருங்காப்பியமாக அமைக்கப் பெற்றது. அது பல ஆயிரக்கணக்கான இனிய சுவைமிக்க பாடல்களைக் கொண்டது.

அதனுள் தலைமணியாகத் திகழும் 'வான் விளங்க' என்னும் திருப்பாட்டுக்கு இந் நூலாசிரியர் தக்கதோர் நலவுரை வரைந்துள்ளார்கள். அஃதெல்லா வகையாலும் தலைசிறந்ததாகும். சொற்பொருள் பொழிப்புரை முதலிய வகைபோலன்றிக் கதை விளக்கம் செய்யுள் பொருள்நயம், கிறித்துவ மறையின் மேற்கோள்கள், ஒழுகலாறுகள் உலகம் இன்புறும் வழிவகைகள் அனைத்தும் செவ்வையாக வரையப்பெற்றுள்ளன. இனிய எளிய நடையமைந்தது. திட்பநுட்பஞ் செறிந்தது. இதன் ஆசிரியப் பெருந்தகையாரை ஊக்கி அந் நூல் முழுமைக்கும் இத்தகைய செவ்வியவுரை வரச் செய்யவேண்டுவது செந்தமிழ் வளர்ச்சியின் முந்துறும் வேட்கையன்பினர் அனைவர்க்கும் கடனாகும்.

இந் நூல் தமிழக அன்பர்களின் விழைவினை அறிந்து விடுக்கும் முற்றூது போன்றது. ஆதலின் கையடக்கமாகிய வடிவத்தில் அமையப் பெற்றது வளர்ச்சியுற்று வருங்கால் அதற்கேற்ற அழகிய வடிவினைப் பெற்றுத் திகழும். தமிழன்பர்கள் அனைவர்களும் இதனை வாங்கிக் கற்று இன்புறுவாராக.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



௨. பல்கலைக்கழகத் துணைவேந்தர் ஏ. இலட்சுமணசாமி முதலியார், இணைவேந்தர் சி. சுப்பிரமணியம், மைசூர் ஆளுநர் செயச்சந்திர வாடியார், குடியரசுத் துணைத்தலைவர் டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன், சென்னை ஆளுநர் ஏ. ஜே. ஜான் முதலியோர் விழாப்பந்தலுக்கு வருதல்.



3. விழாவில் கலந்துகொண்ட வெளிநாட்டுப் பிரதிநிதிகள்.



4. மைசூர் ஆளுநர் தொடக்கவுரை நிகழ்த்துதல்.



5 குடியரசுத் துணைத்தலைவர் பட்டமளிப்பு விழா உரை நிகழ்த்துதல்



6. 'சொல்லின் செல்வர்' திரு. இரா. பி. சேதுப்பிள்ளை அவர்கட்கு டாக்டர் பட்டம் வழங்குதல் (Doctor of Literature).



குடியரசுத் துணைத்தலைவர் [illegible] டாக்டர். இராதாகிருஷ்ணன் அவர்கட்கும், திருவாங்கூர்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் திரு. ஏ. இராமசாமி முதலியார் அவர்கட்கும் டாக்டர் பட்டம் வழங்குதல் (Doctor of Laws).



8. கிரு. டாக்டர். எஸ். குருசாமி முதலியாரவர்கட்கு டாக்டர் பட்டம் வழங்குதல் (Doctor of Science).



9 இந்திய முதல் அமைச்சர் திரு. சவகர்லால் நேரு அவர்கள் துணைவேந்தர் திரு. ஏ. இலட்சுமணசாமி முதலியார் அவர்களுடன் விழாப்பந்தலுக்கு வருதல்.



10. திரு. சவகர்லால் நேரு அவர்கள் பல்கலைக்கழக நூற்றாண்டு விழா நினைவுக் கட்டிடத்திற்குக் கால்கோள் செய்தல்.



11. பல்கலைக்கழக ஆட்சிக்குழு மன்றம் (Senate House).




சிலம்பு ௩௧ — திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௮, தை — பிப்ரவரி, 1957 — பரல் ௬

# சென்னைப் பல்கலைக்கழக

நாடு என்பது, கலைச்செல்வங்களையும் பண்பாடுகளையும் உலகியல் அறங்களையும், ஒருமைப்பாட்டையும் ஒருங்கே தன்னகத்தே வளர்த்துக்கொண்டுவரும் உரிமையுடையதாகும். எங்கு கல்வியும் கேள்வியும் அதனால் வரும் இன்பமும் பெருகி நிற்கின்றதோ அதுவே சிறப்பு மிக்க நன்னாடாகும்.

அந் நாட்டை நன்னாடாக மிளிரவைக்கும் பெருமை வாய்ந்தது கலையை வளர்க்கும் கழகங்களேயாகும் இம் முறையைக் குறிக்கோளாகக் கொண்டு பண்டைக்காலத்து நம தமிழகத்தை ஒருமொழி வைத்தாண்ட முடியுடைவேந்தர் மூவரும் ஆங்காங்கே கலைக்கூடங்கள் நிறுவி அவற்றின் வாயிலாக இயல் இசை கூத்து ஆகிய முவ்வகைக் கலைகளையும், அறிவியல் நுட்பக்கலைகளான ஓவியம் சிற்பம் அளவை உயிரியல் முதலிய பல துறைக் கலைகளையும் வளர்த்து நாடுமுன்னேற்றம் பெற்று நாடா வளத்ததாக ஆக்கினர். பாடல்சால் சிறப்பின் பாண்டி நாட்டுத் தலைநகரான கூடல்மாநகரின்கண் முதல் இடை கடையென முச்சங்கங்கள் கண்டு வளர்ந்தன ; அக்காலத்து உருவான நூல்களில் சிதைந்தன போக இன்று நம் கைக்கு எட்டி நிலவுவன பத்துப்பாட்டு எட்டுத்தொகை பதினெண்கீழ்க்கணக்கு முதலிய இலக்கிய நூல்களும், ஒல்காப்பெருமைத் தொல்காப்பியம், இறையனாரகப் பொருள் போன்ற இலக்கண நூல்களும் பிறவுமாம். இவற்றின் துணைக்கொண்டே நம் தமிழ்நாட்டின் மாண்பும் நாகரிகமும் பண்பும் உயரிய அறமுறைகளும் காணக்கிடக்கின்றன. இஃதொப்பத்

தற்காலப்பெருமைக்கு எடுத்துக்காட்டாக விளங்குவது நம் சென்னைப் பல்கலைக்கழகமாகும். இக் கழகம் நூறாண்டு அகவை யெய்திற்று. நூறாண்டு அகவை யெய்திய பெருமையைப் பாராட்டி நம் தமிழ்நாடு அதற்கு நூற்றாண்டு விழாவைக் கடந்த 28-1-57-ஆம் நாள் முதல் தொடங்கி 31-1-57-ஆம் நாள் வரை கொண்டாடியது.

அவ் விழாத் தொடக்கமுதல் பல்கலைக்கழகம் வானுயர் தோற்றத்தால் மக்களெல்லாரையும் தன்வயப்படுத்திற்று; அக் கழகக் கட்டிடம் கடலை நோக்கிப் புனையப்பெற்ற பந்தர் செடி கொடி மலர்வரிசைகளானும் மின்னொளி விளக்கங்களானும் கண்டவர் தன் பெருமையை உணருமாறு விளக்கிநின்றது.

இப் பல்கலைக்கழகத்தை 1857-ஆம் ஆண்டு, அதுகாலை நம் நாட்டை ஆட்சி செய்த வெள்ளையர்களால் நிறுவப்பெற்று, ஆங் கிலமொழியும், அந் நாகரிகமும், அவ் வரலாறுகளும் கண்டு, அதன் வழியாகத் தம் ஆட்சி நிலைத்துநிற்க வளர்த்து வந்ததே இச் சென்னைப் பல்கலைக்கழகம்; எனினும், அதன் வழியாக நாட்டில் விழிப்புணர்ச்சியும், தன்னுரிமையும், நாட்டுப்பற்றும் மக்கள் பெறுதற்கு வாய்ப்பாக அமைந்தது. இக் கழகத்தில் பயின்ற பலர், இற்றைநாள் உலக மேதைகளாய்—அறிவியலில் சிறந்தோராய்—வரலாற்றுண்மை காணும் மதிமாண்பினராய்—சட்டக் கலைஞராய்—விஞ்ஞானத்துறை வேந்தராய்—நாவன்மை பாவன்மை மிக்காராய்—சொல்லின் செல்வராய்—அருங்கலை அன்பராய் — ஆய்புலவாணராய்—ஓவியக்கலை உரவோராய்—கற்றுத் துறைபோய் நாம்பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம் என, தம் அறிவைப் பங்கிடுசெய்து உலக மன்றத்தில் ஈத்துவக்கு கின்றனர்.

இத்தகைய பெருந்திருவை அளித்தது, இச் சென்னைப் பல்கலைக்கழகமாகும். இது, கடந்த நூறாண்டுகளில் ஆற்றிய பணிகள் அளப்பில்லனவென்பது உலகங்கண்டறிந்த பேருண்மையாகும். இனி, எதிர்காலத்தில் ஆற்றவிருக்கும் பணியே உயர்ந்த பண்புடையதாக வெளிநாட்டாரும் போற்றும் பெருமைத்தாக மிளிரவேண்டுவதாகும்.

நம் தமிழ்நாடு பண்டைக்காலமுதல் அறிவியலினும், அகவுணர்வான காதல் துறையினும், புறவுணர்வான வீரத்துறையினும் தலைசிறந்து விளங்கிய பெருமையுடையதாகும். காதல் வழிநின்று கற்புக்கடம்பூண்ட நங்கை தன் உள்ளக்கிழியில் தன் கணவன் உருவைஎழுதித் தன் காதற் கொழுநனை,

" இம்மை மாறி மறுமை யெய்தினும்
நீயா கியர்எம் கணவனை
யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே."

என்றும்,

" எல்லாம் எவனோ பதடி வைகல்

அரிவை தோளிணைத் துஞ்சிக்
கழிந்த நாளிவண் வாழு நாளே."

என்றும், தன் காதலி சிறப்பைக் காதலனும் விரும்பிப் பேசுகின்றானெனின் அகத்தின் அன்பை எவ்வா றளப்பது ?

வீரத்தைக் குறித்துக் கட்டுரைக்குங்கால், தாய் ஒருத்தி,

" ஈன்றுபுறந் தருதல் என்தலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
வேல்வடித் துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறெறிந் து பெயர்தல் காளைக்குக் கடனே."

என்று பேசுகின்றாள் என்றால், வீரத்தின் மாண்பு எத்தகைத்து! எத்தகைத்து !

இத்தகைய அக அறமும் புற அறமும் மீண்டும் கொண்டு வளர நூற்றாண்டெல்லை கண்ட இப் பல்கலைக் கழகம் பணியாற்றுதல், எதிர்காலத்தில் ஆற்றவேண்டிய அரிய தொண்டாகும். நம் நாடு அடிமைத்தளையில் பிணிப்புண்டு இருந்த காலத்தில் பிறந்த இக் கழகம், இன்று விடுதலைபெற்றுக் குடியரசு நாடாக இலகும் காலத்தில் நூறாண்டு முதுமைபெற்று விளங்குகின்றது. எனவே, தனது முதிர்வுக்கேற்பப் பழங்கால நம் தமிழகப் பண்பில் வேரூன்றிப் புதுமைவழியில் வளர்ந்து நீண்டு உயர்ந்து படர்ந்து செல்லுதல் நாடு முன்னேறி ஏனைய நாடுகட்கு ஒத்த உரிமைப் பண்பும், சில தனக்கென அமைந்த சிறந்த அறப் பண்புகளை வழங்கும் மாண்பும் எய்துதற்கு வழிகோலுவதாகும்.

இற்றைநாளில் நம் தமிழ்மொழியே ஆட்சிமொழியாக அமைந்து அரசு செலுத்த நம் மாநிலச் சட்ட அரங்கு முடிவு செய்துளது. நம் தமிழ்மொழி அரசியல் துறைகளினன்றி ஏனைய எல்லா இடங்களிலும் நடந்துசென்று பயன்தரும் வழியில் முனைதல் வேண்டும். தமிழிற் சிறந்த இலக்கண, இலக்கிய நூல்களைப் புரந்து வருதலோடு தமிழில் மாணவர்கள் எல்லாத் துறை

களினும் பயிலுதற்கு வாய்ப்பாகத் தமிழ்மொழி வாயிலாகவே பாடத்திட்டங்களை அமைத்தல் வேண்டும். தமிழ்வித்துவான் தேர்வுக்கு அமைத்துள்ள பாடங்கள் சில செய்யுட் பகுதிகளும், முற்ற முடிய எந்நாலும் இல்லாதமைத்திருப்பதும், கல்வியறிவு சாலச்சிறப்பதற்கு வழியமையாததோடு ஆழப்படிப்புமின்றி நுனிப்புல் மேயும் யாட்டின் தன்மைக்கு ஒப்பாக இருக்கின்றன. ஆகவே, ஆங்கிலமுறையினமைந்த பாடத்திட்டங்களை மாற்றி, தமிழ்மொழி மரபுக்கொத்தவாறு பாடத்திட்டங்களை ஆக்குதல்வேண்டும். தற்காலம் விஞ்ஞான முறை உலகெங்கும் பரவி வருகின்றது; அவற்றை நம் தமிழ்மொழிக்கண் பெயர்த்துக்கொணர்தல் வேண்டும்; இப்போது சில வெளிவந்திருப்பன நாட்டுக்குப்போதா. மேலும் புதிது புதிதாக வருவனவற்றையெல்லாம் தமிழிற்கொணர்ந்து தருதல்வேண்டும். உலகப் பெருநூலாக அமையத் தக்க திருக்குறட் பெருநூலை உலகமெங்கும் அறிய அவ்வழியில் முயலுதல் வேண்டும்.

ஆகலான், இவ் வழியில் எதிர்காலத்தில் பணியாற்றின் நம் நாடு, எல்லாநாட்டினும் முதன்மையாகத் திகழும். தமிழ்மொழிக்கும் நம் தமிழ்நாட்டுக்கும் சிறப்பாக
யில் பணியாற்றுவதே இப் பல்கலைக்கழகத்தின் நூற்றாண்டு விழாவின் செம்மைசான்ற பேறாக்குரியதாகும்.

நம் இச் சென்னைப் பல்கலைக்கழக நூற்றாண்டு விழாவில் யாமும் கலந்துகொண்டு பெருமகிழ்வு பூக்கின்றோம். எல்லாம் வல்ல இறை சிவபெருமான் திருவருளால் எல்லாக் கலைச்செல்வமும் நிரம்பப்பெற்று நம் தமிழ்மொழிக்கும், நம் தமிழ்நாட்டுக்கும் ஆக்கந்தரும் கலைப்பணியை முன்னின்றாற்றி அடுத்துவரும் ஆண்டுதோறும் மேலும் மேலும் வளம்பெற்றோங்கிச் செழுங்கலைக் கோயிலாக என்றும் நின்று நிலைபெற்றுச் சிறக்கவேண்டி மன மொழி மெய்களால் மகிழ்ந்து வாழ்த்துகின்றோம்.

## சென்னைப் பல்கலைக்கழக

# நூற்றாண்டுவிழா நிகழ்ச்சிகள்

**விழாத் தொடக்கம் :**

நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும் தமிழ் வரம்பு கொண்டு விளங்கும் நம் செந்தமிழ் நாட்டின் வரலாற்றில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தக்க நன்னாள் ஒன்று இத் திருவள்ளுவர் ஆண்டு தைத் திங்கள் கரு (28-1-57) ஆம் நாள் திங்கட்கிழமை போந்தது. அதுவே சென்னை நகரின் பல்கலைக்கழக நூற்றாண்டுவிழாக் கொண்டாடி மகிழ்பூத்த திருநாள்; கலை நாள்; பொன்னாள்; இந்நாள் பன்னாள் மகிழ்ந்து மகிழ்ந்து நினைவு கூரத்தக்க இன்ப நாளாகும்.

அன்று பொருந்துகல்வி பூத்த பெண்டிரும் ஆடவரும் ஆசிரியப்பெருமக்களும் மாணவமணிகளும் அறிஞர்களும் கலைஞர்களும் ஆய்புலவாணரும் பல்வேறு துறைகளிற் பட்டம் பல பெற்றோரும் புகழ்மிக்க பொன்றாத்திருவினரும் பெருஞ் செல்வரும் அருந்திறற் றொழிற்றுறையினரும் ஏனைய பொது மக்களும் பதினையாயிரவர்க்கு மேற்பட்டோர் விழாவிற் கலந்து கொண்டு மகிழ்ச்சியில் திளைத்தனர்.

சென்னைப் பல்கலைக்கழகத்தின் நூற்றாண்டு விழா கடற் கரையை நோக்கியுள்ள பக்கத்தில் செடி கொடி மலர்களால் கண்கவர் மாண்பிற்றாய் அமைக்கப்பெற்றிருந்த பந்தர் நடுவண் காலை 10-30 மணி அளவெல்லையில் விழாத் தொடங்கியது. இக் கழக நூற்றாண்டு விழாக் கொண்டாட்டக் குழுவின தலைவரும் தலைமை நடுவருமான திரு. பி. வி. இராச மன்னாரவர்கள், மைசூர் ஆளுநர் திரு. செயராம் ராச்சிய வாண்டையார் அவர்களை விழா வைத் தொடங்கிவைக்குமாறு கேட்டுக்கொண்டார். அதற் கிணங்க விழாவைத் தொடங்கிவைத்த மைசூர் ஆளுநரவர்கள் பேசுகையில் சென்னைப் பல்கலைக்கழகத்தின் வரலாற்றுப் பெருமை மிக்க வளர்ச்சியையும் அது நாட்டுக்கு ஆற்றிய பெரும் பணியையும் குறிப்பிட்டார்.

அதன் பின்னர் சென்னைமாநில ஆளுநரும் பல்கலைக் கழக வேந்தருமான திரு. ஏ. ஜே. ஜான் அவர்கள் எழுந்து பேசிய போது 'தென்னிந்திய பல்[illegible] பல்கலைக்கழகமே தாய்போன்றது; சென்னைப் பல்கலைக்கழகம் பல்வேறு துறைகளில் பல்வேறு அறிஞர்களை உண்டாக்கியிருக்

கிறது. அவர்கள் யாவரும் ஆற்றியுள்ள அரும்பெருஞ் செயல், இக் கழகத்திற்குப் பெருமை யளிப்பதாகும்' என்றனர்.

இப் பல்கலைக்கழகத்தின் நூற்றாண்டுவிழாவை ஒட்டிச் சிறந்த கண்காட்சியை 28-1-57 ஆம் நாட் காலையில் கிண்டி பொறியியற் கல்லூரிக்கடுத்த திறந்த வெளியிடத்தில் பல்கலைக் கழக மானியக்குழுத் தலைவர் திரு. சிந்தாமணி தேஃச்முக் திறந்து வைத்தார். அப்போது அவர் குறிப்பிட்டதாவது:

'இரசாயனம் பௌதிகம் பொறியியல் வரலாறு தத்துவம் பூகோளம் மருத்துவம் மனோதத்துவம் மற்றும் பல்வேறு கலைகள் பற்றிய பொருள்கள், ஆராய்ச்சிகள் கண்காட்சியில் இடம் பெற்றிருப்பது அறிவுக்கு ஓர் விருந்தென்றும், இந்த அறிவுக் கோயில் மூலம் மக்கள் நல்ல பயனடையலாம் என்றும் குறிப்பிட்டார். மேலும் அவர் கூறும்போது விஞ்ஞானக் கலைகளுக்கு முதன்மையா? அல்லது சாத்திரம் பொருளாதாரம் இலக்கியம் போன்ற கலைகளுக்கு முதன்மை அளிக்க வேண்டுமா? என்பது நெடு நாளைய கேள்வி. இதுபற்றிச் சென்னைப் பல்கலைக் கழகம் போன்றவைகள் கவலைப்பட வேண்டியதில்லை. உலகாயத வாழ்க்கைக்கும், உயிர்ச்சார்பு வாழ்க்கைக்கும் உள்ள ஓர் இணைப்பை உணர்ந்து அந்தக் கண்ணோட்டத்தோடு, அறிவை வளர்க்க நாம் கற்றுக் கொண்டுள்ளோம். இதுதான் நமது நாட்டு அறிவுவளர்ச்சியின் தனிப்பட்ட பகுதியாகும். விஞ்ஞானக்கலைகளுக்கும் ஏனைய அடிப்படைக்கலைகளுக்குமுள்ள வரமபு மிகவும் குறுகலானது. அணுக்கதிர் இயக்கத்தினால் உடலுறுப்புக்களின் அணுக்கள் தாக்கப்படுவதைத் தற்போது காண்கின்றோம். ஆதலின் விஞ்ஞானத் துறையில் உயிர்த்தத்துவ சாத்திரங்களுக்கும் இரசாயனம், பௌதிக சாத்திரங்களுக்கும் இடையேயுள்ள வரம்புபற்றி வழக்காடுதலில் பயனில்லை.' என்றார்.

பின் தேஃச்முக்கும் ஏனைச் சிறந்தோர்களும் கண்காட்சியின் பலவேறு பகுதிகளைப் பார்வையிட்டனர்.

## பட்டமளிப்பு விழா :

மறுநாள் 29-1-57-ஆம் நாள் நம் இந்தியக் குடியரசுத் துணைத்தலைவர் டாக்டர் திரு. இராதாகிருஃச்ணன் அவர்கள் நூற்றாண்டுவிழாப் பட்டமளிப்புப்பேருரை வழங்கினார்கள். அப்போது தம் உரையில் குறிப்பிட்டுப் பேசியதாவது :—

'அமைதியற்ற இந்தப் புதின உலகில் விஞ்ஞானமும் தொழில் நுணுக்கத் துறையும் நெருங்கிவிட்ட இந்தக் காலத்தில் இப் பல்கலைக்கழகமும் மற்றப் பல்கலைக்கழகங்களும் ஒன்று

பட்டு முயற்சிசெய்தால் உலக அமைதிக்காகவும் ஒருவரை ஒருவர் அறிந்து கொள்வதற்கும் பெரிதும் உதவலாம். நமக்கு நம்பிக்கைமட்டும் இருக்குமானால் நாம் முடியாததைக்கூடச் சாதிக்கலாம்; தாங்கமுடியாததைக்கூடத் தாங்கலாம்; இந்த உலகில் அன்பு, நெறி, உண்மை ஆகியவற்றை நிலைநாட்டலாம். இது, விஞ்ஞானம், இலக்கியம், கல்வி, சமூக சேவை ஆகிய துறைகளிலும் பொதுப்பணி ஆகியவற்றிலும் தலைமையிடம் பெற்றுள்ளது. நமது காலத்தில் இராயல் கழகத்தின் உறுப்பினரான முதல் மனிதர் எஸ். இராமானுசம் இந்தப் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்தவர்; பௌதிகத்தில் நோபல் பரிசு பெற்ற ஒரே ஒரு இந்தியரான டாக்டர் சி. வி. இராமன் இப் பல்கலைக்கழகத்தின் பட்டதாரி. இந்தியாவின் கடைசி ஆளுநர்த்தலைவர் (கவர்னர் ஜெனரலான) இராசகோபாலாச்சாரியும் இப் பல்கலைக்கழக மாணவரே......தனது நூற்றாண்டு விழாவை ஒட்டிப் புகழ்பெற்ற ஏழு பழைய மாணவர்களுக்கும் வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களைச் சேர்ந்த நான்கு அறிஞர்கட்கும் தனது மிகவுயர்ந்த பட்டங்களைத் தனிப் பட்டமளிப்பு விழாவில் இப் பல்கலைக்கழகம் இன்று வழங்கியது' என்றார்

பட்டம் பெற்றோர்

(க) டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன், இந்தியக் குடியரசுத் துணைத் தலைவர் ஆந்திரா, காசிப் பல்கலைக்கழகங்களின் வேந்தராக முன்பு பணியாற்றியவர்; இப்போது தில்லிப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர். இவருக்கு டாக்டர் ஆவ் லாஸ் (சட்டக் கலை முனைவர்) என்ற நன்மதிப்புப் பட்டமும் (உ) டாக்டர் வில்லியம் நார்மன் பிரௌன்; இவர் அமெரிக்க நாட்டிலுள்ள பென்சில்வேனியாப் பல்கலைக்கழகத்தில் இந்தியக்கலைப் பேராசிரியர்; கீழ்த்திசைச் சமக்கிருதப் படிப்பில் புலமை பெற்றவர்; இவருக்கு டாக்டர் ஆவ் லிட்டரச்சர் (இலக்கியக்கலை முனைவர்) பட்டமும், (ங) டாக்டர் எவ. கோகின் அமெரிக்காவிலுள்ள பிரின்ஸ்டன் பல்கலைக் கழகத் தலைவர்; இந்தியாவில் பிறந்தவர். இவருக்கு டாக்டர் ஆவ் லாஸ் (சட்டக்கலை முனைவர்) பட்டமும், (ச) டாக்டர் சார்சு எட்வர்டுஹால் மேற்கு அண்டோரியா (அமெரிக்கா) பல்கலைக் கழகத்தில் தலைவர்; அறிஞர்களின் பேரறிவும், விஞ்ஞானியின் நுணுக்கமும் பொருந்தியவர்; கனடா இந்திய உறவுக்குப் பாடுபடுபவர். இவருக்கு டாக்டர் ஆவ் லாஸ் (சட்டக்கலை முனைவர்) பட்டமும், (ரு) டாக்டர் டக்லஸ் வில்லியம் லோகன்; இலண்டன் பல்கலைக் கழக முதல்வர். இவருக்கு டாக்டர் ஆவ் லாஸ் (சட்டக்கலை முனைவர்) பட்டமும், (சு) டாக்டர் எம். ஆர். குருசாமி முதலியார் தென்னிந்திய மருத்துவத் துறையில் சாம்ப

வான் என்ற பெயர் பெற்றவர்; பிணிப்பட்டோர் துயர்தீர்த்த பெரியார்; இவருக்கு டாக்டர் ஆவ் சயின்ஸ் (அறிவியல் முனைவர்) பட்டமும், (௭) சர். மகம்மது உஸ்மான்; சென்னைப் பல்கலைக் கழகத்தின் முதல் இந்திய வேந்தர்; அந் நாளைய சட்ட அவையில் சிறப்பாக விளங்கினார்; இவருக்கு டாக்டர் ஆவ் லாஸ் (சட்டக் கலை முனைவர்) பட்டமும், (௮) டாக்டர் சி. பி. இராமசாமி ஐயர்: உலகப் புகழ் பெற்றவர்; அரசியல் திறமை மிக்கவர்; திருவாங்கூர், ஆந்திரா, காசிப் பல்கலைக் கழகங்கட்குத் துணை வேந்தராக இருந்தவர்; இவருக்கு டாக்டர் ஆவ் லாஸ் (சட்டக்கலை முனைவர்) பட்டமும், (௯) டாக்டர் சர். இராமசாமி முதலியார்; இவர் புகழ் பெற்ற பேச்சுத் திறமை வாய்ந்தவர்; ஐ நா. அவையின் முதற் கூட்டத்துக்கு இந்தியப் பிரதிநிதிகளின் குழுத் தலைவர்; இவருக்கு டாக்டர் ஆவ் லாஸ் (சட்டக்கலை முனைவர்) பட்டமும், (௧0) சர். சாமுவேல் ரங்கநாதன்; அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சென்னைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராகப் பணியாற்றியவர்; இங்கிலாந்தில் இந்தியத் தூதுவராக இருந்தவர்; இவருக்கு டாக்டர் ஆவ் லாஸ் (சட்டக்கலை முனைவர்) பட்டமும், (௧௧) பேராசிரியர், ரா. பி. சேதுப்பிள்ளை; சென்னைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவர்; பல தமிழ்நூல்கள் எழுதியவர்: இவருக்கு டாக்டர் ஆவ் லிட்ரச்சர் (இலக்கியக்கலை முனைவர்) பட்டமும் வழங்கப்பட்டன.

மாண்புமிக்க பட்டத்திற்குரிய ஒவ்வொருவரையும் சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் ஏ. இலட்சுமணசாமி முதலியார் பாராட்டிப் பேசினார். தம் உடன்பிறப்பினரான சர். ஏ. இராமசாமி முதலியாரைப் பாராட்ட வேண்டும் சமயம் வந்ததும் அவருக்குச் சற்று திகைப்பு ஏற்பட்டது. பிறப்பு முதல் அறிந்த உடன்பிறந்தோரைக் குறித்துப் பேசுவது மிக அரிதான செயலாகும். எனவே, அவர் பேசுங்கால்,

'அவர் குணங்களையும் குறைகளையும் அறிவேன்; ஆகவே அவரைப் பாராட்டிப் பிறநாட்டு அறிஞர் ஒருவர் எழுதியுள்ளதைப் படிக்கின்றேன்' என்று கூறினார். 'இக்கால மக்களில் எல்லாக் கலைகளிலும் வல்லவர்; சிறந்த சொற்பொழிவாளர்' என்பதே அப் புகழுரையின் சுருக்கமாகும்.

## வாழ்த்துரைகள்

உலகிற் பல நாடுகளிலிருந்து பல்வேறு பல்கலைக்கழகங்களின் சார்பில் வாழ்த்துச்செய்திகள் வந்திருந்தன. அவற்றை அதனதன் பிரதிநிதிகள் சென்னைப் பல்கலைக்கழக வேந்தரிடம் ஒப்புவித்தனர். பிரதிநிதிகளைத் துணைவேந்தர் டாக்டர் ஏ.எல்

முதலியார் அறிமுகம் செய்து வைத்தனர். அமெரிக்கா, இங்கிலாந்து, ஆப்பிரிக்கா, கனடா, நியூசிலந்து, ஆஸ்திரேலியா, இலங்கை, பர்மா, பாகிசுத்தான் மற்றும் பல நாடுகளிலுள்ள பல்கலைக் கழகங்களிலிருந்து பிரதிநிதிகள் வாழ்த்துச் செய்தி களைக் கொணர்ந்திருந்தனர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தின் சார்பில் திரு. டி. எம். நாராயணசாமி பிள்ளையும், திருப்பதி வெங்கடேசுர பல்கலைக்கழகத்தின் சார்பில் திரு. கோவிந்த ராசலு நாயுடுவும், திருவாங்கூர்ப் பல்கலைக் கழகச் சார்பில் திரு. ஏ. இராமசாமி முதலியாரும் வாழ்த்துச் செய்திகளை ஒப்புவித்தனர்.

பிறகு இவ் விழாவிற் கலந்து கொண்ட முந்நூறுக்கு மேற் பட்ட வெளிநாட்டுப் பல்கலைக் கழக உறுப்பினர்களைச் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் ஏ. இலட்சுமணசாமி முதலியார் அறிமுகப்படுத்தி வைத்தார். அவர்கள் விழாவை வாழ்த்தித் தங்களுடைய வாழ்த்துச் செய்திகளை அளித்தார்கள். இறுதியில் சென்னை மாநிலக் கல்வி யமைச்சராகிய இணைவேந்தர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் நன்றி தெரிவித்துச் 'சென்னைப் பல்கலைக்கழகம் மேற்கொள்ளும் பயனுடைய திட்டங்கட்குச் சென்னை அரசியலார் தவறாது நிதி உதவி யளிப்பார்' என்று உறுதி கூறினார். அதன் பின்னர் 'சனகனமன' இன்னிசைப் பாடலுடன் விழா முடிவுற்றது.

**துணைவேந்தர் உருவப் படத்திறப்பு விழா:**

சென்னைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் சர். ஏ. இலட்சுமணசாமி முதலியாரின் உருவப்படத்தை மைய அரசிய லாரின் நலத்துறை அமைச்சர் திருவாட்டி இராசகுமாரி அமிருத கௌரி 29-1-57-ஆம் நாள் முற்பகல் கழகத் தேர்வுமன்றத் தில் திறந்து வைத்தார். முதலியாரின் 71-ஆவது பிறந்த நாள் விழாக்கொண்டாட்டக் குழுவினரால் ஏற்பாடு செய்யப்பட் டிருந்த இத் திறப்பு விழாவுக்கு மிகுதியான புகழ்மிக்கோர்களும் மாணவ மாணவிகளும் போந்திருந்தனர். அதுபோது உருவப் படத்தைத் திறந்து வைத்தபோது அம்மையார் குறிப்பிட்ட தாவது:

'இப் பல்கலைக்கழகத்தில் பட்டம் பெற்றவர்கள் எவ்வ ளவோபேர்கள் இருக்கலாம். ஆனால் எவருக்கும திரு. இலட்சு மணசாமி முதலியாருக்குள்ள பெருமையோ புகழோ கிடையாது. உலக அரங்கில் மிகவும் சிறந்தவர். உலக நலத்துறைக் கழக உறுப்பினர்களின் மிக்க பாராட்டுதலைப் பெற்றவர்; மருத்துவத் துறையில் மட்டுமன்றி அவர் மேற்கொள்ளும் எத்துறையிலும் சிறந்து விளங்கும் திறமையுள்ளவர்' என்றனர்.

பல்கலைக் கழகத்தின் சார்பாக அவ் ஆட்சிமன்ற உறுப்பினர், திரு. கே. பாலசுப்பிரமணிய ஐயர், அவ் வுருவப்படத்தை ஏற்றுக்கொண்டார். 'முப்பத்தைந்து ஆண்டுகளாகப் பல்கலைக் கழகத் தொடர்புற்ற பணியில் ஈடுபட்டிருக்கும் திரு. முதலியாரின் பெருந்திறனை வருங்கால மக்கட்கு நினைப்பூட்ட இவ்வுருவப் படம் பல்கலைக் கழகத்தை அழகுபடுத்தி நிற்கும்' என்று திரு. பாலசுப்பிரமணிய ஐயர் கூறினார். திரு. முதலியார் ஆற்றிய சொற்பொழிவுகளை ஒன்றாகத் திரட்டி இக் குழுவினர் ஒரு புத்தகமாக அச்சிட்டுள்ளனர். அதை, மைய அரசின் அமைச்சர் மக்கள் நலனுக்காக வெளிப்படுத்தியுள்ளனர். அதற்கு சர். சி. பி. இராமசாமி ஐயர் முன்னுரை வழங்கியுள்ளனர்.

விஞ்ஞான விரிவுரை :

இறுதியில் அமைப்பாளர் பேராசிரியர் சார்சு சூரியன் நன்றி கூறினார். உருவப்படத்தைத் திறம்பெற வரைந்த திரு. சுப்பர் என்பாருக்குக் குழுவின் சார்பில் மைய அரசின் அமைச்சர் வெள்ளித்தட்டு ஒன்றைப் பரிசாக அளித்தார்.

இக் கழக விழாவையொட்டி விஞ்ஞான ஆய்வு குறித்த தொரு எதிருரையாட்டுஅரங்கு 30-1-57-ஆம் நாட்காலை ஆட்சி மன்றத்தின்கண் நடைபெற்றது. அண்மையில் விஞ்ஞானத்துறை முன்னேற்றம் பற்றி வெளிநாட்டு அறிஞர்கள் உட்படப் பேரறிஞர்கள் பலர் பேசினர். இந்திய நாட்டின் தலைசிறந்த விஞ்ஞானி டாக்டர் சி. வி. இராமன் தலைமை தாங்கினார். கழகத் துணை வேந்தர் இலட்சுமணசாமி முதலியார் யாவரையும் வரவேற்று அரிய சொற்பெருக்கிட்டனர். அதுகாலை அவர் கூறியன :

'மன்பதையின் நல்வாழ்வுக்கு விஞ்ஞானம் செய்துள்ள பணி என்ன? இனியும் என்ன ஆற்றுதற்கு முனைந்துள்ளது? இவ் விழாவின்போது அறிஞர்களைக் கொண்டு இது குறித்த எதிருரையாட்டுஅரங்கு ஒன்று நடத்துவது சிறந்ததென்று எண்ணி ஏற்பாடு செய்தோம்' என்பதாம்.

அதுகாலை, சர். சி. வி. இராமன் குறிப்பிட்டுப் பேசியதாவது :

'விஞ்ஞானத் துறையில் எனக்குள்ள அறிவும் ஆற்றலும் ஆராய்ச்சியில் ஊக்கமும் இக் கழகம் ஊட்டியதே ஆகும். தற்காலம் நுட்பமான சாதனங்கள் மலிந்து விஞ்ஞானம் வளர வாய்ப்பளிப்பதை அவர் குறிப்பிட்டார். ஒரு புதுமையை உணரும் போது விஞ்ஞானிக்கு ஏற்படும் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

நுட்பமானவற்றைப் புதிது புதிதாக உண்டாக்கி உலகம் பயனடைய வழங்கவேண்டு'மென்று கூறி இளம் விஞ்ஞானிகளை அவர் கேட்டுக்கொண்டார். ஒளிக்கதிர்கள் குறித்து அண்மைக் காலத்தில் தாம் செய்துவரும் ஆராய்ச்சியையும் அதன் பயனையும் விளக்கினார். ஜூலைத் திங்கள் முதல் பல திங்கள்களில் இயற்கை நுட்பங்கள் பலவற்றை ஆராய்ச்சியால் அறிய 55 நாடுகள் முனைந்திருப்பதைச் சிறந்த பிரித்தானிய வானநூலறிஞர் சர். ஹரால்ட் ஸ்பென்சர் சோன்ஸ் எடுத்துரைத்தார்.

மண்ணுலகைச் சுற்றி வரும்படி செயற்கைக் கோள்களை இயக்கவிட்டு ஆராய்ச்சி நடத்த அமெரிக்காவும் உருசியாவும் திட்டமிட்டிருக்கின்றன. ஆஸ்திரேலியா கணிதப் பேராசிரியர் திரு. டி. சி. ரூம் மற்றும் பல அறிஞர்கள் பல்வேறு பொருள்கள் பற்றிப் பேசினார்கள். 11 மணி அளவில் கூட்டத்தினர் அனைவரும் எழுந்து மௌனமாக நின்று காந்தியடிகட்கு வணக்கஞ் செலுத்தினர்.

கிண்டியில் நடைபெறும் இக் கழகக் கண்காட்சியில் பொதுமக்களுக்குப் பொருள்களின் தன்மையை நன்கு எடுத்துணர்த்தும் வகையில் மிக நேர்த்தியாகவும் கவர்ச்சியாகவும் அமைத்துள்ள அங்காடிகள் சென்னை நகரவைக்கடைகளாகும் என்று பல்கலைக்கழகக் கொடைக்குழுத் தலைவர் திரு சி டி. தேஃச்முக்கும் அவருடைய மனைவியும் கண்காட்சிப் பார்வையாளர் புத்தகத்தில் பாராட்டி எழுதியுள்ளனர். அங்கணத்தை அப்புறப்படுத்தும் திட்டமும், சேரி ஒழிப்புத் திட்டமும், ஏனைய மக்கள் இனநலத்திட்டங்களும் குறிப்பிடத்தக்கவை யென அவர்கள் தெரிவித்தனர்

சவகர்லால் நேருவுக்குப் பட்டமளிப்பு:

பாரத நாட்டின் முதலமைச்சர் திரு. சவகர்லால் நேருவுக்கு 31—1—57-ஆம் நாள் பட்டமளிப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அதற்கான சிறப்புவாய்ந்த பட்டமளிப்புவிழா, பல்கலைக் கழக நூற்றாண்டுவிழாப் பந்தலில் சிறப்பாக நடைபெற்றது. ஆயிரக்கணக்கானவர் பந்தலில் குழுமியிருந்தனர். பட்டம் பெறுதற்கான சிறந்த அழகுவாய்ந்த உடைகளை அணிந்துகொண்டு ஆளுநர், துணைவேந்தர், இணைவேந்தர்களுடன் திரு. நேரு ஊர்வலமாக மேடைக்கு வந்தபோது கைதட்டொலி வானத்தெழுந்தொலித்தது. பல்கலைக்கழகத்தின வாத்தியக்குழு இன்னிசை வழங்கிற்று.

அதுகாலைத் துணைவேந்தர் டாக்டர் இலட்சுமணசாமி முதலியார் பேசுகையில் ''இப் பல்கலைக் கழகம் இதுவரை எட்டுத் தடவை தான் சிறப்புப் பட்டமளிப்புவிழா நடத்தியிருப்பதாகவும், இன்று நடப்பது ஒன்பதாவது விழாவென்றும், திரு நேருவுக்குப் பட்டமளிப்பதன் வழியாகப் பல்கலைக்கழகம் தன்னையே மேம்படுத்திக்கொள்வதாகவும் குறிப்பிட்டுவிட்டு, தாய்நாட்டின் விடுதலைக்கும் முன்னேற்றத்துக்கும் மட்டுமன்றி உலகிலேயே மக்களின் நலனுக்காக நேரு புரிந்துள்ள தொண்டுகள் கணக்கிலடங்கா அவற்றை இங்கு விரிப்பது இயல்வதல்ல........உலகப் புகழ்பெற்ற அரசியல் நுண்ணியர் மட்டுமல்ல ; இலக்கிய உலகில் அவரது புகழ் உயர்ந்தது : அன்னாருடைய நூல்கள் பல நாடுகளில் போற்றப்பட்டு வருகின்றன. சிறந்த பண்புகள் பலவற்றைத் தன்னகத்தே கொண்டு திகழும் சிறந்த ஆடவர் அவர்'' என்றனர்.

பின்பு கழக வேந்தரான ஆளுநர் திரு. ஏ. ஜே. சான் நேருவுக்கு டாக்டர் ஆப் லாஸ் (சட்டநூல் புலவர்) பட்டத்தை வழங்கினர். பட்டத்தைப் பெற்றுக்கொண்ட நேரு, 'இந்தப் பட்டத்தை எனக்கு அளித்ததற்கு மிகவும் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். பட்டம் பெரிதல்ல. புகழ்பெற்ற சென்னைப் பல்கலைக்கழகத்தோடு எனக்கு ஏற்பட்டுள்ள தொடர்புகண்டு மகிழ்ச்சியடைகிறேன். இந்தப் பெரிய பல்கலைக் கழகத்தின் பட்டம் பெற்றோர்களில் ஒருவனாக ஆகியிருப்பதைப் பெரிதும் மதிக்கிறேன்' என்று கூறினர். பட்டமளிப்புவிழா இஃதுடன் முடிவுற்றது

## பல்கலைக்கழகத்தின் கட்டிடக் கால்கோள்விழா

கழகத்தின் நூற்றாண்டு விழாக் கட்டிடத்துக்கு 31-1-57-ஆம் நாள் மாலை சவகர்லால் நேரு கால்கோள் கல்லினை நாட்டுவித்தார். அப்போது அவர் பேசியதின் சுருக்கம் வருமாறு :

' அறிவுத்துறையில் தென்னிந்தியாவுக்குத் தனிப்ப புகழுண்டு. பண்பாட்டுத் துறையிலும், ஆன்மீகத் துறையிலுங் கூடத் தென்னிந்தியாவின் பங்கு சிறந்தது. இம் மூன்றும் இணைந்திருப்பது இந்தியாவின் சிறந்த கருவூலமாகும்.

அணுக்குண்டு நீர்வாயுக்குண்டு உலகில் நாம் வாழ்கின்றோம். ஆனல் அவை, மக்கள் இனத்தையே அழித்துவிடும் என்று நான் நம்பவில்லை. மக்கள் இனம் எவ்வளவோ கேடுகளிலிருந்து மீண்டிருக்கிறது. மக்களின் உள்ளப்பண்பு பெரிது. அந்தப் பண்பினல்தான் அணுக்குண்டை வெல்லமுடியும். அத்தகைய

பண்புள்ள மக்களை உருவாக்குவது பல்கலைக்கழகங்களின் பொறுப்பு' என்றனர்.

## சென்னைப் பல்கலைக் கழகத் தோற்றமும் வளர்ச்சியும்

இப் பல்கலைக் கழகத்துக்கு ஒரு நூறு ஆண்டு நிறைவுற்றது; அவ் விழாவை மிக மகிழ்ச்சியுடன் கொண்டாடியுளது அறிவுலக வரலாற்றில் அரியதொரு நிகழ்ச்சியாதலோடு சிறப்பு மிக்கதுமாகும்.

1857-ஆம் ஆண்டில் முதல் முதலாக மூன்று பெரிய பல்கலைக் கழகங்கள் நம் இந்திய நாட்டில் நிறுவப்பெற்றன. அவற்றில் ஒன்றாகத் திகழ்வது நம் சென்னைப் பல்கலைக் கழகம். ஏனைய இரண்டும் கல்கத்தா, பம்பாய் நகரங்களில் நிறுவப் பெற்றவை. இம் மூன்று செழுங்கலை நியமங்களும் கடந்த ஒரு நூற்றாண்டுக்கால எல்லையில் ஆற்றியுள்ள அறிவுவளர்ச்சிக்குரிய அருமபணி மலையினும் மாணப் பெரிதாகும்; அதைக்கண்டு நாம் பெரிதும் அகங்களிதுளும்பும் தன்மையேமாவோம் நம் நாடாண்ட வெள்ளையர் தங்கோள்நிறுவித் தம் ஆட்சிநிலை கொள்ளுதற்குரியவற்றை நம் இந்திய நாட்டு மக்களுக்குப் பயிற்றி, அதன் வழியாக அடிமைப்பிணிப்பாற் கட்டித் தம் ஆங்கில மொழியையும் அதன் வழியாக அவர் நாட்டு வரலாறு முதலிய பலவற்றையும் நந் நாட்டின்கண் நுழைத்தனர்; இது புனைந்துரை யன்று; உண்மையேயாகும் எதுவாயினும் அறிவுத்துறை யாகலான், அது, அதன் பயனை ஊட்டாது கழிவதில்லை. அவ் வாங்கிலக் கல்வியே நம் நாட்டுமக்களை விழிப்புறச்செய்தது. தாய்நாட்டுப் பற்றும், உரிமை வேட்கையும் கிளர்ந்தெழச் செய்தது; அதனால் காந்தியடிகள், வ. உ. சிதம்பரம் பிள்ளை போன்ற சிறந்த உண்மை வீரர்களை—அறிஞர்களை உருவாக்கிக் கொணர்ந்தது என்பது வரலாறு காட்டும் உண்மையாகும். இத் தன்மைகொண்டு நோக்குங்கால் நம் தாய்நாட்டு விடுதலைவேட்கை மிக்கெழுந்த தலைவர்களையும், வீரர்களையும், தொண்டர்களையும், சிந்தனைச் சிற்பிகளையும், காவிய ஓவியக் கலைஞர்களையும் நம் இந்தியப் பெருநாடன்றி உலகெங்குமே ஆக்கித்தந்த பெருமை இப் பல்கலைக்கழகங்கட்குப் பொதுவாக உண்டெனினும் சிறப் பாக இச் சென்னைப் பல்கலைக் கழகத்துக்கே உண்டு.

உலகமக்கள் வியக்கும் வண்ணமும் ஆங்கிலேயர்களும் பாராட்டுமாறும் ஆங்கிலத்தில் பேச்சுத்திறன் வாய்ந்த நாவலர் களும், உலக அரங்கில் பேரொளி பரப்பும் அறிஞர்களும் இவ் வறிவுக் கழகத்தில் உருவானவர்களேயாகும். இன்று ஈடும் எடுப்புமற்றுத் தன்னிகரில்லாத் தன்மைவாய்ந்தது இக் கழகம்.

1857-ஆம் ஆண்டில் தொடங்கிய இப் பல்கலைக்கழகம் இன்று 73 கலைக்கல்லூரிகளையும் 32 தொழிற்கல்லூரிகளையும் கொண்டு மிளிர்கின்றது. இவற்றில் பெண்கள் கல்லூரி மட்டும் 24 ஆகும். தற்போது கலைக் கல்லூரிகளில் மட்டும் 51182 மாணவர்கள் பயிற்சி பெறுகின்றனர். தொழிற் கல்லூரிகளில் 7699 மாணவர்கள் பயில்கின்றனர். இதைப்போன்றே மேற் குறிப்பிட்ட இருவகைப்பட்ட கல்லூரிகளிலும் 9975 மகளிர்கள் கல்வி பெறுகிறார்கள். இதிலிருந்து நமது மாநிலத்தின் எதிர் கால மன்பதையுலகை உருவாக்குவதில் இக் கழகத்தின் பங்கு எவ்வளவு மேன்மைத்து என்பது தெளிவுபடுகின்றது. தொடக்க காலத்தில் கல்வித்துறையில் ஒருசிலவற்றை மட்டும் பயிற்சி யளித்துவந்தது. இதுகாலை மேனாட்டுப் பல்கலைக்கழகங்களில் எத்தனைவகையான துறைகளுண்டோ அத்தனையும் அமைந் துள்ளன. இது இதன் வளர்ச்சியைக் காட்டும் தன்மைத்தாகும்.

## வேந்தர்களும் துணைவேந்தர்களும்

இப் பல்கலைக் கழகம் தொடக்கமுதல் இதுவரை, 39 வேந்தர் களும், 25 துணைவேந்தர்களும் கழகத்தின் இயக்கத்தைத் திறம் பட நடத்திவந்திருக்கின்றனர். அவர்கள் பெயர் பின்வருமாறு:—

### க. வேந்தர்கள்

(க) 1857. மதிப்பிற்குரிய ஆரிஸ் பெருமகனார்.
(உ) 1859. சர். சார்லசு. எப். டிரவிலியன், கே. சி. பி.
(ங) 1860. டபிள்யு. ஏ. மோர்ஹெட்.
(ச) ,, சர். ஹென்றி ஜியார்ஜ் லார்டு, ஜி. சி. எம். ஜி.
(ரு) 1861. சர். வில்லியம் தோமாசு டெனிசன், கே சி.பி.
(சு) 1863. இ. மால்ட்பி.
(எ) 1864. சர். வில்லியம் தோமாசு டெனிசன், கே.சி.பி.
(அ) 1866. மதிப்பிற்குரிய பிரான்சிஸ் நேபியர். பாரன் நேபியர்.
(கூ) 1872. அலெக்சாண்டர் ஜெ. அர்வுத்நாட்.
(கo) ,, மதிப்பிற்குரிய வெரே ஹென்றி, ஹோபார் பெருமகனார்.
(கக) 1875. வில்லியம். ஆர். ராபின்சன், சி. எஸ். ஐ.
(கஉ) ,, அருள்திரு. பக்கிங்காம் இளவரசரும், சன்டோஸ்.
(கங) 1880. மதிப்பிற்குரிய வில்லியம் பார்டிரிக் ஆதம்.
(கச) 1881. வில்லியம் ஹடில்ஸ்டன்.

(கரு) ,, மதிப்பிற்குரிய மவுன்ட் ஸ்டூவர்ட் எல்பின்ஸ்டன் கிராண்ட் டப்.

(கசு) 1886. மதிப்பிற்குரிய ராபர்ட் பூர்க், பாரன் கன்னிமாரா, ஜி. சி. ஐ. இ.

(கஎ) 1890. மதிப்பிற்குரிய பெயில்பி பாரன் வென்லாக், ஜி. சி. ஐ. இ.

(கஅ) 1896. மதிப்பிற்குரிய சர். ஆர்தர் எலிபாங் ஆவலாக், ஜி சி. எம். ஜி., ஜி. சி. ஐ. இ.

(கசு) 1900. மதிப்பிற்குரிய ஆர்தர் ஆலிவர் வில்லியர்ஸ், பாரன் ஆம்தில், ஜி.சி.எஸ்.ஐ., ஜி.சி ஐ இ.

(உ0) 1904. சர். ஜேம்ஸ் தாம்சன், எம்.ஏ., கே.சி.எஸ்.ஐ.

(உக) 1905. மதிப்பிற்குரிய ஆர்தர் ஆலிவர் வில்லியஸ் பாரன் ஆம்தில், ஜி.சி.எஸ் ஐ., ஜி.சி.ஐ.இ.

(உஉ) 1906. ,, சர். ஆர்தர் லாலி, ஜி.சி.ஐ.இ., கே. சி. எம். ஜி.

(உங) 1911. ,, சர். தாமஸ் டேவிட் கிப்சன் கார்மைக்கேல், ஜி.சி ஐ இ, கே.சி.எம் ஜி.

(உச) 1912. ,, சர். முரே ஹாமிக், கே. சி. எஸ். ஐ, சி. ஐ. இ. ஐ., சி. எஸ்.

(உரு) ,, மதிப்பிற்குரிய பாரன் பென்ட் லான்ட், பி.சி. ஜி சி ஐ இ, ஜி. சி. எஸ் ஐ.

(உசு) 1919. ,, சர். அலெக்சாண்டர் கார்டியூ, கே. சி. எஸ். ஐ., சி. பி இ, எம். ஏ., ஐ. சி. எஸ்.

(உஎ) ,, ,, பாரன் வில்லிங்டன், ஜி. எஸ். எஸ். ஐ., ஜி. சி ஐ இ, ஓ. பி. இ.

(உஅ) 1924. ,, விஸ்கவுன்ட் கோஷன், ஜி. சி. ஐ. இ., சி. பி. இ., ஜி. சி எஸ். ஐ.

(உகூ) 1929. ,, சர். நார்மன் எட்வர்டு மார்ஜோரி பாங்ஸ், கே. சி. ஐ. இ., சி. எஸ். எஸ்,

(ங0) ,, ,, சர். ஜார்ஜ் பெரிடிரிக் ஸ்டான்லி, பி.சி., ஜி சி.எஸ்.ஐ., ஜி சி.ஐ இ., ஜி.எம்.ஜி.

(ஙக) 1934. ,, சர். முகம்மது உஸ்மான், கே. சி. ஐ. இ., பி. ஏ.

(ஙஉ) ,, எர்ஸ்கின் பெருமகனார், ஜி. சி. ஐ. இ.

(ஙங) 1936. மதிப்பிற்குரிய ராய்பகதூர் சர் கூர்மா வெங்கடரெட்டி நாயுடு, பி. ஏ. பி. எல்.

(௩௪) 1940. „ சர். ஆர்தர் ஆஸ்வால்டு ஹோப், ஜி. சி. ஐ. இ, எம். சி.
(௩௫) 1946. (பிப்ரவரி முதல் மே மீ வரை) சர். போஜ், நைட், கே.சி.எஸ்.ஐ, சி.ஐ.இ., ஐ சி எஸ்.
(௩௬) „ லெப்டினன்ட் ஜெனரல் சர். ஆர்ச்சிபால்ட் எட்வர்ட் நை, ஜி. சி. எஸ். ஐ., கே. சி. பி., கே. பி. இ., எம். சி.
(௩௭) 1948. மகாராசா ஸ்ரீ சர். கிருஷ்ணகுமார சிங்ஜி பகவன் சிங்ஜி பவநகர் மகாராஜா, கே. சி. பி., கே. பி. இ., எம். சி.
(௩௮) 1952. திரு. ஸ்ரீபிரகாசா, பி. ஏ., எல். எல். பி. (கான்டாப்) பாரிஸ்டர் அட்-லா.
(௩௯) 1956. திரு. ஏ. ஜே. ஜான்.

உ. துணைவேந்தர்கள்

(௧) 1857. கனம், சர். கிறிஸ்டபர் ராலின்சன்.
(௨) 1860. „ டப்ளியூ. ஏ. மோர் ஹெட்.
(௩) 1862. „ சர். காலின் ஹர்மன் ஸ்காட்லாண்டு.
(௪) 1871. „ அலெக்சாண்டர் ஜே. அர்பத்நட்.
(௫) 1872. „ நீதிபதி ஹாலோவே.
(௬) 1874. „ „ இன்ஸ்.
(௭) 1880. „ சர். சி. ஏ. டர்னர்.
(௮) 1885. „ நீதிபதி கெர்மன்.
(௯) 1889. „ சர். ஆர்தர் ஜான் ஹம்மான்ட் காலின்ஸ்.
(௧0) 1899. „ டி டங்கன்.
(௧௧) 1900. „ நீதிபதி ஷெப்பர்டு.
(௧௨) 1901. „ ரெவரெண்ட் டபிள்யு மில்லர்.
(௧௩) 1904. „ சர். சார்லஸ் ஆர்னல்ட் ஒய்ட்.
(௧௪) 1905. „ „ சில்லரி பென்சன்.
(௧௫) 1911. „ நீதிபதி ஜெ. ஈ. பி. வாலிஸ்.
(௧௬) 1916. „ ஜான் வாலிஸ்.
(௧௭) 1918. „ சர். பி. எஸ். சிவசாமி ஐயர்.
(௧௮) 1920. „ நீதிபதி எப். டி. ஒல்ட்பீல்ட், ஐ. சி. எஸ்.

(கக) 1923. ,, கே. பி. சீனிவாச ஐயங்கார், பி. ஏ. பி. எல்.
(உ0) 1924. ,, ரெவரெண்ட் ஈ. மாண்டீத் மாக்பெல்.
(உக) 1925. திவான்பகதூர் சர். ஆர். வெஙகடரத்தினம்.
(உஉ) 1929. ,, கே. ராமுண்ணி மேனன்.
(உங) 1935. ,, எஸ். ஈ. ரங்கநாதன்.
(உச) 1940. சர். ,, மகமத் உஸ்மான்.
(உரு) 1942. டாக்டர் சர். ஏ. இலட்சுமணசாமி முதலியார்.
என்பவர்களாம்.

இன்று இந்தியா முழுதும் மொத்தம் 31 பல்கலைக் கழகங்களே உள்ளன. இந்தப் புள்ளி விவரம் 1955-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள்வரையில் எடுக்கப்பட்டு வெளியிட்டுள்ள அறிவிப்பில் காணப்படுகின்றது.

நன்கொடைகள்

பல்கலைக்கழகத்தின் வேண்டுகோளுக்கு இணங்கிப் பலர் நன்கொடை வழங்கியுள்ளனர். அவர்கள் பெயரும் நன்கொடைத் தொகையும் வருமாறு :

| | | | | |
|---|---|---|---|---|
| (க) பின்னி அண்டு கம்பெனி | ரூ. | 125000 | 0 | 0 |
| (உ) பல்கலைக்கழகத்தின் முன்னைய நூல்நிலையக் காப்பாளர் | ரூ. | 100000 | 0 | 0 |
| (ங) எம். சி. டி. எம். சிதம்பரஞ் செட்டியார் டிரஸ்டு | ரூ. | 50000 | 0 | 0 |
| (ச) காலஞ்சென்ற டாக்டர் எஸ். ரங்காச்சாரியின் மனைவி | ரூ. | 35000 | 0 | 0 |
| (ரு) தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை | ரூ. | 25000 | 0 | 0 |
| (சு) டாடா டிரஸ்டு | ரூ. | 25000 | 0 | 0 |
| (எ) ரிசர்வ் பாங்கு | ரூ. | 25000 | 0 | 0 |
| (அ) ஏ. எம். முருகப்பா அறநிலையம் | ரூ. | 25000 | 0 | 0 |

இத் தொகை நூற்றாண்டுவிழாக் கட்டிடத்துக்காக நன்கொடையாக வழங்கியதெனத் துணைவேந்தர் திரு. ஏ. இலட்சுமணசாமி முதலியார், இந்திய முதலமைச்சர் சவகர்லால்நேருவைக் கட்டிடத்துக்குக் கல்நாட்டுவிழா நடத்துமாறு கேட்டுக்கொண்டபோது கூறினார்.

# பல்கலைக்கழக நூல்நிலைய வளர்ச்சி

சென்னைப் பல்கலைக்கழகத்தின் முதல் நூற்றாண்டின் முற்பாதிக் காலம் ஒரு நூல் நிலையத்தின் தேவையை உணரா நிலையிலேயே கழிந்தது. அதற்குக் காரணம், அதுவெறும் தேர்வு நடத்தும் நிலையமாக இருந்தமையேயாகும். பின்னர்ப் புதிதாகப் பல்கலைக்கழகச் சட்டம் வந்ததும் ஆராய்ச்சித் துறையை மேம்படச் செய்தல் வேண்டுமென்ற தெளிவுற்ற எண்ணம் ஏற்பட ஏதுவாயிற்று. சமய வாய்ப்பாக அந்த நேரத்தில் வில்லியம் கிரிப்பித்[1] என்பவர் எழுதி வைத்த இறுதி முறியின் மூலம் ரூபாய் 25,000-மும், 1911-ஆம் ஆண்டில் தில்லி தர்பார் நடந்ததையொட்டி இந்திய அரசாங்கத்தார் அளித்த நன்கொடை மூலம் சில இலட்ச ரூபாய்களும் கிடைத்தன. இவ்விரண்டு தொகைகளையும் கொண்டு ஒரு நூல் நிலையநிதி ஏற்படுத்தப்பட்டது. இது சில ஆண்டுகட்கு வட்டியுடன் பெருகிவரவே பல்கலைக்கழகத்திற்கென ஒரு நூல்நிலையம் இருக்கவேண்டுமென்ற எண்ணம் எழலாயிற்று. 1914-ஆம் ஆண்டில் பல்கலைக்கழகத்திற்கு நன்கொடையாக வந்த நூற்களை வைத்துக்கொண்டு எழும்பூர் உள்ள கன்னிமொரா நூல்நிலையக் கட்டிடத்தின் ஒரு பகுதியில் பல்கலைக்கழக நூல்நிலையம் தோற்றுவிக்கப்பெற்றது. நூல்களை இரவலாக எடுத்துப் போய்வரப் பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினர்கள்[2] மட்டுமே அனுமதிக்கப்பட்டிருந்தார்கள். அப்போது கல்லூரிகளில் நடைபெற்ற பயிற்சி முறையும் கல்லூரி ஆசிரியர்களையோ மாணவர்களையோ நூல்நிலையத்தைக் கட்டாயமாகப் பயன்படுத்தத் தூண்டவில்லை.

1923-ஆம் ஆண்டில் ஏற்பட்ட பட்ரோ பல்கலைக்கழகச் சட்டம்[3] பல்கலைக்கழகத்தினுள்ளேயே ஆராய்ச்சித் துறையைத் துவக்க வழிகோலிற்று. இதுவே பல்கலைக்கழகத்திற்கெனத் தனியாகச் சிறந்த நூல்நிலையம் ஒன்று இருக்கவேண்டியதன் இன்றியமையாமையையும், அதற்கெனத் தனித்தலைவர் ஒருவர் வேண்டியதன் தேவையையும் உணர்த்திற்று. முதல் பல்கலைக்கழக நூல்நிலையத் தலைவர்[4] 1924-ஆம் ஆண்டில் சனவரித்திங்கள் 4-ஆம் நாள் பணியிலமர்த்தப்பட்டார். அவருக்குத் தக்க ஊதியமும் நூல்நிலைய வளர்ச்சிக்கு வேண்டியவற்றைச் செய்யத் தனியுரிமை முதலியனவும் வழங்கப்பட்டிருந்தன. பின்னர் அவருக்குப்

1. William Griffith
2. Senate Members.
3. Patro University Act.
4. University Librarian.

பிரிட்டன் நூல்நிலைய முறையைப்[1] போய்ப் படித்து வரவும் வாய்ப்பளிக்கப்பட்டது.

பல்கலைக்கழக நூல்நிலையக் கட்டிடத்திற்கென விடுமுதல் பணம் ஒதுக்கீடு செய்யப்பட்டபின் நூல்நிலையத்தின் ஆண்டு வருமானம் மிகக் குறைவாக விருந்தது தெரியலாயிற்று. அதனால் உதவி நூல்நிலையத்தலைவர் ஒருவரையும் பணியாட்கள் மூவரையும் மட்டுமே பணியிலமர்த்த முடிந்தது. 1926-ஆம் ஆண்டில் நடந்த மகிழ்ச்சிக்குரிய தற்செயல் நிகழ்ச்சியானது நூல்நிலையம் சிறந்து வளரப் போதுமான வருமானத்தைபெற வழியைத் தோற்றுவித்தது. சென்னையிலிருக்கும் இந்து உயர்நிலைப் பள்ளிக் கட்டிடத்தில் அரசேட்டுப் பதிவற்ற கல்வி அதிகாரிகளின் சங்கத்தின்[2] மாநாடு ஒன்று நடைபெற்றது. அவ்வமயம் முதல் அமைச்சராகவிருந்த டாக்டர் சுப்பராயன் அவர்கள் அதனைத் திறந்து வைத்தார்கள். அம் மாநாட்டில் துவக்க உரை நிகழ்த்த விருந்த பேராசிரியர் ஏதோ காரணத்தால் வரவில்லை. ஆகவே அங்கு வந்திருந்த பல்கலைக்கழக நூல்நிலையத் தலைவரை உரை நிகழ்த்துமாறு வேண்டினர். அவரும் அவ்வாய்ப்பை நழுவவிடாமல் ஐரோப்பா, அமெரிக்கா போன்ற நாடுகளில் நடைபெற்றுவரும் நூல்நிலையங்களைப்பற்றியும் அவை நடைபெற்று வரும்முறை பற்றியும் செம்மையாக விளக்கிக்கூறி, சென்னைப் பல்கலைக்கழகத்திலும் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதற்கு ஒரு திட்டத்தையும் வகுத்துக்கொடுத்தார்.

பின்னர் முதல் அமைச்சர் கூட்டம் முடிந்து போகும் பொழுது நூல்நிலையத் தலைவரிடம் அவர்கூறிய வழிகளில் எல்லாம் அவரது நூல்நிலையத்தை விரிவுபடுத்தப்பணவசதி உள்ளதா என வினவினர். அதற்கு அவரோ ஆண்டுவருமானமே ரூ. 10,000-க்கும் குறைவாக உள்ளது என்று கூறினர். இதன் விளைவாக முதல் அமைச்சரும் முன்வந்து மெஸ்டோன் தீர்ப்பின்[3] மூலமாகச் சிலகோடி ரூபாய்கள் கிடைத்ததையும் அப்பணத்தை அமைச்சரவை பிரித்துக்கொடுக்க உள்ளதையும் கூறி, இந் நூல்நிலையத்திற்கு வேண்டிய திட்டம் ஒன்றை உடனே வகுத்தனுப்பும்படியும் கூறினர். இதன் பயன்தான் சில இலட்ச ரூபாய்கள் நன்கொடையாகவும், ரூ. 65,000 ஆண்டுதோறும் தொடரும் நன்கொடையாகவும்[4] கிடைத்தது.

1. British Library System.
2. Non-gazetted Educational Officers' Association.
3. Meston Award.
4. Recurring grant.

நன்கொடையாகக் கிடைத்த பணத்தை ஐந்தாண்டுகளுக்காக வைத்துக்கொண்டு சிறந்த மேல்நிலை ஆராய்ச்சிக் கட்டுரை நூல்கள்[1] தொகுப்பு நூல்கள்[2] துணை நூல்கள்[3], பத்திரிகைகளின் முன் தொகுதிகள், ஆராய்ச்சித் துறைக்குத் தேவைப்படும் பல்வகை நூல்களும் வாங்கப்பட்டன. அப்பொழுது எல்லா ஆராய்ச்சித் துறைகளும் ஏற்படவில்லையாயினும் பின்னர் ஏற்படுத்தலாம் என்ற முன் நோக்கத்துடனேயே நூல்கள் தொகுக்கப்பட்டன. இந் நோக்கம் பிற்காலத்தில் கைகூடிற்று என்பது மகிழ்ச்சிக்குரியதாகும். ஆண்டுதோறும் கிடைத்த நன்கொடையை வைத்துக்கொண்டு பல்வகையான சிறந்த நூற்களும் பத்திரிகைகளும் வாங்கப்பட்டன. 1932-ஆம் ஆண்டிற்குள் ஒரு சில துறைகளில் ஆராய்ச்சிக்குரிய நூல்நிலையத்தில் என்னென்ன நூற்கள் இருக்கவேண்டுமோ அவை அனைத்தும் இருந்தன.

இந் நூல்நிலையம் இவ்வாறு பல துறைகளிலும் வளர்ச்சியுற்றமையினால் இந்திய நாட்டிலிருந்தும் மற்றைய வெளிநாடுகளிலிருந்தும் பல்வேறு வகைகளில் பயனுள்ள நன்கொடைகள் பல பெற முடிந்தது. 1926-ஆம் ஆண்டு முதல் பன்னிரண்டு ஆண்டுகளில் ஏறக்குறைய 30,000 நூற்கள் நன்கொடையாகக் கிடைத்தன. இந் நூற்கள் பல்வேறு நாடுகளிலிருந்து வரப்பெற்றமையால் அவை பல்வேறு துறைகளிலுமாக இருந்தன. 1944-ஆம் ஆண்டின்போது நூல்நிலைய நூற்களின் எண்ணிக்கை 1,20,000 ஆக உயர்ந்துவிட்டது. நூல்நிலையத்தின் அரிய தொகுப்பு ஒன்று உண்டென்றால் அது அறிஞர் இராமானுசரின் கைப்படிப் புத்தகமாகும்.[4] இந் நூல்நிலையத்திற்கு அது தற்செயலாகத்தான் கிடைத்தது. நூல்நிலையத்தில் தலைவர் பதவி வருமுன் நிலையத்தை மேற்பார்த்து வந்தவர், அறிஞர் ஒருவரின் வரலாறு தயாரித்து வருகையில் பல்கலைக்கழகத்தின் பதிவேடுகளைக்[5] கண்ணுற நேர்ந்தது. அப்பொழுது அவருக்குத் தேவைப்பட்ட கைப்படிப் புத்தகம் இங்கிலாந்திலேயே விடப்பட்டுள்ளது என்பது தெரிய வந்தது. பின்னர் 1925-ஆம் ஆண்டில் அவர் பல்கலைக்கழக நூல்நிலையத் தலைவராக வெளிநாட்டுப் பிரயாணம் செய்தபோது அப் புத்தகத்தை ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் கண்டு இங்குத் திரும்பக் கொண்டுவந்தார். மேலும் 1928-ஆம் ஆண்டில் சுவாமிக்கண்ணுப் பிள்ளையின் சிறந்த பெரிய நூலாகிய இந்திய ஆண்டு விவரக்குறிப்பின்[6] கைப்படியும் கிடைத்தது.

---

1. Advanced treatises. 2. Collected works.
3. Reference books. 4. Manuscript note book of Ramanuja.
5. University Archives. 6. Indian Ephemeris.

1926-ஆம் ஆண்டில் சட்டங்களை மாற்றியமைத்து இம் மாவட்டத்தில் உள்ளவர் எவரும் இந் நூற்களைப் பயன்படுத்த லாம் என ஏற்பாடாயிற்று. நூற்கள் அனைத்தும் செவ்வையாக நிலைப்பேழைகளில் அடுக்கிவைக்கப்பட்டு எளிதில் எடுக்கவும் வைக்கவும வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. தற்போ துள்ள கட்டிடத்துக்கு இந் நூல்நிலையம் 1936-ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்டது. அவ்விதம் மாற்றுங்கால் ஏற்பட்ட திருத்தியமைக்கும் பணிகளை நூல்நிலையங்களுக்கு வந்து நன்கு பழகிய மாணவர்களின் ஒத்துழைப்பினால் எளிதில் செய்யமுடிந் தது நூற்களின் விரிவான தொகுப்புப்பட்டியொன்றும் தயார் செய்யப்பட்டது.

சில ஆண்டுகட்குள் நூல்நிலையம் ஒரு நாளைக்குப் பதின் மூன்று மணிநேரம் திறந்துவைக்க ஏற்பாடு செய்யப்பெற்றது. பின்னர்க் கல்லூரிகட்கும் கல்லூரி விடுதிகட்கும் சென்று வந்த தில் நூல்நிலையத்தின் படிக்கும் உறுப்பினர்களை மேலும் மிகு திப்படுத்தமுடிந்தது. நூல்நிலைய விளம்பரத்திற்குச் சென்னைச் செய்தித் தாட்களும் நல்லபடியாக உதவின. நிலையத்திற்கு வந்து நூல்களை எடுத்துச்சென்று படிக்கமுடியாதவர்கட்கு மூன்று மாதங்கட்கு ஒரு ரூபாய் வீதம் கட்டணம் வாங்கிக்கொண்டு அவர்கள் வீட்டிற்கே புத்தகங்களைக் கொடுத்து வாங்கிவர ஏற் பாடுகள் செய்யலாயிற்று.

முதல் இருபது ஆண்டுகளில் இருபது இலட்சம் பேர்கள் நூற்களைப் பயன்படுத்தி வந்தனர். பின்னர் நூல்நிலையத்தில் மாலைநேரங்களில் நூற்றுக்கணக்கானவர் வந்து மிக அமைதி யாகவும் ஒழுங்காகவும் படித்துப்போவதே ஒரு கண்கொளாக் காட்சியாகுமாம்.

இப் பல்கலைக்கழக நூல்நிலையம் ஒரு மருத்துவ ஆய்வுக் கூடம்[1]போல் பல நூல்நிலைய நுணுக்கமுறைகளைப்[2] புகுத்தி ஆராய்ந்துபார்த்து வளர்ச்சியடைந்தது. இப்பொழுது இந் நுணுக்கங்களைப் பல நூல்நிலையங்களிலும் பயன்படுத்தி வரு கிறார்கள்.

இந்தியாவிலேயே நூல்நிலைய நுணுக்க முறைக்காக[3] ஒரு பள்ளி[4] தோற்றுவித்த பெருமை நம் சென்னைப் பல்கலைக்கழக நூல்நிலையத்தையே சாரும். 1929-ஆம் ஆண்டுமுதல் இரண்டு ஆண்டுகளில் சென்னை நூல்நிலையச்சங்கத்தார் விதைத்த விதையே

1. Clinical Laboratory.  2. Library Technique.
3. Library Science.  4. School of Library Science.

மேலும் வளர்ச்சியுறுவதற்காக 1931 முதல் பல்கலைக்கழக நூல் நிலையத்தாரின் கவனத்திற்கு விடப்பட்டது. அந்த ஆண்டு வகுப்பிற்கு 'நூல்நிலைய நுணுக்கமுறையின் ஐந்து விதிகள்'[1] என்ற நூல் வெளிவந்தது. அதில் 'சென்னை நூல்நிலையச்சங்கம் வளர்த்த செடியானது பூவாகிக் காயாகி அதன் சிறந்த பழங்கள் இந்தியாவின் வடஎல்லையாகிய இமயமலையிலிருந்து தென் எல்லையாகிய குமரிமுனைவரை செழிக்கச் செய்யட்டும்' என்று கண்டிருந்தது. அவ் விருப்பமானது இன்று முழுவதும் நிறைவேறியுள்ளது. இதன் பழைய மாணவர்கள் இன்று இந்தியாவிலும் மற்றைய வெளிநாடுகளிலும் உள்ள பல நூல்நிலையங்களில் தலைவர்களாக இருக்கின்றனர் மேலும் சிலர் நூல்நிலைய நுணுக்க முறைப் பள்ளிகளையே துவக்கியுள்ளனர். இப் பல்கலைக்கழகத்தின் இரண்டாம் நூற்றாண்டு நூல்நிலைய நுண்முறையைப் பண்படுத்தும் வழியில் இன்னுமொருபடி முன்னேற்றத்துடன் துவங்குகிறது ஆராய்ச்சி மாணவர்கள் இக் கலையில் முழுநேரத்தைச் செலவிட்டு ஆராய்ச்சி செய்ய ஏற்பாடுகள் நடந்துள்ளன. ஆகையால் இப் பல்கலைக்கழகம் நூல்நிலைய நுண்கலையை அவ்வப்போது ஏற்படும் மாறுதல்கட்கேற்ப ஆழ்ந்த கருத்துக்கொண்டு சீர்செய்து உலகத்தின் எல்லாப் பாகங்களிலிருந்தும் மாணவர்களை வரச்செய்து பயிற்சிகொடுத்து உலகத்தின் ஒரு முனையிலிருந்து மறுமுனைவரை வளப்படுத்துமாறு வாழ்த்துகின்றோம்.

(ஒப்புபெற்ற பல்கலைக்கழக நூல்நிலையத் தலைவர் திரு. டாக்டர், எஸ். ஆர். இரங்கநாதன் அவர்கள் கட்டுரையினைத் தழுவியது.)

1. Five Laws of Library Science.

# கலைக் கண்காட்சி

பல்கலைக்கழக நூற்றாண்டு விழாவைச்சார்ந்து கிண்டி பொறியியற்கல்லூரியில் நடத்தப்பட்டுவரும் காட்சிக்கு நாள்தோறும் ஆயிரக்கணக்கான மக்கள் வந்து காட்சியைக் கண்டுகளித்துச் செல்லுகின்றனர்.

இக் காட்சி அறிவு வளர்ச்சிக்கான கருவியென்றே கூறலாம். ஒரே நாளில் எல்லாவற்றையும் பார்க்கலாம் என்பது இயல்வ தொன்றன்று. முதன்மாடியில் தொலைக்காட்சி (டெலிவிசன்) அமைக்கப்பட்டுள்ளது. படப்பிடிப்பு நிலையத்தில் சிறுமிகள் நாட்டியம் ஆடுகின்றனர் இதைக் கீழ்த்தளத்தில் இருக்கும் தொலைக்காட்சித் திடலில் காணமுடிகின்றது. இக் காட்சி ஏற்பாட்டை பிலிபஸ் கம்பெனியார் உதவியுள்ளனர்.

தொலைக்காட்சி தவிரத் தற்காலத்து நூல்நூற்பு ஆலையும் அமைக்கப்பட்டுக் காட்டப்பெறுகின்றது. பஞ்சு தூய்தாக்கப் பட்டு நூலாகச் செய்வதிலிருந்து தறிகளில் ஆடையாக்கப்படும் வரையிலுள்ள சிறிய ஆலையொன்று இங்கே வேலை செய்கின்றது.

இசைக்கலைப் பேராசிரியர் திரு. சாம்பமூர்த்தி 'சுவவாதித தம்பூரா' ஒன்றைச் செய்து நிருபர்களுக்குக் காட்டினார். மின் சார நுண்மையால் தம்பூரா தானாக இயங்குகிறது. மூங்கிலிலே செய்யப்பட்டுள்ள பிடில் ஒன்றையும் செய்து அவர் அதில் வாசித்துக் காட்டினார்.

சென்னை அரசியலாரின் பொது மராமத்து இலாகா, நிலச் சீர்திருத்தப் பகுதி, மின்சார இலாகா பகுதிகளில் மக்கட் கூட்டம் மிகுதி. மக்கள் மிக்க ஆவலுடன் பார்க்கின்றனர். நம் நாட்டின் பல்வேறு திட்டங்களின் ஆக்கங்களையும், இனிச் செய்யவிருப்பனவற்றையும் காட்டப்படுகின்றன. குரங்குகள் ஒன்றோடு ஒன்று சேர்ந்து இணைந்து பாலத்தையமைத்த பழங் கால முறைமையிலிருந்து தற்காலத்தில் அமைக்கப்பட்டுள்ள புதிய பாலங்கள்வரை நன்கு காட்டப்படுகிறது. நூறு ஆண்டு கட்குமுன் காவிரியாற்றின்மீது தஞ்சை மன்னர் பாலங்கட்டிய வரலாறு சித்திரங்களின் வாயிலாகவும், புள்ளி விவரங்களின் வாயிலாகவும் கூறப்படுகிறது. மின்சார இலாகாவில் மின்சாரத் தின் எல்லாவகைப் பயன்களையும் எடுத்துக்காட்டுகளுடன் காட்டப்படுகின்றன.

மைசூரிலுள்ள மைய அரசியலார் உணவு ஆராய்ச்சி நிலையம் உடலுக்கு உரம் அளிக்கும் உணவுகளையும் அவற்றை ஆக்கும் வகைகளையும் காட்டுகிறது. இங்கு மோர்ப்பொடியைக் காணலாம். நீர்விட்டுக் கரைத்தால் அது மோராக மாறுகிறது.

அணு ஆராய்ச்சி மாடல் ஒன்றுளது. இயற்கையான நீர் விருந்து எப்படி மின்சார வலிமை உண்டாகிறதென்பதைக் காட்டுகின்றது பொறியியற் கல்லூரி மின்சார இலாகாவினர் பல அரிய காட்சிகளைக் காட்டுகின்றனர். 'அலிபாபா குகை' என்பது ஒன்று. ஒரு பாட்டுப்பாடினால் குகைவாசல் திறப்பதும உள்ளே பல நவமணிகள் தோன்றுவதும், பின்னர்க் குகை மூடிக் கொள்வதும் இதன் சிறந்த செயலாகும். இன்னும் பல அரிய காட்சிகள் வியக்கத்தக்கனவாகவுள்ளன.

## தோசை

இட்டிலி போன்றே தோசையும தமிழகத்தில் தொன்று தொட்டு வழங்கிவரும் சிற்றுண்டி வகையாகும். தோசை என்னும் சொல் தோய் என்றும் பகுதியடியாகப் பிறந்ததாகும். உறைதல், திரைதல், புளித்தல் "தோயும் வெண்டயிர்" (கம்பரா. நாட்டுப். 28) இட்டிலி மாவினும் தோசைமா மிகப் புளித்திருத்தல் வேண்டும். இல்லாக்கால் சட்டியில் எழும்பாது; எளிதாய் வேகாது; சுவையாயுமிராது. தோய் - தோயை - தோசை ய - ச போலி. இன்றும் நாட்டுப்புறத்தார் சிலர் தோயை என்றே வழங்குவர். தோசை என்ற தூய தமிழ்ச்சொல் மலையாளத்தில் 'தோச' என்றும் கன்னட தெலுங்கு மொழிகளில் 'தோசை' என்றும் வழங்குகின்றது.

—ஞா. தேவநேயப் பாவாணர்.

# பல்கலைக்கழகத்தில் தமிழாராய்ச்சி

[பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை]

தமிழ்நாட்டில் அமைந்துள்ள சென்னைப் பல்கலைக்கழகம் தமிழ்மொழி ஆராய்ச்சிக்கும் தமிழ் இலக்கிய ஆராய்ச்சிக்கும் பெரிதும் சேவை செய்திருக்கிறதென்று சொல்லவேண்டியதில்லை. இந்தச சேவையிலே, பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த ஆராய்ச்சிப் பிரிவினர் மட்டுமன்றி, அதன் பழைய மாணவர்களும் ஆசிரியர்களுங்கூடப் பங்குகொண்டிருக்கின்றனர்

மொழி ஆராய்ச்சித் துறையிலே தமிழ் அகராதித் தயாரிப்பை முதன்மையான சாதனையாகக் குறிப்பிடவேண்டும். 1936-இல் பூர்த்தியான இந்த அகராதியில் சேர்க்கமுடியாமற் போன சுமார் 20,000 சொற்கள், பிற்பாடு, பல்கலைக்கழகத் தமிழாராய்ச்சிப் பிரிவினரும் அகராதி வேலையில் ஈடுபட்டிருந்தவர்களுமாகச் சேர்ந்து உழைத்ததன் பயனாக, அநுபந்தமாய் வெளியிடப்பட்டன. அதன் பிறகு 1954-ல் சுருக்கமான தமிழ் அகராதியொன்றும் தமிழ்ப் பிரிவின் மேற்பார்வையில் சென்னை லா ஜர்னல் அச்சுக் கூடத்தினரால் வெளியிடப்பட்டது.

தமிழ்த் துறைப் பேராசிரியர் தலைமையில், பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த திராவிட மொழிப் பிரிவுகளனைத்தின் தலைவர்களாலும் தயாரிக்கப்பட்டுத் தற்போது அச்சாகிவரும் திராவிடச் சொற்கள் ஒப்பகராதி மற்றொரு முக்கியமான ஆராய்ச்சி நூலாகும். 'தமிழகம்: ஊரும் பேரும்' என்னும் பெயரால், தமிழ் நாட்டிலுள்ள ஊர்ப் பெயர்களைப்பற்றி தமிழ்த் துறைப் பேராசிரியர் திரு. ரா. பி சேதுப்பிள்ளை அவர்கள் வெளியிட்டுள்ள ஆராய்ச்சி நூல் சென்னை அரசாங்கத்தாரின் ரூ. 500 பரிசைப் பெற்றிருக்கிறது. பேராசிரியரால் வெளியிடப்பட்டுள்ள 'சொற்களும் அவற்றின் விசேஷமும்' என்னும் மற்றொரு நூல், சொற்பொருளாராய்ச்சிபற்றியதாகும். தமிழ்மொழியின் சொல் அமைப்பு, சொல் தொகுதி ஆகியவை சம்பந்தமான சில அம்சங்களைப்பற்றி, ஒப்பு நோக்கு மொழியாராய்ச்சித் துறைப்பேராசிரியரான மார்க்காலன்ஸ் அவர்கள் மேற்பார்வையில், பல்கலைக் கழகத்தால் நியமிக்கப்பட்ட ஆராய்ச்சியாளர்கள் சிலர் ஆராய்ந்து கண்டுள்ள முடிபுகள் 'திராவிட ஆராய்ச்சிகள்' என்ற பெயரில் 1923-ல் வெளியிடப்பட்டிருக்கின்றன. ஜூனியர் தமிழ் விரிவுரையாளரான திரு. வேங்கடராஜுலு ரெட்டியார் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ள கீழ்த்திசைக் கலை ஆராய்ச்சிப் பிரசுரங்

களில் தமிழிலுள்ள இலக்கணப் பாகுபாடுகள் பற்றிப் பல அரிய கட்டுரைகள் எழுதியிருக்கிறார்கள். வெகுகாலமாய்க் கிடைக்காமலிருந்த கால்ட்வெல் ஒப்பிலக்கண நூலைத் திரும்பவும் அச்சிட்டது மதிராவிட மொழிகளுக்குப் பல்கலைக்கழகம் செய்துள்ள ஒரு பெரிய சேவையென்றே சொல்லவேண்டும்.

இலக்கிய ஆராய்ச்சித் துறையை எடுத்துக்கொண்டால், பழம்பெருங் காவியங்களில் பெரும்பாலானவற்றிற்குத் திருத்தமான பதிப்புக்கள் வெளிவருவதற்குச் சென்னைப் பல்கலைக் கழகம் உதவி புரிந்திருக்கிறது. பல்கலைக்கழகத்தின் முதலிரண்டு பட்டதாரிகளில் ஒருவரான திரு சி. வி. தாமோதரம் பிள்ளையவர்கள் கலித்தொகையையும் நச்சினார்க்கினியரின் தொல்காப்பிய உரையையும் ஆராய்ச்சி விளக்கத்துடன் பதிப்பித்திருக்கிறார்கள். இந்தப் பல்கலைக்கழகத்தோடு இணைக்கப்பட்டுள்ள கல்லூரியொன்றில் தமிழாசிரியராயிருந்து பெரும் புகழ்பெற்ற டாக்டர் சாமிநாதையரவர்கள் சங்க இலக்கியங்களைச் சந்தேகத்துக்கிடமில்லாத வகையில் அருமையாகப் பதிப்பித்துத் தமிழுலகத்துக்கு வழங்கியுள்ளார்கள். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றின் திருத்தமான பதிப்பொன்றை திரு. எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள் 'சங்க இலக்கியம்' என்ற பெயரில் வெளியிட்டுள்ளார்கள். 'கபிலர்', 'பரணர்' என்ற நூல்களில் திரு. வேங்கடராஜுலு ரெட்டியாரவர்கள், இவ்விரு பெரும்புலவர்களைப்பற்றிய தமது ஆராய்ச்சியை வெளியிட்டுள்ளார்கள். திரு. கே. என். சிவராஜ பிள்ளையவர்கள் 'பண்டைத் தமிழர்களின் கால ஆராய்ச்சியில் சங்ககாலத்து மன்னர்களையும் சிற்றரசர்களையும் பற்றிய வரலாற்றைத் தொடர்ச்சியாக எடுத்துரைத்திருக்கிறார்கள். பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை தமிழ் இலக்கியத்தையும் பண்பாட்டையும் பற்றி எழுதியுள்ள கட்டுரைகளின் தொகுதியான தமிழ் இன்பம், சுதந்தரத்துக்குப் பின் வெளிவந்த தமிழ் நூல்களில் சிறந்ததாகக் கருதப்பட்டு, இந்திய அரசாங்கத்தாரின் ரூ. 5000 பரிசைப் பெற்றுள்ளது. பல்கலைக்கழகத்தின் சீனியர் விரிவுரையாளரான டாக்டர் எம். ஏ. துரை அரங்கசாமி இயற்றிய கட்டுரைத் தொகுதிகளான 'பண்டைத் தமிழ் நெறி', 'இலக்கியக் கட்டுரைகள்' இரண்டும் தமிழிலக்கியம் பயிலும் மாணவர்களுக்குப் பெரிதும் உதவும் ஆராய்ச்சி நூல்களாகும்.

எப். டபிள்யூ, எல்லிஸ் என்பவரால் எழுதப்பட்டுச் சுமார் 65 வருஷங்களுக்குமுன் வெளியிடப்பட்ட குறட்பா விளக்கவுரையைப் பல்கலைக்கழகம் சரிபார்த்து மீண்டும் பதிப்பித்திருக்

கிறது. ஆங்கிலத்தில் உள்ள இந்த விளக்கத்தில், திருக்குறளின் முதல் 13 அதிகாரங்களிலிருந்து எடுக்கப்பட்ட சில குறள்களுக்கு, மேற்கோள்களுடனும் விசேஷக் குறிப்புக்களுடனும் அருமையான விளக்கங் கூறப்பட்டிருக்கிறது.

சமய நூல்கள் சம்பந்தமாகவும் பல்கலைக்கழகம் அரிய சேவை செய்திருக்கிறது. நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழிக்கு மணிப்பிரவாள நடையிலுள்ள விளக்க உரைகளை, எளிதில் புரியக்கூடிய தற்கால நடையில் எழுதும் பெரும் பணியைப் பல்கலைக்கழகம் ஜூனியர் விரிவுரையாளரான திரு. பி. ஆர். புருஷோத்தம நாயுடு மேற்கொண்டுள்ளார்கள். 10 பகுதிகளில் எட்டுப் பூர்த்தியாகியிருக்கின்றன.

சைவ நூல்கள் பலவும் பல்கலைக்கழகத்தில் வெளியிடப்பட்டிருக்கின்றன. சிவாக்ர யோகியின் சிவநெறிப் பிரகாசத்தைத் தமிழ் ரீடராயிருந்த திரு அனவரத விநாயகம் பிள்ளையவர்கள் வெளியிட்டிருக்கிறார்கள். தேவாரத்தைப்பற்றிய ஆராய்ச்சியை டாக்டர் துரை அரங்கசாமியவர்கள் மேற்கொண்டிருக்கிறார்கள். சுந்தரரைப் பற்றிய விரிவான ஆராய்ச்சியைக் கொண்ட அவர்களது நூல், நான்கு பகுதிகளாகத் தற்போது அச்சாகி வருகிறது. திருவெம்பாவைக்கும் அவர்களே ஒரு விளக்கம் எழுதியிருக்கிறார்கள். ஜைனர்கள் போற்றும் ஸ்ரீபுராணத்தைத் திரு. வேங்கடராஜுலு ரெட்டியாரவர்கள் வெளியிட்டுள்ளார்கள்.

அறிஞர்களைக்கொண்டு ஆராய்ச்சி விரிவுரைகள் நடத்தியது பல்கலைக்கழகம் ஆற்றியுள்ள மற்றொரு அரும்பணியாகும். சங்க காலத்துத் தமிழரையும் பிற்காலத்துத் தமிழரையும்பற்றி டாக்டர், சாமிநாதையரவர்கள் பல விரிவுரைகள் நிகழ்த்தியிருக்கிறார்கள்; இவை, 'சங்ககாலத் தமிழும் பிற்காலத் தமிழும்' என்ற நூலில் சேர்க்கப்பட்டுள்ளன. ஆழ்வார்கள் காலத்தைபற்றித் திரு. மு. இராகவையங்கார் அவர்கள் நிகழ்த்திய விரிவுரைகள் ஒரு தனி நூலாக வெளிவந்துள்ளன. பண்டை இசைக்கலை பற்றிய தமது ஆராய்ச்சி முடிவுகளை சுவாமி விபுலானந்தர் அவர்கள் விரிவுரைகளில் எடுத்துரைத்ததுடன் யாழ் நூலிலும் விளக்கியிருக்கிறார்கள். பெரிய புராணத்துக்கு விரிவுரை எழுதிப் பெயர் பெற்ற திரு சி. கே. சுப்ரமணிய முதலியாரவர்கள் சேக்கிழாரைப் பற்றித் தொடர்ந்து விரிவுரையாற்றியிருக்கிறார்கள். இவையன்றி, தமிழிலக்கியத்தின் முக்கிய அம்சங்கள் பலவற்றைப் பற்றி அவ்வப்போது சென்னைநகரிலும் ஏனைய இடங்களிலும் சிறப்பான விரிவுரைகளுக்குப் பல்கலைக்கழகம் ஏற்பாடு செய்து வந்திருக்கிறது.

தற்போது பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியராய் உள்ளவர்கள், இலக்கிய வளர்ச்சிக்காகவும், மொழி வளத்துக்காகவும் இந்திய அரசாங்கத்தாலும் சென்னை அரசாங்கத்தாலும் பல்கலைக் கழகங்களாலும் அமைக்கப்பட்ட குழுக்கள் பலவற்றில் அங்கம் வகித்துச் சேவை புரிந்திருக்கிறார்கள். பல்கலைக்கழகத்தின் தமிழாராய்ச்சித் துறையைச் சேர்ந்தவர்கள் அகில இந்தியக் கீழ்த் திசைக் கலை மகாநாட்டின் கூட்டங்களில் பங்குகொண்டிருக்கிறார்கள். திரு. எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள் திராவிட மொழி ஆராய்ச்சிக்கான திட்டமொன்றை இம் மாநாட்டுக்குச் சமர்ப்பித்திருக்கிறார்கள். சிலப்பதிகாரத்தின் சமயமும் தத்துவமும் என்பது பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரையொன்று, சினியர் விரிவுரையாளரால் இம் மாநாட்டின் லட்சுமணபுரிக்கூட்டத்தில் வாசிக்கப்பட்டது. பேராசிரியர் அவர்கள் சென்ற ஆண்டுக் கூட்டத்தில் திராவிடப் பகுதிக்குத் தலைமை தாங்கினார்கள்.

## காண்க யாம் அதனை !

மனிதன் வாழ்வுக் கேற்ற வகையில்
வளர்ந்த சமூக மதனில் அமைந்த
சட்டமும் மதமும் இட்ட முறைப்படி
ஒழுகுதல், ஒன்றோ, வாய்ப்பு நேர்ந்துழி
விழுமி தாய்த்தன் உணர்வும் நேர்மையும்
கொண்டுசெய லாற்றலும், குறிக்கோள் அடையா
வழியும் முனைகுதல் இல்லா எழில்சேர்
நடையும், மற்றுப் புலன்நடக் கும்வழி
நடந்தின்பம் தேடலின் அவற்றை அடக்கி
நயமுற வாழ்தலும், நயனிலாக் கொள்கைகள்
மலியுல கதனில் மாண்புறூஉம் உண்மையைக்
கண்டாய்ந்து வாழ்தலும் கவின்பெறு வாழ்வெனக்
கண்டார் பெரியோர் காண்கயாம் அதனையே.

—வித்துவான், பழநி மகாதேவன்.

# தமிழ்விருத்தம் தழைத்த விதம்[1]

[நெல்லை. திரு. க. சுப்பிரமணியன்]

(சிலம்பு: ௩௦, பரல்: ௧௨, ௩௪௧-ஆம் பக்கத் தொடர்ச்சி)

சம்பந்தர் காலத்துக்கு நம் சிந்தனை செல்லும்போது, இசைத்தமிழுக்கே அவர் முதலிடந் தருகின்றாரெனக் கண்டு கொள்கின்றோம். அதுவும், இசை பொருந்தப் பாடும் பாட்டுக்கும், தனித்தமிழ் இசைக்கலைக்கும் அவர் சிறப்பான நிலை ஏற்படுத்தினார். அவரது நூலில் ஒவ்வோர் இயலையுமோ, ஒவ்வொரு செய்யுளையுமோ, நாம், வீணையின் ஏழ்வகை நரம்பினையுங் கட்டுப்படுத்தும் அடிப்படையான இசையுறுப்புக்களோடு ஒப்பிட்டுக் காணவும் இடம் இருக்கின்றது. செங்கோட்டு யாழ் என்பது அவர் வாழ்ந்த கால வழக்கத்தில் உள்ளதாகும். யாழில் அமைத்தே ஒவ்வொரு செய்யுளையும் பாடுவது, அக்காலத்தார் பெருமிதமாகக் கொண்டிருந்த பழக்கமாகும். அத்தகைய செல்வாக்கான போக்கினைப் புறங்கண்டுதான், சம்பந்தர் தம் யாழ்முரிப் பண் அமைந்த பாடல்களைத் தருமபுரக் கோயில் திருமுன் பாடலானார். இப்போதும் அந்த யாழ்முரிப் பண் அமைந்த பாடல்களை வீணையின் மூலம் இசைக்கலாம். எனவே விருத்தப் பாவியல் முறைக்கேற்ப, அதன் செய்யுளிலக்கணம் கீழ்வருமாறு கூறக் கிடக்கின்றது.

"முன்னது கூவிளமே அதன் பின்னது காய்தனை
அடை அது தனி நிரைநடுவினிற் பொருந்தி
அன்னவை தம்பிறகே இருசீர்களுங் கூவிளம்
கருவிளம் பகுத்திட இரண்டிரண் டெனவே
சொன்னவை நால சையா மசைநீ ருடனேவரச
சொலுங்கடை முடிபவை யொருவிளம் புளிமா
இன்னது யாழ்முரிப் பண்ணென ஞானசம்பந்தன்ப
கரும் தனி நடையுடை கவியெனப் பகரே."

அவரது தனிச் சிறந்த—பிறர்க்கு எடுத்துக்காட்டான சந்தப்பா இஃது ஒன்று மட்டுமே அன்று, "பந்தத்தால் வந்தெப்பால்" (திருக்கழுமலம்—திருத்தாளச் சதி—பண்—வியாழக்குறிஞ்சி) என்ற செய்யுளையும் நீவிர் காண்குவீராயின், அது, சந்தக் கலித்துறையின் இருவகை இணைந்த செய்யுளெண்

---

1 The Evolution of Tamil Viruthams—என்னும் கட்டுரையின் தமிழாக்கம்.

றும், அவரைப் பின்பற்றிப் பாட்டியற்றிய எவரும் ஆக்கமுடியாமற்போன செய்யுளென்றும் தெள்ளிதின் உணரலாம். இசை நலம் பொருந்தப் பாடும் பாட்டுக்களில், சம்பந்தர், புதுப்படைப்பாகப் பலவற்றை அருளியிருக்கின்றார். அவையெல்லாம் செய்யுளிலக்கண விதிகட்குப் பொருந்துவனவே ஆகும். ஆயினும், அவற்றுட் பல, பின்றைக் காலத்துப் புலவராற் பின்பற்ற முடியாதவாறுள்ளன. ஆதலின், அவை, வழக்கிறந்து பழமையாய்த் தோன்றுகின்றன. இஞ்ஞான்றும், பொதுவாகப் புலமைத்திறம் வாய்ந்த எவரும், அவ்வளவு எளிதாக அவற்றை மறுமலர்ச்சியடையச் செய்து பாடுதல் முடியாது

சிலப்பதிகாரத்தில், தமிழ் விருத்தம் தழைத்தோங்கி வளர்வதற்கான வித்துக்கள் கண்டுகொண்டோம்; எனினும், அவ் விருத்தப் பாக்கள் சிலவே ஆதலின், அறுதியிட்டு எதுவுஞ் சொல்ல நமக்கு வாய்ப்பில்லை. ஒன்று மட்டும் நாம் உரைக்க முடியும். சேர சோழ அரசுகளில் வாழ்ந்த செந்தமிழ்ப் புலவர், பாண்டி வேந்தனது கோநகரான மதுரையில் இருந்த சங்கப் புலவர் ஆணையைப் பண்டஞ் செய்தாரல்லர். சோழநாடு இந்தப் போக்கினை நூற்றாண்டுக் கணக்கில் போற்றிப் பேணிற்று. சோழ நாட்டுப் புலவர், தம் வேந்தன், பாண்டி வேந்தனைவிட மேலோன் எனவும் நம்பினர். சீகாழியில் தோன்றிய ஞானசம்பந்தர் பாடலை அணுகினால், அவரது மனத்துணிவின் தனிநிலையை நாம் அறிந்து கொள்கின்றோம். அவர் செய்யுள், முத்தமிழ் முழுதும் தழுவியமைந்த விழுமிய நிலையில் நிற்பதையும் நன்கு அறிகின்றோம். ஆய்ந்து பார்க்குங்கால், அவரின் பாட்டுக்கள், தித்திக்கும் முத்தமிழின் துறையனைத்தும் நிறைவு செய்கின்றன.

இனி நாம் நம் செய்யுளிலக்கியத்தில் காணக்கிடக்கும் விருத்தப்பா வகைகள் எல்லாவற்றையும் ஆராய முற்படுவோம் அன்றியும், அவற்றுள் எவ்வெவை சம்பந்தர் தேவாரத்துள் அமைந்தன போல்வன எனவுங் காண்போம்.

விருத்தப் பாக்களிலெல்லாஞ் சிறியது வஞ்சி விருத்தமே. அதன் பெயர் அறிவிக்குமாறு, அது, வஞ்சிப்பாவினின்றே வந்தது எனத் தெளிதல் எளிதாம். இவ்வஞ்சி விருத்தம் இரு வகைப்படும்; அவை, குறளடி வஞ்சி விருத்தம், சிந்தடி வஞ்சி விருத்தம் என்பன. முன் சொன்ன குறளடி வஞ்சி விருத்தம் மட்டும், சம்பந்தர் தேவாரத்தில், குறிஞ்சிப் பண் பொருந்த எழுபத்து ஏழு பாட்டுக்களும், கொல்லிப் பண் பொருந்த இருபத்து இரண்டு பாட்டுக்களும் அடங்கியுள்ளன. கீழ்வருவன மேற்சொன்னவற்றிற்கு எடுத்துக்காட்டாம்:

வாசி தீரவே
காசு நல்குவீர்
மாசில் மிழலையீர்
ஏசல் இல்லையே

திருவீழி மிழலை
பொது
பண்—கொல்லி
திருவிருக்குக் குறள்

கல்லால் நீழல்
அல்லாத் தேவை
நல்லார் பேணார்
அல்லோம் நாமே

பொது
பண்—கொல்லி
திருவிருக்குக் குறள்

இன்னும் பின் சொன்ன சிந்தடி வஞ்சி விருத்தம் மட்டும், சம்பந்தர் தேவாரத்தில், தக்கராகம் பண் பொருந்த ஐம்பத்து ஐந்து பாட்டுக்களும், வியாழக் குறிஞ்சிப் பண் பொருந்த நாற்பத்து நான்கு பாட்டுக்களும் அடங்கியுள்ளன. நுணுகி நோக்குமிடத்து, வியாழக் குறிஞ்சிப் பண் பொருந்தப் பாடியுள்ள பதிகங்களிற் சில, நாற்சீரடி விருத்தங்களாகக் காணப் பட்டாலும், தக்கராகப் பண் பொருந்தப் பாடியுள்ள பதிகங்கள் முழுதும் முச்சீரடி விருத்தங்களாக அமைந்திருக்கக் காண் கிறோம்.

"அடலே றமருங் கொடியண்ணல்
மடலார் குழலா ளொடுமண்ணும்
கடலார் புடைசூழ் தருகாழி
தொடர்வா ரவர்தூ நெறியாரே." —சீகாழி-பண்-தக்கராகம்.

தொல்காப்பிய உரைகாரருள் ஒருவரான பேராசிரியர், அந் நூலின் ௪௯௭-ஆம் நூற்பாவுக்கு உரைவிளக்கஞ் செய்யு மிடத்து, இத்தகைய விருத்தப்பாக்கள், யாப்பியலின் வேறுபட்ட கொச்சக வொருபோகு போல்வனவாகவும் அதற்குறவுடையன வாகவும் காட்டுகின்றார். அவர் அதற் கெழுதும் உரை இது.

"இனி யாப்பின் வேறுபட்ட கொச்சக வொருபோகோ டொப்பனவற்றுள் சில வருமாறு :—

மன்று பார்த்து
நின்று தாயைக்
கன்று பார்க்கும்
இன்றும் வாரார்

என்பது, இருசீர் நான்கடித் தரவு கொச்சகம்.

தஞ்சொல் வாய்மை தேற்றி
அஞ்ச லோம்பென் றகன்ற
வஞ்சர் வாரா ராயின்
நெஞ்ச நில்லா தேதான்

என்பது முச்சீர் நான்கடித் தரவு கொச்சகம்.

ஊரலர் தூற்றத் துயிலா நெடுங்கட்குல்
வாரல ராகி யவரோ வலித்தமைந்தார்
ஆரலார் நாரைகா ளன்றில்கா ளன்னங்காள்
ஊரலர் தூற்றயா னுள்ள முகுவேனே.

என்பது நாற்சீர் நான்கடித் தரவு கொச்சகம்"

பேராசிரியர் உரைத்தது திரிவுபட்ட விரித்துரையாய் ஒரு புறமிருக்க, இவையெல்லாம் உயர்தரப் பாட்டமைப்புக்களின்றும் வெளிப்படையாகவே வேறுபட்ட பாட்டுருவங்களாதும் என்பது அங்கையங்கனி. முதலிரண்டு பாட்டுக்களும் ஆசிரியத்தளை பயின்றும், மூன்றுவதொன்று வெண்டளை பயின்றும் நின்றன.

நாற்சீர் நான்கடி விருத்தப் பாக்களாலாய இலக்கியங்கள் இன்றைத் தமிழுலகில் நிரம்பவுள்ளன. இத்தகையவை ஆசிரியத்தளை அல்லது வெண்டளை பொருந்திச், சம்பந்தர் தேவாரத்தில், தக்கராகப் பண் அமைந்த 'மடையில் வாளை பாய மாதரார்' என்ற பதிகத்தோடு பதினோரியல்கள் உள்ளன. வெண்டளை மட்டும் பொருந்திய மேற்சொன்ன வகையான பாட்டுக்கள் பலவும் பொதுவாகப் பழந்தக்கராகம் பண் பொருந்தப் பாடப் படுவனவாகும்.

இவ்வாறாக ஆசிரியப்பா வெண்பா இவற்றின் நாலடிகளிலும் முற்றும் அடியெதுகை அமையப்பாடும் முறையில், சீர்களின் இணைப்பும் வேறுபாடும் காரணமாகப் பலவேறு வகையான கலிவிருத்தப் பாக்கள் தோன்றலாயின. இக் கலிவிருத்தங்களில் வஞ்சித்தளை நன்கமையப் பெறுமாறு, இணையற்ற இசைத் தமிழ்ப் பாட்டுக்களை ஞானசம்பந்தர் சிறப்பான நிலையில் பற்பலவாகப் பாடி யருளியுள்ளார். ஞானசம்பந்தரைப்பற்றிச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் இசைக்கின்றார் பார்மின் :

" நல்லிசை ஞானசம் பந்தனு நாவுக்
கரசரும் பாடிய நற்றமிழ் மாலை."

சுந்தரரின் பாட்டுக்களை ஆராய முற்படின், அவற்றுட் பல, சம்பந்தர் பதிகங்களைப் பெரிதும் பின்பற்றியனவாகவே காணப்படும். சுந்தரர் முதன்முதற் பாடிய திருவெண்ணெய் நல்லூர்ப் பதிகமானது, சம்பந்தர் பாடிய 'வண்டார் குழல் அரிவையொடு பிரியாவகை பாகம்' என்று துவங்கும் பதிகத்தையும் இன்னும் பலவேறு திருக்கோயில்களிற் பாடிய பத்துப் பதிகங்களையும் ஒத்து விளங்குவது நன்கு அறியப்படும்.

# திருக்குறளும் சிலப்பதிகாரமும்

[டாக்டர், திரு. அ. சிதம்பரநாதச் செட்டியார்]

(செல்வி, சிலம்பு, ௩௧, பரல், ௪. ௧௬௭-ஆம் பக்கத் தொடர்ச்சி)

"செய்தக்க அல்ல செயக்கெடும்; செய்தக்க
செய்யாமை யானும் கெடும்."

என்ற திருக்குறள் சிலப்பதிகாரத்து ஊர்காண் காதையில் வரும் கோவலன் செய்தியால் நன்கு விளங்கிற்று. கோவலன் மதுரைக் குப் புறத்தே வந்து தங்கி இருந்தவன், கவுந்தி அடிகளையும் கண்ணகியையும் புறச்சேரியிலேயே தங்கவிட்டு மதுரையை நோக்கிச் செல்கிறான். அவ்வாறு செல்வதன் நோக்கம் மதுரை யில் தன் இனத்தவர் வாழுகின்ற இடத்தினைக் கண்டறிந்து வருதல் என்பது ஆகும். இதனை அவன்,

"தொன்னகர் மருங்கின் மன்னர் பின்னோர்க்கு
என்னிலை உணர்த்தி யான்வருங் காறும்
பாதக் காப்பினள் பைந்தொடி ஆகலின்
ஏதம் உண்டோ அடிகள் ஈங்கு."

என்றமையால் அறியலாம். உண்மையில் மதுரையைச் சுற்றிச் சுற்றித் திரிந்து வந்தவன், போன செயலை மறந்துவிட்டு வறிதே மீண்டுவிட்டான் என்பதாகவே சிலப்பதிகாரம் காட்டுகின்றது. தன் இனத்தார் எங்குளர் எனக் கண்டு திரும்பி வருவதாகச் செப்பிப் போனவன் தெருவெலாம் உள்ள அழகுகளைக் கண்டு கண்டு மயங்கி நின்று முச்சந்தியிலேயும், நாற்சந்தியிலேயும், முடுக்குத் தெருக்களிலேயும், திரிந்து, காவலன் பேரூரைக் கண்டு மகிழ்வெய்தி, போன செய்தியை மறந்தே மீண்டு விட்டான் எனவே சிலப்பதிகாரம் சொல்லுகிறது. இந்த இடத் தில் செய்யத்தக்கதை அவன் செய்யாது விட்டான் என்பது அழகுபடக் காட்டப்பட்டுள்ளது. ஒருவேளை, தன் இனத்தவர் வாழும் வீட்டைக் கண்டறிந்து, அவர் வீடுகள் ஒன்றனுள் கோவலன் மனைவியோடு புகுந்து இருப்பானே ஆயின், அவர்கள் வழியாகவே சிலம்பினை விற்றிருத்தல் கூடும். சிலம்பினை எடுத் துக்கொண்டு தெரு வழியே வாங்குவார் இன்றிப் போகவேண்டிய அவசியம் இருந்திராது. இஃது இல்லை எனில், தெருவில் பொற் கொல்லன் அவனைக் காணப்போவதும் இல்லை, கண்டு பொய்க் குற்றம் சார்த்துவதும் இல்லை. எனவே, கோவலன் தன் பணி

யைச் செய்யாததனாலேயே சாவ வழி தேடிக்கொண்டான் என்பது தோன்றுகிறது. திருக்குறளில் வருகின்ற

"செய்தக்க செய்யாமை யானுங் கெடும்."

என்ற பகுதி இச் செய்தியால் வலியுறுதல் காண்க.

கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் ஆகிய மூவரும் உறையூரை நண்ணுதற்கு முன்னர் ஓரிடத்தில் தங்கி இருந்தார்கள். அப்பொழுது அவர்கள் வழியே வந்த பரத்தர் இருவரும் சில சொற்கள் தவறுதலாகச் சொல்லி விட்டனர். கோவலன், கண்ணகி ஆகியோரை நோக்கி, கவுந்தியடிகள்மாட்டு அவர் யாரிவர் என்ற வினாவை இப் பரத்தர் எழுப்ப, அவரும் "அவர் எம் மக்கள் ஆவர்" என்றார். இந்த இடத்தில் கோவலன் கண்ணகியை அவர் மக்கள் என்றது பொதுவாக தவம் உடையாருக்கு யாவரும் மக்கள் என்ற கருத்தினால் ஆகும். ஆனால், அப் பரத்தரோ இவ்விருவரும் உடன் பிறந்தவர்கள் எனத் தவறாகக் கருதிக் கொண்டனர். அக் காரணத்தால் அவர்கள் "உடன் பிறந்தவர்கள் இவ்வாறு ஒன்றிய வாழ்க்கை உடையவராக இருத்தல் உண்டோ?" எனக் கேட்டு விட்டனர். அடிகளால் அவர்களது கூற்றினைப் பொறுக்க முடியவில்லை கோவலன் கண்ணகியை அண்ணன் தங்கை எனத் தமது சொல்லைக் கொண்டே தவறுதலாக உணர்ந்து கொண்டார்கள் என்று அடிகளார் நினைக்கவில்லை. பரத்தர்கள் "உங்கள் ஊரில் சோதரர்கள் கணவன் மனைவி போல் இருத்தல் உண்டோ?" எனக் கேட்டு விட்டார்களே என்பது போன்ற கருத்தினால் அடிகளார் வெகுளி வாய்ப்பட்டார். ஆதலால், அப் பரத்தர் இருவரையும் நரி ஆகுக எனச் சபித்து விட்டார். அவ்வாறு அவர் இருவரையும் சபித்தது பெருமையுடையது ஆகாது என்றும், அவர் செய்த குற்றத்தைப் பொறுத்தலே பொருந்துவது ஆகும் என்றும் கோவலனும் கண்ணகியும் அவ்வடிகளுக்கு எடுத்துக் கூறினார்கள் என்று சிலப்பதிகாரம் செப்புகிறது.

"நெறியின் நீங்கியோர் நீரல கூறினும்
அறியா மையென் றறிதல் வேண்டும்."

என்று கோவலனும் கண்ணகியும் கவுந்தி அடிகளுக்கு எடுத்துக் கூறினர் என அறிகிறோம். இதனால், கோவலன் கண்ணகியினுடைய பெருமை துலங்குகின்றது; அதே நேரத்தில், "குணம் என்னும் குன்றேறி நின்ற" அடிகளாரின் சினத்தின் கொடுமை அறியப்படுகிறது. அதனால் அன்றோ,

"ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து."

என்று கூறினர் திருவள்ளுவர்? எனவே, பரத்தரை உடனே உறுத்துவிட்ட கவுந்தியடிகளைப் பொதுவாக மக்கள் பெரிதும் மதிப்பதில்லை. அவர்களைப் பொறுக்க வேண்டுமென்று கூறிய கோவலன் கண்ணகி ஆகியோருடைய திறத்தைத்தான் பலரும் பாராட்டுகின்றனர் என்பது வெளிப்படை.

வழியே சென்று கொண்டிருந்த பரத்தர்கள் தம் வேலையைப் பாராமல் வீணுக வழிப்போக்கர்கள் செய்தியில் தலைப்பட்டு "உடன் வயிற்றோர்கள் ஒருங்குடன் வாழ்க்கை கடவதும் உண்டோ, கற்று அறிந்தீர்" எனப் பயனில் சொற்களைக் கவுந்தி யடிகள் இடத்தில் சொல்லிய காரணத்தால் அன்றோ ஓர் ஆண்டிற் காவது நரிகளாக இருக்கும்படி சபிக்கப்பட்டனர்.

"சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்."

என்ற திருக்குறளில் வருகின்ற பயனில்லாத சொற்களைச் சொல்லக் கூடாது என்ற கருத்து இங்கு வலியுறுகிறது அன்றோ?

"மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானம்செய் வாரின் தலை"

என்றார் திருவள்ளுவர். ஒருவர் வாய்மையைப் பேசுகின்றவர் "தவமும் தானமும் செய்வாரைக் காட்டிலும் சிறந்தவர்" என்பது கருத்து. இக் கருத்தே சிலப்பதிகாரத்தில் ஓரிடத்தில் வற்புறுத்தப்படக் காண்கிறோம். சேர நாட்டிலுள்ள மாங்காடு என்ற ஓர் ஊரிலிருந்து வந்த மறையவன் ஒருவன் மதுரைக்குப் போகும் வழிகளுள் ஒன்றில் மூன்று பொய்கைகள் உள என் றும், அவற்றுள் ஒன்றில் நீராடினல் ஒருவருடைய மன விருப் பம் நிறைவேற்றப்படுமென்றும் கூறினன்.

"இட்ட சித்தி எய்துவிர் ஆயின்
இட்ட சித்தி எய்துவிர் நீரே."

என்பது அவன் கூற்று. அதனை மறுத்துக் கூறும் கவுந்தி அடிகள், "வாய்மை பேசுவதினின்று நீங்காமல் உயிர்களைப் பாதுகாத்து வருகின்றவர்கள் இந்த உலகத்தில் அடைய முடி யாத பொருள்கள் இருக்கின்றனவோ? வாய்மையை உரைக் கின்றவர்கள் தம் விருப்பம் நிறைவேற்றப்பெறுவார்கள்" என்று பதில் இறுத்தார் எனக் காண்கிறோம். தவத்தையும், தானத் தையும் ஒருவர் செய்வதன் நோக்கம் அதுகொண்டே தான் விரும்பியதை அடையலாம் என்பது தானே? வாய்மை ஆகிய பேரறத்தை மேற்கொண்டால் தான் விரும்பியது தானே

கையுறும் என்று சிலப்பதிகாரத்தில் வருகின்ற கருத்து திருக் குறள் கருத்தோடு ஒத்து வருதல் அறியலாம்.

திருக்குறளிலும்,

"யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத் தொன்றும்
வாய்மையின் நல்ல பிற."

என்றும்,

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்"

என்றும் கூறப்பட்டிருக்கின்றன. இத் திருக்குறளான கருத்து வாய்மையே பேரறம் என்பதும், அது கொல்லாமையோடு இயை யின் உலகில் ஆகாதது ஒன்றும் இல்லை என்பதும் ஆம். இக் கருத் துக்களே சிலப்பதிகாரத்திலும்,

"வாய்மையின் வழாஅது மன்னுயிர் ஓம்புநர்க்கு
யாவதும் உண்டோ எய்தா அரும்பொருள்."

என்ற இடத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன.

"தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்."

என்பது திருக்குறள். தமிழ்மக்கள் சிறு நன்றியையும் பேர் உதவியாக எப்பொழுதும் பாராட்டி வந்துள்ளனர். சிலப்பதி காரத்தில் வருகின்ற ஒரு கதை நிகழ்ச்சி இதனை எடுத்துக் காட்டுகின்றது. அடைக்கலக் காதையில் வருகின்ற சாயலன் மனைவியால் பேணப்பட்ட ஒரு குரங்கின் நன்றியுடைமை விளக்குகிறது. சாயலன் என்னும் செட்டி ஒருவனுடைய மனைவி தன் வீட்டிற்கு வந்திருந்த தவ முதல்வன் ஒருவனுக்கு உண்டி தந்தனள் என்பதும், அவ்வுண்டியில் எஞ்சியதை ஒரு குரங்கு உண்டு மகிழ்ந்தது என்பதும், அக் குரங்கினை "உன் குழந்தை போல் பாதுகாக்க" என அம் மாதவன் கூறிச் சென் றான் என்பதும், அதுகாரணமாக அவள் அக் குரங்குக்கெனப் பெரும்பொருள் ஒதுக்கி அது மாண்ட பின்னரும் அதன் மனை வின் அறிகுறியாக செலவுசெய்தாள் என்பதும், அக் காரணத் தால் அக் குரங்கு பின்னர் நினைத்ததை எய்திற்று என்பதும், அதனை உணர்ந்த அக் குரங்கு, பின்னர்த் தேவனாய் மாறிய பொழுதும் அதனுடைய பழைய குரங்குக் கையை வைத்திருந் தது என்பதும் சிலப்பதிகாரத்துள் சொல்லப்பட்டு இருக்கின் றன. இவ்விடத்தில் குரங்கின் நன்றியுடைமைதான் எடுத்துக் காட்டப்படுகின்றது. தேவனாகப் பிறப்பெடுத்துங்கூட, ஒன்று இரண்டு பிறவிகள் முன்னர்த் தனக்கு இருந்த கைகளில் ஒன்

றினை, தன்னைப் பாதுகாத்த சாயலன் மனைவியின் நினைவு காரணமாக அக் குரங்கு வைத்துக் கொண்டு இருந்தது என்பதிலிருந்து அதனுடைய நன்றி உள்ளம் எத்துணைப் பெரியது என்பதாகவே கருதி இந் நிகழ்ச்சியை உற்று நோக்குதல் வேண்டும். ஒருவர் மற்றொருவரால் பேருதவி கிடைக்கப் பெற்றிருந்தாலும், இப்பிறவியில்தானே சொல்லிக்கொள்ளக் கூடக் கூசுவது பெரும்பான்மை வழக்கு. அதற்கு எதிரே இக் குரங்கின் செய்தி கூறப்பட்டுள்ளதனால் "தினைத்துணை நன்றி பனைத்துணையாக"ப் பெரியோரால் மதிக்கப்படும். என்ற குறட் கருத்து வற்புறுத்தப் பட்டதாயிற்று.

"நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை உடைத்திவ் வுலகு."

என்ற திருக்குறள் நேற்று உயிருடன் இருந்தவர்கள் இன்று இறந்துவிட்டனர் என்று சொல்லக்கூடிய பெருமையை இவ்வுலகு உடையது என்று கூறுகிறது. கோவலன் நேற்று இருந்தான் இன்று இல்லையே என்று கூறுகின்ற இடமொன்று சிலப்பதிகாரத்தில் வருகிறது. அதனை இத் திருக்குறளோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம். காலை நேரத்தில் கோவலன் கண்ணகியோடு இணங்கி இருந்தவன் அன்போடு அவளுடைய தலையில் பூச்சூட்டினன். அன்றே மாலை நேரத்திற்குள்ளாக அவன் கொல்லப்பட்டு விட்டான். காலையில் இருந்தவன் மாலையில் இல்லையே எனக் கூறுவதுபோல் அமைந்த ஒரு பாட்டு சிலப்பதிகாரத்தில் காணப்படுவது திருக்குறட் கருத்தினை நமக்கு நினைப்பூட்டுகிறது.

"வண்டார் இருங்குஞ்சி மாலைதன் வார்குழன்மேற்
கொண்டாள் தழீஇக்கொழுநன்பாற் காலைவாய்ப்
புண்டாழ் குருதி புறஞ்சோர மாலைவாய்க்
கண்டாள் அவன்தன்னைக் காணாக் கடுந்துயரம்."

என்று ஊர்சூழ் வரியில் வரும் பாட்டு, கண்ணகி காலை நேரத்தில் தன் கணவனைத் தழுவி அவன் கையால் தலையிலே மாலை சூட்டப்பட்ட செய்தியையும் மாலையில் கொல்லப்பட்ட அவன் அவளைக் காண முடியாது படுத்துக் கிடக்கின்ற கடுந் துயரத்தையும் தெரிவிக்கிறது. இந்த இடத்தில் "நெருநலுளனொருவன்" எனவரும் திருக்குறள் அழகிய இனிய வகையில் வேறொரு விதமாகச் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டிருக்கிறது என்று ஒருவர் ஒப்புக் கொள்ளுதல் கூடும்.

சிலப்பதிகாரத்தில் கானல் வரியில் கூறப்படும் ஒரு தலைமகன் தன் முன்னர்த் தோன்றிய ஒரு பெண்ணின் கண்கள் "கண்கள் அல்ல, அவை கூற்றம் ஆகும்" எனக் கூறுகிறான்

என அறிகிறோம். அவனுடைய பார்வையில் அருள் இன்மையாலும், கடுமை உண்மையாலும் இவ்வாறு கூறுகிறான் என்பது கருத்து.

"புன்னை நீழல் புலவுத் திரைவாய்
அன்னம் நடப்ப நடப்பாள் செங்கண்
அன்னம் நடப்ப நடப்பாள் செங்கண்
கொன்னே வெய்ய கொடிய கூற்றம்."

என்று வருகின்ற சிலப்பதிகார அடிகள் ஒருவர்க்கு,

"கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து."

என்ற திருக்குறளை நினைவிற்குக் கொண்டு வருதல் இயல்பு.

கானல் வரியில் வருகின்ற இனிய பாடலில் தலைவி ஒருத்தி தன்னைப் பிரிந்திருக்கின்ற தலைவன் தன்னை மறந்துங்கூட தன்னால் அவனை மறக்க முடியவில்லையே என வருந்தினாள் எனக் காண்கின்றோம்.

"தம்முடைய தண்ணளியுந் தாமுந் தம்மான் தேரும்
எம்மை நினையாது விட்டாரோ விட்டகல்க
அம்மென் இணர அடும்புகாள் அன்னங்காள்
நம்மை மறந்தாரை நாம் மறக்க மாட்டேமால்."

என்ற பாட்டில், "தலைவன் நம்மை நினைக்கவில்லை. அவரும் தேரோடு அவர் இடத்திலேயே தங்கிவிட்டாரோ? தங்கி இருப்பினும் இருக்கட்டும், பூங்கொடிகளே; அடும்புகளே; அன்னங்களே; என்னை அவர் மறந்தார் ஆயினும் அவரை என்னால் மறக்க முடியவில்லையே!" என்று அவள் சொல்லிப் புலம்பியது புலப்படுகிறது. இதனைப் படிக்கும் பொழுது ஒருவர்க்கு அடியில் வரும் திருக்குறட் பாக்கள் நினைவிற்கு வருதல் இயல்பே:

"நாம்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாம் காதல் கொள்ளாக் கடை."

"யாமும் உளேங்கொல் அவர்நெஞ்சத்து எந்நெஞ்சத்து
ஓஒ உளரே அவர்."

திருவள்ளுவரால் காட்டப்படுவது தலைமகள் ஒருத்தி தலைவனைப் பிரிந்திருக்கிற வேளையில், தலைவன் வரவில்லையே என வருந்துகின்றவள் உரைத்த உரையில், "என்னை இன்றியும் என் மனத்தில் எப்படியோ அவர் ஒட்டிக் கொண்டுள்ளார். ஆனால், அவர் நெஞ்சத்தில் என்னை வைத்துக் கொண்டு இருக்கிறாரோ, இல்லையோ என்பது தெரியாது. அவர் என்னை மறந்தாலும்

நான் அவரை மறவேன்" என்பதாகும். இந்தத் திருக்குறட் பாக்களுக்கும் சிலப்பதிகாரப் பகுதிக்கும் எத்துணைப் பொருத்தம் என்பதை ஒருவர் எளிதில் கண்டறியலாம். ஒன்றற்கு ஒன்று அணிகலம் போன்று அன்றோ இவ்விரண்டு நூல்களும் இயைபுபடக் காணப்படுகின்றன?

தலைவனைப் பிரிந்திருக்கின்ற தலைவி ஒருத்தி மாலை நேரம் வந்து உற்ற பொழுது அதனை நோக்கி, "நீ மாலை நேரம் அல்லை; மணந்து கொண்ட மகளிருடைய உயிரை உண்ணும் காலமாய் உள்ளாய்" எனக் கூறியது ஆக ஒரு திருக்குறள் அமைந்துள்ளது.

"மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது."

என்பது அது. இதனை அடி ஒற்றி இளங்கோவடிகள் அழகுபடச் சொல்லிய பாடல்கள் கானல்வரிப் பாடல்கள் ஆகக் காணப்படுகின்ற,

"இளி கிளையில் கொள்ள இறுத்தாயால் மாலை

கொளை வல்லாய் என ஆவி கோள்வாழி மாலை."

என்றும்,

"மாலை நீஆயின் மணந்தார் அவராயின்
ஞாலமோ நல்கூர்ந்தது வாழிமாலை."

என்றும் வருகின்ற சிலப்பதிகார அடிகளில் அக் குறள் கருத்து வருதல் காண்க.

"கண்டுகேட் டுண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள."

என்னும் திருக்குறள் பலர் அறிந்தது. காண்டல் இன்பமும், கேட்டல் இன்பமும், உண்டல் இன்பமும், உயிர்த்தல் இன்பமும், உறுதல் இன்பமும் ஆகிய ஐவகை இன்பங்களும் பெண்ணிடத்தே உண்டு என்பது திருக்குறளின் கருத்து. மலர்களில் சில காண்பதற்கு இனியனவாகவும், சில காண்பதற்கும் மோப்பதற்கும் இனியனவாகவும் இருக்கும். மலர்களின் ஒலியை நாம் கேட்டு மகிழ்தல் இல்லை. சில பொருள்கள் காண்பதற்கும் உண்பதற்கும் இனியனவாக இருக்கும். அவற்றின் ஒலிகளை நாம் கேட்டல் இல்லை. நறுமணம் உடைய பலவேறு பொருள்கள் பார்ப்பதற்கு இனியனவாக இருந்தாலும் உண்ணப்படா; கேட்கவும்படா. தொட்டால் இன்பம் தரக்கூடிய பலவேறு பொருள்

கள் உண்டக்கால் மகிழ்ச்சி தருதல் இல்லை. அவற்றின் ஒலியைக் கேட்டல் என்பது அறவே இல்லை. எனவே, ஒரு பொருளின்கண்ணே இந்த ஐவகைப்புலன் உணர்ச்சியும் உண்டு என்றால், அப் பொருள் பெண்தான் என்பது திருக்குறள் கருத்து. இதற்கு அழகிய விளக்கம்போல் சிலப்பதிகாரத்தில் ஓர் இடம் அமைந்துள்ளது. கோவலன் மணத்தின்பின் கண்ணகியைப் பாராட்டிய பலவகைகளில்,

"மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே."

என்பது ஒருவகை. இவ்விடத்தில் கண்ணகியைப் பொன் என்றும், முத்து என்றும், விரை என்றும், கரும்பு என்றும், தேன் என்றும், பாராட்டியதன் உட்கருத்து என்ன? அவள் பார்ப்பதற்கு இனிமையாக இருத்தலின் அவளைப் பொன் என்றான். அவளைத் தொட்டால் இனிமை உண்டாதலின் வலம்புரி முத்து என்றான. அவளுடைய உயிர்ப்பு (மூச்சு) மணம் உடையதாக இருத்தலின் விரை (வாசனைப் பொருள்) என்றான். நாவால் சுவைப்பதற்கு உரிய இதழ்களைப் பெற்றுள்ளமையால் அவளைக் கரும்பு என்றான். அவள் சொற்கள் கேட்பதற்கு இனியனவாக இருக்கின்றன என்ற காரணத்தால் தேனே (வண்டே) என்றான். இதிலிருந்து அறியப்படுவது அவளுடைய ஐம்புலனும் திருக்குறளில் கூறப்பட்டவாறே மிக்க இனிமை பயப்பன என்பதே ஆகும்.

இவைபோன்ற பல இடங்களில் திருக்குறளிற்கும் சிலப்பதிகாரத்திற்கும் உள்ள பொருத்தங்களைக் கண்டு ஒருவர் மகிழ்தல் இயலும்.

---

## காசினி அளித்தருள் அம்மா!

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

தரையினில் முதன்மை மொழியெனப் பிறந்து
தாங்கரும மொழிகளை வளர்த்து
உரையினில் பாட்டில் ஓங்கிய நெறியில்
ஒப்பிலா வீறினில் தளரா
வரையினைப் போன்று வண்மையில் பெருகி
வாழ்வினில் எவரையும் உயர்த்தும்
கரையிலாக் கன்னித் தமிழெனும் தேவீ
காசினி அளித்தருள் அம்மா!

# நச்சுக்கோப்பை

## (நாடகம்)

[திரு. வில்லைவாணன்]

(சிலம்பு - ௩௧, பரல் - ௫. ௨௩௩-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## இரண்டாம் காட்சி

இடம் : *நான்மாவின் வீட்டுள் ஓர் அறை.*

*[சுவரில் வண்ண ஓவியங்கள்.*[1] *மாலைப்போது. வெளிய நிலவு ஒளி; மெத்தையிட்ட சார்மனை, பழத்தட்டுகள் முதலியன ஒரு முக்காலி யில் முதல்காட்சியில் சொல்லிய கிண்ணம். மிக அழகாக வேலை செய்துள்ள ஒரு நாற்காலி. கம்மா வருகிறாள். பலகணியை மறைத் திருந்த திரைச்சீலையை எடுக்கிறாள்.]*

**கம்மா :** இன்னும் சினதர் வரவில்லையே. நிலவும் வந்து

*[சித்தாரை எடுத்துக்கொண்டு சார்மனையில் உட்கார்ந்து பாடுகிறாள் ]*

**பாட்டு**

*நிலவே நிலவே நிலமீதே*
*நிலவே வெளியில் வயல்மீதே*
*நிலவே நாதன் வருதற்கே*
*நீநல் வழியைக் காட்டுகவே*
*உலவும் ஓநா யினைத்தப்பி*
*ஊர்திரும்பி மங்கையுடன்*
*உலவும் நிலவே உத்தமரிங்*
*குறுதற்கினிய வழிகாட்டே.*

(குரல்கேட்டு) வருகிறாரா ? காலடி கேட்டதே. இன்னும் வரவில்லையே. ரோம் ஓநாயின் வயிற்றினின்று பிறந்தது என்கிறார்கள். ஓநாயர்க்கெதிராகச் சதியில் என் அரிய தலைவர் கலந்துகொண்டுள்ளாரோ (பாடுகிறாள்). "உலவும் ஓநாயினைத் தப்பி" ஆ முன் ஒருக்கால் அந்தச் செங்குத்துப் பிலத்தில் வேடரும் நாயும் விழுந்துவிட்டனரே அதுபோல். இல்லை இதோ வருகிறார்.

*[சினதன் வருகிறான், பின்தொடர்ந்து சினரியன் வருகிறான்.]*

---

1. வண்ண ஓவியங்கள் (Fresco). வண்க்கல் முதலியவற்றைச சுவர் முதலியவற்றில் பதிப்பு.

சிறுதன்: (சினத்துடன்) நான் சொல்வதைக் கேளப்பா. என் அம்புதான் மான்மீது பாய்ந்தது.

சிறுரியன்: அப்படியல்லவே; நீதான் தொலைவில் இருந்தாய். என் அம்புதான் கடுகிப் பாய்ந்தது.

சிறுதன்: அதனை நான்தான் வீழ்த்தினேன் என்பது உண்மை.

சிறுரியன்: அரசே! உண்மையில் நான்தான் வீழ்த்தினேன். (தனக்குள்) நீ சென்றபின் இம் மானையும் வீழ்த்துவேன்.

கம்மா: வாருங்கள். வாருங்கள். மானைப்பற்றிய வம்புவேண்டாம். நீங்கள் வரவில்லையே என்று மனங்கலங்கிப்போனேன். உட்கார்ந்து உணவருந்துங்கள். இவ் வுணவை வேட்டையாடுங்கள்.

சிறுதன்: வேண்டா. வேண்டா. நாங்கள் சாப்பிட்டாயிற்று. வெப்பமாக இருக்கிறது. குடிப்பதற்குக் கொடு.

கம்மா: நம் விருந்தினர் யார்?

சிறுதன்: திராதன் என்பார்.

[கம்மா குடிக்கக் கொடுக்கிறாள்.]

சிறுதன்: வாழ்க திராதன்.

சிறுரியன்: வாழ்க தாங்கள்.

சிறுதன்: (கிண்ணத்தைப் பார்த்து) ஈதென்ன?

கம்மா: இன்று எனக்கு வந்த அதிசயப் பரிசு. நம் தேவதையின் கோயில் தீப்பற்றி எரிந்துகொண்டிருந்தபோது, உட்சென்று காப்பாற்றி எடுத்துவரப்பெற்றதுவாம். அந்தோனியர் செல்லும் வழியில் அவர் செய்த செயலால் வந்த வினையாக இருக்கலாம்.

சிறுரியன்: அந்தோனியரை எதிர்க்கவே, அவர்விட்ட வேட்டு இவ்வாறு நேரச்செய்தது.

சிறுதன்: நீ அங்கு இருந்தாயா? கிண்ணத்துடன். செய்தி வந்ததா?

கம்மா: இங்கிருக்கிறது பாருங்கள்.

சிறுதன்: (படிக்கிறான்) "மதிப்புடைய கம்மாளுக்கு. நின்னைத் தொலைவில் கண்டேன். நின் மீது அன்புடையேன்—நம்மவர்

திருமணநாட்களில் பயன்படுத்தும் கிண்ணம். இதனை நினக்கு அன்பளிப்பாக அனுப்புகிறேன்—இப்போது நான் என்னை 'ரோம அரசப்படையில் கட்டாயத்தின்மேல் பணி புரியும் கலாதியன்' என்றல்லாது வேறுவகையில் அறிவித்துக்கொள்ள இயலாது இருக்கிறேன்." என்ன? கட்டாயத்தால் பணிபுரிகிறான!

**பாட்டு**

மரக்கிளையும் பட்டுப்போசசோ
மாநதியும் வற்றிப்போசசோ
இறந்துபட ஒன்று மிலேயோ
எனிந்த அடிமை வாழ்வே!

சீஹரியன்: என்ன அப்படிச் சொல்லுகிறாய் அரசே! ரோமப் படை நகருக்கு வெளியே தங்கியுள்ளது. அப் படை நம்முடையதினும் ஆயிரம் மடங்குடையது. கலாதியரனைவரும் தோற்பதினும், மரத்தில் தொங்கி மடிய வேண்டுமா? ஆற்றில் விழுந்து இறந்துவிடவேண்டுமா? இவைகளைப் பார்த்துக்கொள்ள இக் குறுநிலத்திற்கொரு சிற்றரசா?

சீனுதன்: (கோபமாய்) என்ன, குறுநிலமா?

சீஹரியன்: கோபப்படுவது இயல்பே. நின் பெருமைக்குத் தகுந்ததே. ஆயின், அங்தோனியன், நாளை நின்னிடம் பகுதிப்பணத்திற்கு வருவான். நினக்கு யார் துணைபுரிவார் வித்தினியரா, போந்தர்களா, பாப்புளகோணியரா? கீழ் நாட்டரசர்களுடன் முன்னெல்லாம் நட்புறவுகொண்டிருந்தோம். அவ்வாறிருந்தால் நானும் கைகொடுப்பேன். இப்போதென்செய்வது?

சீனுதன்: வேட்டையில் சேர்ந்த விருந்தினனோடு பேசப்படுவதின்று. என் நாய்கள் நன்கு மோப்பம் பிடித்து வேட்டைக்குதவியதைப் பார்த்தாயன்றோ! அதுபோல நமக்குத் தகுந்த காலத்தில் உதவ இருகால் நாய்கள் உள்ளன. அவை எப்போது எப்படிக் குரைப்பது என்று அறிவன.

சீஹரியன்: அரசே, நான் ஒருகால் சிங்கவேட்டைக்குச் சென்றிருந்தேன். வேடர் பேரிரைச்சலைக்கேட்டு அது விழித்துக்கொண்டது. காட்டில் எங்கள் முன்னே வந்தது. அரிமா என்னும் பெயர் என்ன பொருத்தமுடையது. பிடரியும், காதும் அரிமாவுக்கேற்றது. வேடனை வெறுப்

புடன் பார்த்தது. முன் காலைக்கண்டதும் வேட்டை நாய்க ளெல்லாம் படுத்துப்போயின. ஒருகால் நான்கை அடித் தது. பின்னும் வேடனைப்பார்த்தது. அதுபோலவேதான், ரோம் நின்னையும் குமைத்துவிடும். (தனக்குள்) இவனை அசைக்க இயலுமா? வெகுண்டு எழச்செய்ய இயலுமா. (வெளியே) இங்கு இருக்கும் அரசி கம்மா அழகுள்ளவர்; அறிவும் உடையவர். அவரும் என்போல் கருத்துடையர் தாம் என்றெண்ணுகிறேன். போரிடுவதிலும் அவர்கள் தலைமை யேற்றுக்கொள்வதே நல்லது என்று எனக்குப் படுகிறது. மகன், மணவாளன் உடன்பிறந்தார் என இவர்கள் வீணே மடிவதா? இருந்த இடத்திலிருந்து அடி யெடுத்து வைக்காத முன்னே வீழ்வதா?

**கம்மா:** ஐயா, எனக்கொரு மகன் குழந்தையில் இறந்தான். அவன் இருந்திருப்பின், இப்போது இளைஞனைப் போருக் குத் தகுதியாவான். அவனைப் போரில் முன்னணிக்கு அனுப்பத் தயங்கேன். (எழுந்திருக்கிறாள்) குறுநிலம், பெருநில மன்னனுக்குப் பணிந்தால், வெற்றியால் விழுங் கப்படும். ஆயின் வீரத்துடன் போரிடின் சுதந்திரம் தற் காப்பு இவற்றிற்காகப் போரிடின், வீழ்ந்தாலும் நீர்பூத்த நெருப்பெனப் பின்னும் பெருநெருப்பாகிப் பகைவரை வீழ்த்தக்கூடும். கடவுளின் அருளால் அங்ஙனம் ஆதல் கூடும்.

**சினுதன்:** நன்று சொன்னாய் அரசி.

**சினுரியன்:** (வணங்கி) அரசி! தாங்கள் சொல்வது உண்மையே.

**சினுதன்:** இந்த அந்தோனியனுடன் சினுரியனும் வந்தால் அது வியப்பன்று. மூன்றாண்டுகட்குமுன் ரோம அரசுடன் கலந்து நம்மினத்தவருக்குச் சதிசெய்தவனன்றோ.

**சினுரியன்:** சினுரியன் யார்?

**சினுதன்:** கலாதியன்தான். இவனும் ஒரு நான்மாவுக்கரசன். கொடுங்கோலன், பெண்கட்குத் தீங்கிழைத்தவன்.

**சினுரியன்:** நீ அவனுக்கு நல்லது செய்யவில்லை என்று கருது கிறேன். அவன் விரும்பிய பெண்கள் அவனுக்கிணங்கு வது பெருமையென்று எண்ணியிருந்தால் என் செய்வது?

**கம்மா:** அவ்வாறு சொல்லாதீர்கள். கலாதிய நாட்டுப் பெண் களில் ஒருத்தியும் அவ்வாறிராள். காமக்கிழத்தியர் இணங் கலாம். அவர்கள் வாழ்வு கீழ்ப்பட்டதுதானே.

[வேலையாள் வருகிறான்]

வேலையாள் : (தனியே) அரசே அவர்கள் !

சினதன் : (தனியே) நம்மவர்களா, ரோமரசுக்கு எதிராளிகளா ?

வேலையாள் : (தனியே) ஆம். அரசே.

சினூரியன் : (ஒட்டுக்கேட்டு, தனக்குள்) இவை போதும்.

சினதன் : (வெளியே) வெளியே நண்பர்கள் சிலர் என்னைக் காண வந்துள்ளனர். திராதா, சென்று [illegible] இருக்க. [செல்கிறான்.

சினூரியன் : (கம்மாவைப் பார்த்து)நான்தான் அக்கிண்ணத்தை ப்பியவன். நான் கலாதியன்.

கம்மா : உங்களுக்கு என் உளங்கனிந்த நன்றி.

சினூரியன் : கலாதியத்தைக் காக்க, ரோமஅரசுடன் உழைக்கிறேன். இது என் மறைவு இதனை வெளியிடேல். வெளியிடின் என் உயிர்போய்விடும். (கிட்டே நெருங்கி வந்து) இது உன் காதுக்கு மட்டும். நான் நின்னைக் காதலிக்கிறேன். அப் பெருந்தெய்வக்கன்னி... ரோமர்கள் உங்களையெல்லாம் மறைவில் பார்த்து வரவும், நின்னையும், நின் கணவனையும் அடிமைப்படுத்திவர அனுப்பியுள்ளனர். நான் அவ்வாறு செய்வேனா? (அந்தோனியன் கொடுத்த கடிதத்தை வெளியில் எடுக்கிறான்) இது அந்தோனியன் கையெழுத்திட்டது. எடுத்துப் படி.

கம்மா : (படிக்கிறாள்) " நீ சினதனைச் சிறைப்படுத்து அவன்..."

சினூரியன் : (கடிதத்தைப் பிடுங்கிக்கொள்ளுகிறான்) இது போதும். பின்வரும் வாசகம், மனைவியின் கண்களால் பார்க்கலாகா. கம்மா, ரோம் இந்தச் சதியை ஒருவாறு தெரிந்துகொண்டுள்ளது. சதிகாரர்களை ரோம் விட்டதில்லை. தோலுரித்துத் தூக்கிவிட அஞ்சார்.

கம்மா : என்னால் இத் துயர் தாங்க இயலாது. ஏன் இவற்றையெல்லாம் சொல்கிறீர்கள் ?

சினூரியன் : ஏன் சொல்கிறேனா? எல்லாவகையிலும் எள்ளப்படுகிறேன். என்னை நின் கணவனுக்குக் காட்டிக்கொடுத்தால்.

கம்மா : இந்த உத்தரவால் அவரைக் காட்டிக் கொடுத்துவிடுவீரா ?

**சினுரியன்:** பார். இதோ இதனைக் கிழித்துப் போடுகிறேன்.
[கிழித்துப்போடுகிறான்]

**கம்மா:** என்றும் இதற்கு நன்றியுடையேன்.

**சினுரியன்:** இச் சதியைப் பற்றி சினைதன் உனக்குச் சொல்லவில்லையா?

**கம்மா:** எந்தச் சதி?

**சினுரியன்:** குழந்தை கடற்கரையில் கோட்டை கட்டுகிறது. அடுத்து அலை வந்ததும்—எல்லாம் தெரிந்தது. கணக்குப் போட்டது எல்லாம் ரோமருக்குத் தெரிந்துவிட்டது. சினைதனுக்கு வழியில்லை

**கம்மா:** வீர சினைதருக்கு இவற்றை ஏன் சொல்லவில்லை.

**சினுரியன்:** வீரன்தான். அதிகவீரன். தன் வீரத்தில் அதிக நம்பிக்கை உடையவன். தனக்கே அழிவு தேடிக்கொள்பவன். உனக்கும் எனக்கும் அழிவுதான். வேறு யாராயினும், தம் தலைமீது இடியை வைத்துக்கொண்டு மான் வேட்டைக்குச் செல்வார்களா? அவனை விடுதிரும்ப விட்டதே ஒரு அதிசயமாகும். [கம்மா கேட்டு நடுங்குகிறாள்] (தனக்குள்) அவள் நடுங்கும்படி செய்துவிட்டேன். (வெளியே) சினைதனை வதைத்துக்கொல்ல நினைத்திருக்கிறார்கள். இது எப்படித் தெரிந்தது என்பதை வெளியிட அஞ்சுகிறேன். கலாதியர்க்காகவன்றோ ரோம அரசுடன் இருக்கிறேன். எனவே இதை அவனை நம்பிச்சொல்ல இயலவில்லை. கடிதத்தைப் பார்த்துப் பேசிய வீரப்பேச்சைக் கேட்டாய். சதி வேண்டாம் என்று சொல்லியாயிற்று. ரோம அரசுக்கு இது தெரியும். அவர்கள் கொடுமை உனக்குத் தெரியாது.

**கம்மா:** ஆ! ரோமரிடம் உனக்குள்ள சலுகையை இவருக்கு உதவும்படி செய்யுங்கள்.

**சினுரியன்:** ஐயோ, அவ்வாறான ஆற்றல் என்னிடம் இல்லையே. எல்லாம் அந்தோனியினிடத்தில்தான் இருக்கிறது. (ஏதோ உடனே நினைத்தவனைப் பக்கத்தில் வருகிறான்) அவன் கோயில் பக்கம் நாளைக் காலை வருகிறான். உனக்கு அழகுள்ளது அந்தோனியன் பெண்கட்கு மதிப்புக்கொடுப்பவன். அவர்கள் கேட்டதை இல்லையென்றதில்லை. காப்பாற்றும்படி வேண்டு. வீண் போகாது.

**கம்மா:** என் கணவர் அவ்வாறு செய்யவிடார்.

சிறூரியன்: ஆயின் இதைச் சொல்லாதே. சொல்வதாயின் அந் தோனியன் கருணை வேண்டிப்பெற்றபின் சொல். (சிறூரிய, சிறூரிய என்னும் குரல் வெளியே கேட்கிறது) நினைத்துப் பார். வதைப்பர்; கொலை செய்வர்; வந்து கருணை வேண்டு.

கம்மா: ஆகட்டும். ஆகட்டும்,

சிறூரியன்: (தாயே சிறூதன் வருகிறான்) எட்டி நில். சிறூதன் வருகிறான். வேலையாள் தொடர்கிறான்.

சிறூதன்: நீதான் சிறூரியன். உன்னை அனைவரும் வெறுக்கின் றனர். உன் தோலை உரித்துவிடப் பதைக்கின்றனர்.

சிறூரியன்: கலாதிய நாட்டுக்குப் பணிசெய்ய நினைத்தேன். என்னைப் புரிந்துகொள்ளக் காணோம்.

சிறூதன்: உன்னைக் காப்பாற்றிக்கொள் முதலில். பாதக! என் விருந்தினனைத் துன்புறுத்தவிடமாட்டேன். (கதவைக் காட்டி) இப்படிப் போய்விடு. காட்டுப்பக்கம் வழி போகி றது. ஓடிவிடு. இன்றுமுதல் நீ உயிர்வாங்கும் பகைவன்.

சிறூரியன்: நன்றி (கத்தியை உருவிக்கொண்டு) என் உயிரைக் காப்பாற்றினாய். (போகிறான்)

சிறூதன்: (வேலையாளிடம்) போ. சிறூரியன் இங்கு இல்லை என்று சொல். (வேலையாள் போகிறான் கம்மாவிடம்) அப் பாதகன் நின்னிடம் என்ன சொன்னான்?

கம்மா: அவனா அந்த சிறூரியன்?

சிறூதன்: அதில் என்ன ஐயம். அங்கிருக்கும் ஒருவன் கண்டு கொண்டான்.

கம்மா: ஒருத்தன்தானே! அவன் பிழைபட எண்ணியிருக் கலாம்.

சிறூதன்: சரி. சரி. அவன் சொன்னதை மறுக்கவில்லையே.

கம்மா: எதை மறுக்கவில்லை?

சிறூதன்: எதையா? அவன் நான்மா ஒன்றுக்குத் தலைவன்; மக்கள் அவனுடைய கொடுங்கோன்மையை வெறுத்தன்றோ ஓட்டிவிட்டனர்.

கம்மா: குடிகட்கு அன்பனல்லனோ?

சிறூதன்: அன்பனா? அவன் ஒரு விலங்கன்றோ?

**கம்பா:** என்னவோ? அன்புடையவன் போலன்றோ நடந்து கொண்டான். ரோமாசு தனக்குப் பிடிக்கவில்லை யென்று சொன்னேனே.

**சிறுதன்:** அந்த யோக்கியன் சொன்னனே?

**கம்பா:** நீங்கள்தான் என்றும் புதியவர்களுடன் பழகமாட்டீர் களே. அவனை எப்படி வைத்துக்கொண்டு வேட்டை யாடினீர்கள்?

**சிறுதன்:** வந்தது மட்டுமல்ல. மானை விழ்த்தியதாகவுமன்றோ கூறிக்கொண்டான்.

**கம்பா:** அவனாவது மானை விழ்த்துவதாவது!

**சிறுதன்:** என் அம்புதானே பட்டது. அதைத்தானே அவ னுக்கு விளக்கிச் சொன்னேன். சரி எனக்கு உறக்கம் வருகிறது. [கதவை மூடப்போகிறான்.]

**கம்பா:** மூடாதீர்கள். நல்ல நிலவுக்காலமாயிற்று. பட்டப் பகல்போல் காய்கிறது.

**சிறுதன்:** உண்மைதான். இந்த நிலவு வெளியில் என் நண்பர் கள் அவனைத் தேடிப்பிடித்துக் கொன்றுவிடவும் கூடும்.

**கம்பா:** அவன் முன்னமே போய்விட்டானே. இங்கே பாருங்கள். அம் மலைப்பக்கத்தில் இருக்கும் அடர் மரச்சோலை இனிய நிலவு ஒளியில் வெண்மையாகத் தெரிவது எவ்வளவு அழ காக இருக்கிறது பாருங்கள். கீழ்ப்பக்கம் ஒரே இருட் டாகத் தெரிகிறதே. தங்களுக்கு நினைவு இருக்கிறதா. நினைவு இருக்கத்தான் வேண்டும். மூன்றாண்டுகட்குமுன் முந்திரிக்கொடிகள் மரங்கள் உச்சிவரையில் வளர்ந்து படர்ந்து இருந்தனவே. அங்கு நாம் எவ்வளவு காதல் அன்பாய்ப் பேசிக்கொண்டிருந்தோம். நம் கண்களும், உள்ளங்களும் கலந்து இன்புற்றனவே. மூன்றாண்டுகளாகத் தெள்ளிய வானையொத்த இன்ப வாழ்வாக இருந்து வரு கிறது. முதன் முதலில் என்னை அணைத்து முத்தமிட்டீர் களே! இப்போது அவ்வாறு ஒரு பரிசளியுங்கள்.

**சிறுதன்:** (முத்தமிடுகிறான்) முதல்முத்தமா! பெற்றுக்கொள் கண்ணே. நீ பேசுவதைப்பார்த்தால் என்னவோஇது கடைசி முறைபோல் அன்றோ இருக்கிறது.

**கம்பா:** சிறிது சாப்பிடுங்களேன்.

**சினதன் :** வேண்டா. வழியில் ஓர் ஆட்டிடையன் வீட்டிற் பாலும் பழமும் அருந்தினோம். இதுகிடக்க. அந்தப் பொய்யன் மானை வீழ்த்தியதாக உரைத்தானே. நாளை உன் வீரன் எப்படி நடக்கிறேன் பார்.

**கம்மா :** நாளைக்கு நான் அதிகாலையில் எழுந்திருக்கவேண்டும் இந்தக் கிண்ணத்தை ஆர்டிமிஸ் அம்மையின் கோயிலுக்குக் கொண்டுபோய் அளித்துவிடவேண்டும்.

**சினதன் :** நன்று.

**கம்மா :** நான் அரைமணி நேரத்தில் திரும்பவில்லை எனில் என்னைத் தேடிக்கொண்டு வந்துவிடுங்கள்.

**சினதன் :** என்ன ஆபத்து உள்ளது அஞ்சுதற்கு?

**கம்மா :** இல்லைதான். நம்மில்லம் கோயிலுக்கு அண்மையில் தான் உள்ளது.

**சினதன் :** உறக்கம் கண்ணைப் பறிக்கிறது. படுத்துக்கொள் கிறேன். நாளைக் கோயிலுக்குப் போகுமுன் என்னை எழுப்பிவிட்டுச் செல். நான் பின்னால் வந்து அழைத்துக் கொள்ளலாம். [கதவை மூடுகிறான்.]

**கம்மா :** (திரையை மூடியவண்ணம்) நின்னிழல். சினோரிய-அவன் முகம் கவடற்றது போன்றிருந்ததே! அனைவரும் பிழைபட எண்ணுகின்றனர் என்றனனே! கோயிலுக்குப் போவதா? போகட்டுமா? கொலை, வதை என்றனனே! அந்தோனியன் பெண்கள்மீது இரக்கம் உடையவன். அவர்கள் கேட்கும் வரத்தைக் கொடுக்காது இருந்ததில்லை என்றனனே! நான் எதற்கும் கோயிலுக்குப் போகிறேன். ஆயின் ஒரு கத்தியை வைத்துக்கொள்கிறேன். [போகிறாள்.]

(தொடரும்)

# நாடகக்கலை அறிஞர்
# திரு. ப. சம்பந்த முதலியாருக்குப்
# பாராட்டு

நாடகக் கலைத் தந்தை திரு. ப. சம்பந்த முதலியாரின 85-ஆவது ஆண்டுப் பிறந்தநாள் விழா கலாநிகேதன் ஆதரவில் 3-2-57-ஆம் நாட் காலையில் சென்னைக் கோகலே மண்டபத்தில் சிறப்பாகக்கொண்டாடப்பட்டது. விழாவிற்கு டாக்டர். சர். சி. பி. இராமசாமி ஐயர் தலைமை தாங்கினார். அவர்தம் தலைமையுரையில் குறிப்பிட்டதாவது:

“திரு. சம்பந்த முதலியார் தமிழ்நாடகங்களின் தரம் குறைந்திருந்த காலத்தில் சிறந்த உரைநடைகளைக்கொண்ட நாடகங்களையெழுதினாரென்றும், ‘வரலாற்று நாடகங்களன்றிச் சமூகநாடகங்களும் எழுதினா’ரென்றும், ‘தாம் எழுதிய நாடகங்களில் அவரே நடித்திருக்கிறா’ரென்றும், ‘அவர் இன்னும் பல்லாண்டுகள் வாழவேண்டுமென்று விரும்புகின்றோம்’” என்றும் கூறினார்.

அதன்பின்னர் டாக்டர் திரு மு. வரதராசனார், திரு. வி. சி. கோபாலரத்தினம், திரு. டி. கே சண்முகம், திரு எம். ஜி. இராமச்சந்திரன் முதலிய அறிஞர்கள் பலரும் திரு. முதலியாரைப் பாராட்டிப் பேசினர். பாராட்டுகளுக்குச் சம்பந்தமுதலியார் நன்றிதெரிவித்துப் பேசுகையில், ‘தமிழ்நாடகக் கலையின்தரம் மிகவும் உயர்ந்திருப்பதாகவும் நாடகம்போல் திரைப்படமும் நல்லதோர் கலை’யென்றும், ‘நாடக நடிகர்களே திரைப்படத்தில் நடிப்பவர்கள்’ எனறும் கூறி முடித்தார்

பாராட்டுக்குரிய திரு சம்பந்த முதலியாரவர்கள் தமிழ்நாடகக் கலைக்குச்செய்த தொண்டுகள் அளப்பில்லனவாகும். தமிழ் நாடகம் பண்டுதொட்டு நம் தமிழ் நாட்டில் உயரிய நிலையெய்தியிருந்த அரிய கலையாகும் இதன் சிறப்பைச் சங்ககால நூல்களே பாராட்டுகின்றன.

“ நாடகம் ஓர்த்தும் பாடல் நயந்தும்
வெண்ணிலவின் பயன்துய்த்தும் ”

என்னும் பட்டினப்பாலையடிகள் கருதத்தக்கன.

இத்தகைய அரிய கலை மங்கிக்கிடந்து அல்லாதவர் கையிற் சிக்குண்டு கலைத்திறன் மாசெய்தியகாலை, பல நாடகங்கள் எழுதியும், தாமே அந்நாடகங்களில் வாயில் (பாத்திரம்) ஆகப் புனைந்து நடித்தும் எழுச்சியுறச் செய்த பெருமை முதலியார்க்கே சிறந்துரிமையுடையது.

சீராலும் பேராலும் சிறந்து விளங்கும் பெரியார் நூறுபிறை கண்ட முதியராயினும் உடல் தளர்ச்சியன்றி உணர்வில் இளைஞராகவே விளங்குகின்றார். இவர்கள் இன்னும் பன்னெடுங்காலம் வாழ்ந்து தமிழுக்கும் தமிழ்க்கலைக்கும் சிறப்பாக நாடகத்துக்கும் இன்னும் வேண்டும் ஆக்கப்பணி பல புரிந்து நல்லுரத்துடன் வாழ எல்லாம்வல்ல முழுமுதற்பெருமான் இணையடிவணங்கிப் பம்மல் திரு. ப. சம்பந்த முதலியாரவர்களைப் பன்முறை மகிழ்ந்து வாழ்த்துதும்.

# நெடுநல்வாடையின் திணையாராய்ச்சி மறுப்பு

[பண்டித, வித்துவான், தி. சங்குப் புலவர்]

செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு ௩௧ வள்ளுவர் ஆண்டு ௧௯அ௭, ஐப்பசி (Nov. 56) பரல் ௩. ௧௧௯-ஆம் பக்கம் பதித்திருக்கும், வித்துவான். திரு. செ. வேங்கடராமச் செட்டியார் அவர்களது நெடுநல்வாடையின் திணையாராய்ச்சி முடிவுக்கு மறுப்பு இது

ஆராய்ச்சியின் முடிவு:

நெடுநல் வாடை புறத்திணையாகிய வாகைத்திணையாகா தென்பதும், அகத்திணையுள் முல்லைத் திணையாம் என்பதும், முல்லையைக் கூறுமுகத்தால் அதற்குப் புறமாகிய வஞ்சித்திணையையும் தலைவனிலை விளக்க உடன் கூறியுள்ளார் என்பதும், தொல்காப்பியத்திற்கு உரையெழுதும் பொழுது பொருத்தமாக உரை வகுத்து உதாரணமுங் காட்டிய நச்சினார்க்கினியார் ஏதோ மயக்கத்தால் மாறியெழுதியிருக்கிறார் என்பதும் திரு. செ. வே. அவர்கள் ஆராய்ச்சியின் முடிவாகும்.

## முன்னுரை

உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் என்றும், நச்சினார்க்கினிய னெச்சில் நறுந்தமிழ் நுகர்வர் நல்லோர் என்றும் புலவராற் பாராட்டப்பட்ட உரையாசிரியரை ஏதோ மயக்கத்தான் கூறினர் என மயங்காது கூறிய நண்பர் திரு செ. வே. அவர்கள் மற்றைப் புலவர்கள் எவரையும் மயங்கினர் என்று கூறத் தியங்குவரா? தயங்குவரா? தயங்கார் என்பது துணிவு. நச்சினார்க்கினியார் மயங்கினரா? திரு. செ. வே. அவர்கள்தாம் மயங்கினரா? என்பதை யாய்ந்து காணவேண்டியது அறிஞர் கடமை யாகும். இம் மயக்கம் புலவருலகத்தையே மயக்கும் என்பது ஒருதலை. இதுகாறும் புறத்திணையாகிய வாகைத்திணையிற் கூதிர்ப்பாசறைத் துறையாயிருந்த நெடுநல்வாடை, இந்நாளில் திரு. செ. வே. அவர்கள் ஆராய்ச்சியால், அகமும் புறமுமாகிய முல்லையும் வஞ்சியும் ஒருங்கமைந்த ஓர் பாடலாக மாறும்போது, புலவருலகமும் மாறுபட்டு மயங்கித் தெளியவேண்டிய நிலை நேர்ந்தது என்பதிற் சிறிதும் ஐயமின்று. என்னை யான் அறியாது மயங்கிக் கூறினும் அறிஞர் தெளிவிப்பர் என்பது துணிவு உண்மையை யுலகத்திற்கு உணர்த்துவதும், தான் பெற்ற இன்பம் தரணியும் பெறுக எனக் கருதுவதும் இழுக்

கன்று ஆதலின் இதனைத் தெளிவிக்க அறிஞர் பலரையும் வேண்டுகின்றேன்.

ஆராய்ச்சியாளர் கூற்று :

முதலில் ஆராய்ச்சியாளர், "பத்துப்பாட்டுகளில் நெடுநல்வாடை என்பது மட்டும் திணையாராய்ச்சிக்குரியதாகின்றது" என்று கூறி "தொல்காப்பியம் என்னும் பேரிலக்கணத்திற்கும், பத்துப்பாட்டு, கலித்தொகை என்ற சங்கவிலக்கியங்கட்கும், சிந்தாமணி யென்ற சிறப்புடைய காப்பியத்திற்கும் நல்லுரை கண்ட புலமை மிகக நச்சினார்க்கினியரையே திகைக்கச் செய்த பாடல் இந் நெடுநல் வாடையாகும்" என்று கூறினர்.

மறுப்பு :

நக்கீரனார், நெடுநல்வாடை பாடிய காலமுதல் இதுகாறும் வாழ்ந்து வந்த புலவர் பலரும் இதனை யாய்ந்து, திணை துறை தெரியாது ஆராய்ச்சிக்குரியது என விடுத்தனரா? திணையும் துறையும் கூறாது திகைத்தனரா? பத்துப்பாட்டுக்கு உரைகண்ட நச்சினார்க்கினியார் அவற்றில் ஒன்பதுக்கும் திணை, துறை கூறி இஃது ஒன்று மட்டும் ஆராய்தற் பாலது என விடுத்தனரா? திகைத்தேன் என்று கூறினரா? "திகைக்கச் செய்தேன் நச்சினார்க்கினியாரை" என அப் பாடல் கூறியதா? இங்ஙனம் தாமே எடுத்துக் கூறியது மயக்கம் அன்றோ? நெடுநல் வாடையின் முன்னுரையில் இன்ன காரணத்தால் அகமாகாது என்றும் இன்ன இன்ன காரணங்களால் புறத்திணையாகிய வாகையிற் கூதிர்ப் பாசறைத்துறையாம் என்றும் நச்சினார்க்கினியர் விளக்கியிருப்பது கண்டும் அவர் திகைத்தார் என்பது எங்ஙனம் பொருந்தும்?

ஆ-ர். கூற்று :

அடுத்த இடத்தில் "நச்சினார்க்கினியார் நெடுநல்வாடை இன்ன திணைக்குரிய பாடல் என அறுதியிட்டுக் கூற எத்துணையோ நாட்கள் ஆராய்ந்தார் என்றும், அங்ஙனம் ஆய்ந்தும் வெற்றிகாண முடியாமல் குழப்ப மெய்தினர் என்றும், அக் குழப்பக்காரணமாகத் துணிவின்றி வாகை, வஞ்சி, பாலை என்று திணை கூறினர் என்றும், கூதிர்ப்பாசறை கொற்றவை நிலை என்று துறை கூறினர் என்றும் ஆராய்ச்சியாளர் கூறினர்.

மறுப்பு :

நச்சினார்க்கினியார் நெடுநல்வாடை யுரையிலாவது வேறு எந் நூல் உரைகளிலாவது எவ்விடத்திலாவது இப் பாடலுக்குத் திணையும் துறையுங்காண எத்துணையோ நாட்கள் ஆய்ந்தேன்;

முடிவுகாணாது குழப்பம் எய்தினேன். அக் குழப்பத்தால் துணி வின்றி வாகை, வஞ்சி, பாலை எனத் திணை கூறினேன்; கூதிர்ப் பாசறை, கொற்றவை நிலை என்று துறை கூறினேன்' என்று வரைந்திருக்கின்றனரா? அல்லது அவர் காலத்திலிருந்த புலவர் களில் எவரிடத்தேனும் கூறினரா? இஃது வழி வழி வந்த செய் தியா? ஒன்றும் இன்றே! எல்லாம் இவர் மயக்கத்தாற் கூறியவை யன்றோ?

**ஆ-ர் மயக்கமும் காரணமும்:**

இங்ஙனம் ஆராய்ச்சியாளர் மயங்குதற்குக் காரணம் யாது? என ஆய்ந்தால் நெடுநல்வாடை யுரையின் இறுதியில் நச்சினார்க் கினியார் கூறிய முடிவுரையே யாகும். அம் முடிவுரையை அடி யில் வரைகின்றேன் காண்க.

"இப் பாட்டுத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன் மண்ணசையாற் சென்று பொருதலின், இப் போர் வஞ்சியாகலின், வஞ்சிக்குக் கொற்றவைநிலை யுண்மையின், கொற்றவையை வெற்றிப்பொருட்டுப் பரவுதல் கூறினர்; அது பாலைத்திணைக் கேற்றலின்." என்பது.

இம் முடிவுரையே ஆராய்ச்சியாளரை மயக்கியது. அம் மயக்கத்தால் "முன்னுரையில் வாகைத்திணை யென்றும், கூதிர்ப் பாசறைத் துறையென்றுங் கூறிய நச்சினார்க்கினியர், பின்னுரை யில் வஞ்சி, கொற்றவை நிலை, பாலை எனத் துணிவின்றிக் கூறி யுள்ளார்" என்று பிறழ வுணர்ந்தார். அவ் வுணர்ச்சியால் உரையாசிரியரை மயங்கினர் என வுரைத்தார். இதனைத் தெளிப் போம்.

**தெளிப்பு:**

முன்னுரையில் வாகைத் திணை, கூதிர்ப்பாசறைத்துறை எனக் காரணங் காட்டி விளக்கினர் நச்சினார்க்கினியர். பின் னுரையிற் பாடலை முடித்துக்காட்டக் கருதி வினைமுடிவு கூறி னர். வினைமுடிவு கூறும்போது "புலம்பொடு வதியும் நலங் கிளரரிவைக் கின்னா வரும்படர் தீர விறறந்து (பாசறைத் தொழில்) இன்னே முடிக (௧௬௬, ௧௬௭, ௧௬௮) எனக் கொண்டு கூட்டி முடிக்க" என்ற வியங்கோள் வினைமுற்றினை யார் கூற்றாகக் கூறலாம் என ஆய்ந்தார். கொற்றவையைப் பரவுவாளொருத்தி கூற்றாகக் கூறத் துணிந்தார். கொற்றவையைக் கேட்போர் எனக் கொண்டார். அவ்வாறே முடித்துக் காட்டினர். அவர் தாம் வருவித்த சொல்லெச்சத்திற்கு இயைபு காட்டுதற்காக "பாண்டி யன் மண்ணசைஇச் சென்றான் ஆதலால் வஞ்சியாம். வஞ்சியிற் கொற்றவையைப் பரவுவது வழக்கமாம். கொற்றவை பாலை நிலத்

தெய்வமாம்; பாலைக்கும் வஞ்சிக்கும் தொடர்புண்டு ஆதலாற் நான் கொற்றவையைப் பரவுவாளொருத்தி கொற்றவையை நோக்கிக் கூறியதாக வினைமுடிவு செய்தேன்" எனக் குறிப்பால் விளக்கினர். ஆங்குத் திணையும் துறையுங் கூறினரல்லர். திணை, துறை ஓரிடத்திற் கூறுவரேயன்றிப் பல இடங்களிலும் கூறுவரா உரையாசிரியர்? திணை துறைகளில் ஐயம் தோன்றின் "இப் பாடலை வஞ்சியாகவும் கொள்ளலாம்; கொற்றவை நிலையாகவும் கொள்ளலாம்; பாலையாகவுங் கொள்ளலாம் என்றன்றோ முன்னுரையிற் கூறுவர். பின்னுரையில் இவ்வாறு கூறுவரா? முன்னுரையில் திணை துறை கூறியிருப்பின் அன்றோ பின்னுரையிற் கூறுவர்; அங்ஙனம் கூறாததால் அவர்க்கு அதுவே தெளிவு என்று காண்க.

ஆ-ர் கூற்று:

நகனாயார "அது பாலைத்திணைக்கு ஏற்றன என்றது" "பாலைத் திணைக்குத் தெய்வம் கொற்றவை என்ற கருத்தாற் கூறினர் போலும்; அவ்வாறு கருதியிருப்பின் அஃதும் அவர் கருத்திற்கு முரணானதேயாகும்" என ஓரிடத்தில் ஆராய்ச்சியாளர் கூறியுள்ளார்.

மறுப்பு:

இதில் எவர் கருத்திற்கு எது முரணானது என்பது விளங்கவில்லை. தொல்காப்பியம் அகத்திணையியல் ஐந்தாம் சூத்திரத்திற்கு உரை வரைந்து அதன் கருத்தை விளக்கும்போது "முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என முதற்பொருளை மட்டும் கூற வேண்டியவிடத்துக் கருப்பொருள் ஆகிய தெய்வத்தையும் உடன் சேர்த்து "மாயோன் மேய காடுறை யுலகமும்" என ஆசிரியர் தொல்காப்பியர் கூறியது கருப்பொருளுடைத்து எனப்பட்ட பாலைக்குத் தெய்வத்தை விலக்குதற்கும் என்றுணர்க என, விளக்கினர். இதனால் தொல்காப்பியா கருத்து பாலைக்குத் தெய்வம் இன்று என்பது விளங்கும். அதுவன்றி நக்கீரர் காலத்திற் பாலைக்குத் தெய்வமில்லை என்பது விளங்குமா? நக்கீரர் தாம் பாடிய நெடுநல்வாடையிற் பாலைக்குத் தெய்வமாகிய கொற்றவையை மனத்திற்குறித்திரார் என்பது விளங்குமா? "வெற்றிவெல்போர்க் கொற்றவைசிறுவ" என முருகாற்றுப் படையில் (அடி. உ௫அ) முருகனை விளித்தனர் அன்றோ? நக்கீரர். அவர் கொற்றவையைப் பரவுவாள் கூற்றாக அமைத்திருப்பார் என்று கருதினர் நச்சினார்க்கினியார். பிற்காலத்தார் பாலைநிலத் தெய்வமாகக் கொற்றவையைப் பராவும் வழக்கம் உண்மையும் அறிந்தார். அவர் தமது கருத்தை வரைந்தார்.

"அது பாலைத் திணைக்கு ஏற்றலின்" என. ஆண்டுத் தொல்காப்பியர் கருத்தை வரைந்தார். ஈண்டுத் தம் கருத்தை வரைந்தார் இஃது எங்ஙனம் ஒன்றற்கொன்று முரணும்? முரணுமாறல்லை யெனத் தெளிக.

ஆ-ர் கூற்று :

இனி "மக்கணுதலிய வகனைந்திணையும், சுட்டியொருவர் பெயர்கொளப் பெறாஅர்" (௫௪) என்ற அகத்திணையியல் சூத்திர விதியின்படியும், அதற்கு நச்சினார்க்கினியர் வரைந்த உரையின்படியும் ஆய்ந்தால் "நெடுநல்வாடை" புறத்திணையாகாது; அகத்திணையும், புறத்திணையுங் கலந்த பாடலாகும் என்பது ஆராய்ச்சியாளர் முடிவு.

மறுப்பு :

இம் முடிபு பொருந்துமா? பொருந்தாதா? என்பதற்கு முதலில் நச்சினார்க்கினியர் உரையை யாய்ந்து பின் தொல்காப்பியர் கருத்தை யாய்ந்து உண்மை காண்போம். "மக்கணுதலிய" என்ற சூத்திரத்திற்கு "மக்களை தலைமக்களாகக் கருதுதற்குரிய நடுவணைந்திணைக்கண்ணும் திணைப்பெயராற் கூறினன்றி ஒருவனை யும் ஒருத்தியையும விதந்துகூறி அவரது இயற்பெயர்கொள்ளப் பெறார்" எனப் பொழிப்பு வரைந்தார் நச்சினார்க்கினியார் பின்னர் விளக்கவுரையில் "வெற்பன் துறைவன், கொடிச்சி, கிழத்தி எனவரும்" என்றார். மேலும் "அகப்பொருட்குத் தேவரும் நரகரும கிளவித் தலைவராகக் கொள்ளப்படார் எனவும், கைக்கிளையும் பெருந்திணையும் சுட்டியொருவர் பெயர் கொண்டும் கொள்ளாதும் வரும் எனவும், கைக்கிளையும் பெருந்திணையும் புறத்து நிற்றலின் அத் திணைகள் அகப்புறம் என்று பெயர்பெறும் எனவும் தெளிவாகக் கூறினர் அவை வரையறையுடைமை மேலைச் சூத்திரத்தான் அறிக" என்றுங் கூறினர். பின்னும் "கன்றும் உண்ணாது கலத்தினும் படாது" (குறுங் உ௭) என்ற பாடலையும் "மள்ளர்குழீஇய விழவினானும் (குறுங்) என்ற பாடலையும் காட்டி இவை முறையே வெள்ளி வீதியார் பாட்டு, காதலற் கெடுத்த ஆதிமந்தி பாட்டு என அடியில் அவரவர் பெயர் வரைந்திருப்பது கொண்டு அறியப்படும் ஆயினும் அப் பாட்டினுள் அவரவர் பெயர் வாராமையால் அகப்பொருட்டுறை யமைந்த பாடல்களோடு சேர்க்கப்பட்டன. இயற் பெயர் பாடலில் வந்திருந்தால் அவை புறப்பொருளாம் என மேற்கோளும் விளக்கமும் காட்டினார். "வெள்ளி வீதியைப்போல" (அகம் கசள), "ஆதிமந்திபோல" (அகம் உ௩௬) எனக் கவிகளில் இயற்பெயர் வந்துள்ள இடங்களைக் காட்டி இவ்வியற் பெயர்கள் தலைமை வகையான் வந்தில;

சார்ந்து வகையான் வந்தன. ஆதலான் அகத்திணையுட் சேர்ந்தன எனவுந் தெளிவித்தார். தோழியும் பாங்கனும் முதலிய வாயிலோரையும் பொதுப்பெயரா னன்றி இயற்பெயர் தொடக்கத்தன கூறப்பெறார் என்றும் விளக்கினர். இவ்வுரையிலிருந்து ஒருவனைச் சுட்டிய இயற்பெயர் கிளவித் தலைவனாக அமைந்திருந்தால் அப் பாட்டு அகப் பொருளிற் சேர்க்கப்படாது என்பதே நாம் அறிவது. "புறத்திணை மருங்கில்" என்ற அகத்திணையியல் (௫௫) சூத்திரத்திற்கும் நச்சினார்க்கினியர் "ஒருவனையும் ஒருத்தியையும் விதந்து கூறும் இயற்பெயர் அகத்திணைக் கண்ணே வந்து பொருந்துமாயின் ஆண்டும் புறத்திணைக் கலத்தலிடத்தில் அல்லது வருதலில்லை" என்றவாறு எனப் பொழிப்பு வரைந்திருப்பதால் கிளவித் தலைவன் இன்னான் எனத் தோன்றும்படி குறிப்புமொழி யிருப்பினும் அப் பாட்டு அகமாகாது என்பதே. "சுட்டியொருவர் பெயர் கொளப்பெறார்" என்ற தொல்காப்பியர் கருத்தும் அதுவே.

இக் கருத்துப் பற்றியே "வேம்புதலை யாத்த நோன்காழெஃகமொடு முன்னோன் பாசறை முறை முறை காட்ட" (நெடுநல்-௧௭௬, ௧௭௭) என்பது படைத்தலைவன் வேலில் வேப்பமாலை சூட்டியிருப்பதை புணர்த்துகின்றது; அவ் வேப்பமாலை பாண்டியனது அடையாளப் பூமாலை; அதனால் அவன் பாண்டியனுடைய படைத்தலைவன் என விளங்கும்; அப் படைத்தலைவன் பாசறையை முறை முறையாகக் காட்ட "நள்ளென்யாமத்தும் பள்ளிகொள்ளான் சிலரொடு திரிதரும் வேந்தன்" (௧௮௬, ௧௮௭) எனவே பாண்டியன் ஒருவனையே சுட்டும்; என ஆய்ந்து அடையாளப் பூக் கூறினமையின் அகமாகாதாயிற்று எனச் சுருக்கிக் கூறினர்.

இனி "வேப்பமாலை பிறரும் சூடலாம்; அதுகொண்டு பாண்டியன் என்று கூறுவது முடிந்த முடிவாகாது" எனின் வேம்பு யாவரும் புனையும் பூவாகுமா? மணமுடைய பூவா? வனப்புடைய பூவா? யாரேனும் புனைந்திருக்கின்றனரா? பண்டைக் காலமுதல் இன்றளவும் வாழ்ந்த வேந்தர்களில் வேம்பு புனைந்து அரசுபுரிந்தவர் யார் யார்? "வேம்பன்" என்று கூறினால் அச்சொல் யாரையுணர்த்தும்? பாண்டியனையன்றி வேறு மன்னரை யுணர்த்துமா? பாண்டியனை வென்று அரசுபுரியும் வேந்தனொருவன் ஓர் காலத்தில் வேம்பு புனைந்திருந்தான் எனினும் அவனது இயற்பெயர் கூறினாலன்றி அவனை யுணர்த்துமா? ஆதலால் பாண்டியன் என்று கூறுவது முடிந்த முடிவுதான். அக் காலத்து அரசு புரிந்த பாண்டியனையே சுட்டும் அது. நக்கீரர் காலத்து அரசு புரிந்தவன் நெடுஞ்செழியனே ஆவன். ஆதலால் "வேம்பு தலையாத்த" என்ற குறிப்பு குடிப்பெயரை யுணர்த்தியதுமன்றி

..நெடுஞ்செழியன்'' என்ற ூயற்பெயரையும் சுட்டியது என்பது ச்சினார்க்கினியார் கருத்து.

“நகையங்கழற் காலிரும்பனம் புடையல்'' (புறம். ௯௯) என்ற அடி “தொன்னிலை மரபினின் முன்னோர் போல'' என்றவடிக்குப் பின் வந்திருப்பதால் பழைமையான சேரர் குலத்திற் பிறந்த நின்னுடைய முன்னோர்களைப் போலவே இரும்பனம்புடையல் சூடினை எனச் சேரர் உறவினனை அதியமானை ஔவையார் புகழ்ந்தனர் என விளங்கும். பனைமாலை புனைந்தவன் என்று கூறிய உடன் அது அதியமானைக் குறிக்கவில்லை ஆதலால் அஃது ஆராய்ச்சிக்குரியதன்று என விடுக்க. எனவே முடிவும் பொருத்த மன்று.

ஆ-ர் கூற்று:

“கார் முற்றிணரூழ்த்த (கலித்தொகை ௬௭) என்ற மருதக் கலிப் பாடலை அகப்புறமென்றும், நெடுநல்வாடையைப் புறம் என்றுங் கூறியது முரணானது என்றனர் ஆராய்ச்சியாளர்.

மறுப்பு:

அப் பாடலில் “வையை யாறு தன் நீரால் வளைத்துப் போர் செய்வது தவிர பகைவர் வந்து வளைத்துப் போர்செய்வதை யறியாத கோட்டைசூழ்ந்த ஊரன் எனவே வையை யாறு வளைக்கும் புரிசைசூழ்ந்த ஊர் மதுரை யெனவும் ஊரன் என்பதும் மதுரைப்பதியை யுடைய பாண்டியன் எனவும் அப் பாண்டியனைத் தலைவனைக்கொண்டு அகப்பொருளாகிய இன்பப் பகுதி கூறப்பட்டிருப்பதால் அதனை அகப்புறம் என்றார். நெடுநல் வாடையிற் புறப்பொருள் அமைந்திருப்பதாற் புறம் என்றார். அகப்பொருளாகக் கொள்ளலாம் எனின் பாண்டியன் கிளவித் தலைவனாக அமைந்திருப்பதால் அகமாகாது என்றார். அவர் கூறியது எங்ஙனம் முரணாகும்?

ஆ-ர் கூற்று:

மற்றும் ஓரிடத்தில் ஆராய்ச்சியாளர் “குடிப்பெயரானும் அகப்பொருட்டலைவன் கூறப்பெறான்'' என்பதற்கு விதி யாண்டுளது? அங்ஙனங் கூறின் அப் பாடல் அகப்புறம் ஆகும் என்பதற்குத் தான் விதி யாண்டுளது? தலைவனுடைய தாரும் ஆறும் கூறினும் அகமாகாது என்பதுதான் எவ்விதியாற் பெறப்படுமோ? என்று வினவுகின்றார். ஆய்ந்து பார்க்கின் தொல்காப்பியச் சூத்திரத்தில் அவர் கூறிய உரையோடு நெடுநல்வாடை முன்னுரையும், மருதக்கலி உரையும் முரணுதல் நன்கு புலப்படும்'' என்றார்.

(தொடரும்)

# உண்மைக்கு ஒவ்வாதது

இந்திய நாகரிகமென்பது வடமொழி நாகரிகந் தவிர வேறில்லையாம். வரலாற்றுக்கும், உண்மைக்கும் புறம்பான இந்த விசித்திரக் கருத்தைச் சமஸ்கிருதக் குழுத் தலைவர் டாக்டர் சுனீத் குமார் சாட்டர்ஜி சென்னையில் கூறியுள்ளார். இக் கருத்து வரலாற்று மொழியாராய்ச்சி அறிஞர்கள் அரிதின் ஆய்ந்து கண்ட முடிவுகளுக்குப் புறம்பானது. வடமொழியின் தொன்மையையும், அழகையும் டாக்டர் சாட்டர்ஜி புகழ்ந்திருந்தால் நமக்குக் கவலையிருந்திருக்காது. ஆனால் "இந்திய நாகரிகமென்பது வடமொழி நாகரிகமே" என்ற ஆதாரமற்ற கருத்தை வன்மையாகக் கண்டிக்கிறோம். இந்திய அரசாங்கம் நிறுவியுள்ள விசாரணைக் குழு ஒன்றின் தலைவர் இவ்வாறு பொறுப்பற்ற முறையில் தமிழ்நாட்டின் தலைநகராகிய சென்னையில் பேசியிருப்பது வியப்பைத் தருகிறது. இத்தகைய பேச்சுக்கள் வடமொழியின் செல்வாக்கு வளரப் பயன்படா; வடமொழியைத் தமிழர் கடிந்தொதுக்கும் நிலையையே இவை தோற்றுவிக்கும்.

இந்தியத் துணைக் கண்டத்தின் நாகரிக அடிப்படை தமிழ் நாகரிகமே ஆகும். ஏனெனில் ஆரியர்கள் இந் நாட்டிற்குள் நுழைவதற்கு முன்பே செழித்து வளம்பெற்று ஓங்கி நின்ற தொன்மை நாகரிகம் திராவிட நாகரிகமே. இந்த உண்மையை வரலாற்றுப் பேரறிஞர்கள், அறிவியல் உலகத் தலைவர்கள் ஆகிய அனைவருமே ஏற்றுக்கொள்கின்றனர். இதற்கு எண்ணிறந்த ஆராய்ச்சி நூல்கள் உறுதுணையாய் நிற்கின்றன. இந்த உண்மைக்கு அரப்பா—மொகஞ்சதாரோ நாகரிகச் சின்னங்களே போதிய சான்றாகும். திராவிட நாகரிகமென்பது தென்னாட்டு நாகரிகத்தையே பொதுவாகக் குறிப்பிடுமென்ற போதிலும், சிறப்பாகத் தமிழ் நாகரிகத்தையே உணர்த்தும். மொகஞ்சதாரோ நாகரிகச் சின்னங்களைத் துருவி ஆராய்ந்து உலகப் புகழ் பெற்ற புதைபொருள் ஆராய்ச்சி மேதையாகிய ஹீராஸ் பாதிரியார், "இப்பொழுது வழங்கும் மொழிகள் அனைத்திலும் தமிழே தொன்மையானது" என நிலைநாட்டியுள்ளார். இதே அரப்பா—மொகஞ்சதாரோ நாகரிகம் பற்றி, "உலக வரலாற்றுக் குறிப்புக்கள்" என்ற ஆங்கில நூலில் நம் தலைமை அமைச்சர் நேருவும் குறிப்பிட்டுள்ளார். "ஆரியர் இந்தியாவுக்குள் வருவதற்கு முன்பே திராவிட நாகரிகம் சிறந்து விளங்கியது. திராவிட நாகரிகக் கருத்துக்களால் ஆரியர் பெரும் பலனடைந்துள்ளனர்" என்று அந்நூலில் அவர் குறிப்பிட்டுள்ளார். "வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட இந்திய இனத்தவர் திராவிடர். அவர்களின் தோற்றம் தென்னாடே என்பதை அவர்களுடைய வரலாறு

டைப்பிக்கிறது" என்று மனித இனஇயல் துறையில் சிறந்த பெருட்டு அறிஞராகிய டாக்டர் பெர்கூசன் என்பவர் நிலைநாட்டியுள் ளார். இவற்றிலிருந்து திராவிட நாகரிகமென்று கூறப்படும் தமிழ் நாகரிகமே இந்தியாவின் பழம்பெரும் நாகரிகம் என்பதும் வடமொழி நாகரிகம் பிற்கால இந்திய நாகரிகத்தின் ஒரு கூறே என்பதும் வெளிப் படை. உண்மை இவ்வாறிருக்க வடமொழிக் குழுவின் தலைவரோ, இந்தியாவின் பண்பாடென்பது சமஸ்கிருத நாகரிகமே எனத் தமிழ் நாட்டின் தலைநகரில் தமிழரிடையே துணிந்து கூறியுள்ளார்.

உலகின் உயர்தனிச் செம்மொழிகளாகக் கருதப்படுபவை கிரேக் கம், இலத்தின், ஹிப்ரு, சீனம், ஆரியம், தமிழ் ஆகியவை யாகும். சொல்லமைப்பு, ஒலியமைப்பு, இலக்கண முறை ஆகியவற்றில் தென் மொழி தனித் தன்மையுடையது; வடமொழியினின்று வேறுபட்டது. தமிழர் நாகரிகம் வடமொழி நாகரிகத்திலும் காலத்தால் முந்தியது என்பது மட்டுமல்ல, நிலையாலும் உயர்ந்தது. மொழியுடன் வாழ்க் கைக்கும் இலக்கணத்தைச் சேர்த்து அமைத்துக் கொண்டு வாழ்ந்த பெருமை தமிழருக்குரியது. எல்லா நிலைகளிலும் ஒழுக்கத்தையும், செந்நெறியையும் அடிப்படையாகக் கொண்டு வாழ்ந்த பண்டை இனம் தமிழினமே யாகும். புறவாழ்வில் பொருள் வளமும், அக வாழ்வில் அருள் வளமும் நிரம்பி வாழ்ந்த முதுகுடித் தமிழரின் நாகரி கமே தொன்மையுடையது தமிழ்மொழியின் உருவையும், அமைப் பையும் குலைத்துவிட வடமொழி எவ்வளவோ முயன்றது. ஆயினும், தென்மொழி நிலையோ, உருவோ குலையாமல் இன்னும் சீரிளமைத் திறத் துடன் வாழ்ந்து வருகிறது. தமிழருடைய வாழ்விலும் தமிழ்ப் பண்பாடு இன்றளவும் தோன்றாத் துணையாய் உள்நின்று விளங்கி வரு கிறது. இந் நிலையில் "உலக வழக்கு அழிந்து ஒழிந்து" மக்களுடன் உயிர்த் தொடர்பு கொள்ளாத மொழியொன்றே இந்தியாவின் நாகரிக அடிப்படையெனக் கருதல், கற்பனை உலகில் வாழ விரும்புவோருக்கே ஏற்றது. வரலாற்றுச் சான்றுக்கோ, உண்மைக்கோ, அறிவியலுக்கோ ஏற்றதாகாது.

"தமிழ் நாடு" தலையங்கம்.
13—2—'57.

# பேரறிஞர், திரு. கி. இராமலிங்கனார்க்குப்
# பொன்னாடையுடன் பட்டமளிப்பு

என்றுமுள தென்றமிழ் மொழியில் ஆட்சிச் சொற்களை அமைத்துத் தருவோரும், பல நகர்களில் ஆணையராக அமர்ந்து பணியாற்றியோரும், தற்காலம் பசுமலை மீனாட்சி ஆலைக் குடியிருப்புக் காவலருமான உயர்திரு. கி. இராமலிங்கனார் அவர்கட்குத் தமிழ்த்திருநாளின் இரண்டாவது நாளாகிய 15-1-57-ஆம் நாளில் மதுரைத் திருவள்ளுவர் கழகத்தாரால் பொன்னாடை போர்த்த ஏற்பாடு செய்யப்பட்டது. விழாவுக்குத் தமிழவேள் திரு. பி. டி. இராசன் தலைமை தாங்கினார். மக்கள் பலர் திரளாகக் குழுமியிருந்தனர். கழகத் தலைவர் திரு. கே. பழனியப்பபிள்ளை அனைவரையும் வரவேற்றார். தமிழ்த்திருநாளின் இரண்டாவது திருநாள் விழா, அறிஞர் பாராட்டு விழாவாகக் கொண்டாடப்பட்டது. தலைவர் தம் முன்னுரைக்கண் கூறியதாவது :

"புலவர்கள், படித்தவர்கள், எழுத்தாளர்கள் ஆகியோருக்கு முன் காலத்தில் அரசர்கள் மதிப்பளித்தார்கள். இன்று திருவள்ளுவர் கழகத்தார் அச் செயலைச் செய்து வருகிறார்கள்; நல்லவற்றை யார் செய்தாலும் அவர்களைப் பாராட்ட நாம் தயங்கக் கூடாது" என்றார்.

தூய மரியன்னை உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் திரு. எஸ். முத்துச்சாமிப் புலவர் வாழ்த்திசைப்பாடல் பாடினார். அவ்வமயம் மதுரை மகாலட்சுமி நூற்பு ஆலை அதிபர் திரு. லெ. அழகுசுந்தரஞ் செட்டியார் அறிஞர் திரு. கி. இராமலிங்கனார்க்குப் பொன்னாடை போர்த்தினார்.

அதன்பின் மதுரைநகரவை ஆணையர் திரு. டி. எம். இராமசாமி, திரு. கி. இராமலிங்கனார்க்கு **'ஆட்சிச்சொல் காவலர்'** என்னும் பட்டத்தை வழங்கினார். அவர் பட்டம் வழங்கியபின் பேசுகையில், "ஆங்கில ஆட்சிச்சொற்கட்குச் சரியான தமிழ்ச்சொற்களைப் புதிதாகக் கண்டுபிடித்துக் கொடுத்த பெருமை திரு. இராமலிங்கனாரைச் சார்ந்ததாகும்" என்றார். பின்னர்ப் பலர் பாராட்டிப் பேசினர். பாராட்டுரைகளுக்கெல்லாம் திரு. இராமலிங்கனார் தக்கவாறு மறுமொழி இறுத்து நன்றி கூறினார். திருவள்ளுவர் கழகச்செயலாளர் திரு மீ. கந்தசாமிப்புலவர் நன்றிகூற விழா இனிது முடிவுற்றது.

நந் தமிழகத்தில் அரசினர் ஆற்றவேண்டிய அரிய பல செயல்களையெல்லாம் பொதுநிலையங்களே செய்துபோதருகின்றன; அவற்றுள் திருவள்ளுவர் கழகமும் ஒன்றாம். இது பேரறிஞர்களைப்போற்றி உலகுக்கு உயர்த்துக்காட்டும் அரும்பண்பைப் பெரிதும் கடப்பாடாகக் கொண்டுள்ளது; அம் முறையில் நம் கி. இராமலிங்கனாரவர்கட்குப் பொன்னாடை போர்த்துப் பட்டமும் வழங்கியுளது. இவ் வரிய செயலைப் பாராட்டி மகிழ்கின்றோம். இவ் விழாவில் யாமும் நெஞ்சங் கலந்துகொண்டு மகிழ்ந்து எமது வாழ்த்துரையைத் திரு. கி. இராமலிங்கனாரவர்கட்கு வழங்கிப் பன்னெடுங்காலம் இத்தமிழ்ப்பணி செய்து வாழச் சிவபிரான் திருவருளை வேண்டுகின்றோம்.

## பேராசிரியர், திரு. ரா. பி. சேதுப்பிள்ளையவர்கட்கு

# டாக்டர் பட்டம்

நாட்டின் உயர்நிலைக்கு முதல்வராக விளங்குவோர், அறிஞர்களும் கலைஞர்களும் சான்றோரும் ஆவர். அறிஞர் எண்ணிக்கையில் முதலிடம் பெறத்தக்கார் உயர்திரு. ரா. பி. சேதுப்பிள்ளையவர்களாவர். புலத்துறை முற்றிய நலத்திருவினர் சேதுப்பிள்ளை; அவர்கள் நெஞ்சம் தமிழ்நலங் கனிந்தது; உள்ளுவவெல்லாம் உயர்வுள்ளலேயே முதன்மையாகக் கொண்டது; நாநலம் என்னும் நலம், சிறப்பாக அமைந்தது; அவர்கள் சொற்பொழிவு தனிக் கலைமணம் வாய்ந்தது; எதுகை மோனைத் தொடை நயத்தோடு உயிர்த்தன்மை வாய்ந்தது; அவர்கள் பேச்சில் தனி ஒளி வீசும்; அவ்வொளியில் கேட்போருக்கு ஒரு புத்துணர்ச்சி பிறக்கும்; அப் பேச்சு சிந்தைக்கு இனிய செவிக்கினியவாய்க் கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்கும் செம்மைசான்றது; எடுத்தல் படுத்தல் பெருமிதவீறு அவர்கள் பேச்சில் மின்னெனப் பிறங்கும். பேச்சன்றி எழுத்தும் ஈடும் எடுப்புமற்ற தனிப்பெருமை மிக்கது. பேச்சதனையது எழுத்து, எழுத்தனையது பேச்சு. ஒன்றோடு ஒன்று இணைந்து நிற்பது கருவிலே திருவுடையரான ஒருசிலர்க்கன்றிப் பிறர்க்கு அமையாதென்றாம். இதற்கு இலக்கியர் நம் சேது அவர்கள். அவர்கள் செந்நா ஆங்கிலம் பயின்ற வொனறுயினும், அவிழ்ச் சுவையனைய தமிழ்ச் சுவையையே விரும்பும்; சுவைக்கும்; பேசும்.

இத்தகைய பேராசிரியர்—சொல்லின் செல்வர், நம் தமிழ் நாட்டில் தோன்றக் கிட்டியது பெரும் பேறேயாகும். அவர்கள் எழுத்தில் உருவாகிய **'ஊரும் பேரும்', 'தமிழின்பம்', 'திருவள்ளுவர் நூல்நயம்' 'வேலும் வில்லும்', 'கடற்கரையிலே'** போன்ற நூல்கள் தமிழினபம் சுவைப்பார்க்கு அருவிருந்தாகும். இவற்றுள் தமிழின்பம் என்னும் நூல் மைய அரசினர் நனமதிப்புப்பெற்றது. அதன் பெருமை புணர்ந்து ரூ. 5,000மும் பரிசு வழங்கினர்; அத் தொகையோடு 10,000 ரூபா சேர்த்துப் பதினையாயிர வெண்பொன் வழங்கிப் பல்கலைக் கழகத்துக்கு உரிமையாக்கினர். சீர்மிக்க இவர்களின பெருமையை உணர்ந்து அண்ணமலைப் பல்கலைக்கழகம் முன ஏற்றுக்கொண்டு இவர்கள் பணிபுரியும் தலைமைப்பேறு பெற்றது; பின இக் கழகம் ஏற்றுப் பணிகொண்டது. இவர்கள் பல ஆண்டுகளாக இப் பல்கலைக்கழகத்தில் பேராசிரியக்கிழமைபூண்டு வருகிறார்கள்; இவர்களால் கழகத்துக்குக் கிட்டிய பயன் மிகப்பலவாம். அப் பயன்கருதி நன்றிமறவாது தன் நூற்றாண்டுவிழாத் திருநாளின் மறுநாளாகிய 29-1-57-இல் **அறிவியல் முனைவர் (டாக்டர் ஆவ் லிட்ரச்சர்)** என்னும் பட்டம் வழங்கிச் சிறப்புச் செய்தது.

இப் பட்டத்தைத் தமக்கு உரித்தாகப் பெற்றமைக்குப் பெரிதும் மகிழ்கின்றோம். இப் பட்டத்தை வழங்கிய பல்கலைக்கழகத்தைப் பெரிதும் பாராட்டுகின்றோம். பட்டம் சிறப்பெய்த பட்டத்தைத் தாங்கிய **உயர்திரு. டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள்** இறைசிவ பெருமான் திருவருளால் பன்னெடுங்காலம் தமிழின்பஞ் சாரத் தழைத்து வாழிய பெரிதே! வாழிய பெரிதே! யென மனமுவந்து வாழ்த்துரை வழங்கி மகிழ்கூர்கின்றோம்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) திருமந்திர மாநாடு

திருவாவடுதுறை ஆதீனத்தின் சார்பில் 29—1—57 முதல் திருமுறைகளுள் பத்தாந் திருமுறையாக இலகும் திருமந்திரத்துக்கு மாநாடு கூட்டி நிகழ்வுற்றது. ஷை திருமந்திர மாநாட்டின் இரண்டாம் நாள் நிகழ்ச்சி மதுரை மீனாட்சி மில் அதிபர் உயர்திரு. கருமுத்து தியாகராசச் செட்டியாரவர்கள் தலைமையின் கீழ் நிகழ்ந்தது.

பல அறிஞர்கள் திருமந்திர நூலின் சிறப்புக் குறித்து அரிய சொற்பொழிவாற்றினர். மாநாடு சிறப்புற நிகழ்ந்து முடிவுற்றது.

**குறிப்பு:** திருவாவடுதுறை ஆதீனத்தில் இப்பொழுது எழுந்தருளியிருக்கும் அருட்பெருந்திரு. சுப்பிரமணிய தேசிக பரமாச்சாரிய சுவாமிகளின் ஆதரவில் திருமந்திர நான்காவது மாநாடு மிகச் சிறப்புடன் நிகழ்வுற்றது மகிழ்ச்சிக்குரியதாகும். இத்தகைய மாநாட்டின் மூலம் தமிழ்மொழியும் சைவ சமயமும் மேலோங்க அரிய தொண்டு புரிந்துவரும் மகாசன்னிதானம் அவர்களின் அருளைப் பெரிதும் பாராட்டுகின்றோம்.

## (உ) இராமநாதபுரம் மாவட்டக் கழகத்தில் தமிழே அலுவல் மொழி

இராமநாதபுரம் மாவட்டக் கழகத்தில் கழக அலுவல் யாவும் தைத் திங்கள் க-ஆம் நாள் (14-1-57) முதல் தமிழிலேயே நடைபெறுமென்று ஷை கழகத் தலைவர் திரு. இராமசாமி நாயுடு தெரிவித்தார். அக் கழகத்தின்கீழ் உள்ள எல்லா அதிகாரிகளும் ஆசிரியர்களும் ஊழியர்களும் ஷை கழகம் சம்பந்தப்பட்ட கடிதப் போக்கு வரவுகளைத் தைத் திங்கள் முதல்நாள் முதல் தமிழிலேயே வைத்துக்கொள்வார்கள். ஷை ஊழியர்கட்கு மேற்கண்டவாறு உத்தரவு பிறப்பித்துள்ளார்.

**குறிப்பு:** இம் மாவட்டத் தலைவரைப் பின்பற்றி ஏனைய மாவட்டத் தலைவர்களும் அவ்வவ் மாவட்டத் தலைவர் இவ்வாறு தமிழிலேயே எல்லா அலுவல்களும் நடைபெற வேண்டுமெனக் கட்டளையிட்டு நடத்த முன்வருவார்களென நம்புகின்றோம். இவ்வாறு நாடெங்கும் செய்யின் தானாகவே தமிழ்மொழி ஆட்சிமொழியாக எங்கும் பரவும். இதனை ஒரு அளவில் அமைப்பது நாட்டுக்கு மொழிவளர்ச்சி விரைவில் சிறக்காது. ஆகவே, நாடு முழுதும் விரைவில் ஆட்சிக்குக் கொணர வேண்டுவது, நாட்டுப் பற்றும் அரசியல் அறிவுமுள்ள அமைச்சர்களின் கடமையாம். விரைவில் எங்கும் நம் தமிழ்மொழியை ஆட்சிமொழியாகப் பரப்புமாறு வேண்டுகிறோம்.

## (ங) தமிழ்நாடு எனப் பெயரிட வேண்டிச் சங்குகணேசன் உண்ணா நோன்பு

17—1—57-ஆம் நாள் காலை 8-45 மணிக்குத் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயில் முன்னிலையில் சங்கு கணேசன் உண்ணா நோன்பு தொடங்கினார். சென்னை மாகாணத்துக்குத் 'தமிழ்நாடு' என்று பெயரிட வேண்டுமெனக் கோரியும் இன்னும் சில முதன்மையான காரியங்களையும்

வேண்டி நின்றனர். அவை மொத்தம் ஏழாகும். பின் அவர் கோரிக்கைகளில் ஒன்றான செய்யூரின் அரிசனங்கள் உப்புக்காய்ச்சி உண்டாக்கிக் கொள்ளுதலை அரசியலார் ஏற்றுக் கொண்டமையால் உண்ணு நோன்பை மேற்கொண்ட 18-ஆவது நாளான 3—2—57-ஆம் நாள் மாலை 6-30 மணியளவில் பார்த்தசாரதி கோயிலில் இறைவணக்கஞ் செய்து தூய நீரத்தத்தை உட்கொண்டபின் பழச்சாறு அருந்தி உண்ணுநோன்பைக் கைவிட்டனர்.

குறிப்பு: அமைச்சர்கள் 'தமிழ்நாடு' எனப் பெயரிடுவதை விரும்பவில்லை. ஆதலான், நம் 'சென்னை ராச்சியம்' என்ற பெயர்போய் 'தமிழ்நாடு' என என்று பெயர்பெறுமோ அறிகிலேம்! யார் உயிரை விட முன்வரினும் வல்லென்ற கல்நெஞ்சினர்க்கு இரக்கமுண்டாங் கொலோ?

## ச) இலங்கையில் சிங்கள மொழிக்குத் தமிழர் எதிர்ப்பு

தமிழர்கள் எதிர்ப்பையும் வெறுப்பையும் பொருட்டாக்காது இலங்கையில் சிங்களமொழி மட்டுமே அரசியல் மொழியாக ஆக்கப்பட்டிருப்பதை எதிர்த்தனர். கடந்த 19—1—57-ஆம் நாள் வடக்கு கிழக்கு மாகாணங்களைச் சேர்ந்த தமிழர்கள் கார்களிலுள்ள எண் தகடுகளில் 'ஸ்ரீ' என்ற எழுத்தைச் சிங்களத்தில் மட்டுந்தான் எழுத வேண்டுமென்ற ஆணைகை அரசியலார் உத்திரவை எதிர்த்து வெற்றியாக தமிழில் ஸ்ரீ என்ற எழுத்துடன் கூடிய எண் தகடுகள் செருகிய கார்களை வீதிகளில் ஓடுத்துச் சென்றார்கள்.

குறிப்பு: சிங்கள ஸ்ரீயை எதிர்த்துப் போரிட்ட இலங்கைத் தமிழ் மக்களைப் பெரிதும் பாராட்டுகின்றோம். ஸ்ரீ என்பது தமிழில் இல்லாத வெழுத்து: இடைப்பட்ட மொழிப் பண்பு உணராத சிலரால் தமிழ் நெடுங்கணக்கில் சேர்க்கக் கடன் கொண்டது. அவவெழுத்தைத் தமிழெனக் கொண்டு போரிடுதல் உயரிய குறிக்கோளல்ல. தமிழை ஆட்சிமொழியாக்க முயலுதலே கடமையாகும்.

# மதிப்புரை

## (க) தாமே பயின்ற தமிழ்ப்பேராசிரியர் (ந. மு. வேங்கடசாமி நாட்டார்.)

[இந்நூல் ஆசிரியர் திரு. வே. நடராசன் அவர்களாவர். 'நாட்டார் பதிப்பகம்' 4. புதுப்பேட்டைத் தோட்டத்தெரு, இராயப் பேட்டை சென்னை-14. விலை ஒரு ரூபா.]

இந்நூல் நாவலர், பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்களின் பொருள்சேர் புகழ்வரலாறாகும். நாட்டாரவர்கள் தமிழ்நாட்டிற்கு எல்லாத் துறைகளிலும் எடுத்துக் காட்டாகத் திகழும் சீரிய சான்றோராவர். ஒழுக்கத்தை உயிரினும் சிறந்ததாக ஓம்பிய விழுத்திணைத் தமிழ்ப் பெருமகனாராவர். 'கற்றோரறியா அறிவினர் கற்றோர்க்குத் தாம வரம்பாகிய தலைமையர்.' உரையாசிரியர் நூலாசிரியராகத் தாம்

விளங்கியதுடன் உடம்பொடு புணர்த்தலென்னும் புணர்ப்பு வகையான் அவற்றிற்கு இலக்கணமாகத் தம் நூல் நின்று நிலவுமாறு யாத்தமைத்த ஒத்தினர். நாவன்மையும் பாவன்மையும் பணிவும் இன்சொல்லும் நயமும் துணிவும் உள்ளவர்; உலையா முயற்சி கலைகளையும் தலையாம் நிலைமை எய்தியவர். இப்பெருந்தகையார் வரலாறு தமிழ் உலகத்தார்க்கு நந்தா மணிவிளக்காக வழிகாட்டியாகும். உலகம் புது நாகரிகச் சுழலிற் பட்டுப் பண்பாட்டுக்கு ஒவ்வா உடையும் உணவும் உரையும் கொண்டு களிக்கும் நாளில் தாம் சிவனடிமறவாச சீர்மைக்கேற்ற பண்பாட்டின்படி ஒழுகிய விழுத்தவர்.

ஆசிரியர் மிகவும் முயன்று இந்நூலைக் காலவரம்பின்படியும் மெய்ந்நூற் குறிப்பின்படியும் யாத்துள்ளார் நூல் எளிமையும் இனிமையும் திட்பநுட்பமும் செறிந்துள்ளது. நல்ல பதிப்பு; தமிழ்ப்பெருமக்களும் ஆசிரியமாணவர்களும் இதனை வாங்கிக் கற்றுப் பெரும்பயன் எய்துவார்களாக.

### (௨) அகில இந்திய ஆலய வழிகாட்டி (யாத்திரை விளக்கம்)

[இந் நூலாசிரியர். திரு. க. வெ. அருணகிரியாரவர்களாவர் இதன் விலை ரூபா. 1-8-0 கிடைக்குமிடம், கணபதி வாசக சாலை, 92. காமாட்சி அம்மன் கோவில் தெரு, காஞ்சிபுரம்.]

இதன் ஆசிரியரவர்கள் நேரில் சென்று எல்லாத் திருவூர்களையும் கண்டு வழிபடும் பேறுபெற்றுள்ள பெரும் சிவபுண்ணியச் செல்வர். இமையமலைச் சாரல் தொட்டுக் கன்னியாகுமரி ஈறாகவுள்ள பெருநிலப் பரப்பில் காணப்படும் சைவ வைணவத் திருக்கோவில்களும், ஆங்காங்குள்ள சிறப்புக்களும், செல்லும்வழி வகைகளும், இறைவன் இறைவியர் திருப்பெயர்களும், பெயர்க் காரணங்களும் திருமுறை திருவாய்மொழித் திருப்பதிகக் குறிப்புக்களும், வேண்டும் வரலாற்றுக் குறிப்புக்களும், பிறவும் இதனகண் அழகுறக் காணப்படுகின்றன. ஒரு திருவூரிலிருந்து மற்றோர் திருவூருக்குச் செல்லும் வழிகள் புகைவண்டியைச் சார்ந்ததா? உந்துவண்டியைச் சார்ந்ததா? என்று தெளிவுப்படுத்துவதுடன், தொலைவின் அளவும் கட்டணமும், ஆங்காங்குள்ள தங்குமிடம் முதலிய வசதிகளும் தெளிவுபடுத்தப் பட்டுள்ளன. இலங்கை மாநிலத்துள்ள திருவூர்களும் திருக்கோவில்களும் இவ்வாறே செவ்வையுற விளக்கப்பட்டுள்ளன. திருவிழாக்களின் உள்ளுறைத் தத்துவங்களும் இக் காலத்துக் கேற்றவாறு திருக்கோவில் வழிபாடுகள் திருவிழாக்கள் அமையவேண்டிய முறைகளும் திருக்கோவில் அறங்காவலர்களும் ஆணையாளர்களும் இவ்விவ்வாறு நடப்பதே நற்பயன் அளிக்கும் என்னும் கட்டுரை, மிகுந்த நன்மை பயப்பதாகும். பலவேறு வகையான தலைப்புக்களில் திருவூர்களை அறிந்து கொள்வதற்கு அகரவரிசை பெருந்துணை செய்வதாகும். இதனைத் தமிழ் அன்பர்கள் அனைவர்களும் வாங்கிக் கற்றுப் பயன் எய்துவார்களாக.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.





சிலம்பு ௩௧    திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௮, மாசி    பரல் ௭

மார்ச், 1957


உயர்: ஆட்சியாளர் மணிவிழாவில்

## சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக

# மெய்யுணர்வுவிழா

(முப்பத்தாறும் ஆண்டு நிறைவுவிழா)

தணறா தமிழ வளாககும நம கழக ஆடசியாளா திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்கட்கு இவ் 1957-ஆம் ஆண்டு செப்டெம்பர்த் திங்களில் அறுபான் அகவை நிரம்புகின்றது. அத் திங்களே நம் கழகம் தோன்றிய திங்களும் ஆகும். ஆட்சியாளராக அமர்த்தப் பெற்றதும் அத் திங்களேயாகும்.

கழகம் 1920-ஆம் ஆண்டு செப்டெம்பர்த் திங்கள் 21-ஆம் நாளில் உயர்திருவாளர், மா. திரவியப்பிள்ளையவர்கள், ஆட்சியாளர் தலைவர் உயர்திரு. வ. திருவரங்கம்பிள்ளையவர்கள் ஆகிய இருவர் நன்முயற்சியால் கூட்டு அமைச்சர்களாக நிறுவப் பெற்றது. அது உயர்திரு. மறைமலையடிகள், கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் ஆகிய புலமைச் சான்றோர்களின் கொள்கைப் படி தனித்தமிழ் வளர்ச்சியையும் சைவசமயமே சமயம் என, ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோரால் பாராட்டுப்பெற்ற நம் சைவசித்தாந்த நன்னெறியையும் போற்றுதலையே தன் குறிக்கோளாகக் கொண்டு தன் அரும்பணியை நன்முறையில் ஆற்றிவருகின்றது.

ஏறக்குறைய முப்பத்தைந்து ஆண்டுகட்கு முற்பட்ட காலத்தில் வடமொழி முதலிய பிறமொழிக் கலப்பினால் நம் தமிழ் மொழியின் தனித்தமிழ்த் தொன்மையும் அழகும், அதன்

மெல்லிய இனிய ஒலிநயங்களும், தன் எழுத்துரு முதலியனவும் சிதைந்து திரிந்த காலத்தில் ஆசிரியர் மறைமலையடிகளாரின் கொள்கைவழிக்கண் முனைந்துநின்று தனித்தமிழ் உரைநடையை உருவாக்கி, அதனை வளர்த்துத் தமிழகத்தில் தனித் தமிழால் நூல்கள் எழுத ஒல்லும் என்பதை நிலைநாட்டியது நம் கழகமேயாகும். இவ் வழிக்கண் படர்ந்து இற்றைஞான்றை வரை முறைபிறழாது தமிழ்மொழியையும், சைவசமயநெறியை யும் போற்றிப் புரந்து வரும் பெருமை நம் கழகத்துக்கு உரித்து: அம்முறையில் தன் அரிய பெரிய தொண்டினைக் கடந்த முப்பத்தாறாண்டு வரையில் ஆற்றிவந்துள்ளது; எதிர்காலத்தும் பொன்னிற் பொதிந்து இக்கொள்கைகளில் தலைநின்று ஆற்றுங் கடப்பாட்டைக் கொண்டுள்ளது.

கழகம் தோன்றிய நாள்தொட்டு அதன் பணியிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்து தமிழ்மொழிக்காக—அதன் வளர்ச்சிக்காக—சைவமாநெறியை ஓம்புதற்காகக் கழகத்தைத் தோற்றுவித்த தம் தமையனார் உயர்திரு. வ. திருவரங்கப்பிள்ளை அவர்கள் கொள்கை வழிநின்று அருந்தொண்டாற்றி வருபவர்கள் கழக ஆட்சியாளர், உயர்திரு வ. சுப்பையாபிள்ளையவர்கள். அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு வரும் செப்டெம்பர்த் திங்களில் வருகின்றது; கழகத்தின் முப்பத்தாறும் ஆண்டு நிறைவும் அத்திங்களிலேயே போதருகின்றது. ஆகலான், அத் திங்களில் ஆட்சியாளரவர்களின் மணிவிழாவையும், கழக முப்பத்தாறும் ஆண்டு நிறைவுவிழாவையும் அக்காலைக் கொண்டாடி மகிழ விழைந்துள்ளோம்; அந் நன்னாளின் சிறப்பை இஞ்ஞான்றை உலகமும் வருங்கால உலகமும் கண்டு நினைவுற்று மகிழ்கொள்ளச் சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும் நல்லிருந்தாது நறுமணங்கமழும் மலரொன்றை வெளியிட எண்ணியுள்ளோம். கழகம் தோன்றி இற்றைஞான்று முப்பத்தாறுவது அகவை முற்றுற்று நிற்கின்றது. தமிழ்மொழி யின் உயர்ச்சியும், சைவநெறியின் உட்கருத்தும் ஒருங்கே அமைந்து உயர்குறிக்கோளைக் காட்டுந்தன்மையாக, உலகமறை நூலாகவும் தமிழர் சிறப்புமறையாகவும் போற்றப்பெறும் திருக்குறட் பெருநூலின் உண்மைக் கருத்தை உள்ளகத் தமைத்துக் காட்டும் ஒளிவிளக்கக்கண்ணாடிபோல அமைந்த 'மெய்யுணர்தல்' என்னும் அதிகாரம் முப்பத்தாறும் எண்ணுக்கண் அமைந்து கிடத்தலாலும், தத்துவமெனறுறுறும் தான் கடந்து நிற்கும் முழுமுதற் பெருமானை சிவபெருமானை மனமொழி மெய்களால் நினைந்து வாழ்த்தி வணங்கற்குரிய உண்மை (தத்துவ)ப் பொருள் முப்பத்தாறாக அமைந்திருத்தலானும் இவ்

துணை விளக்கங்கொண்டதாய், உரை வரைவித்து நன்முறையில் நூலுருவாக்கித் 'திருக்குறள் தண்டபாணி விருத்தியுரை' என்னும் பெயரமைத்து வெளியிட்டுள்ளது.

திருக்குறள் முழுமைக்கும் உருவிற் சிறிதான கட்டமைய மூவ்வரிக்கு மேற்போகாமல் டாக்டர் திரு. மு. வரதராசனார்களைக் கொண்டு பொழிப்புரை யெழுதுவித்து உரையை இடப்பாங்கிலும் மூலத்தை வலப்பாங்கிலும் அமைத்து நூலுருவாக்கித் 'திருக்குறள் தெளிவுரை' என்னும் பெயரமைத்து வெளியிட்டுள்ளது. இத் தெளிவுரை முதற் பதிப்பு 1949-ஆம் ஆண்டு மேத் திங்களில் வெளிவந்தது. இதுகாறும் 11 பதிப்புக்களாக ஓரிலக்கத்து இருபதினாயிரம் படிகள் வெளியிடப்பெற்று நாட்டிற் பரவியிருக்கின்றது என்பது மகிழ்ச்சி தரக்கூடியது.

வடஇந்திய நகராகிய அலகாபாத்தில் 27-2-56-இல் நடந்த அனைத்திந்திய அச்சகத்தார் நான்காவது மாநாட்டில் திருக்குறள் பரிமேலழகருரை ரெக்சைன், திருவாசக மூலம் ரெக்சைன் கட்டட நூல்களைப் பாராட்டி மகிழ்ந்து நற்சான்றிதழும் வெள்ளிக் கிண்ணம் ஒன்றும் வழங்கியுள்ளனர்.

திருக்குறள் நாட்குறிப்பு என்னும் பெயரால் நாட்குறிப்பு ஒன்றை 1932-ஆம் ஆண்டு முதல் தொடக்கக் குறளிலிருந்து வெளியிட்டு முழுதும் முடிந்த பின்னர் மீண்டும் மீண்டும் திருக்குறளைப் பொழிப்புரையுடன் வெளியிட்டு வருகிறது.

சங்க காலப் புலவர்கள் வரலாறுகளை அவரவர் பாடல்களின் துணைகொண்டும் வேறு சான்றுகள் கொண்டும் எழுதுவித்துச் 'சங்கத்தமிழ்ப் புலவர் வரிசை' என்னும் பெயரால் பதினாறு நூல்கள் வெளியிட்டுள்ளது.

முடியுடை வேந்தர்களான சேர சோழ பாண்டி மன்னர்கள் வரலாற்றையும்; குறுநில மன்னர்கள், வள்ளல்கள், தனிச்சிறப்பு வாய்ந்த செல்வத் தோன்றல்கள் வரலாறுகளையும் தொகுத்துச் 'சங்ககால அரசர்வரிசை' என்னும் பெயரால் தனித்தனியாக ஆறு நூல்கள் வெளியிட்டுள்ளது.

பிற்காலத்துத் தமிழுக்குத் தொண்டு செய்த புலவர் பெருமக்களின் வரலாறுகளைத் தொகுத்து எழுதி, 'தமிழ்ப் புலவர் வரிசை' என்னும் பெயரால் பதினைந்து நூல்கள் வெளியிட்டுள்ளது. அவற்றுள் முந்நூற்றெண்பது புலவர்கள் வரலாறு வெளிவந்துள்ளன.

புலவர்களின் உருவப்படங்களை யெழுதுவித்து அவர் காலம் முதலிய வரலாற்றுக் குறிப்போடு விழாவின்போது காட்சிக்கு வைக்க முயன்றுள்ளது.

புலவர் பெருமக்களின் திருவுருவப் படங்களையும் திருவள்ளுவர், சைவசமய குரவர்கள், சந்தான குரவர்கள் திருவுருவப் படங்களையும் ஒன்றாகத் தொகுத்துப் பெரிய அளவில் வெளியிட்டதும் நம் கழகமே.

கல்லாத முதியவர்கள் இன்றியமையாமையை யெடுத்துரைத்து முதியவர் கல்விமுறையை மேற்கொள்ள, 'தாமே தமிழ் கற்கும் முறை' என்னும் நூலையும்; 'படியாதவர் படிப்பாடு' என்னும் நூலையும் பட விளக்கங்களுடன் வெளியிட்டு நாடெங்கும் பரவச்செய்து, கற்காத ஆண், பெண்பாலாரில் ஒருசிலரேனும் கல்விபெற வைத்தது நம் கழகமே.

இளமாணவர்க்கு அவரவர்தம் பருவத்துக்கேற்பப் படிக்க உதவுமாறு எளிய நடையில் தொடங்கிப் படிப்படியாக வளவிய உயரிய நடைகளில் பாட நூல்களும், நூற்றுக்கணக்கான கதை நூல்களும் எழுதி வெளியிட்டு மாணவர்கள் தமிழின் சுவை யுணர்ந்து ஆர்வத்துடன் கற்க வழிகாட்டியது நம் கழகமே.

பழந்தமிழ் நூல்கள் மறைந்து போகாதவாறு தொகுத்தும் வகைப்படுத்தியும் காத்துவைத்தும் போற்றிவருவதும் நம் கழகமே. பழந் தமிழ்நூல்களில் உரையில்லாதவைகட்கு நன்முறையில் உரை யெழுதுவித்து வெளியிட்டுவருவதும் நம் கழகமே

ப[illegible]யாண்டுகட்கு முன்னரேயே ஆட்சிச்சொல் அகரவரிசையை ஆக்கி, 'ஆட்சிச்சொல் அகரவரிசை' என்னும் பெயரால் நூலை வெளியிட்டு அவ் வழியை யாவரும் பின்பற்றி ஆர்வங்கொள்ள வைத்தது நம் கழகமே. அன்று வித்திய விதையே இன்று ஆட்சிச்சொல் நூலாக அரசினரும் ஏற்குமாறு செய்தது. கழகம் தொடங்கிய நாள் தொட்டு இஞ்ஞான்றை வரை நன்முறையில் எண்ணூற்றெண்பது நூல்கள் வரை வெளியிட்டு நாட்டகத்துப் பரவச் செய்துளது.

'செந்தமிழ்ச் செல்வி' என்னும் திங்கள் இதழொன்றை முப்பதாண்டுக்குமுன் தொடங்கித் தொடர்ந்து வெளியிட்டு வருவது நம் கழகமே. அதன் துணையால் இன்று தனித்தமிழில் எழுத்துநடையும் பேச்சுநடையும் எழுச்சியுற்று இளைஞர் உள்ளத்து வளர்ந்துநிற்கின்றதெனின், அது மிகையாகாது. அதன்வழி இலக்கண இலக்கியங்கட்குப் புதிய முறையில் விளக்கவுரைகளும், அரிய பெரிய கருத்துரைகளும் உருப்பெற்றோங்கி வரலாயின.

நம் செல்வியில் வெளிவந்த கட்டுரைகள், அரும்பொருள் துறுமிய வளவிய செந்தமிழ்ச்சொற்களான் இயன்றவை. ஆகலான் வானொலி நிலையங்களினும் பொதுச்சொற்பொழிவு

றன்றங்களினும் சொற்பொழிவாற்றற்குப் பெரிதும் துணை புரிவனவாம்; அன்றியும் தனித்தமிழ் உரைவளமும் மிக்கன.

தனித்தமிழால் தமிழ் வளர்ச்சியுறுமெனக் கருதும் அறிஞர் கட்கு ஒல்லும் என அறிவூட்டித் தெருட்டுவன.

இந்திமொழியை அரசியல் மொழியாக அமைத்துக் கட்டாய மொழியாக நம் தமிழகத்துக்கு அரசியலார் கொணர்ந்தபோது, அதனைக் கட்டாயப் பாடமாக வைத்தல் கூடாதென எதிருரை யாடி அதற்காம் வழிவகைகளை அமைத்துக்காட்டி அதனைத் தளர்த்தச் செய்தது நம் கழகமே.

கலைச்சொற்களை ஆக்கிக்கொடுத்த சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கத்துக்கு அக் கலைச் சொற்களைத் திறம்பெற ஆக்கு தற்கு உறுதுணையாக அமைந்துநின்றது நம் கழகமே.

நம் தமிழ்நாட்டின் முடியுடைவேந்தர்கள் மூவர்களும் தமிழ்க்கொடிகளாகக் கொண்டு இமய நெற்றியினும் பொறித்து வெற்றிகொண்ட சிறப்புடைத்தாய மீன் புலி வில் ஆகிய உருவங் கொண்ட தமிழ்க்கொடியை முதன்முதல் உருவாக்கி நாட்டில் பரவச்செய்தது நம் கழகமே.

சைவசித்தாந்த சமக ஆண்டுவிழாக்களும், மெய்கண்ட சாத்திர மாநாடும், சிவஞானபோத வகுப்பும் மாநாடும் நடத்தி யிருக்கின்றது.

திருநெல்வேலியில் சிவஞானமுனிவர் நூல்நிலையமும், காசில் லாப் படிப்பகமும் நடைபெறுகின்றன.

பள்ளி ஆசிரியர்கள் தமிழ்வித்துவான் தேர்வுக்குப் பயிற்று விக்கப் பெறுகின்றனர்.

சிழ்த்திசைக் கல்லூரியும் தமிழ் ஆராய்ச்சி நிலையமும் சங்க வழி விரைவில் சென்னையில் நிறுவப்பெறும்.

தென்னிந்திய தமிழ்ச்சங்கச் சார்பில் ஆண்டுகள்தோறும் வித்துவான் புகுமுகம், முதனிலை, இறுதிநிலைத் தேர்வு நடத்தித் தேறிய மாணவர்க்குப் பரிசும் சான்றிதழும் வழங்கிவரப் பெறு கின்றன.

இன்னனபோன்ற நம் நாட்டுக்கும் நம் மொழிக்கும் இனிது வேண்டப்பெறும் எல்லாத் துறைகளினும் முன்னின்று அடி கோலிக்காட்டியது கழகமெனின், அது புகழ்ச்சியாகாது.

பண்பும் பயனும் உணரும் செல்வநன்மக்கள் கழக மெய் புணர்வு விழாவுக்குத் தங்களின் பேராதரவைத் தந்து மலர் நன்

முறையில் வெளிவர இயன்ற பொருட்கொடை வழங்கியருள மிகவும் வேண்டுகின்றோம்; வாழ்த்துரையும் மகிழ்ந்துதவியருள வேண்டுகின்றோம்.

நாநல மென்னும் நன்னலம் பெற்ற புலவர் பெருமக்கள் கழக மெய்யுணர்வு விழாவின் நன்மலரின் உள்ளக நறுந்தாதாக உயர்வுதரத் தக்க கட்டுரைகள் வழங்கி மலரை மணக்கமழச் செய்தருளப் பெரிதும் வேண்டுகின்றோம்; வாழ்த்தும் உதவியருள வேண்டுகின்றோம்

ஏனைய பொதுமக்கள் அவரவர்களால் உதவிதரத்தக்க வழியில் மனத்தால் தம் அன்பை விழாவுக்குத் தந்தும், வாக்கால் வேண்டும் உறுதுணை புரிந்தும், வாழ்த்துரை வழங்கியும், மெய்யால் இயலும் செயல்களை ஆற்றியும் மலர் வெளியீட்டுக்கு உறுதுணை புரிந்தருள வேண்டுகின்றோம்.

—கழக ஆட்சிக்குழுவினர்.

---

## திருக்குறள் நூற்காட்சி

[திரு. கா. பொ. இரத்தினம், இலங்கை]

இவ்வாண்டுத் திருவள்ளுவர் திருநாளின்போது (11-6-57, எமது தமிழ்மறைக் கழகச் சார்பிற் கொழும்பில் நடத்தப்படும் ஐந்தாவது திருக்குறள் மாநாட்டில் திருக்குறள் நூற்காட்சி ஒன்றினையும், அமைத்தற்கு முயன்று வருகின்றோம். திருக்குறள் மூலம், உரைகள், திருக்குறளும் திருவள்ளுவரும் பற்றிய கட்டுரைகள், ஆராய்ச்சி நூல்கள், நாடகங்கள், பாடல்கள், மலர்கள், பத்திரிகைகள் முதலிய யாவற்றையும் சேர்த்துக் காட்சிக்குவைக்க எண்ணியுள்ளோம். இன்றுவரை வெளிவந்துள்ள நூல்கள் யாவற்றையும் சேர்த்து இந் நூற்காட்சியினைச் சிறப்பாக நடத்துதற்குத் தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் உள்ள அன்பர்களின் ஆதரவும் உதவியும் இன்றியமையாதன.

நூலாசிரியர்களும், பதிப்பாளர்களும், புத்தக வியாபாரிகளும், தாங்கள் வெளியிட்ட நூல்களையும், தங்களிடம் உள்ள நூல்களையும் பற்றிய விவரங்களை எமக்கு அனுப்பி உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம். நூல்களை நன்கொடையாக உதவும் அன்பர்களுக்கும் வியாபார நிலையங்களுக்கும் எமது கழக வெளியீட்டின்வாயிலாக நன்றி நவில்வோம்.

இப்பொழுது வியாபார நிலையங்களிலே பெறமுடியாத பழைய நூல்களை வைத்திருப்போர் விபரங்களை அறிவிப்பின் அவற்றை விலை கொடுத்துப் பெறுதற்கும் முயல்வோம்

தமிழ்கூறு நல் உலகத்தில் முதன்முதலாக நடக்கும் இச் சீரிய பெரும்பணி சிறப்பாக நிறைவேற இயன்ற உதவி செய்யுமாறு தமிழ்ப் பேரறிஞர்களையும், தமிழ்ப் பத்திரிகைகளையும் வேண்டிக்கொள்ளுகிறோம்.

# வடமொழிக் குழுவினர்[1] போக்கு

[செல்லூர்க்கிழார், திரு. செ. ரெ. இராமசாமி பிள்ளை]

நமது என்றுமுள தென்றமிழ் வளர்ந்து வளம் பெருக்கும் நமது தமிழ்நாட்டில் பல்வேறு வகைப்பட்ட மொழிகள் வந்து வந்து வளர்ந்து திரிந்து சிதைந்து மறைந்து தீர்ந்தொழிதலைப் பண்டுதொட்டு இன்றுகாறும் கண்டுவருகின்றோம் முற்காலத்துப் பாலிமொழி ஒன்று இருந்ததெனவும் அதிலே எல்லாக் கலைகட்கும் நூல்கள் எழுதி அதன் வழியாக நாட்டில் அறிவு வளர்ச்சியை வளர்த்து வந்தனரெனவும் வரலாறுகள் கூறுகின்றன ; அப்பால் சமக்கிருதம் எனப்பெறும் வடமொழியை நாட்டுப் பொதுமொழியாகக் கொண்டு அதில் கலைகளையும் சமயத்துறை அளவைமுறை முதலிய பொதுவியல்துறைக் கலைகளையும் வளர்த்து வந்தனரென வரலாற்றாய்வாளர் கூறுகின்றனர் ; வேதம், ஆகமம் முதலியவைகளில் சில பகுதிகளைத் தமிழில் அறிவாராய்ச்சியிற் சிறந்த புலவர்பெருமக்களே யெழுதி அமைத்துளரெனக் கூறுகின்றனர்.

இவ்வாறு பழங்காலத்தில் பொதுமையாக இருந்ததெனக் கூறப்பெறும் பாலி, சமக்கிருதம் போன்ற மொழிகள் கனைப்பொலி, முற்கு, எடுத்தல், படுத்தல் ஓசைகள் மிக்குப் பல்கி இருந்த காரணத்தால் உலக வழக்கில் பயில வழங்காது, சொல் வழக்கிழந்து நாட்டில் நடமாட்டமற்று ஏட்டளவில் நிற்கலாயின. இவ்வாறு மறைந்தனவே, இலத்தின், ஈபுருபோன்ற மொழிகளும் மீண்டும் இம்மொழிகள் தழைக்க முயலவது, உமிக்குத்திக் கைந்நோவார் நிலையை யொக்கும்.

நம் தமிழ் மொழியோ தான் தோன்றிய காலமும் கணக்கும் நீத்த தொன்மையது ; மெல்லிய இனிய சிறிய கூரிய செவ்விய இழுமென் ஒலியானியன்ற சிறுசிறு சொற்குழுமங்களை யுடையது ; அதன் வன்மை மென்மை இடைமையாகிய ஒலிகள் ஒத்த தன்மையவாக ஏற்றமும் இறக்கமுமின்றி இருத்தல், அதன் இனிமையை மிகுவிக்கும் தன்மைக்குக் கருவியாக இருத்தலைக் காண்டும் ; ஏனைய மொழிக்கட் பயிலப்பெறும் வல்லொலியை நோக்க நம் தமிழ்மொழிககண் அமைந்துள்ள வல்லொலி, உரப்பின்றி மென்மைப் பதமுற்றதாக இருத்தலை ஒலிநயங் காண்போர் உணர்வர். இலக்கணத்தில் மொழித்திறத்தின் முட்டறுத்த நலஞ்சான்றது ; இலக்கிய வளத்தில் மக்கள் வாழ்வுக்கு வேண்டிய யாவும் மண்டிக்கிடக்கின்ற சிறப்புடையது ;

---

1. The Sanskrit Commission.

தொல்காப்பியர் காலத்தில் வழங்கிய சொற்கள் இன்றும் உலக வழக்கில் வழங்குகின்றன. அவற்றுள் ஒருசில காட்டலாம். மாராயம், பூப்பு, நீராட்டு போன்றன அவை. மாராயம் என்பது நற்செய்தி, வேந்தனால் சிறப்புச் செய்தலாகியவற்றை உணர்த்துவது. இன்றும் நாட்டுப் புறங்களில், நற்செய்தியை மக்கள் மாராயமெனவே வழங்குப.

இத்தகைய பண்பாடுகளுடன் வளர்ச்சிபெற்ற தமிழில் பல்வகை அறிவுக்குப் பொருந்தாத கதைகளால் தமிழர் நாகரிகத்தைப் பண்படக் குலைத்தும் மணிப்பிரவாள நடையென்ற பெயரால் திருட்டுத்தன்மையாக வேற்றுச்சொற்களையும் வேற்றுமொழி யெழுத்துக்களையும் கடன்படுத்துப் புகச் செய்தும் பல் தூய தமிழர் பண்பாடுகளை நெகிழ்த்தியும் நறுந்தமிழ்ச் சொற்களை வழக்கறுத்தும் தொலைத்தனர். ஏமாளிகளான நந் தமிழர் யாவற்றையும் வரவேற் றிடங்கொடுத்து ஒண்டவந்த பிடாரிக்கு ஊர்ப்பிடாரி இடங்கொடுத்த கதைக்கு இலக்காயினர். தமிழ் வழக்காறுகளைக் கெடுத்து வடவர் வழக்காறுகளைத் தமிழர் ஏற்கத்தொடங்கிய காலந்தொட்டு அறிவொளி மழுங்கிப் பொன்னானது தன் பெருமை உணராத தன்மைபோலத் தம் நாகரிகத் தன்மை முதலியன இழந்து வேற்றுநாகரிகத்தில் மூழ்கியும் வேற்றுமொழி மயக்கில் வீழ்ந்தும் திரிதரலாயினர்; கோயில்களில் தமிழுக்குச் செல்வாக்கில்லை; நூல்களில் தனித் தமிழ் வழக்கு இல்லை; ஆடரங்குகளில் தமிழைக் காணோம்; இசைக் கூடங்களில் தமிழ் முன்னிற்கவில்லை; வானொலி நிலையங்களில் வேற்று மொழிப் பாடல்களே கதறக் காண்கின்றோம்; அரசியல் வினைகளும் தமிழில் நடைபெறக் காண்கின்றிலோம்; தமிழ் ஆட்சிமொழியாகச் சட்டம் ஆக்கப்பட்டதன்றி நடைமுறையில் வரக் காணகில்லேம்; அரசியல் வானத்தில் முழுதும் இருட் செறிவு நிறைந்து கிடக்கின்றது; நாட்டில் இந்நிலை மாற வேண்டுமென இறையருளை வேண்டித் தவங்கிடக்கின்றேம்! இஞ்ஞான்றை நிலை இது!

இற்றைநாளில் நம் இந்திய நாட்டை ஆளுநரான மைய அரசியலார், தாம் அரசியல் மொழியாகக் கொண்டுள்ள இந்தி மொழியைப் பரப்புதற்கு இன்சொல்கூறல், வேறுபடுத்தல், கொடுத்தல், ஒறுத்தல் (சாம பேத தான தண்டம்) ஆகிய நால் வகை வழிகளையும் கையாண்டு வருகின்றனர். அவற்றுள் ஒன்று வடமொழிக் குழு. இக் குழுவினர் கடந்த 4-2-56-ஆம் நாட் காலையில் சென்னை நகருக்கு வந்து சேர்ந்தனர்.

இக் குழுவில் தலைவர், செயலாளர் உட்பட எட்டு உறுப்பினர் உள்ளனர்; இவர்கள் நந் தென்றமிழ்நாடு முதலிய

தென்னாட்டுக்குச் சுற்றுச் செலவாக வந்து, இங்குள்ள நிலையை அளந்தறிந்து அதன் வாயிலாகச் சமக்கிருதத்தை வளர்க்க மைய அரசின் துணைகொண்டு முனைந்துள்ளனர்.

இவர்களுள் தலைவராக இருப்பவர் கல்கத்தாப் பல்கலைக் கழகப் பன்மொழிப் பேராசிரியரும், வங்க மேல் சட்ட அவைத் தலைவருமான டாக்டர் எஸ். கே. சாட்டர்சி என்போராவர். செயலாளர் பேராசிரியர், ஆர். என். டண்டேகார் என்பவராவர். சென்னைக்கு வந்து சேர்ந்தோர் பஞ்சாப், ஹோசியாப்பூர் விசுவேசுவரானந்த வேத ஆராய்ச்சிக் கழகத்தைச் சேர்ந்த திரு. விசுவபந்து சாத்திரி, காசிப் பல்கலைக் கழகத்தின் இந்திய நாகரிகம், கலைப்பகுதிப் பேராசிரியர், டாக்டர், டி. ஆர். வி. மூர்த்தி, சிருங்கேரி மடத்தைச் சேர்ந்த பண்டித இராச் இராமசச்சந்திர சாத்திரி, கல்கத்தாவைச் சேர்ந்த எஸ. கே. டே, பம்பாயைச் சேர்ந்த திரு. தாவே முதலியோராவர். சென்னைப் பல்கலைக் கழகத்துச் சமக்கிருதப் பேராசிரியர் டாக்டர் வி. இராகவன் இக்குழுவின் உறுப்பினருள் ஒருவராவர்; இவர் சென்னை நகரிலேயே இருக்கின்றனர்.

இக் குழுவினர் வங்காளம், பீகார், ஒரிசா, ஆந்திரா முதலிய இடங்கட்கு இதுவரை சென்று வந்திருக்கின்றனர். இந்தியநாடு முழுமையும சமக்கிருதக் கல்வியைப்பற்றி நன்கு உசாவியறிந்து ஆங்காங்குள்ள மாநில நாட்டுமக்களின் கருத்தறிந்து அறிக்கை விடுக்கும்படி இக் குழுவினரை மைய அரசியலார் அமைத்து அனுப்பியுள்ளனர்.

நம் தமிழ் நாட்டில் சென்னை காஞ்சிபுரம் சிதம்பரம் முதலிய பல இடங்கட்கும் சென்று ஆங்காங்குள்ள அவைகளிலும் கல்லூரிகளிலும பல்கலைக் கழகங்களிலும் உள்ள ஆசிரியர், முகவர் முதலியவர்கள் கருத்துக்களைக் கேட்டு, அக் கருத்துரைகளைத் திரட்டிச் சேர்த்துள்ளனர்.

ஆங்காங்கே சான்று தந்துள்ளோர் பலர், வடமொழியை கட்டாயம் வளர்க்கவேண்டுமெனவும், அதைத் தேசிய மொ யாக ஆக்குதல் வேண்டுமெனவும், வடநாட்டிலும் தென்னாட் லும் சமக்கிருதப் பல்கலைக் கழகங்கள் தொடங்கவேண் மெனவும் தம் கருத்தைத் தெரிவித்துள்ளனர் சென்னைப் பல் கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர், டாக்டர் திரு. ரா. பி. சேதுப் பிள்ளையவர்களை வடமொழிக் குழுவினர் சான்று கேட்டபோது அவர்கள் தமிழ் மொழிக்கு வடமொழிச் சார்பு வேண்டுவதில்லை யென அறுதியிட்டுக் கூறியுள்ளனர். அக் கருத்தை நாளிதழ் களில் வெளியிடாது இக் குழுவினர் மறைத்தொழித்தனர்

சேதுப்பிள்ளையவர்களின் கருத்து முதன்மையானதன்றோ இதைப்போன்றே ஏனைய தமிழ்ப் பேரறிஞர்கள் கருத்துரைகளையும் இக் குழு மறைத்திருத்தல் கூடுமெனக் கொள்ள இடனாகியிருக்கிறது. ஒருதலைச் சார்பாக மறைமுகமாக வடமொழியை வளர்க்க எண்ணுவது பெரும் பேதைமைத்தே. ஞாயிற்றைக் கையால் மறைத்தல் ஒல்லுமோ? அவரில் பெரும்பான்மையோர் தமிழ்மொழிக்கண் பற்றுக்கொண்டவரெனச் சொல்லல் இயலாது; நடுநின்ற நன்னெஞ்சினரெனக் கூறலும் ஒவ்வாது. நம் தமிழகத்தைப் பொறுத்தமட்டில் ஒண்டவந்தோர்க்கே இடங்கொடுத்துத் தன்னுரிமை இழந்த நிலையே இருப்பதை யெண்ணிப் பார்க்கின் அறியலாம் தாய்மொழிக்கு முதன்மையும் அதற்காம் வளர்ப்பும் தாராத நாடு நாடாகாது. சான்று கொடுத்தோர் எவரும் தமிழை முற்றக்கற்று அதிற் பற்றுவளர்ந்த நெஞ்சப் பாங்கினரல்லர்; எம்மொழி வளர்க்கினும் தாய்மொழியில் கருத்தமைவுபெறுதல்போல வேற்றுமொழிகளில் கருத்தமைவு பெறல் ஒல்லாது. இவைகளை அறிஞர் கூர்ந்து நோக்குதல் வேண்டும்

எவ்வளவு சிறந்த மொழியாயினும் உலக வழக்கில் நின்று நிலவாத மொழி, மொழியெனப்படாது; அதை மொழியென்று கூறுவது, செத்த பிணத்தை உயிருடைத்தாகக் கொள்வார் செயலையும், மண்குதிரையை நம்பி ஆற்றிலிறங்கின கதையையும போல்வதாகும். செத்து உலகவழக்கில் இறந்த மொழிக்கு உயிர்கொடுத்து வளர்ப்பதும் அதற்காகப் பல்கலைக்கழகங் காண்பதும் அறிவியற்றுறையில் முன்னேறிச் செல்லும் இற்றை ஞான்றை அறிவுலகுக்கு ஒவ்வாததும் ஏற்காததுமாகும் இக்காலம் மேனாட்டு அறிவியல்வாணரெல்லாம, செவ்வாய் மண்டிலம் திங்கள் மண்டிலங்கட்குச் சென்று அங்கு மக்கள் வாழ்தற்கேற்ற வழியிருக்கின்றதா? உணவுப் பொருள் விளைகின்றதா? ஆங்குச் செல்லற்காம் கருவிகள் எவை? அவற்றை எவ்வாறு ஆக்கலாம் என, அவற்றில் முனைந்து அதன்மூலம் நாட்டுக்கு வேண்டிய எல்லா அறிவியல்துறைகளையும், தொழில்துறைகளையும் அமைத்து வருகின்றனர்! நாமோ இறந்த மொழியைத் தேசிய மொழியாக்கப் பாடுபடும் துறைகளிலும் அறிவுக்குப பொருத்தமற்ற வேலைகளிலும் முனைந்து நின்று காலத்தையும் நாட்டையும் விணாக்குகின்றோம்.

வடமொழியில் மந்திரங்கள் தந்திரங்கள் முதலிய அறிவியற் கலைகள் இருப்பின் தமிழிலும் ஏனைய மொழிகளிலும் சமக்கிருத மொழியிலும் அவ்வத் தாய்மொழிகளிலும் பயிற்சிபெற்ற அறிஞர்களைக்கொண்டு குழுவமைத்து அக் குழுவின் வழியாக

அவற்றை மொழிபெயர்த்துக் கொணரலாம். அது பயனுகவும் இருக்கும். அதற்காகக் கல்லூரிகள் ஆக்குவதும், மாணவர் தலையில் குருவித் தலைமீது பனங்காயைச் சுமத்துவதுபோலப் பலமொழிகளைச் சுமக்கவைப்பதும் அறிவொடுபட்டதாமா? என்று சிறிது எண்ணிப் பார்க்க வேண்டுகின்றேம்! கற்று உலகியல் அறிந்த பேரறிஞர்களே இந்தத் துறையில் முனைந்து நிற்பதும், அதற்கு மையப் பேரரசு மடிதற்று முடிக்க முன்னிற்பதும உயர்ந்த அறத்தோடுபட்ட செயலாகக் கொள்ளற்கில்லை. இதை நோக்கும்போது,

> 'அரியகற் றசற்றார் கண்ணும் தெரியுங்கால்
> இன்மை அரிதே வெளிறு'

என்னும் வாய்மையே சான்றுகக் கரி கூறுகின்றதை நோக்க வேண்டியதாக உளது.

இவ் வடமொழிக் குழுவினர் தமிழை உரிமையுடன் பேணி வளர்க்கும் கழகத்தினரையோ சங்கங்களையோ தமிழ் நலத்துக்காக என்றும் தொண்டாற்றி வரும் அறிஞர்களையோ கண்டு அவர்கள் கருத்துக்களைக் கேட்டதாகத் தெரியவில்லை இவ்வாறே எஞ்ஞான்றும் கரவாகத் தமிழர் பண்பாட்டையும் மொழியையும சிதைத்துக் கெடுத்த கறை இன்னும் நீங்கிற்றில்லை; அக் கறைகளை நீக்கக் கொண்ட கொள்கைகளும் இன்னும் முற்றுது அறைகுறையாக இருக்கும் நிலையில் இன்னன போன்ற பிற்போக்கானவற்றை மீண்டும் கொணர்ந்துவிடுவதால், தமிழகத்துக்கு ஆக்கம் உண்டாகாது.

எனவே, நாட்டில் ஏட்டகத்தும் நாட்டகத்தும் வாழும் நம் தமிழ்மொழியை வளர்ப்பதிலும், அதனை ஆட்சிமொழியாக்கிய சட்டம் சட்டமாக ஏட்டளவில் நிற்காது எங்கும் ஆளுகை கொளும் வழியில் முன்வருவதும் தமிழகத்தைத் தமிழ்நாடாக ஆக்கும் நெறியாகுமன்றி, மறைமுகமாக வேற்றுமொழி, பண்பாடுகளைக் கொணர்ந்துவிடுவது சிறுமையின்பாற் பட்டதாகும். இதனை மைய அரசியலாரும் அவர்வழி நிற்கும் நம் தென்னக அரசும் இவ்விரு வழிநிற்கும் ஏனையோரும் மொழிவழி அமைந்த மாநிலங்கட்கு எது ஏற்றது எனத் தெளிந்து தெரிந்து ஆவன செய்வதே நலந்தருமென அறிவுறுத்துகின்றேம்.

# இயற்கை மருத்துவத்தின் ஏற்றம்

[கழகப்புலவர், திரு. ப. இராமநாத பிள்ளை]

இயற்கை முறையைப் பல்லாண்டுகளாக நல்ல முறையிற் கையாண்டு நலம் பெற்றுத் திகழ்பவர்கள் திருவாளர், தி செ. விசுவநாத பிள்ளை யவர்களாவர். அவர்கள் தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்று சலியாது உழைத்துவரும் மெய்யில் உள்ளத்து நலிவில் பெரியாராவர் உண்மையும், ஒழுக்கமும், திண்மையும், உரனும், எண்மையும், வண்மையும், இனிமையும் ஒருங்குவாய்ந்த ஒண்மையர்.

பலர்தம் நீங்கா நோய்கள் நீங்குவதற்கு ஆங்காங்கு நேராகவும் எழுத்து வாயிலாகவும் துணை புரிந்துவரும் இணையில் செல்வர். இவர்கள் தமக்கு இயற்கை மருத்துவத் தொடர்பு எவ்வாறு ஏற்பட்டதென்பதனை இவ்விதழிலுள்ள மதிப்புரைக்கண் 'இயற்கை மருத்துவம்' என்ற தலைப்பில் விளக்கியுள்ளார்கள்.

இக்காலத்து இளைப்பிருமலால் இடையறாத் துன்புற்று நடைமெலிந்து கிடையினராய் இருப்பார் இருபாலாரினும் எல்லாப் பருவத்தினும் பலருளர் அவர்கள் உண்ணாத மருந்தில்லை. ஒப்பாத முறையில்லை. எனினும் அவர்கள் நோய்மட்டும் நீங்கினபாடில்லை. இடையே சிலநாள் தொடராதிருப்பினும் பலநாள் தொடர்ந்து துன்புறுத்தி வருவது கண்கூடு. அத்தகைய கொடுநோய்தான் ஆசுமா என்று அழைக்கப்படும் இளைப்பிருமல். இந்நோய் இவர்கள் கூறிய முறையினைக் கைக்கொண்டு ஒழுகி நீங்கப்பெற்று நலமுற்று வாழ்வார் பலர். அவர்கள் தாங்கள் எய்திய நலத்தின் பொருட்டும், பயின்ற பயிற்சியின் பொருட்டும் இவர்களுக்கு விடுத்துள்ள கடிதங்களும் பல. அவற்றை முழுதுமாகச் செல்வியில் வெளிப்படுத்த இடமின்மைக்கு வருந்துகின்றேம். குறிப்பாகச் சில தருகின்றும் இதனைக் கண்ணுறுவார் அப் பெருந்தகையார்பால் நேரிலேனும் எழுத்து வழியாகவேனும் தெரிந்துகொள்ளலாம்:

ஆம்பூர் திரு. சோ. தி. கனகசபை அவர்கள் 28-11-55, 17-12-55, 2-1-56, 15-1-56, 17-1-56, 6-2-56. முதலிய நாட்களில் எழுதிய கடிதங்களாகும். இவற்றின் சுருக்கம்: இப் பெரியார் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியாரவர்களின் தாய்மாமனாரவர். இவர்களுக்கு வயது எழுபது. பதினாறு ஆண்டுகளாக

ஆஸ்துமா நோயினால் துன்புறுத்தப்பட்டிருந்தார்கள். அந் நோய் ஒவ்வொரு ஆண்டிலும் ஐப்பசி மாதமுதல் மாசிமாதம் வரை துன்புறுத்துவது வழக்கம்.

கையாண்ட இயற்கை மருத்துவ முறைகள்:

1955, ஜூலை மத்தியிலிருந்து நாள்தோறும் 'ஸ்பைனல்பாத்' (Spinal Bath) எடுத்தல், உணவில் சோறு பருப்புகளைக் குறைத்துக் கீரை காய்களை மிகுதியாகச் சேர்த்தல், காப்பியை அறவே நிறுத்தல், வழக்கமாகத் தொடக்கத்தில் சில நாட்கள் சிறிதளவு பச்சைப் பால் குடித்தல், கிழமை-வாரத்திற்கு ஒரு நாள் (திங்கட்கிழமை தோறும்) கீரை அல்லது காயை வேக வைத்து உப்பிலலாமல் தேங்காய்ப்பூ சேர்ததுப் பகல் உணவு கொள்ளல், மாலையில் வாழைப் பழமும் தேங்காய்ப்பூவும் சர்க்கரையும் உட்கொள்ளல், இரவில் ஒன்றும் உட்கொள்ளா திருத்தல், காலையில் பசியிருந்தால் இளநீர் பருகல், கிழமையில் மூன்று நாள் அல்லது தேவைக்கு ஏற்றவாறு கூடுதல் நாட்கள் எனிமா வைத்தல், திசம்பர்மாத மத்தியிலிருந்து மாலை 6 மணிமுதல் மறுநாள் காலை 9, 10 மணிவரை உணவாக ஒன்றுமே உட்கொள்ளாதிருத்தல்.

ஏற்பட்ட பயன்:

சென்ற பதினாறு ஆண்டுகள் ஏற்பட்ட துன்பங்களெல்லாம் மறைந்து நல்ல நலத்துடன் இருப்பது, அக்டோபர் தொடக்கத்திலேயே தொடங்கும் நோயின் அடையாளங்கள் வாரா தொழிதல்.

முன் பின் நிலைமையை ஒப்பிடுதல்:

இருமல, கபம், மூச்சுத்திணறல முன இருக்கும. இப பொழுது அவை ஒன்றும் கிடையா. இரவில் படுக்க முடியாது; படுததாலும் உறககம் வாராது. இப்பொழுது 5, 6, மணிநேரம் நல்ல உறக்கம். முன் ஐம்பது, நூறு அடிகள்கூட நடக்க முடியாது. இப்பொழுது அரை, முக்கால் மைல் தொலைவு பனியில் நடத்தல். வெந்நீரிலேயே குளிப்பது வழக்கம். இப்பொழுது எநத ஊருக்குப் போனாலும தண்ணீரிலேயே குளித்தல். உடல் மெலிவைத் தவிர நலிவு ஒன்று மில்லை. சோமபலும் எழுச்சியின்மையும் நீங்கின. உடம்பு மென்மையாகக் காணப்படுகின்றது.

முடிவுரை

உணவில் குறைவும் மாறுதலும் தான் முதன்மை. அம் மாறுதல்கள் படிப்படியாக ஒல்லும் அளவாக (வெகுநிதான

மாக) குறைத்தும் மாற்றியும் பழகிக் கடைசியில், மாலை 6 மணியிலிருந்து மறுநாள் காலை 9, 10-மணிவரை, அஃதாவது நாடோறும் 15, 16 மணிநேரம் செரிப்புக் கருவிகட்கு முற்றும் ஓய்வு கொடுப்பதன் பொருட்டுப் பட்டினியிருத்தல், பகலில் உப்பில்லாக் கீரை, அல்லது காய், தேங்காய், தயிர், சிறிதளவு சோறு உட்கொள்ளல்; மாலையில் சிறிதளவு பழம், தேங்காய், வெல்லம் உட்கொள்ளல்; காலையில் பசியிருந்தால் இளநீர், நீர்மோர் பழச்சாறு ஆகிய இவற்றுள் ஏதாவதொன்றை உட்கொள்ளுதல்; காப்பியை அறவே நீக்குதல்; மலச்சிக்கலை நீக்கத் தேவைக்குத் தக்கவாறு எனிமா மேற்கொள்ளுதல், நாளும் ஸ்பைனல்பாத் என்னும் முறையினைக் கையாளுதல்.

போலி நாகரிகத்தில் வாழும் இக்காலத்து மக்கள் ஏறத்தாழ எல்லாருமே ("நலமுள்ள ஒருவரைக் கூடக் காணமுடியாது" என்று மேனாட்டு நுண்ணறிவாளர் ஒருவர் கூறுவது போல்) ஏதாவது ஒரு நோய்வாய்ப்பட்டே இருக்கின்றனர். அதனால் இயற்கை மருத்துவமுறைகளைத் தங்களால் இயன்ற மட்டும் கைக்கொண்டு ஒழுகுதல்வேண்டும். அவ்வொழுக்க அளவிற்குத் தக்க பயன் பெறுதல் உறுதி.

மேலும் புதுக்கோட்டையில் திரு. K. இலக்குமண சர்மா (பி. ஏ., பி. எல்.) அவர்களால் நடத்தப்படும் ஆங்கில வெளியீடு 'The Life natural' Vol 1 No 2. June. 1941-இல் பக்கம் 53-இல் 'Swadeshism Versus Nature-Cure' என்னும் தலைப்பில் திரு. தி. செ. விசுவநாதபிள்ளை அவர்களால் எழுதப்பட்ட அரும்பெரும் கட்டுரையால் பல வுண்மைகளை அறியலாம்.

## பிழை திருத்தம்

செல்வி சிலம்பு : ௰௧, பரல் : ௬, பக்கம் : உ௭உ

'தோசை' என்னும் கட்டுரையில் ௪-ஆவது வரி உறைதல் என்னும் சொற்குமுன், தோய்தல் - என்னும் சொல்லை இணைத்தும், ௧௦-ஆவது வரியில் தோசை யென்பதைத் 'தோசே' எனத் திருத்தியும் படிக்க.

# இலங்கையும் இன்பத்தமிழும்*

[திரு. கா. பொ. இரத்தினம்]

தமிழும் சிங்களமும் இலங்கையின் சொந்த மொழிகளாகும். சிங்கள மொழியினைப்பற்றிய அறிக்கையினை நீங்கள் முன்னர்க் கேட்டீர்கள். தமிழ்மொழியினைப்பற்றிய அறிக்கையினை இப்பொழுது யான் உங்களுக்குச் சமர்ப்பிக்கிறேன். ஆங்கிலத்திலுள்ள எனது அறிக்கையினை வாசித்தற்குமுன் என் தாய்மொழியாம் தமிழிலுஞ் சில கூற விரும்புகிறேன். இங்கு, எனக்குமுன் பேசிய அறிஞர்கள் பலர் தங்களுடைய தாய்மொழிகளிலும் பேசி அவற்றைக் கேட்கும் வாய்ப்பினை எமக்கு அளித்துளர். ஆகையால், தமிழைக் கேட்கும் வாய்ப்பினை உங்கள் எல்லோருக்கும் அளித்தல் என் உரிமையாகவும் கடமையாகவும் உளது. 'தமிழ்' என்னும் சொல்லின் கருத்தே இனிமை என்பதாகும். எனவே, எனது இனிய தாய்மொழியிற் சில நிமிட நேரம் பேசுகின்றேன்.

"இந்த உலகிலே ஈராயிரத்துக்கு மேற்பட்ட மொழிகள் வழங்கிவருகின்றன. இவற்றுள்ளே மிகப் பழைய மொழிகள் சிலவே. இவற்றுள் ஒன்றாகத் தமிழ்மொழி விளங்குகிறது. இன்று பேச்சு வழக்கிலுள்ள மொழிகளுள்ளே மிகுந்த பழமையுடையது தமிழ்மொழியேயாகும்.

இம்மொழி இந்தியாவிலும் இலங்கையிலும் மாத்திரமன்றி மலாயா, பர்மா, தென்னாபிரிக்கா, பீச்சித்தீவு, மொறிசியசு முதலிய நாடுகளிலும் வாழ்ந்து வருகின்றது. இதனால், ஆசிய மொழிகளுள் மிகத் தொகையான நாடுகளில் வழங்கும் மொழி தமிழாகவே அமைந்துளது.

பல்லாயிர ஆண்டுகளாக நாகரிகத்துடன் வாழ்ந்த தமிழ் மக்கள, மனித குலம் போட்டி பொறாமைகளின்றியும் பூசலும் போருமின்றியும் வாழுதற்குரிய வழிகளை நன்கறிந்திருந்தனர். இப்பொழுது கிடைக்கும் நூல்களுள்ளே மிகுந்த பழைமையுடையனவாகிய சங்க நூல்களிலே இந்த வழிகள் சிறப்பாக விளக்கப்பட்டுள.

தம் நலங்கருதாமற் பிறர் நலத்துக்காகப் பாடுபடுபவர்களே மக்களுள் உயர்ந்தவர்கள்—சான்றோர் என இந்நூல்கள் கூறு

---

* அகில இலங்கைத் தமிழ் எழுத்தாளர் சங்கத் துணைத்தலைவர் பண்டிதர், கா. பொ. இரத்தினம் அவர்கள் தெல்லி மாநகரில் நடைபெற்ற ஆசிய எழுத்தாளர் மாநாட்டில் நிகழ்த்திய உரை.

கின்றன. பகுத்துண்டு பல்லுயிரையுங் காக்கும் உயர்ந்த பண்பாட்டை உடையவர்களாக வாழத் தமிழ்மக்கள் முயன்றனர் பெற்ற தாயின் பசியைத் தீர்த்தற்குத் தானும் சான்றோர் பழிக்குஞ் செயல்களைச் செய்யாமல் வாழல் வேண்டும் எனும் பெரு நோக்கமுடையவர்களாக அவர்கள் வாழ்ந்தார்கள். தீமை செய்பவருக்கும் நன்மை செய்தல்வேண்டும் எனும் உயர்ந்த கொள்கையையும் அவர்கள் உருவாக்கினர். பாடுபட்டு உழைத்துப் பொருளைச் சேர்த்தவன், அதனைத் தக்கார் பலருக்குக் கொடுத்து வாழுதல் வேண்டும் எனும் பொது உடைமைக் கருத்தும் தமிழ் மக்களிடையே நிலைத்து விளங்கியது. இவ்வளவுடன் தமிழிற் பேசுவதை நிறுத்தி இனி எனது அறிக்கையினை வாசிக்கின்றேன்.

மிக மிகப் பழையகாலந் தொடக்கந் தமிழ்மக்கள் இலங்கையிலே வாழ்ந்து வருகிறார்கள். புத்தர்பெருமான் இலங்கைக்கு வந்த வரலாற்றுடனேதான் இலங்கைச் சரித்திரம் தொடங்குகிறது. அவர் இலங்கைக்கு மூன்றுமுறை வந்தார் என்று கூறுகின்றனர். இலங்கையின் வடபகுதியை ஆண்டுவந்த நாகர் குல அரசர்கள் இருவரிடையே ஏற்பட்ட பகையைத் தீர்ப்பதற்காகவே அவர் இரண்டாம் முறை இலங்கைக்கு வந்தார். இது, விசயன் எனும் அரசகுமாரன் இலங்கைக்கு வருதற்குமுன் நிகழ்ந்ததென, மகாவமிசம் எனும் நூல் கூறுகிறது

இலங்கையின் வடபகுதி அக்காலத்தில் நாகதிபம் என வழங்கபபட்டது. நாகதீபத்தில் வாழ்ந்த மக்கள் தமிழ்மொழியையே பேசினார்கள். கி. மு. இரண்டாம் நூற்றாண்டுக்குமுன் தோன்றிய சங்கநூல்களிலே இலங்கையைப்பற்றிய குறிப்புககள் பல உள. கடைச்சங்க நூல்களிலே ஈழத்துப் பூதன்றேவனார் பாடிய பாடல்கள் காணப்படுகின்றன. ஈழத்துப் பூதன்றேவனார் வடஇலங்கையிலிருந்து மதுரை சென்று சங்கப் புலவராகிச் சிறப்பெய்தினார்.

மணிமேகலை எனும் பௌத்தக் காப்பியத்திலும் யாழ்ப்பாணத்தையும் இலங்கையின் வடபகுதியையும் பற்றிய செய்திகள் உள. மணிமேகலை மணிபல்லவத்துக்கு வந்த செய்தி யாவரும் அறிந்ததொன்று மணிபல்லவம் என்பது நாகதிபமேயாகும். கி. மு இரண்டாம் நூற்றாண்டுத் தொடக்கம் தென்னிந்தியாவுக்கும இலங்கைக்கும் நெருங்கிய இலக்கியத் தொடர்பு ஏற்பட்டு நிலைத்தோங்கியது.

இலங்கைத் தமிழர்கள் கி. மு ஆறும் நூற்றாண்டுத் தொடக்கம் பிறநாட்டார் இலங்கையை ஆட்சிப்படுத்துங் காலம்வரையும் 17-ஆம் நூற்றாண்டு வரையும் தனியரசு நடத்தினர். 13-ஆம்

14-ஆம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த தமிழ்ப் புலவர்கள் இலக்கிய இலக்கண நூல்களை மாத்திரமின்றி மருத்துவம், சோதிடம், கணிதம் முதலியன பற்றிய நூல்களையும் இயற்றியுள்ளனர். யாழ்ப்பாணத்திலே 'சரஸ்வதி மகாலயம்' எனும் பெயருடைய நூல்நிலையம் ஒன்று இருந்தது. யாழ்ப்பாணத்தில் அக்காலத்திலே நிறுவப்பட்ட தமிழ்ச் சங்கத்திலே தென்னிந்தியப் புலவர்களும் பங்குபற்றியுள்ளனர். 15-ஆம் நூற்றாண்டிலே அரசகேசரி எனும் இளங்கோ காளிதாசர் இயற்றிய இரகுவம்சத்தைத் தமிழிலே பன்னயங்களும் மிகக் காவியமாக்கினர். இதற்கு இணையான மொழிபெயர்ப்பொன்றேனும் இதுவரை தோன்றவில்லை.

பத்தாம் பதினோராம் நூற்றாண்டுகளிலே சோழ மன்னர்கள் இலங்கையை ஆண்டனர். இவர்கள் ஆட்சியிலே தமிழ்மொழியும் தமிழ்க்கலையும் இலங்கை எங்கும் பரவிச் சிறந்தன. சிங்கள மொழியையும் சிங்களக் கலாச்சாரத்தையும் தமிழ்மொழி வளம்படுத்திற்று. சிங்கள மன்னர்களின் அரண்மனை மொழியாகவும் தமிழ் இடையிடையே வழங்கியது. கடைசியாகக் கண்டியை ஆண்ட மன்னர்களின் காலத்திலும் தமிழ் அவர்களுடைய ஆட்சி முறையிலே நல்லிடம் பெற்றிருந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் பின்னரும் தமிழ்மொழி பல துறைகளிலே புத்துயிர் பெற்று விளங்கிற்று. தமிழ் அகராதிகள் பல யாழ்ப்பாணத்திலே ஆக்கப்பட்டன.

பேரறிஞரும் சீர்திருத்தச் செம்மலுமாகிய ஆறுமுகநாவலர் சிறந்த தமிழ்நூல்கள் பலவற்றைப் பதித்து வெளியிட்டார்; அவர் எழுதி வெளியிட்ட உரைநடை நூல்கள் பலவாகும். கிறித்தவர்களுடைய விவிலிய நூலையும் தமிழிலே மொழிபெயர்த்தார். இக்காலத் தமிழ் உரைநடையின் தந்தையாக அவரைத் தென்னிந்தியத் தமிழ்ப் புலவர்களுங் கொண்டாடுகின்றனர். இவரைப் பின்பற்றி இவர் செய்த அரும்பெரும் பணிகளைத் தமிழ்ப் பேரறிஞர்கள் பலர் இன்றுவரை செய்து வருகிறார்கள். இப்பேரறிஞர்கள் தமிழ் இலக்கியத்துக்குச் செய்துள்ள தொண்டுகளும் ஆக்கிய நூல்களும் பலவாகும்.

தமிழிலே முதன் முதலாகக் கலைக் களஞ்சியத்தை ஆக்கியவர் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர்க் காலஞ்சென்ற முத்துத் தம்பிப் பிள்ளை எனும் யாழ்ப்பாணத்தவர் ஆவார். தமிழ் இசையின் நுணுக்கங்களை விளக்கி, யாழ் எனும் இசைக்கருவியின் அமைப்பை ஆராய்ந்து நிறுவிய, விபுலானந்த அடிகள் "யாழ்

# நெடுநல்வாடையின் திணையாராய்ச்சி மறுப்பு

[பண்டித வித்துவான், தி. சங்குப்புலவர்]

(செல்வி சிலம்பு: ௩க, பரல்: ௬, பக்கம்: ௩௦௫ தொடர்ச்சி)

மறுப்பு:

தொல்காப்பியத்திற் "சுட்டியொருவர் பெயர் கொளப் பெறாஅர்" என்றதும், அதற்கு நச்சினார்க்கினியர் கூறிய வுரையும் "புறத்திணை மருங்கில்" என்ற சூத்திரமும் அதன் உரையும் இவ் விதிகளை நன்கு புலப்படுத்துகின்றன. அவற்றிலிருந்து "குறிஞ்சி எனில் வெற்பன், சிலம்பன் எனவும் பாலை எனில் விடலை, காளை எனவும்; முல்லை எனில் குறும்பொறைநாடன், தோன்றல் எனவும்; மருதம் எனில் ஊரன், மகிழ்நன் எனவும்; நெய்தல் எனில் சேர்ப்பன், புலம்பன் எனவும்; வருவதுதான் சிறந்தது என்றும்; நிலப்பெயர், வினைப்பெயர், பண்புப்பெயர், குலப்பெயர், குடிப்பெயர் வரினும ஒருவரைச் சுட்டிவரல் வழூவாம் என்றும்; இயற்பெயர் கிளவித் தலைவனுக்குக் கூறியிருந்தாலும் ஒருவரைச் சுட்டிய பெயராக இருந்தாலும் அகமாகாது என்றும்; அகப்பொருளமைந்திருந்தால் அப் பாடலை யாய்ந்து அகப்புறம் என்று கூறல்வேண்டும் என்றும் உய்த்துணர்தல் வேண்டும். ஆதலால் நச்சினார்க்கினியார் அவர் கூறியவுரையின் படியே பாண்டியனைச் சுட்டியதாலும், அப் பாண்டியன் போகத்தை வெறுத்துப் பாசறையிலிருந்தான் என வெற்றியாகிய புறப்பொருள் வருதலாலும் நெடுநல்வாடையை வாகைத்திணையிற் கூதிர்ப் பாசறைத் துறை என்றார். மருதக்கலி "கார்முற்றி யிணரூழ்த்த" என்ற பாடல் பாண்டியனைச் சுட்டினும் இன்பப் பகுதியாகிய ஊடற்பொருள் அமைந்திருப்பதால் அகப்புறம் என்று கூறினார். ஆதலால் ஒன்றற்கொன்று முரணுமாறில்லை யென வுணர்க.

ஆ-ர் கூற்று:

மேலும் ஆராய்ச்சியாளர் "வேம்புதலையாத்த" என்ற குறிப்பால் பாண்டியன் குடிபெறப்படுதலின் இந்நெடுநல்வாடை புறத்திணை யாகுமாயின் சாதியைக் குறிப்பால் விளக்கும் பாட்டுக்களும் அகமாகாமல் புறமாதல்வேண்டும்" எனறு கூறி, "தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை" (கலித். ௫௨)

"முளிதயிர் பிசைந்த காந்தள்மெல்விரல்" (குறுந். ௧௬௭) "வருதுமென்ற நாளும் பொய்த்தன" (அகம். ௧௪௪) இவ்வடிகளையுடைய பாடற் பகுதிகள் பார்ப்பானையும் பார்ப்பினியையும் வேந்தனையும் குறிப்பாகச் சுட்டுகின்றன என்று மேற்கோள் காட்டிய நச்சினார்க்கினியார் அவைகளை அகப் பாடல் என்றே கொண்டார். ஆதலால் நெடுநல்வாடையும் அகப்பாட்டாகும் என்பது திண்ணிதாய் நிலைபெறுதல் காண்க" என்றார்

மறுப்பு:

நீண்டகாலமாக அகநானூறு, குறுந்தொகை, கலித்தொகை என அகப்பொருட்டுறையமைந்த நூல்களாகச் சான்றோர்கள் பாராட்டிப் பயின்று வரும் நூல்களிலுள்ள பாடல்களை நச்சினார்க்கினியார் அகம் என்று கொண்டனரேயன்றித் தாமே யகப்பாடல் என்று கூறினரல்லர். அப் பாடல்களிற் பார்ப்பான், பார்ப்பனி, வேந்தன் என்ற குலப்பெயர்கள் வந்தில. "தாமரைக் கண்ணி" என்றும், "கழுவுறு கலிங்கம்" என்றும், "அமரகத் தட்ட செல்வம் தமர் விரைந்துரைப்ப" என்றும் வந்துள்ள சில குறிப்புக்களை யாய்ந்து நச்சினார்க்கினியார் குலத்தைக் குறிக்கும் என்று கூறினரேயன்றிக் குலப்பெயர்களும் அவற்றில் வந்தில. குலத்தைச் சுட்டினவெனினும் அக் குறிப்பு ஒருவரைச் சுட்டுவதாகாது. பலரைச் சுட்டுவதாகும். அக் குலத்தலைவன் தலைவி எனச் சுட்டுமேயன்றி இன்னான், இன்னாள் எனச் சுட்டிக் காட்டா. ஆதலால் அப் பாடல்கள் அகத்தில் வந்துள்ளன. நச்சினார்க்கினியாரும் அவற்றை அகம் எனவே கொண்டார். இதனைத் துணையாகக்கொண்டால் அவர் அகம் என்றதை அகம் என்றும், புறம் என்றதைப் புறம் என்றும் கொள்ளலாமேயன்றி ஒன்றைக்கொண்டு மற்றொன்றை விடுதல் எங்ஙனம் பொருந்தும்? அவர் அகம் என்றதை நான் புறம் என்று கூறுவேன். அவர் புறம் என்றதை நான் அகம் என்று கூறுவேன் என்றாலும் பொருத்தமாகும். நெடுநல்வாடையை மட்டும் அகமென்று கூறுவதற்கு அது எங்ஙனம் வலிமை தரும்? அஃது வலியிலதாதல் காண்க.

ஆ-ர் கூற்று:

மேலும் இவ்வாராய்ச்சியாளர் "பொக்கமில் புலவராம் நக்கிரனார்" என்று அவர்க்குப் பெருமை கூறி, அவர் பக்கமிருந்து பார்த்தவர்போல அவர் கருத்துக்களை நுணுகியாய்ந்து ஒவ்வொன்றாக எடுத்துக் காட்டினர். அக் கருத்துக்களை அறிஞர் அவரது திணையாராய்ச்சிக் கட்டுரையிற் கண்டுகொள்க. விரிபு

மென்றஞ்சி விடுத்தேன்; அவற்றில் ஒன்று இங்குக் காட்டுகின்றேன், "தொல்காப்பியம் புறத்திணையியல் (சூ - ௬) 'வஞ்சிதானே முல்லையது புறனே' என்று தொல்காப்பியர் கூறியுள்ள கருத்தை உணர்ந்து நக்கீரனார் முல்லை என்னும் அகத்திணையையும், வஞ்சி என்னும் புறத்திணையையும் ஒரே பாடலில் அகங்கை, புறங்கை போல அமைத்துக் காட்ட விரும்பி, முன்னர் முல்லைத் திணையைக் கோப்பெருந்தேவிபால் வைத்து விளக்கிப் பின்னர் அம் முல்லைக்குப் புறமாகிய வஞ்சித்திணையைத் தலைவன்பால் வைத்து விளக்கியுள்ளார் என்பதை அப் பாடலின் அமைப்பைக் கண்டு தெளியலாம் என்பதே அது.

மறுப்பு

இக் கூற்று, "நக்கீரனார் அகங்கை புறங்கை அறியாதவர் போல அகப் பொருளிலக்கணமும் புறப் பொருளிலக்கணமும் வேறு வேறு என்பதை யறியாமல் அகமாகிய முல்லையையும், புறமாகிய வஞ்சியையும் ஒரே பாடலில் அமைத்திருக்கின்றார் என்றும்; அகம் வேறு புறம் வேறு என அறிந்திருந்தால் இவ் விரண்டு பொருளையும் ஒருங்கமைத்துப் பாடியிரார் என்றும் விளக்குகின்றது. எனவே "பொக்கமில் புலவராம் நக்கீரனார்" என அவரைப் புகழ்ந்த புகழ்ச்சி இகழ்ச்சியேயாயிற்று.

ஆ-ர் கூற்று

நச்சினார்க்கினியாரும் கூதிர்க்காலமும் பாசறையும் வந்துள்ள "மழையில்வான மீனணிந்தன்ன" (அகம் ௨௬௪) என்ற பாடலைக் காட்டி "முல்லையுள் கூதிர்வந்தது" என்று கூறியுள்ளமையாலும், அவரே தொல்காப்பியம் புறத்திணையியல் (எ௬) சூத்திர வுரையில் "இனி இருத்தற்பொருள் முல்லையென்பதே பற்றிப் பாசறைக்கணிருத்தலால் பாசறை முல்லை" எனப் பெயர் கூறுவாருமுளர் எனப் பிறர் கூற்றாகக் கூறி மறுப்பு யாதும் கூறாமல் விடுத்துள்ளமையாலும் கூதிர்ப்பாசறையை முல்லையென்று கொள்ளுதலும் பொருந்தும் என்பது அவர் கருத்து" எனக் கூறி அக் காரணத்தால் நெடுநல்வாடையை முல்லைத் திணைப் பாட்டு என்று கூறுவது நச்சினார்க்கினியார் கருத்துக்கும் பொருத்தமாகும் என்றனர் ஆராய்ச்சியாளர்.

மறுப்பு

நச்சினார்க் கினியார் தொல்காப்பியம் அகத்திணையியல் (சூ - ௧௨) "திணைமயக் குறுதலும்" என்றதன் உரையில் "காலமும் மயங்கும் எனக் கூறி, முல்லைத்திணைக்கு உரிமை யில்லாத கூதிர்க்காலம் முல்லையில் வந்ததற்கு மேற்கோளாக

"மழையில்வான மீனணிந்தன்ன" (அகம் - ௨௬௪) என்பது காட்டினர். பின்னர் புறத்திணையியல் "கூதிர்வேனில் என்றிரு பாசறை (௬ - ௭௬) என்பதன் உரையில்" கூதிர்ப்பாசறை, வேனிற்பாசறை என இரண்டு துறைகளின் பெயர்கூறி, இவ் விரண்டும் பாசறையில் இருத்தலைக் குறிப்பதால் இவ்விரு துறைக்கும் "பாசறை முல்லை" எனப் பெயர் கூறவாருமுளர் என்று கூறினர். இதனால் தொல்காப்பியர் காலத்தில் கூதிர்ப்பாசறை, வேனிற்பாசறை என்று பெயர்வழங்கிய துறைகள் புறப்பொருள் வெண்பாமாலை என்ற நூல் தோன்றிய காலத்திற்குப் பின் வாகைத் திணையில் "அரசமுல்லை அவைய முல்லை" எனப் பல துறைகள் வழங்கியது குறித்துப் பாசறை முல்லையெனப் பெயர் பெற்றன; என்று விளக்கினர் என அறிய லாம். பாசறை முல்லை என்பதில் "முல்லை" என்பது திணை யன்று. இருத்தல் என்பது அதற்குப் பொருள்: அதனையும் விளக்குதற்காக அவ்வுரையில் "இருத்தற் பொருள் முல்லை என்பதே பற்றி" என்றும் குறித்துக் காட்டினர். இவ்வாறு நச்சினார்க்கினியார் அகத்திணையியல் புறத்திணையியல் என்பதை யறிந்து அகத்துறைகளையும் புறத்துறைகளையும் வேறு வேறாகப் பகுத்துப் பெயர்கூறி மேற்கோள் காட்டியிருந்தும் அகமும் புறமும் அறியாது மயக்கி முல்லைத்திணையையும் வாகைத் திணைத் துறையுள் ஒன்றாகிய கூதிர்ப்பாசறையையும் ஒன்றென்று கூறி நச்சினார்க்கினியார் கருத்துக்கும் இது பொருத்தமாகும் என்றார். எங்ஙனம் பொருத்தமாகும்? மயக்கம் அன்றோ?

இனி நெடுநல்வாடையில் முல்லைத்திணைக்குரிய முதற் பொருள் கருப்பொருள் வந்துள்ளன எனினும் உரிப்பொருள் ஆகிய "இல்லிருத்தல்" வெளிப்படையாகத் தோன்றலின்று; கூறுவோரும் கேட்போரும் யார் யார் என அறிவதற்குரிய சொற் றொடர் யாண்டுமின்று அத் திணைக்குரிய துறைகளாகிய பருவங் கண்டு பெருமகள் புலம்பல் முதலிய துறைகளை யமைப்ப தற்கும் வழியின்று. அப் பாடலில் "புலம்பொடுவதியும் நலங் கிளரரிவைக்கு (௧௬௬) இன்னாவரும்படர் தீர (௧௬௭) வேந்தன் (௧௮௭) பலரொடு முரணிய பாசறைத் தொழிலே (௧௮௮) விறல் தந்து (௧௬௭) இன்னே முடிகதில்லம்ம (௧௬௮) எனக் கொண்டு கூட்டவேண்டியதாயிற்று. வினைமுடிவு காணும்போது "முடிக" என்ற வியங்கோள் வினையை யார் கூற்றாக அமைக்க லாம் என உரையாசிரியர் ஆய்ந்தார். அப் பாடலில் அமைந் திருக்கும் பொருளையும் ஆய்ந்தார். அகம் என்று கூறலாமா எனக் கருதும்போது "வேம்பு தலையாத்த" என்ற தொடர் கண்டார். அத் தொடரை ஆய்ந்தார். "இஃது அடையாளப் பூ;

ப் பூவை வேலிற் சூடியிருக்கும் முன்னோன் என்றால் அது பாண்டியன் படைத்தலைவனைத் தான் குறிக்கும்; அம் முன்னோன் காட்டக் கண்டான் வேந்தன் என்பது பாண்டியன் ஒருவனைத் தான் குறிக்கும்; முடிபுனைந்து அரசு புரிபவர்க் குரியது வேப்பமாலையாதலால் அக்காலத்து அரசுபுரிந்த நெடுஞ்செழியனையே அது சுட்டும்; ஆதலால் அகமாகாது. அகம் என்று கூறின் "சுட்டியொருவர் பெயர்கொளப் பெறாஅர்" என்ற தொல்காப்பியர் கருத்திற்கு முரணாகும் என்று கண்டார்: புறத்திணையிற் கூதிர்ப்பாசறைத் துறையாகக் கூறத் துணிந்தார். "முடிக" என்ற வியங்கோளைக் கொற்றவையைப் பரவுவாள் ஒருத்தி கூற்றாகவும் அக் கூற்றைக் கேட்பவள் கொற்றவை யாகவும் சொல்லெச்சம் வருவித்தார். ஒருத்தி கொற்றவையின் முன்னின்று கொற்றவையை நோக்கி "அரிவைக்குப் படர்தீர வேந்தன் பாசறைத் தொழில் விறல்தந்து இன்னே முடிக" என்று கூறினள்" என முடித்தார். அவர் மயங்கினர் எனக் கூறுதற்கு இடம் உண்டோ? யாண்டும் இன்று.

ஆ-ர் கூற்று

அகத்திணையும் புறத்திணையும் ஒருங்கு வைத்து ஒரு பாடலில் விளக்கும் தன்மையைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடிய பட்டினப் பாலையால் நன்குணரலாம் என்று கூறி அப் பாடலில் வாகைத்திணைப் பொருளும் பாலைத்திணைப் பொருளும் அமைந்திருக்கும் இயல்பையும் விரிவாக எடுத்துக்காட்டி விளக்குகின்றார் ஆராய்ச்சியாளர்.

மறுப்பு:

இது கடியலூர் உருத்திரங் கண்ணனார்க்கும் மயக்கத்தைக் கற்பித்ததாகும். அவர் மயக்கத்தைப் பண்டைப் புலவர் பலர் மேலும் ஏற்றுவது போன்றது இவ்வாராய்ச்சி. உருத்திரங் கண்ணனார் தாம் பாடிய பாடல் அகத்திணை என்பது தோன்றப் பாலையெனப் பெயர் இட்டார். அப் பாடலிற் பாலைக்குரிய முதற் பொருளும், கருப் பொருளும், உரிப் பொருளும் அமைத்தார். சுட்டியொருவர் பெயர் கூறினால் அகமாகாது என்று ஒருவர் பெயரையும் கிளவித் தலைவனைக் கூறாது விடுத்தார். பாட்டுடைத் தலைவன் பெயரைத் திருமாவளவன் என்று நன்கு தெளிவாகக் காட்டி அவனது வேலினும் வெய்யகானம் என்றும் கோலினுந் தண்ணிய மென்றோள் என்றும் உவமையாற் சார்த்திக் கூறினார். "முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும் வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய வாரேன் வாழிய நெஞ்சே" எனத் தலைவன்

தன் நெஞ்சிற்குக் கூறிச் செலவழுங்குவதாகத் துறையமைத்தார். இவ்வாறு அகப்பொருட்டுறை யமையப் பாடிய பாடலைப் புறப் பொருளுங் கலந்தது என்று கூறி வாகை வந்துள்ள இடமாக, "திருமாவளவன் தெவ்வர்க் கோச்சிய வேலைக் கூறு முகத்தால் அவன் பெற்ற வாகையை விளக்கியுள்ளமை காண்க" என்று காட்டுகின்றார். இப் பாடலில் திருமாவளவன் யார்? அவன் தானே பாட்டுடைத் தலைவன்; அவனது வெற்றியும் வீரமும் ஈரமும், ஈகையும் எங்கும் நிறைந்துள்ளனவே; வேலைக் கூறு முகத்தால் மட்டும் வெற்றி விளங்கியதா? அவ்விடத்தை மட்டும் ஏன் காட்டினர்? அது மட்டும் வாகைத்திணைப் பொருள் என் பது அவர் கருத்துப்போலும்; அது வாகைத்திணைப் பொருளா குமா? ஒரு பாடலில் வெற்றி கூறிய இடம் வாகை எனவும் பிரிவு கூறிய இடம் பாலை எனவுங் கொள்வது பொருந்துமா? அவ்வாறு கொள்ளின் அகம் புறம் காண்பது அரிதன்றோ? பாடலில் வந்துள்ள தலைமைப் பொருளை யுணர்ந்து அகம் புறம் எனக் கண்டு துறை கூறுவதன்றோ முறையாகும்: இவற்றை யெல்லாம் உய்த்துணராது கூறியது மயக்கமென்க

முடிவுரை:

இதுகாறும் யான் கூறிய மறுப்புரையால் நச்சினார்க்கினி யார்க்கு மயக்கமின்று எனவும், மயக்கத்தால் மாறியெழுதின ரல்லர் எனவும், தொல்காப்பியத்திற்குப் பொருத்தமாக உரை வகுத்து உதாரணங்காட்டியதற் கேற்ப நெடுநல்வாடைக்கும் உரை வரைந்து முன்பின் முரணின்றி நன்கு விளக்கினர் எனவும், அறியலாம். அறியவே நெடுநல் வாடை புறத்திணையாகிய வாகைத் திணையிற் கூதிர்ப்பாசறைத் துறை என்பதும் அகத்திணையுள் ஒன்றாகிய முல்லையாகாது என்பதும், முல்லையைக் கூறுமுகத் தால் அதற்குப் புறமாகிய வஞ்சித்திணையையும் தலைவனிலை விளக்கவுடன் கூறியுள்ளார் என்பது புதிய இலக்கணமாகிப் பொருந்தாகக் கூற்றாம் என்பதும் தானே விளங்கும். உயர்ந் தோர் உண்மை கண்டு தெளிக.

# நச்சுக்கோப்பை

(நாடகம்)

[திரு. வில்லைவாணன்]

(சிலம்பு - ௩௧, பரல் - ௬. ௨௩௯-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## மூன்றும் காட்சி

இடம் : முதல் காட்சி போன்றதே.

[காலை. கோயிலில் இசையும் பாட்டும்.]

[சீறுரியன் வருகிருன், அவனைப் பின்தொடர்ந்து புபிலியன் படைஞர் வருகின்றனர்.]

சீறுரியன் : புபிலிய!

புபிலியன் : இதோ.

சீறு : நான் சொல்லியது நினைவில் இருக்கிறதா?

புபி : நீ ரோம், ரோம் என்று கத்தும்போது யாராயிருப்பினும் பிடித்துக் கைது செய்யவேண்டும். ஆணோ பெண்ணோ அவர்கள் ரோமரசுக்குச் சதிசெய்பவராவர்.

சீறு : நீங்கள் சொல்லுங்கள். எத்தனை பேர் வந்துள்ளீர்கள்?

புபி : பத்துப்பேர் உள்ளோம்.

[புபிலியன் படைஞர் செல்லுகின்றனர்.]

சீறு : எனக்குத் தக்க பாதுகாப்பு உள்ளது. என்னை நேற்றிரவு வேட்டையாடிய கூட்டத்திற்கு அஞ்சவேண்டியதில்லை அப்பா, எப்படியோ தப்பி என் கூட்டத்தினரிடம் வந்து சேர்ந்தேன். சினுரியன் என்று தெரிந்தும் அவள் வருவாளா. என்னைப்பற்றிய உண்மையை சினுதன் சொல்லியிருந்தால் வரமாட்டாள். நான் பிறந்த வார்ப்பை மறக்க இயலுமா. என் விதியை என்னென்பேன். நன்ருகத்தான் நடந்துகொள்கிறேன், அவள் வரமாட்டாள்தான். ஆயின் தன் கணவனுக்கு உண்மையாக நடந்துகொள்வாள். ஆனால் தன் கணவனைக் காப்பாற்றுவதற்கு வருவாள். ஆம். பார் பார், என் வெண்புரு வலைக்குள் படுகிறது. எல்லாம் நான் நினைத்தபடி நடந்துவருகின்றன. ஏனோ என் மனம் நடுங்குறுகிறது. மீசை முளைக்காத இளைஞன் தன் காதலியைக்

சோலையிடத்தில் முதன் முதலில் பார்க்கும்போது மனம் துடிப்பானேன்? அவ்வாறன்றோ இருக்கிறது என்மனம்.

[நம்மா கிண்ணத்துடன் வருகிறாள்.]

சிறீ : அரும்பறவை கதிரொளியைப் பருக வரும். ஆயின் நீ, அதிகாலையில் வந்துவிட்டனையே.

நம்மா : அந்தோனியர் எங்கே?

சிறீ : இன்னும் வரவில்லை. நீ முன்னாடி வந்துவிட்டாய்.

[நம்மா கோயிலுக்குப் போகிறாள்.]

சிறீ : இப்போது எங்கே போகிறாய்?

நம்மா : இதனைக் கோயிலுக்குச்சென்று கொடுத்துவிட விரும்புகிறேன். பின், திரும்ப வருவேன்.

[கோயிலுக்குள் போகிறாள். சிறீடன் அவளையே கூர்ந்து பார்க்கிறான்.]

சிறீ : (தனிமொழி) அழகும் அன்பும் உடையவள். இவள் இவ்வுலகில் தோன்றியதால் உலகம் மேன்மையடைந்துவிட்டது. திரும்பி வருவாள் என்றுதான் நம்புகிறேன். அந்த ரோமப்படையினர் கோயிலுக்குள் வந்து துன்புறுத்தமாட்டார்கள். எனவே அவள் திரும்பி வந்ததும் அவளை எப்படியும் படைவீட்டுக்கு அழைத்துக்கொண்டு போகவேண்டும். இவளுக்காக இருக்கவும் இருப்பேன். இறக்கவேண்டினும் இறப்பேன். என்ன! ஒரு பெண்ணுக்காக இறப்பதா, புதுமுறையாகவன்றோ இருக்கிறது. எனக்குப் பித்துப்பிடித்துள்ளதா, அன்றி உடல்நலமில்லையா? நினைந்து நினைந்து வருந்துதற்கு நான் முதியவனும் அன்று. ஆம், ஆம் நான் அவள்மீது காதற்பித்துக்கொண்டுதான் அலைகிறேன். அரசி, அழகி, அறிவுக்கடல். எனவே அவள் மீது என்மனம் சென்றது புதுமையன்று. ஆயினும், ஏதோ துன்பம் வருமென்று அஞ்சுகிறது என் மனம். என்றும் மகிழ்ந்திருக்கும் எனக்கே இது புதுமையாக இருக்கிறதே.

[நம்மா திரும்பி வருகிறாள்.]

நம்மா : அந்தோனியர் எங்கே?

சிறீ : எங்கா? முன்னே நான் சொன்னேனே. நீ முன்னதாக வந்துவிட்டாய்.

நம்மா : நான் தனியே உங்களுடன் இருக்கவேண்டுமே. நீங்கள் கெட்டவர் என்று வீண்பழி சுமத்துகிறார்கள் என்றாலும், பெண்கள் உங்களுடன் தனித்து இருத்தல் நல்லதல்ல. (கூவிட்டு) எங்கே அந்தோனியர் ?

சினாரி : அம்மா, அந்தோனியர் தம் படையுடன் இருக்கும் பாடி வீடு நகருக்கு வெளியே தொலைவிலன்றோ உள்ளது. நீ என்னுடன் நடந்து வருவதானால் நாம் அங்குச் சென்று பார்க்கலாம்.

கம்மா : ஒரு அடியும் நான் உங்களுடன் எடுத்துவைக்க மாட்டேன்.

சினாரி : (கம்மாவின் அருகே வருகிறான்) உன் நன்மைக்காகவும் உன் கணவரின் நன்மைக்காகவும் சொல்கிறேன். நான் உன்னைக் கட்டாயப்படுத்தியேனும் அழைத்துச் செல்ல வேண்டும்.

கம்மா : (கத்தியை உருவிய வண்ணம்) எட்டி நில்! அருகே வந்தால் இறந்துவிடுவாய்.

சினாரி : (கத்தியைப் பிடுங்கிக் கொள்கிறான்) பெண்களிடமிருந்து இதனைப் பறிப்பது பெரிதா?

சினாதன் வருகிறான் (சினாரியனைக் கழுத்தைப்பிடித்து நெரிக்கிறான்.)

சினாரி : (திக்குமுக்காடியவனாய்) ரோம், ரோம்.

சினாதன் : நாயே!

சினாரி : (கம்மாவின் கத்தியை வீசிக்கொண்டு) என்ன? உன்னால் ஆகுமா. (குத்துகிறான்)

[கம்மா வீறிட்டு அலறிக்கொண்டே சினாதனருகில் ஓடுகிறாள்.]

சினாதன் : (வீழ்ந்ததும்) மார்பில் குத்திவிட்டான். கோயிலுக்கு ஓடு. எனக்காக இது செய். இல்லையேல் அவர்கள் பிடித்துக்கொள்ளுவார்கள். நினைத்துப்பார். ஓடு. சென்று வருகிறேன்.

[உயிர் விடுகிறான்.

கம்மா : (கோயிலுக்குள் புகுந்துகொண்டு) சென்றுவாருங்கள்

சினாரி : (அவள் தப்பிச்சென்றது கண்டு) கோயிலுக்குள் பெண்கள் அவளை இழுத்துக்கொண்டு விட்டார்களே புபிலிய, வேண்டாம். அந்தோனியர் கோயிலுக்குள் சென்று அவளைப் பற்ற இடங்கொடார். தப்பிவிட்டாள். (சினா னைக் குனிந்து பார்த்து) "நாய்" என்று சொன்னாய். ஒரே குத்தில் அமைதியுற்றாயே. எல்லா ஆசையும் செல்லட்டும் ஆசையின் பற்றால் என்னதான் பயன்! இறந்துபடும் இந் வாழ்வுக்கு ஆறுதல் அளிக்கவன்றோ? இல்லையேல் இறந்

படும் வாழ்வு இருக்கும்வரையில் வீணாகவன்றோ இருக்கும்? நமக்கு வேலைகொடுத்து, சில்லிட்டுப் போகுங்கால் சூடேற்றி, விரைந்து செய்யத்தூண்டி, உற்றவிடத்தில் உதவி, சவக் குழிக்கருகே உள்ளவற்றைப் பார்க்கச்செய்துவிடுவது ஆசையேயன்றோ? ஆசையை நன்கு பயன்படுத்திக் கொண்டால் நன்மையே அடைவோம். எகிப்திய நாட்டில் கேள்விப்பட்டதொன்றுண்டு. கடலைப்போன்றது ஆசையாம். குடிக்கக் குடிக்க நீர் வேட்கை அதிகப்படுவது அதன் இயல்பாம். மரக்கலங் கவிழ்ந்தபோது மக்கள் கடல்நீரைக் குடித்துக் குடித்து வெளியேறிவிடுவர். அவ்வாறல்ல நான். சூதாடியுமல்ல. சூதாடி வெற்றிபெற்றும் விடான். பணயத்தை இரண்டுமடங்காக வைப்பான்; பின் அனைத்தையும் இழப்பான் ரோமப் பேரரசு. அதன் கருத்துப்படி நடக்கிறேன். எனக்கு முடிசூட்டப்போகிறது; கம்மா எனக்கு மனைவியாவாள். அவளிடம் மக்களுக்கு மதிப்புண்டு. எனவே அவள் என்னை விரும்புமாறு செய்வேனால் மக்கள் என்னையும் ஏற்றுக்கொள்வர். அவளுடன் வைத்துப் போற்றுவர். பிறகு எனக்கு நல்வாழ்வுதான். ரோமப் பேரரசுக்குள்பட்ட சிற்றரசனாக இருந்து மகிழ்வேன். (சினாதனைக் குனிந்து பார்க்கிறான்) ஏனோ அவனைக் குத்திவிட்டேன். என் உயிரைக்காப்பாற்றியவன். காப்பாற்றினனா? அப்படித்தான் எனக்குப்பட்டது. என்ன, மூடனாகவன்றோ நடந்துகொண்டேன் இதனால் அவளுக்கு என்மீது வெறுப்பன்றோ உண்டாகும்? இதுவரையில், என் விருப்பத்துக்கு மாறாக ஒரு பெண்ணும் நடந்துகொண்டதில்லை. என்னுடன் முடிசூட்டிக்கொள்ள எப்படியும் இணங்கிவிடுவாள். அவளை மணந்துகொண்டு, கலாதிய நாட்டையாண்டு வளமிக்கதாக ஆக்குவேன். நாங்கள் இருவரும் கொடிமுந்திரித் தோட்டத்தே உலவிப் பழைய நாட்களை எண்ணி நகைப்போம். (சினாதனைப் பார்த்து) என்றும் நினக்கு அமைதி உண்டாவதாக. ரோம்! ரோம்! (புபிலியனும் படையினரும் வருகின்றனர்) இருமுறை ரோம் என்று கத்தினேனே, ஏன் முன்னாடி வரவில்லை?

புபிலி: இப்போது வருகின்றோமா. யாரைப் பிடிக்கவேண்டும்.

சினாரி: (சினாதனுடைய உடலைக்காட்டி) இந்த இறந்துபட்ட துரோகி சினாதனுடைய உடலை எடுத்துக்கொள்ளுங்கள்.

[கோயிலுக்குள் இசையும் பாட்டும்.]

(தொடரும்)

# வேண்டுதல் வேண்டாமை

[வித்துவான், திரு. வீ. குமாரசாமி ஐயர்]

திருவள்ளுவர் கடவுள்வாழ்த்தில் "வேண்டுதல் வேண்டாமையிலான்" என்ற தொடரால் இறைவனைக் குறிப்பிட்டார். இத்தொடர் ஒரு சமயத்தார்கொள்ளும் கடவுளைக் குறிக்கவில்லை. பொதுவாகக் கடவுளின் இயல்பையே அறிவிக்கின்றது. இறைவன் ஒரு பொருளை விழைதலும் வெறுத்தலும் இல்லாதவன். எல்லாப் பொருள்களையும் தமதாகவுடையானுக்கு ஒரு பொருளை வேண்டுமென்று விழையும் இயல்பு இல்லை. அவ்வியல்பு உடையானெனில் அவன் இன்மையுடையவனாவன். அன்றி, ஒரு பொருளை வேண்டாமை (வெறுத்தல்) உடையானெனில் யாவற்றையும் ஒப்ப நோக்கும் இயல்பற்றவனுமாவன். எவ்வுயிர் மாட்டும் பேரருளுடையா னென்னும் அவனது பெருந்தகைமைக்கு இழுக்குமாகும். ஆதலின், இறைவன் வேண்டாமையும் இல்லாதவனாவன். வேண்டுதல் வேண்டாமை யில்லாத இறைவனுக்கு அவை ஏதுவாக வரும் எத்துன்பமும் இல்லை. ஆதலின் அவன் ஆனந்தமுடையான்; வரம்பிலா இன்பமுடையான். அத்தகு இறைவன் திருவருளைப் பெற்றார்க்கும் அவனையொப்ப இன்பமேயுண்டு, எந்நாளுந் துன்பமில்லை. அதனால் திருவள்ளுவர், "வேண்டுதல் வேண்டாமையிலானடி சேர்ந்தார்க்கு, யாண்டும் இடும்பை யில" என்றார். அவன் அடியை அடைந்த பின்னரே இடும்பை யிலவாகும். அவன் அடியை அடையாமுன்னர் வேண்டுதல் வேண்டாமை காரணமாக மக்கள் உலகில் அடையும் இன்னலோ அளவற்றனவாம்.

மக்களாய்ப் பிறந்தவர் குழவிப் பருவங்கடந்து அறிவு வரப் பெற்ற பின்னர் இம்மைப் பயனும் அறம், பொருள், இன்பங்களை யடைய முயல்கின்றனர். இம் மூன்றனுள் பொருள், அறத்தையும் இன்பத்தையும் கொடுக்கும் ஆதலின், அதனை யடைய உலகில் மக்கள் படும் பாடு சொல்லுந்தரத்ததன்று. திரைகடலோடி வாணிபம்புரிந்து பெரும் பொருளீட்ட முயல்வார் பலர். பணத்தை வட்டிக்கீந்து பணந் திரட்டுவார் பலர். தொழிற்சாலை நிறுவி அதன்மூலமாகத் தொலையாப் பொருள்சேர்க்க எண்ணுபவர் பலர். அறிவைப் பெருக்கக் கற்கும் கல்வியை அதிகாரமும் பொருளும் அடையக் கற்று அரசாங்க அலுவலால் அளவற்ற பொருளைத் திரட்ட அவாவுவோர் அநேகர். இன்னும் எத்துணையோ வகைகளால் பொருளில்கொண்ட அவா தணியா

ராய்ச் சேர்க்க அல்லலுறுவோர் உளர். அதனாலேயே தாயுமான வர், "அளகேசன் நிகராக அம்பொன் மிக வைத்தபேரும் நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவர்" என்றார்.

பொருள் பெற்றோர் அதன் மூலமாக அறத்தைப் புரிந்து அதன்பயனை நாடுவர். அறச்சாலைகள் நிறுவுதல், ஆலயம் அமைத்தல், குளந்தோண்டுதல், சாலைகள் அமைத்தல் முதலாய அறங்களைச் செய்வர். அந் நல்வினைகளை ஆற்றுதலின் பயனைப் பெறும் புண்ணியப் பெருக்கால் மறுமையில் விண்ணுலக இன்பம் பெறலாமென்னும் விருப்பமுங்கொள்வர். இவ்வுலகில் பலரால் பாராட்டிக்கூறும் புகழும் பெறுவர்.

மற்றும் இம்மைப்பயனில் ஒன்றாக இல்வாழ்க்கை யின்பமும் உளது. ஆதலின், கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புல இன்பங்களும் நுகர உருவுந் திருவும் அறிவும் வாய்ந்த மங்கை நல்லாளை மணந்து காதல் இன்பத்திற் றிளைப்பர். காதலர் கூடிவாழும் வாழ்க்கையின் நலமாக நன்மக்களை யீன்று அவர்தம் மழலை மொழிகளைக் கேட்டும், அவர்தம் மேனி தீண்டியும் இன்பம் உறுவர்.

இவ்வாறு வேண்டுவன யாவும் உலக இன்பத்தையே பெரி தாகக்கருதி வாழும் மாந்தர்தம் இயல்புகளாம். "நில்லாதவற்றை நிலையின என்றுணரும், புல்லறி வாண்மை கடை" என்றுணர்ந்து மெய்யுணர்வு மிக்க பெரியோர்கள் இவற்றை வெறுக்கின்றனர். இனி, அவர்கள் "வேண்டா" என வெறுப்பனவற்றையும் "வேண்டும்" என விரும்புவனவற்றையும் காண்போம்.

கடைச்சங்கப் புலவராகிய கடுவன் இளவெயினனார் செவ் வேளை நோக்கி விண்ணப்பித்துக் கொள்கின்றார். அவர் வேண்டு வது உலகியலுக்குப் புறம்பாக உளது. இந் நாளில் இறைவனை வழிபட்டு வேண்டிக்கொள்பவர் பொன் வேண்டும், பொருள் வேண்டும், மக்கட்பேறு வேண்டும், வெற்றிவேண்டும், கல்வியில் தேர்ச்சி வேண்டும், உயர்ந்த அலுவல் வேண்டும் என்றெல்லாம் வேண்டுவர். இவ்வாறு இறைவன்பால் பெறும் பேற்றினைக் கருதிச்செய்யும் வழிபாடு காமியப் பயன் கருதியது என்பர். மெய்யுணர்வு பெற்ற இப் புலவர் பெருமானோ,

"யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல ; நின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே." (பரிபாடல்)

என்று முருகப்பெருமானை இரந்து வேண்டிக்கொள்கின்றார். அவர் பிறர்போல் செல்வத்தையும் பொன்னையும் உலக இன்பத்

தையும் கொடுத்தருள வேண்டிலராம். ஆனல் அருளும் அன்பும் அறமும் ஆகிய மூன்றையுந் தந்தருள வேண்டுமென்று இரக்கின்றராம். உலக இன்பத்திற்குப் பொருளும் பொன்னும் இன்றியமையாதன. அவற்றை அவர் விரும்பவில்லை இறைவனுடைய அருளையும் இறைவன் அருள் தமக்குண்டாக அவன்பால் செலுத்தும் அன்பு தமக்குண்டாதலையும் தமக்குத் தந்தருள வேண்டுகின்றார். அவற்றுடன் உலக நெறியைக் கடவாது வாழும் அறத்தையும் அருள வேண்டிக்கொள்கிறார் ஏனெனில், நல்லோர் உலகில் நன்னெறியைக் கடைப்பிடித்து வாழ அதனைக் கண்டோர் தாமும் அங்ஙனம் ஒழுகுவதால் உலகம் உய்தல் கருதியேயாம். ஆகவே, இப் புலவர் உலகோர் விரும்பும் பொன், பொருள், போகம் ஆகியவற்றை வேண்டாமையுடையர்; அருள், அன்பு, அறம் ஆகியவற்றை வேண்டுதலுடையர்.

தெய்வப்பனுவலாகிய திருவாசகச் செந்தமிழ் மறையை யருளிய திருவாதவூரடிகளாரின் திருவுள்ளக் கருத்தை நோக்குவோம். அடிகளார் பல திருப்பாசுரங்களில் தாம் வேண்டுவனவற்றையும் வேண்டாதனவற்றையும் நம்மனோர்க்கு விளக்கியருளியுள்ளார். அவர்,

"போகம் வேண்டி வேண்டி லேன்பு ரந்த ராதி இன்பமும்
ஏக நின்க ழலிணைய லாதி லேன்என் எம்பிரான்
ஆகம் விண்டு கம்பம் வந்து குஞ்சி யஞ்ச லிக்கணே
ஆக என்கை கண்கள் தாரை யாற தாக ஐயனே" (திருச்சதகம்)

(குஞ்சி—தலை. அஞ்சலி - கும்பிடல். தாரை - நீரொழுக்கு.)

என்கின்றார். அடிகளார் இவ்வுலகத்தார் பெரிதாகக் கருதி அனுபவிக்க விரும்பும் இன்பத்தையும் வேண்டிலேன் என்றார். அத்துடன் இந்திரன் முதலியோர் அடையும் இன்பத்திலும் தமக்கு விருப்பமின்மையை அறிவிக்கின்றார். இவ்வுலகவாசிகள் விண்ணவராகவும் விண் இறையாகவும் ஆக விரும்புவர். அந்நிலையைப் பெற முன்னளில் அரசர்கள் நூறு பரிவேள்வி செய்தனர் என்றும், அவ்வாறு செய்து இந்திரன் பதவியைப் பெற்றரென்றும் நூல்கள் கூறுகின்றன. அதனல் இந்திரனுக்குச் சதமகன் (நூறு வேள்வி செய்தவன்) என்ற பெயரும் உண்டு. இவ்வாறு அரிதில் பெறத்தக்க விண்ணின்பத்திலும் அவர்க்கு விருப்பமில்லை. ஆகவே இதனினும் மேலானதோர் நிலையையும் இன்பத்தையும் அவாவுகின்றரன்றே! அதுதான் யாதெனின், "எம்பிரானே! நினது திருவடித் துணையை யன்றி வேறென்றையும் உடையனல்லேன்; எந்தையே! உள்ளம் உருகி, நடுக்கம்

மற்றும் அடிகளார்க்கு ஓரோர் சமயம் தமது உறுதிப் பாட்டிலும் ஐயம் உண்டாகிறது. முன்னர் நிலையாதனவற்றை யெல்லாம் வேண்டி நின்ற பழக்கவயத்தால் வாய்சோர்ந்து அவற்றை வேண்டாதிருக்க எண்ணுகின்றார். ஆதலின் "யான் விரும்பாததாகிய ஒருபொருளையும் விரும்பாமல் நின்பால் மிகுந்த அன்பினையே கொள்ளுதல் உன் அடியவனாகிய எனக்கும் உண்டாமோ?" என்ற கருத்துப்பட,

"தூண்டா விளக்கின் சுடரனையாய்
தொண்டனேற்கும் உண்டாங்கொல்
வேண்டா தொன்றும் வேண்டாது
மிக்க அன்பே மேவுதலே" (பிரார்த்தனைப் பத்து)

என்று வேண்டுகின்றார்.

அடிகளார் திருச்சதகத்தின் இறுதிப்பாசுரத்தில் சிவபெருமான் தமக்கு அருளவேண்டுவனவற்றை யெல்லாம் விண்ணப்பித்துக்கொள்கின்றார். அதில் பாக்கள் புனையும் நாவன்மையுடையார் பல தெய்வங்களைச் சிற்சில இன்பங்கருதி வேண்டிப் பாடுவர்; செல்வர்கள் மீது பாக்கள் புனைந்து அவர்கள் கொடுக்கும் பரிசிலைப் பெறப் பாடுவர். அவ்வாறெல்லாம் பாடாமல் அளவிலா ஆனந்தத்தையருளும் சிவபெருமானையே பாடவேண்டுமென்றும், அவ்வாறு பாடி நைந்து நைந்து, நெகிழ்ந்து நெகிழ்ந்து ஆடுதல் வேண்டுமென்றும், திருச்சிற்றம்பலத்தில் நடிக்கின்ற கூத்தப்பெருமானின் திருவடித் தாமரை மலரைச் கூடவேண்டுமென்றும், உடம்பைவிட்டு நீக்கவேண்டுமென்றும், உலகத்தில் காணப்படும் நிலையற்றன யாவற்றையும் விரும்பாமல் விடவேண்டுமென்றும், வீடு தந்தருள வேண்டுமென்றும் மெய்யன்பர்க்கு மெய்யன்பனை சிவபெருமானைப் போற்றுகின்றார்.

ஆகவே திருவாதவூரடிகளார் இறைவன்பால் கொள்ளும் அன்பையும் வீடுபேற்றையுமே வேண்டுகின்றார். உலகோர் விரும்பும் புகழ், பொருள், பதவி ஆகியவற்றை விரும்பிலர்.

ஆதலின், இன்மை காரணமாகச் செல்வம் விழைந்து அறநெறிக்கு மாறாக ஒழுகாமலும் புல்லறிவாளரிடம் கற்ற மாந்தர் இரந்து நில்லாமலும இருத்தல் கடனாம். "செல்வமென்பது சிந்தையின் நிறைவே, அல்கா நல்குரவு அவா எனப் படுமே" என்றார் குமரகுருபரர். ஆதலின் தேவைமிக்கு இன்மை நிரம்பியுள்ள இக்காலத்தில் இத்தகு சிறந்த அருளாளர் உரைகள் உள்ளத்தை நிறைவுபடுத்தும் பொன்மொழிகளாமென ஓர்க.

# குறள் நடை

[திரு. ச. கணபதி முதலியார், எம். ஏ., எல். டி.]

நடை என்பது பலபொருள் குறித்த ஒரு சொல். அஃது மக்களது ஒழுக்கத்தைக் குறிக்கும் ஒரு பொதுத் தமிழ்ச்சொல். 'நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே' என்ற புறநானூற்றுப் பழவடியில் 'நன்னடை' என்பது நல்லொழுக்கத்தைக் குறித்து நிற்றலைக் காண்க. புன்னெறிப்படா வண்ணம் மக்களை நன்னெறிப் படுத்துவது அரசனது முதற்கடமை என்ற சீரிய கருத்தை வலியுறுத்துவான் எழுந்தது அவ்வடி.

அடுத்து நடை என்பது நட என்னும் பகுதியின் அடியாகப் பிறந்து ஓரிடத்திலிருந்து பிறிதோரிடத்திற்கு நடந்து செல்கின்ற செலவைக் குறிக்கும். காலால் நடத்தல் இயல்பாதலின் அது கொண்டு வழி நடந்தவன் கால் நடையாளன் எனப்படுவான். (Pedestrian-பாதசாரி) நடந்த பாதை கால்நடைப்பாதை எனப்படும் (Beaten foot track). இவ்விரண்டுமின்றி நடை என்ற சொல் நூனடை என்ற சொற்றொடரொடு இயைந்துவந்து ஒரு சிறப்புப் பொருளைப் பயந்து நிற்பதுமுண்டு. நூனடை என்புழி அது வழக்காற்றில் ஆகுபெயராய் நூலின் செலவு அல்லது நூற்பொருளின் சொற்போக்கைச் சுட்டி நிற்கும் என்பர் கற்றறிமாந்தர். கால்நடையின் குறிக்கோள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் சென்று சேர்தல்; நூல்நடையின் உட்கோள் ஒருவன் உள்ளத்தெழுந்த விழுமிய கருத்து பிறனொருவன் உள்ளத்தடைதல் என்பது. ஓரிடத்திலிருந்து பிறிதோரிடம் செல்லுதற்குக் கருவி கால்; ஒருவன் மனத்தின் கண்ணுள்ள கருத்து இன்னொருவன் அகம் புகுதற்குக் கருவி சொல். ஒரு புலவனின் சிந்தையில் எழுந்த கருத்தைப் பிறர்க்குச் செவ்விய முறையில் புலப்படுத்தப் பயன்படுத்திய சொற்போக்கின் நெறி அல்லது சொல்லமைப்பு நெறிதான் நடை (style) எனப்படும்.

நூல்நடை மூவகைத்து. ஒன்று செய்யுள் நடை; மற்றொன்று உரை நடை; பிறிதொன்று இரண்டுங் கலந்த நடை. செய்யுள்நடை பத்து அழகுகளுமுடைத்தாய், பத்துக்குற்றங்களுமிலதாய், முப்பத்திரண்டு உத்திகளும் பொருந்தியதாய் மிளிரும் பான்மைத்து. அன்றியும் அஃது அடி எல்லையினையும் உடையது; எதுகை, மோனை நயங்கொண்டிலங்குவது; உரைநடை எல்லையில்லாதது; அகலவுரைக்கும் தன்மையது. செய்யுளும் உரையும்

இடைப்பட்டுக் கலந்துவரும் நடையைச் சம்பு நடை என்பர் வட மொழிவாணர்: தொன்மை என்று கூறுவர் ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியர். தகடூர் யாத்திரையும் சிலப்பதிகாரமும் இந் நடைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும். ஆனால் ஈண்டுக் கூறுவான் எடுத்துக்கொண்டது செய்யுள்நடை ஒன்றையேயாம். அதனை ஒருவாறு கூறுவல்.

செய்யுளை யாக்கின்ற புலவன் நுண்மாண் நுழைபுலமிக்கவனாக இலங்குதல் இன்றியமையாததாகும். அவன் விழுமிய கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டவனாக விளங்குதல் வேண்டும். பின் அச் சீரிய கருத்துக்களை இழுமென் மொழியால் உரைக்கும் ஆற்றலுடையோனாக அவன் அமைதல் வேண்டும். அவன் தான் புலப்படுத்த எண்ணிய பொருளை அல்லது கருத்தைத் தெளிவான, எளிமையான இன்பம் பயக்கும் சொற்களால் வெளிப்படுத்தும் ஆற்றலுடையோனாதல் வேண்டும். உரிய சொற்கள் உரிய இடங்களில் வண்ண வைரமாலையில் வைர மணிகள் அணிபெற பதிப்பிக்கப் பெற்றமைபோல வைப்பிட மறிந்து வைக்கும் திறனுடையோனாக அமைதல் வேண்டும். (The Best words in their Best order) கருத்து முற்பட்டது; சொல் பிற்பட்டது; அதன் வழிப்பட்டது. பொருளும் சொல்லும் பருந்தும் நிழலும் போலவும், மலரும் நாற்றமும் போலவும், மணியும ஒளியும் போலவும் இயைந்து நிற்றல்வேண்டும். சொல்லொடுபட்டு கருத்து இயங்குவது உடலொடுபட்டு உயிரிலங்குவது போலாம். எனவே, நற்கருத்தை வெளிப்படுத்தப் புலவன் அமைக்கும் சொற்கிடக்கை முறையே நடை எனப்படும் என்பதை இதுகாறும் கூறியவற்றால் ஒருவாறு பெற்றாம்.

சொல்லமைப்பு முறை புலவர் எல்லோரிடத்தும் யாண்டும் ஒரு பெற்றித்தாய் அமைதல் இயலாததொன்று. கருத்து ஒன்றாக இருக்கலாம். ஆனால் அதனை ஒரு புலவன் கூறியாங்கு மற்றொரு புலவன் கூறமாட்டான். சொல் நயத்துடன், பொருள் நயத்துடன் கூறும் ஆற்றலில் ஒருவரை ஒருவர் தம்முள் வேறுபடுவர். ஒரு புலவனின் சொல் வைப்புமுறை ஓசையுடைத்தாய், ஆற்றொழுக்காய், விழுப்பொருள் பயப்பதாய், தீஞ்சுவை தருவதாய் அமையும். பிறிதொரு புலவனின் சொற்கிடக்கை முறை வாழ்ச்சொற்கள் நிறைந்ததாய், மயக்கந் தருவதாய், அவலச்சுவை பயப்பதாய் அமையும். எனவே, நடை புலவனுக்குப் புலவன் வேறுபடும் தன்மையது. ஒவ்வொரு புலவனுக்கும ஒவ்வொரு தனிப் பண்பு உண்டு. அத் தனி ஆற்றல் அவனுக்கே உரியது. (Personal or Individual) புலவனையும் அவனது நடையினையும் மனக்கண்ணிலிருந்து பிரித்தறிய இயலாது. ஒரு புலவனை

எண்ணுங்கால் அவனது நடையே சிந்தைக்குப் புலனாகும். செய்யுள் நடையில் சங்ககாலப் புலவர்களின் நடை வேறு; (Epigrammatic and Condensed) இளங்கோவின் சொற்சேர்க்கை முறை வேறு; சேக்கிழாரின் சொல்லமைப்பு முறை வேறு; கம்பரின் சொல் வைப்பு முறை வேறு. உரை நடையிலும் இக் கருத்தே நனிநிலவுதலை இன்றுங் காணலாம். காலஞ்சென்ற திரு. வி. க. அவர்களின் உரைநடை வேறு; மறைமலை அடிகளின் நடை வேறு; கா. சு. அவர்களின் நடை வேறு; உ. வே. சு. ஐயரவர்களின் நடை வேறு; இன்று நின்றுலவும் தண்பாண்டிச் செந்தமிழ்க் கீதமினிய குயில், சொல்லின் செல்வர். திரு. டாக்டர் ஆர். பி. சேதுப்பிள்ளை அவர்களின் தீந்தமிழ் உரை நடை வேறு. இக் கருத்துக்களை எல்லாம் நன்குணர்ந்த மேலை நாட்டு இலக்கியச் செல்வர்கள் நடை (style) என்பதற்குக் கீழ்வருமாறெல்லாம் இலக்கணம் வகுத்தார்கள்.

"Style is the writer's distinctive mode of expression."
—D. W. Walters

"Style is the personal idiosyncrasy of expression by which we recognize a writer"
—(The Problem of style-Middleton Murry)

"Style is not the Coat of the writer but his skin" —Carlyle

"Style is the man, that is the unconscious expression of the writer's own personality. It is the very soul of one man, reflecting as in a glass the thoughts and feelings of humanity."
—W. J. Long

"Style is the dress of thought..........................A well-dressed thought like a well-dressed man, appears to great advantage."
—Lord Chesterfield

"Style is thinking out into language." —Newman

"Style is an index of personality." —Hudson

பண்டை நற்றமிழ்ப் புலவர்கள் இச் செய்யுள் நடையை 'வண்ணம்' என்று கூறினர். தொல்காப்பியர் இருபது வண்ணங்கள் கூறிப்போந்தார். யாப்பருங்கலக்காரிகையார் நூறு வண்ணங்கள் அருளிப்போந்தார். வண்ணம் என்பது "எழுத்துச் சார்ந்து நிற்கும் வகையினாலே இசையைத் தோற்றுவித்துத் தமிழ் மொழிக்கே உரியதாய் வழங்கப்படுவது. சந்தம் வடமொழிக்குரியதாய்த் தமிழ் மொழியிலும் வழங்கப்படுவது" (யாப்பருங்கலக்காரிகை - ஒழிபியல்) என்பது காரிகையார் வகுத்த உரை.

தமிழ்த் தண்டியாசிரியர் இச் சொல்லமைப்பு முறையை வைத்துப் பாக்களை ஓசைபற்றிப் பகுத்தார். என்னை? பாவெனப் படுவது பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை என்பதாகலான்என்க.

தண்டியலங்கார ஆசிரியர் மெல்லோசைகொண்ட மிடுக்கிலா நடையை வைதர்ப்ப நெறி என்றார்; வல்லோசைகொண்ட மிடுக்குடை நடையைக் கௌடநெறி என்றார். இடையினவோசை கொண்ட ஒன்றைப் பாஞ்சால நெறி என்றார் மாறனலங்கார ஆசிரியர். யாப்பருங்கலக்காரிகையார் சில வோசைகளுக்கு இலக்கணம் உரைநடையில் கூறியிருப்பதை இவண் தருகின்றாம்; படித்தின்புறுமின்.

"அகவலிசை சுழிக்காற்றும், நீர்ச்சுழியும் போன்றுவரும். ஒழுகலிசை நீரொழுக்கும் காற்றொழுக்கும் போன்று வரும். வல்லிசை தோற்கயிறும் இரும்புந் திரித்தாற்போன்றும், கல்லின் மேன் கல்லுருட்டினாற்போன்றும் வரும். மெல்லிசை அன்ன நடை போன்றும் தண்ணம்பறை போன்றும் வரும்."

அல்லதூஉம் செய்யுள் நடையில் ஓசைக்குத் தனியிடம் உண்டு என்பது மேல்நாட்டு மேதக்கோர் வகுத்த செய்யுளிலக்கணத்தானும் நனி உணரப்படும்.

"Poetry is the *rhythmic creation* of beauty."
(Edgar Allan Poe)

"Poetry is the Concrete and *artistic expression* of the human mind in emotional and *rhythmical language*."
(Watts Dunton)

"Poetry is musical thought." (Carlyle)

"Poetry is *music in words*; music is poetry in sound."
(Fuller)

இனி வள்ளுவரது குறள்நடைச் சிறப்பியல்புகளைக் கூறுவாம்.

குறள் ஒரு மனிதனின் (திருவள்ளுவரின்) நுண்ணறிவுச் சிகரம் (Pyramid of man's intelligence). அது சில்வகை எழுத்தில் பல்வகைப் பொருளைப் பயப்பது. இவ்வியல்பே குறள் நடையின் முதலழகாம். வள்ளுவர் தாம் கருதிய விழுப்பொருள்களை உலகத்தார்க்கு எடுத்துக்கூற அகவற்பா வடிகளை வேண்டிற்றிலர்; கலிப்பா வடிகளை வேண்டிற்றிலர்; வஞ்சிப்பா வடிகளை வேண்டிற்றிலர். குறுகத்தறித்த குறட்பா வடிகளையே தேர்ந்தெடுத்தார். என்னை? சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதே நூற்கழகெனும் பத்தினுள் தலையாயது பற்றி என்க; நுண்ணறி

தின் உயிர் என்பது பற்றியுமாமெனக (Brevity is the soul of wit). குறட்பாக்களில் சீர் எளிமை, அசை எளிமை, சொல் எளிமை, ஓசை எளிமை, சொற் செட்டு, ஒலிச் செட்டு, கருத் தினிமை முதலியவைகளைக் காணலாம். விகுதிகள், உயர்வு சிறப்புகள், வேற்றுமை உருபுகள், சாரியைகள் முதலியவைகளை நீக்கி நோக்குங்கால் பெரும்பான்மையான குறள்கள் ஓரசைச் சொற்களினாலே(Monosyllabic words)யே ஆக்கப் பெற்றிருத்தலை அறியலாம். கீழ்வரும் குறட்பாக்களை இந்நெறியில் கருதிப் பாருங்கள் :

“ இதனை இதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை அவன்கண் விடல்.”

“ என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை யறம்.”

“ தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு.”

இக் குறட்பாக்கள் வள்ளுவரின் ஒரு மொழி நயத்திற்குத் தலைசிறந்த எடுத்துக் காட்டுகளாகும். இந்நெறியில் வள்ளுவரை நிகர்த்த ஆங்கிலக் கவி டென்னிசனேதான் (Tennyson) என்று ஆங்கில நூல் வல்லுநர் கூறுவர்.

குறட்பாக்களில் கடின சொற்கள் மிகச் சிலவே; எளிய சொற்கள் மிகப் பலவே. ஒவ்வொரு குறளும் ஒரு ஆணிச் சொல்லை உடைத்து. சொற்களை எடுத்தலும் விடுத்தலும் குறளில் இயலாதாம். அதனாற்றான் இதுகாறும் குறட்பாக்களில் பாடபேதங்கள் காணப்படவில்லை.

வயதில் இளைஞரும் அறிவில் இளைஞரும் அகராதியின் துணையின்றி குறட்பாக் கருத்துக்களை செவ்வனே உணரலாம். அத் துணை எளிமையுடைத்து சொல்லாக்கத் திறத்தில். கீழ்வரும் எடுத்துக் காட்டுகள் இவ்வுண்மையை நன்கு வெளிப்படுத்தும் :

“ நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.”

“ எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.”

“ குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.”

இலக்கிய நயங்களைத் தன்னகத்தே கொண்டொளிரும் அரும் பெரும் சொற்களையும் சொற்றொடர்களையும் குறட்பாக்களில் பல இடங்களில் படித்தறியலாம். ‘நவிறொறு நூனயம் போலும்,’

'அறிதோ றறியாமை கண்டற்றால்' என்ற வள்ளுவரது கருத்து களுக்கு எடுத்துக் காட்டாக அவர் வாய்ப்பிறந்த அவரது குறட் பாக்களிலே பல சான்றுகளைச் சுட்டிக் காட்டலாம் :

" இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள."

" நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று."

" குடம்பை தனித்தொழியப் புள்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு."

அடுத்து குறள்நடையில் காணப்படும் அழகு சொற்செட்டு என்பதாம். ஏழு சீர்களடங்கிய ஒரு குறளில் சீர்தோறும் வேறொரு சொல்லினை அமைக்காது ஒரு சொல்லையே நயம்பட வைக்குமாறறிந்து பொருள் புலப்படுத்தும் பேராற்றல் வள்ளுவர் போன்ற தலைமைசான்ற பெரும் புலவர்க்கே உரித்தாகும். அடியிற் காண்பன இதற்கு அமையும் சான்றுகள் :

" சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்"

" பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்."

" இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது."

முதற்குறளில் 'சொல்' எனும் சொல்லும், இரண்டாவதில் 'பொருள்' எனும் சொல்லும், மூன்றாவதில் 'இன்மை' எனும் சொல்லும் பலமுறை அந்தந்தக் குறளில் பயிலப்பட்டபோதிலும் படிப்பார்க்குச் சலிப்பை உண்டுபண்ணாமலும் பொருள் நயம் ஒரு சிறிதும் குன்றாமலும் அச்சொற்கள் நிற்றலை ஆய்ந்து இன்புறுமின். ஒரு மந்திரவாதிக்கு, மந்திரக்கோல் எவ்வளவு பெருந்துணையோ அங்ஙனே ஒரு புலவனுக்குச் சொல் பெருந் துணையாகும். சொல்லே அவனுக்கு மந்திரக்கோல். சொல் லாட்சியில் தெளிவு அவனுக்கு இன்றியமையாததாகும். சொல் லாட்சித் திறனின்றி பொருள் மயக்கத்தை உண்டுபண்ணுவா னேல் அவன் புன்கவி எனப்படுவான். 'புன்கவியென தெளி வின்றி' என்ற கம்பரது வாக்கும் இவண் நினைப்பூட்டத் தக்கது.

ஒழுகிசை யின்பம் வள்ளுவரது குறட்பாக்களில் நனி யுண்டு. ஆற்றொழுக்கு நீர்போலத் தளைதட்டுதலின்றி ஒழுகிச் செல்லும் சொல்லினிமை, சொன்னீர்மை பல குறட்பாக்களில்

னலாம். மென் சொற்களையே ஏற்று மெல்லோசை இன்பம் தரும் குறட்பாக்கள் பல. பின்வருவன அவற்றுள் சில :

" அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்ச லறியார் தொழில்."

" பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து "

" இன்சொ லினிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது."

வல்லோசை மிகப்பெற்று வன்குறட் பாக்களாகக் காணப் படுபவை இவை :

" கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க அதற்குத் தக."

" ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின்."

" கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார்."

இடையினந் தாங்கி நிற்கும் இடையினக் குறள் பின் வருவது :

" வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர்."

முற்று மோனைக் குறள்கள் பல :

" துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை."

" பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு."

இவை அப் பிரிவிற்குத் தகுந்த உதாரணங்களாகும். முற்றொற்றுக் குறளிற்கு,

" பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின் "

என்ற குறளும், ஒற்றில்லாக் குறளிற்கு,

" காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியெ னெஞ்சு."

என்ற குறளும், முறையே சான்றுகளாம்.

நடையே ஆசிரியன் (Style is the man). ஆசிரியனது ஆன்ம குணம் அவனது இலக்கிய நடையில் அவன் அறியாமலேயே

விளங்குகின்றது. அஃது அவ்வாசிரியனது தனிப்பண்பு; அவனுக்கே உரியது.

(Individuality of style) இப் பண்பை வள்ளுவர்க்குச் சுட்டியும் ஒட்டியும் பார்த்தால் அவர்க்கெனவே சில பண்புகள் அவரது குறட்பாக்களில் அமைந்திருத்தலைக் காணலாம். பல குறட்பாக்களின் ஈற்றுச் சீர்களை உற்று நோக்கினால் ஒரு சிறிய அவரது நடைப்பண்பு நன்கு நமக்குப் புலப்படும். ஒருசில சொற்களையே ஈற்றுச் சீர்களில் வைத்து முடிப்பது வள்ளுவரது வழக்கமாகவும் குறிக்கோளாகவும் காணப்படுகிறது. 'உலகு' என்ற சொல்லை ஈற்றுச் சீராக உடைய குறள்கள் இருபத்தைந்து. அங்ஙனே 'தலை' என்ற சொல் பத்தொன்பது இடங்களிலும், 'அரிது' என்ற சொல் பத்தொன்பது இடங்களிலும், 'நட்பு' என்ற சொல் பதினைந்து இடங்களிலும், 'நன்று' என்ற சொல் பதினைந்து இடங்களிலும், 'கடை' என்ற சொல் பதினைந்து இடங்களிலும், 'சொல்' என்ற சொல் பத்து இடங்களிலும், 'அறிவு' என்ற சொல் பத்து இடங்களிலும், 'துணை' என்ற சொல் பத்து இடங்களிலும், 'இனிது' என்ற சொல் பத்து இடங்களிலும், 'ஏமாப்புடைத்து' என்ற சொல் ஆறு இடங்களிலும், 'கரி' என்ற சொல் மூன்று இடங்களிலும் வந்துள்ளன.

எனவே, இச் சொல்வைப்புமுறை வள்ளுவர் நடைக்கே உரியது என்பது அங்கை நெல்லியாகத் தோன்றுகின்றது.

இனி, சில சொற்றொடர்கள் வள்ளுவர்க்கே உரியன. அவர் நூல்நடைக்கே பொருந்துவன என்பதைக் கீழ்வரும் சொற்றொடர்கள் வலியுறுத்துவதைக் காண்மின். இதுவும் ஒரு ஆசிரியனது நடையின் சிறிய பண்பாகும் என்பதை ஹட்சன் (Hudson—Introduction to the study of Literature) பின் வருமாறு கூறுமாற்றால் அறிக.

"The choice of the words, the turn of the phrases, the structure of the sentences, their peculiar rhythm and cadence. these are curiously instinct with the individuality of the writer."

(a) உடைமையுளின்மை, இன்மையுளின்மை, வன்மையுள் வன்மை, சொல் வணக்கம் வில் வணக்கம், வகைமாண்ட தகைமாண்ட, வில்லேருழவர் சொல்லேருழவர், நுணங்கிய கேள்வியர் வணங்கிய வாயினர், தினைத்துணை பனைத்துணை, ஆகாறு போகாறு, தலைப்பட்டார் வலைப்பட்டார், ஆகூழ் போகூழ், செவிபுணவு அவிபுணவு—(இரட்டை எதுகைச் சொற்கள்).

(b) பேராண்மை, வேளாண்மை, குடியாண்மை, மடியாண்மை, தாளாண்மை, ஊராண்மை, நல்லாண்மை, வினையாண்மை.

வள்ளுவர்க்குச் சொற்பஞ்சமில்லை.

சொல்லிலக்கணம் (Definition of terms) சொல்லிப்போதல் வள்ளுவரது நடையின் தனிப்பண்பாகும். கீழ்வருவன அதற்குத் தக்க சான்றுகளாம்.

"கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்."

"அந்தண ரென்போ ரறவோர்."

"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்."

"வறியார்க்கொன் றீவதே ஈகை."

தவம், வாய்மை, பெண், இன்சொல், அரசு, பேதைமை, பேராண்மை, வாணிகம் முதலிய சொற்களுக்கும் வள்ளுவர் கூறும் இலக்கணங்களை முறையே அறிக.

அணியிலாக் கவிதை பணியிலா வனிதையை ஒக்குமென்பர். குறள் ஈரடியான் யாக்கப்பெற்றது. அவ்வீரடிக்குள்ளே புகுத்தப் பெற்ற அணிகள் பல. அவ்வணிகளுள் உவமையணியே தலையாயது. போல, புரைய, மான, கடுப்ப என்பனபோன்ற உவமை உருபுகளிருக்க வள்ளுவர் 'அற்று' என்ற ஒன்றையே ஈற்றுச் சீரில் அமைத்து இருபத்து நான்கு குறள்கள் அமைத்திருக்கின்றார். இதுவும் அவரது நடைப்பண்புகளில் ஒன்றாம். காட்டாகச் சில குறள்களைத் தருதும் :

"இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று."

"வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று."

"உடம்பாடு லாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போ டுடனுறைந் தற்று."

"களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று."

"அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று."

கலைகள் பலவகையினவாம். அவையெல்லாம் கவின் கலைகள் (Fine Arts), சிறிய கலைகள் (Lesser or Mechanical Arts) என்ற இருபகுப்பினுள் அடங்குமென்பர். கட்டிடக்கலை (Architecture), சிற்பக்கலை (Sculpture), ஓவியம் அல்லது சித்திரக்கலை (Painting), இசை (Music), செய்யுள் (Poetry) என்ற ஐந்தும் கவின் அல்லது

இன்பக் கலைகள் எனப்படும். மரம், கண்ணாடி, உலோகம் முதலிய பொருள்களின்மீது செய்யப்படும் அழகிய கைவேலைப் பாடுகள் சிறிய கலைகளெனப்படும். கவின் கலைகள் ஐந்தும் கட்புலன் வழி அறியும் கலைகள் (Arts of the Eye) என்றும், செவிப்புலன் வழி அறியும் கலைகள் (Arts of the Ear) என்றும் பாகுபாடு செய்யப்பட்டுள்ளன.

செய்யுள் செவிப்புலன்வழி நுகரும் ஒரு கலை; சித்திரம் கட்புலன்வழி நுகரும் ஒரு கலை. செய்யுட்கு ஓசை அடிப்படை: சித்திரத்திற்குக் காட்சி அடிப்படை. செய்யுள் பாக்கின்றவனைக் காவியப் புலவன் என்போம்; சித்திரம் தீட்டுகின்றவனை ஓவியப் புலவன் என்போம். இருவரும் உணர்ச்சியை ஊட்டவல்லார்கள். வண்ணங்கொண்டு (Colour) திரைச் சீலையில் (Canvas) ஓவியத்தை ஓவியப் புலவன் தீட்டுவதுபோல் சொற்கலைக் கருவியாகக்கொண்டு சொல்லோவியங்களை (Word-pictures or Images) காவியப் புலவன் தீட்டுவான். வள்ளுவர் சொல்லோவியம் புனைவதில் பெரிதும் வல்லவர். அவர் தமது குறுகத் தறித்த குறளில் சொற்படம் பல எழுதியுள்ளார். அக் குறள் கருத்துக்களை சிந்தையிற்கொண்டு பல சித்திரங்கள் வரைந்துவிடலாம். துவக்கப்பள்ளி மாணவ மாணவிகட்கு அக் குறள் கருத்துக்களைச் சித்திரங்கள் வாயிலாகவே எளிதில் உளம்புகுத்தி விடலாம். அடியில் வரூஉம் குறள்களெல்லாம் வள்ளுவரின் சொல்லோவியத் திறத்திற்குத் தகுந்த எடுத்துக்காட்டுகள்:

"பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்."

"நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும்."

"கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து."

"காலாழ் களரின் நரிஅடும் கண்அஞ்சா
வேலாள் முகத்த களிறு."

"கான முயல்எய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது."

"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்."

சொல்வைப்பு முறை அல்லது போக்கு முறையை வள்ளுவர் நன்கு உணர்ந்த காரணத்தினால்தான் ஏழு சீர்களடங்கிய குறளில் இச் சொல் சித்திரங்களை வெற்றியோடு தீட்ட வல்லாரயினர் என்பது ஈண்டு ஓரற்பாற்று.

# ஒரு புறத்துறை விளக்கம்

[வித்துவான், வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர்]

சங்ககாலத்துத் தமிழ் மக்களின் உள்ளக் கருத்தைத் தெளிவுறக் காட்டும் பழைய நூல்களில் ஒன்று புறநானூறு. இந் நூலின் பிற்பகுதியிலுள்ள பல செய்யுட்களுக்குப் பழைய உரை இல்லை. என்னிடமுள்ள புறத்துறை என்னும் ஏட்டுச் சுவடியில், சில செய்யுட்களுக்குப் பழைய உரைகள் உள்ளன. அவற்றுள் ஒரு செய்யுளின் பழைய பொழிப்புரையும், அதற்கு நான் எழுதிய விளக்கமும், அவ்வுரைமேல் நிகழும் தடைகளுக்கு விடையும், பிறவுமாகியவற்றை வெளியிடுகின்றேன்.

வெள்ளை வெள்யாட்டுச் செச்சை போலத்
தன்னோ ரன்ன இளையர் இருப்பப்
பலர்மீது நீட்டிய மண்டையென் சிறுவனைக்
கால்கழி கட்டிலிற் கிடப்பித்
தூவெள் ளறுவை போர்ப்பித் திலதே.

: தும்பை. துறை : வேத்தியல். பொழிப்பு ; பழைய உரை :—

மறுவற்ற தூய வெள்ளாட்டிற் கட்டப்பட்ட வெட்சிமாலை யதனுயிரை விடுத்தற்கேதுவாறற் போலத் தன்னையொத்த வீரர் தன்னைச் சூழவிருப்பவர்க்கு முன்னாகக் கொடுத்த மதுவினையுடைய மண்டை யென்னுடைய புதல்வனைக் காலில்லாத வாசந்தியிற் கிடத்தித் தூயதாகிய வெள்ளைப் புடைவையைப் போர்ப்பித்ததில்லை யென்றவாறு என்ற கருத்துச் சிறைப்பட்டானென்பதாம்.

**விளக்கம் :** போர்முனையில் தும்பை சூடிப் பகைவருடன் அரசற்கு வெற்றியுண்டாகுமாறு கடும்போர் செய்து சிறைப்பட்டான் வீரனொருவன். இச்செய்தியை அறிந்தோர் சொல்லக் கேட்ட அவனுடைய வீரத்தாய் போர் வீரர்கள் பலர் சூழ்ந்திருக்கவும் அவர்களுக்கெல்லாம் கள் நல்குவதற்கு முன்பே அவர்கள் முன்னிலையில் என் சிறுவனுக்கு மண்டைப் பாத்திரத்தில் கள் நல்கிச் சிறப்பித்தான் அரசன். தன்னை வீரருள் முதன்மையாகக் கருதிச் சிறப்புச்செய்த அரசனுக்கு, என் மகன வெற்றி தோன்றப் போர்செய்து சிறைப்பட்டான் என்பதைக் காட்டிலும், அரசன் இரங்குமாறு போரில் உயிர்துறந்தான் என்பதைக் கேட்டால் மிகவும் சிறப்பாக இருக்கும். அங்ஙனம் உயிர்

துறவாது சிறைப்பட்டது அரசன் செய்த சிறப்பினளவுக்கேற்ற தாகாது குறைவுபட்டதாயிற்றென்று அரசனது வரிசையறிந்து சிறப்புச்செய்த இயல்பாகிய பெருங்குணத்தை வீரத்தாய் பாராட்டிக் கூறினள். வீரத்தாய் கூறியதாக ஔவையார் பாடியது இச் செய்யுள்.

வெள்ளை, தூய்மை உடையதாதலின் அதனைத் தூவெள்ளை என்பர். 'ஓர் தூவெண் மதிசூடி' என்பது தேவாரம். வெள்ளை என்னும் பண்புப்பெயர் அதனுடைய தூய்மை குறித்து நின்றது; 'வெள்ளைக்கில்லை கள்ளச் சிந்தை' என்பதில் வெள்ளை என்பது தூய்மை குறித்து நின்றாற்போல. வெள்யாடு - ஆட்டின் ஒரு வகைச் சாதி. அது கருநிறமுடையது. கருப்பாட்டை வெள்ளாடு என்பது மங்கலவழக்கு. முழுதும் வெண்ணிறமுடைய யாட்டை பள்ளையாடு என்பர் 'வெள்ளை வற்காலி பள்ளை யாடே' என்பது பிங்கலந்தை. வெள்ளாடு மறுவற்ற தூய உள்ளமுடையதாதலின் வெள்ளை வெள்யாடு என்பதற்கு மறுவற்ற தூய வெள்ளாடு என்று பழையவுரை கூறியது. மறு - குற்றம், கபடம். வேலன் கையில் வைத்திருக்கும் மலரும் தளிரும் செறிந்த மாலையை உண்மையில் உணவென்று மகிழ்ந்து சென்று வெள்ளாடு வேலன் கைவாளுக்கிரையாதல் கண்கூடு.

'வெறியயர் வெங்களத்து வேன்மகன் பாணி
முறியார் நறுங்கண்ணி முன்னர்த் தயங்க
மறிகுள குண்டன்ன மன்னே மகிழ்ச்சி
யறிவுடை யாளர்க ணல்.'

என்னும் நாலடி வெண்பாவானும் ஆட்டின் கபடமின்மையை யுணரலாம்.

தொல்காப்பியர் காலத்து யாடு என வழங்கிய சொல் மரபு இறந்துபட்டு ஆடு என வழங்குகின்றது. யாட்டை ஆடு என வழங்குவது போலியாம். யாடு என்னும் வழக்குண்மையை 'யாடுங் குதிரையும் நவ்வியும் உழையும், ஓடும் புல்வாய் உளப்பட மறியே.' (௧௨) 'மூடுங் கடமையும் யாடு அலபெறா' (௬௫) 'மோத்தையும் தகரும் உதளும் அப்பரும், யாத்த என்ப யாட்டின் கண்ணே' (௪௮) என்னும் தொல்காப்பிய மரபியல் சூத்திரங்களால் அறிக. செச்சை-வெட்சி. "சிந்தூரமும் குல்லையும் செச்சையும் வெட்சி" பிங்கலம் மரப்பெயர் வகை (௪௨). செச்சை என்னும் முதற்பெயரின் பெயர் அதன் சினையாகிய மலரால் தொடுக்கப்பட்ட மாலையை உணர்த்திற்று: ஆகுபெயர்.

போல என்பது செயவென்னும் வாய்பாட்டு வினையெச்ச உவம உருபு. போர்ப்பித்திலதென்னும் எதிர்மறை வினைக்

கொண்டு முடிகின்றது. தான் என்னும் பொதுப்பெயர், வேற்று மைப் புணர்ச்சியில் வந்ததாகலின் தன் எனக் குறுகியது. சிறுவன் என்னும் படர்க்கைப் பெயர் குறித்து நின்றது அரசன் மேல் நின்றதெனினுமாம். ஓரன்ன - இதில் ஓர் அசைநிலை. அன்ன என்பது, குறிப்புப் பெயரெச்ச உவம உருபு. இளைஞர் என்ற பெயர் கொண்டு முடிந்தது. இதற்கு ஒரு தன்மையாகப் பொருந்திய என்று பொருளுரைத்தலுமாம். மீது என்னும் இடத்தைக் குறிக்கும் சொல், ஈண்டுக் காலமுன் இடமுன் ஆகிய வற்றைக் குறித்து நின்றது. நீட்டிய என்னும் வினைக்கு முதல் வன் அரசன். ஆதலின், அரசன் என்பதனை இசையெச்சமாக வருவித்துரைக்க. மண்டை என்பது ஒருவகை உண்கைப் பாத்தி ரம். 'வண்டுபடு நறவிற் றண்டா மண்டையொடு' (௨௩௫), 'கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரென' (௧0௩), 'ஊன்கொண்ட வெண்மண்டை' (௩அ௬), புறநானூறு.

அது தன்னிடத்திலுள்ள பொருளாகிய கள்ளின்மேல் நிற்றலால் ஆகுபெயர். எழுவாயாம். கால்கழி கட்டில்-காலில் லாத பாடையாம். இதற்கு வாசந்தி என்று பெயர். அறுவை: பிணத்தின்மேல் போடும் கோடியாடை. தொழிலாகு பெயர்; செயப்படுபொருள் போர்ப்பித்திலது - ஒன்றன்பால் எதிர் மறைப் பிறவினை முற்றுப் பயனிலை. உரையில் சிறைப்பட்டான் என்பது குறிப்பு. மண்டைக்குப் பாடையில் கிடப்பித்தலும் அறுவை போர்ப்பித்தலும் ஆகிய வினைநிகழ்ச்சிகள் உண்டாவ தில்லை. அவைகள் மண்டையிற் கள் அருந்திய சிறுவனது போர்த்தொழில் இறப்பான் நிகழ்தற்குரியனவாம் இறப்பால் நிகழ்தற்குரிய வினைகளை மண்டைப் பாத்திரத்தின் மேலேற்றிக் கூறியது இலக்கணையாம். 'பாயிருள் பருகிப் பகல்கான் றெழு தரும் பருதி' என்பதில் இருள் பருகுதலும், பகலைக் கக்குதலும் பரிதிக்கு இல்லை எனினும் அவற்றைப் பரிதியின்மேலேற்றிக் கூறினாற்போலக் கொள்க. 'வெள்ளை வெள்யாட்டுச் செச்சை போல' என்னும் உவமத்தில் வெள்யாடு சிறுவனுக்கும், செச்சை மண்டைக்கும் உவமையாம். ஆதலின், சிறுவன் கபடமற்ற வெள்ளையுள்ளத்தவன் என்றும், செச்சைபோல என்றதனால் பகைவர் செச்சைபோலக் கொல்லுதற் கேதுவாகிய வலியில்லா தவன் என்றும், உரையில் சிறைப்பட்டான் என்பதால் பகைவர் வஞ்சகமாகச் சிறை செய்தனர் என்றும் அறிவித்தபடியாம்.

'தன்னோரன்ன இளையரிருப்ப, பலர்மீது நீட்டிய மண்டை என் சிறுவனை வெள்ளை வெளயாட்டுச் செச்சைபோல கால்கழி கட்டிலிற் கிடைப்பித் தூவெள்ளறுவை போர்ப்பித்திலது' எனக் கூட்டிப் பொருள் காண்க.

வெள்யாட்டுச் செச்சை என்பதற்கு வெள்யாட்டுக் கிடாய் என்றும், வெள்யாடு ஒன்று சென்றவழியே ஏனைய யாவும் செல்வதுபோல வீரர்கள் அரசனை ஒருவரையொருவர் பின் தொடர்ந்து செல்லுவர் என்றும் உரைகூறுதலுமுண்டு. ஒன்றை யொன்று தொடர்ந்து செல்லும்பண்பு வெள்யாட்டிற்கில்லை. செம்மறியாட்டிற்கே உண்டு. வெள்யாடு பலமுகமாகப் பிரிந்து செல்வது கண்கூடு. ஒரு செம்மறியாடு சென்றவழியே ஏனைய செம்மறியாடும் ஒன்றையொன்று பின்தொடர்ந்து செல்லும். ஒருவன் ஒரு வேலையைத் தொடங்கின், அவனுடன் சேர்ந்த ஏனையோரும் ஒருமுகமாக அத் தொழிலில் இறங்குவதற்குச் 'செம்மறியாடு தலைகுனிந்தாற்போல' என உலகியல் வழக்கில் உவமை கூறுவது யாவருமறிந்ததே. ஆதலின், வீரர்கள் அரசனை ஒருவரை ஒருவர் பின்தொடர்ந்து செல்லுவர் என்பது இவ் வுவமைக்குப் பொருந்தாமை அறிக.

வெள்ளாட்டிற் கட்டப்பட்ட செச்சை மாலை, அதனுயிர் விடுத்தற் கேதுவானாற்போல, மண்டை, சிறுவன் உயிர்விடுத்தற் கேதுவாயிருக்க வேண்டும் அப்பொழுதுதான் உவமையும், பொருளும் பொருந்தியதாயிருக்கும். அங்ஙனமின்றி வெள்ளை வெள்யாட்டுச் செச்சைபோல என்ற உவமம் ஆடு இறத்தற்குக் காரணமாயிற்று என உடன்பாட்டிலும், மண்டை போர்ப்பித்தில தென்னும் உவமேயம் சிறுவன் இறவாமைக்குக் காரணமாயிற் றென எதிர்மறையிலும் வருகின்றதே; உடன்பாட்டுவமம் எதிர் மறைப் பொருளை யேற்குமாறு எங்ஙனம் எனக் கடாவுவாரும் உளராகலின் கூறுதும்.

> "கற்றோ ரருமைகற்றோ ரேயறியும் வந்திமகப்
> பெற்றோ ளருமை யறியாள்."

இதில் உவமையும், பொருளும் உடன்பாட்டிலும், எதிர்மறையி லும் வந்துள்ளன. "கற்றோரருமை கற்றோரேயறியும்' என் னும் உடன்பாட்டிற் கேற்ப, மகவைப் பெற்றாளருமை, மகவைப் பெற்றவளே அறிவாளென உடன்பாட்டுப் பொருள் வந்திருக்க வேண்டும் அங்ஙனமின்றி "கற்றோரருமை கற்றோரேயறி யும்" என்னும் உடன்பாட்டுவமைக்கு மாறாக "வந்திமகப் பெற் றோள் அருமை அறியாள்" என உவமேயம் எதிர்மறையில் உள்ளது இது ஏற்குமாறெங்ஙனம் என வினவின் "கற்றோ ரருமை கற்றோரேயறியும்" என்னும் உடன்பாட்டுவமைக்கு வந்தி(மலடி)........அறியாள் என்னும் எதிர்மறையால் தோன் றும் பெற்றவளே அறிவாள் என்னும் உடன்பாட்டையேற்று முடிந்தது எனக் கூறுதல் வேண்டும். இங்ஙனம் உடன்பாடும் எதிர் மறையுமாக உவமையும், பொருளும் வருவது முரண்டொ

ப் முழுதுவமையணியாம் என்பதைக் குவலயானந்தம் முதலிய அணியிலக்கணங்களை நோக்கிக் கண்டுகொள்ளலாம். அவ் வாறே இச்செய்யுளில்வரும் வெள்யாடு இறத்தற்குக் காரண மான செச்சைபோல என்னும் உடன்பாட்டுவமம் 'மண்டை ......போர்ப்பித்தில'தென்னும் எதிர்மறையாற் றோன்றும் இறத் தற்குக் காரணமாக மண்டை அறுவை போர்ப்பித்திருக்க வேண்டும் எனக் கூறுதல் வேண்டும். ஏ: ஈற்றசை.

"ஏயும் குறையும் இசைநிறை அசைநிலை
ஆயிரண் டாகும் இயற்கைத் தென்ப."

—தொல். சொல், இடை-உச.

செச்சைபோல என்பதற்கு ஆட்டுக்கிடாய்போல எனப் பொருள்கொண்டு அதனை இளையருக்கு உவமையாகக் கூறலு முண்டு. போலவென்பது செயவென் எச்ச உவமவுருபு. அது இளையர் என்னும் பெயர்ச்சொல்லைத் தழுவிநிற்பது யாங்ஙனம்? 'தன்றோரன்ன' என்பதிலுள்ள அன்ன என்பது குறிப்புப்பெய ரெச்சமாகலின், இளையரென்ற பெயரைத் தழுவிநின்றதுபோல வென்பது வினையெச்ச வுருபாகலின் 'போர்ப்பித்திலது' என்னும் வினைகொண்டு முடிதலே இயல்பாமென்க.

இச்செய்யுளில் வரும் இளையரெனும்சொல் போர்வீரர்க ளைக் குறித்தலும், போர்வீரர்களுக்கு மண்டையிற் கள் ளருகுதலை மண்டையெனும் சொல் அறிவித்தலும், 'கால்கழி கட்டிலிற்.......போர்ப்பித்திலது' எனும் தொடர், போரில் இறத் தலைக் குறித்தலுமாகிய இவைகள் வீரர்கள் எதிர்நின்று செய்யும் போரைக் குறித்தலான், இது தும்பைத் திணையாயிற்று.

'இளையரிருப்ப....பலர்மீது நீட்டிய மண்டை' என்ற தொடர் போர் வீரர் பலருக்கும் கள் நல்கும் அரசன், அவர்கள் எல்லோருக்கும் முன்பு சிறந்த வீரனாகிய இச்சிறுவனுக்குக் கள் நல்கினான் என்னும் பொருளை அறிவித்துநிற்றலினால், வீரர்கள் பலருள்ளும் சிறந்த வீரனுடைய தகுதியை அறியும் ஆற்றல் அரசனிடத்திருத்தலைப் புலப்படுத்தலின் இது வேத் தியலாயிற்று. வேந்து+இயல்—வேத்தியல். இயல்பாக அரசனுக் கிருக்க வேண்டிய வரிசையறியும் பெருமைக் குணம்,

"பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்."

என்பது திருக்குறள். சிறைப்பட்டானென்பது சிறுவனது வீரத்திற் கிழுக்கன்றோ வெனின் இழுக்கன்று. எங்ஙனமெனில் வீரத்தோடெதிர்த்து மாற்றார் முனையழுங்கப் போர் செய்த பெரு வீரனையே சிறைப்படுத்தினராகலி னென்க.

"புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோட் டக்க துடைத்து."

என்னும் குறளின்படி அரசன் செய்த சிறப்புக்குத் தன் மகன் போரில் அரசன் வருந்துமாறு இறத்தலே தக்கதாமென்று வீரத் தாய் கருதினளாமென்க.

இச் செய்யுளுக்குச் சாமிநாத அய்யர் பதிப்பில் திணை: கரந்தை, துறை: வேத்தியலென்றும், தொல்காப்பிய நச்சினார்க்கினியர் உரையில் திணை: வஞ்சி, துறை: பெருஞ்சோற்றுநிலை யென்றும், புறத்துறையில் திணை தும்பை, துறை: வேத்தியலென்றும் எழுதப்பட்டுள்ளன. இவ்வாறு மூன்றாசிரியர்கள் இச் செய்யுளுக்கு வெவ்வேறு விதமாகத் திணை, துறை கூறியுள்ளனராகலின், ஒருவர் கூறியது மற்றவர்க்கு உடன்பாடன்று என்பது நன்கு விளங்குகிறது. புறப்பொருள் வெண்பாமாலை, கரந்தைத் திணையில் வேத்தியல் மலிபென்னும் துறையுள்ளது. அது,

"தோள்வலிய வய வேந்தனை
வாள்வலி மறவர் சிறப்புரைத் தன்று."

என்பது. இதில் அரசன் சிறப்பினை வாள்வீரர் உரைப்பது வேத்தியல் மலிபு என்பதாம். 'மண்டையென் சிறுவனை அறுவை போர்ப்பித்திலது' எனறமையின் இச் செய்யுள் தாய்கூற்றென்பது புலனும். 'வேத்தியல் மலிபு' என்பது வீரர் கூற்றாக அன்றோ வரவேண்டும்? தாய் கூற்றாக வருதலின் இஃது வேத்தியல் மலி பாகாமை புலனும்.

பகைவர் கவர்ந்த பசு நிரையை மீட்டல் கரந்தையாம். பசு நிரையை மீட்கப் போகும்பொழுதும், மீட்டுவந்த பின்பும், அரசன் வீரரது வரிசை யறிந்து கள் நல்குதல் இயல்பே. கரந்தை சூடிப் பசுநிரை மீட்கச் சென்ற வீரன் போர்செய்தானயின் அது தும்பைத் திணையாம். ஆதலின் ஐயரவர்கள் பதிப்பிற் கூறிய கரந்தைத் திணையென்பதும், வேத்தியல் என்பதும் ஆராய்தற்குரியதாம் நச்சினார்க்கினியரும் இது பற்றிக் கருத்து வேறுபாடுடையவரேயாவர். ஆதலினலன்றே இச் செய்யுளைத் தொல்காப்பியப் புறத்திணை உரையில் வஞ்சித்திணையின் பகுதியாகிய "பிண்டமேய பெருஞ்சோற்று நிலை"க்கு உதாரணங் காட்டினர். பகைவர் மேற்செல்லுதல் வஞ்சியாமாகலினலும், பகைவர்மேற் செல்லும் பொழுது அரசன் வீரர்களுக்குக் கள் நல்கல் இயலுமாதலினலும் ஆசிரியர் நச்சினார்க்கினியர் வஞ்சித்திணையில் பெருஞ்சோற்று நிலைக்கு உதாரணமாகக் காட்டினர் போலும்.

"திருந்தார் தெம்முனை தெறுகுவ ரிவரெனப்
பெருஞ்சோ றுடவர் பெறுமுறை வகுத்தன்று."

என்பது பெருஞ்சோற்று நிலையின் இலக்கணம். (புறப்பொருள் வெண்பா மாலை; வஞ்சி—௱௮.) இப் புறநானூற்றுச் செய்யுள் சோறளித்த செய்தி கூறவில்லை. கள் நல்கிய செய்தியே கூறு கின்றது. ஆதலின் புறத்துறை ஆசிரியர்க்கு வஞ்சித் திணையில் பெருஞ்சோற்று நிலையென்பது கருத்தன்றென்பது தெளிவாம். தும்பை சூடிப் பொருதலே தும்பைத் திணையாம். போர் நிக ழும் பொழுது வீரர்கள் பலரினும் இவ்வீரன் பெருவீரத்துடன் பகைவருடன் போர் செய்தானாகலின் அரசன் இவனது மாட் சிமை உணர்ந்து வீரர்கள் பலரிருக்கவும், சிறப்புற இவனுக்கு மண்டையில் கள் நல்கினனென்க. வீரத்தை யறிந்து கள் நல்கிய அரசனுக்குத் தன் மகன் இறவாது சிறைப்பட்டது குறையா மென்பது தாய் கருத்தென்க.

## தமிழறிஞர், ச. முனிசாமிபிள்ளை அவர்கள் மறைவு

தென் ஆபிரிக்கா நெட்டால் நாட்டைச் சேர்ந்த டர்பன்நகரத் தில் வாழ்ந்திருந்த திரு. ச. முனிசாமி பிள்ளையவர்கள் மறைந்த செய்தியைக் கேட்டுப் பெரிதும் வருந்துகிறோம். தமிழறிஞராகிய பிள்ளையவர்கள், இலங்கையில் 1903-ல் பிறந்தார். திரு. சங்கரன் பிள்ளை அவர்கள் இவர் தந்தையார். விவேகபானு பத்திராசிரியர் திரு. சி. வி. பிள்ளை அவர்களிடம் தமிழ் பயின்றார்.

டர்பன் நகரத்திலே வாழ்ந்துவரும் தமிழர்களுக்காகச் செந் தமிழ்ச்செல்வன், பிரசமலர், தமிழ்மணி என்னும் இதழ்களின் ஆசிரியராக இருந்தார். அந்நகரத்தில் உள்ள இந்து தமிழ்ப்பாட சாலையின் அதிபராகவும் இருந்தார். தேசிய கவி சுப்பிரமணிய பாரதியாரைப் பாராட்டி விழாக்கள் கொண்டாடி, டர்பன் தமிழருக் குப் பாரதியாரை அறிமுகப்படுத்தி வைத்தார். பர்மா, மலாயா, இந்தியா, இலங்கை முதலிய நாடுகளில் உள்ள தமிழ் இதழ்களில் கட்டுரைகளை எழுதிவந்தார்.

திருமண மந்திரம், சரஸ்வதி, உலகெலாம், பாலர் பாடல், வில்விதுரன் கொல், பகைவரும் நண்பரும் முதலிய நூல்களை எழுதினார். ஷேக்ஸ்பியர், டால்ஸ்டாய், தாகூர் முதலிய பேராசிரி யர்களின் நூல்கள் சிலவற்றை மொழிபெயர்த்தார்.

தமிழறிஞர் முனிசாமி பிள்ளையவர்கள், தமது 53-ஆவது அகவையில், 1956-ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 10-ஆம் நாள் டர்பன் நகரில் காலமானார். அவர் ஆன்மா அமைதியுறுக.

—மயிலை சீனி. வேங்கடசாமி.

# நாணம்

[வித்துவான். திரு. வே. சிவசுப்பிரமணியன்]

நற்குடிப் பிறந்தாள் ஒரு நங்கை அமிழ்தினைச் சுவை செய்தாலனைய பேரழகுடையாள். பெண்டிர்க்குரிய நற்குணங்களுடையாள். தாய் குலம் தந்தை குலம் ஆகிய இருவகைக் குலத்தாலும் சீரிய தன்மையுடையாள். உள்ளத்தை ஒருபாலும் ஓடவிடாது காக்கும் நிறையும் பொறையும் உடையாள். அனைய நற்குல நங்கையைச் சோலையகத்தே இளவேனிற் பொழுதிலே கண்டான் ஒரு தலைவன். ஊழ்வினை உந்தியது; இருவரும் ஒருவராயினர். களவொழுக்கம் பன்னாள் நிகழ்ந்தது.

ஒருநாள் சந்தித்தான் தலைவன் தலைவியை. எங்கே? கடற்கரை ஓரத்திலே. எப்போதும் குறிஞ்சியிலே மலையிடத்தில் தான் சந்திப்பு நிகழும். அப்போது கடற்கரையிலே நிகழ்ந்தது. அதுவும் எந்த இடம்? திருச்செந்தூரிலே. அலைவாயில் உள்ள தல்லவா திருச்செந்தூர்; நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறையும் கூட அது. அதோடு இளமுருகும் இயற்கைக் காட்சியும் ஒன்றி இயைந்த இடம் அவ்விடம் அத்தகைய இடத்திலேதான் அன்று நம் காதலர்கள் சந்தித்தார்கள். பல பல பேசினார்கள். பிரிந்து செல்லும் நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. அவன் அவளை உற்று நோக்கிக்கொண்டிருந்தான். அவளது கூந்தலைக் கையால் தடவிக் கொடுத்தான். உடனே அவள் அழ ஆரம்பித்தாள். ஏன் அழுகிறாய் என்றான். காரணம் இல்லை மேலும் அதிகமாயிற்று. அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. 'நாம் நல்லதே செய்தோம். என்ன தீங்கு செய்தோம் என்று தெரியவில்லையே. ஏன் பின்னர் அழுகிறாள்' என்று சிந்தித்தான். அவள் அறிந்துகொண்டாள். சிறிது அழுகை ஓய்ந்தது. பேச ஆரம்பித்தாள். "தாங்கள் இவ்வளவு நாள் வந்து கூடிச்செல்லும் பொழுதெல்லாம் கூட இப்படி நடந்துகொண்டதில்லை. இப்பொழுது நெடுநேரம் உற்று நோக்கினீர்கள் கூந்தலையுந் தடவிக் கொடுத்தீர்கள். இது நீண்ட பிரிவுக்கு ஆயத்தம் போலும்!" என்று கூறினாள்.

அவன் உடனே "நீ வருந்த உன்னைவிட்டுப் பிரியமாட்டேன்," என்றான். அவள் சிறிது தயங்கினாள். 'நாம் சொல்லியதில் இவளுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை போல் இருக்கின்றது. அதனால்தான் தயங்குகிறாள்' என்று எண்ணினான். உடனே அவன் சொன்னான்: "இந்தச் சீரலைவாயில் உறைகின்ற முருகன்

சான்றாக யான் உன்னைவிட்டுப் பிரிந்து செல்லமாட்டேன்'' என்று உறுதிசெய்தான். அவள் முகத்தில் மகிழ்ச்சி நகை அரும்பியது. காலச் சுழலில் எங்கோ ஒரு கிறலாக அந்த நாட்கள் சென்று மறைந்தன. பின்னர்க் காதலன் காதலிகளாகக் கட்டுரை முகப்பிலே சந்தித்த அவர்கள் கணவன் மனைவிகளாயினர். நல்ல இல்லறம் என்று இருபக்கத்துத் தாய் தந்தையர்களும் இவர்களது மனையறம் காண உவந்தனர்.

ஒருநாள் அவளை வளர்த்த தாய் அவளது இல்லறத்தைப் பார்க்க வந்திருந்தாள். அழகாக நடந்து கொண்டிருந்த இல்லறமாட்சி வளர்ப்புத் தாய்க்கு மிக்க மகிழ்ச்சி தந்தது. அவளைப் பெற்ற தாயிடத்தே வளர்ப்புத்தாய் சொல்லுகிறாள்: "உன் மகள் நடத்தும் இல்லறத்தைப் பார்ப்பதற்கு நீ செல்லவில்லையா? உன் மகளிடத்தில் மருமகன் எவ்வளவு அன்புவைத்திருக்கிறான். இப்படியும் உலகத்தில் நல்ல கணவன் இருப்பதைப் பார்ப்பதற்கு வியப்பாக உள்ளது. ஓர் ஆடவனுக்கு மணந்த மனைவி, இரண்டாம் மனைவி, காமக்கிழத்தி, காதற்பரத்தை, சேரிப்பரத்தை என்று பல பெண்கள் இருக்கின்ற இந்தக் காலத்திலும் உன் மருமகன் அந்த வழிகளில் தவறாகச் செல்லாமல் இருக்கின்றான் என்றால் காரணம் உன் மகள் தன் அன்பால் அவனைக் கட்டி வைத்ததே ஆகும். அவன் அரச காரியங்களாக அடிக்கடி வெளியே செல்லுகின்றான். அப்படிச் செல்லுகின்ற காலத்தும் கூட அவன் வெளியே இராத்தங்குவதில்லை; இரவிலே வீட்டிலே தான் இருப்பான்; எத்தகைய அன்பு!'' என்று வியந்தாள். கேட்ட தாய்க்குப் பெருமகிழ்ச்சி.

ஆனால் வளர்ப்புத்தாயின் போற்றுதலுக்கு உரியவனாகத் தலைவன் நெடுநாள் வாழவில்லை. நல்ல இல்லறம் சிலநாள் நடந்தது. சிறிது சிறிதாகத் தலைவன் வெளியிலே தங்க ஆரம்பித்தான். முதலில் ஏதோ காரியம் இருக்கும்; தங்கி இருப்பார் என்று அவள் நினைத்தாள். நாளாக நாளாகத் தலைவன் வெளியிலே தங்குவது இயல்பாகிவிட்டது. இறுதியில் தலைவன் தலைவியின் இல்லத்துக்குப் பன்னாள் வாராமலே இருந்து விட்டான். தலைவன் விலைமகளிர் இல்லம் சென்ற செய்தியைத் தலைவி முதலில் அறிந்தபோது அவளுக்கு அஃது உயிர்போக்கும் துன்பமாக இருந்தது. நாளடைவில் அதுவும் இல்லறச் செய்திகளில் ஒன்றாகி விட்டது. வருவான் என்று பன்னாள் வாயிலில் உள்ள முருங்கை மரத்தை வளைத்துப் பிடித்து இரவு நெடுநேரம்வரை கண்விழித்துப் பார்த்தாள். வரவில்லை. அழுது அழுது பொழுது கழிந்தது. ஆனால் இறுதியில் ஒருநாள் பிறர் கூறக்கேட்ட செய்தி தான் அவளுக்கும் பெரிய துன்பத்தைக் கொடுத்தது.

தலைவன் விலைமகளிரோடு கூடி வெள்ளத்திலே ஓடத்திலேறி விளையாடினான் என்ற செய்தி. இச் செய்தியைச் சிலர் வந்து சொல்லக் கேட்ட சிறிது நேரத்திற்கெல்லாம் அவனும் வந்து சேர்ந்தான். பழக்கமான இடந்தான். ஆனாலும் அவனுக்கு இப்போதெல்லாம் விலைமகளிர் இல்லம்தான் பழக்கமானதாகி விட்டிருந்தது. தலைவியைக் காணவும் நாணினான். உள்ளே இருந்த தலைவியைக் கண்டு தலை குனிந்தான். தலைகுனிந்தானைக் கண்டாள் தலைவி. அவள் உள்ளிருந்த பெண்மை பேச ஆரம்பித்தது. ஆனால் அவளது மனமோ அவன் சார்பிலே பேச ஆரம்பித்தது. அவள் பெண்மை கூறியது 'நாணமில்லையே' என்று; அவனுக்காக மனம் 'நாணத்தான் செய்கின்றது' என்றது. நாணம் இதுவல்ல, திருக்குறள் படித்தால் தெரியும் என்றது 'பெண்மை'. உண்மையில் ஆராய்ந்தால் பெண்களுக்கல்லவா நாணம் உரியது. தொல்காப்பியத்தில் கூட அச்சமும் நாணமும் பெண்களுக்குரியதுதான் என்று கூறப்பட்டுள்ளது. ஆண்களுக்கு "நாணம் இல்லாது இருப்பதே அழகுதான்" என்றது மனம். வள்ளுவர் நாணுடைமையைப் பெண்களுக்கு மட்டுமா கூறினார்? எங்கே யாருக்கு வைத்தார்? என்றது பெண்மை. மேலும் கூறினாள் தலைவி: "நாணுடைமை வேண்டும் என்றார் வள்ளுவர் பொதுவாக எல்லோருக்குமே. நாண் என்றால் எது? பழிபாவங்களில் உள்ளம் செல்லாது நிறுத்தலன்றோ? கொண்ட மனைவியை விட்டு விலைமகளோடு போங்கால் அல்லவா இந்த நாணம் இருந்திருக்க வேண்டும். "நாணிழந்து ஆடினை"—என்று என்னிடத்தில் பிறர் வந்து சொன்னார்கள். அதுவும் கூட அதைப் பிறர் வந்து கூறியது என்னை வருந்தச் செய்தது. அவர்களோடு கூடி விளையாடினாய் என்று பிறர் கூறியதைக் கேட்குங் காலத்து, உன்மேல் நிகழும் தவற்றுரைக்கும் யானே காரணமோ என்று வருந்தினேன். அங்கே அவர்களோடு விளையாடிய போது நாணியிருந்திருக்க வேண்டும். அதுவன்றோ பழி, அங்கன்றோ உள்ளமோடாது ஒடுங்கி இருந்திருக்கவேண்டும்."

உள்ளத்திலே அவள் சொன்ன வார்த்தைகள் அவனுக்குச் சென்று தைத்தன. தன் தவற்றையும் அவளது பெருந்தன்மையையும் கருதினான். இவளுக்குத் தவறு செய்தோமே என்ற துயரமும், இத்தகைய சிறந்த அறிவு வாய்ந்த மனைவியைப் பெற்றோமே என்றதொரு மகிழ்ச்சியும் ஆகிய இரு நிலைகளும் அவனைக் கலக்க அவளைக் காணும் வேட்கையில் சிறிதே தலை நிமிர்ந்தான்.

அவன் தலைநிமிர்ந்தது கண்டாள்; அவள் மேலும் கூறுகிறாள். "என்னிடத்தில் நின்னைப்பற்றிக் கூறியவர்கள் நீ பரத்தை

யோடு புனலாடினுய் என்று மட்டும் கூறி நிறுத்திக்கொள்ள வில்லை. மேலும் சில கூறினர்கள். அச் சொற்கள்தான் என்னை மேலும் துன்புறுத்தின. அவைகள் தான் என்ன வார்த்தைகள்! இப்பொழுது நினைத்துப் பார்ப்பதற்கும் மிகக் கொடுமையாக இருக்கின்றன.

பெரு வெள்ளம்; புதுப்புனல்; அதிலே தலைப்புணைத் தழுவி அந்த விலைமகளிரை நோக்கிய நோக்கை மீட்காமல் ஆடினுய் என்றார்கள். சிறிது தவறி இருந்தால் என்வாழ்வு என்னுகும்? தவறி வெள்ளத்தில் புணை கவிழின், தவறிக் கழியில் அகப்பட்டு ஏதமுறின் அதுபற்றி அவர்களுக் கென்ன கவலை? மறுநாளும் மற்ருெருவனேடு கூடி மகிழ்ச்சியோடு காலத்தைக் கழிப்பார்கள். இல்லாவிடில் ஆபத்தைக் கையசைத்து அழைப்பவன் போல விளையாடிய உனக்கு எச்சரிக்கை செய்திருக்க மாட்டார்களா? குலமகளிர்களாகிய எம் போன்றார்க்கன்றே கணவனின் உயிர் வாழ்வு பற்றிக் கவலை. இதைக் கூடச் சற்றும் நீ உணரவில்லையே! பரத்தையர்களோடு கூடி என்னைப்பற்றிய நினைவே இல்லாமல் இருந்தாயன்றே?'' என்று பாவனையாகப் பேசிச் சற்றே நிறுத் தினள்.

“அதற்கென்ன இப்போதுதான் வந்துவிட்டேனே!'' என் ருன் அவன். இப்பொழுது மாத்திரம் என்ன, நீயாக வந்துவிட் டாயா? ஊரில் உள்ளவர்கள் உன்னைப்பற்றி எழுப்பிய பழி மொழிகளைக் கேட்டு வந்தாய்? இத்தகைய பழிமொழிகள்-ஊரில் உள்ளார் உன்னைப்பற்றி இழித்துப் பேசிய பேச்சுக்களைக் கேட்டும் அப் பரத்தையர் உன்னை இறுக்கி வைத்துக் கொண் டார்கள் அல்லவா? குலமகளிராயின் பொறுத்திருப்பரோ தம் கணவரைப் பிறர்குறை கூற;

“தற்காத்துத் தற்கொண்டான்பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.”

என்றாரன்றே வள்ளுவர்? இருவர் மாட்டும் நிகழும் சொல்லைக் காத்தல் குலமகட்குரிய இலக்கண மல்லவா? அவர்கள் பேசியது கேட்டு எம்முள்ளம் வருந்தத்தான் செய்தது; ஆனுலும், நாங்கள் அதற்குக்கூட வருந்தவில்லை என்றாள் அவள். “பின்னென்ன நீங்களும் என்னை மறந்து மகிழ்ச்சியோடு இருந்தீர்கள் போலும்” என்றான் அவன். “அப்படி அல்ல. நெடுங்காலத்துக்கு முன் ஒரு சமயம் என்னைப் பிரியவேண்டி வந்ததல்லவா? அப்போது திருச் செந்தூர் முருகனைச் சான்ருக வைத்துப் பிரியேன் என்று உறுதி மொழிந்தாயன்றே? அது பற்றியே எங்கள் உள்ளம் வருந்தியது'' என்றாள் அவள். “அதுபற்றி வருந்துவதற்கு என்ன இருக்கின்றது, என்றான் அவன். “மேல் நோக்காகப் பார்க்கும்

போது உன்னுடைய பரத்தையர்களைப்போல இருந்தால் வருத்தம் வாராதுதான்."

"ஆனால் எமக்கு அப்படி அல்ல; முருகனோடு சான்று கூட்டிப்பிரியேன் என்று உறுதி மொழிந்து கொடுத்த தலைவர் இப்பொழுது பிரிந்து போய்விட்டாரே?—இப்பொழுது முருகன் சத்தியத்துக்கு மாறுபட்டமையால் அவர்க்கு ஏதேனும் தீங்கு செய்து விடுவானோ என்பதை நினைத்துத்தான் உள்ளம் அஞ்சியது" என்றாள் அவள்.

இப்போது தலைவியின் உயர்குணமும் அவள வாழவு தன் வாழ்வோடு பின்னிப் பிணைந்திருக்கும் நிலைமையையும் தலைவன் மேலும் நன்றாக உணர்ந்தான். இனி, இத்தகைய தவறு செய்வதில்லை என்றும் தனது உள்ளத்திலே உறுதி கொண்டான்.

இருவரும் காதலால் ஒருமித்து, செவிலி கண்ட கற்புடை இல்லற மக்களாயினர். இனி இதனினும் அவர்கட்குச் சிறந்த பேறு யாது?

## எலுமிச்சை மரம்

[திரு. மெ. வெ. வேலப்ப செட்டியார், பலவான்குடி]

புளியமரம் போனால்என் பொன்விலையே
ஆனால்என் புவியில் நன்கு
ஒளியாரும் எலுமிச்சை உயர்மரம்உண்
டதன்பழத்தை உண்டு நாளும்
தெளிவாகச் சுவையளவு தெரிந்துமிகச்
சமையல் தனில் சேர்த்து வந்தால்
களியாரும் உலகத்தீர்! நலமுண்டாந்
தேசுண்டாம் கழறி னேனே. (௧)

பழியோங்கு புளிபோனால் சனிபோச்சு
இதுகுறித்துப் பதற வேண்டாம்
எழிலோங்கு எலுமிச்சை புளிக்குமுன்பு
நம்நாட்டில் இயைந்த தாகும்
அழியாத இப்பழமே கடவுளரின்
அத்தத்தும் அமர்த லோடு
ஒழியாத புகழ்படைத்து நூல்களினும்
ஓங்குவதை உணரு வீரே. (௨)

**Statement about ownership and other particulars about the journal—Senthamil Selvi - as required by rule 8 of the Registration of News - papers (Central) Rules, 1956.**

FORM IV

| | | |
|---|---|---|
| 1. | Place of publication | 1/140, Broadway, Madras-1. |
| 2. | Periodicity of its publications | Monthly |
| 3. | Printer's name | Appar Achakam |
| | Nationality | |
| | Address | 2/140, Broadway, Madras-1. |
| 4. | Publisher's Name | The South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Ltd., |
| | Nationality | |
| | Address | 1/140, Broadway, Madras-1. |
| 5. | Editor's Name | Sri. V. Subbiah Pillai. |
| | Nationality | Indian. |
| | Address | 1/140, Broadway, Madras-1. |

6. Names and addresses of individuals who own the news paper and partners or shareholders holding more than one percent of the total capital.

1. Sri. P. Muthukaruppa Pillai,
**Thamaraikulam,**
(Kanyakumari Dist.)

2 Sri. T. S. Ramalingam Pillai,
M. A., B. L. Sub Judge,
**Trichirapalli**

3. Sri. T. Vairamuthu,
„ T. Thirunavukarasu
(Minors)
Guardian ·
Sri. V. Subbiah Pillai,
6, Coral Merchant Street,
**Madras-1.**

4. Sri. V. Subbiah Pillai,
6, Coral Merchant Street,
**Madras-1.**

5. Srimathi. S. Mangayarkarasi Ammal,
6, Coral Merchant Street,
**Madras-1.**

6. Sri. R. M S. Gopalakrishna Pillai, Land Lord,
**Sathankulam,**
(Tirunelveli Dist.)

7. Sri. M. K. Sivagaminatha Pillai, Fourth Floor, Forche Buildings, Princess Street, **Bombay-2.**

8. Sri. N. S. Sundaram, Bar-at-Law. North Car Street, **Tuticorin,** (Tirunelveli Dist.)

9. Sri. M. Kasiviswanathan Chettiar, Banker, **Paganeri.**

10. Srimathi. K. Lakshmi Achi, w/o Sri. M. Kasiviswanathan Chettiar, **Paganeri,** (Ramnad Dist.)

11. Sri. PR.AL.MN. Narayanan Chettiar, Land Lord, **Paganeri.** (Ramnad Dist.)

12. Sri. K.V. AL. RM. Ramanathan Chettiar, Correspondent and Trustee, Dr. Alagappa Chettiar Endowments Trust, **Karaikkudi,** (Ramnad District.)

13. Sri. RM.K.RM. Ramaswamy Chettiar, **Thittai,** (Tanjore Dist.)

14. Messers. V. D. Nagappa Chettiar and N. Meenakshi Chettiar, **Valampuri,** (Trichy Dist.)

15. Sri. S. CP. Chidambaram Chettiar, **Valampuri,** (Trichy Dist.)

16. Srimathi Valliammai Achi, W/o Sri Kannappa Chettiar, **Nattarasankottai,** (Ramnad Dist.)

17. Sri. T. S. Viswanatha Pillai, 18, Gopalakrishna Road, T.Nagar, **Madras-17.**

18. Sri. C. M. Ramachandran Chettiar, B.A.,B.L. Advocate, Ramanathapuram, **Coimbatore.**

19. Sri. P. S. Jambulingam Chettiar, Tirupur House, **Coimbatore.**

20. Messrs. M. N. Shunmuga sundaram Pillai & Brothers, 215, Nayakkar New Street, **Madurai.**

I, V. Subbiah Pillai, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

4—3—'57.

**V. SUBBIAH PILLAI,**
*Signature of Publisher.*

27-2-1957-ல் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் திருவாளர், ரா. பி. சேதுப்பிள்ளையவர்களுக்கு அப் பல்கலைக் கழகத்தார் நூற்றாண்டு விழாவின்போது அளித்த டாக்டர் பட்டத்தைப் பாராட்டி நிகழ்த்திய பாராட்டுக் கூட்டம். இக் கூட்டம் தியாகராய நகரில் 'தியாகராய நகர் உயர்நிலைப் பள்ளியில்' சைவ வேளாளர் பேரவைச் சார்பில் நிகழ்ந்தது. பள்ளிக்கூடம் பூமாலைகளாலும் தோரணங்களாலும் கண்கவர் வனப்பினதாக ஒப்பனை செய்யப் பட்டிருந்தது. கூட்டத்துத் தலைவர் சென்னை உயர் முறைமன்ற நடுவர், திருவாளர் சோமசுந்தரம்பிள்ளையவர்களாவர். பகல் பதினொரு மணிக்குக் கூட்டத் தலைவர் பாராட்டுத் தலைவர் ஆகிய இருவர்களையும் அனைவர்களும் திரளாகக் கூடிச் சிறப்பாக வரவேற்றனர்.

கடவுள் வாழ்த்தின்பின், பள்ளிமாணவர் இருபாலரும் கூடிய படையணி வகுப்பு நடந்தது. உடையும் நடையும் முறையும் படையே என்று மருண்டு வியக்குமாறு சிறந்திருந்தன. ஆடலும் பாடலும் நிகழ்ந்தன. ஓற்றை நாடகமாகக் குறவஞ்சி நாடகம் ஒன்று நடத்தப்பட்டது. பின்னர்க் கூட்டம் தொடங்கப்பட்டது. அப் பள்ளிக்கூடத் தலைவர் திரு தி ச. பழனியப்ப பிள்ளையவர்கள் தலைவர் இருவர்களையும் மாலைசூட்டி வரவேற்று அறிமுகம் செய்து வைத்தார்கள். தலைவரவர்கள் அணிபெறு முன்னுரையொன்று மணியென மொழிந்தனர். பள்ளிக்கூடச் சார்பில் பாராட்டுத் தலைவரவர்கட்கு இரண்டு பாராட்டு மடல்கள் சிறந்த முறையில் படித்தளிக்கப்பட்டன. பேரவைச் சார்பில் செயலாளர் திரு. அக்கினீசுவரம் பிள்ளையவர்கள் ஒரு பாராட்டு மடல் படித்தளித்தார்கள். பாராட்டுத் தலைவரவர்களை நனிமிகப் பாராட்டி நால்வர் பேசினர். அவர்கள் முறையே திருவாளர் சோமு அவர்கள், அ. ச. ஞானசம்பந்தனவர்கள், ப. இராமநாத பிள்ளையவர்கள், புத்தனேரி சுப்பிரமணியனவர்கள்.

தலைவர் முன் பேசிய இருவர் ஆகிய மூவர்களும் பாராட்டுத் தலைவரவர்களின் பழைய மாணவராவர். பாராட்டுத் தலைவர் நன்மொழி கூறுமுகத்தான் மூவர், தம் மாணாக்கர்களாக வாய்ந்து ஓரிடத்து ஒருங்குகூடிப் பாராட்டப்பெறும் பேறுபெற்றமைக்கு மிகவும் பெருமிதம் கொள்கின்றேன் என்றனர். என்னைப் பாராட்டியது நம் குலத்தையே பாராட்டியதாகும். நம் குலம் தொன்றுதொட்டுக் கடவுள் வழிபாடும், பல்லுயிர்க்கும் பயன்கருதாது செய்து போதரும் நல்லுதவியும், வேந்தரால் மதிக்கும் வீறும், ஆந்துணையும் ஆட்சிப் பொறுப்பேற்று நடத்தும் சால்பும் பிற நலங்களும் வாய்ந்த விழுத் திணைக்குலம். அவ்வுண்மை இன்றும் குலப்பெயர்களை ஆயுங்கால் நன்கு விளங்கும். கொங்குராயர், கலிங்கராயர் போனறன எடுத்துக் காட்டாகும். அவை கொங்கநாட்டையும், கலிங்கத்தையும் ஆட்சிப் பொறுப்பாளராய் இறையும் திறையும் முறையுற வாங்கி உய்த்தமையான் வந்த பெயர்களாகும் எனவும் மொழிந்தனர்.

தலைவர் அழகாக முடிவுரை கூறினர். சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் அனைவர்களுக்கும் நல்ல முறையாக நன்றி கூறினார்கள். பல்வகை யுணவும் பாற்கூழும் பிறவும் சேர்ந்துள்ள நல்விருந்தொன்று சொல் விருந்தின்பின் நனிமிகச் சிறப்பாக நடந்தது.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) நாடகப் பேராசிரியர் திரு. ப. சம்பந்த முதலியாருக்குப் பாராட்டு

சென்னை நகரவைச்சார்பில் 1—2—57-இல் சென்னை விளையாட்டரங்கத்தில் (ஸ்டேடிய மைதானம்) நாடகப் பேராசிரியர் பம்மல் திரு. சம்பந்த முதலியாருக்கு நகரவைத்தலைவர் திரு. சீனிவாசன் அவர்களால் அவர் நாடகக் கலைக்குச்செய்த அரிய தொண்டினைப் பாராட்டிப் பாராட்டிதழ் வாசித்தளிக்கப்பட்டது. அதுகாலைத் தென்னிந்திய நடிகர் சங்கச் சார்பிலும் பாராட்டிதழ் வாசித்தளிக்கப்பட்டது. இப் பாராட்டுகளுக்குப் பேராசிரியர் நன்றிகூறுங்கால் சென்னை ராசசிய மென்பதற்குத் 'தமிழ்நாடு' என்று பெயரிட்டால்தான் தம் ஆன்மா அமைதி பெறுமென்று கூறினார். சென்னை நகரில் குறைந்த குடிக்கூலிக்கு மிக வசதியுள்ள நாடக அரங்கம் ஒன்றை நகரவை அமைத்துக்கொடுத்து நாடகக் கலையை வளம்பெற வளர்க்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். ஷையாருக்கு 24—2—57-இல் சென்னை சங்கீத நாடக சங்கத்தின் ஆதரவில் சென்னை ஆளுநர் ஏ. கே. சான் அவர்கள் தலைமையில் நிகழ்ந்தது. பல பேரறிஞர் பேசினர்.

**குறிப்பு** திரு. சம்பந்த முதலியாரவர்கள் தம் தள்ளா அகவையிலும் நாடகககலைக்குச் செய்துவரும் தொண்டினைப் பெரிதும் பாராட்டுகின்றோம். அவர்கள் உடலுரத்துடன் வாழ்ந்து இன்னும் தமிழ்நாடக கலைக்கு வேண்டும் பணி பல புரிந்து நாட்டுக்கு நலஞ்செய்து தொண்டாற்றுந் துறையில் மேலோங்க இறையருளை வேண்டி வாழ்த்துகின்றோம்.

## (உ) சென்னை சட்ட ஆராய்ச்சிக்கழக வெள்ளிவிழாக் கொண்டாட்டம்

ஷை கழகத்தின் இருபத்தைந்தாம் ஆண்டுநிறைவு வெள்ளிவிழா நடந்த 20—2—57-ஆம் நாள் பிற்பகல் தலைமை நடுவர் திரு. பி. வீ. இராசமன்னார் தலைமையின்கீழ் நிகழ்ந்தது. ஷை விழாவைச சென்னை ஆளுநர் திரு. ஏ. கே. சான் துவக்கிவைத்தார். அதுகாலைச் சென்னை உயர்நீதிமன்ற ஓய்வுபெற்ற நடுவர் டப்ளியூ. எஸ். கிருசஷ்ணசாமி நாயுடு வெள்ளிவிழாச் சொற்பொழிவாற்றினார். அதுகாலை அவர் பேசியதன் சாரம் :

'தமிழ்மொழி; சென்னை இராச்சியத்தின் ஆட்சிமொழியாகிக்கொண்டிருக்கிறது. ஆகவே நீதிமன்றங்களில் ஆங்கிலத்தை நீடிக்கசசெய்வது அறிவுடைமையல்ல. வழக்கறிஞர்களும் நீதி இலாகாவும் இம் மாறுதலுக்கு ஆயத்தமாக இருப்பது கட்டாயம். எல்லா முறை மன்றஙகளிலும் தீர்ப்புகள் உட்பட எல்லா நடவடிக்கைகளும் தமிழிலேயே நடத்துவதற்கு நாம் ஆயத்தமாக இருக்கவேண்டும். ஆனால் தலைமை நீதி மன்றம் அல்லது மீயுயர் முறைமன்றத்தின் மொழி எதுவாக இருக்க வேண்டுமென்பதில்தான் வருத்தம் ஏற்படும். இங்கு ஆஙகிலம் நீடிக்கலாமெனச சிலா கருத்துரைக்கின்றனர். ஆனால் ஒரு தேசீய அரசாங்கம் இக்கருத்தை ஏறறுக்கொள்ளுமென நான் எதிர்பார்க்கவில்லை. நாம் வேற்றுமொழியில் நம் அலுவல்களை நடத்திவருவது நமது தன்மானத்

தக்கு உகந்ததாக இராது. ஆகவே ஆங்கிலத்துக்குப் பதில் இந்தி வரவேண்டும். ஆனால் இந்த மாறுதல் எப்படி? எப்பொழுது, எந்த முறையில் வழக்குக்கு வரவேண்டுமென்பதுதான் கேள்வி.........அதை வழக்கத்துக்குக் கொண்டுவர முடிவாகத் திட்டம் வகுக்கவேண்டும். சும்மா காலத்தை நீடித்துக்கொண்டேபோவதில் பயனில்லை நம் சட்டங்களும் ஏனைய சட்டங்களும் தமிழிலும் இந்தியிலும் மொழி பெயர்க்க விரைவில் ஏற்பாடுகள் செய்யவேண்டும்' என்றார்.

**குறிப்பு**: திரு. கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் ஆட்சிமொழி பற்றித் தாம் முறைமன்ற நடுவர் என்பதை நடுநிலையோடு விளக்கிக் கூறிய நல்லுரைகள் போற்றத்தக்கதாகும்.

**(உ) கார்வார். பு. சுப்பையா பிள்ளை அவர்கட்குப் பாராட்டு**

கடந்த 7—1—57 திங்கட்கிழமை இரவு 8 மணிக்கு (ஆழ்வார் திருநகரி) காந்தீசுவரம் ஏகாந்தலிங்க சுவாமி கோவில் முன்மண்டபத்தில் அமைத்திருக்கும் விழாப்பந்தலில் திருமந்திரநகர் வாசியும், கந்தாலீலை ஆசிரியரும், முருகன் திருவருள் பெற்றவருமான, சமயச் சொற்பொழிவு ஆற்றிவரும் உயர்திரு கார்வார். பு சுப்பையா பிள்ளை அவர்கட்கு காந்தீஸ்வரம் ஏகாந்தலிங்க சுவாமி அறநிலையக்காப்பாளர் உயர்திரு. பி. கே ஞானதேசிகம்செட்டியார் அவர்களால் பொன்னாடை போர்த்தப்பெற்றது.

**குறிப்பு**: உயர்திரு கார்வார். பு. சுப்பையா பிள்ளை அவர்கள் எல்லாம்வல்ல இறைவன் அருளால் நீடுழிவாழ வாழ்த்துகிறோம்.

---

# மதிப்புரை

**இயற்கை மருத்துவம்**

[நடைமுறை இயற்கை மருத்துவம் (Practical nature cure) என்னும் ஆங்கில நூல் ஒன்பதாம் பதிப்பு. நூற்பக்கங்கள் அறுநூறும், நான்முகப் பக்கங்கள் பதினாறும் (600+XVI) கொண்டது. ஆசிரியர் **கே. இலட்சுமண சர்மா**. விலை ரூ. 12—8—0. வெளியீட்டோர்: இயற்கை மருத்துவ நூல் வெளியீட்டகம், கணேசநகர், புதுக்கோட்டை, தென்னிந்தியா.]

ஒரு துறையில் கைகண்ட அனுபவம் பெற்றவர்களே அதைப்பற்றிச் செவ்வையாக எழுத இயலும். இந்நூலாசிரியர் செரியாமை நோயினாலும் அதன் தொடர்பான பிற நோய்களாலும் பல ஆண்டுகள் பெருந்துன்பப் பட்டனர். தற்கால மருந்து முறைகள் பலவற்றையும் தவிராது கடைப் பிடித்தனர். எதும் பயன்காணமல் தற்கொலை செய்துகொள்ளும் அளவுக்கு வந்துவிட்டனர். சில ஆண்டுகளுக்கு முன் ஓர் ஆங்கில மருத்துவர் கியூன் மருத்துவத் துரைமகனாரின '**நீர் மருத்துவ**' முறையைப் பயின்றுபார்க்குமாறு இவர்பால் கூறியிருந்தனர்.

ஆனல், இந்நூலாசிரியர் அக்காலத்து அதனைப் பொருட்படுத்தினாரில்லை. தொடர்ந்து ஆங்கில மருத்துவ முறையினையே கடைப்பிடித்து

வந்தனர். இறுதியில் மருந்து முறைகளெல்லாம் பயனற்றுப்போயின நம்பிக்கை இழந்தனர். நண்பர் ஒருவரின் அறிவுரைப்படி கியூனின் நீர் மருத்துவமுறையைப் பின்பற்றலானார். அதன்மேல் அம் மருத்துவ முறையில் நடைமுறையிலும் நூன்முறையிலும் பல புதுமைகளைக் கண்டுபிடித்து நீர் மருத்துவமுறையை ஒழுங்குபடுத்தினர். இவர் இயல்பாகவே அறிவுக்கூர்மையும் கல்வியும் உடையவர். அதனால் கியூனின் முறைகளைச் செம்மைப்படுத்தினார். மேலும் வேதாந்தப் பயிற்சி மிக்கவர். எனவே வேததத்துவ அடிப்படையில் இயற்கை மருத்துவத்தை இந்திய முறைக்கு ஏற்றவாறு எடுத்துரைத்தார்.

இவர் தம் நாற்பதாண்டுப் பழக்க அனுபவத்தினால் பல நோயாளிகளின் பல்வேறு நோய்களைத் தீர்த்ததுமன்றி ஏராளமான நீர்மருத்துவ நூல்களையும் கற்றுத்துறைபோயவரானார். இவர் கொல்லாமை, இன்றியமையாச் சிக்கனம், பொருந்தும் உணவுமுறை ஆகியவற்றை வற்புறுத்திக் கூறும் முறை ஈடும் எடுப்பும் அற்றதொன்றாகும். நோய்களின் துவக்க நிலை, முற்றிய நிலை, சிதைக்கும் நிலை ஆகிய நோய்நிலைகளை எங்ஙனம் தீர்ப்பது என்பதுபற்றி விளக்கமாகக் கூறியுள்ளனர். அவற்றினுக்கு வேண்டும் எடுத்துக்காட்டுக்களை ஏராளமாகத் தந்துள்ளார்.

இவர்தம் மருத்துவமுறைக்கு நன்மதிப்பு வழங்குபவரும் இருபத்தைந்தாண்டுகள் இவர்தம் முறையைப் பின்பற்றித் தமக்கும், தம் உறவினர் நண்பர்களுக்கும் நோய் நீக்கம்செய்து தாம் பெற்ற பழக்க அனுபவத்தின்மேல் இம் மருத்துவமுறை 'உண்மை'யை அடிப்படையாகக் கொண்டதெனக் கூறும் நிலையிலுள்ளார். இதன்கண் ஆவிபிடித்தல், கட்டுக்கட்டுதல், மூச்சுப்பயிற்சி முதலியவற்றை விளக்கும் அழகிய படங்கள் ஏராளமாகவுள்ளன. இம் மதிப்புரைகாரர்க்கு இந் நூல் பல ஆண்டுகளாக நல்லதோர் வழிகாட்டியாக இருந்துவருகிறது. தீராத நோய்களெல்லாம் தீர இந்நூல் பயன்படும் என்று இவர் எடுத்துக்கூறு

இந் நூல் இல்லங்கள்தோறும், பொது நூலகங்கள்தோறும் இன்றியமையாது இருக்கவேண்டிய சிறந்தொன்று. இந்நூல் பதிப்பு மிகவும் அழகானது, நன்றாகவுள்ளது. இம் மருத்துவமுறை பற்றி வெளிவந்திருக்கும் வெளிநாட்டு நூற்களுடன் இதனை ஒப்பிட்டுப்பார்த்தால் பொருள்விளக்க எளிமையும் விலை மலிவும் மிக்குடையது இது என்பது பெறப்படும்.

தியாகராயநகர், 23—2—57.

தி. சே. விசுவநாத பிள்ளை,
18, கோபாலகிருட்டிண ரோடு.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.



சென்னை மாநில முன்னாள் முதலமைச்சர்

திரு. பி. எஸ். குமாரசாமிராசா அவர்கள்

தோற்றம் : மறைவு :

8—7—1898 15—3—1957




சிலம்பு ௩௧ | திருவள்ளுவர் ஆண்டு ககூஅஅ, பங்குனி
ஏப்ரல், 1957 | பரல் அ

# திரு. குமாரசாமிராசாவின் பேராவியற்கை

திரு. இராசா அவர்கள் எதிர்பாராத நிலையில் 1957 மார்ச்சு, 15-ஆம் நாள் இரவு சென்னைத் தலைமை மருத்துவ மனையில் திடீரென ஆவிநீத்தனர். இவர் தம் பழைமைவாய்ந்த ஆந்திராவிலுள்ள சிற்றூருக்குச் சென்று திரும்பினர். திரும்பும் வழியில்
நந்தினர் தங்கும் ர.

முன்னாள் நண்பகலில் அவருக்கு நெஞ்சுநோய் ஏற்பட்டதும் உடன் மருத்துவமனையில் சேர்க்கப்பெற்றுத் தக்க மருத்துவம் செய்யப்பட்டது. வரவர அவர்நிலை தளர்வுற்றுக்கொண்டிருந்தது. சென்னை முதலமைச்சர் காமராசரும், பொருளமைச்சர் சி. சுப்பிரமணியமும் உடன்வந்து பார்த்தனர். பார்த்துச் சென்ற சிறிதுநேரத்திற்கெல்லாம் நெஞ்சடைப்பால் ஆவி பிரிந்தது. இச் செய்தி உடனே காமராசருக்குத் தெரிவிக்கப்பட்டது.

அமைச்சர் கே. காமராசர், சி. சுப்பிரமணியம், பக்தவத்சலம் முதலியோர் விரைந்து மருத்துவமனை வந்துற்றனர். நீங்கா வருத்தம் கொண்டனர். அவர்தம் அரியவுடல் உரிய வூராகிய இராசபாளையம் போய்ச் சேர்வதற்கு வேண்டும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

**வாழ்க்கை வரலாறு**

திரு. இராசா அவர்களுக்கு அகவை ஐம்பத்தெட்டு. இவர்கள் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள இராசபாளையத் திருநகரில் 1898-ஆம் ஆண்டு சூலைத்திங்கள் 8-ஆம் நாள் பிறந்தார். இவர்தம் தந்தையார் பெயர் ஐக்கராசா என்று அழைக்கப்படும்

சஞ்சீவிராசா என்பர். திரு. இராசா அவர்கள் இளம்பருவத்தில்
இராசபாளையத்திலும் பின் சிரிவில்லிப்புத்தூரிலும் கல்விபயின்ற
னர். அப்பொழுதே சுறுசுறுப்பும், அறிவுக்கூர்மையும், ஆட்சித்
தோற்றமும் பிறவும் ஒருங்கமைந்திருந்தன. ஆணவம் முளையா
மாணவநிலையிலேயே மக்கட் குழூஉத் தொண்டிலும் பொதுவாழ்
விலும் பெரிதும் மனநிறை ஈடுபாடு கொண்டவராக இருந்தனர்.
இந்நிலையே வள்ளுவப் பெருந்தகையார் வகுத்தருளிய இயல்
புடைய மூவர் நிலையில் இறுதி நிலையாகிய துறவோர் நிலையாகும்.

1917-ஆம் ஆண்டிலேயே மக்கள் நலம் ஒன்றே கருதி
அரசியல் வாழ்வில் புக்கனர். உள்நாட்டு ஆட்சியாகிய
ஹோம்ரூல் இயக்கத்தில் பங்குகொண்டனர். ஒத்துழையாமை
இயக்கத்தையொட்டி மயக்கறுக்க இருமுறை விழுச்சிறைபுக்க
னர். இராமநாதபுரம் மாவட்டக் காங்கிரசுக் குழுவின் தலைவ
ராகவும், துணைத் தலைவராகவும் வீற்றிருந்து யாவரும் விழைபப்
பணிபல ஆற்றினர். தமிழ்நாட்டுக் காங்கிரசுக் குழுவின் உறுப்
பினராகப் பன்னெடுங்காலம் பணிபுரிந்துள்ளார். பயிர்த்
தொழிலைப்பற்றிய பயனுர் குறை(பிரச்சனை)களில் நுணுக்கமான
அறிவு இயற்கையிலேயே பெற்றிருந்தனர். கூட்டுறவு இயக்கங்
களில் அளவிலா ஆர்வமும் கருத்தும்பூண்டு தொண்டாற்றியவர்
நம் இராசா அவர். பல்வேறு கூட்டுறவு இயக்க நிலையங்களில்
தலைமை கொண்டுள்ளார்.

1934-ஆம் ஆண்டில் மத்திய அவைக்கும், 1937-ஆம்
ஆண்டில் சென்னைச் சட்ட அவைக்கும் தெரிந்தெடுக்கப்பட்டுப்
பணியாற்றினர். 1946-ஆம் ஆண்டில் ஸ்ரீ பிரகாசா அமைச்ச
ரவையில் பயிர்த்தொழில் அமைச்சராகப் பங்குகொண்டு பணி
புரிந்தனர். அதன் பிற்றையாண்டில் அந்நிலையில் நின்றும்
விலகினர்.

1949-ஆம் ஆண்டில் அவர் சென்னை முதலமைச்சர் நிலையை
ஏற்றனர். 1952 வரை அந்நிலையைச் செம்மையுற ஆற்றிச் சீரும்
சிறப்பும் எய்தினர். 1952-ஆம் ஆண்டுப் பொதுத்தேர்தலில்
வெற்றிபெற்றாரல்லர். 1954-ஆம் ஆண்டில் ஒரிசா மாகாண
ஆட்சி முதல்வராக வீட்சியின்றிப்-பூட்சியுடன் முறை செலுத்
தினர். 1956-ஆம் ஆண்டில் உடல்நலமின்மை காரணமாக
அந்நிலையினின்றும் விலகினர்.

இராசபாளையத்திலுள்ள தம்முடைய மிகப்பெரிய வளமனை
யைப் பொதுநல நன்மையின் பொருட்டுத் 'தமிழ்க்கலைக் கழகப்'
பெயர்நிறீஇத் தமிழ் ஆங்கிலம் வடமொழி முதலிய பன்மொழிச்
சுவடிகள் எண்ணில கொண்ட சிறந்ததோர் நூல்நிலையம் அமைத்

துப் பெரும்பொருட் செலவுடன் தொடக்கவிழாக் கொண்டாடி ஈடும் மொழியும் நன்னெறியும் நாளும் நலமுற நானிலம் வியப்ப நல்லுளத்துடன் நன்கொடையாக வழங்கியுள்ளனர். தமிழின் மாட்டுத் தனிப்பெருங் காதலுடையவர். உருவும், திருவும், ஆற்றலும் உரனும், உழைப்பும் ஒருங்கமைந்தவர். உண்மையும், உறுதியும், வண்மையும் கொண்டவர். கடவுட் கோளும் கலங்கா நிலையும் உடையவர். இத்தகைப் பேரறிவாளரும் பெருந்தகையாரும் திடீரென நம்மைவிட்டுப் பிரிய நேர்ந்தமை பெரிதும் வருந்தத் தக்கதொன்றே.

இப் பெருந்தகையார் நம் கழகம் துவக்கமுதலே செந்நெறிக்கும் செந்தமிழுக்கும் ஒல்லும்வகை ஓவாது உழைத்துப் புரியும் பணிபலவும் பன்னாளுங்கண்டு மனமுவந்து நன்னோக்கம் நாளுங் கொண்டுள்ளனர். அவர்கள்பால் உற்றகாலத்து ஏதும் உதவ வேண்டும் என்னும் அறமுறைப் பற்றும் திறமுற விருந்தது. இந் நிலையில் அவர்கள் முதலமைச்சராகத் திகழுங்காலத்துக் கழகம் அச்சகத்துடன் ஒருங்கு திகழ நனிமிக விரிந்த சிறந்த ஓரிடம் நற்பாங்கமை சூழலில் வேண்டியதிருந்தது. அதற்குப் பல்லாற்றானும் பொருந்திய பயனுரிடம் இப்பொழுதிருக்கும் எழின்மிகும் இடமேயாகும். இஃது அவர்கள் தம் முழுப் பேருதவியினாலேயே கிடைக்கப்பெற்றதென்பது முழுவுண்மையாகும்.

இது, கழகத்துக்குப் பலகாலும் பலராலும் இயற்றப்பெற்ற பல்வேறுதவிகளினும் தலைசிறந்ததாகும். அம்மட்டோ? உற்ற காலத்து வலிய மனமுவந்து நற்றிறமுற ஆற்றிய ஈடும் எடுப்புமில் பீடுசேர் பேருதவியுமாகும். இப் பெரும் நன்றியினைக் கழகம் என்றும் மறவாது போற்றிப் புகழ்ந்து நினைவுகூருமாக. அதுவே என்றும் செயற்பால நன்றியின் நினைவுக்குறியாகும். தமிழக முன்னேற்றம் தமிழ் முன்னேற்றம் முதலிய சிறந்த முதன்மைப் பணிகள் கால்கோள் கொண்டுள்ள இந்நாளில் அவர்தம் அரும் பெருந்துணை அனைவர்களாலும் விரும்பியிருந்த தொன்றாகும். மேலும் வடநாடுபுக்கு மீண்டமையால் அந் நாட்டுப் பண்பாடுகளுள் கொள்ளத்தக்கன பலவும் நம்நாட்டகத்தும் நனிமிகு விரைவில் வளரவேண்டும் என்னும் நன்னோக்கமும் பூண்டுள்ளார் எனத் தெரிகிறது. அவை எல்லாம் நிரம்புவதன் முன்னம் பிரிய நேர்ந்தமை ஈடுசெய்ய வொண்ணாப் பேரிழப்பேயாகும். அவர்தம் ஆவி இறைநிறைவில் என்றும் இன்புறுமாக. எங்கள் உளம்நிறை பரிவினைச் சார்பினர்க்குத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

# [1]பொதுமை கண்ட தமிழ்

[திரு. ஸ்ரீ. சுப்பிரமணிய பிள்ளை, எம்.ஏ.,பி.எல்.]

## பெரியபுராணம்

ஆரொருவர் உள்குவார் உள்ளத்துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளுடையவன் எவனோ அவனே இறைவன் என்ற பொதுவியற் கொள்கையின் அடிப்படையில் எழுந்தது சைவ சமயம். ஒருநாமம் ஓருருவம் ஒன்றும் இல்லாதவர்க்கு ஆயிரம் திருநாமம் கூறிப் பரவினாலும், தன் பொதுநெறிக் கொள்கையாகிய அன்புநெறியைச் சைவம் ஒருநாளும் மறந்ததில்லை. அச் சைவசமயத்தின் இலக்கணங்களுக்குச் சிறந்த இலக்கியமாகத் திகழ்வது சேக்கிழார் பாடிய பெரியபுராணம்.

அதன் தொடக்கப்பாடலே 'உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்' என்று ஆரம்பிக்கிறது. உலகில் ஒவ்வொரு மூலையில், ஒவ்வொரு பகுதியில், ஒவ்வொரு நாட்டில், ஒவ்வோர் இனத்து மக்கள் இறைவனை முழுதும் தெரிந்துவிட்டதுபோல், பல்வேறு சமயங்களை எழுப்பிப் பூசல் விளைத்து நிற்பர். அவையெல்லாம் கூவலாமைகளின் கூக்குரல் போலவே முடியும். அச் சமயங்கள் எல்லாம்கூடி, உயிர்கள் அனைத்தும் திரண்டு, எல்லா உலகங்களுமாகச் சேர்ந்து முயன்றாலும்கூட, இறைவனுடைய உண்மை இயல்புகளை உள்ளவாறு அறிந்து சொல்லிவிட முடியாது என்பதை, உலகு எல்லாம்—(கூடி)—உணர்ந்து ஓதற்கு அரியவன், என்றார் சேக்கிழார். உலகெல்லாம் சேர்ந்தாலும் இறைவனை உணரமுடியாது, உணர்ந்தாலும் ஓதமுடியாது, ஓதினாலும் இறைவனுடைய எல்லா இயல்புகளையும் உணர்ந்து ஓதமுடியாது. இங்கொன்றும் அங்கொன்றுமாய், அரைகுறையாக, யானையைக் குருடர் அறிந்ததுபோலவே, உயிர்களும் இறைவனை அறிய முடியும் என்பதை, உலகு எல்லா முணர்ந்து ஓதற்கு அரியவன் என்றார். இதனால் முழுதும் கண்டு கூறியவர் இல்லை என்பது பெறப்படுவதால், தன் சமயமன்றிப் பிற சமயங்களுள்ளும் உண்மை இருத்தல்கூடும் என்ற பொதுவுணர்ச்சி பிறந்து பகைமை தவிர்க்கப்படுவதை நன்கு காணலாம்.

அவ்விதம் உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன் அம்பலத்திலே ஆடுகின்றான் என்றால், அவன் ஓர் இனத்தார்க்கு,

---

1. திருச்சி வானொலி நிலையத்தாரின் இசைவுடன் பதிக்கப் பெற்றது.

ஒரு குலத்தார்க்கு, ஒரு சமயத்தார்க்கு மட்டும்தான் ஆடுகிறான் என்றில்லாமல், பொதுவாக உலகத்துயிர்கள் அத்தனைக்கும் அருள்புரியவே ஆடுகின்றான் என்ற பரந்த நோக்கும் விரிந்த மனப்பான்மையும் கொண்டு பாடுகிறார் சேக்கிழார் :

"ஆதியாய் நடுவும் ஆகி அளவிலா அளவும் ஆகிச்
சோதியாய் உணர்வும் ஆகித் தோன்றிய பொருளும் ஆகிப்
பேதியா ஏகம் ஆகிப் பெண்ணுமாய் ஆணும் ஆகிப்
போதியா நிற்கும் தில்லைப் பொதுநடம் போற்றி! போற்றி!"

அவ்வாறு பொதுநடம் புரிகின்ற பொதுவாம் இறைவன் கற்பனை கடந்த சோதியாய்க் கருணையே உருவமாகி எல்லா உயிர்களிடத்தும் இலங்குகிறான். ஒவ்வோர் உயிரும் அவனுடைய அருள்வெளித் தோற்றமாகவே விளங்குகிறது. இவ்வுண்மையை அப்பர் திருவையாற்றிற் கண்ட கயிலாயக் காட்சியில், சேக்கிழார் மிகத் தெளிவாக அறிவுறுத்துகிறார் :

"பொன்மலைக்கொடி யுடனமர் வெள்ளியம் பொருப்பில்
தன்மை யாம்படி சத்தியும் சிவமுமாம் சரிதைப்
பன்மை யோனிகள் யாவையும் பயில்வன பணிந்தே
மன்னு மாதவர் தம்பிரான் கோயில்முன் வந்தார்."

சென்று நின்றுவாழ் உயிர்கள் அனைத்தினூடும் ஊடுருவி இறைவன் துன்றிநின்ற காட்சியின் சித்திரம் இது.

அத்தகைய கடவுள் ஒரு சமயத்தார்க்கே உரியவன், ஏனைச் சமயத்தார்க்கு அல்லன் என்பதில்லை. அவன் பொது. அவனைச் சைவரும் கும்பிடலாம், சாக்கியரும் கும்பிடலாம். இப் பொதுத் தன்மையைச் சாக்கிய நாயனார் சரிதம் சாற்றுகின்றது. அல்லார் கண்டர் தமக்கிந்த அகிலமெல்லாம் ஆள் என்று அன்பின் வழி நின்ற சாக்கிய நாயனார் தமது வேடத்தை மாற்றவில்லை. எந் நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும், மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை ஒன்றே பொருள் என்று கொண்டு போற்றி முத்தி அடைந்தார்.

அவ்வாறு அன்புநெறி நின்று வழிபடும் பொழுது, எம் முறையில் வழிபட்டாலும் அது இறைவனுக்கு ஏற்றதாகும். இதைக் கண்ணப்பர் வரலாறு காட்டுகிறது. காளத்திவாணனை ஆகமவிதிப்படி வழிபட்டார் சிவகோசரியார். கண்ணப்பர் செருப்பாலே துடைத்து, வாய்நீரை உமிழ்ந்து, தலைப்பூவைச் சூட்டி, வாயாற் சுவைகண்ட புலால் உணவை ஊட்டி வழி பட்டார். இருவர் பூசனையையும் இறைவர் ஏற்றுக்கொண்டார், அன்பின் காரணத்தால். இங்கே கானவேடரும் தானவேதியரும்

ஒன்று என்ற நிலை மிக நன்றாய் விளக்குகிறது. கண்ணைக் கொடுத்தல், பிள்ளையைக் கொடுத்தல், தன்னைக் கொடுத்தல் முதலிய செயற்கரும் செயல்கள் அனைத்தும் அன்பின்வழியே நிகழக் காணலாம்.

பெரியபுராணத்திற் கூறப்பெறும் 'அறுபத்துமூவர் வரலாறும் 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்ற பொதுமையைப் புகட்டவே புறப்பட்டனவாகும். கொல்லைவாழ் நந்தனைத் தில்லைவாழ் அந்தணர் கும்பிட்டுக் குலாவினர். இங்குப் பறையர் என்றும் அரையர் என்றும் பாகுபாடே கிடையாது. பழிதீர் யானைமேற் பவனிவந்த சேரர் பெருமானர், வழிமேல் வந்த வண்ணானை விழிநீர் பெருக விழுந்து கும்பிட்டார். அன்புதான் இதற்குக் காரணம். ஆண்டிமுதல் அரசன் வரையிலும், தோட்டி முதல் தொண்டைமான் வரையிலும், எல்லோரையும் இந்த அன்புக் கயிறானது ஒன்றாகப் பிணைத்து நிற்கிறது. முத்தீ வளர்த்து வேதநெறி வழுவாத அப்பூதியடிகளின் நிலை எங்கே? நாலாங்குலத்தாராய் அமணப்பாழியில் அழுந்திக் கிடந்த அப்பரடிகள் எங்கே? திருநாவுக்கரசரின் திருப்பெயர் அப்பூதியடிகளின் மூலமந்திரமாக மாறியது. அவர் காலடியில் விழுந்து பணிந்தார். சம்பந்தரும் அப்பரும் அவ்வாறே வணங்கித் தழுவினர். சம்பந்தர் அருட்பெருகு தனிக்கடல். திருநாவுக்கரசர் உலகுக்கெல்லாம் அன்புசெறி கடல். அவர் தம் தந்தை புகழனர் இறந்தவுடனே செல்வமனைத்தையும் தானதருமம் செய்தார். நந்தவனங்கள் வைத்தார். குளம் தோண்டினர். கிணறு வெட்டினர். வந்தவர்களுக்கெல்லாம் வாரிவழங்கினர். புலவர் புலம்பலைப் போக்கினர். தருமம் செய்வதிலும், சிலர், ஒருசாதியார்க்கு, ஓர் இனத்தார்க்கு, ஒரு சமயத்தார்க்கு என்று குறுகிய புத்தியோடு செய்வார்கள். பொதுக் கண்கொண்டு பார்க்கும் புண்ணியரான சேக்கிழாருக்கு அது பிடிக்காது. அதனைக் கண்டிப்பதுபோல், இன்னர்க்கு என்றில்லாது உலகத்து மக்கள் எல்லார்க்கும் தருமம் செய்தார் மருணீக்கியார் என்று பாடுவதைப் பார்க்கலாம்:

"காவளர்த்தும் குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியுமா நிலத்துள்ளோர்
யாவருக்குந் தவிராத ஈகைவினைத் துறைநின்றார்."

மற்றும் ஆண்பெண் என்ற வேறுபாடும் ஏற்றத் தாழ்வும் இங்கில்லை. புனிதவதியார், திலகவதியார், மங்கையர்க்கரசியார் போன்ற பெண்குல மாணிக்கங்கள் ஆண்பெண் இருபாலாரும் எப்பாலாரும் வழிபடும் தெய்வங்களாகக் காட்சிதருகின்றனர்.

சாதி, குலம், கோத்திரம் என்னும் இருளெல்லாம் அன்பென்னும் உதய சூரியன்முன் அகன்றோடுவது மிக அழகாகச் சித்திரிக்கப்படுகிறது. திருநீலநக்கநாயனார் ஒரு சிறந்த அந்தணர். இறைவனையும் அவன் அடியாரையும் நயந்து, பாதம் அர்ச்சனை புரிவதும் பணிவதுமே வேதத்தின் உட்பொருள் என உணர்ந்தவர். சம்பந்தர் தம் மனையில்வந்து தங்கியபொழுது, திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவர் மனைவியாரும் இரவில் படுத்துக் கொள்வதற்கு, வீட்டின் நடுவில் புனிதமான ஓமகுண்டத்தின் அருகிலே இடம் வகுத்துக் கொடுத்தார். அதனால் ஒன்றும் கெட்டுவிடவில்லை. என்றும் இல்லாதவிதமாய் வேள்வித்தீ முன்னைவிட நன்றாக வலமாக ஒளிவிட்டு இலங்கியது.

நமிநந்தியடிகள் மற்றொரு சிறந்த அந்தணர். அவர் திருமணலித் திருவிழாவில், பலவகைச் சாதியாரோடும் தொட்டு உழப்பி இறைவனை வழிபட்டுவர நேர்ந்ததால் தீட்டுப்பட்டுவிட்டதென்று, வீட்டில் இரவர்ச்சனை செய்யுமுன், குளித்துத் தூய்மையடைய நினைந்தார். அப்பொழுது அசதியால் உறக்கம் மேலிட்டுக் கீழேபடுத்தார். அவர் கனவில் இறைவன் தோன்றி "ஆரூரில் பிறந்தார் எல்லாம் நம் கணங்கள்" என்று அறிவுறுத்தினார். இவ்வாறு பல்வகையானும், "குறியில் நான்கு குலத்தினராயினும், நெறியின் அக்குலம் நீங்கினராயினும்," "உலகம் கொள்ளும் நலத்தினராயினும், அலகில் தீமையராயினும்," அன்பின் அமைப்பு முறையில் மனிதக்குலம் அனைத்தும் ஒன்று என்ற ஒருமைப்பாட்டினைப் பெரியபுராணம் நன்கு தெளிவிக்கிறது

பகைவனுக்கும் அருளுகின்ற பண்பாட்டை மெய்ப்பொருளுநாயனார் வரலாறு தெரிவிக்கிறது. தன்னை வஞ்சித்துக் கொன்ற முத்திநாதன் உயிரை, "தத்தா! நமர்" என்று தடுத்துக் காத்தவர் மெய்ப்பொருளுநாயனார். பகைமை பொல்லாதது, பகையை அன்பினாலே வெல்லவேண்டும் என்ற கருத்தைக் கலிக்காமர் வரலாறு ஒளிக்காமல் காட்டுகிறது. ஏயர்கோன் தம்மை வெறுத்துப் பகைக்கிறார் என்பது தெரிந்து, அப் பகையைப் போக்கமுயல்கிறார் சுந்தரர். ஏயர்கோன் அதற்கு இடம்கொடாமல் இறந்தது தெரிந்ததும் தாமும் உயிர்விடத் துணிகிறார். இவ்வாறு அன்பினாலே பகையை வெல்கிறார்.

இங்ஙனம் வையகத்தில் தீதெலாம் ஆழ்ந்து, துயர்நீங்கி இன்பவாழ்வு மலர்ந்திட, மாந்தர் யாவரும் ஒன்று என்ற பொது நெறியை அன்புநனி சொட்டச்சொட்டப் போற்றிப் புகல்கிறது பெரியபுராணம். வாழ்க சேக்கிழார்!

# இளங்கோவடிகள் சமயம்

[வித்துவான், திரு. ஆ. சிவலிங்கனார், மயிலம்.]

இளங்கோவடிகள் சமயம் 'சைவம்' என்று ஒருசாராரும், 'சைனம்' என்று ஒருசாராரும் கூறுவர். 'வைணவம்' என்றோ 'பௌத்தம்' என்றோ யாரும் கூறவில்லை. சைனசமயத்தைச் சார்ந்தவர் அடிகள் என்பதற்குரிய சான்றுகளும் அவற்றுக்குச் சைவசமயத்தவர் அடிகள், என்பார் கூறும் மறுப்பும் காண்பாம்.

(க) அடிகள் துறவறம்பூண்டு வீற்றிருந்த இடம் குணவாயிற் கோட்டம் என்று கூறப்படுகின்றது. கோட்டம் என்ற சொல்லுக்கு அடியார்க்கு நல்லார் அருகன்கோயில் என்று பொருள் கூறுகின்றார். அடிகள் என்றசொல் சமணசமயத் துறவிகளைக் குறிக்கும் சொல்.

மறுப்பு :—அடியார்க்கு நல்லார் 'குணவாயிற் கோட்டம்' என்பதற்கு 'அருகன்கோயில்' என்று பொருள்கூறியது, 'அடிகள்' என்னும் பெயர் சைனத்துறவிகட்குரியது என்னும் கருத்தினாற்போலும். 'கோட்டம்' 'அடிகள்' என்ற சொற்கள் சமணசமயத்திற்கேயுரிய சொற்களாகா. எம்மதத்தினரும் இவற்றைப் பயன்படுத்திவந்தனர். அமரர் தருக்கோட்டம், வெள்யானைக் கோட்டம், புகர்வெள்ளை நாகர் தங்கோட்டம், பகல்வாயில் உச்சிக்கிழான் கோட்டம், ஊர்க்கோட்டம், வேற்கோட்டம், வச்சிரக்கோட்டம், புறம்பணையான் வாழ்கோட்டம், நிக்கந்தக் கோட்டம், நிலாக்கோட்டம் என்பன காண்க. அடிகள் என்பது மதிப்பிற்குரியவர் என்னும் பொருளது. அதனால் அடிகள் என்றது சமணசமயத் துறவிகளுக்கேயுரியது எனக் கொள்வது பொருந்தாது.

(உ) ஆசிரியர் இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்தில் சமணசமயக் கொள்கைகளையே விளக்கமாகவும் விரிவாகவும் கூறியிருக்கின்றார்.

மறுப்பு :—கவுந்தியடிகளின் தொடர்பு கதையில் ஏற்பட்டதாலேயே சமணசமய உண்மைகளை மிகுதியாகக் கூறவேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது.

இனி இளங்கோவடிகளைச் சைவர் என்பார் கூறும் சான்றுகளும் அவை பிறரால் மறுக்கப்படுமாறும் காண்பாம்.

(௧) "செஞ்சடை வானவன் அருளினில் விளங்க
வஞ்சித் தோன்றிய வானவ கேளாய்." (சிலப். உ௬-௯௮-௯௯)

எனவும்,

"ஆனே றுயர்த்தோ னருளினில் தோன்றி
மாநிலம் விளக்கிய மன்ன னாதலின்" (சிலப். ௩0-௧௪௧-௧௪௨)

எனவும் போந்தவற்றால் செங்குட்டுவனுடைய பெற்றோர் சிவனருளாலே அவனை மகனாகப் பெற்றனர் என்பது விளங்கும். எனவே இத்தகையோரின் மகன் இளங்கோவடிகளும் சைவரே யாதல் வேண்டும்.

மறுப்பு :—செங்குட்டுவன் தந்தை முதலில் பிள்ளைப் பேறின்றியிருந்து சிவபிரானை வழிபட்டு அவனருளால் செங் குட்டுவனைப் பெற்றிருக்கலாம். அதன்பின் இளங்கோவடிகள் தோன்றியிருப்பர். அக்காலத்தில் அவரவர் விரும்பிய சமயத் தைச் சார்ந்தனராதலின் அடிகள் பின்காலத்தில் சமணசமயத் தைச் சார்ந்திருப்பர். உண்மை நிகழ்ச்சியைக் கூறியபோது செங்குட்டுவனை "ஆனே றுயர்த்தோ னருளினில் தோன்றினன்" என்றார் அடிகள். அதனால் தவறென்னை? இவ்வாறே ஆடக மாடத் தறிதுயி லமர்ந்தோன் சேடங்கொண்டு சிலர்நின் றேத்திய போது, தன் முடியில், சிவன் அடிகள் வைத்திருத்தலின் அச் சேடத்தினை வாங்கிப் புயத்தில் அணிந்து கொண்ட செங்குட்டுவ னின் தம்பியாம் அடிகள், சைவராவர் என்பதும் பொருந்தா தென்னலாம்.

(உ) "பிறவா யாக்கைப் பெரியோன்." (௫-௧௬௭)

எனவும்,

"உலகுபொதி யுருவத் துயர்ந்தோன்." (உ௬-௫௫)

எனவும் கவியின் கூற்றிலேயே சிவபெருமானை முழுமுதற் பொருளாகப் பாராட்டுவதால் அவர் சைவசமயத்தினரே.

மறுப்பு :—அடிகள் பொதுவாகவே ஒவ்வொரு சமயக் கடவுளர்களையும் உயர்த்தியே கூறுபவராதலின் சிவபிரானையும் அவ்வாறு கூறினர். திருமால் பத்துப் பிறப்புடையவர். சிவபிரான் பிறப்பற்றவர்; அப் பிறவாமையே அவர்க்கு யாக்கை என்பர் சைவர். அதனால் அவர்கள் கொள்கைக் கேற்பப் "பிறவாயாக்கைப் பெரியோன்" என்றார் அடிகள். ஆய்ச்சியர் குரவையில் திருமாலைப் புகழ்ந்தமையும் காண்க. "ஓங்குயர் மலையத்துயர்ந்தோன்" (௧௧-௧0௫) எனத் திருமாலைப் புகழ்ந்தார். "ஆதியில் தோற்றத் தறிவன்" (௧௧-௪) என அருகனைப் புகழ்ந்

தார். எனவே சிவபிரானைப் புகழ்ந்தமையாலேயே அடிகளைச் சைவர் என்பது பொருந்தாது என்க.

இனி இளங்கோவடிகளின் சமயத்தைப்பற்றித் தொடங்குவதற்கு முன்னர், கருதவேண்டியன உள என்பது நினைத்தற்குரியதாம். சிலப்பதிகாரம் ஒரு நாடகநூல். இக்காலத்தில் காணப்படும் நாடகநூற்களின் அமைப்பில் இல்லையென்றாலும் ஆங்காங்கு அமைந்துள்ள அமைப்புக்களால் நாடகநூல் என்கின்றோம். எனவே நாடகத்தில்வரும் உறுப்பினர்கள் இயல்புக்கேற்ப அவர்கள் கூற்றில் அமைந்த சொற்களும் கருத்துக்களும் அவர்களுக்குரியனவாகக் கொள்ளவேண்டுமேயன்றி அவற்றை இளங்கோவடிகள்பால் சார்த்தி ஒரு முடிபிற்கு வருவது நன்றன்று. "பிறவாயாக்கைப் பெரியோன்." எனவும் "ஆதியில் தோற்றத்து அறிவன்." எனவும் நாடகவுறுப்பினர் வாயினின்றும் கூறாது தாமே அடிகள் கூறிய இடங்களிலும் பொதுமையின் உயர்த்திக் கூறியிருத்தலினால் அவ்விடங்களும் அடிகளை அறிய நமக்கு உதவிபுரியவில்லை பொதுவாகச் சிலப்பதிகாரத்தில் வந்திருக்கும் உறுப்பினர்களைப்பற்றி நாம் அறிய வாய்ப்புண்டே தவிர, அடிகளைப்பற்றியறிய வாய்ப்பில்லையென்றே கொள்ள வேண்டியுள்ளது. "அடிகள் சமணசமயக் கொள்கைகளையே விளக்கமாகவும் விரிவாகவும் கூறியிருக்கின்றார்" என்பர். கதை கோவலன் கண்ணகி இவர்களைப்பற்றியது. இவர்கள் சமண சமயத்தைச் சார்ந்தவர்கள். இவர்கள் வழித்துணையாக அமைந்த கவுந்தியடிகளும் சமணசமயத்துறவி. எனவே சமணசமயக் கருத்துக்கள் ஆங்காங்கு எடுத்துக்காட்டப்பட்டன. அவ்வளவே யன்றிச் சமணசமயக் கொள்கைகளையே விரிவாகக் கூறவில்லை யடிகள். சமயக் கொள்கை என்பது யாது? சமயக் கொள்கையைக் கொண்டோர் மேற்கொள்ளும் ஒழுக்கங்கள் யாவை? இவ்வாறு பிரித்துப் பார்ப்போமானால் சிலப்பதிகாரத்தில் சமண சமயத்துக் கொள்கையைக் கொண்டோர் மேற்கொள்ளும் ஒழுக்கங்கள் ஆங்காங்கே கூறப்பட்டுள்ளனவேயன்றிக் கொள்கை கூறப்படவில்லை என்பது புலப்படும். சைவசமயக் கொள்கை "பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளுண்மை" என்பதாம்; பசு, பாசம் நீங்கிப் பதியை யடையவேண்டும். அதற்கு மேற்கொள்ளும் ஒழுக்கங்கள் பல. அதுபோல சைனசமயக் கொள்கை யாது என்று சிலம்பில் யாண்டும் கூறப்படவில்லை. பதியில்லை யென்பதும் பசுவே பதிநிலையுறும் என்பதும் சைன சமயக் கொள்கை. அதனாலன்றோ நிரீசுரவாதிகள் எனச் சைவர் சைனர்களைக் கூறினர்? எனவே சிலப்பதிகாரத்தில் சைனசமயத்தார் மேற்கொள்ளும் ஒழுகலாறுகள் கதைத் தொடர்புடைய

யில் வந்தன ஆதலின் அதுகொண்டு அடிகளைச் சைனர் என்பது பொருந்தாது.

"பிறப்பு பற்றின் காரணமாக வருவது; பிறப்பால் வருவது பெருந்துன்பம்; பிறவாமையே பேரின்பம்; அதனை அடைவதற்குத் துறவறமே வழி." இதுவே சமணசமயம் கூறும் பேருண்மை. மனிதவாழ்க்கையின் முடிந்த முடிபாகச் சிலப்பதிகாரம் கூறும் உண்மையும் துறவறமே. கோவலனும் கண்ணகியும் கடவுளாயினர். மாநாய்கனும் மாசாத்துவானும் துறவறம் பூண்டனர். மாதவியும் மணிமேகலையும் துறவிகளாயினர்.

"இப்பிறவியில் நாம் அநுபவிக்கும் இன்ப துன்பங்களுக்கு வினைப்பயனே காரணம். இது சமணர்களின் அடிப்படையான தத்துவம்."

இவ்விரண்டு கருத்துக்களையும் அடிகள் சைனர் என்பதற்குச் சான்றுகளாகக் கூறுவர் உயர்திரு. ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள். இவ்விரண்டு கருத்துக்களும் சைவசமயத்தும் உள்ளனவே. வைதிக சமயங்கள் யாவற்றிலும் உள. புத்த மதத்தினரும் வற்புறுத்திக் கூறினர். இதற்குச் சான்றுகள் அவ்வச் சமயங்களிலிருந்து எழுதுவது மிகையென விடுக்கின்றேம். ஆனால் பிறவாமையை யடைவதற்குத் துறவறமே வழி என்பது சமண சமயத்திற் குரியதேயாம். சைவ வைணவ சமயங்களில் இல்லறத்தாரும் பிறவாமை யெய்துவர் என்பதைக் காணலாம். சிலப்பதிகாரத்தில் அவ்வாறு வற்புறுத்திக் கூற வில்லை. மாசாத்துவான், மாநாய்கன், மாதவி ஆகியவர்கள் வாழ்வை வெறுத்தவர்கள். கோவலன் கண்ணகி ஆகியவர்களின் முடிவு அவர்கட்கு உலகவெறுப்பினை யுண்டாக்கியதாதலின் துறவினை மேற்கொண்டனர். பிறவாமையை நோக்கமாகக் கொண்டவராயின் முதலிலேயே துறந்திருப்பர். அதனால் கதை முடிபினைக்கொண்டு இளங்கோவடிகள் 'பிறவாமைக்குத் துறவே வழி' என்றார் என்றல் கூடாதாம்

சைன சமயக்கடவுள் அருகனைப்பற்றி எவ்வாறு போற்றியுள்ளாரோ அவ்வாறே பிறகடவுளர்களையும் போற்றினர் அடிகள் என்னலாம். அருகனைப்பற்றி,

"அறிவன், அறவோன், அறிவுவரம் பிகந்தோன்,
செறிவன், சிநேந்திரன், சித்தன், பகவன்,
தரும முதல்வன், தலைவன், தருமன்,
பொருளன், புனிதன், புராணன், புலவன்,
சினவரன், தேவன், சிவகதி நாயகன்,

பரமன், குணவதன், பரத்தில் ஒளியோன்,
தத்துவன், சாதுவன், சாரணன், காரணன்,
சித்தன், பெரியவன், செம்மல், திகழொளி,
இறைவன், குரவன், இயல்குணன், எங்கோன்,
குறைவில் புகழோன், குணப்பெருங் கோமான்,
சங்கரன், ஈசன், சயம்பு, சதுமுகன்,
அங்கம் பயந்தோன், அருகன், அருள்முனி,
பண்ணவன், எண்குணன், பாத்தில் பழம்பொருள்
விண்ணவன், வேத முதல்வன்.” (சிலப். ௧௦-௧௭௬-௧௮௯)

எனப் பலவாறாக அடிகள் சாரணர் வாய்மொழியாகக் கூறினர். அடிகளே தம் வாக்காக எயினரது தொல்குடிக் குமரியாம் ஐயையைப்பற்றி,

“நுதல்கிழித்து விழித்த இமையா நாட்டத்துப்
பவள வாய்ச்சி, தவளவா ணகைச்சி,
நஞ்சுண்டு கறுத்த கண்டி, வெஞ்சினத்து
அரவுநாண் பூட்டி, நெடுமலை வளைத்தோள்
துளையெயிற் றுரகக் கச்சுடை முலைச்சி,
வளையுடைக் கையிற் சூல மேந்தி,
கரியின் உரிவை போர்த்தணங் காகிய
அரியின் உரிவை மேகலை யாட்டி,
சிலம்பும் கழலும் புலம்பும் சீறடி
வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை,
இரண்டுவே றுருவிற் றிரண்டதோ ளவுணன்
தலைமிசை நின்ற தையல், பலர்தொழும்
அமரி, குமரி, கவுரி, சமரி,
சூலி, நீலி, மாலவற் கிளங்கிளை,
ஐயை, செய்யவள், வெய்யவாட் டடக்கைப்
பாய்கலைப் பாவை, பைந்தொடிப் பாவை,
தமர்தொழ வந்த குமரிக் கோலத்து
அமரிளங் குமரி.” (சிலப். ௧௨. ௫௫-௭௦)

என்று பலவாறாகக் கூறியுள்ளார். ஆய்ச்சியர்குரவையில் திருமாலை ஆய்ச்சியர் வாயிலாகப் புகழ்ந்தும், குன்றக்குரவையில் முருகனையும் அவன்தன் வேலினையும் குன்றவர் வாயிலாகப் புகழ்ந்தும் கூறியுள்ளார். எனவே, அடிகள் சினதேவனை மட்டும் புகழ்ந்துவிட்டார் எனக் கூறமுடியாது. அதனால் இளங்கோவடிகள் சமயம் சமணம் என்று கூற இயலாதென்க.

அடிகள் என்ற சொல் சமண்சமயத் துறவிகட்குரியதாகக் கூறுவர். அஃதாவது அச்சொல்லைப் பெரிதும் அச் சமயத் துறவி

யர்க்கே வழங்கினர் என்பர். பின்னர் அது சமண் சமயத்தில் உள்ள மதிப்பிற்குரிய யாவர்க்கும் உரியதாயிற்று என்றும் கூறுவர். இக் கூற்றும் ஏற்றுக்கோடற்குரியதாகா தென்னலாம். தமிழ்இலக்கியங்களில் சங்க இலக்கியங்களைக்கொண்டு தமிழ் நாட்டின் சமயவகைகளை யறிய வியலாது. சைவம் என்றோ வைணவம் என்றோ சைன பௌத்தம் என்றோ அவ்விலக்கியங் களிற் காண்டற்கில்லை. சங்ககாலப் பிற்பகுதியைச் சார்ந்ததாகக் கருதப்படும் பரிபாடல் என்ற நூலிலும் முருகன், திருமால் பாடல்கள் காணப்படுகின்றனவே தவிரச் சமயப்பெயர்கள் காணப் படவில்லை. அக்காலத்தில் சிவன், முருகன், திருமால், இந்திரன், வருணன் ஆகிய கடவுளர்களைத் தனித்தனிப் பெயரளவில் வழி பட்டனர் என நாம் அறிகிறோம். வடக்கிருந்து வந்த சைன பௌத்தர்களாலேயே தமிழகத்திலும் சைவ வைணவப் பாகு பாடுகளும், சைவம் வைணவம் என்ற சமயங்களும் உருவாயின என்னலாம். சிந்தாமணி, பெருங்கதை முதலிய சைன நூல்கள் தோன்றிய காலம் தமிழகத்தில் சைனர்கள் செல்வாக்குப்பெற்ற காலம் ஆகும். சைன நூல்கள் வடமொழியில் மிகுதியும் உள. சிந்தாமணி முதலிய சில நூல்களுக்கு வடமொழியில் முதல் நூல்கள் உள. அக்காலத்தில் வடசொற்கள் சிலவற்றிற்கு நேரிய தமிழ்ச் சொற்களைத் தேடித் தம் நூல்களில் அந்நூற் புலவர்கள் மேறகொண்டனர். ஆனால் சில சொற்களுக்கு நேரிய பொரு ளின்றி மேற்போக்கில் வழங்கிய பொருளைக்கொண்டும் அமைப் புக் கொண்டனர். அந்நிலையில் மேற்கொள்ளப்பட்டதே அடிகள் என்ற சொல் என்னலாம். சுவாமி என்ற வடசொற்கு அடிகள் என்ற தமிழ்ச் சொல்லைக் கொண்டனர். ஸ்வம் என்றால் செல்வம் என்பது பொருளாம். ஸ்வம் உடையவன் ஸ்வாமி ஆவான். எனவே, 'சுவாமி' என்பது 'செல்வம் உடையவன்' என்றிருந்து பின் 'மேலோன்' என்ற பொருள்பட்டுப் பின் பொதுவில் 'மதிப்பிற்குரியவன்' என்ற பொருள்பட்டது. இவ்வாறே 'அடிகள்' என்ற தமிழ்ச்சொல்லும் முதலில் 'இறைவன் அடி யினைத் தாங்குபவன்'—அஃதாவது நினைபவன் என்ற பொரு ளுடையர் அடியவர் யாவர்க்கும் உரியதாகிப் பின்னர் 'மதிப்பிற் குரியவர்' என்ற பொருளுடையதாகியது. சுவாமி என்பதற்கு நேரிய பொருளுடையதன்றாயினும், மதிப்பிற்குரியவர் என்ற அளவில் ஒற்றுமை கண்ட சைனர், அடிகள் என்ற சொல்லை மேற்கொண்டனர் எனனலாம். சிலப்பதிகாரம் முதலியவற்றில் அடிகள் என்ற சொல் காணப்படுவதுபோலப் பிற்காலச் சைவ வைணவ நூல்களிலும் அச்சொல் காணப்படுகின்றது. சிந்தா மணி முதலிய நூல்களின் காலத்தில் சைவ வைணவ நூல்கள் காணப்படவில்லை. அதேபோலச் சைவ வைணவ நூல்கள்

தோன்றிய பிற்காலத்தில் சைன பௌத்த நூல்கள் காணப்படவில்லை. இதனால் நாம் உணர்வது என்ன? செல்வாக்குப் பெற்றவர் காலத்தில் செல்வாக்கிழந்தவர்கள் நூல்கள் வெளிவரவில்லை. அல்லது அழிக்கப்பட்டன என்பதாம். அதனால் அடிகள் என்ற சொல் சிந்தாமணி முதலிய நூல்களில் முதலில் காணவும், பின்னர்ச் சைவ வைணவ புராணங்களில் காணவும் நேர்ந்தது. ஆகவே அடிகள் என்ற சொல் சைனரது பெருவழக்குச் சொல் என்று கூறமுடியாது. அதனால் இளங்கோவடிகளும் சைனர் என்று கூறமுடியாது.

இனி, அடிகள் என்ற சொல் எவ்வாறு வந்திருக்கும் என்பதைச் சற்றுக் காண்போம். வள்ளல், அரசன் இவர்களின்கீழ் வாழ்ந்தவர்கள் தம்மை அவர்களின் உயர்வு குறித்து அவரடிக்கீழ் வாழ்ந்ததாகக் கூறிக்கொண்டனர். அடிக்கீழ் வாழ்ந்தோன் தன்னை அடிக்கீழ் என்றே கூறிக்கொண்டான். அடிக்கீழ் உறைந்தவன் அடியுறை என்றே தன்னைக் கூறிக்கொண்டான்.

"இரும்பிசி ராக்தை அடியுறை எனின்." (புறம். ௬௭)

"அடிகிழற் பழகிய அடியுறை." (புறம். ௧௯௮)

என்ற இடங்களில் அடிக்கீழ் என்ற பொருளும் எழுதினர் புறநானூற்றுப் பழைய உரையாசிரியர். 'அடிக்கீழ்' என்பது 'ஒருவகை வணக்கமொழி' என்பர் உயர்திரு. உ. வே. சாமிநாதய்யர் அவர்கள். இச்சொல்லையே கடவுளரிடத்திலும் கையாண்டனர்.

"காமரு சுற்றமோ டொருங்குநின் னடியுறை
யாமியைந் தொன்றுபு." (பரிபாடல். கடவுள். ௬௨, ௬௩)

"நயத்தலிற் சிறந்தஎம் மடியுறை." (பரி. ௩. ௯௮)

"இருங்குன்றத் தடியுறை யியைகென." (பரி. ௧௫. ௬௫)

"மாலை மாலை யடியுறை யியைநர்." (பரி. ௧௭. ௭)

இப் பரிபாட்டடிகளில் அடிக்கண் உறையும் வாழ்வு என்ற பொருளில் அடியுறை யென்பதும்,

"இடையொழி வின்றி யடியுறையார் ஈண்டி."

என்ற அடியில் அவ்வாழ்வுடையவர் அடியுறையார் என்பதும் காண்க. இவ்வாறு அடிக்கண் வாழ்பவன் 'அடியான்' என்றும், பலர் 'அடியார்' என்றும் வழங்கப்பட்டனர். நாளடைவில் 'அடியார்' 'அடிகள்' ஆயினர் என்னலாம். இறைவன் அடியைத் தலையில் உடையவர் அடியார் என்னப்பட்டனர். அவரே அடிகள் எனப்பட்டனர். நாளடைவில் பன்மைச்சொல் உயர்த்தற்கண்

ஒருமைக்கும் வழங்கலாயிற்று என்க. அதனாலன்றோ சைவர்கள் தாள் + தலை = தாடலை என்ற சொற்புணர்ப்புக்கும் இறைவன் தாளைத் தாங்கிய அடியவரின் தலைக்கும் தொடர்பு கூறினர். எனவே பண்டு அடிகள் என்ற சொல் இறைவனடியாரைக் குறித்ததென்க. அச்சொல்லையே சைன அடியவர்க்கு அச் சமயத்தார் மேற்கொண்டனர். பின்னர் அச்சொல்லே பொது வில் மதிப்புக்குரியவர் யாவர்க்கும் உரியதாயிற்று.

"குலம்யா தடிகட் கென்ன." (சீவக. ௧௭௮)

"நம்பி வந்தனன் அடிகள் என்றான்." (சீவக. ௧௧0௩)

எனப் பெண்பாலார்க்கும் அச் சொல் உரியதாயிற்று.

இதுகாறும் கூறிவந்தவாற்றால் அடிகளின் சமயம் இன்ன தென்று துணிய இயலாது என்பது பெறப்படும். எனவே அடிகள் பொதுநோக்குடன் சிலப்பதிகாரத்தை யியற்றினர் என அறியலாம். இறுதியாக ஒன்றுகூறி இக் கட்டுரையினை முடிப்பேம்.

கண்ணகியும் கோவலனும் சைனர்கள். கவுந்தியடிகளும் சைனத்துறவியாவர். இவர் மூவரும் மதுரை நோக்கிப் புறப் பட்டு வந்தபோது, இடைவழியில் காட்டிடத்தில் எயினர் பதியில் ஐயைக் கோட்டத்தையடைந்தனர். ஐயை பலியுண்ணும் சிறு தெய்வம். இத் தெய்வம் கண்ணகியைப் புகழ்ந்தது. மூவரும் வேட்டுவர் ஆட்டத்தைக் கண்டுகளித்தனர். அப்பால் உறையூர் கழிந்து சென்று ஓரிடத்துத் தங்கிய காலத்துக் கோவலன் அம்பணவர் கூட்டத்தாருடன் கலந்து "பாய்கலைப் பாவை பாடற் பாணி, ஆசான் திறத்தின் அமைவரக்" கேட்டான். அவ் விடங் கடந்து மதுரைப்புறம் சென்று தங்கியபோது, மாதரி என்ற இடைக்குல மடந்தை—வைணவமடந்தைபால் கவுந்தியடி கள் கண்ணகியை அடைக்கலந் தந்தார். கண்ணகியும் ஆய்ச்சியர் குரவை கண்டுகளித்தாள். கண்ணகி வஞ்சிநகர் சென்று தெய்வமானபின் செங்குட்டுவன் சைனசமயப் பத்தினியாகிய அவட்குக் கோயில் எடுத்தான். இக்கோயில் எடுப்பு விழாவிற்கு இளங்கோவடிகளும் உடன் இருந்தனர். இவற்றை யெல்லாம் நோக்கும்போது சிலப்பதிகாரக் கதையானது சமயப் பொது நோக்குடையது என்பதும் அதனாலேயே அதனை அடிகள் இயற்றலாயினர் என்பதும் அறியலாம். ஆகவே அடிகளை இன்ன சமயத்தார் என்று அறுதியிட்டுரைக்க இயலாதென்னலாம்

ஆனாலும் சைனர் அல்லர் என்பதை மட்டும் உறுதியாகக் கூறலாம். கண்ணகி மதுரையைத் தீக்கிரையாக்கி வஞ்சிநகர்

சென்று இறந்தனள். அவள் அடுத்து தேவன் மகளாயினள். கண்ணகியின் வாக்காகவே,

"தென்னவன் தீதிலன் தேவர்கோன் தன்கோயில்
நல்விருந் தாயினன் நானவன் தன்மகள்
வென்வேலான் குன்றில் விளையாட்டு யானகலேன்
என்னோடுந் தோழிமீர் எல்லீரும் வம்மெல்லாம்"

என்று கூறியதாக அடிகள் வாழ்த்துக் காதையில் உரைத்தனர். சைனசமயத்தைச் சார்ந்த கண்ணகி தேவப்பிறப்படைய சமண நூல் இடந்தராது என்க. இல்லறத்திருந்து கற்புநெறி யொழுகிய மகளிர் தேவப்பிறப்பெய்துதல் உண்டு. பத்மாவதி என்ற யக்ஷி அவ்வாறு தெய்வப்பிறவி பெற்றவளேயாவாள். கண்ணகி தன் கணவன் இறந்ததும் அரசன்மீது சினங்கொண்டு அவன் இறக்கக் காரணமாகியதாலும், மீண்டு மதுரைநகரையே யழித்ததாலும் அவள் ஆற்றிய விரதங்களின் பயனெல்லாம் பாழாயின என்னல்வேண்டும். மீண்டும் அவள் தவமிருந்தே தெய்வப்பிறவி யடைய இயலும். இது சமணசமய நூலுக்கு ஏற்றதாகும். ஆனால் கண்ணகி மதுரையை அழித்து இறந்த உடனேயே தெய்வப்பிறவி எடுத்தாள் என்பது பொருந்தாது. மதுரையை எரித்ததற்கும் இறந்ததற்கும் இடைப்பட்ட நாட்கள் பதினன்கே யாம். இக்காலத்திற்குள் அவள் மீண்டும் தவத்தினை மேற்கொள்ளவில்லை. எனவே சமயக் கொள்கைக்கு மாறாக இருக்கிறது கண்ணகியின் முடிவு. சமணசமயத் துறவியாயின் அடிகள் இம் மாறான முடிபினை ஒப்புவரோ? அச் சமயத்துக்கு மாறான கொள்கையை வெளிப்படுக்கும் ஒரு கதையினையாவது கூறலாமோ? அவ்வாறு கூறுவதே சமயத்துக்குத் துரோகம் செய்ததாகும். சமயத்துக்குப் பொருந்தாத கொள்கையுடைய வரலாறு பொய்யென்றாகும். எனவே, கண்ணகிக் கதையே பொய்க்கதையாகும். பொய்க்கதை புகலுவரோ அடிகளார்? அதனால் உண்மைச் சமணசமயத்தைச் சார்ந்தவரல்லர் அடிகள் என்னலாம். ஆகவே இளங்கோவடிகள் வைதிக சமயத்தைச் சார்ந்தவரே என்னலாம். வைணவர் என்று முடிவு வாராத வரையில் இப்போது இருக்கும் சைவர் என்ற முடிபினையே நாம் கொள்ளல் தகும்.



அருட்கவி
திரு. சேதுராமனூர்



திரு. சுப்பிரமணியனர்　　　　அருட்கவி திரு. சேதுராமனர்

# அருளாக்கம்

1—4—1957 திங்கட்கிழமை மாலை கோடம்பாக்கம் வடபழனி ஆண்டவர் திருக்கோவிலின்கண் நிகழ்ந்த திருவருள் நிகழ்ச்சி. அப்பொழுது இந்துமத அறநிலையப் பாதுகாப்பு ஆட்சித்துறை ஆணையாளர் திரு. அ. உத்தண்டராம பிள்ளை, ஐ. ஏ. எஸ்., அவர்களும், சென்னைமா நகராண்மைக்கழக ஆணையாளர், திரு. பாலசுந்தரம் பிள்ளை, ஐ. ஏ. எஸ், அவர்களும், எழும்பூர் மினர்வாக் கல்லூரித்தலைவர் திரு. பரசுராம ஐயரவர்களும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சிப்பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்களும் இன்னும் பலரும் குழுமியிருந்தனர்.

திருமுருகன் திருவருள்பெற்ற சீர்மிக்க இளைஞர் திரு. சேதுராமன் அவர்களும், அவர்தம் முன்னோன் திரு. சுப்பிரமணியம் அவர்களும் அன்புடன் திருக்கோவிலை வலமாக வந்து மூத்த பிள்ளையாரை வழிபட்டுத் திரு. சேதுராமன் அவர்கள் அருணகிரியார் பாடியருளிய திருப்புகழ் ஒன்றினை விருப்புடன் பாடினர். பாடித் திருவருள் வேட்டு நின்றனர். நிற்க, அவர் பால் அருளாட்சி விளங்குவதாயிற்று. விளங்கவே தாமாகவே பாடினர். இதுவே பண்டையோர் கண்டு வழுத்திய அருட்கவிப்பண்பாகும்.

பின்பு பழனியாண்டவன் திருமுன்பு அவ்வாறே ஆறு திருப்பாட்டுக்கள் பாடப்பெற்றன. பாட்டுக்கள் புலமையின் எல்லையைக் கடந்து அருளின் உந்துதலால் தட்டுத் தடையின்றி வரும் நிலைமை நேரிற் காணும் அனைவர்க்கும் நன்கு புலனாகும். அம்மட்டுமன்று. பாட்டின்கண் காணப்படும் சொல்லும், பொருளும், குறிப்பும், வரலாறும் பிறவும் மிகமிகப் பழங்காலத்துள்ளனவும், இப்பொழுது பெருவழக்கில் இல்லனவும், பல பெரும் புலவர்கட்கு எளிதில் விளங்காதனவுமாகவுள்ளன. பாடும் அத்திருவினர்க்கு ஒருசிறு புலமைதானும் அத்துறைக்கண் இல்லை என்பது தெளிவு. அதனால் இத்திருவினரைக் கருவியாகக் கொண்டு திருமுருகன் அருளாக்கமே பாடுகின்றதென்பது தேற்றம்.

இருபாலாரினும் நூற்றுக்கணக்கான மெய்யன்பர்கள் மிக்க அன்புடனும் அமைதியுடனும் கேட்டு இன்புற்றனர். அந்நிலை வடபழனியாண்டவனே நேரில் திருச்செவி சாய்த்து இன்புறும் பெருநிலையினை மெய்ப்பிக்கும். பல நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்குமுன் நால்வர் முதலிகள் வாயிலாகவும், அருணகிரியார்

குமரகுருபரர் முதலியோர் வாயிலாகவும் நிகழ்ந்த அருள்நிகழ்ச்சி இக்காலத்து வாழும் மெய்யன்பர்கட்கு மேலும் உறுதியுண்டாகவும், செந்தமிழ்க் கடவுளரான சிவபெருமான் திருமுருகன் திருவருள் வேட்கையும் அத் தமிழே என்பது அனைவர்க்கும் அங்கை நெல்லி என நீங்காது உளத்துப் பதியவும், பதிந்தவாறே நாளுங்கொண்டு ஒழுகவும் பரமன் செய்தருளும் வரமுடைச் செயலாகும்.

அத் திருப்பாடல்களை அவர்தம் முன்னேன் அடியொற்றி உடனுக எழுதிக்கொள்கின்றனர். இத் திருப்பாடல்களை அப்பொழுதே ஒலிபெருக்கியதுடன் ஒலிப்பதிவும் செய்தனர். இந் நிகழ்ச்சி மாநகராண்மைக்கழக ஆணையாளர் அவர்கள் துணையால் நிகழ்த்தப்பெற்றது. இத் திருப்பாட்டுக்களுள் ஊர்த்தொகைப் பாட்டு ஊர்பலவும், இசைபலவும் விரவி மிக்க சுவைபயந்து நிற்கின்றது. பாடும்பொழுது பண்ணுடன் மிக வுருக்கமாகத் தன்னை மறந்து பாடும் காட்சியும் ஓர் அருட்காட்சியேயாகும். பாடிய பாடல்களுக்கும் பண்ணும் வண்ணமும் அமைத்துள்ளனர்.

பின்பு உடன்பிறந்தார் இருவர்களும் தேவார இசையரங்கு நிகழ்த்தினர். அன்பர்கள் அதனையும் கேட்டின்புற்றனர். திருக்கோவில் அறமுதல்வரும் அறங்காவலரும், குருக்கள் உள்ளிட்ட பணியாளர்களும் சிறப்பாக வரவேற்று அன்பு பூண்டு வேண்டுவ செய்து துணைநின்றமை நனிமிகப் பாராட்டற்குரியதாகும்.

இதுகாறும் இத் திருவினர் வாயிலாக அருளால் வெளிப்போந்த திருப்பாட்டுக்கள் ஏறத்தாழ மூவாயிரத்துக்கு மேலாகும். அவையனைத்தும் நூல்வடிவில் வெளிப்போந்து சிவநெறிக்கும் செந்தமிழ்க்கும் பேரரண் செய்யுமாறு பெருந்துணை புரிவது பெரும் சிவபுண்ணியமாகும். பெருஞ் செல்வர்களும் திருமடத்தார்களும் முன்வந்து துணைபுரிய வேண்டுகின்றோம்.

1954-ல் சேலத்தில் இவர்கட்கு முதற் பாராட்டு நிகழ்ந்தது. ஆங்குப் பாடப்பெற்ற ஐம்பத்தொரு பாடல்களும் திரு. பேராசிரியர் புலவர், சுகவனம்—சிவப்பிரகாசம் அவர்கள் குறிப்புரையுடன் நூல்வடிவில் வெளிவந்துளது. நம் செல்வியிலும் சில குறிப்பு வெளிவந்துளது. செந்நெறிப் பெரியார் திரு வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் செய்து போதரும் நாள்வழிபாட்டிலும் இடையிடையே செவ்விய புதுப் பாட்டுக்கள் இத்திருவினரால் பாடப்பெற்று வருகின்றன. இவர்களும் இவர்கள் திருத்தொண்டும் நீடுவாழத் திருமுருகன் திருவடியிணையினை வாழ்த்துகின்றோம். இவர்தம் திருத்தொண்டு தருமபுரி, கோயமுத்தூர்

முதலிய தமிழகத்திலும், விசயவாடா முதலிய தமிழ்க்கிளையாம் தெலுங்ககத்திலும் பரவியுள்ளது. வடபழனி ஆண்டவர் திருமுன் இவ்வருட் கவிஞர் பாடிய பாடல்கள் வருமாறு:

(கணபதி சந்நிதி)

இராகம்: ஆனந்த பைரவி. தாளம்: சம்பை.

1. அடல்மிக்குறு ஞானசத் திகிபாதா
அருமைத்திரு மேனிபெற் றொளிர்ஆனாய்!
கடவுட்க்ருபை பூரணப் படஞானக்
கருணைக்கிட மாயெனக் கருள்வாயே;
கடலைப்பரு கோர்துதிக் கரமூலா!
கரிவத்திர னைசமுற் றிடவேசெய்;
வடபொற்பழ னுபுரித் தலவாசா!
வரசித்திவி நாயகப் பெருமாளே.

(வடபழநியாண்டவர்—மூலத்தானம்)

இராகம்: கரகரப்ரியா. தாளம்: திரிபுடை.

2. வேட்டானைவிண் அமரர் சிறப்புற
[1]ஒட்டானையொண் [2]மழுவைக் கரத்தினில்,
[3]வீட்டானைமெய் யடியர் தமைக்கட விடரூடே—
மீட்டானைமன் மதனை யெரித்ததெ
ழுட்டானைவன் மறலி படப்பொர
[4]வீட்டானையுண் மகிழ்கொள் தகப்பனென்
முருகோனே.
[5]கோட்டானையென் [6]விடபிகள் சுற்றிய
நாட்டூர்நனி பளிநெரு வைப்பதி
கோற்றேன்மொழி யுமையுறை செய்ப்பதி குருகாவூர்
[7]கோட்டாலைசெய் [8]கணபதி கச்சியொ
டாச்சாள் புரம் அதிகை அருட்டுறை
கோட்டூர்முத லலகில் திருப்பதி துதியேனோ;

---

1. ஓடு - கபாலம். 2. மழுவை - மழுவை வைத்துள்ள.
3. வீடு - பேரின்ப வீடு. 4. வீட்டான் - அழித்தான்.
5. கோட்டு ஆனைஎன் - கொம்புகளோடு கூடிய அத்தி என்கின்ற.
6. விடபிகள் - மரங்கள். 7. கோட்டாலை - விகடக் கூத்து.
8. கணபதி - விகடசக்கர விநாயகர்.

[1]ஆட்டானைகள் அரிபரி மைக்கரி
போர்ச்சேனைகள் பிறவும் அணிப்பட
ஆர்த்தேவரும் அவுணர் முடிப்பொடி பொடியாக—
[2]ஆக்கூர் அலை நகரி திருத்தணி
ஆப்பூர் பல மலைகள் பொழிற்சிலை
ஆக்கூர் குருமலை பழநிப்பதி பாநாகம்;
காட்டானைகள் உலவுறு கற்குடி
[3]கோட்டாறு தென் மதுரை கருக்குடி
காட்டூர்கழு மலமரு ணைக்கிரி களரோடே—
கார்க் கோடக நகர மெனப்படு
மாப்பேர்பெறு வடபழநிப்பதி
காத்தாள்கரு ணையினுரு வைப்பெறு பெருமாளே.

இராகம்: வராளி. தாளம்: ஆதி.

3. அரநதி மதியணி நீடார் காடார்
சடையுமை விடையினள் மாதா காதார்
அணிகுழை பணியினள் சேயே! நாயேன்
எனையாளும்—
அறுமுக! கரமுறு [4]கோலார் கோலா
கடிபொழில் படிவய லூரா தீரா
அழகொடு குழகுறு ரூபா நீபா அதிசூரா;
பரகதி பசுபதி ஆசா பாசா
திகளமொ டவையெவை ஓராய் தேராய்
பழவினை தொலைவழி பாராய் ஆராய் பழிதீராய்—
பணிவிடை நனிசெய வாராய் சேராய்
அடியவ ருடனருள் சாராய் சீராய்
பரிவுறு சுத'என நீயே தாயாய் அழையாயோ;
நரபதி சுரபதி நாலா லீலா
மகபதி மகள்பதி ஞாதா நீதா
[5]நகதன வனசரி நாதா கீதா எனவானோர்—

1. ஆள் + தானைகள்.
2. (பொடியாக) ஆக்கு + ஊர் - இது போரூராயிருக்கலாம்.
3. கோட்டாறு - சம்பந்தர் தேவாரம் பெற்ற சிவத்தலம்.
4. கோல் - தண்டாயுதம். 5. நகதனம் - மலைமுலை.

நயமுறு புகழுரை தாளா! காலா
யுதமது கொடியென [1]வேளா ஆளா
நடமிடு சரவண சாதா வேதா கமபோதா ;

வரநதி சுரநதி பாலா வேலா
யுதசிவ சுதகுரு நாதா கோதா
மணிதிரு மணியணை தூயோன் மாயோன்
மருகோனே·

மரகத துரகத யானு ஞானு
கரசுர குருபர [2]மோனு தீனு
வடபழ நியில்வளர் வாழ்வே வானோர் பெருமானே.

இராகம்: உச்சயினி. தாளம்: ஆதி.

சத்திய சிவஞானியர் நித்தமு மறவாதுரை
தத்துவ குருநாயக சமரூரா—

சற்குரு வடிவேலவ நிர்க்குண பரிபூரண
சத்துவ பரிபாலன சகநாதா ;

புத்தியை உனதாளினில் வைத்திட, அறிவானது
பொய்ப்பவ நவமாயையி லுழலாதே—

புக்குனை வழிபாடுசெய் பத்தியை அருள்வாய்பத
புட்பமென் முடிமேலுடன் [3]முகிழ்தாராய் ;

நத்திய அடியாரவர் மெத்திய புகழால்நிதம்
நற்கதி பெறவேஇசை தருதாளா—

நச்சுறும் அரவாரணி மெச்சிய சிவநாயகர்
நற்பொரு ளுரையாயென மொழிபோதா ;

ஒத்திய கரதாளமொ டொப்பிலி அரனார்தமை
உற்றிசை தமிழாலுரை திருவாயா—

உத்தர பழனிபுரி வித்தக! உடைகோவண!
உத்தம தவவேதியர் பெருமானே.

---

1. வேளா ஆளா - வேட்டு, ஆண்டு.
2. மோன ஆதீனு எனப்பிரிக்க.
3. முகிழ்தருவாய் - மலர்த்துவாய்.

இராகம்: இந்தோளம். தாளம்: ஆதி.

5. திருவருளை நாடி இன்று நாயேன்—
திருமுனுற நீயும் ஒன்றும் [1]ஓராய்;
அருள்புரிய லாகும் என்கில் வேறார்—
அடியனிடர் தீர என்றும் ஆள்வார்?
முருக குக ஞான கந்தவேளே—
மொழி குழற நாளும் அன்பினோடே;
வரும் அடிய ரோது தண்டபாணி!
வடபழநி மேவு தம்பிரானே.

இராகம்: தரங்கிணி. தாளம்: ஆதி.

6. குகனே சரணு யுதவேலா—
குருவே திருவே குமராசண்
முகனே முனியே முருகேசா—
முதல்வா எனையாள் கழல் சேராய்;
அகனே அமர்வோய் அறிவாளா—
அடலே றுடையார் மழுவாளி;
மகனே [2]பழனு புரியாமெய்—
வடபால் இமையோர் பெருமாளே.

இராகம்: இந்தோளம். தாளம்: சாபு.

7. [3]விதுநிகர் வத் திரநீபா—
வெளிறு பொடித் திருமேனிப்;
புதுமண நற் [4]புழுகாளா—
புகலிட மற் றுளதோதான்;
[5]சது முகனைத் திருமாலைத்—
தரு முலகத் தொருருபா;
[6]மது கரமொய்த் தொளிர்தாரா—
வட பழநிப் பெருமாளே.

1. ராய்......ஆகும் எனில் - ஓராதவனாய் (அருள்புரியல்) - (பின்னர்) ஆகட்டும் எனில்.

2. பழனுபுரி யாம் மெய் வடபால் - மெய் - மெய்யான, வடபால் பழனுபுரி - வடபழநி எனக் கொள்க. 3. விது - சந்திரன். 4. புழுகு - புனுகு. 5. பிரமவிஷ்ணுக்களையும் படைத்தருளும், உலகத்து ஒருருபா - விசவரூப முடையவனே என்க. 6. மதுகரம் - வண்டு.

# நச்சுக்கோப்பை

## (நாடகம்)

[திரு. வில்லிவாணன்]

(சிலம்பு ௩-க - பரல் எ - ௩௪௨-ஆம் பக்கத்தொடர்ச்சி)

## இரண்டாம் களம்

**காட்சி :** அத்தமியாள் கோயிலுக்குள் புறத் தோற்றம்.

[அத்தமியாள் என்னுந் தெய்வத்தின் பேருரு திரையிடப்பட்டுள்ளது அதன் பீடத்தைச சுற்றி வளைவு. ஏற்றிய விளக்குகள் கம்பங்கள் தோறும். முக்காலிகளும் பூந்தொட்டிகளும். பூமாலைகள் மேடைமீது. தேவதையின் அருகே ஒரு பலிபீடம். அதன் மேலே இரண்டு கோப்பைகள். பயபக்தியுடன் இசைமுழக்கம். சந்நியாசினிகள் கோயிலை அலங்கரித்துக்கொண்டிருக்கின்றனர். ஒரு சந்நியாசினி வருகிறாள்.]

**சந்நியாசினி :** சந்திரிகே! அந்தச் சினோரியன் அடிக்கடி நம் சந்நியாசினியைப் பார்க்க வருகிறானே. அவன் மறுமுறையும் வந்துள்ளான். கோயிலுக்கு வெளியே நிற்கிறான்.

**சந்திரிகை :** நாங்கள் அவளுக்குச் சொல்லியனுப்புகிறோம். (அங்கிருக்கும் சந்நியாசினிகளுள் ஒருத்தியிடம் சொல்லியனுப்புகிறாள்.) கம்மா சினோரியனிடமிருந்து தப்பி வந்ததும், அழகு, சக்தி பெருமிதம் இவற்றைக் கண்டு சந்நியாசினியாக ஏற்றுக்கொள்ளப்பட்டாள். அவளுடைய கண்கள் சலவைக் கல்லாலாகிய தரையினைப் பார்த்த வண்ணமிருப்பதில்லையா? இன்று அவை கூர்ந்தும் விளக்கமாகவும் இருக்கின்றன. அவை நேரே கோயிலுக்கு வெளியேயும் பார்க்கின்றன. ஒருகால், சினோரியனை மணக்க முடிவு செய்து விட்டனளா?

**சந்நி :** சினாதனைக் குத்திக்கொன்ற அவனையா மணப்பாள்? அதை நம்பமுடியாதே.

**சந்திரிகை :** அவளையே கேட்டுவிடுங்கள்.

[சந்நியாசினி கோலத்துடன் கம்மா வருகிறாள். திரைக்கு எதிரே.]

**சந்நி :** சினோரியனை மணக்கப் போகிறாயா?

**கம்மா :** பெண்ணே! நான் காலனைத்தான் மணப்பேன். இறந்தவனைத் தான் மணப்பேன்.

**சந்தி:** அப்படியாயின் சிறுரியனே அல்லவா?

**கப்மா:** பெண்ணே! சில வேளைகளில் இந்தப் பேர் அத்தமியாள் சொல்லும் விண்மொழி (அசரீரி வாக்கு) நேரே விடை சொல்லுவதில்லை.

**சந்திரிகை:** கோயிலுக்கு வெளியே இருக்கும் சிறுரியனிடம் பேசுகிறாயா?

**கப்மா:** ஏன்? உள்ளே வரச்சொல்.

[முன்னே முக்காலி யொன்றுக்கருகே செய்திசொல்வோன் வருகிறான்.]

**செ. சொ:** (முழங்கால் பணிந்து) சிறுரியர் வாழ்க! அவருடைய கரம் பற்றப் பல முறைகள் மறுத்திருக்கிறீர்கள். முன் தங்களைப் பார்த்தபோதும் ஒன்றும் சொல்லவில்லை. கடைசி முறையாக உங்களை மிகவும் வணங்கிக் கேட்டுவரச் சொல்லி யனுப்பியுள்ளார். சிறுதரை அவர் [குத்திய]போது, தம் கழுத்தை யாரோ பிடித்தழுத்துவதாக நினைத்தாரேயன்றி அது சிறுதர் தாம் என்பது அறியக்கூடவில்லை. இவ்வாறு தெரியாது நேர்ந்த பிழைக்கு வருந்துகிறார். எனவே அதனை மறந்துவிடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறார். உங்களை அவர் காதலிப்பது இவ்வளவு அவ்வளவு அல்ல. இதைத் தாங்கள் நம்பவேண்டுமென்பது அவர் பிரார்த்தனை.

**கப்மா:** அவ்வாறே ஆகட்டும்.

**செ. சொ:** ஆயின் நன்றே. தாங்கள் அவரை மணக்கலாமன்றோ?

**கப்மா:** அது நல்லது என்றால் அவ்வாறே செய்ய எண்ணியுள்ளேன்.

**செ. சொ:** இன்றே ரோம அரசு அவருக்கு முடி சூட்டுகின்றனர். அவர் ரோமுக்குச் செய்துள்ள நன்றியைப் போற்றுகின்றனர். இன்றே தங்களை மணந்துகொள்ள விரும்புகிறார். மணந்த பின் இருவருமாக முடிசூட்டிக்கொள்வது அவருக்கு விருப்பம். மக்கள் எல்லாரும் இக் காட்சியைக் காணவேண்டும். நீங்கள் இருவரும் மனமொத்தீர்கள் என்பதை அறிவிக்க விரும்புகிறார். இனி இந்நாட்டில் பகை, பழியில்லாதிருக்கவேண்டும். அமைதியுடன் ரோமுக்குட்பட்ட நாடாகச் செழிக்கவேண்டும் என்பது அவரது பெரு விருப்பம்.

கம்மா : இன்றோ? மிக விரைவிலா? நான் எண்ணிப் பார்க்க வேண்டுமே! எப்போது முடிசூட்டுவார்கள்?

செ. சொ : இப்போதே ஆகவும் கூடும்.

கம்மா : எங்கே?

செ. சொ : கோயிலருகே!

கம்மா : முடிசூட்டுமுன் ஒரு முறை வா. சொல்கிறேன்.

[செ. சொ. போகிறான்.

சந்தி : அத்தமியாளே! பெருந்தெய்வமே! கம்மா! இது நல்லதா. அறிவுடையதா, சினதரைக் கொன்று ரத்தம் படிந்த அக் கரத்தைப் பற்றுவதா?

கம்மா : நன்று! என் வாளால் சினரியனால் உண்மையுளம் படைத்த சினதர் வீழ்த்தப்பட்டார். அறிவுடையது! வாழ்வு இறந்துபடும். அறிவு விதிக்குப் பணிந்துவிடும். அறிவுடையார் அவ்வாறு சொல்வாரோ? பேரரசு ரோம், நம்மால் வெல்லப்படுமோ? அனைவரும் நானும் கலாதிய நாட்டில் பிறந்தோம். கப்பம் கட்டும் சிற்றரசுகள் நாங்கள். அவரும் நானும் இந்த ரோம் அரசுக்குப் பாடம் கற்பிக்க வேண்டும். அவ்வரசு தன் ஆட்சியை எங்குச் செலுத்த வேண்டும் என்று அறியவேண்டும். நாட்டு நன்மைக்காக என் சொந்த ஆசா பாசங்களை விட்டுவிடவேண்டாமோ?

சந்தி : எனக்குத் தெரியும். நீங்கள் மணக்கமாட்டீர்களென்று.

கம்மா : உண்மையாகவா? நீ பொறுத்துப் பார்.

['சினரியர், சினரியர்' என்று தொலைவில் குரல்கள் கேட்கின்றன.]

கம்மா : சினரியர்! சினரியர்! சினதர் இருக்கும் வரையில் அவரைப் போற்றினர். என்ன கேவலம்! ஒருவன், தன் கொள்கையை மாற்றிக்கொள்ளும் ஒருவன், தன் மதிப்பில் குறைந்து விடுகிறான். அதற்காகத் தன்னை நொந்து கொள்கிறான். ஆயின் பலர் பொய்க்குத் தம்மை அடிமையாக்கிக் கொள்கிறார்கள். என்னே உலக இயல்பு!

சந்தி : ரோமப் படைஞர் இட்ட கூக்குரல் போலிருக்கிறது; நம்மவரில்லையே.

கம்மா : நாட்டுக்குழைத்த நண்பன் நண்பகலில் தூக்கில் தொங்குகிறான். அன்று காலையில் பாதகனயிருந்தவன்

மாலையில் அன்புக் கண்ணனைன். எவன் தலை பந்துபோல் உதைபட்டதோ, அஃது இன்று முடிசூடிக்கொள்ளும்.

[வெற்றி முழக்கம் கேட்கிறது. கலாதிய உயர் குடியினன் ஒருவன் வருகிறான். ஒரு மெத்தை தைத்த தட்டில் முடியை ஏந்தியிருக்கிறான்.]

**உயர்குடி:** (மண்டியிட்டு வணங்கி) சிஞரியரிடமிருந்து தங்கள் நன்மையை விரும்பி வாழ்த்துச் செய்தியைக்கொண்டு வந்துள்ளேன். முதல் கலாதிய அரசு! தாங்கள் பெருமையுற்று சிஞரியருடன் முடிசூட்டிக்கொள்ளவேண்டும். தங்களுடைய விருப்பத்தை அறிந்துகொள்ளக் காத்துக்கொண்டிருக்கிறார்.

**கம்மா:** நிழல்களுக்குள் ஒரு நிழல்; ஆவிகட்குள் ஓர் ஆவி; எனினும் புதியது; அவற்றில் அதிசயமானதொன்று, தலைவனெனும் தன்மை அதில் உள்ளது. கம்மாளும் சிஞரியரும் ஒருங்கே அரசுக் கட்டிலில் இருந்தால், அந்நிழல் உயிர் பெற்றெழுதலும் கூடுமே! அஃது என்னையும் முடிசூட்டிக் கொள்ளும் அரசரையும் வெடித்து வீழச்செய்யுமே! எனவே அவரை முதலில் முடிசூட்டிக்கொள்ளச் சொல்லுங்கள்—பின் மணமாகட்டும்—ஆம், நான் கலாதிய நாட்டின் அரசுரிமையை ஏற்றுக்கொள்கிறேன் என்று சொல்லுங்கள்.

[எல்லோரும் வியப்படைகிறார்கள்.]

எனினும் நீங்கள் நான் முடிசூட்டிக்கொண்டதைக் கண்டிருப்பீர்கள் (முடியை அணிந்துகொண்டு) அவருடைய முடிசூட்டிக்கொண்ட அரசி.

**உ. கு. பி:** அவ்வாறே சென்று அவரிடம் கூறுகிறேன்.

[செல்கிறான். இரண்டு சந்நியாசினிகள் கோயிலில், அம்மைக்கு முன் சென்று திரையை இருபுறங்களிலும் இழுக்கிறார்கள். (தெய்வம் காட்சி அளிக்கிறது) படிக்கதவுகளைத் திறந்துவிட்டு முழங்காலிட்டுப் பணிகிறார்கள். ஒருத்தி சென்று, மண உடையினை எடுத்து வருகிறாள்; பின் சந்திரிகையுடன் கம்மாளுக்கு அணிகிறாள். அப்போதே பல சந்நியாசினிகள் கோயிலில் இருமருங்கும் நிற்கிறார்கள். கம்மாவும் மற்றச சந்நியாசினிகளும் முழங்காலிட்டுக், கைகளை மேலுயர்த்தித், தலை தாழ்ந்து கடவுளை வணங்குகின்றனர். 'சிஞரியர்! சிஞரியர்!' என்னும் குரல் கேட்டு அனைவரும் எழுந்திருக்கின்றனர்.]

**கம்மா:** கதவுகளை அகலத் திறவுங்கள். நம்முடைய பெருந்தாய் தம் புதிய குழந்தைகள் அனைவரையும் பார்க்கட்டும். (கதவு வழியாக ஞாயிற்றின் ஒளி விழுகிறது.) எனக்குச்

செய்ய மனம் வரவில்லை. (சந்திரிகையைப் பார்த்து) என்னைப் பார்!

[குனிந்து விடுகிறாள். சந்திரிகை வெளியே நோக்குகிறாள். 'சினரியர் சினரியர்' என்னும் குரல் கேட்கிறது.]

**சந்தி:** அவர் அரசுக் கட்டிலில் ஏறுகிறார். பேராசை, கர்வம் இவற்றால் சிவந்துபோன முகம். நம் சினதர் எங்கே, இவன் எங்கே!

**கம்மா:** (நிலத்தில் இருந்த வண்ணம்) உண்மையில் தீமை செய்கிறாய். முகத்தைப் பார்த்தால் சினதரினும் நன்மையுள்ளவர்.

**சந்தி:** (தனக்குள்) என்ன தைரியம் இவளுக்கு? இதைச் சொல்லுமிவளை வெறுக்கிறேன். இவள் மனம் வேறுபட்டுள்ளது போலிருக்கிறதே.

[முரசொலி கேட்கிறது.]

**கம்மா:** முடி சூட்டியாயிற்று!

**சந்தி:** அதோ, அதோ முடிசூட்டுகிறார்கள்.

[கூட்டம் சினரிய, சினரிய என்ற குரலெழுப்புகிறது.]

**கம்மா:** (எழுந்திருக்கிறாள். ஒருத்தி வாசனைப் பொருள்களைக் கொண்டு வருகிறாள். அதனை வாங்கிப் பலிபீடத்தில் புகையும் நெருப்பினிடைப் போடுகிறாள்.) துறக்கத்திலிருப்பதுபோல் நறுமணங் கமழட்டும். இறந்தார் பிழைத்து எழட்டும். அரசர் நடந்து வர இரத்தினக் கம்பளம் விரியுங்கள்—(இசை) (சந்திரிகையைப் பார்த்து) சினதரை மணந்தபோது நீ பார்த்தது நினைவிலிருக்கிறதா? ஆம் அங்கிருந்தனையே; கன்னியின் பயமோ, அவர்மேல் இருந்த பத்திப் பெருக்கான காதலோ, அல்லது எனக்கிருந்த அகநோக்கோ, திருமணக் கோப்பையிலிருந்த நீரினைத் தெளித்தபோது அது கீழே விழுந்து இரத்தம் போன்று சிவந்தோடிற்று.

**சந்தி:** எனக்கு நன்றாய் நினைவிருக்கிறது, நீங்கள் பயந்தது.

**கம்மா:** இப்போது இவ்விரண்டாம் மணத்தின்போது பயமில்லை. இதோ பார்; கையை நீட்டுகிறேன்—பிடித்துக் கொள்; எவ்வளவு விறைப்பாக இருக்கிறது, பார்.

**சந்தி:** அவனைக் கொல்லுமத்தனை விறைப்பாகத்தான் இருக்கிறது.

**கம்மா :** உச்! சும்மா இரு!! இவ்வாறான முரட்டுப் பேச்சு கோயிலுக்குள் அடுத்ததல்ல. அமைதி, மென்குரல் முதலியனவற்றைத்தான் பின்பற்றவேண்டும்.

[சந்நியாசினிகள், குழந்தைகள் மாலைகளைச் சுமந்தவண்ணம் வலம் வருகின்றனர். பொற்றும்பங்களேந்தியுள்ளனர் சிலர். சிலர் மலர்களைத் தூவிக்கொண்டு வருகின்றனர். சிறீரியன் வருகிறான். (அரசக் கோலம், பொன்முடி. செம்பட்டு உடை) அந்தோனியன், புபிலியன், உயர்குடிப் பிறந்தோர், காவலாளர், பொதுமக்கள்.]

**கம்மா :** அரசர் வாழ்க!

**சிறீரியர் :** வாழ்க அரசி! விதி என்னை மேலுக்கு உருட்டி விட்டது. இம் மகிழ்ச்சி பொன்னைய் விளைந்தால் இம் மக்கட்கெல்லாம் வாரி வழங்குவேன். நம்முடைய பழமரச் சோலையில் எல்லோரும் வந்துண்ணச் செய்வேன். எல்லா வாழ்வும் இன்றுதான் தொடங்குகிறது. கழிந்த நாட்கள் விட்டு வந்த நாட்டைப்போல் மறைந்துவிட்டது. நான் வலியுள்ள அரசன் என்று பேசவில்லை அரசி! நின்னை மகிழ்வுள்ளவளாக ஆக்கவேண்டும் என்பதே என் விருப்பம்.

**கம்மா :** அவ்வண்ணமே ஆகட்டும் அரசே!

**சிறீ :** நம் அந்தோனியர், ரோம அரசின் உண்மை நண்பர். நம் திருமணத்தின்போது வந்து பெருமைபடுத்தட்டும்.

**கம்மா :** அவர் வரட்டும் —(அந்தோனியரிடம்) வருக, பெரியீர்! எம் கோயிலுக்கு வருக. (சிறீரியரிடம்) பலிபீடத்திற்கப் புறம் நீங்கள் இருங்கள். (அந்தோனியரிடம்) நீங்கள் இப்படி இருங்கள்.

[அனைவரும் கடவுளைப் பார்க்கின்றனர்.]

**சந்நியாசினிகள் :** குழந்தைக்கு உயிரூட்டும் தெய்வமே! அதற்குக் கையும் காலும் அளிப்பாய்! அதனை வெளியுலகுக்கு அனுப்பி ஈன்ற தந்தைக்குப் பெருமையளிக்கும் கடவுள் நீ. நின் அருள்மூச்சே மலையில் புல் வளர்வது. நிலமனைத்தும் பல வளம் கொழிப்பதும் பழம் பெருகும் பயன் மரங்கள் பல்குவதும், எல்லார் உள்ளமும் இன்பப் பெருக்காவதும், நின்னருளே; என்னையும் இத் திருமணத்தால் மகிழ்வித்தருளத் தேவி நீ அருளுக!

**இசைக் கூட்டத்தினர் :** (பாடிக்கொண்டே) அத்தமியாளே! அத்தமியாளே!! அவர் சொல்வதைக் கேட்டருள்க.

கம்மா : வயிற்றில் இருக்கும் கருவிறப்பதும், பிறந்தபின் இறப்பதும் எல்லாம் நின் செயல் தேவி ! பெருமரம வேரற்றுப் போவதும், ஆறு பெருக்கெடுத்து உலகைப் பாழாக்கிக் கடலில் சேர்வதும் உன் செயலால்! கடல் புரண்டெழுந் துலகை அழித்தலும் நின் செயலே. கேள். நடுக்கடலில் மரக்கலம் ஒடித்து மன்னனை வீழ்த்துதலும் நின்னால் ஆகும். இன்னுங்கேள், நெருப்புமலை அனற் பிழம்பைக் கக்கிச்செழிப் பான பெரு நிலத்தைக் கரிமலைகளாகக் காட்டும். இன்னுங் கேள், என் மனத்தை யானெண்ணியவாறு முடிக்கவேண் டும் தேவி !

இசைக் கூட்டத்தினர் : அத்தமியாளே ! அத்தமியாளே !! அரசி சொல்வதைக் கேள்.

கம்மா : அத்தமியாளே! என் சொல்லுக்குச் செவி கொடுக்க லாகாதா அத்தமியாளே !

எல்லோரும் : அத்தமியாளே !!

சினுரி : (தனக்குள்) இடி முழக்கம்! ஆம். ஆம். புயல் வரு கிறது. நான் முடிசூடுங்கால் மலைப்பக்கம் புயலைக் கண் டேனே. என்ன அவள் முகம் வெளுத்திருக்கிறதே. என் முகம் வெளுத்துள்ளதோ?

கம்மா : இன்னும் என்னை மணக்க விரும்புகிறீர் ?

சினுரி : ஆம். அத்தமியாளிடம் இவை சொல்லத் தக்கனவே.

கம்மா : இன்னும் என்னை மணக்க விரும்புகிறீரா ?

சினுரியன்: ஆம். அத்தமியாளிடம் இவை சொல்லத் தக்கனவே.

கம்மா : சொற்கள் சொல்லும்பொருள் அவ்வாறே காணப்படா. அரசே, நீங்கள் இறக்கும் மட்டும் நான் உண்மையுடையா ளாகவே இருப்பேன்.

சினுரி : நன்றியுடையேன் கம்மா !

கம்மா : (அந்தோனியனைப் பார்த்து) அந்தோனியரே, இம் முரடர்களாகிய எங்கள் மீது கருணை வைத்துள்ள ரோம அரசுக்கு நாங்கள் கடமைப்பட்டுள்ளோம். (திரும்பிப் பலி பீடத்தருகே செல்கிறாள். அங்கிருந்து ஒரு கோப்பையை எடுக்கிறாள். அந்தோனியரிடம் அதனை நீட்டுகிறாள். சினுரி யருக்கெதிர் பக்கம் மேடைமீது ஏறுகிறாள்.) நீங்கள் பாருங்கள் இதனை.

[கொடுக்கிறாள்.]

**அந்தோனியர் :** இஃதென்ன அதிசயம்! பன்முலை அத்தமியா ளின் உரு செதுக்கப்பட்டுள்ளதே:

**கம்மா :** இது பழமையானது. எத்தனை நூற்றாண்டுகளாயினவோ! இப்படிக் கொடுங்கள். இக் கோயிலுக்கே சொந்தமானது (மறுபடியும் பலிபீடத்தில் வைக்கிறாள். முதற்களத்தில் சொல்லிய கோப்பையை எடுக்கிறாள். அந்தோனியருக்குக் காட்டிக் கொண்டே) இதோ இருப்பது அத்தமியாளுக் குடையதே. சினரியர் அன்பளிப்பு; தெய்வம் என் வழி யாக, எங்கள் திருமணத்தின்போது, இக் கோப்பையி லிருந்து நீரருந்தவேண்டுமென்பது திருவுள்ளம்.

**சினரி :** நல்மே. நன்றி, நன்றி கம்மா.

**கம்மா :** அரசே! கலாதிய நாட்டின் பண்டைப் பழக்கம், இருக் கும்போதும் இறந்த பின்னும் இருவரும் ஒன்றியிருக்க ஒரே ஏனத்திலிருந்து நீர் அருந்த வேண்டுவது மரபு. இத தெய்வத்திற்கு அளித்துவிட்டு, எங்களுக்கு இக் கோப்பை யில் நீர் கொண்டு வாருங்கள். (ஒரு குடத்தில் நீர் கொண்டு வருகின்றனர். கோப்பையில் கம்மா நீர் வார்க்கிறாள். சினரியரைப் பார்த்து) இதோ பாருங்கள். (நிரப்புகிறாள்.) (அந்தோனியனைப் பார்த்து) நீங்கள் அருந்துகிறீர்களா?

**அந்தோனியர் :** நான் மணக்கப்போவதில்லையே. நான் ஏன் குடிக்க வேண்டும்?

**கம்மா :** ஆயின் நீக்கள் குடித்தால் எங்களை வாழ்த்துவதாகும்.

**அந்தோனியர் :** (தடுத்து) வேண்டாம் அரசி.

**கம்மா :** நீங்கள் செய்ததும் நல்லதே. இவ் வாழ்த்து எனக்கும் சினரியருக்கும் மட்டுமே. இதோ கடவுளுக்கு நிவேதிக் கிறேன். (நீர் விடுகிறாள்) நான் முதலில் அருந்துகிறேன். (குடிக்கிறாள்) திரும்புங்கள், கலாதிய அரசே, அருந்துங்கள்! தம் திருமணம் நன்கு விளங்கும்! என்னை மகிழ்விக்க வாயாரக் குடியுங்கள்.

[சினரியன் அவளருகே சென்று கோப்பையை வாங்கி அருந்து கிறான்.]

**சினரியன் :** பார் கம்மா! கோப்பையை வடித்துவிட்டேன்.

**கம்மா :** கடவுளுக்கு இஃது உரித்தாக. (கோப்பையில் தங்கி யுள்ளதைக் கீழே கொட்டி விடுகிறாள்.)

**கம்மா :** (பலி பீடத்தின்மேல் கோப்பையை வைத்துவிட்டு) கடவுளுக்குக் கேட்கிறது. (கீழிறங்கி முக்காலியினருகே

வருகிருள். அந்தோனியன் பின்தொடர்கிருன்.) அந்தோனியரே, ஆறு மாதங்களுக்குமுன், தங்களை நாடிவந்தேன். சிறுதரைக் காப்பாற்றுங்கள் என்று வேண்டிக்கொள்ள வந்தேன். அன்று.எங்கே இருந்தீர்கள் ?

அந்தோ : நீ ஏதும் கேட்டதாகத் தெரியாதே!

சிறுரி : (மிக விரைவாக நெருங்கிவந்து) நான் தேடிப்போனேன். அவரைக் காணவில்லை. மற்றைச் சடங்குகள் நடக்கட்டுமே.

கம்மா : அந்தோனியரே! “கம்மா”—யார் பேசியது ?

அந்தோ நானில்லையே.

சந்தி : இங்கு யாருமில்லையே.

கம்மா : யாரோ பேசினரே! அந்தோனியாரே! ரோம அரசுக்கெதிராகச் சிறுதர் சதி செய்திருந்தால், வதைத்துக் கொன்றிருப்பீர்களா?

அந்தோ : வதைப்பது என் கருத்தல்ல. தெரிந்தால், அவரை “எதிர்ப்பது வேண்டாம், நன்றல்ல” என்று தெரிவித்திருப்பேன். உலகத்தை ஆள்வது என்று ரோம அரசுக்கு விதியுள்ளது. அவர் கேட்கவில்லையாயின் சிறை பிடித்து ரோமுக்கு அனுப்பி யிருப்பேன்.

சிறுரி : ஏன் தயக்கம்? வேறேதோ பேசுவதேன் ?

கம்மா : இதோ முடிந்துவிட்டது.

சிறுரி : எதோ ?

கம்மா : நீ நான் மகிழுமாறு நீர் அருந்தியாயிற்றே. நின் நரம்புகளில் அது பாய்ந்தோடுவது தெரியவில்லையா ?

சிறுரி : நின் மீதுள்ள காதலன்பு என் மனத்தை ஊடுருவிச் சென்றுள்ளது. ஏன் வீண் காலமாகிறது? கலாதிய நாட்டரசன் தான் விரும்பிய அரசியை மணக்கிருன். எல்லாரும் அறிய எல்லாம் நன்கு நடைபெறட்டும். (திடுக்கிடுகிருன்) ஆ! என்ன இது? சுருக்கென்றதே! (அந்தோனியனைப் பார்த்து) சற்றுக் கை கொடுங்கள். (நடுங்குகிருன்) ஆ கடவுளே! ஆ தெய்வமே! (விழுகிருன்.)

கம்மா : ரோமாபுரிக் கடவுள்களை அழைப்பதேன்? கலாதிய நாட்டில் பிறந்தவனே, நம் அத்தமித்தேவியை வணங்குவது தானே!

சிறுரி : நஞ்சூட்டப்பட்டேன்—அவள்—கதவை மூடுங்கள். அவள் ஓடாதிருக்கட்டும்.

**கம்மா :** (முக்காலியில் சாய்ந்த வண்ணம்) நானும் அதே கோப்பையிலிருந்துதானே நீர் அருந்தினேன்?

**சினூரி :** ஆம். ஆம். நான் அவளைக் காதலித்தேன்.

**கம்மா :** நான் அவரைக் காதலித்தேன்.

**சினூரி :** கொலை செய்யும் வெறி பிடித்தவளே! என்னைப் பிடித்து நடக்கவையுங்கள். (அந்தோனியனும் புபிலியனும் தூக்கி நிறுத்துகிறார்கள்.) என்னால் நிற்கமுடியவில்லையே.........

[இறந்துவிட்டதுபோல் விழுகிறான்.]

**கம்மா :** (அருகில் சென்று குனிந்து பார்த்து) ஒருமணி நேரத்து அரசு கட்டில் விழுந்துவிட்டதா?

**சினூரி :** (எழுந்திருக்கமுயன்று கொண்டே) அரசு கட்டிலா? நீதானா? விதி முடிசூடுகிறது. நாமல்ல—நின் விதியும் என் விதியும்—நீ என் வழியில் வந்தாய்—கம்மா—செல்கிறேன்.

[இறந்து விடுகிறான்.]

**கம்மா :** (அழுத வண்ணம் சந்நியாசினிகள் பிடித்துத் தாங்க) நின் வழி? புழுவே, நின் பொந்திற்கு நகர்ந்து செல். கீழே நரகத்திற்குச் செல்லும் வழி அது தான். அந்தோனியர் இருக்கிறாரா? உன்னையும் அனுப்ப எண்ணினேன். நல்லதுதான் நேர்ந்தது. எங்கள் மக்கள் ரோமாபுரிக்கு அடிமைகளாயினும், அவன் நல்லவனே.

[விழுந்து விடுகிறாள்.]

**அந்தோ :** நீ உன் நாட்டினருடன் ஒன்றானாய். உன்னை மன்னிக்கிறேன்.

**கம்மா :** (எழுந்திருக்க முயன்றே) 'கம்மா!'—யாரோ அழைத்த குரல் கேட்டதே. பெண்காள்! ரோமர் தலைமையில் நீங்கள் இருக்கவேண்டும். நான் பார்க்காதது நல்லதாய்ப் போயிற்று. இறப்பே நல்லது என்ற பழமொழியுண்டன்றோ? விதியால் அவனுக்கு நஞ்சூட்டினேன். பிடியெங்கே? நான் செல்கிறேன். சினாதரைக் காண்பேன். என் எண்ணத்தில் வெற்றிகொண்டு முடிசூடிய வண்ணம் காண்பேன். சினாதரே! ஏன் அவர் வரவில்லை? ஓ! இந்த முடி அவருக்குப் பிடிக்கவில்லை. என் கைகளால் முடியை எடுக்க இயலவில்லையே. (சந்திரிகை எடுக்கிறாள்) யார் என்னைத் தொட்டது? (கைகளை நீட்டியவாறே எழுந்திருக்கிறாள்.) அதோ, காண்கிறேன்—"கம்மா" "கம்மா." சினாத! சினாத!

[இறந்து விடுகிறாள்.]

முற்றும்.

# வைகாசி அனுடம் வள்ளுவர் திருநாள்

சென்ற நான்கு ஆண்டுகளிலும் வைகாசி அனுடத்தை வள்ளுவர் திருநாளாகக் கொண்டாடுமாறு பல அறிக்கைகள் வெளியிட்டுத் தமிழ்மக்கள் வாழுமிடமெங்கும் இந்நாளைக் கொண்டாடச் செய்தோம். தமிழ்நாடு, வடஇந்தியா, இலங்கை, பர்மா, மலாயா, சிங்கப்பூர், தென் ஆப்பிரிக்கா, பீசி முதலிய பல நாடுகளிலும் உள்ள நூற்றுக்கணக்கான பத்திரிகைகளும் பன்னூற்றுக்கணக்கான சங்கங்களும் எமது முயற்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் நல்கின. சிங்கப்பூர், கொழும்பு, தில்லி, திருச்சி, சென்னை வானொலி நிலையங்கள் ஆண்டுதோறும் இந்நாளன்று சிறப்பு நிகழ்ச்சிகளை ஒலிபரப்பின.

வேண்டுகோள்

தமிழ்பேசும் மக்கள் யாவரும் ஒன்றுபட்டு ஆண்டுதோறும் ஒவ்வொரு வீட்டிலுங் கொண்டாடுந் திருநாளாகத் திருவள்ளுவர் திருநாளை நன்கு நிலைத்திடச் செய்தற்கு இன்றியமையாத பணிகள் சிலவற்றை ஈண்டுக் குறிப்பிடுகிறோம். தமிழினத்தின் ஒற்றுமைக்காகவும், தமிழ்மக்களின் நல்வாழ்வுக்காகவும், தமிழ் மொழியின் வளர்ச்சிக்காகவும் இவற்றைச் செய்தருளுமாறு அன்பர்கள் யாவரையுங் கேட்டுக்கொள்கிறோம்.

1. பத்திரிகைகளும், சங்கங்கள், கல்விச்சாலைகள் முதலிய பொது நிலையங்களும் வைகாசி அனுடத்தை வள்ளுவர் திருநாளாக ஒவ்வொரு வீட்டிலுங் கொண்டாடுமாறு வற்புறுத்திக் கூறிக் கொண்டாடச் செய்தல்; கொண்டாடும் முறைபற்றி அறிக்கைகள் வெளியிடல்.

2. பத்திரிகைகள் யாவும் திருவள்ளுவர் திருநாள் மலர் வெளியிடுதல்.

3. சங்கங்கள், மன்றங்கள், கழகங்கள், கல்விச்சாலைகள் முதலியன திருவள்ளுவர் திருநாளன்று பெரும் விழாக்களை நடத்தல். பேச்சுப்போட்டி, கட்டுரைப்போட்டி, பாட்டுப் போட்டி, திருக்குறள் மனனப்போட்டி முதலியன நடத்தல்.

4. வள்ளுவர் திருநாளாகிய வைகாசி அனுடத்தை அரசினர் விடுமுறை நாளாக்குவித்தல்.

5. நாட்குறிப்பு, நாட்காட்டி, பஞ்சாங்கம் முதலியன வெளியிடுவோர் யாவரும் இவற்றிலே வைகாசி அனுடத்தை வள்ளுவர் திருநாளாக ஆண்டுதோறுங் குறித்தல்.

6. யாவருந் திருவள்ளுவர் தொடர் ஆண்டை வழங்குதல். (திருவள்ளுவர் ஆண்டு தை முதல் நாளிலே தொடங்குகிறது. இப்பொழுது 1988-ஆம் ஆண்டு நடைபெறுகிறது.)

இந்த ஆண்டு, திருவள்ளுவர் திருநாள் 11-6-57 செவ்வாய்க் கிழமையாகும். இந்நாளை யாவரையுங் கொண்டாடுமாறு செய்தற்கு, இப்பொழுதே தொடங்கி முயலுதல் இன்றியமையாதது. இத் திருநாளுடன் சில நாள்களைச் சேர்த்து வள்ளுவர் வாரமாகவுங் கொண்டாடலாம். இத் திருநாட் கொண்டாட்டம் பற்றி அன்பர்கள் செய்யும் முயற்சிகளை எமக்கு அறிவித்தால் அவற்றை எமது அறிக்கையிற் சேர்த்து வெளியிட முயல்வோம்.

ஈராயிரம் ஆண்டு நிறைவுவிழா

திருவள்ளுவர் ஆண்டினை மறைமலையடிகள் கணித்த முறைப்படியே இன்று யாவரும் வழங்குகின்றனர். கிறித்தவத் தொடர் ஆண்டுத் தொடக்கத்துக்கு 31 ஆண்டுகள் முந்தித் திருவள்ளுவர் தொடர் ஆண்டு தொடங்குகிறது. திருவள்ளுவர் தொடர் ஆண்டின் ஈராயிரம் ஆண்டு கி. பி. 1969 ஆகும். எனவே, திருவள்ளுவருடைய 2000 ஆண்டு நிறைவு விழாவை 1969-இல் வைகாசி மாதம் முழுவதும் பெருஞ் சிறப்புடன் கொண்டாடுதற்கு இப்பொழுதே திட்டங்களை வகுத்து ஆவன செய்யுமாறு தமிழ்ப் பெருமக்களைக் கேட்டுக்கொள்ளுகிறோம். அன்பர்கள் தங்கள் திட்டங்களை எமக்கு அறிவிப்பின் அவற்றையும் எங்கள் திட்டங்களுடன் சேர்த்து வெளியிடுவோம்.

**கா. பொ. இரத்தினம்**

*தலைவர், தமிழ்மறைக் கழகம், இலங்கை.*

---

குறிப்பு: ஆண்டுதோறும் திருவள்ளுவர் திருநாளின்போது எமது தமிழ்மறைக் கழகம் நடத்தும் திருக்குறள் மாநாடு, இவ்வாண்டில், 8, 9, 10, 11—6—57-இல் கொழும்பிலுள்ள சங்கங்கள் பலவற்றின் ஆதரவில் கொழும்புமா நகரில் நடைபெறும். இந்த ஐந்தாவது திருக்குறள் மாநாட்டிலே திருக்குறள் நூற்காட்சியும் அமைக்கப்படும். (அன்பர்கள் இக் காட்சிக்கு அளிக்கும் நூல்கள் முதலிய அன்பளிப்புக்களை நன்றியுடன் ஏற்றுக்கொள்வோம்.) எமது கழகம் இவ்வாண்டில் நடத்தும் அகில இலங்கைத் தமிழ்மறைத் தேர்விலும், அகில உலகத் தமிழ்மறைக் கட்டுரைப் போட்டியிலும் வெற்றிபெறுவோருக்கு இம் மாநாட்டிற் பரிசில்கள் வழங்கப்படும்.

# திருவாசக நிருத்த நாட்டியம்

[திருவாளர், இசைமணி. கா. சங்கரனுர்]

நாட்டிலே நாட்டியம் பெருகிவிட்டது. படக்காட்சி, பொருட்காட்சி, இன்னவாய பிற விழாக்களிலும் இடம்பெருத, நடனமே கிடையாது. நடைபெறுகின்ற நடனங்களோ பெரும் பாலும் நற்பண்பை உயர்த்தவில்லை. கீழ்த்தரப் பாதையிலேயே செல்லுகின்றன. நடன அரங்குகளில் மக்களின் நல்லுணர்வை வளர்ப்பதற்கான ஆடல் பாடல்கள் குறைந்த அளவில்தான் கையாளப்படுகின்றன. இந்த நிலைதான் பள்ளிகளிலும்! கீழ்த்தர ஆடல் அலைகள் மோதாத அரங்கங்களே இல்லை.

மனிதப் பண்பை வளர்ப்பதுதான் (நடன) கலைப்பயன். பண்பு வளர்வதற்கு அறிவு, உணர்ச்சி, முயற்சி ஆகிய மனக் கூறுகள் (Three phases of mind) ஒன்றுபட்டு இயங்கவேண்டும். இயலால் அறிவுக் கூறும், இசையால் உணர்வுக்கூறும், இயலும் இசையும் சேர்ந்து பிறக்கின்ற நாடகத்தால் முயற்சிக் கூறும் வளர்ச்சி அடைகிறது இக் கூறுகள் ஒன்றுபட்டு இயங்கவே தமிழை, இயல், இசை, நாடகமென முத்திறப்படுத்தினர் இய லிசைப் புலவர்கள்.

நன்னெறிப் பாடல்கள் மலரும் சோலையே முத்தமிழ். மலர் களில் ததும்பும் தேனே திருவாசகம். திருப்பள்ளியெழுச்சி, திருவெம்பாவை, திருப்பூவல்லி, திருத்தெள்ளேணம் போன் றவை நன்னெறி புகட்டும் பாடல்கள். இவற்றைக்கொண்டே "நிருத்த நாட்டியம்" அமைக்கப்பட்டிருக்கிறது. நாட்டிய அரங்கிலே ஆடுகின்ற ஆடல்வல்லாருக்கு ஏற்ப திருவாசகப் பாடல்களுக்கு இராகம், தாளம், சுரம், சொற்கட்டுகளும் சேர்க் கப்பட்டிருக்கின்றன.

*நிருத்த நாட்டிய நிகழ்ச்சிக் குறிப்பு:*

ஆதிரை நன்னாள். காலை நேரத்தை இயற்கையும் பிறவும் அறிவித்துவிட்டன. வீட்டுவாசலைத் தெளித்துக், கோலமிட்டு, நீராடப் புறப்படுகிருள் கன்னி. இவள் தன் தோழியையும் துயில் எழுப்பிச் செல்லுகிருள். நீராடியபின் மலர் கொய்ய நந்தவனம் செல்கின்றனர். கொய்த மலரால் மாலை தொடுக்கின்றனர். ஆண்டவனுக்கு அணிவித்து அகம் மகிழ எண்ணுகின்றனர். தோரார்ந்த தெருவெல்லாம் தில்லைநாதன் புகழ்பாடி தெள்ளே ணம் கொட்டிக் கோயில் செல்கின்றனர். அயரா அன்பால் ஆண் டவன் முன்பு பாடி ஆடுகின்றனர்.

**குறிப்பு :** *நிருத்த நாட்டியப் பாடல்களுக்கு உரிய இசைக்குறிப்பும், (Notation) குறியீடுகளும், தற்காலம் [illegible] கும் முறையையொட்டி எழுதப்பட்டிருப்பதால். குறிப்பின் விவரம் எழுதப்படவில்லை.*

## காட்சி 1

*காலை நேரம்*

*இருள் நீங்கியது. எங்கும் ஒளி பரவிற்று. [illegible] ல் கூவின. கோழி கூவின. பிற பறவையினங்களுட் [illegible] து விட்டன; சங்குகள் சப்தித்தன; நட்சத்திரங்கள் நீங்கின. [illegible] றைக் கருதுக! பெருந்தகையே! சிவபெருமானே! புறவிருள் நீக்க, ஞாயிறு எழுந்தது; எங்கள் அகவிருள் நீங்க, எளிவந்தருள் பவனே! அருட்செல்வத்தை யருளும இன்பமலையே! அலைபோல் தோன்றி அடங்குதற்குரிய பெருங்கடலே! எம்பெருமானே! எழுந்தருள்க! என்று வேண்டி இக்காட் [illegible]*

*இராகம் : பௌளி—விருத்தமாகப் பாடவும்*

அருணன் இந்திரன் திசைஅணுகினன்; இருள்போய்
அகன்றது உதயம்நின் மலர்த்திரு முகத்தின்
கருணையின் சூரியன் எழஎழ நயனக்
கடிமலர் மலரமற் றண்ணல்அங் கண்ணும்
திரள்நிரை யறுபதம் முரல்வன இவையோர்
திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே
அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே
அலைகட லேபள்ளி எழுந்தரு ளாயே.

*திரை விலகுதல்*

*இராகம் : பௌளி* *தாளம் : ஆதி*

(15) *ஆ : ச ரி க ப தச்* *அ : ச நி த ப க ரி ச*

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை ஒளிஒளி உதயத்து
ஒருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழல் தாள்இணை காட்டாய்
திருப்பெருந் துறைஉறை சிவபெரு மானே
யாவரும் அறிவரி யாய்எமக் கெளியாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே!

| | | |
|---|---|---|
| 1. ; , கா ரி கா பா ; , த பா | ; , கா த பா | ப க த ப க ப க ரி |
| கூ வி ன பூங் கு யில் | கூ வி ன | கோ ழி |
| 2. சா ச ரீ க ரீ சா சா ரீ சா | ; ச ரீ க கா | பா ; தா பா |
| கு ரு கு கள் இ யம் பி ன | இ யம் பி ன | சங் கம் |
| 3. ; , பா க பா தா ச் ச்ா ரி ச்ா | ; ச் ச்ா ரி ச் | ச் த ரி ச் ச் ரி த ப |
| ஓ வி ன தா ர கை ஒ ளி | ஒ ளி உ த | ய த் து |
| 4. ; ப த ச் ச்ா ச் த ரி ச் ரி த பா | ; க கா த பா | ப க த ப க ப க ரி |
| ஒ ரு ப் படு கி ன் ற து | வி ருப் பொ டு | ந ம க் கு |
| சாரி ‖ கா ரி க பா ; , த பா | ; , கா த பா | ப க த ப க ப க ரி |
| தே வ நற் செறி க ழல் | தாள் இ ணை | கா ட் டா ய் |

இதன் அடியில் வரும் மூன்று வரிகளும், 2, 3, 4 போல் பாடவும்.

| | | |
|---|---|---|
| ; திருப் பெருந் துறை உறை | சிவ பெரு | மா னே |
| ; , யாவரும் அறி வரி யாய் | எமெக் கெளி | யா ய் |
| ; எம் பெருமான் பள்ளி | எழுந் தரு | ளா யே ‖ |

(குறிப்புரை): குருகுகள் - பறவைகள் (பொதுப் பெயர்); ஓவின - நீங்கின : மறைந்தன; ஒருப்படு - தோன்றுதல்.

திரை

## காட்சி 2

*நிகழ்ச்சிக் குறிப்பு :*

ஒரு பெண் தன் தோழியை நீராடுவதற்கு அழைக்க வருகிறாள். தோழியோ அயர்ந்து தூங்குகிறாள். தூங்கும் தோழியிடம் :

என் கண்பாவை போன்றவளே ! எழுந்திரு ? இன்று திருவாதிரை; நீராடச் செல்வோம்; வா ?

[அசையாத தோழியிடம் மீண்டும்]

தோழி ! முதலும் முடிவும் இல்லாத சோதி வடிவானவனை, நாங்கள் பாடுவதைக் கேட்டும், கண் விழியாது தூங்குகின்றாயே ! உன் காது என்ன செவிடா ! சிலம்பு பொருந்த அவர் திருவடிகளை நாங்கள் வாழ்த்திப் பாடினோம்; அவ் வாழ்த்தொலி தெரு எல்லாம் கேட்டது; அதைக் கேட்ட ஒருத்தி விம்மி விம்மி அழுதாள்; தன்னையே மறந்தாள்; படுக்கையினின்றும் புரண்டாள்; கீழே விழுந்தாள்; மூர்ச்சை ஆனாள்; அவள் நிலை அப்படி; எங்கள் தோழியாகிய நீ ! அயர்ந்து தூங்குகிறாய்; உன் நிலை இப்படி; எழுந்திரு ? நேரம் ஆகிறது; நீராடச் செல்வோம்; வா ? என்று வேண்டுவதாக இக் காட்சி :

ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெருஞ் சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான் மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து போதார் அமளியின் மேல்நின்றும் புரண்டிங்கன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னே என்னே ஈதே எந்தோழி பரிசே லோர் எம்பாவாய் !

(குறிப்புரை): வாள் தடங் கண் - ஒளி பொருந்திய கண்; வளருதியோ - தூங்குகின்றாயோ; வன் செவி - செவிடு; போதார் அமளி - மலர் நிறைந்த படுக்கை; ஏதேனும் ஆகாள் - பயன் படாமை; என்னே ! என்னே ! : வியப்பு.

இராகம்: கேதாரம்　　　　　　　　　　தாளம்: ஆதி

(29) ஆ: ச ம க ம பநிச்　　　　　　அ: ச் நிப மக ரிச

| | 1 | O | O |
|---|---|---|---|
| 1. | ; , ச்ா நி பா ம க ரி ம க ரி சா | ச ரி ரி க ச சா | ச நி ப நீ , சா |
| | ஆ தி யும் அந் த மும் | இ ல் லா அ | ரு ம் பெ ரு ம் |
| 2. | ; ச மா க மா பா , நீ , ச்ா | ச்ா , ரி ச நி பா | பா , நி மா பா |
| | சோ தி யை யாம் பா டக் | கேட் டே. யும் | வாள் த டங் கண் |
| 3. | ; , பா ம க ம பா ச்ா ச் நி ச்ா | ச்ா , ரி ச்ா ச்ா | பா , ப நீ ச்ா |
| | மா தே வ ள ரு தி யோ | வன் செ வி யோ | நின் செ வி தான் |
| 4. | சா , ம் க் ரி ச் ச் நி ப ப நீ ச்ா | ரி ச் நி பா , மா | பா , ம க ம பா |
| | மா தே வன் வா ர் க ழல் கள் | வா ழ்த் தி ய | வாழ் த் தொலி போய் |
| 5. | ; , கா ம பா பா , ப பா பா | ; ப நீ ப மா | ம க ரி சா ச சா |
| | வீ தி வாய் கேட் டலு மே | விம் மி விம் மி | மெ ய் ம் ம றந் து |
| 6. | சா , பா , நீ சா சா சா சா | ; ச ம கா மா | பா , பா , பா |
| | போ தார் அ ம ளி யின் மேல் | நின் றும் பு | ரண் டிங் கன் |
| 7. | ; ஏ தேனு மாகாள் கி | ட ந் தாள் என் | னே என் னே |
| 8. | ஈ தே என் தோழி ப | ரி சே லோ ர் | எம் பாவாய் \|\| |

இந்த 7, 8 வரிகளை 3, 4 வரிகளைப்போல் பாடவும். "எம்பாவாய்" என்று பாடி முடிந்த உடன்........ கீழ்க்கண்ட சொற்கட்டுகளைப் பாடி நிறுத்தவும்.

சுகசு°

| | 1 | 0 | 0 |
|---|---|---|---|
| 1. | தாம் தரிதஜெணு திமித தகிட தகி | தகிட தகத ஜெணு | தக்கிடதகதிமி தாம் |
| 2. | தகிட தாத ஜெணு தகிடதாத ஜெணு | தகிட தாத ஜெணு | தக்கிடதகதிமி தாம் |
| 3. | தகிட தாத ஜெணு தக்கிட தகதிமி தாம் | தகிடதாத ஜெணு | தக்கிடதகதிமி தாம் |
| 4. | கை | கை | கை |
| 5. | ததிமி , தஜெணு ததிமி , தஜெணு | தா ; தரித்த | , ஜெணுத்த திமித் |
| 6. | த , தாதீங் கிணதொம் தாதீங் கிணதொம் | , தா தீங் கிணதொம் | த்தரி , தஜ்ஜெ |
| 7. | ணு தத்திமி , தாதீங்கிணதொம் தா | கிண தீங்தா தீங் | கிணதொம் தத்தரி தொம் |
| 8. | த - தஜ்ஜெணுத - தத்திமித - தாதீங்கிண | தொம் தாதீங்கிண | தொம் தாதீங்கிண தொம்‖ |

திரை

(தொடரும்)

# புதிய ஆண்டுக் குறிப்பேடு

இந்தியப் பேரரசினர் பல துறைகளிலும் புதுப்புது மாற்றங்களைத் திடீர்த்திடீரெனச் செய்து வருவது அனைவரும் அறிந்ததே. அங்ஙனமே தற்போது நாணயமாற்று முறையிலும் ஆண்டுக் குறிப்பேடு (காலண்டர்) அமைப்பதிலும் ஆக இருபெரு மாற்றங்கள் செய்துள்ளனர்.

சக சகாப்தத்தை அடிப்படையாகக்கொண்டு அமைக்கப் பட்டுள்ள ஒரே வகையான ஐந்தொகுதி (தேசிய பஞ்சாங்கம்) 1957-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் 22-ஆம் நாளிலிருந்து நடைமுறைக்கு வந்திருக்கிறது. எனினும் கிரிகோரியன் காலண்டரும் புதிய ஐந்தொகுதியுடன் அலுவலகப் பணிக்குப் பயன்பட்டு வரும். இப் புதிய ஆண்டுக் குறிப்பின்படி சைத்திர திங்கள் ஆண்டின் முதல் திங்களாக ஒவ்வொரு மார்ச்சு 22-ஆம் நாள் முதற்கொண்டதாக இருக்கும். சாதாரணமாக ஓராண்டு 365 நாட்களைக் கொண்டிருக்கும். லீப் ஆண்டு மட்டும் 366 நாட்களைக் கொண்டிருக்கும். இந்தியா முழுவதிலும் சக சகாப்த ஐந்தொகுதிமுறை பழக்கத்தில் இருந்து வருகிறபடியால் இப் புதிய ஐந்தொகுதிக்கும் இம்முறையே ஆதாரமாகக் கொள்ளப் பட்டிருக்கிறது. நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் தற்போது ஏறக்குறைய 30 வகையான ஐந்தொகுதிகள் (பஞ்சாங்கம்) பயன் படுத்தப்பட்டு வருகின்றன. ஒவ்வொரு ஆண்டின் துவக்க நாளும் வேறுபடுகிறது. புது ஆண்டுக் குறிப்பின்படி இவ்வித வேறுபாடுகள் இரா. புதிய ஆண்டுக் குறிப்புமுறை வருமாறு:

| திங்கள் | நாட்கள் | கிரிகோரியன் காலண்டர்ப்படி திங்கள் துவக்கநாள் | |
|---|---|---|---|
| சைத்திரா | 30 | மார்ச்சு | 22 |
| | (லீப் ஆண்டில் 31 நாள்) | (சாதாரண ஆண்டில்) | |
| வைசாகா | 31 | ஏப்பிரல் | 21 |
| ஜைஷ்தா | 31 | மே | 22 |
| ஆஷாட | 31 | ஜூன் | 22 |
| ஷ்ராவன | 31 | ஜூலை | 23 |
| பாத்ரா | 31 | ஆகஸ்டு | 23 |
| அஸ்வினு | 30 | செப்டம்பர் | 23 |
| கார்த்திகா | 30 | அக்டோபர் | 23 |
| மார்கசிர்ஷா | 30 | நவம்பர் | 22 |
| பவ்சா | 30 | டிசம்பர் | 22 |
| மக | 30 | ஜனவரி | 20 |
| பல்குன | 30 | பிப்ரவரி | 21 |

அனைத்துலக நாடுகளிலும் பெரும்பாலும் கிருத்துவ ஆண்டு முறை பொது வழக்காக இருந்து வரும்போதும், நந்தமிழ் நாட்டில் தமிழ் ஆண்டுக் கணக்கு வழக்கில் இருந்துவரும்போதும், இப் புது மாற்றம் தேவையற்றதென்றே கருதவேண்டியிருக்கிறது. எல்லாம் வடமொழியும் வடவர் நாகரிகமும் வளர வழி செய்வதே யன்றி வேறில்லை.

## புதுக்காசு

அண்மையில் திருத்தப்பட்ட 1906-ஆம் ஆண்டு இந்திய நாணயச் சட்டத்தின் 14 (2) பிரிவில் காணப்படும் முறைப்படி இப் புதுக்காசு முறை நடைமுறைக்கு வந்துள்ளது. இம் முறைப்படி ½ நயா பைசாவும் அதற்குக் குறைந்த பின்னங்களும் விட்டு விடப்படும். ½ நயா பைசாவுக்கு மேற்பட்டதை ஒரு நயா பைசா என்று கணக்கிடப்படும். 1 ரூபாய்க்கு 100 நயா பைசாக்கள். இங்ஙனம் ¾ ரூ ½ ரூ ¼ ரூ என்பன முறையே 75, 50, 25 நயா பைசாக்களாகும். அரசியலார் அறிவிப்புப்படி 2 அணா என்பது 12 நயா பைசாவும் ஓர் அணா 6 நயா பைசாவும் ஆகும்.

இப் புதிய நாணய முறையால் பொதுமக்களுக்குச் சில இடர்ப்பாடுகளும் ஏற்படாமல் இல்லை. பண்டங்கள் வாங்குவோரிடம் வர்த்தகர்கள் ½ நயா பைசாவை ஈடுசெய்ய ஒரு நயா பைசாவைப் பெறக்கூடும். இதனால் பொதுமக்களுக்கு ஓர் அளவு இழப்பும், செலவினங்கள் மிகுதிப் படுதலும் கூடும். இவ்வண்ணம் நேராமல் பாதுகாக்க வேண்டுவது அரசியலார் கடன். ஆனால் அஞ்சல் நிலையங்களில் மட்டும் அரசியலார் தமது கொள்கையைத் தாமே நழுவவிட்டு 2 அணா விலையுள்ள கடித உறை (கவர்) 13 நயா பைசாவுக்கு விற்கின்றனர். இஃது அறமுமன்று, முறையுமன்று, பொருளுடையதும் ஆகாது.

நயா பைசா என்னும் இப் புதுவழக்கால் வடமொழி ஆதிக்கமும் ஓரளவு வளர வழியேற்படுகிறது. தமிழ்ப் பெருங்குடி மக்கள் இந் நாணயமுறை மாற்றத்தை ஏற்றுக்கொண்ட போதிலும் மொழி மாற்றத்தை நிலையாக ஏற்றுக்கொள்ளுதல் கூடாது. நயா பைசா என்றால் புதுக்காசு என்று பொருள். காசு என்பது தமிழில் பண்டைய நூல்வழக்கிலும் நடைமுறையிலும் உள்ளதோர் வழக்கு.

**எனவே இச்சூழ்நிலையிலேனும் நயா பைசா என்று சொல்லுவதற்குப் பதிலாகக் காசு என்றே வழங்குதல் நலம் என்றும், முறைமை என்றும் கருதுகிறோம்.**

# சொல்லின் செல்வர்க்குப் பாராட்டு

அண்மையில் சென்னைப் பல்கலைக் கழகத்தாரால் டாக்டர் பட்டம் வழங்கப்பெற்ற பேராசிரியர் உயர்திரு. ரா. பி. சேதுப் பிள்ளை அவர்களைப் பாராட்டுதற்காகப் பல்கலைக்கழகப் பேராசிரி யர்கள் குழுவின் சார்பாக, கடந்த 22-3-57 மாலை, பல்கலைக்கழகக் கட்டிடத்தில் விழா நடைபெற்றது. பல்கலைக்கழகத் துணை வேந்தர், திரு. இலக்குமணசாமி முதலியார் இவ் விழாவிற்குத் தலைமை தாங்கினார். உயர்திரு. சேதுப்பிள்ளையவர்கட்குத் தலைவர் பொன்னாடை போர்த்தினார். வெள்ளியினாலாகிய அசோகத் தூண் ஒன்றும் அன்பளிப்பாக வழங்கப்பட்டது. டாக்டர் ஞான முத்து அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்.

துணைவேந்தர், திரு. இலக்குமணசாமி முதலியாரவர்கள் பேசுகையில் தமிழ்ப் புலவர்கள் போற்றப்படாத காலம் ஒன்று இருந்ததாகவும், டாக்டர் சாமிநாத ஐயர், நமச்சிவாய முதலியார் போன்ற ஒருசிலரைத் தவிரப் பல தமிழ்ப்பெரியோர்கள் தக்கபடி பாராட்டப்படவில்லை என்றும் கூறினார். திரு. சேதுப்பிள்ளை யவர்கள் தமிழ்மொழியிடத்துப் பற்றும் ஆர்வமும் மிக்குடை யவரென்றும், குறுகிய நோக்கமின்றித் திராவிட மொழிகள் அனைத்தையும் ஆராய்ந்து ஒப்பிட்டு நோக்கும் ஆற்றல் அவரிடம் இருப்பதாகவும், ஒரு பேராசிரியருக்கு இருக்கவேண்டிய பண் பாடுகள் அனைத்தும் அவரிடம் காணப்படுவதாகவும் கூறினார். அத்துடன் திரு. பிள்ளையவர்கட்குத் திராவிட மரபில் பொன் னாடை போர்த்திப் பாராட்டுவதாகவும், அன்னார் நீண்டநாள் வாழ்ந்து பணியாற்ற வேண்டும் என்று இறைவனை வழுத்துவ தாகவும் குறிப்பிட்டார்.

பின்னர், பேராசிரியர் அ. சீனிவாசராகவன் பேசியகாலை, திரு. சேதுப்பிள்ளையவர்கள் திருநெல்வேலியை வாழ்வித்தவ ரென்றும், திருநெல்வேலிப் புலமையும் தென்பாண்டி நாட்டுப் பண்பாட்டு மேன்மையும் ஒருங்கே அவரிடம் அமைந்திருப்ப தாகவும் கூறினார். சர். தியாகராயர் கல்லூரித் தலைவர் திரு. எம். கே. சண்முகனார் அவர்கள் 'சான்றோன்' என்னும் சிறப் புச்சொற்கு திரு. பிள்ளையவர்கள் முற்றிலும் பொருத்தமானவர் என்பதை விளக்கிப் பேசினார்.

பல்கலைக்கழகச் சரித்திரத்துறைப் பேராசிரியர் திரு. கே. கே. பிள்ளையவர்கள், திரு. சேதுப்பிள்ளையவர்கள் தமிழ் வளர்ச் சிக்காகப் பொருள் வழங்கிய சிறப்பினை விளக்கியும், தமிழின்

பத்தை ஊட்டியவர் திரு. பிள்ளையவர்களே என்பது பற்றியும் பேசினர். திரு. கே. பாலசுப்பிரமணிய ஐயர், திரு. எம். எம். பட் ஆகியோரும் பாராட்டுரை வழங்கினர்.

இறுதியில் நன்றியுரை கூறிய திரு. சேதுப்பிள்ளையவர்கள், ஆங்கிலத்தில் மிக்கத் திறம்படச் சொற்பொழிவாற்றும் துணை வேந்தர் திரு. இலக்குமணசாமி முதலியாரவர்கள் தமிழிலும் பேச முயன்றால் வெற்றிபெறக்கூடுமென்று தம் விருப்பத்தைத் தெரிவித்தார். சொல்லின் செல்வர் உயர் திரு. சேதுப்பிள்ளையவர்கள், இங்ஙனம் நல்லார் பலரின் வாழ்த்துரைகளைப் பெற்று நாட்டுக்கும் மொழிக்கும் பணியாற்றி நிலமிசை நீடுவாழ எல்லாம்வல்ல இறைவன் அருள்புரிவானாக.

# மதிப்புரை

**திருக்குறள் திறவு:**

பொருட்பால் இறைமாட்சி. ஆசிரியர், வித்துவான் திரு. சு. நடேச உடையார், தமிழாசிரியர், சேலங்கல்லூரி. விலை ரு. 1-8-0. 'திருக்குறள் திறவு 2' நீத்தார் பெருமை, ஆசிரியர் முற்குறிக்கப்பட்டவர்களே. விலை ரூ. 3-0-0. இவ்விரு நூல்களும் கிடைக்குமிடம் 'சிவப்பிரகாச நிலையம்' கிச்சுப் பாளையம், சேலம் 1.

இவ்விரு நூல்களும் செம்மையானமுறையில் அச்சிடப்பட்டு அழகாய் அமைந்துள்ளன. நூலாசிரியர் நுண்மாண் நுழைபுலச் செல்வராவர். அவர்தம் சிறந்த குறிக்கோள் திருவள்ளுவர்தம் திருவுள்ளத்தை வெளிப்படுத்தவேண்டுமென்பது தான். ஆசிரியர் திருக்குறளைப் பற்றி எழுதிவைத்துள்ள சீரிய கட்டுரைகள் பலவற்றுள் ஒன்று பின்இணைப்பாக இணைக்கப்பட்டுள்ளது. இது சிறந்த கட்டுரைவரைவார்க்கு விரும்பிப் பயிலவேண்டிய முற்படிக்கட்டுரை முறைமையாகும். திருக்குறளுக்கு உண்மை உரை காணும் வேட்கையர் அனைவர்களும் இவவாசிரியர் போக்கின்வழியை முற்படியாக வைத்துக்கொண்டு காணுதல் முறைமையும் நேர்மையுமாகும். திருவள்ளுவ நாயனர் மேற்கொண்டுள்ள செந்நெறி பொது நன்னெறியாகும் என்பதற்குத் திருக்குறளினின்றே திருப்பெயர் அமைத்துக் காட்டும் ஆசிரியர் அருந்திறல் வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந்ததொன்றாகும். அதுவே 'நடுவாக நன்றிக்கண் தங்கியான்' நெறி. இதுபோல் தாம் மேற்கொள்ளும் உண்மை உரைக்கு ஆங்காங்கே அரண் செய்யுமாறு திருக்குறள்களையே எடுத்துக் காட்டுவது எல்லார்க்கும் இன்பம் பயப்பதொன்றாகும்.

மேலும் உரை திட்பநுட்பம் செறிந்தது. தொன்மைத் தமிழ்நெறியும், தமிழ் மறையும், தமிழ் மந்திரமும், தமிழந்தணர்களும் தனித்த முதன்மையும்சிறப்பும் வாய்ந்த அருமைப்பாடுடைய பலவற்றை ஐயமகற்றி அங்கை நெல்லியெனக் காட்டியுள்ளார். ஏனையாரை மறுக்குமிடத்தும் அவ்வுரை அழகே பயந்து விளங்குகின்றது. உண்மை காணும் வேட்கையுடையார் ஒவ்வொருவரும் இந்நூலைப் பயிலுதல்வேண்டும். வள்ளுவரின்

உண்மைகண்டொழுகியுய்வதற்கு இவையே சிறந்த திறவுகோலாகும். இந்த முறையில் நூல் முழுவதற்கும் இவ்வாசிரியப் பெருந்தகை பாராவேயே உரை வெளிவரச் செய்வது திருக்குறளுக்குச் செய்யும் பொருவரும் பெருந்தொண்டாகும். இதனை வெளியிடும் சேலம் திருவள்ளுவர் கழகத்தார் ஏனையவற்றையும் தொடர்ந்து வெளியிட்டுத் தமிழன்னையைச் சிறப்பிப்பார்களாக. இருபால் ஆசிரியர் மாணவர் அருஞ்செல்வர் பெருமக்கள் அனைவர்களும் வாங்கிக் கற்றுப் பயன் எய்துவார்களாக.

### திருவள்ளுவர் மருந்து :

ஆசிரியர் இராவ்சாகிப் டாக்டர் தி. இரா. அண்ணாமலைப் பிள்ளையவாகள் [L. C. P. S., L. M. S. S. A. Lond, M. R. A. S. (Lond) Mamber Madras Madical Service (Retd.)] ஆவார்கள். இதன் விலை அணா நான்கு. கிடைக்குமிடம் ஆசிரியர், பெருமாள்புரம், பாளையங்கோட்டை.

ஆசிரியரவர்கள் ஆங்கில மருத்துவப் புலமையோடு ஓங்குஞ் செந்தமிழ்ப் புலமையும் பாங்குறப்பெற்றவர்கள. செம்பொருட்டுணிவாம் சித்தாந்த நுணுக்கங்களில் தனிபட்ட தன்நுகர்வு உடையவர்கள். சித்த மருத்துவத்திலும் சித்தர் நூல்களிலும சிறப்புப் பயிற்சியுடையவர்கள். தனித் தமிழ்த் தொன்மையும், இனிமையும், மொழியமைதியும், எழுத்தின் சிறப்புக்களும், எண்முறையும் பிறவும் தெய்வத்தன்மை வாய்ந்து திகழும் வாய்மையினைத் தூய மனத்துடன் சித்தாந்தக கருத்துக்களையும் சிவநெறி மாண்புகளையும் ஒருங்கமைத்து வெளிப்படுத்தியுள்ளார்கள். இதனையொத்த சிவபுண்ணியம் வேறு ஏதுமின்று.

இவர்கள் இலண்டன் மாநகரில் பயின்றமையாலும் இஞ்ஞான்றை மேனாட்டு மருத்துவர் வரையறுத்துள்ள சில பல வரையறைகள் அப்படியே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட திருக்குறளிலும் காணக்கிடக்கும உண்மையினை நீணுலகறிய எடுத்துக் காட்டியுள்ளார்கள். அவர்கள் மருந்து என்னும் சிறந்த அதிகாரத்துககுப் பொருந்தியவுரை மருத்துவ முறைப்படி, சித்தர் நூற்களுக்கியையக் கண்டுள்ளார்கள். இனிய எளிய உரை. திட்பநுட்பம் செறிந்தது. அழகிய பதிப்பு. இருபாலாரும் இன்றியமையாது வாங்கிக் கற்றுப் பயனெய்துவார்களாக. ஏனைய சிறந்த பகுதிகளுக்கும் இவ்வாறு விரிந்தவுரை வெளிப்படுத்தித் தமிழன்னைக்குப் புத்தணிசெய்து புனைந்து புண்ணியப்பேறெய்துமாறு வேண்டுவோமாக.

### சித்திரகவிமாலை

'முத்தமிழ்க கலா வித்வரத்தினம்' திரு. டி. கே. சண்முகம் அவர்கள்மீது இயற்றிய 'சித்திர கவிமாலை.' ஆசிரியர் ஆசுகவி. கீர்த்தனை அரசு, சித்திர கவிச சரபம், கணித சோதிட கலாநிதி திரு. P. V. அப்துல்கபூர்சாகிப் புலவர் அவர்கள் திருவையாறு தஞ்சை.

இப் புலவர் பெருமான் பெருமையினை டாக்டர் மு. வரதராசனார் முதலாக டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் ஈருகப்பதினைந்து பெரும் புலவர்கள் பாராட்டிச் சிறந்த சான்றிதழ்கள வழங்கியுள்ளார்கள். ஆசிரியர் மறைமலையடிகளார் சித்திர கவிகளை யிறைக கவிகள என்று எழுதியுள்ளார்கள். மேலும் இப் புலவர் பெருமான் புலமைக்குக குழைவு

தந்து தனிப் பெருமையளிப்பது தமிழ்மொழிக்கண் இயல்பின் அமைந்துள்ள தனி மாண்கும் எனவும் விளக்கியுள்ளார்கள்.

இதன்கண் பலவகையான மிறைக் கவிகள் காணப்படுகின்றன. அவையனைத்தும் சொல்லினிமையும் பொருட்செறிவும் உள்ளன. கற்போர் உள்ளத்தைக் கனிவிக்கும் கவின் மிகவுடையன. இலக்கண அமைதி யாண்டும் ஒளிதந்து எடுத்துக் காட்டாம் வரம்புபட்டு மிளிர்கின்றது. இவைகளைப் பயின்று மிறைக்கவி பாடமுயல்வார்க்கு இவைகள் இலக்கண இலக்கியங்களாகத் திகழ்கின்றன. இவ்வாசிரியர் தனித் தமிழ்த் தெய்வமாம் திருமுருகன் வழிபாடுடைய மெய்யன்பர். நாளும் பொழுதும் திருமுருகாற்றுப்படையெனும் தமிழ்மறையினை ஓதும் தனி நாவினர். இவர்கள் திருமுருகனருளால் எல்லா வாழ்வும் மேன்மேலும் பெருகப்பெற்றுப் பல நூலியற்றிப் பல்லாண்டு வாழ்வார்களாக.

இதன்கண் அமைந்துள்ள அரும்பெரும் பாடல்கள் வருமாறு: நிரோட்டமும், மாலை மாற்றும், திரிபங்கியும், பஞ்சபங்கியும், மாணிக்க மாலைப்பந்தமும், சிவலிங்கபந்தமும், வேலாயுதபந்தமும், மயில்வாகனப் பந்தமும், இரட்டை நாகபந்தமும், சதுரநாகபந்தமும், அட்டநாகபந்தமும், நாலாரைச் சக்கரபந்தமும், கடகபந்தமும், சதுரங்கப்பந்தமும், திருவடிப்பந்தமும், திருக்கைப்பந்தமும், தேர்ப்பந்தமும், கூடசதுக்கமும், மடக்குக் கீர்த்தனைகளும் முதலாயின.

இப் புலவர் பெருமானின் உண்மை யுணர்ந்து அவர்களை நனிமிகப் போற்றிப் பெருங்கொடை கொடுத்துப் பேணும் புரவலப்பெருவள்ளல் முத்தமிழ்க் கலாரத்தினம் திரு. டி. கே. சண்முகம் அவர்கள் செந்தமிழ் வளர்ச்சிக்குச் செய்து போதரும் அரும்பெருந்தொண்டு அளப்பில. அவர்களும் அவர்கள் குடும்பத்தாரும் நீடுவாழ இறைவன் அருள்புரிவானாக. இத்தகைய தொண்டுகள் பல புரிந்து தமிழன்னையை ஒல்லும் வகை ஓவாது ஓம்பி அரசு வீற்றிருக்கச் செய்து அணிபெறுத்துவார்களாக.

**உரிமைச் செல்வம்:**

ஆக்கியோர் திரு. பண்டித இராமசுப்பிரமணிய நாவலர் அவர்களாவர். இதன் விலை அணா எட்டு. கிடைக்குமிடம்: செந்தமிழ் நிலையம், தக்கலை, திருவாங்கூர்த் தமிழகம்.

இந்நூல் பல்வகையாப்பான் அமைந்த சொல்லருஞ் செய்யுட் செல்வம். ஏறத்தாழ இருநூற்றுக்கு மேம்பட்ட செய்யுட்களைக் கொண்டது. கடவுள் வாழ்த்து முதல், பொதுவுரிமை ஈறாகப் பதினெட்டு அரும்பெருந் தலைப்புக்களைக் கொண்டது. புது மலர்ச்சியும், சீர்திருத்தமும், கொள்கை உயர்வும் உண்மை யொழுக்கமும் வாய்ந்தது. எல்லாரும் கற்று இன்புற்று ஒற்றுமையாக வாழ்வதற்கு ஏற்றது. அறிவுக்கொவ்வா நெறிமுறைகளை அன்புடன் எடுத்துக்காட்டி அடக்கமுடன் கண்டிப்பது.

செய்யுட்கள் பண்ணொடு பாடப் பலவேறு ஓசைநயங்களுடன் அமைந்தன. தமிழ்ப் பண்பாடும், இனிமையும், தனிமையும் கனிந்து ஒழுகுவன. எளிமையும், சுருக்கமும், விளக்கமும், திட்பநுட்பமும் செறிந்தன, ஆற்றொழுக்கின, போற்றற்குரியன. அனைவர்க்கும் வேண்டும் நினைவுச்செல்வம். தமிழன்பர்கள் கற்று இன்புறுவாராக.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) வள்ளற்கோமான் டாக்டர் அழகப்பச் செட்டியார் மறைவு

வள்ளற் கோமான் மறைவிற்கு வருந்தாதிருந்தார் எவருமிலர். இவ வள்ளல் தமிழகத்துமட்டுமல்லாமல் உலகிற்கே ஒரு பெரும் வள்ளலாவர். இவர்தம் விரிந்த வரலாறு நம் செல்வியின் அடுத்த இதழில் வெளிவரும். அதனால் ஈண்டுச் சுருக்கமாகத் தருகின்றோம்:

டாக்டர் ஆர். எம். அழகப்பச் செட்டியார் 1957 எப்பிரல், 5-ஆம் நாள் வெள்ளிக்கிழமை பகல் 11-15 மணிக்குப் பேராஇயற்கைப் பெருநிலை எய்தினர். அவர்கள் காலமான இடம் சென்னை வேப்பேரியிலுள்ள அவர்தம் வளமனையாகும் அவருக்கு அகவை இன்று ஈறப்பத்தொன்பதாவது பிறந்த நாளாகும். அவர் 1909-ஆம் ஆண்டு எப்பிரல் திங்கள் ஆறும் நாள பிறந்தார. அவர் பிறந்த திருவூராகிய கோட்டையூருக்கு அவர்தம் உடல் கொண்டுவரப்பட்டு இறுதிச் சடங்குகள் சிறப்பாக நடைபெற்றன. அவர் தம் ஆவி ஆண்டான் அடிக்கீழ் என்றும் இன்புறுமாக. எங்கள் ஆற்றொணுப்பரிவை அவர்தம் குடும்பத்தார்க்கு அன்புடன் அறிவித்துக்கொள்கின்றோம் ஆறுதல் எய்துவார்களாக.

## (உ) இந்தி பயிற்சி மொழியாக வேண்டுமாம்.

“எல்லாப் பல்கலைக் கழகங்களிலும் பொதுமொழியே பயிற்சி மொழியாக இருக்கவேண்டும். இந்தியாவின் பொதுமொழி எதுவெனில் இந்தி. எனவே இப்பொழுதிருந்தே அதற்கான ஏற்பாடுகளைச செய்ய வேண்டும்” என்று சென்னை விவேகானந்தா கல்லூரி தென்னிந்திய பல்கலைக் கழக ஆசிரியர்கள் சங்கக் கூட்டத்தில் பேசிய இந்திய நிதி அமைச்சர் திரு டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் குறிப்பிட்டிருக்கிறார்.

**குறிப்பு:** இந்தி பொதுமொழியாவதே கூடாது; அதனால் தமிழகம் தாழும் எனத் தமிழறிஞர்கள் மட்டுமல்ல, அரசியல் அறிஞர்களும் பல ஆண்டுகளாகக் கூறிவருகிறார்கள். பொதுமொழி பற்றிய தீர்ப்பு எப்படியிருந்தாலும் இருக்கட்டும், பயிற்சி மொழியேனும் அந்தந்த வட்டார மொழியிலாதல் வேண்டும் என்பது எல்லோரும் ஒப்பமுடிந்த முடிபு. அன்பர் டி. டி. கே. இந்த முடிபையும் சீர்குலைத்து இந்தியே தனியாட்சி நடத்த வேண்டும் என விழைகிறார்! விழையட்டும்; ஆனால், இத்தகைய பேச்சுக்களால் இந்திக்கு ஆக்கம் வரும் என்பதைவிட எதிர்ப்பே வளரும் என்பதை அன்னார் உணர்தல் வேண்டும்.

## (ங) சமஸ்கிருதத்தைப் பொதுமொழியாக்க முயற்சி.

“இந்தி வளர வேண்டுமேயானால் சமஸ்கிருதம் போற்றி வளர்க்கப்பட வேண்டும்”—இது கடந்த 17-3-57-இல் நடைபெற்ற ஸ்ரீகார் சமஸ்கிருத சமிதி பட்டமளிப்பு விழாவில், திட்டக் குழுத் துணைத் தலைவர் வி. டி. கிருஷ்ணமாச்சாரியார் பேசியிருக்கும் பேசசு.

**குறிப்பு:** பேசியவர் இந்திய அரசியலாரால் அமர்த்தப்பட்ட திட்டக் குழுவின் துணைத்தலைவர். எனவே இதனைத் தனிப்பட்டவர் கருத்து என்று கொள்ளாமல் மைய அரசியலாரின் திட்டம் என்றே கொள்ளவேண்டும். செத்த வடமொழிக்கு உயிரூட்ட ஒருசாரார் இத்

துணை முயலும்போது, சீரிளமை குன்றாத செந்தமிழ்க்கு மேலும் சிறப்பூட்ட நாம் எத்துணை வீறுகொள்ளல் வேண்டும் என்பதை நந்தமிழா எண்ணிப் பார்ப்பார்களாக.

(௮ சொற்பொழிவா ?

1957 மார்ச்சு 27-இல் சென்னை கோகலே மண்டபத்தில் தமிழ் எழுத்தாளர்கள் சார்பாகத் திரு. டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களுக்கு அவர்கள் தமிழுக்குப் புரிந்துள்ள அரும்பெரும் சேவையைப் பாராட்டி ஒரு சிறப்புக் கூட்டம் நடந்தது. அது மிகச் சிறப்பாக இருந்தது. பல பெரும் புலவர்கள் பாராட்டிப் பேசினர். பெரும் புலவர் திரு. கி. வா சகந்நாதன் அவர்கள் நன்றாகப் பாராட்டி வரும்பொழுது தம் குருநாதர் ஐயரவர்கள் சொற்பொழிவென்பதை விரும்பார்கள். உபந்நியாசம், பிரசங்கம் முதலிய உயர் மொழிகளையே விரும்புவர். மேலும் சொல்லன்று பொழிவது, அப்படிச் சொல்லவேண்டுமானாலும் பொருட் பொழிவென்றே கூறல்வேண்டுமென்றனர்.

திரு. சேதுப்பிள்ளை யவர்கள் பாராட்டுரைகளுக்கு விடை கூறுமிடத்து மிக நன்றாகப் பேசியதுடன் சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் திரு. எ இலட்சுமணசாமி முதலியாரவர்கள் இனிச் சட்டசபையில் பேசுங்கால் தமிழில் பேசுவா. பேசுவதுமட்டுமன்று தமிழில் பேசுவதிலும் தலைசிறந்தவர் என்ற பெயரை அடையவேண்டுமென்பதே என் அவா என்று குறிப்பிட்டனர்.

உபந்நியாசம் பிரசங்கம் என்பதைவிடச் 'சொற்பொழி'வென்பதே தமிழியல்புக்கு ஒத்தது. இக் கருத்து, திருநெல்வேலி திரு. மு. பால்வண்ண முதலியாரவர்கள் ஏறத்தாழ அரைநூற்றாண்டுகளுக்கு முன்னே தமிழில் 'சொற்பொழிவாற்றுப் படை' என ஓர் அரிய நூல் இயற்றி அதன் வாயிலாக வெளிப்படுத்தி உறுதி செய்துள்ளார்கள் என்றனர். இந் நிகழ்ச்சி டாக்டர் திரு. ஐயரவர்கள் காலத்து நிகழ்ந்த இரு நிகழ்ச்சிகளை நினைப்பூட்டுகின்றன. ஒன்று சென்னை, தணிகைமணி திரு வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம்.ஏ., அவர்கள் ஐயரவர்கள்பால் ஒருகால் உரையாடும்போது 'சொற்பொழிவு' என்று கூறினர். இதனைக் கேட்டதும் ஐயரவர்கள் வெறுப்புற்றவர்களாய் "என்ன! நீங்களுமா இவ்வாறு கூறுகின்றீர்கள்? உபந்நியாசம், பிரசங்கம் எனக் கூற வேண்டாவா" என்றது. மற்றொன்று ஐயரவர்களின் அருமை மாணுக்கர் பல்லோருள்ளும் சிறந்த கும்பகோணம், திரு. ப. தி. சோ. குமாரசாமிச் செட்டியாரவர்கள் 'நலந்தானு' என்று அன்பொடும் வினவினர். அப்பொழுதும் 'என்ன! சௌக்கியமா, சேமமா,' என்று சொல்ல வேண்டாவோ என்றது.

தமிழ்த் தவமகனுய்த் தமிழ் தழைக்க அருந்தொண்டாற்றிய ஐயரவர்கள் வாயில் இவ்வாறு வரநேர்ந்தது தமிழ் செய்த தவக்குறையே என்று உண்மையுணர்ந்தோர் உரைப்பது ஒருவாற்றானும் தவறாகாது.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.



மறைமலையடிகள்




சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௮, சித்திரை பரல
௩௧ மே, 1957

# மறைமலையடிகளாரின் எண்ண மாண்பு

*தனித்தமிழ்த் தலைவர்*

மறைமலை அடிகளாரின் தனிப்பெரும் மாண்பினை அறியாத் தமிழறிஞர் எவரும் இரார். மெய்ம்மைத் தமிழர் வாழும் வையமனைத்திலும் ஐயமின்றி அடிகளாரை அனைவரும் உணர்வர். தனித்தமிழ் தழைக்க இடையூறாய்க் களைகளாய் அயல்மொழி மயலினர் என்றும் உளர். அக் களையினைக் கட்டு அமிழ்தினுமினிய தமிழ்மொழியினைத் தாய்மனம் உவக்கச் செழித்தோங்கச் செய்யும் மறம் மானம்மிக்க அறந்திறம்பாச் சேயினரும் என்றும் உளர். அவருள் இறுதி மறவராய் உறுதியுடன் நின்று காத்த பேராண்மையர் நம் அடிகளாராவர். நம் அடிகளார் தோன்றாத் துணையாந் தமிழ்ச் சிவனருளால் தோன்றினர். அவர் தோன்றிலரேல் அனைத்தும் எங்கே என்றுதான் எண்ண நேரும் :

> மாண்பார் மறைமலையும் மண்ணுலகில் வந்திலரேல்
> காண்பா ரொடுகேட்பார் காதலிக்கும்—மாண்பார்
> தனித்தமிழ்தான் எங்கே தகுமுறைநீ றெங்கே
> இனித்தசிவன் தானெங்கெங் கே.

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர் காலந்தொட்டு அடிகளார் காலம்வரை புல்லுருவி அனைய அயன்மொழி மயலினர் பல்லோர் இடையிடையே நேர்முக மறைமுக வாயிலாகத் தமிழின் சீர் சிறப்பினைக் கெடுத்தே வந்தனர்; வருகின்றனர். அத்தகையோர் கருவுற்ற ஞான்றுதொட்டு திருவுற்று வாழுங் காறும் முன்னோர் உலையாத் தவமுயற்சியால் தலையளித்து நிலை பெறச் செய்த தாயினை அலைவுறச் செய்யும் பொறுக்கலாற்றாக் குற்றம் இழைக்கும் சேயனையராவர்.

நடைமுறைப் பேச்சு, நாவலர் பாவலர் நகைபடப் பேசும் மேடைப் பேச்சு, பள்ளிச் சுவடி, பாவலர் பாட்டு, காவலர் கட்டுரை, கடவுள் வழிபாடு, மணமுதலாம் குணமுறுசடங்கு, வணிகத்துறை, வாழ்வுத்துறை பணிக்களரி, ஊர் நகர் ஆண்மை ஓம்புங் கழகம், கூட்டு வழிபாடு, ஊர்தி உறையுள்சார் பெயர்ப் பொறிப்பு, புதினத்தாள்கள் எல்லாம் அம்மை வார்த்த முகம் போல் அயன்மொழி கலந்த அழகு நயனிழந்த கலவைத் தமிழாய்ப் புண்ணீரொழுகும் கண்ணொத்து நாணி மறைந்து நடுங்கியிருந்தது நற்றமிழ். அத் தமிழின் நடுக்கங் களைந்து மிடுக்குடன் வாழச் சொல்லாலும் எழுத்தாலும் தூய பல நூற்களாலும் வழிவகுத்து நிலைநிறுத்தியவர் நம் அடிகளாராவர். அவர்களே தமிழ்த்தாயின் மெய்ம்மையான தனிப்பெரும் தவமகனாராவர்.

அவர்தம் தூய தனிப்பெருந் தவ எண்ணம், தம்முடைய தனித்தமிழ்க் கொள்கை நாட்டில் என்றும் பொன்றுதுநின்று பொருவில் புகழுடன் திகழவேண்டும் என்பதே. அதற்கு மிகுதியும் துணைசெய்து தாம் தனித் தமிழிலேயே எழுதி வெளிப்படுத்தியுள்ள பல்வேறு துறைகள் நிரம்பிய பலவகையான ஏறத்தாழ அறுபதுக்கு மேற்பட்ட சுவடிகள் எல்லாராலும் என்றும் விடாது பயிலப்பட வேண்டுமென்பதும், தாம் கண்ணும் கருத்துமாக ஓவாது பயின்று எண்ணரிய குறிப்புக்கள் ஆங்காங்கே வரைந்து பொலிவித்து உயிரினும் சிறப்பாக ஓம்பி வந்த பல்லாயிரக்கணக்கான வெண்பொன் மதிப்புள்ள பல்லாயிரம் சுவடிகள் அமைந்த ஆங்கிலம், தமிழ், வடமொழி என்னும் பெரியதோர் நூல்நிலையம் பெருமக்கள் பயின்று பயன் பெறுமாறு தக்கதோர் இடத்தில் பொது நூல்நிலையம் ஆக வேண்டுமென்பதும், தாம் உயிரினும் சிறப்பாகக் கனவிலும் நனவிலும் மனமுற நாடி வழிபட்டு வந்த அம்பலவாணர், அருட்பெருங்குரவர் நால்வர் ஆகிய ஐம்பெரும் படிமங்கட்கும் நாளும் நன்முறையாற் பூசனை புரிவது முட்டின்றி நிகழவேண்டும் என்பதும், தாம் நிறுவித் தக்கவாறு வளர்த்த 'பொது நிலைக்கழக' ஆண்டு விழாவும் கொள்கை பரவ வேண்டுவன செய்யும் மாண்புகளும் நிகழ வேண்டுமென்பதுமேயாம். "எண்ணிய எண்ணியாங்கெய்துப எண்ணியார், திண்ணிய ராகப் பெறின்" என்னும் செந்தமிழ்ப் பொதுமறைப்படி அவைகள் திருவருள் பெருந்துணையால் முற்றுவ வாயின.

**இறுதிமுறி**

மேற்கூறிப் போந்த நல்லெண்ணங்கள் முற்றும் நாளும் நடைமுறைக்குக் கொண்டு வருமாறு 'தென்னிந்திய சைவசித்

தாந்த நூற்பதிப்புக் கழக' ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்களுள்ளிட்ட தக்கார் எழுவர் பெயர்க்கு 1950-ஆம் ஆண்டு செப்டெம்பர்த் திங்கள் ஒன்பதாம் நாள் ஓர் இறுதிமுறி எனப்படும் உவில் (Will) வரைந்தளித்தனர்.

பின்பு 'தொண்டு செய்து நாளாறில் கண்ணிடந்தப்பிப்' பேறுபெற்ற கண்ணப்ப நாயனார் போன்று அடிகளார் ஆறு நாளில், அஃதாவது 15-9-1950-இல் அம்பலவாணர் அடிநிழற்கீழ் அமர்ந்திருக்க அருளும் பெற்றார்.

செயன்முறை

அடிகளார் அகனமர்ந்த அன்பினராய்த் திண்ணமாக எண்ணி வரையறை செய்தமைத்தபடி நடைமுறைக்கு உடனடியாகக் கொண்டுவர நாடினர். முயன்றனர்; அம்முயற்சி அவர் தம் மக்கள் நால்வரால் தடைப்படுத்தப்பட்டு முடைப்படுவதாயிற்று.

வழக்கு

9-9-1950-இல் எழுதிய உவில்லின்படி அதிற்கண்ட காரியக் குழுவினர் மேற்படி உவில்லிற்கு இறுதிமுறி ஏற்றம் (Probate) தரும்படி உயர்நீதி மன்றத்திற்கு விண்ணப்பித்தனர். அதனை எதிர்த்து மறைமலையடிகளார் மக்களில் நால்வர், தந்தையார் நல்ல நினைவோடு உவில்லில் கை எழுத்துப் போடவில்லையாதலால் புரோபேட் கொடுப்பதைத் தாங்கள் எதிர்ப்பதாக மனுப் போட்டனர். அதன்மேல் இருதிறத்தாரின் சான்றுகளையும் கொண்டு மறைமலையடிகளார் நல்ல நினைவோடுதான் கையெழுத்துப் போட்டார் என்றும் உவில் உண்மையானது என்றும் கூறி காரியக் குழுவினர்க்குப் புரோபேட் கொடுக்குமாறு 20-7-1953-இல் நீதிபதி இராமசாமிக் கவுண்டர் முடிவு செய்து தீர்ப்பு அளித்தனர்.

அத்தீர்ப்புச் செல்லத்தக்கதன்று என மறைமலையடிகளார் மக்களில் இருவர் மட்டும் மேல்முறையீடு (Appeal) செய்தனர். அவ்வழக்கைத் தலைமை நீதிபதி திரு. பி. வி. இராசமன்னாரும், நீதிபதி ஏ. எஸ். பி. அய்யரும் 30-4-1957-இல் தள்ளுபடி செய்து நீதிபதி இராமசாமிக் கவுண்டர் தீர்ப்பை உறுதிப்படுத்தினர்.

வழிநிகழ்வு

கழகச் சார்பில் நிகழ்ந்துவரும் தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம் "தென்னிந்திய தமிழ்ச் சங்கம்" ஆகிய அறநிலையங்களின் பொருட்டு அவ்வற நிலையங்களின் வைப்புப் பொருளிலிருந்து வெண்பொன் ஐம்பத்திரண்டாயிரத்திற்குச் சென்னை

இலிங்கச் செட்டித் தெரு எண் 105-இல் உள்ள சிறந்த மாளிகை யொன்று கழகத்தாரால் விலைக்கு வாங்கப்பட்டுள்ளது. அதன் கண் தமிழ்க்கல்லூரி யொன்று அடிகளாரின் பெயரிலேயே குறித்த சங்கச் சார்பில் மிக்க விரைவில் நிகழ இருக்கின்றது. அதுவும் இறுதிமுறியாகிய உவில்லில் குறிப்பிடப்பட்டுள்ளபடி நூல் நிலையமும் "மறைமலையடிகளார் கல்லூரியும் நூல் நிலையமும்" என்னும் மாண்புறு பெயருடன் பெருமக்களுக்கு மிகு விரைவில் திறந்து வைக்கப்படும். அதுபோல் அடிகளார் எழுதி அச்சிட்டுள்ளனவும் அச்சிடாதனவுமான புத்தகங்களனைத்தும் விரைவில் அச்சிடப்படும் அவற்றின் முற்குறியாகச் 'சாகுந்தலம்' என்னும் நூல் அச்சாகி வருகின்றது. இவையனைத்தும் கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்களின் அரும்பெரும்முயற்சியால் நிகழ்கின்றன. இப்பணிக்கு ஏனைத் தமிழ்ப் பெருமக்களும் உடனொத்துழைத்துப் பயன் பரப்பி ஊக்குவிக்குமாறு வேண்டுகின்றோம்.

**வாழ்மனை மாண்பு**

பல்லாவரத்தில் மறைமலையடிகளார் பல்லாண்டு வாழ்ந்து அன்னாரின் ஒப்புயர்வில்லாச் செப்பரும் தூய நல்லெண்ணங்கள் அளவில்லன பரவி நிலைத்துள்ள வளமனையாம் மாளிகையை விற்று அப்பொருளால் சில பல செய்விக்கும்படி அடிகளார் உவில்லாகிய இறுதிமுறியில் அறுதியிட்டுக்குறிப்பிட்டுள்ளனர்.

அம்மாளிகை பிறர்கைப்பட்டு வேறு பயன் பெறுவதினும், நம்வயமிருந்து, அடிகளார் திருப்பெயராலேயே என்றும் பொன்றுது நின்று நிலவுவது சாலச்சிறப்புடைத் தல்லவா? அதனல் அடிகளார்பால் பேரன்பு பூண்டுள்ள பெருமக்களிடத்து அம்மாளிகையின் பெறுமதியான தொகையை நன்கொடையாகத் திரட்டி இறுதிமுறியிற் கண்ட செலவினங்கட்குக் கொடுத்து விட்டு அம்மாளிகையினை 'மறைமலையடிகளார் திருப்பெயரில்' கல்வி நிலையம், ஆராய்ச்சி நிலையம், மாணவர் விடுதி நிலையம் ஆகிய இவற்றுள் ஏதாவது ஒன்றுக்கோ பலவற்றுக்கோ பயன் படுத்த வேண்டுமென்று காரியக்குழுவினர் கருதுகின்றனர். அக்கருத்து நிறைவேற அன்பர்கள் முன்வந்து தக்க பொருளுதவி புரிவார்களாக.

மறைமலை யடிகளாரின் எண்ணமாண்பு திண்ணமாய்
நிறைவுறும் நிலைமைகண்டு நெஞ்சிடை மகிழ்தல்செய்வாம்
குறைவிலாத் தனித்தமிழின் குறிக்கோள்கள் என்றுநின்று
நிறைவுற அடிகளார்தம் நினைவுயிர்த் துணையாமன்றே.

# வள்ளற் கோமான்

# டாக்டர் அழகப்பச் செட்டியார் மறைவு

**நாடு**

நல்லன நாடும் நகரத்தார் தம் பெரும் பொருளால் வல்லன பலவும் புரிந்து தங்கள் நாட்டை வளம்படுத்தி மண்ணும் விண்ணும் ஒக்க மிக்குவிழையும் பொன்னாடாக்கினர். நிலவளம், நீர்வளம், கலைவளம், கடவுள்நிலைவளம், கைத்தொழில்வளம், வாணிகவளம், கொடைவளம் எல்லாம் ஒருங்கமைந்து திகழ்வது அப் பொன்னாடு. அந் நாட்டுள் தவப்பேற்றால் தலைசிறந்து விளங்குவது கோட்டையூர் என்க பண்டை நாளில் நம் முன்னோர் 'காடு கெடுத்து நாடாக்கி, குளம் தொட்டு வளம்படுத்தினர்'[1] என்னும் வாய்மை சங்கத் தொகை நூல்களிற் பரக்கக் காண்கின்றோம். இவை பல ஆயிர ஆண்டுகட்கு முன் நிகழ்ந்த பயனுடை நிகழ்ச்சி. அவ் வுண்மையை இந் நாளில் நாம் நேரிற் காணுமாறு காட்டுவது நகரத்தார் பொன்னாடு

**பிறப்பு**

காலினும் கலத்தினும் இந்நாளமைந்த வானூர்தியினும் உலகங்களிலுள்ள எல்லாப் பக்கங்களிலும் துணிவுடன் சென்று பெரும்பொருள் ஈட்டி நாடும் மொழியும் நன்னெறியும் பீடுற வேண்டுவ வேண்டியாங்கு விழைவுடன் செய்து தக்கார் என மிக்காரால் எக்காலமும் புகழப்படும் குலம் 'வடுவிலா வையத்து மன்னிய மூன்றில் நடுவண தெய்தி' நடுநிலை நயஞ்சேர் நகரத்தார் நற்குலமாகும். அத்தகைய தொல்குலத்துத் தாழ்விலாச் செல்வர் மனையில் வையம் வாழ்வுறச் செய்ய மேனியராய் நம் வள்ளற் கோமான் 1909-ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் ஆறாம் நாள் கலைநலம் சிறப்புறப் பிறந்தனர். பிறந்து மொழி பயின்று பெற்றோர் உவப்பத் திகழ்ந்தனர். கல்விக் கூர்மை அவர்தம் கட்டிளமைப் பருவத்தே மட்டின்றித் திகழ்ந்து விளங்கிற்று. இவர்தம் அரும்பெறல் தந்தையார் திருப்பெயர், கே. சி. ஏ. எஸ். இராமநாதன் செட்டியார் ஆகும்.

**கல்வி**

தம்மூரில் நல்லாசான்பால் பள்ளிப் படிப்பினை வல்விரைவில் முதன்மையாகக் கற்று முடித்தனர். பின்பு கல்லூரிப் படிப்பின் பொருட்டுச் செல்லூர் பொழில்சேர் சென்னைக் கோநகர் வந்துற்றனர். அரசினர் கல்லூரியில் சேர்ந்து கல்வி பயின்று வந்தனர்.

ஒரு சாலை மாணவரும் உடன் பயில் மாணவரும் பெருவிருப்பம் கொள்ளும்படி நன்முறையில் பயின்று வந்தனர். மாணவராகப் பயிலுங் காலத்தே ஆணவம் அற்று வேணவாப் பூண்டு தம் இரு முதுகுரவரால் தம் செலவுக்கு என அனுப்பி வைக்கப்படும் ஒருபெரும் தொகையில் சிக்கனமாக வாழ்ந்து ஏனை மாணவர் கட்கு இன்றியமையாது வேண்டத்தக்க இடங்களிலெல்லாம் அன்பு பூண்ட மனத்துடன் தாராளமாக முன்வந்து வலிய உதவிகள் புரிந்தனர். இஃது அவர்தம் பிற்காலப் பெருவள்ளல் நிலைக்கு இட்ட சாலப் பொருத்தமாம் ஆலம்வித்தாயிற்று.

**பட்டம்**

1930-ஆம் ஆண்டில் தம் இருபத்தோராம் அகவையில் முதுகலைஞர் என்று மொழியப்பெறும் எம். ஏ., என்னும் எழிற் பெரும்பட்டம் எய்தினர். இவர்தம் பெருஞ்செல்வ வணிகர் குழுவினுள் இத்தகைய பெருஞ் சிறப்புப் பட்டத்தை முதற்கண் எய்திய பெருந்திருவினர் இவர் ஒருவரே யாவர்.

**மேனாட்டுப் படிப்பு**

பின் இலண்டன் மாநகரிலுள்ள மிடில் டெம்பிள் கல்லூரி யில் வழக்கறிஞர் குழு முதன்மை என்னும் பாரிஸ்ட்டர் நிலைக் குப் பயின்று 1933-இல் பட்டமும் பெற்றனர். இலண்டனில் 'சார்ட்டர்ட் பாங்கியில்' இரண்டாண்டுக் காலம் பயிற்சி பெற்ற னர். ஆண்டு உறையும்போதே வான்பொறியூர்தி ஓட்டியாகச் சான்றிதழ் பெற்றனர்.

**தொழில் நுட்பம்**

கலையிலும் வழக்கறிஞர் நிலையிலும் மிக்கு வன்மையரென வையம் புகழ முதன்மையுற்றனர். எனினும், அவர்தம் நுண் மாண் நுழைபுல உள்ளம் தொழில் துறையின்கண்ணே மிக்குச் செல்வதாயிற்று. அதனால் பல்வேறு தொழில் முதன்மைய ராய்த் திகழ்ந்தனர். கொச்சியின்கண் நூற்பு ஆலையும் நெச வாலையும் பெருந்தொழில் நிலையமாகப் பேணி வளர்த்தனர். அவை முறையே 'அழகப்பா டெக்ஸ்டைல்ஸ் (கொச்சி) லிமிட்டெட்டு.' இதற்கு ஆட்சிப் பொறுப்பாளராவர். 'ஆரோன் நூற்பு நெசவு மில்ஸ் லிமிட்டெட்டு,' ஆல்வாயிலுள்ள 'அஷோக் டெக்ஸ்டைல்ஸ் லிமிட்டெட்டு முதலியவற்றின் ஆட்சியாளரு மாவர். பெரும் பொருளும் ஈட்டி விரும்பியன வேண்டியாங்குப் புரிந்து பெருந் திருவினராய்த் திகழ்ந்தனர். அதனால் பெரு வள்ளலாகவும் விளங்கினர். உலகெலாம் புகழ ஒருமகள் உமையாள் திருமணம் முடிப்பித்துப் பெருமகிழ்வு கொண்டனர்.

மென்றஞ்சி விடுத்தேன்; அவற்றில் ஒன்று இங்குக் காட்டுகின்றேன், "தொல்காப்பியம் புறத்திணையியல் (சூ - ௬) 'வஞ்சிதானே முல்லையது புறனே' என்று தொல்காப்பியர் கூறியுள்ள கருத்தை யுணர்ந்து நக்கீரனார் முல்லை என்னும் அகத்திணையையும், வஞ்சி என்னும் புறத்திணையையும் ஒரே பாடலில் அகங்கை, புறங்கை போல அமைத்துக் காட்ட விரும்பி, முன்னர் முல்லைத் திணையைக் கோப்பெருந்தேவிபால் வைத்து விளக்கிப் பின்னர் அம் முல்லைக்குப் புறமாகிய வஞ்சித்திணையைத் தலைவன்பால் வைத்து விளக்கியுள்ளார் என்பதை அப் பாடலின் அமைப்பைக் கண்டு தெளியலாம் என்பதே அது.

மறுப்பு

இக் கூற்று, "நக்கீரனார் அகங்கை புறங்கை அறியாதவர் போல அகப் பொருளிலக்கணமும் புறப் பொருளிலக்கணமும் வேறு வேறு என்பதை யறியாமல் அகமாகிய முல்லையையும், புறமாகிய வஞ்சியையும் ஒரே பாடலில் அமைத்திருக்கின்றார் என்றும்; அகம் வேறு புறம் வேறு என அறிந்திருந்தால் இவ்விரண்டு பொருளையும் ஒருங்கமைத்துப் பாடியிரார் என்றும் விளக்குகின்றது. எனவே "பொக்கமில் புலவராம் நக்கீரனார்" என அவரைப் புகழ்ந்த புகழ்ச்சி இகழ்ச்சியேயாயிற்று.

ஆ-ர் கூற்று

நச்சினார்க்கினியாரும் கூதிர்க்காலமும் பாசறையும் வந்துள்ள "மழையில்வான மீனணிந்தன்ன" (அகம் ௨௬௪) என்ற பாடலைக் காட்டி "முல்லையுள் கூதிர்வந்தது" என்று கூறியுள்ளமையாலும், அவரே தொல்காப்பியம் புறத்திணையியல் (எ௬) சூத்திர வுரையில் "இனி இருத்தற்பொருள் முல்லையென்பதே பற்றிப் பாசறைக்கணிருத்தலால் பாசறை முல்லை" எனப் பெயர் கூறுவாருமுளர் எனப் பிறர் கூற்றாகக் கூறி மறுப்பு யாதும் கூறாமல் விடுத்துள்ளமையாலும் கூதிர்ப்பாசறையை முல்லையென்று கொள்ளுதலும் பொருந்தும் என்பது அவர் கருத்து" எனக் கூறி அக் காரணத்தால் நெடுநல்வாடையை முல்லைத் திணைப் பாட்டு என்று கூறுவது நச்சினார்க்கினியார் கருத்துக்கும் பொருத்தமாகும் என்றனர் ஆராய்ச்சியாளர்.

மறுப்பு

நச்சினார்க் கினியார் தொல்காப்பியம் அகத்திணையியல் (சூ - ௧௨) "திணைமயக் குறுதலும்" என்றதன் உரையில் "காலமும் மயங்கும் எனக் கூறி, முல்லைத்திணைக்கு உரிமையில்லாத கூதிர்க்காலம் முல்லையில் வந்ததற்கு மேற்கோளாக

ராவர். கோட்டையூரிலும் பெண்கள் பள்ளிக்கூடம் ஒன்று செவ்வனே நிறுவினார். அவற்றின் விளக்கம் வருமாறு :

1947 ஜூலை ஏழாம் நாள் காரைக்குடியில் 'அழகப்பா' கல்லூரி தொடங்க முயற்சிசெய்யப்பட்டது. ஆகஸ்டு ஏழாம் நாள் துவங்கப்பட்டது. திரு. டி. சூரியநாராயண கல்லூரி முதல்வராகத் திகழ்ந்தார். ஆகஸ்டுப் பதினோராம் நாள் அந் நாள் கல்வியமைச்சராயிருந்த திரு. அவிநாசலிங்கம் செட்டியாரவர்கள் கல்லூரியைத் திறந்துவைத்தனர். திறப்பு விழா மிக்க சிறப்புடன் நிகழ்ந்தது. கல்லூரிப் பொறுப்பு ஓர் அறங்காவற் குழுவின்பால் ஒப்புவிக்கப்பட்டது. அறங்காவற் குழு - டிரஸ்ட் போர்டு. கல்லூரிக்காக 665 ஏகர் நிலம் தண்டல் நாயகராகிய கலெக்டர் வாயிலாக 1947 நவம்பர் மூன்றும் நாள் விண்ணப்பித்து டிசம்பர் இருபத்தேழாம் நாள் கிடைக்கப்பெற்றது.

1948 பிப்பரவரி நான்காம் நாள், 'மின்சார ரசாயன ஆராய்ச்சி'க்குத் தேசிய நிலையம் நிறுவப் பதினைந்து லட்சம் ரூபா நன்கொடையும், முந்நூறு ஏக்கரா நிலமும் தருவதாகத் திரு. செட்டியாரவர்கள் திரு. நேருவுக்கு உருக்கமான கடிதம் எழுதினர்.

1948 ஜூலை இருபத்தைந்தாம் நாள் 'மத்திய மின்சார ரசாயன ஆராய்ச்சி நிலையத்திற்குத் திரு. நேரு, அடிப்படைக் கல் நாட்டினார். இந் நிலையம் நிறுவவேண்டும் என்னும் நன்னோக்கம் இந்தியப் பேரரசினர்க்கு உண்டாயிற்று. உலகில் கடந்த நாற்பது ஆண்டுகளாக மின்சார ரசாயன எஞ்சினியரிங் தொழிற் கல்வியின் பயனைக் கைத்தொழில் பெரிதும் வளர்ச்சியடைந்து வருகின்றது. ஆராய்ச்சி நிலையம் ஏற்படுத்தும் நன்னோக்கத்தை 'இந்தியப் பேரரசு 1944 ஏப்பிரலில் வெளியிட்டது. 1948 பிப்பரவரியில் விஞ்ஞானக் கைத்தொழில் ஆராய்ச்சி டைரக்டர் சென்னை வந்தனர். கிண்டி பொறியியற் கல்லூரிக்கு அண்மையில் நிலம் வாங்க முயன்றனர். அளவிறந்த விலை கொடுக்க நேர்ந்தமையால் வாங்கவில்லை. இந்நிலையில் திரு. செட்டியாரவர்கள் முன் வந்தமையை அக் குழுவினர் குறிக்கொண்டு நோக்கி அவ்வாறே அமைக்க இசைந்தனர். திரு. எஸ். எஸ். பாட்நகர் காரைக்குடி இடத்தை நோக்கினர். நீர்நிலைமைபற்றி ஐயுற்றனர். திரு. செட்டியாரவர்கள் அவ்வையத்தையும் நாடொறும் இரண்டு லட்சம் காலன் தண்ணீர் கிடைக்குமென்று மெய்ப்பித்துப் போக்கினர்.

திரு. செட்டியாரவர்கள், திரு. நேருவினைப் பாராட்டிப் பேசும் வாயிலாக, திரு. நேருவின் நல்வரவால் பகீரதனால் வான்

தங்கை நிலவுலகம் வந்ததுபோல் காரைக்குடிக்கும் நீர் வெள்ளப் பெருக்கு வருவதாயிற்று என மொழிந்தனர். ஸர். சி. வி. இராமன் அவர்களும், டாக்டர் செட்டியாரவர்களைப் புகழ்ந்து பேசினர்.

டாக்டர் இலட்சுமணசாமி முதலியாரவர்கள் பாராட்டிப் பேசுகையில், 'டாக்டர் செட்டியாரவர்கள் காரைக்குடியை அறிவின் உறைவிட ஆலயமாக மாற்றியுள்ளார்கள்' என்றும், 'தம் நன்கொடை மூலம் இந்த இடத்தைக் கல்வியின் முதன்மையிடமாக அமைத்துள்ளார்கள்' என்றும் மொழிந்தனர்.

அழகப்பாக் கல்லூரிக்குப் பவநகர் மகாராசா 1949 அக்டோபர் பதினைன்காம் நாள் அடிப்படைக் கல் நாட்டினர். டாக்டர் அழகப்பாவின் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி 1950 ஜூலை இருபத்தேழாம் நாள் தொடங்கப்பட்டது. கல்லூரி இடத்தில் உமையாள், விசாலா விடுதிகள் துவங்கப்பெற்றன. அவற்றை 1950 ஜூலை முப்பதாம் நாள் திரு. குமாரசாமி ராசா திறந்து வைத்தார். 1951 ஜூலை நான்காம் நாள் இவை புதுக் கட்டடங்களுக்கு மாற்றப்பட்டன. அழகப்பாக் கல்லூரித் தந்தி நிலையம் 1951 டிசம்பர் பத்தாம் நாள் திறக்கப்பட்டது.

1952 ஜூலை இருபத்தோராம் நாள் அழகப்பச் செட்டியார் இஞ்சினியரிங் டெக்னலஜி கல்லூரி திறக்கப்பட்டது. 1952 அக்டோபர் இருபத்து நான்காம் நாள் இஞ்சினியரிங் டெக்னலஜிஸ்ட் சங்கத்தைத் திரு. ராஜாஜி அவர்கள் திறந்து வைத்தனர்.

'பாரி பாரி' என்று பலபடப்பண்டையோர் பாராட்டியதைத் தொன்னூல்களின் வாயிலாக நாம் உணர்ந்து உளமகிழ்ந்துள்ளோம். பின்னளில் 'பாரியே என்று கூறினும் கொடுப்பாரிலை' எனக் குறிக்கவும் கேட்டோம். 'எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம்' நல்லியக்கோடன் பூண்டனன்' எனப் புகலவும் கேட்டோம். ஆனல் நம் வள்ளற் கோமானகிய அழகப்பர் பாரியினும் மிக்காராய், நல்லியக்கோடரினும் மிக்காராய் நானிலம் புகழ என்றும் பொன்ரு ஒன்ருவுயர்ந்த புகழுரு எய்த நிகழ்ந்த உளதாகும் சாக்காட்டினல் நாம் நேரிற் கண்டு கணக்கிலா இன்புறும் பேறுபெற்றுள்ளோம். மாரியினும் மிக்காராய் வாரி வழங்கிய அழகப்பர் வாழ்க என்று அனைத்துலகும் வாழ்த்தும் வாழ்த்துரையைச் செவியாரக் கேட்டு இன்புற்றனம்.

**தொண்டு**

1954-இல் சென்னை அரசியலார் 'தொடக்கக் கல்விச் சீர்திருத்தக் குழு'வின் தலைவராக இருந்து தொண்டு புரிந்தனர்.

சென்னை இராச்சியப் பாரத்சாரணர் சாரணிகளின் சங்கத்தலைவர், சென்னை சேவாசதனப் போற்றியர் (போசகர்), தென்னிந்திய வர்த்தக சபை முன்னாள் தலைவராகவும் தொண்டாற்றினர். அச் சபையின் நிலைப்பான கட்டடத்தின் பொருட்டுப் பெரும் பொருள் மதிப்புள்ள நிலம் ஒன்றை வாங்கியளித்தனர்.

1945 முதல் அண்ணாமலைப் பல்கலைக் கழகச் செனட் உறுப்பினராகத் தொண்டாற்றியுள்ளார்.

சிறப்புப் பட்டம்

1945-இல் 'ஸர்' பட்டம் கிடைத்தது. 1943-இல் சென்னைப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்கியது. 1944-இல் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்கியது. சென்னை விஞ்ஞானத் தொழில் ஆய்வுக் குழுவின் உறுப்பினராக இருந்துள்ளார். மத்திய மின்சார ரசாயன ஆராய்ச்சிக் கழக ஆய்வுக்குழுவுக்கு இவர் அமர்த்தப்பட்டார். கேம்பிரிட்ஜில் நிகழ்ந்த காமன்வெல்த் பல்கலைக் கழக மாநாட்டில் சென்னைப் பல்கலைக்கழக வகையா (பிரதிநிதி) ளாகச் சென்று கலந்து கொண்டனர். 1946-இல் சென்னைப் பல்கலைக் கழகச் சிண்டிக் கேட்டில் அமர்த்தப்பட்டார். 1953-இல் தொழில்அலுவல் ஆட்சிக் குழுவின் உறுப்பினராக இந்தியப் பேரரசுக் கல்வித் துறையினரால் அமர்த்தப் பெற்றனர். அப் பேரரசினர், 'பதும பூசணம்' என்னும் பண்புநிறைபட்டம் ஒன்றை வழங்கிப் பாராட்டினர். இத்தகைய பட்டங்கள் அளப்பில அவ்வள்ளற் கோமானை அடைந்து வளம்பெற்றன. இதுவே இயற்கை வள்ளல் திருவின் அருள் நிலையாகும். வள்ளற்கோமான் உள்ளமனைத் தும் காரைக்குடியில் ஒரு சிறந்த பல்கலைக்கழகம் காண வேண்டும் என்னும் பேரவாப் பெரும் பெருக்கின் ஆழ்ந்து கிடந்தது. அதை முற்றுவிக்க வேண்டுவது செந்தமிழ்ச் செல்வரின் சீரிய கடனாகும். சென்னை அரசியலாரும் முன் வந்து வேண்டுவ புரிந்து முற்றுவிப்பார்களாக.

மலேயா நாட்டில் உறையும் செல்வ நகரத்தார் வள்ளற் கோமான் திருப்பெயரால் ஒரு சிறந்த கல்லூரி வல்விரைவில் நிறுவ முயன்று முற்றுவிக்க முன்வந்துள்ளார் எனக் கேட்டு நனிமிக மகிழ்கின்றோம். வள்ளற்கோமான் ஆவி சிவபெருமான் திருவடியின்பம் பெற்றுத் திகழ்வதாக. அவர்தம் அருமை மனைவியாரும் ஒப்பில் மகளாரும் திருவருளால் ஆறுதல் எய்து வார்களாக. ஆண்டவன் அருள்வானாக.

# சிங்கள அன்னையின் தமிழ்ப்பற்று

[செல்வி. எஸ். ஜமலாதேவி]

சில யாண்டுகளின் முன்னர் யான் நன்னூலின் மாணவி யாகத் திகழ்ந்தபோழ்து, அந்தோ எனும் சொல் சிங்கள நாட்டினது என்றமை உணர்ந்தேன். கடல்கடந்த அக் கன்னி நாட்டிடை வழங்கும் சொல்லோவியம் ஒன்று, தமிழ் அன்னையின் காவியச் சோலையிடைப் புகுமேல், அந்நாடும் அதன் மொழி வளனும் செம்மையானதாகத்தான் இருத்தல் வேண்டும் என எண்ணமிட்ட, செந்தமிழ்ச் சிறுமியான யான், இலங்கை சென்று அதன் இன்மொழியின் வளங் கண்டு வருதற்பொருட்டு என் தமிழ் இலக்கிய மாணவி ஒருத்தியொடு சென்ற இரு திங்கள் அவ்வழகிய நாட்டிடைச் சுற்றித் திரிந்தேன். இன்றமிழ் விருப்பினால் இலங்கை சுற்றிய, என் செவியிடைப்பட்ட பல பல, நம் தமிழ் அன்னையினையும் அவள்தன் மாற்றுருவினையும் நினைவுறுத்தின. கன்னடமும், களிதெலுங்கும், கவின் மலையாளமும் தமிழ் அன்னையின் உதிரத்து உதித்தன என்ற பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, சிங்கள அன்னைதனையும் மறத்தல் ஒண்ணுமோ என வினவி வியந்தேன். என்னையோவெனில் எழில் நிறைந்த இலங்கையில் பேசப்பெறும் மொழிகளில் ஒன்றாய சிங்களம் இன்று தனிப்பெயர் பெற்றுத் தவஞ்செய் தவமாம் தையல் எனப் பேரரசு பெற்று இலங்கினும் அதன் சொற்களின் இன்பம்காண விழைவோர் தமிழ் அன்னையின் ஓவியச் சாலையிலேதான் சுற்றித் திரிவர் என்றல் உண்மையாகும். காலம் என்பது கறங்குபோற் சுழலலாம். மேலது கீழா, கீழது மேலா மாறலாம். ஆனால் உண்மை உரு மாறாதன்றோ? எனவே 'முதுமொழி நீ அநாதி' எனத் தமிழ் அன்னையினைப் பாடிப் பரவி பல்லாண்டு கூறலும் பொருத்தமாகும்.

இன்று நம் தமிழ்மக்களிடை வழங்காத பல தமிழ்ச் சொற்கள் இலங்கை நாட்டிடை, அதிலும் சிங்கள மக்களால் ஆளப் பெறுகின்றன என்னில் யாம் பெருமைகொள்ளல் தேவையன்றோ? செந்தமிழ்ச் சொற்களுக்கு வரம்பு கட்டி அவற்றின் பொருள் வளத்தினை எடுத்தோதி, மண்ணொடு ஒழித்த தொல்காப்பியரின் நாவிலே தவழ்ந்த நற்றமிழ்ச் சொற்கள், இந்நாளிலே மண்ணொடு மறைந்து தோன்றினும், பொன்றாப் புகழுடன் இலங்கையில் இலங்குதல் கண்டேன். கமலக் கண்களால் கற்பினுக்கு அணியை அன்று அனுமன் கண்ட இலங்கையில், யான் கன்னித்தமிழ் களிநடம் புரிதல் கண்டேன்.

யான் அந்நாட்டில் வதிந்த நாட்களில் சில, ஹலாவத்தை எனப் பெயரிய ஊரில் வாழும் என் இலக்கியத் தோழியுடன் கழிந்தன. குறிப்பிட்ட இவ்வூரில் வாழும் மக்கள் பலர் தமிழ் அன்னைக்கு உரியர். அவர்கள் பழக்க வழக்கங்கள் தமிழ் நாட்டையே நினைவுகொள்ளச் செய்தல் கண்டேன். சுருங்கக் கூறின் ஹலாவத்தை எனும் ஊர்கூட காலச்செலவால் மாற்றுருப்பெற்ற தமிழ்ப் பேராகும். இலங்கையில் தமிழ்ச்சொற்கள் மாற்றுருப் பெறுகின்ற சில நெறிகளை இங்குச் சொல்லுதல் சால்புடையதாகும். ச எனும் எழுத்து, சொல்பவர் பழக்கத்திற்கு ஏற்ப ஹ என மாறிவிடுகிறது. நாட்கள் பல நகர்ந்து செல்ல, குறிப்பிட்ட அச்சொற்கள் ச எனும் தம்முரு இழந்து ஹ எனும் புதிய உருவைத்தான் பெறுகின்றன. யான் வாழ்ந்த ஹலாவத்தையும் இப்போழ்து தமிழ் மாணவருக்கு இலக்கிய விருந்து அளிக்கலாம். மேற்கூறிய நெறிபற்றி இங்கு எண்ணினால் ஹலாவத்தை மாறிச் சலாவத்தை யாகலாமன்றோ? சலாபம் எனும் சொல் தமிழ்நாட்டிடை வழங்குதல் உண்மையாகும். தூத்துக்குடி போன்ற கடற்கரைப் பட்டினத்தோர் அச்சொல்லின் பொருளை விரைவில் உணரலாகும். சிலாபம் அல்லது சலாபம் கடலின் முத்துச் சிப்பியைக் குறிக்கிறது. எனவே சலாவத்தை என்ற அவ்வூரில் சிப்பித்தொழில் முன்னளில் நடந்திருக்கலாம். இன்றும் அவ்வூரின் கடற்கரை ஓரம் நடந்து சென்றால் முன்னளில் அத் தொழில் நடாத்திய இடங்களைக் காணலாம். வத்தை எனும் சொல் இலங்கையில் சிறுபகுதி எனும் பொருள்படும். எனில் சலாவத்தை காலச் செலவால் சிங்கள மக்கள் நாவிலே ஹலாவத்தை என ஆயிற்று. இலங்கை அறிஞரில் ஒருவராய எ. வி. மயில்வாகனம், எம். ஏ. என்பார் நித்திலபுரம் என்றே அதனைத் தம் நூலில் குறிப்பிடுகிறார். அப்பெரியார் கூற்றும் சிலாபம் எனும் சொல்லாராய்ச்சிக்கு உதவலாம்.

சிங்கள மக்களின் உரையாடல் சில செவிமடுத்தேன். 'அங்கே போய் வருகிறாயா?' என்று தந்தை தனயனைக் கேட்டால் ஹரி என்பான் சிறுவன். இத்தகைய சூழ்நிலையில் தமிழ் நாட்டாராயின் சரி என்போம். எனவே சரி எனும் தமிழ்நாட்டுச் சொல்லும், ஹரி என்ற சிங்களச் சொல்லும் முதல் எழுத்தால் வேற்றுருப் பெற்றன. ஆனால் பொருளால் ஒருமைப்பட்டனவே. சிலாவத்துறையை அடுத்துச் சிறு தொலையில் ஹெட்டிப்பளை எனும் ஊர் உளது. அதன்பேர் கேட்ட அளவிலேயே அதன் நல்லுரு செட்டிப்பளையாகத்தான் இருத்தல் வேண்டும் என்ற என் முடிவும் உறுதியாயது. கொழும்பு போன்ற பெரிய பட்டி

னங்களில் நம் நாட்டு நாட்டுக்கோட்டைச் செட்டிமார் தொழில் செய்கின்றனர். சிங்கள மக்கள் செட்டியாரின் கடையைக் குறிப்பிடும்போழ்து ஹெட்டிக் கடை என்றுதான் சொல்கின்றார் கள். தம் வாழ்க்கை சிக்கனமாக—செட்டாக அமைந்தமையின் வந்த பெயரே செட்டியார் என்ற எண்ணம் இருப்பினும், தம்மை ஹெட்டி எனச் சிங்கள மக்கள் அழைத்தல் கண்டு யாரும் அந் நாட்டில் வருந்துதல் இல்லை.

ஒருநாள் கொழும்பு கோட்டை இரயில் நிலையத்தில், யானும் என் இலக்கியத் தோழியும் கண்டி எனும் மலைநாடு செல்லற்குரிய புகை வண்டியை எதிர்நோக்கி நின்றோம். அவ்வண்டியில் மா நுவர எக்ஸ்பிரஸ் என எழுதியிருந்தது. ஒருகால் கண்டி எனும் சொல் சிங்களத்தில் மா நுவர என்றுதான் அழைக்கப்பெறுமோ என எண்ணலாயினோம். எங்கள் ஆராய்ச்சி விரிந்து சென்றது. இங்குக் குறிப்பாகவே அதனைச் சொல்ல விழைகிறேன். முன்னாளில் கண்டி எனப்பெறும் இந்நாளின் பகுதிதான் நாட்டின் பெரும் பட்டணமாக—பெரு நகரமாக — அமைந்திருந்தது, என்றல் வரலாறு. இலங்கைக்கே மாபெரும் நகராய அப் பகுதி, காலச் செலவால் மா நகரே என ஆகி நகர் பின்னர் நுகர் என மாற்றுருப் பெற்று இன்று மா நுவர எனச் சிங்களத்தில் இலங்குகிறது. எனவே கண்டியும் மா நுவரவும் ஓர் இடத்தையே குறிக்கின்றன. கண்டி நகரத்தை அடுத்தது நுவர எலிய என்னும் பகுதியாகும். எலிய எனும் சிங்களச் சொல் வெளிஇடம் அல்லது ஒளி எனப் பொருள்படும். கண்டிக்குப் புகழ் ஒளியை இம் மலைப் பகுதி அளித்திருக்கலாம் போலும்!

அடுத்தாற் போன்று தோன்றும் இடப்பெயர் தமிழ் இலக் கிய மாணவர் உள்ளத்தினும் புத்தொளி நல்கலாம். சீதா எலிய என்பது இலங்கையின் மலைநாட்டுப் பகுதிகளில் குளிர்மிகுந்த காட்டுப் பகுதியாகும். சீதை என்றவுடன் கம்பன் நம்முன் தோன்றலாம். தேனடைந்த சோலைத் திருநாடு கைவிட்டுக் கான் அடைந்தான் கமலக்கண்ணன். இலக்குவன் புல்லினால் தொடுத்த தூய சாலையுள் இருந்தாள் தவத்தின் செல்வி சீதை நல்லாள். இராவணன் வஞ்சனைமானின்பின் மன்னனைப் போக்கி, நிலத் தொடு அக் கற்பின் அழலைப் பெயர்த்துச் சென்று இலங்கையில் மரங்கள் சூழ்ந்த காட்டுப் பகுதியில் சிறை வைத்தான். இராவ ணன் சீதையைச் சிறைவைத்தமை இந்நாள் இலங்கும் இலங்கை யிலோ அன்றி வேறு எங்கோ என்ற ஐயம் மாணவருக்கு எழல் இயற்கையாகும். ஏனெனில் சென்னையின் செந்தமிழ்ச் செல்வி யில் அருந்தமிழ் அன்பர் அண்மையில் எழுதிய கட்டுரை அப் புதிய எண்ணத்தை அளிக்கின்றது. சீதா எலிய எனும் ப

நங்கி என்றே குறிக்கிறான். இச்சொல் நங்கை எனும் தமிழ்ச் சொல்லின் சிதைவாகலாம்.

மேற்கூறியவண்ணம் என் இலங்கைச் செலவு ஓரளவு தமிழ் அன்னையினை நினைவுகொள்ள வழிவகுத்தது. செவ்விய தமிழ்ச் சொற்கள் தம் நல்லுருவிழந்து மருவுதல் பெற்றுச் சிங்களம் போன்ற மொழிகளில் நல்வாழ்வு பெறுகின்றன. எனில் தமிழ் அன்னையின் தகை மக்களாய நாம், நம் அரிய செல்வத்தைப் போற்றுகின்ற சிங்கள மொழியினருக்குப் பல்லாண்டு பாடல் சிறப்பாகும். யான் இலங்கை அன்னையைப் பிரிகின்ற போழ்து,

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே."—திருமந்திரம், ௩௫௨.

எனும் இன்றமிழ்ச் சோலை மலர்கள் என்னை வாழ்த்தி விடை பெற்றன.

## இறைவாழ்வு

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

வஞ்சம் நிறைந்த இவ்வுலகில்
வாய்மை வாழ்வு வேண்டுதிரேல்
தஞ்சம் இறைவன் அடியென்றே
தாழ்ந்து பணிந்து வாழ்வீரே!

சூது நிறைந்த இவ்வுலகில்
சூர ராக வேண்டுமெனில்
பேத மற்ற இறைஞானம்
பெரிதும் பெற்று வாழ்வீரே!

பொய்கள் மலிந்த பூவுலகில்
புனித வாழ்வு வேண்டுமெனில்
தெய்வம் ஒன்றே எனக்கண்டு
தெளிந்து சிவத்தைத் துய்ப்பீரே

# கம்பன் காவிய நடை

[திரு. ச. கணபதி முதலியார், எம். ஏ., எல். டி.,]

உமர்கயாம் (Omar Khayyam) பன்னிரண்டாம் நூற்றூண்டின் நடுவண் பாரசீக வானில் தோன்றி மறைந்த ஓர் வியத்தகு மின்னொளி. ஐந்நூறு பாடல்களடங்கிய 'ருபையத்' (Rubaiyat) என்னும் கவித் தொகுதி அவர் அருளிப் போந்த பேரிலக்கியம். அவ்விலக்கியத்தில் நூற்றுப்பத்து அரும்பாடல்களை எட்வர்ட் பிட்ஸ் ஜெரால்ட் (Edward Fitzgerald) இரு தடவைகளில் இரு பதிப்புகளாக ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டார். அம் மொழிபெயர்ப்புச் செய்யுள்களின் சில விழுமிய கருத்துக்களை அடிப்படையாகக்கொண்டு இழுமென் மொழிகளில் நாற்பத்து மூன்று பாடல்களைக் காலஞ்சென்ற கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் தமிழில் மொழி பெயர்த்து யாத்துத் தந்தனர். அஃதில் ஒரு பாட்டு உமர்கயாம் மூலத்தின்கண் பரந்தோடும் தத்துவத் தேனைத் திரட்டி வடித்து நல்கா நிற்கின்றது. நல்லியற்கைச் சூழலில் உண்ணுந்தோறும் உண்ணுந்தோறும் அயிற்சுவை பயந்து உடல் உரம் நல்க வல்ல ரொட்டித் துண்டும், ஆயுந்தோறும் ஆயுந்தோறும் பொருள் நயம் புலப்படுத்திப் புத்தின்பத்தைத் தரவல்ல அணி திகழ் உயர் கவிதையும், தோயுந்தோறும் தோயுந்தோறும் பொறி புலனின்பங்களை முன்னையிலும் பன்மடங்கு பயக்கவல்ல பணிமொழி நங்கையும், ஊற்றுந் தோறும் ஊற்றுந் தோறும் உவட்டாமல் நறுமணத்தோடு உலப்பிலா இன்பத்தைக் கொடுக்கவல்ல மதுவுமே இப் பாலைவனத்தை விண்ணுலக வீடாக்கும் என்பதே அவரது சித்தாந்தம்; அவர் கண்ட மெய்ப்பொருளுமாகும். இக் கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டு மிளிர்கின்ற பிட்ஸ்ஜெரால்ட்டின் ஆங்கில மொழி பெயர்ப்புச் செய்யுளை அடியில் தருகின்றோம்.

"Here With a Loaf of Bread beneath the Bough
A Flask of Wine, a Book of Verse—and Thou
Beside me singing in the Wilderness—
And Wilderness is Paradise enow."

இப் பாட்டைக் கவிமணி அவர்கள்,

"வெய்யிற் கேற்ற நிழலுண்டு வீசுந் தென்றல் காற்றுண்டு
கையிற் கம்பன் கவியுண்டு கலசம் நிறைய மதுவுண்டு
தெய்வ கீதம் பலவுண்டு தெரிந்துபாட நீயுமுண்டு
வையம் தருமிவ் வளமன்றி வாழும் சொர்க்கம் வேறுண்டோ."

என்று தமிழர் பண்பிற் கேற்ப மொழி பெயர்த்தருளினர்கள். இத் திருப்பாட்டில் 'A Book of Verse' என்பதற்குப் பொதுவில் கூறவேண்டியதை ஒழித்துக் 'கையிற் கம்பன் கவியுண்டு' என்று சிறப்பில் ஒரு நூலை எடுத்துக் காட்டி மொழிபெயர்த்தது அவர் கட்குக் கம்பன் கவியின்பால் உள்ள ஈடுபாட்டினை அங்கை நெல்லி யெனத் தெளிவுபடுத்துவதாகும். என்னை?

"எத்திக்கும் போற்றும் இராமன் திருக்கதையைத்
தித்திக்கும் செந்தமிழில் செய்தளித்து—நித்தமும்
அம்புவியில் மக்கள் அமுதம் அருந்தவைத்த
கம்பன் கவியே கவி."

என்பதூஉம் அவர்களது அருள்வாக்கு ஆகலானும் என்க. எனவே கம்பன் கவி சிறந்தது என்பது இதனால் போந்த உண்மை.

கம்பனின் கவியமுதம் தெவிட்டாத் தன்மையது; நவில் தோறும் நவில்தோறும் நாச்சுவை நல்குவது; பயில்தோறும் பயில் தோறும் பாச்சுவை பயப்பது; உள்ளுந்தோறும் உள்ளுந்தோறும் உள்ளத்தில் உவகையை ஊட்டுவது. கம்பன் இராமகதையை ஆசைபற்றி அறையலுற்றான் எனவே அஃது இராம காவியமா யிற்று. அஃது ஓர் காவியக் களஞ்சியம்; அறிவுச் சுரங்கம்; இன்ப ஊற்று; ஞானப் பேழை; கருத்தோவியம்; செஞ்சொற் சதங்கை; ஒழுக்கக் கொள்கலம்; வாழ்க்கைப் பெட்டகம். காவியத்திற்குரிய எல்லா நோக்குகளும் அதன்பாலுள. சொல் நோக்கு அதன் பாலுண்டு; பொருள் நோக்குண்டு; தொடை நோக்குண்டு; நடை நோக்குண்டு; துறை நோக்குண்டு; நாடக நோக்கும் உண்டு. எனவே அதனை வியவாதார் எவருமிலர்; யாண்டுமிலர். அதன்கண் கோதண்டராமனின் வீரத்தையும் பொறுமையையும் கண்டு அவனை வியக்குநர் பலர்; சிறையிருந்த செல்வியாம் சீதையின் கற்பின் ஆற்றலைக் கண்டு அவளை ஏத்துநர் பலர்; இலக்குவனின் சிற்றத்தின் பான்மையையும் பிரியாத் தோழமை மேன்மையையும் நோக்கி அவனைப் புகழுநர் பலர்; பரதனின் கள்ளமில் உள்ளத்தையும் பற்றற்ற பண்புடைமையை யும் கண்டு அவன்சீர் பாடுநர் பலர்; அயோத்தி அரசராய தயா தற்கும் புள்ளரசாய சடாயுவிற்குமுள்ள நட்பின் திறத்தைக் கண்டு அதனைப் போற்றுநர் பலர்; வாலியின் அளவில் ஆற்றலைக் கூறுநர் பலர்; சோற்றுக்கடன் கழித்த கும்பகர்ணனின் நன்றி கொல்லாத் தன்மையை நவிலுநர் பலர்; இடித்துரைத்தும் கேளாத உடன் பிறந்தோனாகிய தசக்கிரீவன்பால் வெறுப்புண்டு கருணைக் கடலாம் இராமனுழை விருப்புண்டு அடைக்கலம்

புகுந்த வீடணனின் நல்லிணக்கத்தை நயக்குநர் பலர்; 'நல்லறம் செய்தோர் நல்லுலகு அடைவர் அல்லறம் செய்தோர் அருநரகு அடைவர்' என்னும் கூற்றின் உண்மையை இராம காவியத்தில் நேரில் கண்டாம் எனக் கழறுநர் பலர்; 'அறம் வெல்லும் பாவம் தோற்கும்' எனும் உயர்மொழியின் நுட்பத்தை இராவணனபாலும், தாடகை, கரன் தூஷணன், மாரீசன்பாலும் வைத்து உணர்ந்தோம் எனக்கூறி அவர்களை இகழுநர் பலர். இங்ஙனம் பல்லாற்றானும் புகழ்தற்குரிய காவியம் கம்பனின் சொல்லோவிய மாகிய இராமாயணம் என்பது வெள்ளிடைமலை.

காவியம் இயற்றுதல் அல்லது நூல்யாத்தல் எல்லார்க்கும் எளிதன்று; பலர்க்கு அரிதாம்; ஒரு சிலர்க்கே இயலுவதாம். ஒவ்வொருவரும் ஒவ்வொன்றில் பெரியர். ஒல்காப்பெரும் புகழொடு தொல்காப்பியம் இயற்றுதல் தொல்காப்பியர்க்கே எளிதாம்; வித்தக நடையொடு பத்துப் பாட்டைப் பாடுதல் சங்கத்துச் சான்றோர்க்கே இயலுவதாம். குறுகத்தறித்த குறளை ஒரு மொழி நயத்தொடு யாத்தல் திருவள்ளுவனார்க்கே உரியதாம்; நந்தாப் பொருளொடு சிந்தாமணியைத் தருதல் திருத்தக்க தேவர்க்கே தகுதியுடைத்தாம்; இலக்கியச் செலவொடு நயத்தொடு சிலப்பதிகாரத்தைப் புனைதல் இளங்கோவிற்கே முடிவதொன்றாம்; அணிகெழு போக்கொடு மணிமேகலையை வெளிப்படுத்தல் சாத்தனார்க்கே சாதிக்கக் கூடுவதாம்; பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பெரிய புராணத்தைப் பாடுவது கடவுள்மாக்கவிஞர் சேக்கிழாரையே சேர்ந்ததாம். செம்பொருள் இன்பத்தொடு இராமகாவியம் தொடுத்தல் கம்பர்க்கே உரியதாம்.

ஒரு காவியத்தின் பெருமையுஞ் சிறுமையும், உயர்வும் தாழ்வும், அக் காவியத்தை ஆக்கியோனின் உள்ளப் பண்பின் மாண்பினையும் கற்பனைத் திறனையும், சொற்போக்கு நெறியினையுமே பொறுத்துள்ளது. ஈண்டு முதற்கண் கம்பன் காவியப் பொருளமைப்பு முறையைக் கூறுவாம்.

கம்பனின் இராமகாதை வால்மீகி பகவானின் வடமொழி இராமாயணத்தைத் தழுவி எழுதப்பெற்றதெனினும் வால்மீகியின் காவிய அமைப்புமுறை வேறு, கம்பனின் பொருள உள்ளமைப்புப் போக்கு வேறு என்று வடமொழிக் கடலும தென்மொழிக் கடலும் நிலை கண்டுணர்ந்த மேதக்கோர் நவில்வர். கம்பன் காவியத்தில் கூட்டலுமுண்டு; பெருக்கலுமுண்டு; மூலத்தினின்றும் தமிழர் உயர் பண்பாட்டிற்கேற்ப மாற்றலுமுண்டு என்பது இருமொழிப் புலமை மிக்காரது கருத்து

கம்பனின் ராமாயணம் பால, அயோத்திய, ஆரண்ய, கிஷ்கிந்த, சுந்தர, யுத்தகாண்டமென ஆறு பெரும் பிரிவுகளாகப் பகுக்கப் பட்டுள்ளது.

கம்பனின் காவிய அமைப்பைக் கூறுவதன் முன்னர் உலகில் காவியம் எங்ஙனம் எழுந்தது என்று அதன் வரலாற்றை ஒரு சிறிது சிந்திப்பது இவண் ஏற்புடைத்தாம். காவியம் ஒரு நாள் காலையில் ஒரு புலவனின் நுண்மாண் நுழை புலத்தில் திடீரென மலர்ந்தது அன்று; பிறந்ததும் அன்று. அது பன்னெடு நாட்களாக, ஆண்டுகளாக ஒரு கிராமத்திலாதல், ஊரிலாதல், நாட்டிலாதல் கிராமப் பாடல்களாக, ஊர்ப்பாடல்களாக, நாட்டுப் பாடல்களாக, (Folk - songs or ballads) ஆக்கியோனின் பெயரிலதாய், எழுதப்படாததாய், வாய்மொழி மூலமாய்ப் (Word of mouth Oral) பாடப்பட்டு வந்த பழங்கதைத் தொகுதியின் வளர்ச்சியே யாம் என்பர். மேல்நாட்டு ராபின்ஹுட் (Robinhood) கதைகளும் கீழ்நாட்டுத் தேசிங்குராஜன் தெம்மாங்குப் பாடல்களும் இதற்கு அமையும் ஒரு சில சான்றுகளாம். அப் பாடல்கள் ஒரு வீரனின் வீரச் செயல்களைப் பற்றியோ அல்லது பல வீரர்களின் வீரச் செயல்களைப் பற்றியோ கூறுநிற்கும். அவை ஒரு புலவனாலோ அல்லது பல புலவர்களாலோ பாடப் பெற்றிருக்கலாம்; தொகுக்கப் பெற்றிருக்கலாம். அப் பழம்பாடல்களின், கதைகளின் அடிப்படையினின்றும் எழுந்தவைகளே காப்பியங்களாகும், காவியங்களாகும். (Epics - the germ of the epic is to be found in the ballad) மேல்நாட்டுப் பாகுபாட்டின்படி அக் காப்பியங்கள் இரு திறத்தனவாகக் காணப்படும். ஒன்றை வளர்ச்சி அடிப்படைக் காப்பியம் (Epic of growth) என்பர்; மற்றொன்றை கவின் காப்பியம் (Epic of Art or Culture) என்பர். முன்னையது எளிய சொற்களையும் கருத்துக்களையும் கொண்டிலங்குவது; சொல் மாயம் அல்லது வித்தை அதில் இரா. பின்னையது சொல் லாழத்துடனும் கற்பனைத் திறனுடனும் சொல் மயக்குடனும் அணி நலத்துடனும் விளங்குவது. பொதுவில் அப் பாடல்களுக்கும் பழங் கதைகளுக்கும் ஒரு சில தனிப்பண்புகளுமுண்டு. அவை வரலாற்றைச் சொல்லும் நெறியையுடையவை; பின்பற்றுபவை (Narrative in Character) அப் பாடல்களின் நுதல்பொருள் (Theme) அக்கால மக்களிடையே உணர்ச்சியை ஊட்டவல்ல, மிகவும் முக்கியமான பொருளையே உயிர்நாடியாகக் கொண்டதாகவே அமையும். (Of momentous Importance for mankind) அக் கதைகளின் கதாப் பாத்திரங்கள் தேவர்களும் மக்களுமாக அமைவர் (Characters partly divine

and partly human). அப் பாடல்களின் மொழியும் நடையும் உயரிய கண்ணிய நிலையில் செல்வனவாக அமைக்கப்பெறும் (Language and style full of elevation and dignity.)

பண்டைக்காலத்தில் மேல்நாட்டிலும் கீழ்நாட்டிலும் காவியங்கள் இல்லாமலில்லை. ஹோமர் எழுதிய இலியட்டும் (Iliad) ஒடீயசும் (Odyssey), வெர்ஜில் எழுதிய ஈனீடும் (Aeneid), தாந்தே எழுதிய டிவைன் காமிடியும் (Divine Comedy), மில்டன் எழுதிய சுவர்க்க நீக்கமும் (Paradise Lost) மேல் நாட்டுக் காப்பியங்களுக்குத் தலைசிறந்த எடுத்துக் காட்டுகளாம். வியாச பாரதமும் வடமொழி ஸ்காந்தமும், பாகவதமும் வால்மீகி இராமாயணமும் கீழ்நாட்டுக் காப்பியங் களுக்கு எடுத்துக்காட்டுகளாம். ஹோமர் எழுதிய இலியட்டும் வால்மீகி எழுதிய இராமாயணமும் கதை பொதி பாட்டில் ஒருபெற்றித்தாகவே இலங்குகின்றன. இரண்டும் பெண் தூக்கிக் கதைகளே. பாரிஸ் (Paris) என்னும் டிராய் நகரத்து இளவரசன் ஸ்பார்டா (Sparta) நகரத்தரசனை மெனிலாவின் (Menelaus) மனைவியாகிய ஹெலனைத் தூக்கித் (Helen) தன்னுடு சென்றான். ஹெலனை மீட்கும் பொருட்டுக் கிரேக்க வீரர்கள் டிராயினை முற்றுகையிட்டுச் சண்டை செய்தனர். இராமன் மனைவியாகிய சீதையை இராவணன் இலங்கைக்கு மண்ணோடு பெயர்த்தெடுத்துச் சென்றான். அவளை மீட்டுவதற்கு எழுந்த இராம இராவண யுத்தத்தையே இராமாயணம் பெரிதும் கூறும்.

காவிய அமைப்பைப்பற்றி மேல் நாட்டவர்கள் அரிஸ்டாட்டில் (Aristotle) நாள் கொண்டு இன்றுவரை சிந்தித்து வந்தது போல் கீழ்நாட்டவர்கள் அத்துணை சிந்தித்தார்களில்லை. கீழ் நாட்டவர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டவெல்லாம் சொல்லலங்காரங்கொண்ட அணிவகைகள்தாம். காப்பிய உள்ளமைப்பு அல்லது பொருள் செல்லும் நடை அல்லது நெறி அவர்கட்கு அத்தனை புலப்படவில்லை. கீழ்நாட்டவர்கள் காட்டிலுள்ள மரங்களைத் தனித்தனியே ஆராய்ந்தார்கள்; மேல்நாட்டவர்கள் காட்டிலுள்ள மரங்களையும் தனித்தனியே ஆராய்ந்தார்கள்; ஆரண்யத்தையும் ஒருங்கே ஆராய்ந்தார்கள். ஒரு காவியத்தை ஒரு கலைக்கோயிலுக்கு ஒப்பிடலாம். கலைக்கோயில் பல பகுதிகளைக் கொண்டது. ஒரு தனிப்பகுதி கலைக்கோயிலாகா. எல்லாப்பகுதிகளையும் ஒன்று சேர்த்து நோக்குழித்தான் அதன் எழில் நலம் கண்ணுக்கு நன்கு புலப்படும். அஃதேபோல் ஒரு காவியமும் பல உறுப்புக்களைத் தன்னகத்தே கொண்டது. அவ்வுறுப்புக்கள் தனித்தனி நின்றுழி காவியம் வேண்டிய சுவைதரா. எல்லா உறுப்புக்களும் இணைந்து பிணைந்து நின்று ஏகம் அல்லது

ஒன்று என்ற உணர்ச்சியைத் தூண்டுமேல் அது பல்சுவையைப் பயந்து நிற்கும்.

இப் பொதுஇயல்புகளைச் சிந்தையில் தேக்கி வைத்துக்கொண்டு கம்பன் காவிய நடையைப்பற்றி ஆராய்வாம். ஒரு காவியத்தை ஒரு பெண்ணாகவும் உருவகிக்கலாம். அக் காவிய நல்லாளின் உடல் இருகூறுடைத்து. ஒரு கூறு காவியத்தின் உள்ளுறைப்பொருள் (Matter or Material); பிறிதொரு கூறு அப் பொருளைக் கற்போர் உளங்கொளச் சொல்லும் திறனாகிய சொல்லமைப்பு நெறி அல்லது சொல்லமைப்பு முறையாகிய நடை (Style). முதற்கண் கம்பன் காவியப் பொருளமைப்பு நடையை அல்லது முறையைப்பற்றிக் கூறலாம்.

கம்பன் காவியம் இராமன், சீதை, இராவணன் ஆகிய மூன்று முக்கிய பாத்திரங்களைச் சுற்றியே நிற்கின்றது. இராமன் கருணைக்கடல், பொறுமைக்குறைவிடம்; சீதை கற்புக்கு அணி, கற்புக்கனல்; இராவணன் தவவலிமையால் மண்ணும் விண்ணும் கொள்ளும் தறுகண்மை உடையவன். பிறனில் விழைவால் பேராண்மை இல்லாதவன், இழந்தவன். சீதைதான் காவியத்தின் சுற்றாணி (Pivot). இராவணன் சீதையை எடுத்து இலங்கைபுக்கு அசோக வனத்தில் சிறை வைத்தான். அவளைச் சிறையினின்றும் மீட்டுதற்காகவே பெரும் போர் மூண்டது. இராவணன் இறத்தலே காவியத்தின் குறிக்கோள். இலக்குமணன், பரதன், குகன், சடாயு, வாலி, சுக்கிரீவன், அனுமன், கும்பகர்ணன், விடணன், இந்திரசித், திரிசடை முதலியோர்கள் எல்லாம் துணைப்பாத்திரங்கள் ஆம்.

பால காண்டம் இராம காவிய மாளிகையின் முன்னமைக்கப்பெற்ற பூமலிசோலையின் வாயிலாகும். அவ்வொரு வாயிலின் வழியாகத்தான் உள் நுழைதல் வேண்டும். அன்றியும் இக் காண்டம் காவியத்திற்கு முகவுரையாகவும் அமைந்துள்ளது எனலாம். இராவணவதத்திற்கு இக் காண்டம் உறுதுணையாக எங்ஙனம் அமைந்துள்ளது என்பது ஈண்டுச் சிந்திக்கற்பாலது. நாட்டு வர்ணனை, நகர் வர்ணனை, எழுச்சி, உண்டாட்டு, வரைக் காட்சி, பூக்கொய்படலம் முதலியன காப்பிய இலக்கணத்திற்காக அமைக்கப்பெற்றவை. இராமனின் அவதாரமும், கோசிகன் வரவும், தாடகைவதமும், சீதை மணமுமே இராவணவதத்திற்குக் கால்கோளாகக்கொள்ள வேண்டியவை இராமன் இன்றேல் காப்பியம் இன்றும்; சீதை இன்றேல் காப்பியம் உளதாகாது. சீதையோடு கூடிய இராமனே கதைப்போக்கிற்கும் இராவணவதத்திற்கும் வேண்டப்பட்டவன். தனி இராமனைக் கதை வேண்டிற்றிலது.

அயோத்தியா காண்டத்தில்தான் இராம காவியமே ஆரம்பிக்கிறதென்றால் அது பொய்யாகாது; பேருண்மையாகும். இராவணனின் அழிவிற்கு இக் காண்டத்தில்தான் வித்து விதைக்கப்படுகின்றது. அவ் வித்துத்தான் கொடுமனக்கூனி. இராமன் சீதையுடன் அயோத்தியின்கண் உறைந்தால் இராம நாடகம் எழுதற்கும் எழுதுவதற்கும் ஒரு சிறிதும் இடனில்லை. இராமன் சீதையுடன் கானகம் அடைந்தால்தான் காவியம் உருப்பெறும் மந்தரை எனும் கூனி, நாளை இராமன் பொன்முடி சூடப் போகின்றான் என்று கேட்ட ஞான்று துடிக்கும் நெஞ்சினளாய், ஊன்றிய வெகுளியையுடையவளாய், உளைக்கும் உளத்தவளாய், கான்றெரி நயனத்தவளாய், கலிக்கும் சொல்லையுடையவளாய், மூன்றுலகிற்கும் இடுக்கண் மூட்டுபவளாய்க்கேகயன் மடந்தையை அணுகினாள் அவளே இராவண வதத்திற்கு அடிகோலியவள். அவளுடைய சூழ்ச்சியினால்தான் இராமன் முடிதுறந்து சீதையுடன் காட்டிற்கேகவேண்டியது வந்தது. இராவணன் சீதையின் பேரழகைக் கேட்டும், கண்டும் அவளைத் தன் மனச் சிறையில் அடைத்துவைக்க முதற்காரணமாக இருந்தவள் அவளே. அதனால்தான் போலும் அவள் வருகையைக் கூறுமிடத்துக் கம்பர்,

"இன்னல்செ யிராவண னிழைத்த தீமைபோல்
துன்னருங் கொடுமனக் கூனி தோன்றினாள்."

(மந்தரை சூழ்ச்சிப்படலம்—செ. ௩௧)

என்று பின்நிகழ இருக்கும் நிகழ்ச்சிகளையெல்லாம் மனக்கண்ணிற்குக் கொண்டுவந்து முன்னர் மொழிந்தனர் என்பர். 'இராமனைப் பயந்தவெற் கிடருண்டோ' என்றிறுமாந்திருந்த தொண்டைவாய்க் கேகயன் றோகையின் திரியா மனதை, புரந்தரன் செய்த தவத்தானும், மறையவர்களின் நோற்றலின் ஆற்றலினும் திரியவைத்தவளும் அவளே. கைகேயி 'அறிவிலி அடங்குதி' என்று அடக்கிய காலத்தும் அடங்காது 'நின்னலம் வீழ்ந்தது, திருவும் வீழ்ந்தது, கோசலை மதியினால் வென்றாள்,' பரதனுக்கு 'தந்தையுங் கொடியனற் றாயுந தீயள்,' இராமனோ 'ஆடவர் நகையுற ஆண்மை மாசுற' தாடகை என்னும் தையலாள் மண்ணில்பட முதல் முதல் தன் கோடிய வரிசிலையை அறநோடுற எய்தவனாதலின் பெண்பாலார்க்கு நல்லவனல்லன்; உனக்கும் அன்னவனே என்று இயம்பியவளும் அவளே. சிவந்த வாய்ச்சீதையும் கரிய செம்மலும் மணி ஆசனத்திருக்க நின் மகன் மண்மிசை இருக்க நீ காண்குவையோ என்று இடித்துக் கூறிப் பொறாமைக்கனலையும் புரட்சிப் புயலையும் எழுப்பியவளும் அவளே. அவளின் தூண்டுதலினால்தான், போதனையினால்தான்

அஞ்ஞான்று தீயவை யாவையினுஞ் சிறந்த தீயவளாய் விளங்கா நின்ற கைகேயி,

"ஏய வரங்க ளிரண்டி னொன்றி னாலென்
சேயுல காளவது சீதை கேள்வ னொன்றாற்
போய்வன மாள்வது."

என்று தயரதனைக் கேட்டாள்.

அங்ஙனம் கேட்ட இருவரங்களுள் 'ஒன்றால் சீதை கேள்வன் போய்வன மாள்வது' என்பது ஆராய்வதற்குரியது. அறக்கடலாகிய இராமனைக் கொடிய உள்ளத்தளாய சிற்றன்னை 'நீ காட்டிற் கேகுதல் கடன்' என்று அவன் பெயர் குறித்துக் கூறவும் அஞ்சினள்போலும். எனவே 'சீதையின் கேள்வன்' என்று மறைமுகமாகக் கூறினாள் என்றும் கூறுவர். அன்றியும், 'சீதையின் கேள்வன்' என்ற சொற்றொடர் வேறொரு பொருளையும் உள்ளடக்கி நிற்கின்றது என்று அறிஞர் கூறுவர். சீதைக்குக் கணவனாகிய இராமன் மாத்திரம் காட்டிற்குச் செல்லுதல் வேண்டுமென்பதன்று. சீதையும் சீதைக்குக் கணவனாகிய இராமனும் காட்டிற்குச் செல்லுதல்வேண்டும் என்பது தொனிப் பொருள் (Suggestiveness) என்பர். சீதைக்குக் கேள்வன் என்ற நான்கனுருபுப் பொருளும், சீதையும் அவள் கேள்வன் இராமனும் என்ற உம்மைத் தொகைப்பொருளும் அச் சொற்றொடர் பயந்து நிற்குமாறு வைத்த கம்பனது சொல் வைப்புமுறை ஆழ நினைந்து இன்புறற்பாலது. இப் பொருள் காவியக் கதைப்போக்கிற்குத் துணையாதலையும் அறிக இராமன் மாத்திரம் காட்டிற்குச் சென்றிருந்தால் இராவணவதம் ஏற்படுமாறில்லை; சீதையும் உடன் செல்லுதல் கதைப்போக்கிற்கு இன்றியமையாதது. சீதை காட்டில் இல்லையெனில் சூர்ப்பணகை அவளை ஆங்குக் கண்டிருத்தலுமில்லையாம்; அவளின் பேரழகை இராவணனுக்கு எடுத்துரைத்ததுமில்லையாம்; அவள்மாட்டு இராவணன் காதல் கொண்டதுமில்லையாம்; அவளைச்சிறை எடுத்ததும் இல்லையாம்; இராவணவதமும் இல்லையாம். எனவே இராவணன் அழிவிற்கு முதற்கல் (First Stone) எடுத்தவள் உடற்கூனும் உள்ளக்கூனுமுள்ளவளாய மந்தரையே. கைகேயி அவளால் ஆட்டி வைக்கப்பெற்ற கைப்பொம்மையே. எனவே மந்தரை கம்ப நாடகத்தில் சூழ்ச்சி வல்ல நயவஞ்சகிப் பாத்திரமாவள். (The Villain in Kambar Ramayanam).

(தொடரும்)

# உள்ளுறையுவமமும் இறைச்சியும்

[திரு சு. குமாரசாமி ஆச்சாரி, எம். ஏ.]

உள்ளுறை

மக்கள் தத்தம் கருத்தை வெளிப்படுத்துவதற்குக் கருவியா புள்ளது மொழி எனினும், நாம் கூறக் கருதும் யாவற்றையும் எவ்விடத்தும் வெளிப்படையாகவே கூறுவதில்லை. நாம் யாரோடு பேசுகின்றோமோ அவருடைய தகுதிக்குத் தகுந்த படியே பேசுகிறோம். அங்ஙனம் பேசுவதே அறிவுடையோர் கடனும். இந் நிலை மக்களுடைய நாகரிக வளர்ச்சியால் எழுவதாம். இக் காரணத்தினாலேயே இலக்கண ஆசிரியர்கள் வழக்கினை இயல்பு, தகுதி என இருவகைப்படுததினர். "ஒன்றொழி பொதுச்சொல் விகாரந் தகுதி" என்று தொடங்கும் நன்னூற் சூத்திரம் இதனை நன்கு விளக்கும். குறிப்பாகப் பொருளுணர்த்தும் மொழிகளைத் தொல்காப்பியர் "சொல்லொடு முடிவு கொளியற்கை புல்லிய கிளவி", "குறிப்பொடு முடிவுகொளியற்கை புல்லிய கிளவி" என்பர். உள்ளுறை எனக் குறிக்கப் படுபவைகள் இவைகளேயாம்.

உள்ளுறையாவது கூற்றினுள்ளே குறிப்பாய் உறைவது; (உள் + உறை). சொற்களின் செம்பொருளன்றிக் கூற்றினகத்து அடங்கிநின்று உய்த்துணரத் தோன்றும் மறைபொருளே உள்ளுறையாம். இதனை வடநூலார் "தொனி" என்பர். இயல்பாகிய பொருளைவிட்டுத் தனியே சிறப்புடையதாய்த் தோன்றும் குறிப்புப் பொருளே "தொனி" என்பர். குறிப்புப் பொருளையறிய வாக்கியத்தின் பொருள் கருவியாம். அணிகளினும் ஓர் பொருள் குறிப்பாய்த் தோன்றுகின்றதெனினும் அவற்றின் முடிவு அவ் வாக்கியக் கருத்துடனேயே முடிந்துவிடும். அதற்கு மேல் ஒரு பொருள் உண்டு. அதுதான் தொனி என்பர் ஆனந்த வர்த்தனர். அத் தொனி விளக்கனையது. விளக்குத் தன்னையும் தானிருக்குமிடத்தில் முன்னர் மறைந்து கிடந்த பொருளையும் விளக்கிக் காட்டுவதுபோல, வாக்கியக் கருத்துத் தன்னையும் தன்னகத்தே யடங்கி நின்ற குறிப்புப் பொருளையும் உணர்த்துகின்றது.

தொல்காப்பியர் இத்தகைய குறிப்பு மொழிகளைப் பற்றிச் சொல்லதிகாரத்துட் கூறியிருந்தும், பொருளதிகாரத்தில் பொருளியல் என ஓர் தனியியலை இதற்காகவே அமைத்திருப்பதை நோக்கின் குறிப்பினால் பொருளைப் புலப்படுத்துகின்ற நிலை

இன்றியமையாததே என்பது நன்கு புலப்படும். பொருளியலுள் வரும் அறத்தொடு நிற்றலின் வகையாகிய எளித்தல் ஏத்தல் முதலியனவும், வரைதல் வேட்கைப் பொருளனவும், இவை போலக் குறிப்பின் பொருளை விளக்கும் பிறவும் சிறப்புடையன வாகச் செய்யுள்களில் வழங்குகின்ற குறிப்புரைகளாம். இத்த கைய குறிப்புரைகளை யெல்லாம் உள்ளுறையென அமைத்தனர் இலக்கண ஆசிரியர்கள். "உடனுறையுவமம் சுட்டுநகை சிறப் பெனக் கெடலரு மரபின் உள்ளுறை யைந்தே" என்றார் தொல் காப்பியனார். இவ்வைந்தனுள் உவமம் என்பது பற்றி முதலில் காண்பாம.

உள்ளுறை யுவம இலக்கணம்

உவமம் 'உள்ளுறை யுவமம்', 'ஏனையுவமம்' என இரு வகைப்படும் ஈண்டுத் தொல்காப்பியர் உவமம் எனக் குறிப்பது உள்ளுறையுவமத்தையேயாம். "உடனுறையுவமம்" என்ற சூத்திரத்திற்கு உரை கூறும் இளம்பூரணர், "உவமையைச் சொல்ல உவமிக்கப்படும் பொருள் தோன்றுவது" எனக் குறித் துள்ளதும் இக் கருத்தை வலியுறுத்தும்.

1. "உள்ளுறை யுவமம் ஏனையுவமமெனத்
தள்ளா தாகும் திணையுணர் வகையே." (தொல். அக. ௪௬)

2. "உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலன்எனக்
கொள்ளும் என்ப குறியுணர்ந் தோரே." (தொல். அக. ௪௭)

3. "உள்ளுறுத் திதனொ டொத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத் திறுவதே உள்ளுறை யுவமம்." (தொல். அக. ௪௯)

4. "பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி
முன்ன மரபிற் கூறுங் காலை
துணிவொடு வரூஉம் துணிவினோர் கொளினே."

5. "உவமப் போலி யைந்தென மொழிப."

6. "தவலருஞ் சிறப்பினத் தன்மை நாடின்
வினையினும் பயத்தினும் உறுப்பினும் உருவினும்
பிறப்பினும் வரூஉந் திறத்தவென்ப."

7. "கிழவி சொல்லின் அவளறி கிளவி
தோழிக்காயின் நிலம்பெயர்ந் துரையாது."

8. "கிழவோற்காயின் உரனொடு கிளக்கும்
ஏனோர்க் கெல்லாம் இடம் வரைவின்றே."

9. "இனிதுறு கிளவியுந் துனியுறு கிளவியும்
உவம மருங்கின் தோன்று மென்ப."

10. "கிழவோட் குரிமை யீரிடத் தூரித்தே."

11. "கிழவோற் காயின் இடம் வரைவின்றே."

12. "தோழியும் செவிலியும் பொருந்துவழி நோக்கிக்
கூறுதற் குரியர் கொள்வழியான." (தொல். உவம.)

இச் சூத்திரங்களால் உள்ளுறை யுவமத்தைப் புலப்படுத்துகின்றார் தொல்காப்பியனார். இவற்றுள் பின் ஒன்பது சூத்திரங்களும் இவ்விலக்கணத்தைப் புலப்படுத்துவன எனப் பேராசிரியர் கூறுகின்றார். ஆதலின், உள்ளுறை யுவமம் ஏனையுவமம் போலாகாது, யாண்டும் காதலொழுக்கத்தை யுணர்த்தல் தவிராது வரும் (தொல். அக. சசு, உவம. உசு-ருக). அது அதற்கேற்ற வகையில் தெய்வம் ஒழிந்த கருப்பொருள்கள் சிலவோ பலவோ களனாகக் கொண்டு தோன்றும் (தொல். அக. சஎ). கூறக் கருதிய பொருள் கருப்பொருட் செய்திக்கு ஒப்பாகித் தோன்றும். கருப்பொருட் செய்திக்கும் கூறக் கருதிய பொருட்கும் உள்ள ஒப்புமையும் உள்ளுறையாயிருத்தலினால் புலன் நன்குணர்வோர்க்கே உய்த்துணரத் தோன்றும்; (தொல். அக. சஅ, உவம. உரு). கூறக் கருதிய பொருள் கருப்பொருளினுள் மறைந்து தோன்றும் என்பது, "உடனுறை யுவமம்" என்ற சூத்திரத்திற்குரை கூறும் இளம்பூரணர், "உள்ளுறையாவது பிறிதொரு பொருள் புலப்படுமாறு நிற்பதொன்று; அது கருப்பொருள் பற்றி வரும் என்பது அகத்திணையியலுள் கூறப்பட்டது" என்பதானும், நச்சினார்க்கினியர், "உவமமாவது அக் கருவாற் கொள்ளும் உள்ளுறை யுவமமும் ஏனையுவமமும்" என்பதானும் வலியுறுதல் காண்க. தலைவன், தலைவி, செவிலி, தோழி, பாங்கன் ஆகியவர்கள் உள்ளுறை யுவமம் கூறுதற்குரியர்; (தொல். உவம. உசு-ருக). தலைவனது நாட்டிற்கும் ஊர்க்கும் துறைக்கும் மலை ஆறுகளுக்கும் அடையாகி வரும் கருப்பொருளினிடமாக இவ்வுவமம் தோன்றும். இவற்றை யெல்லாம் உள்ளடக்கியே, நாற்கவிராசநம்பி அவர்கள், "அவற்றுள், உள்ளுறை யுவமம் உய்த்துணர் வகைத்தாய்ப் புள்ளொடும் விலங்கொடும் பிறவொடும் புலப்படும்.' என உள்ளுறை யுவம இலக்கணங் கூறினார். உள்ளுறை யுவமத்திற்குரிய இலக்கணங்களையெல்லாம் தொடுத்து மாறனலங்கார ஆசிரியர்,

"உணர்வதற் கரிதாம் உவமப் போலி
புணர்திறம் வினையே பொருள்மெய் யுருவெனப்
பிறப்பொடு மைந்தாம் பெற்றித் தாகிச்
சிறப்புறு திணைகளிற் றெய்வத மொழிந்த
கருப்பொருள் களனாக் கட்டுரை பயின்று

றுவமையோ டெதிருள் ளுறுத்தலுற் றயலாய்
உவமச் சொற்றொக ஒருதலை யாகியும்
அன்பின தளவா மகத்திணை யிருவயின்
இன்ப துன்பத் திசைதிரிந் திசையாத்
துணைவன் துணைவி தோழி செவிலி
இணையனும் பாங்கன் பாணனென் றிவராற்
கொள்கையின் வரூஉங் குறிப்புரைத் தாகும்"

என ஒரே சூத்திரத்திலமைத்துதவிய பெருமை நம்மனோரால் மறக்கற்பாற் றன்று.

தலைவனும் தலைவியும் நெஞ்சொடு கூறல், பேசாதவற்றுடன் பேசுதல், செய்யாதவற்றைச் செய்ததுபோலக் கூறல் ஆகிய வற்றைக் கூறுகின்ற தொல்காப்பியர் கருத்தை நோக்கின், தொனியின் இன்றியமையாமையை அவர் கூறுகின்றார் என்பது நன்கு விளங்கும். தொனிக்கு இன்றியமையாத் துணையாய் உவமை அமைவது தமிழுக்கே உரியதோர் தனிச் சிறப்பாம்.

உதாரணம் 1.

"அந்தியின் வாயெழி லம்பலத் தெம்பர னம்பொன் வெற்பில்
பந்தியின் வாய்ப்பல வின்சுளை பைந்தே னொடுங்கடுவன்
மந்தியின் வாய்கொடுத் தோம்பும் சிலம்ப மனங்கனிய
மந்தியின் வாய்மொழி நீயே மொழி சென்றம் மொய்குழற்கே"
(திருக்கோவை. கக)

இது, "அஞ்சும் பெரும்பஞ்சின் மெல்லடியைக் கூறுவ நீயே கூறுகென்றது." தோழி 'யான் குற்றேவல் மகளாகலின் துணிந்து சொல்ல மாட்டுகிலேன்; இனி நீயே சென்று நின் குறையுள்ளது சொல்' லெனத் தானுடம்படாது தலைவனை மறுத்துக் கூறினாள். முன்னர் மடல்விலக்கிக் குறை நேர்ந்த தோழி ஈண்டு இவ்வாறு மறுப்பானேன்? தன்னாலியலாதென்று சொல்லாமல், "நீயே சென்று சொல்க" எனக் கூறுகின்றாள். தலைவியிடம் தான் சொல்வதைவிடத் தலைவன் தலைவிபாற் சென்று முயல்வதே சிறந்த பயனளிக்கும் என்பதும், தலைவன் முயற்சியின்றித் தோழியின் சொல் மாத்திரம் பயனளிக்காது என்பதும் தோழியின் கருத்தாம். இதனைக் கூறாமல் கூறுகின்றாள் தோழி. "அம்பொன் வெற்பில் பந்தியின் வாய்ப் பலவின் சுளையைத் தேனொடுங் கடுவன் மந்தியின் வாய்கொடுத்தோம்பும் சிலம்ப," எனத் தலைவனை விளிக்கும் விளியிலேயே அக் கருத்தினை உள்ளுறுத்திக் கூறுகின்றாள் தோழி. "மந்தி உயிர் வாழ்வதற்குக் காரணமாகியவற்றைக் கடுவன் தானே கொடுத்து மனம் மகிழ்வித்தாற்போல, அவள் உயிர் வாழ்தற்குக் காரண

மாகிய இன்வார்த்தைகளை நீயே கூறி அவளை மனம் மகிழ்விப்பாயாக," என உரைப்பதே உள்ளுறையுவமம். இதனை உள்ளுறையுவமம் எனத் திருக்கோவையாருக்கு உரைகண்ட நச்சினார்க்கினியர் கூறுகின்றார்.

உதாரணம் 2.

" மாரி யாம்பல் அன்ன கொக்கின்
பார்வ லஞ்சிய பருவர லீர்ஞெண்டு
கண்டல் வேரளைச் செலீஇய ரண்டர்
கயிறரி யெருத்திற் கதழ்பூந் துறைவன்
வாரா தமையினு மமைக
சிறியவுமுள வீண்டு விலைஞர்கை வளையே."

(குறுந். கக௭)

இது தலைவன் சிறைப்புறத் தானாகத் தோழி தலைவிக்குக் கூறியது. தலைவன் வாராமையினாற் சிந்தை மெலிந்து கைவளை சோருமாறு உடலும் மெலிந்துள்ள தலைவியைத் தோழி ஆற்றியிரு என்று கூறுகிறாள். கைவளை சோருமளவிற்கு மெலிவுற்றதைக் கண்டு, அயலார் தூற்றும் அலரால் தன் காதலுக்கு இடையூறு வருமென்று வருந்துகின்றாள் தலைவி. பிறர் தூற்றும் அலரால் தீமை வரும் என நினைப்பது தகுந்ததேயாம். எனினும், 'அங்ஙனம் தீமை வாராவண்ணம் காத்துக்கொள்ளலாம்; நீ ஆற்றியிரு' எனக் கூறுகின்றாள் தோழி. அத் தீமையைத் தடுப்பதெங்ஙனம்? முடியாது என்றாள் தலைவி. 'நீ அணிந்துகொண்டிருக்கும் வளைகளைவிடச் சிறிய வளைகளும் விலைஞர்பாற் கிடைக்கும். நின் கைக்குத் தக்க சிறிய வளைகளை வாங்கி அணிந்துகொள்ளலாம். அவ் வளை இப்போதுள்ள வளைபோலக் கழன்று விழாது. ஆதலால் பிறர்கண்டு ஐயுறமாட்டார்கள். பிறரால் தீமை வாராது,' என்றாள் தோழி. வேறு சில வளைகளை அணிந்துகொண்டு ஆற்றியிருக்கவேண்டும் எனத் தோழி கூறியதேன்? எனும் வினாவெழும். அவ் வினாவிற்கு விடை இச் செய்யுளின் முதல் நான்கடிகளில் அமைந்துள்ளது. அவ் விடை யாது? 'தலைவன் தலைவியை விரைவில் மணந்துகொள்வான்,' என்பதேயாகும். இக் கருத்து "கொக்கின் பார்வ லஞ்சிய பருவர லீர்ஞெண்டு கண்டல் வேரளைச் செலீஇயர்........கதழ்பூந் துறைவன்," என்பதனாற் பெறப்படும். "கொக்கின் பார்வையை அஞ்சித் தீங்கு வாராதபடி தன்னைக் காத்துக்கொள்ள ஞெண்டு தன் வளையை நாடி விரைந்து செல்வதுபோல, ஊரவர் கூறும் அலரினை யஞ்சித் தலைவன் தன் காதலுக்கு இடையூறுவாராதபடி காத்துக்கொள்ள, தலைவியை வரைந்துகொண்டு தன் அகத்தே தங்கியின்புற்றிருக்க (இல்லறம் நடத்த) விரைகின்றான்," எனக்

கூறாமல் கூறுகின்றாள் தோழி. இங்ஙனம் கொள்ளும் உவமையே உள்ளுறையுவமமாம்

உதாரணம் 3.

"கரும்புநடு பாத்திக் கலித்த தாமரை
சுரும்புபசி களையும் பெரும்புன லூர
புதல்வ னீன்றவெம் முயங்கல்
அதுவே தெய்யநின் மார்பு சிதைப்பதுவே."

(ஐங்குறு, சு)

இது வாயில் வேண்டிய தலைவனை மறுத்ததாகும். 'தாமரையினை விளைப்பதற்கன்றிக் கரும்பு நடுதற்கெனவே செய்த பாத்தியுள் தானே விளைந்த தாமரை சுரும்பின் பசிகளையும் பெரும புனலூரன்' என்றாள். இதன் கருத்து 'பரத்தையர்க்கென்று அமைக்கப்பட்ட கோயிலுள் யாமும் உளமாகி இல்லறம் பூண்டு விருந்தோம்புகின்றனம்' என்பதாம். உவமைக்குப் பிறிதொரு பொருள் எதிர்ந்து உவமம் செய்யாது, ஆண்டுப் பிறந்தவற்றொடு நோக்கிக் கருத்தினால் கொள்ளவைத்தலின் இஃது உள்ளுறையுவமமாயிற்றென்பர் பேராசிரியர்; (தொல் உவமை). 'கரும்பு போல அங்குள்ள தாமரை பயன்படாது. அதுபோல, பரத்தையர் போல் யான் பயன்தருபவ ளல்லள். ஆதலின் எம்மை முயங்கல் என்றாள் தலைவி. தாம் விரும்பி விளைத்த கரும்பைவிட்டு ஆங்குத் தானே தோன்றிய தாமரையைப் பயன்கொள்ள நினையார்; தாமரையைக் களைந்தெறிவர். அதுபோல, விரும்பிக் கொள்ளப்பட்ட பரத்தையைவிட்டு விலகித் தலைவியை முயங்க நினையான், கைவிடுவான் தலைவன். அத் தாமரையைப் பயன் கொள்ள முனைந்தால் பயனடையார், தீங்கடைவார். அது போலப் பரத்தைபால் சென்ற தலைவன் தலைவியை முயங்க முயன்றால், அவனுக்கு அம் முயக்கத்தின் பயனாகிய இன்பமு மில்லை; அவன் மார்பை அம் முயக்கம் சிதைக்கும். எனவே, "புதல்வன் ஈன்ற வெம் முயங்கல், அதுவே தெய்யநின் மார்பு சிதைப் பதுவே." என்று தலைவி கூறியதன் காரணம் "கரும்பு நடு............பெரும்புனலூர." என்பதனுள் உள்ளுறைந்து கிடத்தலைக் காண்க.

உதாரணம் 4.

"மறங்கொள் இரும்புலித் தொன்முரண் தொலைத்த
முறஞ்செவி வாரணம் முன்குள கருந்திக்
கறங்குவெள் ளருவி யோலின் துஞ்சும்
பிறங்கிருஞ் சோலை நன்மலை நாடன்
மறந்தான் மறக்கினி யெல்லாம் நமக்குச்

சிறந்தன நாம்நற் கறிந்தன மாயின், அவன்றிறம்
கொல்யானைக் கோட்டால் வெதிர்நெற் குறுவாம் நாம்
உள்ளி யகவும் வா இகுளை நாம்
வள்ளை யகவுவம் வா. (கலி. சஉ)

இது, முன்பு பெற்றவழி மலிந்ததனைப் பின்பு பெறுதவழிக் கலங்கிக் கூறியது. 'மறந்தான்,' எனக் கூறுதற்குரிய காரணம் முதல் மூன்று அடிகளில் விளக்கப்படுகின்றது. "மறங்கொள்.... ..........சோலை நன்மலை நாடன்." என்பதனுள் காரணம், உள்ளுறைந்து நிற்கின்றது. ஆதலின், இஃது உள்ளுறை உவமமாம். "நாட" என்றதனால் 'நாமும் அயலவர் கூறும் பழைய அலரைக் கெடுத்து, தன் மனத்துளவாகிய நுகரும் பொருள்களை நுகர்ந்து, தானும் சுற்றமும் புகழ்ந்து கூறத் தன் இல்லின்கண் நாம் இருக்கும் நிலைமையை நிகழ்த்தாது, நாம் வருந்த நம்மை மறந்தான்' என்று உள்ளுறை உவமம் கொள்க என்றார் நச்சினார்க்கினியர்.

இவ்வுதாரணங்களுள் முறையே தலைவனது மலை, துறை ஊர், மலை, நாடு ஆகியவைகளுக்கு அடையாகிவந்த கருப்பொருள்களில் உவமம் உள்ளுறைந்து நின்று கருத்தை வெளிப்படுத்துவதனைக் காண்க.

உள்ளுறையுவமமும் ஒட்டும்

உள்ளுறையுவமத்துக்கு உதாரணமாக, இளம்பூரணர் "வெறிகொளினச் சுரும்பு," என்று தொடங்கும் வெண்பாவைக் காட்டுவார். அவ் வெண்பாவே, தண்டியலங்காரத்தில், 'அடையும் பொருளும் அயல்பட மொழியும் ஒட்டு'க்கு உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது. இதனால் உள்ளுறையுவமமும் ஒட்டும் ஒன்றென்பாரும் உளர். உள்ளுறையுவமமும் ஒட்டும் ஒன்றாகா. ஏனெனில் "ஒட்டு கருப் பொருளில் பிறக்கவேண்டுமென்ற யாப்புறவின்றிப் புறத்தினும் புறப் புறத்தினும் சென்று செய்யுட் செய்யும் புலவர் முதலாயினார் கூறும் கூற்றாய்ச் சுட்டு என்னும் உள்ளுறையவாய் நடத்தல் வேற்றுமை யென்றுணர்க," என்பர் மாறனலங்கார உரையாசிரியர். அவர், 'உடனுறையுவமம் சுட்டுநகை சிறப்பெனக் கெடலரு மரபின் உள்ளுறை யைந்தே' என உள்ளுறையை ஐந்தாய்ப் பிரித்தமையான் உள்ளுறையுவமம், ஒட்டு, இறைச்சி என மூன்றாக்கினார். இங்ஙனம் ஆராய்ந்து பிரித்த இவர் நோக்கமும் தெள்ளிதின் ஆராய்ந்து கொள்க," எனக் கூறுவதனையும் ஓர்ந்துணர்க. ஒட்டணி செய்யுள் குறிக்கும் திணைக்குரிய கருப்பொருள்களைத் தோற்றவேண்டுமென்னும் நியதியில்லை. ஆதலின், உள்ளுறையுவமம் ஒட்டணியாகாது. இனி, இறைச்சியை நோக்குவாம்.

(தொடரும்)

## அன்னை செந்தமிழ்ச் செல்விக்கே

# அணிமுடி சூட்டுவோம்

[ஆசுகவி, கீர்த்தனை அரசு, சித்திரகவிச்சரபம், கணித
சோதிட கலாநிதி, திருவையாற்றுப் புலவர்,
திரு. பி. வி. அப்துல்கபூர் சாஹிப்.]

### பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்

செந்தமி ழன்னைபி றந்துத வழ்ந்தது தென்மது ரைப்பதியே
சிருயர் பேதைபெ தும்பையு மானது தென்னர வைக்களமே
கந்தமி குந்தொளிர் மங்கைம டந்தைக வாடபு ரந்தனிலே
காரிகை பேரிளம் பெண்ணென வாழ்ந்தது கனமலி கூடலிலே
மைந்தர்செ ழுங்கொடு கன்னடஞ் சிங்களம் மலையா ளந்துளுவும்
மணிப்பிர வாளமுஞ் சமக்கிரு தம்மிவள் மணிவயி றுதித்தனரே
பந்தியாப் பத்துப் பாட்டெட் டுத்தொகை பதினெண் கீழ்க்கணக்கும்
பற்பல புலவர்கள் பண்ணிய மணிகளைப் பாவை யணிந்திருந்தாள். (1)

கள்ளனெ னுங்கடல் கொள்ளைய டித்தது கவியெனும் மணிகளையே
கரையா னுண்டது மிஞ்சிய மணிகளைக் காவிரி வையையிலே
வெள்ளமி குத்திடும் ஆடிமூ வாறினில் விட்டனர் சிலமணியை
மீண்டதை அன்னியர் திக்கிரை யாக்கினர் மிஞ்சின மணிசிறிதே
தென்னு மியற்கைம ணித்திரள் குன்றிடச் செயற்கை மணியணிந்தே
தென்கும ரிப்பதி திருவேங் கடம்வரை சீரர சாண்டிருந்தாள்
வள்ள லெனக்கை மாறு திந்தவள் வறுமையி லேஉழல
வடவேங் கடமும் பறிபோ னதனால் வாடி மெலிந்தனளே. (2)

பிள்ளைக ளெல்லாம் அவரவர் பாகப் பிரிவுசெய் தாள்கின்றார்
பித்தன் தமிழ்ப் பிள்ளைதன் பாகத்தைப் பிடுங்கிட விட்டுவிட்டான்
நள்ளிர வினிலே மதியென வந்தது நந்தமிழ் மொழியாட்சி
நமன்போ லிந்தி பரவுது சிவன்போல் நாமதை வெல்வோமே
வெள்ளைம னத்துத் தமிழ்மகனே நின் வீரமுங் குன்றியதோ
விட்டத மிழ்ப்பதி பற்றநி னைத்தெழு மேலுந் தூங்காதே [வோம்
தெள்ளிய தமிழ்மணி வாளொடு மொழியெனும் வேலொடு செயித்திடு
திருக்குறள் முதலாச் சங்கத் தமிழ்நூல் செகத்திற் பரப்பிடுவோம். (3)

விற்புலி மீனை இமயத் தெழுதி மேதினி யாண்டதுவே
வேறோர் மொழியா தமிழா என்பதை மெய்யறி வாலுணர்வாய்
பற்பல மொழிதமிழ்ப் பயிரிற் களைபோற் பரவின தறியாயோ
பார்புக ழாங்கிலம் அரசை யளித்தது படியதை மறவாதே
சொற்பொருள் நயமிலா இந்தியை நீக்கு சுகம்பெறு வாய்தமிழா
தாயதமிழ்ப்பதி சென்னப்பன் பட்டினம் தமிழ்நா டெனமொழிவாய்
அற்பந யாவை சாபுதுக் காசென அறைவாய் தமிழாலே
அன்னை செந்தமிழ்ச் செல்விதலைக்கே அணிமுடி சூட்டிடுவோம். (4)

# ஐந்திறம் நிறைந்த தொல்காப்பியன்

[திரு. கரு. நாகரத்தினம், கணியூர்.]

"மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்." (தொல். எழுத்து, சசு)

என்பது தொல்காப்பியம். "தனி மெய்களது நடப்பு அகரத்தொடு பொருந்தி நடக்கும்" என்பதே இதன் கருத்து. எனவே, "ஒருவன் தனி மெய்களை நாவால் கருத்துப் பொருளாகிய வடிவாக இயக்கும் இயக்கமும் (மூவ)கையால் காட்சிப் பொருளாகிய வடிவாக இயக்கும் இயக்கமும் அகரத்தோடு பொருந்தி நடக்கும் என்றவாறு.... இங்ஙனம் மெய்க்கண் அகரம் கலந்து நிற்குமாறு கூறினாற் போலப் பதினோருயிர்க் கண்ணும் அகரம் கலந்து நிற்கு மென்பது ஆசிரியர் கூறாராயினார், அந் நிலைமை தமக்கே புலப்படுதலானும் பிறர்க்கு இவ்வாறு உணர்த்துதல் அரிதாகலானும் என்று உணர்க. இறைவன் இயங்கு திணைக் கண்ணும் நிலைத்திணைக் கண்ணும் பிறவற்றின் கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற்போல அகரமும் உயிர்க்கண்ணும் தனிமெய்க் கண்ணும் கலந்து அவற்றின் தன்மையாயே நிற்கு மென்பது சான்றோர்க் கெல்லாம் ஒப்ப முடிந்தது. 'அகர முதல' என்னும் குறளான் அகரமாகிய முதலையுடைய எழுத்துக்க ளெல்லாம் அதுபோல இறைவனாகிய முதலையுடைத்து உலகம் என வள்ளுவனார் உவமை கூறியவாற்றானும், கண்ணன் எழுத்துக்களில் அகரமாகின்றேன் யானே யெனக் கூறிய வாற்றானும் பிற நூல்களானும் உணர்க" என்பது நச்சினார்க்கினியர் இதற்குக் கூறும் விளக்கம் ஆகும்.

பின்னர் உயிரெழுத்துக்கள் குறில், நெடில் என இரு பிரிவாயின. ஓரெழுத்தொருமொழிகள் தோன்றின.... மெய் யெழுத்துக்களும் தோன்றின. பண்டு 'எ' என்ற எழுத்தும் 'ஒ' என்ற எழுத்தும் மெய்யெழுத்துக்களைப்போலப் புள்ளி யிட்டு எழுதப்பட்டன ; என்பதை,

"எகர ஒகரத் தியற்கையு மற்றே." (தொல். எழுத்து, கசு)

என்னும் நூற்பாவான் உணரலாகும். இதனான் எ̇, ஒ̇ என இவை புள்ளி பெற்றவாறு கண்டு வியக்கக்கூடும்.

"உட் பெறுபுள்ளி உருவா கும்மே." (தொல். எழுத்து. கச)

என்னும் நூற்பாவிற்கு, பகரத்தோடு மகரத்தினை வரிவடிவில் வேற்றுமை செய்வதற்கே இச் சூத்திரம் எழுந்தது, எனவே புறத்திலே பெறும் புள்ளியோடு உள்ளாற் பெறும் புள்ளியும் மகரத்திற்கு வரி வடிவாகும் என்பது பெற்றாம்.

(உ - ம்) கப்பி - இது பறத்துப்பெறும் புள்ளி.
கப்பி - (கம்பு) இது உள்ளாற் பெறும் புள்ளி

என்றார் நச்சர். தமிழின் தொன்மையும், தொல்காப்பியத்தின் பெருமையும் ஒருசேர மேற்கூறியவாற்றான் ஒருவாறு உணரலாகும்.

ஈதிவ்வாறாக, தொல்காப்பியரை அகத்தியர் தம் பன்னிரண்டு மாணாக்கர்களுள் ஒருவராக்கிப் 'பன்னிரு படலம்' என்றதோர் புறப்பொருள் நூலும் அவர்களால் இயற்றப்பட்டதென்பர். அதற்கவர் காட்டும் அகச்சான்று 'மன்னிய சிறப்பின்' என்று தொடங்கும் புறப்பொருள் வெண்பா மாலைச் சிறப்புப் பாயிரத்தில்,

"தென்மலை இருந்த சீர்சால் முனிவரன்
தன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னரும் சீர்த்தித் தொல் காப்பியன்முதல்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
பன்னிரு படலமும் பழிப்பின் றுணர்ந்தோன்."

என்று கூறி இருப்பதே யாகும். மற்றும், வெண்பாமாலை புனைந்தவரான ஐயனாரிதனாருக்கு முதனூல் பன்னிரு படலமே என்பதூஉம், அதன் க௮-ஆம் நூற்பா,

" பாடாண் பகுதியுட் டொல் காப்பியமுதற்
கோடா மரபிற் குணனொடு நிலைஇ."

என்று தொடங்குவதால் பன்னிரு படலத்துள் முதற் படலமாகிய வெட்சிப் படலம் தொல்காப்பியனாரால் இயற்றப்பட்டது என்பதூஉம் புலனாகின்றன என்பர் தமிழ் உடையார்.

அஃது அவ்வாறு ஆயின், தொல்காப்பியம் முழுவதற்கும் முதன் முதலில் உரைவகுத்தவரும், உரையாசிரியர் என்ற சிறப்புப் பெயர் பெற்றவருமாகிய இளம்பூரணர்,

"வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந்து ஓம்பல் மேவற் றாகும்." (தொல். புறத், உ)

என்ற நூற்பாவிற்கு உரை கூறி விரித்துச் செல்லும் போழ்து வெட்சிப் படலம் முன் வைத்ததற்குத் தக்க காரணம் காட்டுகின்றார். பின் "பன்னிரு படலத்துள், 'தன்னுறு தொழிலே வேந்துறு தொழிலென்று அன்ன இருவகைத்தே வெட்சி.' என இரண்டு கூறுபடக் கூறினாராயினும், முன் வருகின்ற வஞ்சி, உழிஞை, தும்பை முதலாயின எடுத்துச் செலவு, எயில் காத்தல், போர் செய்தல் என்பன அரசர் மேல் இயன்று வருதலின் வேந்துறு தொழில் ஒழித்துத் தன்னுறு தொழில் எனத் தன்

ளுட்டும் பிறர் நாட்டும் களவின் ஆனிரை கோடலின் இவர் அரசரது ஆணையை நீங்கி னோராவார் ஆதலால் அவர் அவ்வாறு கூறல் மிகைபடக் கூறலாம. அதனுல் பன்னிரு படலத்துள் வெட்சிப் படலம் தொல்காப்பியர் கூறினர் என்றல் பொருந் தாது" என்று கூறிக் காரணம் காட்டுகின்றார். இதுவும் கிடக்க.

"'வட வேங்கடம் தென் குமரி' என்னும் சிறப்புப்பாயிரம் செய்தார் பனம் பாரனர் எனவும், 'வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்' என்னும் பொதுப் பாயிரம் செய்தான் ஆத்திரையன் பேராசிரியன் எனவும் பாயிரம் செய்தான் பெயர் கூறியவாறு" என்றார் பேராசிரியர். பனம் பாரனர் பாயிரத்துள்,

"மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப் பியன்எனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே."

என்று குறிக்கப் பெற்றுள்ளது. இதற்கு நச்சர் கொண்டது: "கடல் சூழ்ந்த உலகின் கண்ணே ஐந்திர வியாகரணத்தை நிறைய அறிந்த பழைய காப்பியக் குடியில் உள்ளோன் எனத் தன் பெயர் மாயாமல் நிறுத்திய தவவேடத்தை யுடையோன்." என்பதாம். "ஐந்திரம் என்பது வடமொழி இலக்கண நூல்; அஃது இந்திரனுல் செய்யப்பட்டது" என்பது மட்டும் உரை யாசிரியர் குறிப்புக்களால் உணர முடிகின்றதே தவிர அன்ன தோர் நூல் இன்று உளதோ என்பது ஐயப்பாடு. இந்திரனுல் செய்யப்பட்டது என்பதும் ஐயப்பாடே. ஏனெனில் வடமொழி இலக்கண நூலான பாணினீயத்திற்கு முற்பட்டது தொல்காப் பியம் ஆகும் என்று சிலர் கருதுகின்றனர்.

"வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி அதற்கிணையாத்
தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாம் தொழுதேத்தும்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்எனில்
கடல்வரைப்பில் இதன்பெருமை யாவரே கணித்தறிவார்."

என்றதோர் பாடல் தமிழகமெங்கும் உலவிவருகின்றமை பல்லோராலும் அறியப்பட்டதே!

பன்னிரு படலம் பாடியோர் யாவர் எனக் காண்போம்:

| | | |
|---|---|---|
| 1. திரணதூமாக்கினி | 5. வையாபிகன் | 9. அவிநயன் |
| 2. அதங்கோட்டாசான் | 6. வாய்ப்பிகன் | 10. காக்கை பாடினியன் |
| 3. துராலிங்கன் | 7. பனம்பாரன் | 11. நற்றத்தன் |
| 4. செம்பூட்சேய் | 8. கழாரம்பன் | 12. வாமனன் |

இவர்களுள் பனம்பாரன் பாயிரம் செய்தான்; அதங்கோட் டாசான் நூலைக் கேட்டான் என்பது, "அதங்கோட்டாசாற்கரில்

தபத்தெரிந்து" என்ற பாயிரத்தால் நன்கு அறியப்படும். அவிநயன், காக்கை பாடினியன், நற்றத்தன் ஆகிய மூவரும் இலக்கண நூல் செய்தனர் என்ப. இளம்பூரணர் கருத்தை மறுத்துத் தொல்காப்பியரின் இயற்பெயர் திரண தூமாக்கினி என்று கட்டுரைப்பாரும் உளர். இப் பன்னிருவருள் தொல் காப்பியனாரின் பெயர் காணப்படவில்லையே.

'ஐந்திறம்' என்ற சொல் ஏடெழுதுவோராலும், காலப் பழைமையானும் 'ஐந்திரம்' என்று மாறி இருக்க வேண்டும் எனக் கருத இடம் உண்டு. தமிழுக்கு எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து திறமும் உண்டு. (திறம் என்பதற்குத் தன்மை, கூறுபாடு, பகுதி என்ற பொருள்களைக் கொள்க.) அவைகளை நன்கறிந்தவனே தொல்காப்பியன் என்பதே ஏற்புடைத்தாம். உரையாசிரியர்களைக் குறை கூறுவ தாக எண்ணி விடக்கூடாது; மற்று, உரையாசிரியர்களின் காலமோ கங-ஆம் நூற்றாண்டிற்கு மேற்பட்டதாகும் ஆசிரியர் தொல்காப்பியர் காலத்திற்கும் கங ஆம் நூற்றாண்டிற்கும் இடையிலே எத்தனையோ ஆண்டுகள்-காலமாறுபாடுகள்-இயற் கைத்தாக்குதல்கள். ஆயினும், உரையாசிரியர் களெல்லாம் வடமொழி இலக்கணத்தை மனத்துட் கொண்டு தமிழ்நூல் களுக்கும் உரைவகுத்தார் என்றல் மிகைபடக் கூறியதாகா. உதாரணமாக, 'நான்மறை' என்பதற்கு நச்சர் கொண்ட கருத்தும், 'அதனின் இயறல்' எனத் தொடங்கும் சொல்லதிகார நூற்பாவிற்குச் சேனாவரையர் கூறும் விளக்கமும், "காம வெகுளி மயக்கம்" (குறள்-கூசுப) எனவும், "அறம் பொருள் இன்பம்" (குறள்-௫0க) எனவும் தொடங்கும் குறள் கட்குப் பரிமேலழகர் கூறும் விளக்கமும் அந்தந்த நூல்களுட் காண்க.

இவ்வண்ணம் எல்லாத் தமிழ் நூல்களுக்கும் உரை வகுத் தவர்கள் வடமொழியைப் பின்பற்றியே உரை வகுத்துத் தமிழுக்கு யாப்பும், அணியும் கிடையாது; அவை வடமொழியி னின்றும பெறப்பட்டவை என்றதோர் புதிய கருத்தினைப் புகுத்தி விட்டனர் தமிழர்கள் அன்றும் வாய்வாளாது இருந்து விட்டனர். தொல்காப்பியர் ஐந்திலக்கணமும் நன்கு அறிந்தவர் ஆதலின், "ஐந்திறம் நிறைந்த தொல்காப்பியன்" என்று பனம் பாரன் பாயிரம் செய்தது எப்படியோ 'ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்' என வழங்கி வரலாயிற்று. அலங்காரம் என்ற வடமொழி அணி என்று தமிழில் ஆயிற்று என்று கூற முடியுமா? 'அணி' என்பது தூய தமிழ்மொழி. இஃது ஒன்றே தமிழுக்கு அணி இலக்கணம உண்டென்பதைச் சுட்டப் போதிய சான்றாகும்.

யாப்பிலக்கணமும், அணிஇலக்கணமும் நமக்கு இன்று கிடைக்கவில்லை கடல்கோளில் மறைந்திருக்கலாம். ஏட்டுப் பிரதி அழிந்திருக்கக்கூடும். தொல்காப்பியனாரின் அணியதிகாரத்தின் ஒரு பகுதியே உவமஇயல்; யாப்பதிகாரத்தின் ஒரு பகுதியே செய்யுளியல் எழுத்ததிகாரமும், சொல்லதிகாரமும், பொருளதிகாரமும்தாம் கிடைத்துள. எனவேதான் சிறப்புப் பாயிரத்தில்,

"எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி."

என்று குறித்தார் பனம்பாரனார். யாப்பும் அணியும் கைவரப் பெற்றிருப்பின்,

"எழுத்தும் சொல்லும் பொருளும்
யாப்பும் அணியும் நாடி."

என்றுதானே பாயிரம் செய்திருக்கக்கூடும் என்று கூறலும் ஒன்று. உரைவகுத்த உரையாசிரியர்கள் இதனை உணராது வழுவி அதிகாரத்திற்கு ஒன்பது இயல்களாக்கித் தப்புக்கணக்குப் போட்டுவிட்டனர். அதிகாரத்திற்கு எட்டு இயல்களோ, பத்து இயல்களோ கொண்டால் ஆகாதோ? 'மரபு' என்பவைகளை 'இயலில்' அடக்கிவிடலாம். அப்பொழுது இன்னும் இயல்கள் குறையுமே! உரையாசிரியர்களே தம்முள் மாறுபட்ட கொள்கை கொண்டவர்கள் என்பது வெள்ளிடைமலை. சங்க நூல்கள் பலவற்றிற்குக் கடவுள் வணக்கம் பாடிச் சேர்த்தான் பெருந்தேவன். அதுபோலப் பனம்பாரன் தொல்காப்பியனாருக்குப் பிற்பட்டவராக ஏன் இருந்திருக்கக்கூடாது? தொல்காப்பியர்-பனம்பாரனார்-இவர்களின் இருவேறு காலங்களை ஒருகாலமாக்கப் பன்னிரு படலம் பாடியவர்களில் திரணதூமாக்கினியைத் தொல்காப்பியரின் இயற்பெயர் என்றல் சாலுமோ? அதனால் பனம்பாரன் தொல்காப்பியரின் காலத்தவராகி ஒருசாலை மாணாக்கர் ஆதல் யாங்ஙனம் இயையும்? இயைந்தாலும் பரந்துபட்ட தமிழகத்தே நூல் செய்த தொல்காப்பியரின் 'ஐந்திறத்தை' உணராது 'முத்திறத்தை'ப் (எழுத்து, சொல், பொருள்) பற்றிமட்டும் உணர்வாராயினார் என்று கோடல் ஒருதலை.

ஐந்து இலக்கணமும் தமிழுக்கு உண்டு. வடமொழியிலும் அவை இருக்கலாம். ஆனால் யாப்பும் அணியும் வடமொழியினின்றும் பெறப்பட்டன என்பது பொருந்தாது. வடமொழிக்கும் தமிழ்மொழிக்கும் இலக்கண அமைப்பிலும், சொல்லாக்க முறையிலும் வேற்றுமைகள் ஏராளமாக உள்ளன என்பதை விளக்கக் கால்டுவெல் எழுதிய ஒப்பிலக்கணமே பெரும்சான்றாக அமையும். ஈண்டுரைப்பிற் பெருகும்.

# திறனாய்தல்*

[வித்துவான், திரு. ச. சவரிமுத்து, திண்டிவனம்.]

## முன்னுரை

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

என்று திருவள்ளுவர் கூறுகின்றார். அறிவுடைமை யாதெனில், எப் பொருளாயினும், அதை யார்வாய்க்கேட்டாலும் அதனிடை யுள்ள மெய்யான பொருளை அறிந்து கோடலே என்பது இதன் பொருளாகும் எனவே யாதாலும் ஒரு பொருளைப் புறப்படும் இடம் நோக்கியோ, அதன் உயர்வு நோக்கியோ ஆராய்ச்சி இன்றி ஏற்றுக்கோடல் அறிவுடைமை ஆகாது என்பது வள்ளுவரின் தெள்ளென் மொழியாகும். இக் காலச் சொல்லில் கூறப் புகின், "எப் பொருளையும் நீ திறனாய்ந்து உண்மை தெளிந்து கொள்க, அதுவே அறிவுடைமை யாகும்" எனக் கூறினாராகக் கோடல் ஏற்புடைத்தே யாகும்.

### திறனாய்தல் தேவையா ?

விலங்கினத்தினின்றும், பிற உயிர்களிடத்தினின்றும் வேறுபடுத்து, மனிதனுக்கு ஆறும் அறிவான பகுத்தறிவு (Reason) கொடுக்கப்பட்டிருப்பது, ஆராய்ந்து பொருட்களைத் தெரிந்து கோடற்கே யன்றிப் பிறிதொன்றற்குமன்று.

"சென்ற விடத்தாற் செலவிடாது தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு"

என்று அறிவைப் பற்றிக் கூறுகின்றார் தெய்வப் புலவர் திருவள்ளுவர். எனவே அறிவை நன்றின்பால் உய்க்க, இப் பொருள் நன்றாயதா? தீதாயதா? கூறியது அல்லது கேட்டது சரியானதா? அன்றா? என்று காணத் திறனாய்தல் தேவையன்றோ?

எனவே திறனாய்தல் எல்லாவற்றிற்கும் மேற்கொள்ளப்பட்டுள்ள இக் காலத்தில் திறனாய்தல் தேவையே என்பது தெற்றெனவிளங்கும் அப்போது உண்மை விளக்கமுறும். மக்கட்கோ, நாட்டிற்கோ அவை பயன்படும்.

## திறனாய்தலின் வகை

திறனாய்தலில் பலவகை உண்டு. முதலில் இலக்கியங்கட்கு ஆரம்பமான இஃது இன்று அனைத்துத் துறைகளிலும் வளர்ந்துள்ளது. அவை :

* Criticism.

க. இலக்கியத் திறனாய்தல் (Literary Criticism)
உ. வரலாற்றுத் திறனாய்தல் (Historical Criticism)
ஙு. அரசியற் றிறனாய்தல் (Political Criticism)

என இன்னோரன்ன பலவாகும்.

இவைகளில் இலக்கியத் திறனாய்தல் பற்றி ஆராய்வாம். அதைப் பற்றி ஆயின் அதுவே எல்லாத் திறனாய்வுகட்கும் இயை புடைத்தாகக் கோடலாகும்.

## இலக்கியத் திறனாய்தல்

**இலக்கியம் என்றால் என்ன ?**

மக்களின் வாழ்க்கையைக் காட்டுவதே இலக்கியம். மக்கள் எவ்வாறு வாழ்ந்தனர்? அவர்களின் நாகரிகம் எத்தகையது? கலை வளர்ச்சி எவ்வளவிற்று? என்ற இன்னோரன்ன சிறப் பியல்புகளை, வாழ்ந்து காட்டிய வாழ்க்கையைச் சொற்களால் வடித்துக் காட்டுவதே இலக்கியம்.

"இலக்கியம், மக்கள் வாழ்க்கையின் படப்பிடிப்பு" என் கின்றார் அறிஞர் ஹட்சன் (Introduction to the study of Literature by Mr. W. H. Hudson). இலக்கியம் நாகரீக மக்க ளுடைய சிந்தனையின் அளவுகோல் எனலாம். அறிஞர் மத்தேயு அர்னல்டு (Mr. Mathew Arnold) என்பவரும் தம்முடைய (Essays in criticism) நூல் ஒன்றில் "மக்களின் வாழ்க்கைத் திறனாய்வின் தெள்ளிய முடிவே இலக்கியமாகும்," எனக் கூறுகின்றார்.

இலக்கியங்கள் இருவகை உண்டு. அவை :

க. அறிவிலக்கியம் (Literature of Knowledge)
உ. ஆற்றலிலக்கியம் (Literature of Power)

இன்னும் வேறுவகை யாகவும் பிரிக்கலாம். அவை :

க. இன்பமே உணர்த்துவன (Pure Literature)
உ. இன்பத்தோடு பயன் தருவன (Applied Literature)

என இத்தகைய பலவாகும்.

**திறனாய்தல் என்றால் என்ன ?**

வாழ்க்கையை ஆய்ந்து அதன் சிறந்த பண்புகளைக்கொண்டு மிளிர்வது இலக்கியம் என்பதால், அவ் விலக்கியத்தில் திறனை, வன்மையின் அழகை, பண்பை ஆய்வது திறனாய்வாகும். ஒருவன்

ஒரு பொருளைப் பார்த்து, இப் பொருள் இவ்விதத்தில் நன்றாக உள்ளது; இவ்விதத்தில் நன்றாக இல்லை எனும்போதே திறனாய்தல் ஆரம்பித்துவிடுகின்றது. எனவே திறனாய்வில் முடிவு கூறலும் அடங்கிவிடும்.

ஓர் இலக்கியத்தையோ அல்லது பிறவற்றையோ எடுத்து அதனை நன்கு கற்று, தனது கூர்த்த அறிவாலும், கலை உணர்வாலும், அதன் நிறைவு குறைவுகளைக் கண்டு, 'இஃது இவ்வகையில் உயர்ந்தது இஃது இவ்வகையில் குறைந்தது' எனக் காய்தல் உவத்தல் இன்றி முடிவு கூறுவதே திறனாய்வாகும்.

உலக நாடக மேதை, பெரும்புலவர் ஷேக்ஸ்பியரின் (Shakespeare) நாடகங்களின் தலைசிறந்த திறனாய்வாளரான (Critic) அறிஞர் ஜான்சன் (Dr. Johnson) என்பவர், தமது (The Ramber) நூல் ஒன்றில் குறிப்பிடுவதாவது: "திறனாய்தல் என்ற மகள் முயற்சி, உண்மை ஆகிய இருவருக்கும் பிறந்த நங்கையாவாள். அவள் பிறந்தவுடன் 'நடுநிலைமை' எனும் தோழியால் மெய்யறிவு என்ற அரண்மனையில் வளர்க்கப்பட்டாள்" என்பதாகும். இதனால் திறனாய்வு எது என்பதைப் பற்றியும், அஃது எவ்வாறு செய்யப்படல் வேண்டும் என்பதைப் பற்றியும் அவர் மிகவும் அழகாக விளக்கியுள்ளதைக் காண்க.

திறனாய்வாளன் யார்?

நாம் கம்பனைப் போற்றுகின்றோம். அவன் பத்தாயிரம் பாடல்களுக்காக அன்று, நாம் அவனைப் போற்றுவது. அவனது கவித்திறனுக்காக; வெர்ஜில், தாந்தே, ஷேக்ஸ்பியர் போன்ற பெரும் புலவர்களைப் போலக் கம்பன் கவிமன்னன் என்பதற்காக இவ்வாறு கவிஞனின் ஆற்றலை எடுத்துக்காட்டும் ஒரு திறனாய்வாளன் தேவையல்லவா? எனவே திறனாய்வாளன் யார்?

திறனாய்வாளன் யார் என்பதிலேதான் இன்று அனைத்துப் பிழைகளும் நேர்கின்றன. திறனாய்வாளனுக்குரிய குணங்கள் ஆய்வோனிடத்தில் இல்லாததினால்தான் இன்று பல சிக்கல்கள் வளர்ந்துள்ளன.

உண்மைத் திறனாய்வாளன், சமன் செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்து ஒருபால் கோடாது தன் சொந்தக் கண்களால் இலக்கியத்தை நோக்குதல் வேண்டும். திறனாய்வாளன் பிற துணைக் கண்ணாடிகளைப் போட்டுக் கொண்டு இலக்கியத்தை நோக்குதல் கூடாது. நோக்கின் அவை தன்னிலையில் தோன்றா; பிறநிலையில் - விருப்பு வெறுப்பாய நிலையிலேயே தோன்றும்.

எனவே திறனாய்வாளன், ஆசிரியன் எவ் வினாக்களை எழுப்பி மக்களின் வாழ்க்கைச் சூழலில் விடைஇறுக்க முற்பட்டானோ, அவைகளைக் காணத் தானும் முற்படல் வேண்டும். மக்கள் வாழ்க்கை எவ்வாறிருந்தது? என்ன என்ன இருந்தன? சிறந்தன எவை? அல்லாதன எவை? ஏன் இல்லாது போயின? அவற்றை எவ்வாறு படைத்தல் கூடும்? என்ற இன்னோரன்ன வினாக்களை வினவி, விடை காணல் வேண்டும். தன் கூரிய அறிவினால் இவற்றை வெறுப்பு, விருப்பு இன்றி முடிப்பவன் எவனோ அவனே சிறந்த திறனாய்வாளன் ஆவான்.

திறனாய்வாளன் கீழ்வருவனவற்றைத் தன் கடமைகளாகக் கோடல் இன்றியமையாவாகும்.

திரு. மாப்சன் என்ற அறிஞர் கூறுவதுபோலத் திறனாய்வாளனின் கடமை, தன் விருப்பு வெறுப்புகளை மூட்டைகட்டி மூலையில் வைத்துவிட்டு நூலின் கருத்து இவை; இவற்றில் ஒத்துவராதன இவை; பாராட்டத்தக்கன இவை என ஆய்ந்து வெளிப்படுத்தி முடிவுகாட்டலே என்று கோடல் வேண்டும்.

‘குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்’

என்பதுபோலக் குணம் குற்றம் நாடி முடிவு செய்தல் வேண்டும். காலத்திற்கு ஒவ்வாத கருத்துக்களை இவை என்று சுட்டிக் காட்டல் வேண்டும். இவைகட்கு இன்ன தகுதி இப்போது உள்ளன எனவும் முடிவுசெய்தல் வேண்டும்.

இறுதியாக ஆசிரியனது இலக்கிய அமைப்பைத் திறனாய்தல் வேண்டும். ஆசிரியன் எவ்வாறு தான் கண்ட பொருளைத், தன் உள்ள எழுச்சியைப் பிறரும் காண, கொள்ள அமைத்துள்ளான் என்பதைக் காட்டி, அதில் ஆசிரியனது வெற்றி எவ்வளவிற்று என்பதை விளக்குதல் வேண்டும்.

முடிவு கூறுதலும் திறனாய்விற்கு வேண்டுமல்லவா? எனவே இறுதியில் இவ்விடத்து உள்ள குறை இத்தகையது; இதை இவ்வாறு அமைத்திருந்தால் சிறப்புடைத்தாக இருந்திருக்கும் என்று படைத்தல் முறையை முடிவுசெய்து போதல் வேண்டும்.

இவை யாவும் திறனாய்வாளனுக்கு இன்றியமையாத குணங்களும் கடமைகளுமாகும். இக் குணங்களைக் கொண்ட, கடமை உணர்ச்சி யுடையவனே சிறந்த திறனாய்வாளன் ஆவான்; ஏனையோர் ஆகார்.

திறனாய்தலின் பலவகை:

திறனாய்தலில் பலமுறை கையாளப்படுகின்றன. அவை:

க. முடிபுமுறைத் திறனாய்தல் (Judicial criticism).

ஒப்புடைய இரண்டைக் கொண்டு இவற்றில் எது சரி என ஆய்வதே முடிபுமுறைத் திறனாய்வாகும். இவ்வாறு ஆய்ந்தால் தான் முடிபு கூறல் இயலும்.

உ. செலுத்துநிலைத் திறனாய்தல் (Inductive criticism).

பல பொருட்களையும் ஆய்ந்து அவற்றில் பொதுத்தன்மை காண்பதுபோல, பல இலக்கியங்களையும் ஆய்ந்து பொதுத்தன்மை காண்பதே செலுத்துநிலைத் திறனாய் வாகும்.

ந. வரலாற்றுமுறைத் திறனாய்தல் (Historical criticism).

ச. பாராட்டுமுறைத் திறனாய்தல் (Appreciative criticism).

இதைத்தான் பண்டைக் காலத்தில் தமிழ்ப்புலவர்கள் அனைவரும் கைக்கொண்டிருந்தனர்.

ரு. பகுப்புமுறைத் திறனாய்தல் (Analytical criticism).

இது பண்டைய உரையாசிரியர்களால் குறிக்கப்பட்ட ஒப்பு நோக்கல் எனும் பகுதியாகும். இன்னோரன்ன பலவும் உள.

முடிவுரை:

இவ்வாறு இலக்கியங்களைக் காலவளர்ச்சிக்கேற்ற கண்ணோட்டம் கொண்டு ஆய்தல் வேண்டும். பழைய இலக்கிய வரம்பை வைத்துக்கொண்டே இது தவறு எனக் கூறல் முறையாகாது. இவ்வாறுதான் அறிஞர் ஜான்சன், பெரும் புலவர் மில்டன் (Milton) என்பவருடைய "Paradise Lost" என்ற நூலைக் குறைகூறினர். 18, 19-ஆம் நூற்றாண்டுகளிலே ஆங்கிலேயர்களும் இவ்வாறே இடர்ப்பட்டனர். பின்னர்க் காலத்திற்கேற்ப முகிழ்க்கும் இலக்கியங்களை அச் சூழல் கொண்டே ஆயத் தலைப் பட்டனர். ஆதலால் இன்று மேன்மைநிலைப்பட்டனர். எனவே இவ்வாறான பண்புகள் நமக்கென்று வருகின்றனவோ அன்று தான் சிறந்த இலக்கியங்கள் தோன்ற முடியும். சங்கம் வைத்துத் திறனாய்ந்த காலத்தில்தான் தமிழகச் சோலையில் சிறந்த நறைவிராய மலர்கள் மலர்ந்தன; மணம் வீசின; வீசுகின்றன. இத் திறனாய்தல் இல்லாத காலத்தில் தோன்றவில்லை நல்ல இலக்கியங்கள்.

# திரு. மே. வேதாசல முதலியாரவர்களின் மறைவு

செங்கற்பட்டு நகராண்மைக் கழகத் தலைவரும், பெருநிலக்கிழாரும், பெருவணிகரும், பெருவள்ளலும், பெருந்தகையாரும் ஆன இராவ்பகதூர், மே. வேதாசல முதலியாரவர்கள், 1957 - ஏப்பிரல் - பத்தாம் நாள் மாலை புதுச்சேரியிலுள்ள தமது வளமனைக்கண் ஆவி நீத்தனர். அப் பெருந் திருவினர்க்கு அகவை அறுபத்தொன்று. 1896-இல் பெருங் குடும்பத்தில் பெருந்தவப் பேற்றால் பிறந்தார். 1921-இல் செங்கற்பட்டு நகராண்மைக் கழகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அது முதல் தொடர்ந்து அவரே தலைவராக அமர்ந்து நாளிதுவரை விடாத் தொண்டாற்றிய நல்லாண்மையாளர். ஏறத்தாழ இருபத்தேழாண்டு கள் நகராண்மைத் தலைவராகத் திகழ்ந்துள்ளார். செங்கற்பட்டைப் பொங்கும் தங்கப்பட்டாகப் பல வழிகளிலும் பொலியச் செய்வித் துள்ளார் மக்களின் நலத்துறை, கல்வி, மருத்துவம், தொழில் முதலிய எல்லாத் துறைகளிலும் நாட்டம் செலுத்திச் சிறப்புறச் செய்தனர். கல்வி முதலியவற்றிற்காகப் பல்வேறு காலங்களிலும் இடங்களிலும் வழங்கிய வெண்பொன் இலட்சக்கணக்காகக் காணப்படுகின்றது.

கூட்டுறவு இயக்கத் துறையின் தலைவராக வீற்றிருந்து பல்வே றிடங்களில் திறம்பட ஆற்றிய பயனுறு தொண்டுகளும் அளப்பில. அத் தொண்டினைப் பாராட்டி வெள்ளையர் ஆட்சியின்போது உள்ளம் உவந்தளித்ததே 'இராவ்பகதூர்' பட்டமாகும். செங்கற்பட்டு மாவட்டத் தலைமை மருத்துவமனையின் வளர்ச்சியின் பொருட்டும் விரிவின் பொருட்டும் ஒரு லட்சம் வெண்பொன் நன்கொடையாக வழங்கி யுள்ளார்.

அவர் தம் திருப்பெயரால் 'வேதாசல முதலியார் நகர்' என ஒரு சிறந்த நகர் அமைக்கப்பட்டுக் காட்சி யளிக்கின்றது. வாலாசாபாத்து இந்துமத பாடசாலையின் துவக்க முதலே ஒல்லும் வகை ஓவாது பணி யாற்றியுள்ளார் எனத் தெரிகின்றது. அப் பாடசாலையின் அறுநூற் றைம்பது மாணவர்களும் ஒருங்கமர்ந்து உணவுண்ணத்தக்க விரிவும் அழகும் நலமும் அமைந்த கீழ்நிலைக் கட்டடமும் அதன் மேன்மாடியில் ஓர் சிறந்த வழிபாட்டுக்கூடமும் அமைக்குமாறு முப்பத்தையாயிரம் வெண்பொன் வழங்கியுள்ளனர். கட்டட வேலையும் பெரும்பாலும் முடிந்துவிட்டதாகவும் தெரிகின்றது. பல திருக்கோவில்களின் அறங் காவலராகவும் பணியாற்றியுள்ளனர். காஞ்சிபுரம் பச்சையப்பன் கல்லூரிக்கும் பெரும் பொருள் வழங்கியுள்ளார். வாலாசாபாத்து இந்து மத பாடசாலையில் தம் மரபினராகிய துளுவ வேளாள இனத்தைச் சார்ந்த ஏழை மாணவர்கள் பலரை வள்ளலார் இல்லத்தில் சேர்ப்பித்து ஆண்டுதோறும் தனித்தனியே ஒவ்வொருவருக்கும் ரூபா எழுபத்தைந்து விழுக்காடு வழங்கி வந்துள்ளதாகவும் தெரிகிறது.

இப் பெருவள்ளலார் ஆவி பெருமான் திருவடியின்கண் என்றும் இன்புறுமாக. அவர்தம் அரும் பெறல் மனைவியார்க்கும் குடும்பத் தார்க்கும் எங்கள் பரிவுரை உரியதாகுக, ஆறுதல் எய்துவாராக.

# செய்திகளும் குறிப்புக்களும்

**சென்னையில் சித்தர் விழா :**

கடந்த 11—4—'57-இல் திருவல்லிக்கேணி ஸ்ரீ ராஜேஸ்வரி சித்த வைத்திய சாலையில் சித்தர் விழாவொன்று நடைபெற்றது. விழாவிற்குத் திரு. எ. கசபதி நாயக்கர் அவர்கள் தலைமை தாங்கினர். பதினெண் சித்தர்களின் உருவப் படங்கள் ஊர்வலம் செய்யப்பட்டு விழாத் துவங்கிற்று. மாலையில் சித்த வைத்தியக் குழுப்பேரவை திரு. எச். தேவதாஸ் அவர்கள் தலைமையில் கூடிற்று. பின்னர் பொதுக்கூட்டம் நடைபெற்றது. சித்த மருத்துவத்தின் சிறப்பு, அது இடைக்காலத்தில் கைவிடப்பட்ட நிலைமை, இனி அதன் வளர்ச்சிக்கான ஆக்க வேலைகள் முதலியன பற்றிப் பல அறிஞர்கள் பேசினர். மைய சித்த மருத்துவக் குழுவின் சிறப்புச் செயலாளர் திரு. சண்முகவேலன் அவர்கள் அமைச்சர் திரு. மாணிக்கவேலருக்கு வரவேற்பிதழ் படித்தளித்தார். டாக்டர் (சாது) வி. நாராயணசாமி பிள்ளை, சித்த மருத்துவ ஆசிரியர் திரு. சி. எஸ். உத்தமராயர், ஆர். மாணிக்க முதலியார், பொது நலத் துறைப் பகுதி முன்னாள் துணை இயக்குநர் டபிள்யூ வி. பெருமாள் முதலியார் ஆகியோர் பேசினர்.

**குறிப்பு :** தமிழ் மொழி, இசை முதலியன இடைக்காலத்தில் அயலவர் சூழ்ச்சியால் புறக்கணிக்கப்பட்டதுபோல் தமிழரின் தனிப் பெரு மருத்துவமாகிய சித்த மருத்துவமும் புறக்கணிக்கப்பட்டுவிட்டது. இந்திய மருத்துவம் என்றால் ஆயுர்வேத மொன்றே என்ற எண்ணமும், அதற்கேற்பவே அரசியலார் சொல்லும் செயலும் இருந்துவரக் காண்கின்றோம். இந்நிலை மாறி சித்த மருத்துவம் மறுமலர்ச்சியுற வேண்டியது மிகமிக இன்றியமையாததே. தமிழிசையில் தமிழர் நாட்டம் செலுத்தியதுபோல் தமிழ் மருத்துவத் துறையிலும் நாட்டம் செலுத்த வேண்டும். இதற்குச் செல்வர்கள் பணியாற்ற முன் வரவேண்டும். இவற்றுக் கெல்லாம் அடிப்படையாக விழிப்புணர்ச்சி யூட்ட இம் மாதிரி விழாக்கள் பயன்படும் என்று நம்புகிறோம்.

**'கலைமகள்' வெள்ளிவிழா :**

கடந்த 14—4—'57-இல் மயிலை ரசிகரஞ்சனி சபாவில் 'கலைமகள்' இதழ் வெள்ளிவிழா, அமைச்சர். திரு. எம். பக்தவத்சலனார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அமைச்சர். திரு. சி. சுப்பிரமணியம் 'கலைமகள்' நடத்திய போட்டியில் வெற்றிபெற்ற எழுத்தாளர்கட்குப் பரிசுகள் வழங்கினர். அன்பர் இராசகோபாலாச்சாரியார், கி. வா. சகந்நாதன், சுதேசமித்திரன் ஆசிரியர் சி. ஆர். சீனிவாசன் ஆகியோர் பேசினர். திரு. சீனிவாசன் அவர்கள் பேசுகையில் "தமிழ் என்றால் இரண்டாம் தாரமாக எண்ணும்படியான காலம் மாறிவிட்டது; இப்பொழுது தமிழுக்கே முதலிடம் தரப்பட்டுள்ளது" என்று குறிப்பிட்டார்.

**குறிப்பு :** அன்பர் சீனிவாசன் அவர்களின் கருத்துரை கண்டு மகிழ்கிறோம். அவர் போன்ற இதழாசிரியர்கள் மனது வைத்தால் தமிழுக்கு எஞ்சியுள்ள குறைபாடுகளும் நீங்கும். ஏடு திருந்தினால் நாடும் திருந்து மன்றோ?

### சிலப்பதிகாரம், மணிமேகலை வெளியீட்டு விழா

"கடந்த 14—4—'57-இல் முர்ரே அண்டு கம்பெனியைச் சேர்ந்த திரு. எஸ். இராஜம் அவர்களால் பதிப்பிக்கப்பட்ட சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரு நூல்களின் வெளியீட்டு விழா திரு. ம. பொ. சிவஞான கிராமணியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது அது காலை இவ்விரு வெளியீடுகளும் "எல்லோருக்கும்" புரியும்படியாக நன்கு பதம் பிரித்து வெளியிடப்பட்டிருப்பதாகத் தமிழறிஞர்கள் உட்படப் பல பெருமக்கள் பாராட்டிப் பேசினர்.

**குறிப்பு:** சிலப்பதிகாரம் மணிமேகலை போன்ற சீரிய தமிழ் நூல்கள் எத்தனை பதிப்புக்கள் வெளிவரினும் நாட்டுக்கு நன்மையே. இவ வகையில் இவ் விழா பாராட்டற் குரியதே. ஆனல் "எல்லோ ருக்கும் புரியும்படியாக" என்ற ஒரு பீடிகை போட்டுக்கொண்டு சந்தி பிரித்துப் பாட்டு என்னும் அமைப்பையும் அழகையும் சீருலேக்கும் செயல் தான் வருந்தத்தக்கது. சிலப்பதிகாரமும் மணிமேகலையும் ஓர் அளவு கற்றவர்க்கே பயன்படும். இதனை 'எல்லோரும்' படிக்குமாறு செய்ய முனைவது வரைகடந்த செயல் 'எல்லோரும்' என்ற சொல்லுக்குப் பொருள் காணப் புகுந்தால் அஃது எல்லையின்றி விரியும். அங்ஙனமே சந்தி பிரிப்பது என்ற பணியும் பா நயத்தைச் சீரழிப்பதாகவே முடியும்.

### நகராண்மைக் கழகத்தில் ஆட்சி மொழி

சென்னை நகரவைச சட்டங்கள் நடவடிக்கைகள் இன்னபிற தமிழில் மொழிபெயர்க்க ஏற்பாடாகி வருகிறதாம் விரைவில் இஃது வெளியிடப்படும் எனவும் தெரிகிறது. நகரவை ஆணையாளர், திரு பாலசுந்தரம் அவர்கள் இப் பணியில பெரிதும் ஈடுபட்டிருக்கிருர்.

**குறிப்பு:** மக்களாட்சியின் மாதிரிஆட்சி நடைபெறுமிடம் நகராண்மைக் கழகங்களே. எனவே, முதலில் இக்கழகங்கள் தமிழை ஆட்சி மொழியாக்க முனைதல் முதற் கடமையாகும். அவவகையில் தலைமை நகராண்மைக கழகமாகிய சென்னை நகராண்மைக் கழகம் ஓா வழி காட்டியாக இருப்பது பாராட்டற்குரியதே. மற்றச சிற்றூர் பேரூர் கழ கஙகளும் விரைவில் தமிழை ஆட்சி மொழியாக்கி அதன்மூலம் மாநில ஆட்சியாளர் தமிழை விரைந்து நடைமுறை ஆட்சி மொழியாக்க வழி காட்டிகளாக அமையும் என எதிர்பார்க்கிருேம்—நம்புகிருேம்.

### 2300 ஆண்டுகட்கு முன்பிருந்த நகரம்

"கல்கததாவுக்கு 30 கல் தொலைவில், 2300 ஆண்டுகளுக்கு முன்பு இருந்த பழைய நகரமொன்று, கல்கத்தா பல்கலைக் கழகப் புதைபொரு ளாராய்சசிப் பகுதியினரால் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. தற்போது நிலத்தை அகழ்ந்து பார்கதும் வேலை நடக்கிறது. இப்பணிக்கு இந்தியப் பேரரசினர் 5000 ரூபாய் உதவியுள்ளனர்."

**குறிப்பு:** கல்கத்தாப் பல்கலைக் கழகத்தின் இப் பெரு முயற்சி யறிந்து மகிழ்கிருேம்—பாராட்டுகிருேம். சென்னைப் பல்கலை கழகமும் இத்தகைய முயற்சியில் ஈடுபட்டால புதையுண்ட பல அரிய தமிழ்ச் செல்வங்களைக் காணக்கூடும். உதாரணமாகக் காவிரிப்பூம் பட்டினத்தில் இம் முயற்சி மேற்கொண்டால் சிலப்பதிகாரக் கால நிலையறியலாம்.

### டி. கே. எஸ். உடன்பிறப்பாளர் மலேயாச் செலவு

மலேயாவில் மூன்று திங்கள் தங்கிச் சுற்றுப்பயணம் செய்வதற்கென திரு. டி. கே. எஸ். உடன்பிறப்பாளர்களும் அவர்களின் நாடகக் குழுவினரும் கடந்த 15—4—'57-இல் சென்னையிலிருந்து புறப்பட்டனர். கலையுலகக் கணடர்களும் உற்றார் உறவினர்களும் சென்னைத் துறைமுகத்தில் அவர்கட்கு வாழ்த்துக் கூறி வழியனுப்பினர்.

**குறிப்பு:** அயல் நாடு சென்றுள்ள கலைஞர்கட்கு எமது வாழ்த்தினையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம். டி. கே. எஸ். உடன்பிறப்பாளர்கள் தமது நாடகக் கலைத்திறத்தால் மலேயா நாடெங்கும் தமிழ்க் கலை மணம் பரப்பி வெற்றியுடன் திரும்பி வருவார்களாக.

### சொல்லின் செல்வருக்குப் பாராட்டு

கடந்த 15-4-57-இல் காரைக்குடியை அடுத்த நேமத்தான் பட்டியில் திருநாவுக்கரசு வித்தியாசாலையின் 51-ஆவது ஆண்டுவிழாவும் சொல்லின் செல்வர் டாக்டர் ஆர். பி. சேதுப் பிள்ளை அவர்கட்குப் பாராட்டு விழாவும், புதுக்கோட்டை நடுவர், திரு எஸ். மகராசன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பேராசிரியர், லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், திரு சேதுப்பிள்ளையவர்கட்குப் பொற்பதக்கம் சூட்டிப் பொன்னாடை போர்த்தினர். வித்துவான், பா. சொக்கலிங்கம், திரு. பிள்ளையவர்களின் தமிழ்த் தொண்டைப் பாராட்டிப் பேசினர். திரு. பழ. நாராயணன் செட்டியார் பாமாலை வழங்கியும் பூமாலை அணிவித்தும் சிறப்புச் செய்தார் நடுவர் மகராசர் அவர்கள் தம் தலைமைஉரையில் திரு. பிள்ளையவர்களின் சொல்லோவியம் பற்றியும் எழுத்தோவியம் பற்றியும் சிறப்பித்துப் பேசினர்.

**குறிப்பு:** சொல்லின் செல்வருக்குப் பாராட்டுரைகள் வழங்கப்படுவது கண்டு மகிழ்கிறோம். கற்குந்தோறும் நூல் நயம் காண்பது போல், இத்தகைய அறிஞர்கள் பாராட்டப்படும் போதெல்லாம் நாடு தமிழ் நயம் காணத் துவங்கி விட்டது என்ற உண்மையும் புலனாகிறது.

### அன்பர் வினோபா பாவேயின் கருத்துரை

'தமிழ் நாட்டில் கடந்த பதினொரு திங்களாகச் சுற்றுப் பயணம் செய்து வருகிறேன். தமிழ்மொழி சிறந்த மொழி. நான் தமிழைக் கற்றிருக்கிறேன். தமிழ் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன்பு தோன்றிய மொழி. தமிழில் பழமையும் புதுமையும் சேர்ந்திருக்கிறது. தமிழில் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர்த் திருவள்ளுவர் திருக்குறளை இயற்றினர். இந்நூல் கற்பிக்கும் அறநெறிகளை அனைவரும் கற்க வேண்டும்." என்று திருநெல்வேலி சாப்டர் உயர்நிலைப் பள்ளி விளையாட்டு இடத்தில் கடந்த 9-4-57-இல் நடைபெற்ற வழிபாட்டுக் கூட்டத்தில் பேசிய நிலக்கொடை இயக்கத் தலைவர் ஆச்சாரிய வினோபா பாவே குறிப்பிட்டார்.

**குறிப்பு:** அன்பர் வினோபாபாவே போன்ற பொதுநலத் தலைவர்கள் இங்ஙனம் தமிழ்மொழியின் ஏற்றத்தைப் பற்றிப் பேசுவதைக் கண்ட பிறகாவது வடநாட்டு ஆட்சியாளர் தமிழ் நாட்டின் சிறப்பினை உணர்ந்து அதன் குறைகளைக் களைய முன்வருவார்களாயின் குடியாட்சி அதற்குரிய சிறப்பைப் பெறும் என்று எதிர்பார்க்கிறோம்.

# மதிப்புரை

எம்பாவை இருநூறு

[இதன் ஆசிரியர் திரு. செந்தமிழ்ச் செல்வத் திருமணி இளவரசன் நா நடராசன் அவர்களாவர். இதன் விலை அணா பத்து. கிடைக்குமிடம்: 90, லிங்கசெட்டித் தெரு, சென்னை - 1.]

இந் நூல் திருவெம்பாவை திருப்பாவைகளை அடியொற்றி இணைத்துப் பாடவேண்டுமென்னும் ஆசிரியர் கொண்டுள்ள பெருங் காதலால் எழுந்ததாகும். முன் சைவ வைணவ மாற்றங்கள் சிலர்பால் உண்டு. இப்பொழுது அவை இல்லை. ஆனால் கடவுள் இல்லை யென்னும் பாழ்ங் கொள்கை எங்கணும் பரவியுள்ளது. அது காலத்துக்கேற்ற கோலம். அத்தகைய இக்காலத்து என்றுமுள்ள பொதுமைநோக்குடன் இந் நூலாசிரியர் இத் தொண்டினைக் காலத்துக்கேற்ற சீலமாய் ஆற்றியமை பெரிதும் பாராட்டத்தக்கது.

செய்யுட்கள் இனிமையும், எளிமையும், தெளிவும் ஆற்றொழுக்கும் அமைந்தன. பத்திசெய் அடியவர்க்கும் புத்தமுதாகும். இந் நூலாசிரியர் வணிகமண்டல சதகம், மூத்தப்பர் வரலாறு முதலிய பல நூல்கள் யாத்துள்ளனர். அன்பர்கள் வாங்கிக் கற்று இன்புறுவார்களாக.

தைப்பூசம்

[இது கோலாலம்பூர், மகாமாரியம்மன் கோவில் பிரசாரசபையின் மாத வெளியீட்டின் தைப்பூசச் சிறப்புமலர் ஆகும். கிடைக்குமிடம்: 163, ஹைஸ்டிரீட், கோலாலம்பூர்.]

இதன்கண் 9 சிறந்த கட்டுரைகள் காணப்படுகின்றன. நம் தமிழகப் பண்பாளர் சேய்நாடு சென்று வாழினும் தாய் நாட்டையும், தாய்மொழியாம் தமிழையும், தனிச்சிறப்பு வாய்ந்த தமிழகப் பண்பாட்டையும் எங்கணும் அமிழ்தினும் ஆருயிரினும் சிறப்பாக ஓம்பி ஒழுகி வருகிறார்களென்பதற்கு இஃதோர் நற்சான்றாகும். அவர்கள் தளரா முயற்சிவளர்வதாக.

'மண நூல்'

[இதன் ஆசிரியர்: சித்தாந்தப் புலவர், வித்துவான், ந. சிவப்பிரகாச தேசிகர் அவர்கள், தமிழ் ஆராய்ச்சி விரிவுரையாளர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம். பதிப்பாளர்: புலவர், சு. குஞ்சிதபாதம் பிள்ளை, அவர்கள் உரத்தூர், சிதம்பரம்.]

தொன்மைச் செந்தமிழோர் சிவபெருமான் திருவருளால் திருமணம் முதலிய எல்லாச் சடங்குகளையும் தமிழ் மந்திரம் ஓதியே ஆன்றோரை ஆசானாகக் கொண்டு வழிவழி நிகழ்த்தி வந்தனர். திருமுறை பன்னிரண்டனுள் 'திருமந்திரம்' எனத் தனித்தொருமுறை பத்தாவதாக அமைந்துள்ளது. அது திருமந்திரம் என்னும் திருப்பெயர் பூண்டு திகழ்வதனாலேயே முதன்மையாக மந்திரங்கள் தனித்தமிழின்கண் உண்டென்பது மலைவிளக்காக நிலை பெறுத்துகின்றது. அங்ஙனமிருந்தும் அயன் மொழி மயலினரும், அவர் தம் மயலிற்பட்டுச் செயலிலாச் சிலரும் தமிழில் ஏது மந்திரம எனக் கரைகின்றனர். அத்தகையோர் மயலினைப் போக்கும் நற்செயல் பூண்டு வெளிவந்துள்ளது இந்நூல். தாயினை மறந்த சேயினராம் அவர்கட்கு நோயினை நீக்கும் நன் மருந்து போல் இந்நூல் ஒளிர்கின்றது.

மேலும் இந்நூலாசிரியர் ஒரு தேசிகர் மரபினர். அவர் வாயிலாக என்றும் பொன்றாத் தமிழ் மந்திர வாய்மை வெளிவந்துள்ளது, தமிழுக்கே ஒரு நற்காலமென்றுதான் எண்ணல் வேண்டும். அந்நூற்கண் பல திருமந்திரப் பாட்டுக்களும் திருமுறைத் திருப்பாட்டுக்களும் பிறவும் சாலவும் பொருத்தமாகத் திகழ்கின்றன. இந்நூலை உற்றகாலத்து யாத்துதவியும் வெளிப்படுத்துப் பரப்பியும் வரும் இருபெருந்தகையார்க்கும் தமிழுலகு என்றும் பெருங்கடப்பாடுடையது. செந்நெறிச் செல்வார் அனைவர்களும் அந்நூலினை வாங்கி அதன்படி திருமண முதலிய சடங்கினைச் செய்து சீரும் சிறப்பும் பெற்று வாழ்வார்களாக.

இந்நூல் விலையின்றி வழங்கப்படுவது போல் தெரிகின்றது. நேரில் பெறுவார் அங்ஙனம் பெறினும் அஞ்சல் வழியாகப் பெறுவார் இரண்டணா அஞ்சற் சீட்டுப் (Stamp) பதிப்பாளர் முகவரிக்கு விடுத்துப் பெறுவது நலமாகும்.

**‘உலக சமாதானம்’**

[இதன் ஆசிரியர்: G. V. வேதாந்திரி அவர்களாவர். கிடைக்குமிடம்: அன்பொளி நிலையம், கூடுவாஞ்சேரி. விலை ரூபா 5-0-0 ஐந்து]

இந்நூல் ஞானவள்ளல் பரஞ்சோதி மகான் அவர்களைச் சார்ந்து ஒழுகும் ஒரு பெரும் புண்ணியப் பேற்றின் விளைவாம் நல்லெண்ணவூற்றுப் பொங்கி வடிந்து பெருவெள்ளமாகக் கரைபுரண்டு போவதன் கண் கரையொதுங்கும் ஒரு சிறு துளியெனக் காணப்படுகின்றது. அவ்வள்ளலார் தெள்ளத் தெளிந்த திருவுள்ளத்தால் அடிகோலி நிகழ்த்தி வரும் உலக சமாதான ஆலயமே ஒரு பெரும் உண்மையான வண்மை எண்மைப் பொதுநிலையமாகும். இப் பொதுநிலையப் பணி பொலிவுற்றோங்கி உலகம் அமைதி எய்துமாக.

நூல் மிகவும் சிறந்த முறையில் யாக்கப்பட்டுள்ளது. எளிய இனிய ஆற்றொழுக்கு நடை வாய்ந்தது. திட்பநுட்பம் செறிந்துள்ளது. இடையிடையே பொருத்தமுறப் பாடி அமைக்கப்பட்ட அரும் பாடல்கள் முந்நூற்றுக்கு மேற்பட்டுக் காணப்படுகின்றன. அவற்றைக் கருவாகக் கொண்டு விளக்கும் உரைநடைப்பகுதி நானூற்றுக்கு மேற்பட்ட பக்கங்களைக் கொண்டு திகழுகின்றது.

ஆட்சி முறைமை, பொதுவுடைமை, ஒழுக்கமுடைமை, ஒற்றுமை, கடவுள் நம்பிக்கை, அகத்தவமாகிய யோகப் பயிற்சி, தொண்டு, ஞானப் பெரும்பேறு, ஞானநிலை ஆட்சியுடன் கலந்தால் மட்டும் உலக அமைதியுண்டாம் என்னும் வாய்மை முதலிய பற்பல சிறந்த ஒழுகலாற்று முறைகள் முந்நூற்று இருபத்துநான்கு தலைப்புக்களால் விளக்கப்பட்டுள்ளன. சிறந்த குடும்ப வாழ்க்கையினையும், தெய்வ வாழ்க்கையினையும், உலகப் பொது உடைமையினையும், பொது அமைதியினையும் உண்மையாக விழையும் இருபாலாரும் வாங்கியும் வாங்குவித்தும் கற்றுப் பயன் எய்துவார்களாக.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.



சிவத்திரு. கி. சுப்பராயபிள்ளை அவர்கள்




சிலம்பு திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௮, வைகாசி பரல்
௩௧ ஜூன், 1957 ௧௦

# திருமுறையால் தீராநோய் தீர்தல்

**சிவப்பற்று**

சென்னைமாநகர் இராயப்பேட்டைக்கண் செம்பொருட் சிவ னெறிக்கண்ணும், திருமுறைத் திருமாமறைக்கண்ணும் முழு நம்பிக்கையும், விழுமிய பற்றும, நடைமுறை ஒழுக்கமும் கெழுமிய அருட்பெரியார் ஒருவர் உளர். அவர்தம் திருப்பெயர் மாசிலாமணியெனும் ஒப்பில் சுப்பராய பிள்ளை என்ப. அவர்தம் அளவிறந்த சிவப்பற்று நம்மனோர் உளமகிழ்ந்தேற்று ஒழுகி யுய்யப் பெருந்துணை செய்யும் பெற்றியதாகும். அதனால அதனை ஈண்டுச் சுருங்கக் கூறுவாம்.

**பிறப்பு**

சேலப் பேரூர்க்கண் விழுமிய வேளாண்குடியில் தோன்றி யவர் நம் பெரியார். அக் குடி 'வெண்பாப்புலி,' வேலுச்சாமிப் பிள்ளையவர்களின் பண்பார் தொடர்புடையது. இவர்தம் அருமைத் தந்தையார் திருப்பெயர் அருட்பெருகு கிருட்டிண சாமிப்பிள்ளை என்ப. பெருமைத் தாயார் திருபபெயர் மலர் முகம்சேர் அலர்மேலம்மாள். இப் பெருந்தகையாரின் திருந்திய உடன்பிறப்பாளர் சித்துநாத பிள்ளையாவர். இக் குடும்பத்தார் நீண்டநாளாகச் சேலம் இரண்டாவது அக்கிரகாரத்தில் வாழ்ந்து வந்தனர். பெரும்பாலும் நம் பெரியாரவர்களின் பொதுக்கல்வி முற்றும் சேலமாநகர்க்கண்ணே பயிலப்பெற்றது. எஞ்சிய சிறப்புக்கல்வியினைச் சென்னைக் கோநகர்க்கண் சிறப்புறக் கற்றனர்.

திருமணம்

நம் பெரியார்க்கு அகவை இருபது. நம் பெரியார் உலகிய லறிவுடன் செந்நெறி ஒழுக்க உணர்வும் ஒருங்கு கைக்கொண்டு திகழ்ந்தனர். 'விடிவதுமே வெண்ணீற்றை மெய்யிற்பூசி' வெளுத்தமைந்த வெள்ளாடை அரையிற் சுற்றித், துடியிடை யாள் பாகன்தன் துணைத்தாள் உன்னி, தொன்மறையாம் தூய திருஐந்தெழுத்தை, நன்மையுற நன்னெஞ்சத் திடையறா தெண் ணிச், சிவமணி பொலிய என்றும் விளங்குவர். நாளும் திருக் கோவில் சென்று திருவழிபாடு இயற்றுவர். இவர்தம் பொன் மேனியினைக் காணும் மெய்யன்பர் தம்மையறியாதே காதலால் உளங்கனிந்து கடவுண்மெய்ம்மை தேறிக் கைகூப்பி மகிழ்வர்.

இந் நிலையில் எந்நெறிக்கும் நன்னெறியாம் இல்லற நெறியில் இன்புற்று வாழுமாறு சான்றோர் எண்ணினர். உரிய அம்மான் திரு சண்முகம பிள்ளையவாகளுக்கும் அவர்தம் கற்பிற் சிறந்த பொற்புறு மனைவியார் பாப்பம்மாளுக்கும் தவத்தால் வந்த தனபாக்கிய அம்மாளை நன்னாள் மணம்புணர்த்தினர். விருந் தினைச் சிறப்புடன் பொருநதி வாழ்ந்து மனையறம் பேணினர். அவ்வம்மையார் இருமை நெறிக்கும் பெருந்துணையாய்த் திகழ்ந் தனர். நம் பெரியாரின் அகவை முப்பது துவஙகுமுன் அம்மை யார் இறைவன் திருவடிநீழல எய்தினர். இதற்கிடையில் இவர் தம் குடுமபத்தினா சென்னைமாநகர் வந்து வாழத்தொடங்கினர். சீருமை சிறப்புமாகச் சிவப்பொலிவுடன் வாழ்நதனர்.

அகவை முப்பதின்கண் மறுமணமும் நிகழ்ந்தது. அவ் வம்மையார் திருப்பெயர் தில்லையம்மாள். பிறந்த ஊருமை சிறந்த திருத்தில்லையாகும். அவ்வம்மையாரின் தந்தையார் திருப்பெயர் இராமசாமிப் பிள்ளை. தாயார் திருப்பெயர் அன்னமமாள். இவ்வம்மையாருடன் கூடி மனையறத்தினை மாண்புறப் பத்தாண்டு கள் நிகழ்த்தினர். அம்மையப்பர் திருவருளால் செம்மைப் பெண்மகவு ஒன்று தோன்றிற்று. அதன் திருப்பெயர் தில்லைக் கற்பகம். அப் பெண்மகளும வண்மையுற வளர்ந்து மணப் பருவம் சேர்ந்தனர். கூடலூரில் அண்ணாமலைப் பிள்ளை என்னும் சீர்சால் செல்வர்க்குத் திருமணம் முடிப்பித்தனர். அவ்வம்மை யார் பெண்மகவொன்று ஈனறு பிறஙகுற வாழ்ந்தனர். இதற்கு முன்னரேயே நம பெரியார்க்கு அகவை நாற்பதின்கண் அவர் தம இரண்டாவது மனைவியார் தில்லையம்மாள் எல்லையில் புகழுடன் வாழ்ந்து தில்லையம்பலவாணர் திருவடி சேர்ந்தனர். அப்பொழுது அவ்வம்மையார்க்கு அகவை இருபத்தைந்து.

பின் நம் பெரியாரின் திருமகளாரும் ஒருமகளீன்று இறையடி சார்ந்தனர்; அம்மகளாரின் திருப்பெயர் கற்பகாட்சி.

இப் பெண்மகவும் ஒன்பதியாண்டுவரை வாழ்ந்து சிவனார் பொன்னடி சேர்ந்தது. நம் பெரியாரும் குடும்பத்தொடர்பு இலராயினர். குடும்பம் உள்ள காலத்தும் பற்றற்றான் பற்றினையே பற்றி நின்றாராதலின் பிரிந்தகாலத்து வருத்தம் ஏதுமின்றித் திருத்தமுறச் சிவமகிழ்வுடன் இருந்தனர்.

சார்பு

குடும்பம் உள்ள காலத்தும் இல்லாத காலத்தும் நம் பெரியார் தம் அருமைத் தம்பியார் அவர்தம் பெருமைமக்கள் சார்பினராகவே இருந்தனர். தம்பியார் மக்களின் திருப்பெயர் வருமாறு: கிருட்டிணசாமிப் பிள்ளை, சிவக்கொழுந்துப் பிள்ளை, நமசிவாயம் பிள்ளை, காந்திமதியம்மாள் என்ப. அக்காலத்துச் சென்னையை அடுத்துள்ள சைதாப்பேட்டை, கொத்தவால் சாவடித் தெரு, எண் - ௫௬ மனையின்கண் வாழ்ந்து வந்தனர். தம்பியாரும் அவர்க்குப்பின் அவர்தம் அருமை மக்களுமே நம் பெரியாரவர்களை அன்றுதொட்டு இன்றுகாறும் பல்லாற்றானும் போற்றிவருகின்றனர். இப் போற்றுதல் மிகவும் பாராட்டுதற்குரிய ஒன்றேயாம்.

சிவத்தொண்டு

நம் பெரியார் தம் மனைவியாரின் பெரும்பிரிவுக்குப்பின் தம்மை முழுவதும் சிவத்தொண்டுக்கே ஒப்புவித்தனர். இத் தொண்டு இப்பொழுது இடையீடின்றித் தொடர்ந்து நிகழ்வதாயிற்று. சிவத்தொண்டின் அடிப்படையாம் சிவதீக்கையும், திருமுறை ஓதுதலும், திருக்கோவில் வழிபாடும், திருவூர் திருத்தநீர் ஆங்காங்குள்ள திருவுருவங்களின் வழிபாடுகளும் முறையாகத் தொடங்கினர்.

திருவூர் வழிநடை

தில்லைமுதலாம் திருவூர்கள் பலவற்றுக்கும் அடுத்தடுத்துச் சென்று வழிபட்டு மீள்வாராயினர். அவ்வக்காலத்து நிகழ்ந்த அரும்பெரும் நிகழ்ச்சிகளும் ஆண்டாண்டு வேண்டுமளவு திருவருள் புரிந்த துணைச்செயல்களும் அளப்பில. அவற்றுள் சில, இடம் வந்துழி வந்துழிக் கூறுதும்.

நம் பெரியார் திருவூர் வழிநடையாகிய தலயாத்திரை 'தென்னாடுடைய சிவனே போற்றி' என்னும் சிறப்புப் பொருந்திய செந்தமிழ் நாட்டகத்தே மட்டுமன்றி, 'எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்னும் இயல்பு சேர்வனவற்றுள் ஒன்றாகிய வடநாட்டின்கண்ணும் பல திருவூர்கள் சென்று வழிபட்டுள்ளார்கள். அவற்றுள் சில வருமாறு:

காசியின்கண் ஓராண்டு உவந்துறைந்து விசுவநாதப் பெருமானைக் காலந்தோறும் சென்று திருமுறை ஓதிச் சாலவழிபட்டனர். நாளும் 'புலரும் பொழுதின் முன்னெழுந்து கங்கைப் புனித நீரின்' மூழ்குவார். திருவைந்தெழுத்தோதித் திருவெண்ணீறணிவர் சிவபூசை புரிவர். வழிபட்ட இடங்கள்: கஙகாசாகரம், தாடகேசுரம், மகாவைத்தியநாதம், பிரயாகை, காசி, கயா, திரிவேணி, மதுரா, பிருந்தாவனம், கோகுலம் கோவர்த்தனகிரி, மிசிரி, நந்திக் கிராமம, அரிதுவாரம் முதலியனவாகும்.

தமிழகத்தே சிவத்திருவூர்கள இருநூறறெழுபதனுள் இருநூற்று அறுபதுக்குமேலுள்ள திருவூர்களைச் சென்று கண்டு வழிபட்டுள்ளனர். ஆராக்காதலினால் ஒருமுறைக்கு இருமுறையாக வழிபட்டுள்ளனர். நம் பெரியார்க்கு இப்பொழுது அகவை எண்பத்துநான்கு. இப்பொழுதும் அவர்கள் தமிழகத்து எஞ்சிய திருவூர் வழிபாட்டினை முற்றுவிக்க வேண்டுமென்னும் மூவா முழுக்காதல் கொண்டுள்ளனர். அம்மையப்பர் திருவருளால் அதற்கேற்ற செம்மையுடம்பும் வாய்க்கப்பெற்றுள்ளனர்.

சிவதீக்கை

சிதம்பரம் உலகமூர்த்திதேசிகர்மடம் முத்துக்குமாருக் குருக்களையா அவர்களால் சிவதீக்கைப் பேறுபெற்றனர். அக்காலத்து நம் பெரியாருககு அகவை இருபதாகும். முதற்கண் நிகழ்ந்த தீக்கை சமயதீககையாகும். பின்பு நம் பெரியாரின் அகவை இருபத்தைந்தின் தொடககத்தில் குறித்த குருக்களையா அவர்கள்பால் விசேட தீக்கை ஏற்றனர். நாற்பதாம் அகவையில் நிருவாண தீக்கை நிகழ்ந்தது. அதன் வாயிலாக உடையவர் பூசை கைக்கொண்டு இடையறாது நிகழ்த்திக்கொண்டு வருகின்றனர். இவர்கள் தம் கனிவான, காதலும் கண்ணீரும் உருக்கமும் மிகுந்த பூசையினை யாவர்களும் கண்டு கைகூபபி வழுத்தும் கடப்பாட்டினராவர். நம் பெரியார் திருமுறைத் திருமாமறைத் திருப்பாட்டினை உளங்கனிந்து உச்சக் குரலில் எடுத்தோதுங்கால் புறத்திருந்து செவிசாய்ப்பார் வியப்பும் இன்பமும் விழைவுங் கொள்வதோடல்லாமல், ஓதுவார் ஓர் அரிய கட்டிளமை வாய்ந்த காளையெனறே ஐயுறவின்றிக் கருதுவர்.

இடர் அகறல்

நம் பெரியார் பல திருவூர்களும் சென்று வழிபட்டு வருங்கால் இடைஇடையே திருவருட் சோதனையாக நிகழ்ந்த இடர்கள் பல. அவ்விடர்கள் பலவும் காய்கதிர்முன் வீயும் புற்பனிபோல் மாய்ந்தன. அவற்றுள் ஒன்றிரண்டு கூறுதும்:

தொண்டை நாட்டிலுள்ள ஒளிந்தியார்ப்பேட்டையை வழி ட்டுத் திரு அரசிலித்திருவூரை வழிபடச் செல்லுங்கால், புதுச் சேரி மளிகை சென்று மீண்ட வழிப்போக்கு வண்டி ஒன்றைக் கண்டனர். அவ் வண்டிக்காரர் விரும்பிய வாடகையைக் கொடுத்துக் கூண்டுக் கட்டைவண்டியில் ஏறிக்கொண்டனர். அவ் வண்டிக்காரர்கள் நம் பெரியாரை ஏமாற்றி இடைநடுவேயுள்ள இரும்பை மாகாளப் பகுதிக்கு இடையே இறக்கிவிட்டனர். பொழுதோ இரவுப்பொழுது; மழையோ சிறு தூறல். இடமோ குளக்கரை. குளத்தில் வெள்ளமோ மிகுதி. திணிந்த இருள். வருவார் போவார் யாருமிலர். இந்நிலையில் குள்ளநரிகள் ஊளையிட்டுச் சூழ்வவாயின. நம் பெரியாருக்கு அவவேளையில் இன்னது செய்வதென்று ஒன்றும் புரியவில்லை. அந்நிலையில் திருவருள் துணையால் " இடர்கெடுமா றெண்ணுதியேல்........ஆரூரான்றென்றே அலறா நில்லே" என்னும் திருமுறைத் தீந்தமிழ் ஓதி ஆங்குள்ள புளிய மரத்தில் ஏறி அமர்ந்துகொண்டனர். என்றாலும் குள்ளநரியின் அல்லல் ஒழிந்தபாடில்லை.

இதற்கிடையில் வழிப்போவோர் சிலரும் கட்டை வண்டிகளும் வந்தன இவ்வரவு கண்ட நம் பெரியார் பெரிதும் மகிழ்ந்தனர். மரத்திலிருந்தபடியே உரத்துக் கூவினர். கூக்குரல் கேட்ட வழிப்போக்கர்கள் பேயோ பூதமோ என்று அஞ்சினர். அவருள் துணிந்தார் சிலர் ஆளுக்கொரு கொம்பு எடுத்துக் கொண்டு நெருங்கி வந்தனர். நம் பெரியார் தம் நிலைமையினை விளங்கக் கூறினர். அதனைக் கேட்டதும் கழிவிரக்கம் கொண்டனர். வேண்டும் துணைபுரிந்து அவர்களை இறக்குவித்தனர். தங்கள் வண்டிகளில் அன்பாக ஏற்றிக்கொண்டு ஊரண்மையில் கோயில் அருகாமையில் விட்டனர். அப்பொழுது ஏறத்தாழ மணி பத்து இருக்கும் நம பெரியார் இடரகன்று எய்த வேண்டிய இடம் எய்தினர். எனினும், திருக்கோவில் வழிபாடு கிட்டவில்லையே என்று பெரிதும் வாட்டமுற்றனர். இறைவன் திருவுள்ளம் நம் பெரியார்பால் நிறையவுள்ளதாகையால் அத் திருக்கோவில் குருக்கள் தற்செயலாகத் திருக்கோவில் வழிபாட்டை அப்பொழுதுதான் துவங்கினர். நம் பெரியார் கண்ணாரக்கண்டு வழிபட்டுப் பேரின்பம் எய்தினர்.

நம் பெரியார் வருகையை வண்டியாட்கள்வழி உணர்ந்த அவ்வூர் மணியகாரரும் திருக்கோவில் அறங்காவலரும் ஆகிய செந்நெறிச்செல்வர் நம் பெரியாரின் வருகையைக் கேட்டுப் பெரிதுவந்தனர். தம் இல்லத்துத்தங்க வேண்டும் வசதிகள் செய்தமைத்தனர். ஓர் அந்தணர் இல்லத்தின்கண் விருந்துக்கு ஏற்பாடு செய்தனர். இச்செய்கைகள் ஒன்றும் நம்பெரியார்க்குத்

தெரியவாராது. நம் பெரியார் திருக்கோவில் வழிபாட்டினைச் செம்மையுற முடித்தனர். ஆராக்காதலால் பேராப் பேரின்புற்றனர்.

திருக்கோவிற்புறம் வந்து 'ஆண்டவனே! ஈண்டு யாரும் பழக்கம் இல்லையே! இரவோ நள்ளிரவு; ஊரோ சிற்றூர்; வெளிச்சமின்மையால் தெருவோ தெரியவில்லை' என்று பரிந்து வேண்டினர். முற்குறித்த மணியகாரர் வலியவந்து இன்னுரை பகர்ந்து வரவேற்றனர் தம் இல்லத்துக்கு அன்புடன் அழைத்துச் சென்றனர். அந்தணரகத்து விருந்தருத்தினர். மணியகாரர் இல்லத்து நம் பெரியார் மகிழ்வுடன் தங்கினர்.

மலையாளப் பகுதியில் திருவஞ்சைக்களம் சென்றனர். செல்லுங்கால் இறையருளால் கப்பலில் உற்ற துணையொன்று வாய்த்தது. திருக்கோவில் தலைவர்களும் மிகவும் அன்புடன் நம் பெரியாரை வரவேற்று வழிபாடு செய்வித்தனர். அத் திருவூரின்கண் மூன்றுநாள் தங்கி ஆன்ற வழிபாடாற்றி அகமிக மகிழ்ந்தனர்.

திருக்குற்றாலம், பாபநாசம் முதலிய திருவூர்கள் சென்று வழிபட்டனர். பகவதி தீர்த்தம், கலியாணி தீர்த்தம் முதலிய திருத்தநீராடினர். தாம்பரவரணியென்னும் பொருநைத்துறைப் புண்ணிய நீராடினர். திருநெல்வேலியுறை செல்வர் தாள் வழுத்தினர். திருச்செந்தூர் செல்லுங்கால் பாளையங்கோட்டைப் பண்பார் நண்பரொருவர் துணையாயினர். திருக்கொள்ளிக்காடு செல்லும்போது வெள்ளப்பெருக்கினால் கரைசார முடியாதநிலை ஏற்பட்டது. ஆண்டவன் திருவருளால் அன்புமிக்க உரஞ்சேர் ஒருவர் உறுதுணையால் வெள்ளம் நீந்தி உள்ள மிக்க இறையடி வழுத்தினர்.

எலும்பொடிவு

நம் பெரியார் தம் அகவை எழுபத்தாறில், திருவூர்ச்செலவு (தலயாத்திரை) செல்லுங்கால் காஞ்சிபுரத்துக்கு அண்மையில் வண்டி குடைவண்டி சாய்ந்து இடதுபக்கம் காறை எலும்பு ஒடிந்து போயிற்று. அதனால் உணர்வும் மயங்கிற்று. காஞ்சிபுரம் மருத்துவ மனையில் சேர்க்கப்பெற்றனர். முதல் மருத்துவ உதவி செய்யப்பெற்றனர். நம பெரியாரின் அரும்பெரும் அன்பு மக்கள் வந்து அழைத்துக்கொண்டு சென்று இராயப்பேட்டை மருத்துவ மனையில் சேர்த்தனர்.

இறைவன் திருவருளாலும் மருத்துவத்தலைவர் பேரன்பார் உறுதுணையாலும் விரைவில் நலம் எய்தினர். இத்துணை முதுமைப் பருவத்து விரைவில் நலமெய்தியது கண்டு யாவரும் வியப்

புற்றனர். காறை எலும்புக்குத் தனிமுயற்சி ஏதுமின்றி எளிதில் பொருந்திப் பண்டுபோலாயதும் சிவனருளே என்று இறும்பூ தெய்தினர்.

திருமுறைமருந்து

நம்பெரியாரின் அகவை எண்பத்தொன்றின் ஈற்றில் தம் மில்லத்து முற்றத்தின்கண் நடைதவறி விழுந்து வலதுகால் மூட்டில் ஒடிந்து எலும்பு இருபிளவாகிவிட்டது. பண்டே பயின்ற இராயபேட்டை மருத்துவமனையில் சேர்க்கப்பட்டனர். அவரும் ஆறு திங்கள்வரை நன்மருந்துகள் பல செய்தும், ஒளிப் படம் எடுப்பித்தும் ஓவாது மருத்துவம் செய்தனர். ஒன்றாலும் குணம் எய்தக் கண்டிலர். இறுதியில் காலை எடுத்துவிடுவதல் லாமல் வேறுவழியில்லை என்று அறுதியிட்டுக் கூறினர். அதற்கு நம பெரியார் இணங்காமை கண்டு வீட்டுக்குப் போகலாம் என விளம்பினர்.

நம் பெரியாரும் உறையும் இல்லம் வந்துற்றனர். வேறு சில மருத்துவமும் செய்தனர். ஒன்றாலும் நலமுறவில்லை. நாளும் வருந்தினர். கேளும நைந்தனர். மிகவும் மனமுடைந்து ஒருநாள் திருமுறைத் திருமாமறையின்கண் கயிறுசார்த்திப் பார்த்தனர் அப்பொழுது "திருமாகறல் திருப்பதிகம்" திரு வருளால் தோன்றிற்று இத திருப்பதிகம் ஆளுடைய பிள்ளை யாராகிய திருஞான சம்பந்தப் பெருமானால் அருளிச் செய்யப் பட்டது. "விங்குவிளை" எனனும் முதல் நினைப்புக்கொண்டது. இதனைக் கண்டதும் பெரியார்க்கு உள்ளத்துறுதி உண்டாகி விட்டது. எவ்வகையாலும் திருமாகறல் செல்லவேண்டுமெனத் திண்ணிய வுள்ளத்தெண்ணினர். புறபபட முயன்றனர்; துணை யின்றிப் போகமுடியாமையால் தாழ்த்தனர். குடும்பத்தாரும் முதுமை நோக்கி முற்றும் அஞ்சினர். நயமுறவேண்டினர். நம் பெரியார் அயல்துணையோடேனும் செல்வது எனத் துணிந்தனர். இத் துணிவு கண்ட குடும்பத்தினர் தாமாகவே இணங்கி நன்னுட் கொண்டு திருமாகறலுக்கு அழைததுப் போந்தனர். ஒரு வீடு அமைத்து வேண்டும் வாய்ப்புக்களுடன் தங்கச் செய்தனர்.

திருப்பதிகத்தின் முதல் திருப்பாட்டு வருமாறு:

விங்குவிளை கழனிமிகு கடைசியர்கள்
　　பாடல்விளை யாடல் அரவம்
மங்குலொடு நள்கொடிகள் மாடமலி
　　நீடுபொழில் மாகறலுளான்
கொங்குவிரி கொன்றையொடு கங்கைவளர்
　　திங்களணி செஞ்சடையினான்
செங்கண்விடை அண்ணலடி சேர்பவர்கள்
　　தீவினைகள் தீருமுடனே. —ந. ௭௨—௧.

விங்கு - மிகுதி. கடைசியர்கள் - உழவப்பெண்கள். இங்குறையும் இறைவன் திருப்பேர் : அடைக்கலங்காத்த நாதர். இறைவி திருப் பேர் : புவனநாயகி, (அனைத்துலக முதல்வி.)

இத் திருப்பதிகத்தின்கண் ஆண்டவன் திருவடியை இடை யறாது நினைபவர்களின் தீவினைத்துன்பங்கள் உடனே நீங்கும் என்பது திருப்பாட்டுத்தோறும காணப்படுகின்றது. இதனை உறுதியாக நம்பிய நம்பெரியார் திருமாகறலில் தங்கி நாளும் இத் திருப்பதிகத்தை ஓதிச் சிவன் திருக்கோவில் சென்று வழிபட் டனர். நடகக இயலாத நம்பெரியவர் எங்ஙனம் வழிபட்டார் என்பது எண்ணுங்கால் மிக்க வியப்பேயாகும். எங்ஙனம் எனின்?

சின்னாட்கள் வண்டியில் வைத்து மெய்யன்பர்கள் வண்டி யினை இழுததுச் சென்று திருக்கோவிலின்முன் இறங்கிவைப்பர். திருக்குளத்து நீரை முகந்து கொடுப்பர். நம் பெரியார் திருத்த நீர் ஆடித் திருநீறணிந்து திருப்பதிகம் ஓதிச் சிவனை வழிபட்டு வருவாராயினர். இங்ஙனம் சில திஙகள் சென்றன. பிறகு மெய்யன்பர்கள் இடை இடையே இருவர் கைகோத்தும் ஒருவர் முதுகிலுமாகச் சுமந்துகொண்டு விட்டனர். மெல்லமெல்ல நம் பெரியார் இருக்கையால் நகர்ந்து நகர்ந்து சென்று வழிபட் டனர். முழுமுதல்வன் திருவருளால் ஆறு திஙகளுக்குள் முற் றும் குணமாகிவிட்டது. முன்னர் ஆட்ட மடக்க முடியாம லிருந்த கால் ஆட்டவும் மடக்கவும ஏற்பட்டது. பின் நடக்கவும் வாய்த்தது. இப்பொழுது பண்டுபோல் ஒருவர் துணையும் வேண் டாது நம் பெரியார் தாமாகவே நடந்து சென்று வழிபட்டு வரு கின்றனர். இது வெறும புனைவன்று; முற்றும் உண்மையேயாம். இந் நிகழ்ச்சி திருவள்ளுவர் ஆண்டு ௧௯அ௪,வைகாசித் திங்கள் இரண்டாம்நாள் தொடஙகியது.

தெய்வநாட்டமும் திருமுறைச்சீரும் ஒருவாறு மழுங்கி வரும் இக் காலத்து ஐயுறுவார் அனைவர்களும மெய்யுறக் கண் கூடாகக் காணத் திருவருட்டுணையால் நம் பெரியார் நிகழ்ச்சி யொன்று விழுமிதாக இருக்கின்றது. நம் பெரியாரும் உடல் நலத்துடன் வாழ்ந்து வருகின்றனர். வெளியூர் அன்பர்கள் பலரும் அடுத்தடுத்து அவர்களைக்கண்டு உணமை யுணர்ந்து வணஙகிச் செல்லுகின்றனர். அளவிடற் கொண்ணாத திருமுறை கள் முழுவதும் சிவமந்திரமேயாகும். அத திருப்பதிகங்களை மெய்யன்புடன் ஓதினால் கருதியவெல்லாம கைகூடும். நாயன் மார் காலஙகளில் நிகழ்ந்த அரும் நிகழ்ச்சிகள் அதனை உண்மை யுடன் ஓதுவார்க்கு இப் பொழுதும நிகழ்கின்றன. இத்துணைச் சிறந்த திருமுறைகளை நம்மவர்கள் நாட்டிலும், வீட்டிலும்,

திருக்கோவில்களிலும் எல்லாவகை வழிபாட்டிலும், சடங்குகளிலும் ஓதி வழிபட்டுப் பயன்பெறுவார்களாக. புரியாத அயற்புல மொழிகளால் இப்பொழுது நடக்கும் வழிபாடுகளும் சடங்குகளும் எவ்வகை நன்மைகளையும் தரும் தகுதியுடையன அல்ல. "சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார், செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப், பல்லோரும் ஏத்தப் பணிந்து" என்னும் திருவாதவூரடிகள் அருளிய திருவாசகத் திருமறையை ஒரு சிறிதாவது எண்ணிப் பார்ப்பார்களானால் புரியாத வடமொழி மந்திரம்தான் பெரிதென மயங்கிக் கூறார்.

திருமுறையிற் காணப்படும் போற்றித் திருத்தாண்டகம் ஐந்தும், போற்றித் திருவகவலும், இடையிடையே காணப்பெறும் போற்றித் தொடர்களும் மலர்வழிபாடாகிய அருச்சனைக்கென்றே அமையப்பெற்றன. அவற்றை ஓதி வழிபடுவோமாக. நம் பெரியாரவர்களை நேரிற் கண்டு, உண்மை தெளிந்து திருமுறை ஓதி வழிபட்டு உய்வோமாக.

பதினோராம் திருமுறைக்கண் ஆரிய மயக்கொழிப்பான் வேண்டி நக்கீரதேவர் அருளுவது காண்க:

"ஆரியப் புத்தகப் பேய்கொண்டு புலம்புற்று
வட்டனை பேசுவர் மானுடம் போன்று."

பொதுப் போற்றி மறைகள் வருமாறு:

திருக்காப்பு: 'தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி.'

பிள்ளையார்: 'தொண்டர் பரவும் மிடற்றாய் போற்றி
தொழில் நோக்கி ஆளும் சுடரே போற்றி.'

திருமுருகன்: 'முக்கணா போற்றி முதல்வா போற்றி
முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி.'

ஆலமர்செல்வன்: 'அதிர வீணைகள் அறுப்பாய் போற்றி
ஆல நிழற்கீழ் அமர்ந்தாய் போற்றி.'

அம்மை: 'உமைபாகம் ஆகத்து அணைத்தாய் போற்றி
ஊழி முதல்வ ஒருவா போற்றி.'

அம்மை: } 'சங்கரனே நின்பாதம் போற்றி போற்றி'
அப்பர்: } 'சதா சிவனே நின்பாதம் போற்றி போற்றி'

அம்பலவாணர்: தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி
ஏனக் காரமு தானாய் போற்றி.'

அடியார்: 'அடியார் அடிமை அறிவாய் போற்றி
அமரர் பதியாள வைத்தாய் போற்றி.'

திருக்கடைக்காப்பு: 'தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி.'

# *தலைமைப் பேருரையின் சுருக்கம்

அரும்பெருந் தலைவரவர்கள் நல்ல முறையில் வணக்கம் தெரிவித்துப் பேச்சைத் துவக்குகின்றார்கள்: நான் இச் சபைக்கு இதற்குமுன் இருமுறை தலைவனாக வந்திருக்கின்றேன். இது மூன்றாவதுமுறை. பலமுறை பேச்சாளனாக வந்து பேசியுள்ளேன். என்பால் வைத்த அன்பினால் இப்பொழுதும் அழைத்துள்ளீர்கள். இச்சபை ஒன்றுமே நீண்ட நாட்களாக ஊக்கம் ஒருசிறிதும் குன்றாது வளர்ச்சி முறையில் முன்னேறி வருகின்றது. ஏனைய பிற்றோன்றிய சபைகளுக்கும இது வழிகாட்டியாக நின்று நிலவுகின்றது அந் நிலைகருப் பெருங்காரணம் தளரா ஊக்கம் கொண்டு பண்பாலும் பணத்தாலும் பணியாற்றிப் பரமனடியடைந்து மேலும் நல்லாக்கம் நல்கிக்கொண்டுறையும சிவததிரு, சித்தாந்தப் பேராசிரியர், சிவகுருநாத பிள்ளையவர்கள், சி வ அவர்கள் ஆவர்.

சமய நிலையங்களைப் பண்டு நிறுவினோர் நன்னோக்கத்துக்கு மாறாகச் சமயச் செயல்களுக்கென ஒதுக்கிவைத்த பணங்கள் மிகுதியானால் சமயச் சார்பற்ற வேலைகளுக்குப பயன்படுத்துவது தகாது. சமயநிலையங்கள் ஏராளமான வருவாயுள்ளவை குறைந்த வருவாயுள்ள மற்றச் சமயநிலையங்களுக்கு உதவிசெய்வது தக்கதாகும். இநது சமயத்தவர்கள் வாயில்லாப் பூச்சியென்று எண்ணி இந்தியப பேரரசினர் பலவகையில் வேறு செலவுகளுக்கும் வேறு சமயிகளுக்கும் பயன்படுத்த முயல்வது நயனுடைச் செயலாகாது. சைவவைணவச் சமயகுரவர்களைப் பாராட்டுவது நமது கடமை. 'அப்படியிருக்கப் பரோபகாரச் சிந்தனை மிகுதியாக வலுக்கப்பெற்ற அரசியலார்கள் புத்தருடைய திருநாட்களுக்கு மிகுந்த ஆதரவளிக்கிறார்கள்.

**நமது சமய நிலையங்களின் 3 நாக்கங்கள்**

நமது சமய நிலையங்கள் ஒருகாலத்தில் ஒருவரால் ஏற்பட்டவையல்ல. பல ஆயிர ஆண்டுகளாக வளர்ச்சிமுறையில் அவைகள் தோன்றிப் பெருகின அதுபோலவே திருமடங்கள், மக்கட் குழுக்கள் முதலியவையும் படிப்படியாக வளர்ச்சி முறையில் பெருகி வளர்ந்தன. திருக்கோவில்களில் திருவுருவ வளர்ச்சியும் ஆருயிர் வளர்ச்சியும் படிமுறையில் வளர்ந்தன. முதற்கண் திரு

* 12-5-57-இல் நடைபெற்ற தூத்துக்குடி, சைவசித்தாந்த சபையின் 73-ஆம் ஆண்டு நிறைவு விழாவில் தலைமை தாங்கிய பேரூர் தமிழ்க் கல்லூரித் தலைவர் திரு. சி. எம். இராமச்சந்திரன் செட்டியாா அவர்கள் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம்.

வுருவங்கள் தண்ணிழல்தரும் திண்ணிய மரத்தடியிலேயே தோன்றின. பின் அவ்விடங்களில் திருக்கோவில்கள் எழுப்பிக் கப்பட்டன. அவை முதற்கண் செங்கற்றளிகளாகவும், பின்னர் கருங்கற்றளிகளாகவும் அமைந்தன. பின்னர் நாள்விழாவுடன் திருவிழாக்களும் தோன்றின. எல்லாம் சமயவுண்மைகளையும் வரலாறுகளையும் அடிப்படையாகக்கொண்டு திகழ்வவாயின. சடங்குகளும் பொருளுண்மை யுணர்த்துவன.

'தற்பொழுது அறங்காப்பாளர்களும் உள்ளுறைப் பொருளை யறியாமல் வெளிநாட்டங்களையே போற்றுகிறார்கள். பொருள் விளங்காத சடங்குகளால் யாருக்கு என்னபயன்? பாமரமக்களை மகிழ்விக்கச் செய்யும் ஆடல்பாடல்களினால் அறிவு உலகம் சிரிக்குமே யன்றிப் போற்றுதல் செய்யாது. கோயிலினுடைய வருவாயிலிருந்து இந்த ஆடம்பரச் செலவுகளுக்குச் செய்யும் வீண்விரயங்களை நிறுத்திப் பண்பாடு விளங்கும் ஆன்மீக வேலை களில் ஈடுபட்டால் நலமாக விருக்கும்.'

சீர்திருத்தம்

களைபிடுங்காவிட்டால் நன்செய்க்குக் கேடுவரும். அது போலக் கோவில்களில் நடக்கும் பொருந்தாச் செயல்களால் பல தீமைகள் உண்டாகின்றன. அவற்றை நீக்கி நன்முறைகளை மேற்கொள்ளுதல் வேண்டும். சமயவுண்மைகளைத் தாய்மொழி யில் அமைத்து யாவர்கரும் எளிதாய்ப் புரிந்து கொள்ளும்முறை யில் போதித்தலே வேண்டும். மேலும் பழமைக்குப் பெருமை யும் புதுமைக்குச் சிறுமையும தருகிறார்கள். இதனை உமாபதி சிவம் அருளிய திருப்பாட்டு வருமாறு :

"தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா இன்று
தோன்றியநூல் எனும் எவையும் தீதாகா"

என்று கூறி இருக்கின்றதை நாம் உணரவேண்டும். நமது சங் கங்கள் போற்றிவரும் பல கொள்கைகளை மாற்றித் தற்கால விஞ்ஞான முறைகளையும் அவைகளோடு இணைத்து மக்களுக்குப் பயன்படும்படியான கோட்பாடுகளையும் நாம் நிலைநிறுத்த வேண்டும். அப்போதுதான் உண்மையான சேவை செய்தவர்கள் ஆவோம் உண்மையான சமயிகளாகவும் ஆவோம்.

சில மாதங்களுக்குமுன் மத்திய பிரதேசத்தில் சமயமாற் றத்தைக் குறித்து ஒரு சோதனைக் குழு ஏற்படுத்தப்பட்டது. அதில் விவிலியர்கள் செய்யும கணக்கற்ற தீங்குகளைப் பற்றி விசாரித்து அறிக்கை வெளியிடும்படி ஆணையிடப்பட்டது. அவ் விசாரணை ஓர் உயர்தர மன்ற நீதிபதியின் கீழ் நடைபெற்றது.

வெளி நாட்டார்கள் சிறப்பாக அமெரிக்கர்கள் நமது நாட்டு மக்களைச் சிறப்பாக ஆதிவாசிகளை விவிலியத்திற்குச் சேர்த்துக் கொள்ளச் செய்துவரும் முயற்சிகள் சான்றுகளோடு எடுத்துக் கூறப்பட்டன. அவர்கள் வெளியிட்ட அறிக்கையின்படி வெளி நாட்டிலிருந்து வந்த தொகைகளும், ஆட்களும் அளவிறந்தன. இங்கே சில புள்ளிகளை மட்டும் எடுத்துக் கூறுவோம்

I. வெளி நாட்டிலிருந்து இந்திய மிஷனரிகள் பெற்ற தொகை (1950—54) — ரூ. 29·27 கோடி

| | | | |
|---|---|---|---|
| அமெரிக்கா | .... | 20·68 கோடி | |
| கானடா | ... | 1·67 ,, | |
| பிறநாடுகள் | .... | 1·83 ,, | |
| மொத்தம் | .... | | 24·18 |
| இங்கிலாந்து | .... | 4·83 கோடி | |
| மற்ற இங்கிலீஷ் பிரதேசங்கள் | | ·25 ,, | |
| மொத்தம் | .... | | 5·09 |
| ஒட்டு மொத்தம் | .... | | 29·27 |

II. உலக முழுவதும உள்ள கிறித்தவர் தொகை:

| | | | |
|---|---|---|---|
| ரோமன் கத்தோலிக் | .... | 42·3 | கோடி |
| பிராட்டஸ்டென்ட் | .... | 20·9 | ,, |
| மொத்தம் | .... | | 63·2 |

III. இந்தியாவில் வேலை செய்யும் வெளிநாட்டு மிஷனரிகளின் தொகை:

| | | |
|---|---|---|
| 1940 | ... | 5417 (இந்தியா & பாகிஸ்தான்) |
| 1951 | ... | 4377 (இந்தியா மட்டும்) |
| 1955 | .... | 4877 ,, |

மத்திய பிரதேசத்தில் மட்டும் தற்போது 480 மிஷனரிகள் வேலை செய்கிறார்கள்.

IV. மத மாற்றம்:

பள்ளிகள், ஆஸ்பத்திரிகள், அனாதை ஆசிரமங்கள் இவைகளின் மூலம் மதமாற்றம் நடைபெறுகின்றது. ஒரு குஷ்ட ரோக ஆஸ்பத்திரியில் மட்டும் 1947 முதல் 1954-க்குள் 154 பேர் கிறித்துவத்தில் சேர்க்கப்பட்டனர். இவ்வாஸ்பத்திரிக்கு

அரசியலார் வருஷம் ஒன்றுக்கு 26000 ரூபாய் உதவி தருகிறார்கள். பொறுப்பு யாருடையது? கூற வேண்டுமா?

இப்படிப்பட்ட நிலைகளைப் பெருமை பொருந்திய இந்தச் சபையார்கள் ஆராய்ந்து தக்க வழிகளை ஏற்படுத்த வேண்டும். நமது சமயப் பெரியார்களோ பலவகையாக வரக்கூடிய உதவிகளைக் கோருவதும் இல்லை. பெறுவதுமில்லை. உதாரணமாகத் தற்போது மத்திய அரசியலாரிடமிருந்து நல உரிமைச் சங்கங்களுக்கும், ஹரிஜனச் சேவைகளுக்கும் கோடிக்கணக்கில் பணம் செலவழிக்கப்படுகின்றது. அந்தப் பணத்தில் பெரும் பகுதி கிறிஸ்துவ சேவையாளர்களுக்குப் போய்ச் சேருகின்றது. நம்முடைய மக்களோ அதைப்பற்றிக் கவலைப்படுவதே இல்லை. மேலும், கிறிஸ்துவப் பள்ளிகளுக்கும், மற்ற நிலையங்களுக்கும் கணக்கற்ற தொகைகள் கொடுக்கப்படுகின்றன. நம்முடைய சமூகங்கள் மிகப் பெரியவையாக இருந்தபோதிலும் அவர்களைப் போலச் சமபங்கும் கிடைப்பதில்லை. இந்தக் குறை நம்முடைய ஊக்கமின்மையால் ஏற்படுகின்றதே தவிர நாட்டில் பொருள் இல்லை என்ற காரணத்தினால் அல்ல. நம்முடைய வெளிற்றுத் தன்மை நம்மிடம் வரக்கூடிய திருமகளையும் உதறித் தள்ளி விடுகின்றது. நமது சமயப் பணியாளர்கள் இந்த வகையில் நன்கு ஆராய்ந்து பெறக்கூடிய உதவிகளைப் பெற முயல்வதே நலமாகும்.

இனி, மடங்கள் தாம் செய்யக் கடமைப்பட்டிருக்கும் செய்திகளைச் செய்கின்றனவா? சில சொற்பொழிவுகளை நிகழ்த்தி வைத்தாற் போதுமா? அல்லது உணவு இட்டால் போதுமானதா? சில மாணவர்கட்குச் சமயக் கல்வி கற்பித்தால் போதுமானதா? ஒருக்காலும் போதுமானதல்ல. மற்றைச் சமயத்தார்கள் ஏழை அனாதைகளுக்குக் கல்வி கற்பித்து அன்னார்களைச் சமய ஊழியர்களாக ஆக்குவதை நேரில் கண்டிருக்கிறோம். நம்முடைய மடாதிபதிகள் என்ன செய்துவருகிறார்கள்? இவர்கள் உண்மையாகப் பாடுபட்டால் பிச்சை எடுக்கும் இழிவுச் செயலையே நாட்டிலிருந்து விலக்கி விடலாம். சமயத் தொண்டர்கள் இல்லை என்ற பேச்சையே நீக்கிவிடலாம். உண்மையாகப் பாடுபடக்கூடிய எண்ணம் இவர்கட்கு இருக்குமாகில் நாடு எவ்வளவு விரைவாக முன்னேறிவரும்? இவ்வாறு செய்யும்போது நமது நாடு வேறு நாடாகவே ஆகிவிடும். இதிகாசங்களிலும் புராணங்களிலும் கூறுகின்ற நாடு மீண்டும் நம்மிடை தோன்றிவிடும். அப்படிப்பட்ட கனவு இனி நனவாக வேண்டுமென்று அம்மையப்பனை வழுத்துவோமாக! வணக்கம்.

# கம்பன் காவியநடை

[திரு. ச. கணபதி முதலியார், எம். ஏ., எல். டி.]

(செல்வி சிலம்பு கூக, பரல் கூ. சசஅ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

ஆரண்ய காண்டம் இராமன் சீதையோடு காடு புகுந்ததையும், பஞ்சவடியில் அவர்கள் இலக்குவன் காவல் நிற்க வதிந்ததையும், சூர்ப்பணகை அவண் வந்ததையும், இராமனைக் கண்ணுற்று மையல் கொண்டதையும் அவள் இராவணனுக்குச் சீதையின் அழகை எடுத்து விரித்துரைத்ததையும், இராவணன் அவள்பால் தணியாக் காதல் கொண்டதையும், மாரீசன் துணைகொண்டு, சீதையைக் களவாடியதையும் கூறும் பகுதியாகும். இக் காண்டம் காவியத்தின் இடைப்பகுதியாகும் அயோத்தியா காண்டத்தில் தூவிய வித்து இக் காண்டத்தில் நிலத்தில் நன்ருக ஊன்றிற்று. சூர்ப்பணகை என்னும் இராவணனின் உடன்பிறந்தாள் அவ் வித்து மேலெழுந்து வளர நீர் வார்த்தாள். அவள் அன்றலர்ந்த செந்தாமரை போன்ற முகத்தானைத் தீய ஊழ்வலியால் கண்டாள். விற்கலை வல்லுநனை இராமனை வற்கலை அடைய அஃது எங்நோற்றதோ வென்ருள; கொண்டாள் அவன் மாட்டு மீளாக் காதல்; எடுத்தாள் எழிலுருவம்; மொழிந்தாள் காதல் மொழி; அடைந்தாள் மானபங்கம் இலக்குவனல்; சென்ருள் இராவணன் பால்; பூண்டாள் வஞ்ச நெஞ்சம்; பேசினள் அவன்பால் சீதை வடிவெல்லாம்; வருணித்தாள் சீதையின் நல்லுறுப்புகளை யெல்லாம். சீதையின் நுதல் வில்லொக்கும்; விழி வேலொக்கும்; பல் முத்தொக்கும்; இதழ் பவளத்தை ஒக்கும். இவ் வுவமைகளெல்லாம் நெல்லுக்கும் புல்லுக்குமுள்ள உவமைகளே; சொல்லால் ஒவ்வாதன. நாளை நீயே நேரிற் காண்டி என்ருள். அவளைப் பெற்ருல் எங்ஙனம் வைத்து வாழ்தி; சீதை எனும் மானை நீ கொண்டாடப் பெறுதி; இராமப் பெம்மானை நான் கொண்டாட எனக்குத் தருதி என்ருள். செவி மடுத்த தசக்கிரீவன் தங்கை சொல் மிக்க மந்திரமில்லை என உள்ளத்திற் கொண்டான். கரனை மறந்தான்; தங்கை மூக்கை அரிந்தவனின் உரனையும் மறந்தான்; தான் அரிதிற் பெற்ற வரனையும் மறந்தான். ஆனல் கேட்ட மங்கையை மறந்தானில்லை. சீதையைப் பெற மாமன மாரீசனை நினைந்தான். மாமனும் மனமின்றி, மிதிலைப் பொன்னிற்கு முன் பொய்ம்மானைக் காட்சி அளித்தான். மான்விழியாள் மானைப்பிடித்துத் தாவென, மெய்ம்மொழியால் எய்யு மம்போடு பின் தொடர மாரீசமான் 'இலக்குமணு அபயம்' எனப் பொய்க் குரலெழுப்பி வீழ 'தேவர் செய்தவத்தினல்' இளைய செம்மலும்

சீதையைத் தனியே விட்டுப் பிரிந்தான். அந்ஞான்று இராவணன் தான் கருதிய அப்பரிசே செய்தான். அவன் வளைந்த யாக்கையனாய், தவத்தின மாலையனாய், ஆமையிருக்கையனாய் வேடங் கொண்டு பொற்பிற் கரசியும், கற்பினுக்கணியுமான சீதையைக் கண்டான்; அவள்பால் காதற்பிச்சை கேட்டுப் பெரிதும் இரந்தான். சீதையோ பிறர் நெஞ்சுபுகாத இயல்பினள்; எனவே அவனைக் கண்ணெடுத்தும் பார்த்திலள். முன்னியது முடிக்க எண்ணிய மூர்க்கன் அவளை நிலத்தொடு கீண்டெடுத்துச் சென்றனன். இராம இலக்குவர்களை 'சேக்கையில் பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கும்' தன்மையனான சடாயுவெனும் கழுகின் காவலன் எதிரிட்டான்; விடாப் போர் செய்திட்டான்; இறுதியில் இராவணன் அவனது சிறகுகளை வாளால் வெட்டிவிட்டான்; அவனும் இராமன் வருமளவும் ஆவி பிடித்திட்டான்.

அயோத்தியா காண்டத்தில் மந்தரை இராவணன் வீழ்ச்சிக்குக் கால்கோள் எடுத்ததை ஆரண்ய காண்டத்தில் சூர்ப்பணகை பின்பற்றி உடன்பிறந்த இராவணனைக் கொல்லும வியாதியாய் அவனைப்பற்றி நின்றாள் என்பது இவண் குறிக்கொளற்பாற்று. கம்பன் காவியக்கதைப் போக்கு நெறியில் கூனியும் சூர்ப்பணகையும் இரு திருப்பு மையங்களாக விளங்கினார்கள் என்பது அங்கை நெல்லியாம்.

கிட்கிந்தா காண்டம் இராம காவியப் போக்கில் தொடர்பில்லா, பயனில்லா உறுப்பு எனச் சிலர் கூறுவர். இக் காண்டம் ஓர் இன்றியமையா உள்ளுறுப்பு மன்று எனக் கருத்தில் கொள்வாரும் உளர். எனினும் அதனை முற்றிலும் இராம காதையினின்றும் நீக்குதல் இயலாது. இக் காண்டமே சொல்லின் செல்வனாகிய அனுமனைத் தருவது; வாலி சுக்கிரீவனாகிய இரு குரக்கினத் தலைவர்களைப்பற்றிக் கூறுவது. வாலி பெண்பிழை செய்தவன் அவனைக் கோறல் கடுங்கோலன்று; அறநெறியுமாகும் என்றெண்ணிச் சுக்கிரீவன்பால் அன்பு பூண்டு அவனை விண்ணுலகடையச் செய்தான் இராமன். அன்றியும் வாலி இராவணனை வென்ற வீரன். அவனும் இக் காவியத்தில் உரிய இடத்தைப்பெறுதல் வேண்டும். மற்றும் இக் காண்டம் கம்பனின் வியத்தகு வழக்காடும் ஆற்றலை, உரையாடும் திறனை எடுத்துக்காட்ட ஓர் சிறந்த வாய்ப்பை நல்குகிறது. அதனை இராமன் வாலி ஆகிய இருவர்களின் உரையாடல்களை வைத்து நன்கு உணர்கிறோம். இராமனுக்கு இராவணனோடு போரிடப் படைகள் வேண்டும். சுக்கிரீவன், அனுமன், அங்கதன் உள்ளிட்ட குரக்கின வீரர்கள் இராமனுக்குப் படைத்தலைவர்களாகவும் தூதுவர்களாகவும் பணி செய்துள்ளனர். இக் காரணங்

களை எல்லாம் மனதிற்கொண்டுதான் இராமன் சுக்கிரீவனை கிட்கிந்தைக்கு இறையாக்கியதுங்கூட எனக்கொள்ளலாம்.

சுந்தர காண்டமே கம்பனுடைய ஆறு காண்டங்களுள்ளும் அழகுடைக் காண்டமாகப் பெரிதும் மிளிர்வது. கம்பன் கதையும் இங்கிருந்துதான் கங்காப் பெருவெள்ளம்போல் கம்பீரமாக ஓட ஆரம்பிக்கின்றது. ஆரியர்க்காகக் கடல் கடந்து முதல் தூது சென்றவன் அனுமனெனும சுந்தரனே. 'கனிக்கின்றாரலாற் கவல்கின்ற ரொருவரைக் காணேன்' என இராவணனின் ஆட்சித் திறனைக் கண்டு வியந்தவனும் இந் நல்லறிவாளனே. 'ஓவியம் புகையுண்டதே யொக்கின்ற வுருவாள்', 'விருந்து கண்டபோதென்னுறுமோ வென்றழுங்கும்' என்று சீதையின் மன நிலைமையையும் அறிந்தவன் இவனே. 'அந்தணரில்லென' வீடணன் இல் பொலியக் கண்டவனும் இவனே; தவம் தவஞ் செய்து பெற்ற திரிசடையாம் ஒரு சடையைக் கண்டுவந்தவனும் இவனே.

" விற்பெருந் தடந்தோள் வீர வீங்குநீ ரிலங்கை வெற்பில்
நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டே னல்லேன்
இற்பிறப் பென்பதொன்று மிரும்பொறை யென்பதொன்றும்
கற்பெனும் பெயரதொன்றுங் களிநடம் புரியக் கண்டேன் "

என்று இராமன் திருவடி வீழ்ந்து வணங்கியவனும் இவனே. இக் காண்டம் அனுமனின் அளவில் ஆற்றலையும், தூதுரைக்கும் செவ்விய பண்பினையும, சீதையின் கற்பின் மாட்சியினையும் எடுத்துச் சொல்லவல்லது.

யுத்த காண்டமே கம்பன் காவியத்தின் இறுதிக் காண்டமாகும். கம்பனின் நாடகப் பண்புகளையும், காவிய மாண்புகளையும், யுத்தத்தை வருணிக்கும் திறனையும், கற்பனை சக்தியையும், பிற கவித்திறமைகளையும் இக் காண்டத்தில்தான் மிகுதியாகக் காண்கின்றோம். யுத்தவருணனையில் ஹோமரையும் (Homer) கம்பர் வென்றிட்டார் என்று கூறும்படியாகப் போர் வருணனை செய்திருக்கின்றார்.

இராவணனின் மந்திரசபை, கும்பகர்ணன் வீடணன் அறவுரை, விடணன் அடைக்கலம், அங்கதன் தூது, கும்பகர்ணன் விடணன் யுத்தகளச் சந்திப்பு, இந்திரசித்துப் போர், இராமன் இராவணப் போர் முதலியன கம்பனின் ஒப்பது மிக்கதுமில்லா அறிவுச் சிகரங்கள யுத்த காண்டத்தில் இராவணன் சீதை உரையாடல், மாயாசனகப் படலம், மாயா சீதைப்படலம் முதலியன இடை இடையே புகுத்தப் பெற்றுள்ளன. காரணமின்றிக் காரியம் நிகழா. இப் படைப்புக்களுக்கும் காரணம் உண்டு. காண்டம் முற்றிலும் போர்க்களமே வருணிக்கப்படின் படிப்போர்

நெஞ்சம் துன்புறுமன்றோ; சலிப்படையுமன்றோ! எனவே சலிப்பை மாற்றவும் மன அமைதியை நிலைநாட்டவுமே இப் படலங்களைக் கம்பர் படைத்தார் என எண்ண இடமிருக்கின்றது.

வீடணன் கூறுவதாக இரணியன் வரலாறு கம்பன் காவியத்தில் இடம்பெற்றுள்ளது. வேண்டிடின் இதனை நீக்கி விடலாம். ஆனால் கம்பன் விஷ்ணு மூர்த்தியின் வரலாறு என்று குறித்து ஆசைபற்றி இக் கதையினையும் காவியத்தில் ஒட்டிவைத்திருக்கிறார் எனலாம். மற்றவையெல்லாம் காவியத்தோடு நன்கு இணைக்கப் பெற்றுள்ளன; பின்னியும் கிடக்கின்றன. பரதன் நற்பண்புடையவன்; இராமன்பால் எல்லையிலா அன்பு கொண்டவன் தாதை உதவிய தாரணி தன்னைத் தீவினை என நீத்தவன்.

"ஆயிர மிராமர் நின்கே ழாவரோ தெரியி னம்மா."

என்றும்,

"நுங்கள் மர ஜர் புகழ்க ளெல்லா முன்புக ழாக்கிக் கொண்டாய்."

என்றும் குகனால் பாராட்டப்பட்டவன். இலக்குவனும் பரதனும் இராமனின உடன் பிறப்பாளர்கள்; பின் தோன்றியவர்கள். பரதன் முடிதுறந்த மூதறிவாளன்; உலகவர்க்கு ஓர் நற்பண்பைப் போதிக்கப் பிறந்தவன். இலக்குவன் இராமனின் உயிரெனப் பிரியா நற்றோழன். அவன் இராமனோடும் சீதையோடும் காடு புக்கது களத்தில் இந்திரசித்தைக் கொல்வதற்காக. குகனும் சடாயுவும் இராம காவியத்தில் இடம்பெற்றது எற்றிற்காக வென்று வினா எழுவதும் இயல்பாம்; விடையிறுத்தல் வேண்டுவதே. குகன் கஙகையிருகரையுடையான்; கணக்கிறந்த நாவாயான; அவனை ஒரு வேடன், ஏழை, ஏதிலன் என்று எண்ணாது அவனைத் தன் உயிர்த்தோழனென்றும், சீதையை அவனுக்குத் தோழி என்றும், இலக்குவனை அவனுக்குத் தம்பி யென்றும் கூறியது இராமனின் உயர் மனிதப்பண்பையும் சகோதர மனப்பான்மையையும் (Brotherhood of man) எடுத்துக் காட்டுவதற்கே யாமென்க. சடாயு அருணனின் புதல்வன்; சம்பாதியின் தம்பி; தசரதனின் யாத்த நண்பன். தசரதன் இறந்ததைக் கேட்ட ஞான்று,

"புரவலர்தம் புரவலனேபொய்ப் பகையே
மெய்க்கணியே புகழின்வாழ்வே
இரவலரு நல்லறமு யானுமினி
என்படநீத் தேகி னயே."

என்று உளங்குலைந்து நிலைமயங்கிக் கண்ணீர் சோர நின்றவன். இராமன், இலக்குவன், சீதை ஆகிய மூவரையும் தாய்ப்பறவை

தங்குஞ்சுகளைக் காப்பதுபோல் பஞ்சவடியில் பாதுகாத்து வந்தவன். இராவணன் சீதையைக் கட்புலனுகா விட்புலனில் எடுத்துச் சென்றுழி அவனேடு அடுபோர் செய்து உயிரை நீத்தவன். தசரதனுக்கும் தனக்கும் ஏற்பட்டுள்ள நட்பின் திறத்தைப் புலப்படுத்துவதற்கும், சீதையை இராவணன் எடுத்துச் சென்றுன் என்பதை இராமனுக்குச் சொல்வதற்குமென்றே இவன் கதையில் இடம்பெற்றுன் என்று கருதுதல அமைவுடைத்தாம்.

இதுகாறும் கம்பன் காவியத்தின் பொருள் செல்லும் நெறியைக் கண்டோம் இனி அவனுடைய காவியத்தின் சொல் வைப்பு நெறியைக் காண்போம். செய்யுள்நடை என்பது புலவன் தான் கூறுவான் நினைந்த கருத்துக்களைப் பிறர்க்குப் புலப்படுத்தப் பயன் படுத்திய சொற்போக்கின் நெறியே நடை (Style) எனப்படும் செய்யுள் நடையைப்பற்றி மேல்நாட்டவரும் கீழ் நாட்டவரும் ஒருஙகே நன்கு கூறியுள்ளனர். நடையைப்பற்றி 'குறள் நடை' எனும் எமது கட்டுரையில் விரிவாகக் கூறியுள்ளோம். அதன் இயல்புகளை ஆண்டுச் சென்று கண்டு கொள்க. ஆண்டுக் கூருது ஒழிந்தவைகளை இவண் கூறுவாம்.

L. H. ஹட்ஸன் (Hudson) 'இலக்கியம் பயிலுதற்கு முன்னுரை (Introduction to the Study of Literature) என்று தாம எழுதிய ஆங்கிலப் புத்தகத்தில் இலக்கிய நடையின் இயல்புகளையும் பண்புகளையும் விரித்துரைத்துள்ளார். இலக்கிய நடை என்பது ஒரு புலவனுக்கு ஒருநாட் காலே எளிதிற் கிடைக்கும் பொருளன்று அவன் பன்னெடுங் காலமாகப் புத்தகப் புழுவாயிருந்து பல புத்தகங்களைப் படித்தும், பல ஆசிரியர்களை அடுத்துப் பிற்றை நிலே முனியாது கற்றும், அவர்களது பேச்சிலும் எழுத்திலும் படிந்து ஊறிக்கிடந்த பின் தனக்கெனக் கிடைக்கும் சொல்லமைப்பு ஆற்றலே நடை எனப்படும். அவன் பல புத்தகங்களைப் படித்தானேனும, பல ஆசிரியர்களின் சொற்களினும் எழுத்துக்களினும் நன்கு தோய்நதானேனும் அவன் சொல் லமைப்பு முறை அவனுக்கே உரியதாய் அமைவதே இலக்கிய நடையின் முதற் பண்பாகும். அந் நடை அப் புலவனுக்கே உரியதாய், அவனது நம்பிக்கைகளையும் உணர்ச்சிகளையும் எடுத்துக் காட்டும் கண்ணுடியாய் அமையும் என்றும் கூறுவர் ஹட்சன். இதனை ஆஙகிலததில் 'Personal or Individual aspect of style' என்பர். செய்யுள் நடைக்கு இலக்கணம் வகுத்த மேலே நாட்டு இலக்கியச் செல்வர்களும் இப் பண்பினையே பெரிதும் வலியுறுததியுள்ளனர். சிலவற்றை அடியிற் குறிக்கின்றும்:

'Style is the writer's distinctive mode of expression'

(D. W. Walters)

'Style is the personal idiosyncracy of expression by which we recognize a writer'

(The problem of style: Middleton Murry)

'Style is not the coat of the writer but his skin'

(Carlyle)

'Style is the man that is the unconcious expression of the writer's own Personality. It is the very Soul of one man, reflecting as in a glass the thoughts and feelings of humanity'

(W. G. Long)

'Style is an index of Personality' (Hudson)

அடுத்து, நடை காலமாறுதலுக்கேற்பக் காலந்தோறும் மாறும் இயல்பினையுடைத்து என்றும் கூறுவர் அவ்வாங்கில எழுத்தாளர். இத் தன்மையினை ஒருவாறு சிறிது விளக்குவாம். சங்ககாலத்து ஒரு புலவனின் சொற்கிடக்கைமுறை இடைக் கால அல்லது தற்கால ஒரு புலவனின் சொல்வைப்பு முறையைத் தழுவியதாக இராது. சங்ககாலத்து நற்கீரரது நடை இடைக் காலச் சேக்கிழாரது நடைபோல் அமைந்திராது; தற்கால காலஞ் சென்ற கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்களின் நடை சங்ககாலக் கபிலபரணரது செய்யுள் நடைபோல் வாய்க்கப் பெற்றிராது. கார்லைல் தாம் எழுதிய நடைப்படி எழுதியிருக்கமாட்டார் அவர் அடிசன் காலத்துப் புலவராக இருந்திருந்தால்; அங்ஙனே அடிசனும். எனவே ஒரு புலவனது எழுத்து நடைக்கும் உருண்டோடும் காலத்திற்கும் தொடர்புண்டு என்பது இதனானே புலனாகின்றது. இவ் வியல்பை 'Historical aspect of style' என்பர்.

மூன்றாவது இயல்பு சொல்லைப்பற்றியதே. சொல்லே புலவனுக்கு மந்திரக்கோல். அதனை வைப்பிடமறிந்து அழகுபட நயமுற வைத்தே கற்போர் உள்ளத்தைப் பிணித்தல் வேண்டும். சொற்களைத் தேர்ந்தெடுத்துப் பாக்களில் வைத்தல் வைரக் கற்களைத் தேர்ந்தெடுத்து வைர மாலையை ஆக்குதல் போலாம். இவ் வணி நலத்தை 'Technical or rhetorical aspect of style' என்பர். புலவன் செஞ்சொற் கதிபதியாகத் திகழ்தல் வேண்டற்பாலது. அவன் சொல்லின் பொருளையும் நயத்தையும், ஆழத்தையும் நன்கு உணர்தல் வேண்டும்.

அவன் நார் கொண்டு பாய்முடைபவனல்லன்; இழை கொண்டு ஆடை புனைபவனுமல்லன். அவன் நேரின மணிகளைப் பொறுக்கி நிரல்பட வைக்குமாறறிந்து வைக்கும் பொற்கொல்லனைப் போன்றவன். சொல் திறனாய்வு அவனுழை நனி காணப்

படுதல் வேண்டும். அவன் சொல்மாயம் அல்லது சொல் மயக்கம் விளைவிப்பவனாக இருத்தல் கூடாது. சொற்றெளிவு அவனுக்கு இன்றியமையாதது குறித்த சொல்லை, குறித்த இடத்தில், சிறந்த சொல்லை சிறந்த இடத்தில் (Right use of right words) வைக்கும ஆற்றல் படைத்தவனாக விளங்குதல் வேண்டும். இந் நுண்மாண் நுழை புலத்தை 'Intellectual element' என்று கூறுவர். அன்றியும் புலவன் மென சொல்லின் நயத்தையும் வன்சொல்லின் திறத்தையும் பிரித்தறியும இயல்புடையோனாகவும் காணப்படுதல் வேண்டும். எவ்விடங்களில் மென்சொற்களைப் பயன்படுத்துதல் வேண்டும். எவ்விடங்களில் வன் சொற்களை எடுத்தாளுதல் வேண்டும் என்பதையும் அவன் தெரிதல் வேண்டும். போர்க்கள வருணனையில் மென்கணத்தையும இன்பச்சுவை பயக்க வேண்டிய காதல் கட்டங்களில் வன் கணத்தையும் எடுத்தாளுதல் புன்மையுடைத்தாம் புலவனின் அகததே மண்டிக்கிடக்கும் நல்லுணர்ச்சிகளைக் கற்போர் மனத்திலும் எழச் செய்யுமாறு உணர்ச்சிகளைத் தூண்டும சொற்களை அறிந்து செய்யுட்களில் பெய்தல் கவிமாட்சி யுடைத்தாம். உணர்ச்சி வேகம் சொற்களில் ததும்பி ஓடுமாறு சொற்களை அமைத்தல் நற் கவிஞனின் நற்பண்பாம் இதனை 'Emotional elements' என்பர். (There are the emotional elements of force, energy, suggestiveness or the elements by which a writer conveys not only his thought but his feeling, stimulating in his reader sentiments and passions akin to his own and calling up vivid pictures of things he wishes his reader to see with him) இனி புலவன் ஓசை நயங்களை வெளிப்படுத்தும் வண்ணம் சொல்லிசை நுணுக்கங்களை (Music of words) அறிந்து சொல் சேர்க்கை முறையைக் கையாளுதல் வேண்டும். சொற்கள் கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய் (Charm) அழுத்தங்கள் (Stresses) உடையனவாய் இன்னோசை பயக்கும் நெறியில் அழகுபட (Beauty) அமைக்கப்படுதல் வேண்டும். இச் சொல்லிசைப் பண்பினை 'Aesthetic element' எனக் கூறுவர். (There are the elements of music, grace, beauty charm which make a style a pleasure in itself apart from the thought and feeling of which it may be the vehicle)

கமபன் காவியத்தில் இந்நடை இயல்புகள் எல்லாவற்றையும் ஒருங்கே காணலாம். ஆனால் கம்பன் விழுமிய கருத்துக்களையும் சொல்லமைப்பு முறைகளையும் தானே இராம காவியத்திற் கென்று படைத்துக் கொண்டானில்லை. திருக்குறளில் பல அகப்பனபகள் முகந்து கொண்டான்; சீவகசிந்தாமணியில் சில

அகப்பைகளை அள்ளிக் கொண்டான்; எனினும் பொருள் அமைப்பு முறையிலும் சொல்லமைப்பு முறையிலும் தனக்கென ஒரு நெறியை வகுத்துக்கொண்டான். பொருள் அமைப்புப் போக்கில் எடுத்துக்கொண்ட முறை அவற்கே உரியது. தான் கூற விழைந்த பொதுக் கருத்துக்களைப் பாட்டின் முதன் மூன்றடிகளில் கூறி நான்காவது அடியில் அப் பாட்டின் பிண்டப் பொருளாயுள்ள சிறப்புப் பொருளை அமைத்துக் கூறுவது அவனது நல்லியல்பு. முதல் மூன்று அடிகளும் அவ் வீற்றடிச் செல்வத்திற்கு அல்லது பேற்றிற்கு உறுதுணையாகப் பொருளைத் திரட்டித் தரும் பான்மையன. நான்காமடி சிறப்புப்பொருளை முடிந்த முடிபாகத் தாங்கி நிற்கும் அவ்வடி நினைவில் பதித்து வைத்தற்குரியதாக இருக்கும் ஒரு கவிஞனின் திறம் நினைவில் பதியவைத்துக் கொள்ளுதற்குரிய சீரிய கருத்துக்களடங்கிய விழுமிய அடிகளைத் தருதலிலே அமைந்திருத்தல் வேண்டும் என்பது மேல்நாட்டுப் புலவர்களின் கருத்து ராபர்ட் லிண்டு (Robert Lynd) என்பார் 'தற்காலப் புலவர்களின் பாடற் றொகுப்பு' (An Anthology of Modern Verse) என்னும் நூற்கு முகவுரை (Introduction) எழுதுங்கால் இக் கருத்தைத் தெளிவாக வெளிப்படுத்தியுள்ளார். (Memorableness after all, is one of the eminent qualities in literature we judge the greatness of an author largely for his genius for writting memorable passages) கம்பனின் ஈற்றடிகளெல்லாம் நினைவில் பதித்து வைத்தற்குரிய சிறந்த அடிகளாம் என்பது ஒருதலை.

(தொடரும்.)

## பெரிய வீரட்டனூர்!

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

வணங்குவார்க் கேமம் வைத்தார்
　　வள்ளல்போல் வழங்க வைத்தார்
இணங்குவார்க் கேற்றம் வைத்தார்
　　இல்லறம் செழிக்க வைத்தார்
உணங்குவார்க்(கு) ஊற்றம் வைத்தார்
　　உயர்ந்தவர்க் குயர்வும் வைத்தார்
பிணங்குவார்க் கிணக்கம் வைத்தார்
　　பெரியவீ ரட்டனூரே!

# மறைமலைப்பேர் வள்ளலார் மாண்பு

[ஆசுகவி, கீர்த்தனை அரசு, சித்திரகவிச்சரபம், கணித சோதிட கலாநிதி, திருவையாற்றுப் புலவர்,

திரு. பி. வி. அப்துல் கபூர் சாஹிப்.]

(கலிவெண்பா)

சீராருஞ் செந்தமிழ்ச் செல்வி தவமுருவாய்த்
தேராருஞ் சைவத் திருவுயிராய்—ஏராரும்
விண்ணுலகோர் வாழ்த்துமுயர் வேதா சலமெனும்பேர்
மண்ணுலகோர் சாற்றிடவே வந்துதித்த—புண்ணியவான்
ஆங்கிலமுஞ் செந்தமிழும் ஆரியமுங் கற்றுணர்ந்தே
ஓங்குபுகழ் பெற்ற உயர்செம்மல்—ஈங்குள்ள
பல்கலைசேர் பல்கழகந் தன்னிற் பணியாற்றி
பல்லவராள் பல்லா வரந்தனிலே—நல்லபொது
ஆன நிலைக்கழகம் ஆக்கி அறநூல்கள்
வான நூல் நீதி மருத்துவ நூல்—ஞான நூல்
அன்னியர்கள் நூல்பலவும் ஆய்ந்தே விழுப்பொருளைத்
தன்னரிய செந்தமிழாற் றுனெழுதி—மன்னியசீர்
வையகமே போற்றும் மணித்தமிழின் மாண்புமிக
கையவதைக் கண்டே நடைமுறையிற்—பையப்
பலபே ரவைகளிலே பாற்சினி போற்,[1]கோ
கிலமொத்த தன்குரலாற் கூவி—உலகினர்முன்
ஆரியமும் ஆங்கிலமுந் தெய்வமென ஆதரித்தோர்
வீரியத்தைப் போக்கியே மேலான—சீருயர்த்த
தண்டமிழ்த் தாயிரண்டு தாளினிலே வீழ்ந்திடச்செய்
கண்டகோ டாலியெனுங் கட்டுரையால்—விண்டுலகில்
எங்குந் தமிழ்மொழியின் ஏற்றம் உணரவே
கங்குல் பகலெல்லாங் கையாலே—தங்கமென
ஆறுபத்து நூலெழுதி அச்சியற்றி நந்தமிழர்
வீறுபெறத் தந்தபெரும் விற்பனனும்—நீறணிந்தே
அம்பலக் கூத்தன் அணிகழலைப் போற்றியபின்
சம்பந்த ரோடு தனிநால்வர்—அம்பொற்
பதம்போற்றிச் சைவப் பணியாற்றி நித்தம்
நிதிதேட எண்ணாத நெஞ்சிற்—பதவிகளை
நீக்கிப் பலமொழியில் நீதிமலி நூல்பல
தேக்கித் தொகுத்துச் சிறப்புறவே—ஆக்கிவைத்த

1. கோகிலம் - குயில்.

பொக்கசமே பூவுலகம் போற்றிடவா ஞெல்லாம்
தக்க தமிழ்ப்பணியே தான்புரிந்து—மிக்ககலை
கற்றோ ருயர்ந்த கவிவாணர் தங்களையே
உற்றார்போற் பேணி உதவிடுவோன்—கொற்றவரைக்
கண்டால் வணங்கான்பொற் காசுக்கே கையேந்தான்
விண்டமொழி மாறாத வித்தகனும்—தண்டமிழர்
மூன்றரசும் மூன்றவையும் முத்தமிழும் பாரறியச்
சான்று பகருந் தனிநாவான்—ஆன்றோர்கள்
வாயாற் புகழ்பேசும் வாய்மையான் வள்ளலென
ஓயாம லீயும் உளமுள்ளான்—தாயார்போல்
மாணவர்க்குக் கல்வி வளரவே பாடுபட்டோன்
ஆணவமில் லாத அணிமொழியான்—வீணர்களைத்
தண்டிக்கக் கூசாத் தறுகண்ணன் தன்னிடத்தில்
அண்டிவந்த யாவரையும் ஆதரிப்போன்—மண்டும்
பொறுமையே பூடணமாக் கொண்டோன்நாம்—கண்ட
மறைமலைப்பேர் வள்ளலார் மாண்பு.

## வேண்டுகோள்

(நேரிசை வெண்பா மும்மணிகள்)

முச்சகமும் போற்றும் மறைமலையார் முன்பெழுதி
அச்சிபற்று நூல்கள் அலகில்பல—இச்சகத்திற்
செந்தமிழில் ஆர்வமுள்ளோர் செம்பொனளித் தச்சியற்றித்
தந்திடுதல் தம்கடனும் சாற்று.

வள்ளல் மறைமலையார் பேராற் பலகழகம்
தெள்ளுந் தமிழ்வளரச் செய்வதே—ஒள்ளியசீர்ச்
செந்தமிழர் செல்வமுளார் செய்யுஞ் சிறந்தபணி
நந்தமிழ்த்தாய் நற்பணியாம் நாடு.

நாடு நலம்பெறவும் நற்றமிழ ரோங்கிடவும்
பீடுள்ள செந்தமிழே பேசிடவும்—கூடுவிட்டு
வானுலகு சென்ற மறைமலையார் செய்ததமிழ்
தானுயர்ந்து நிற்கும் தழைத்து.

# உள்ளுறையுவமமும் இறைச்சியும்

[திரு. கு. குமாரசாமி ஆச்சாரி, எம். ஏ.]

(செல்வி சிலம்பு ௩௧, மலர் ௪ ௩௩௩-ஆம் பக்கத் தொடர்ச்சி)

இறைச்சி இலக்கணம் :

1. "இறைச்சி தானே பொருட்புறத் ததுவே"

(தொல். பொருளி. ௩௫)

2. "இறைச்சியிற் பிறக்கும் பொருளுமாருளவே
திறத்தியல் மருங்கின் தெரியுமோர்க்கே."

(தொல். பொருளி. ௩௬)

3. "அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டலும்
வன்புறை யாகும் வருந்திய பொழுதே." (தொல். பொருளி. ௩௭)

4. "கருப்பொருட் பிறக்கும் இறைச்சிப் பொருளே." (அகம்.)

5. "கருப் பொருள் களனுக் சுட்டுரை பயின்ற
பொருட் புறத்தனவா மிறைச்சிப் பொருளணி." (மாற.)

ஒரு கூற்றின் சொற் பொருளின் வேறாய், அதன் புறத்தே குறிப்பிற் றோன்றும் பிறிதொரு பொருளே இறைச்சி எனப் படும்; (தொல் பொருளி. ௩௫). அது கருப்பொருளினடியாகப் பிறக்கும் (அகம், மாற.) "இறைச்சிப் பொருள் உரிப்பொருளின் புறத்ததாகித் தோன்றும பொருள் என்ற இளம்பூரணர், அஃதாவது நாட்டிற்கும், ஊர்க்கும, துறைக்கும் அடையாகி வருவது." என உரைப்பதை நோக்குக. இறைச்சி தலைவன் கொடுமை கூறும்வழி பெரும்பாலும் வரும். சிறுபான்மை அன்பினைச் சுட்டுமிடத்தும் வரும் (தொல். பொருளி. ௩௭) "இறைச்சி தானே பொருட் புறத்ததுவே" என்னும் சூத்திரத் திற்கு உரை கூறும் நச்சினார்க்கினியர், "இறைச்சியாவது உள்ள பொருள் ஒன்றனுள்ளே கொள்வதோர் பொருளாகலானும், செவ்வன் கூறப்படாமையானும், தலைவன் கொடுமை கூறும் வழிப் பெரும்பான்மை பிறத்தலானும் வழுவாயிற்று" என்பத னல் மேற்சொன்னது வலியுறும்.

'இறைச்சி' என்னும் சொற்பொருள்

இறைச்சி என்னும் சொல் கருப்பொருள் எனப் பொருள் படும். "புணர்ந்துடன் போகிய கிழவோன் மனையிருந்திடைச் சுரத் திறைச்சியும் வினையும் சுட்ட' (தொல். கற்பு எ) என்பத னுள் இறைச்சி என்பது கருப்பொருள் என உரையாசிரியர் இருவரும் கூறியிருக்கின்றனர்.

"இறைச்சிப் பொருள்வகை திறப்படத் தெரியில்
அங்கியற் பொருளே இணைவிலப் பொருளே
வன்புலப் பொதுப்பொருள் மென்புலப் பொதுப்பொருள்
பெருமைப் பொதுப்பொருள் விருந்துப் பொதுப்பொருள்என
இருமூன் றென்பர் தெரிநூற் புலவர்."

என்னும் வீரசோழிய உரை மேற்கோள் சூத்திரம் இறைச்சி என்னும் சொல் கருப்பொருளையே குறிக்கும் எனக் குறிப்பதை நோக்குக. இச் சொற்கு இப் பொருள் கொண்டதனால் இறைச்சி என்னும் உள்ளுறையும் கருப்பொருளடியாகவே தோன்றும் என்பது வெளிப்படையாம்.

இறைச்சியின் வகை—உடனுறை—(கொடுமை சுட்டல்)

இறைச்சி மூவகைப்படும் அவற்றுள் ஒன்று "இறைச்சி தானே பொருட் புறத்ததுவே" என்னும் சூத்திரத்தால் சுட்டப் படுவது; ஒன்றனைச் சொல்ல அதனுடனுறைவதாகப் பிறிதொரு பொருளும் தோன்றுவது. இஃது 'உடனுறை' எனப்படும். "உடனுறையாவது நான்கு நிலத்தும் உளவாய், அந் நிலத்துடனுறையும் கருப் பொருளால் பிறிதொன்று பயப்ப மறைத்துக் கூறும் இறைச்சியாம்" என்பர் நச்சினார்க்கினியர். இளம்பூரணர் "உடனுறையாவது உடனுறைவதொன்றைச் சொல்ல, அதனானே பிறிதொரு பொருள் விளங்குவது" என்றார் மணியினின்றெழும் ஓர் ஒலியலை தான் முடிவு பெறும் முன்னரே பிறிதோரலையை எழுப்பி விடுவதுபோல வாக்கியத்தின் பொருளை பிறிதொரு பொருளையும் உணர்த்துவதனையே 'தொனி' எனக் குறிப்பர் வடநூலார். 'அநுநாதம்' என ஆனந்த வர்த்தனர் குறிப்பதே இவ் வுடனுறையாம் என்பது இளம்பூரணர் கூறும் விளக்கத்தான் .ணரலாம.

'உடனுறை' என்ற சொற்கு 'நிலத்துடனுறையும் கருப் பொருள்' எனப்பொருள் கொண்டார் நச்சினார்க்கினியர். 'கூறும் ஒரு பொருளொடு உடனுறையும் பிறிதொருபொருள் (கருத்து)' எனப் பொருள் கொண்டனர் இளம்பூரணர்.

உதாரணம் 1

"இலங்கு மருவித் திலங்கு மருவித்தே
வானி னிலங்கு மருவித்தே தானுற்ற
சூள்பேணான் பொய்த்தான்மலை." (கலி சக.)

சூள் பொய்த்தவன் உள்ள இடம் வளங்குன்றியதாகும். "வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா யாக்கை பொறுத்த நிலம்," என்பது வள்ளுவர் வாக்கன்றோ! அங்ஙனம் வளங்

குன்றாது, பொய்த்தான் மலையகத்தே நீர் நிகழ்கிறது. அதனைக் கண்ட தோழியும் தலைவியும் 'இஃது என்ன வியப்போ?' என எண்ணினர். "இலங்கு மருவித்து" என வியந்து கூறுவதாயினும் அவர் தம் உள்ளக்கிடக்கை பிறிதொரு பொருளையும் கொள்வதாம். "இலங்கு மருவித்து" என்ற எண்ணம் எழுந்தவுடனே, "பொய்த்தற்குரியனோ பொய்த்தற்குரியனோ அஞ்சலோம் பென்றாரைப் பொய்த்தற்குரியனோ" என்னும் எண்ணமும் உடனெழுகின்றது. இதுவே உடனுறையாம். "இலங்கு மருவித்து" என்ற கருத்துடனே, "சூள் பொய்க்குமாறு செய்யான்" என்ற கருத்தும் உடன் மறைந்து நிற்பதைக் காண்க.

உதாரணம் 2

"மந்தியும் அறியா மரம்பயில் இறும்பின்
ஒண்செங் காந்தள் அவிழ்ந்த வாங்கண்
தண்பல் லருவித் தாழ்நீர் ஒருசிறை
உருமுச் சிவந்தெறிந்த உரனழி பாம்பின்
திருமணி விளக்கிற் பெறுகுவை
இருள்மென் கூந்த லேமுறு துயிலே." (அகம். ௭௨)

மலைக்குப் புறம்பானதும் அருவியின் அண்மையில் உள்ளதுமான ஓரிடத்தைக் குறித்து, 'ஆண்டுவருக' எனத் தோழி குறிப்பதனால், இது பகற்குறி நேர்ந்ததாம். 'பகலில் வருக' என்ற அவள் "காந்த ளவிழ்ந்த வாஙகண்" என்றமையால், அங்குப் பூப்பறிக்க வருவாராலும், "அருவித் தாழ் நீர் ஒரு சிறை" என்றமையால் அருவியாடவருவாராலும் 'பகற் குறியும் அரிது' என்பதைப் புலப்படுத்துகின்றாள் தோழி. 'பகலில் வருக' என இடஞ்சுட்டிக் கூறினாளாயினும் அவள் கருத்து 'வாராதே' என உணர்த்துவதேயாம. 'வருக' என அவள் கூறிய தொடரிலிருந்தே 'வாராதே' என்னும் கருத்தும் உடனெழுகின்றது. ஆதலின், இஃது உடனுறையாம்.

தலைவனை 'வாரற்க' எனக் கூறலாமா என்பதைச்
பிறிதொரு கருத்தும் புலப்படும் 'தலைவியைப்பற்றிய கருத்தை அறவே விட்டுவிடு' என்று சொல்வது பண்பாடன்று. ஆதலின், 'இனி இக் களவொழுக்கம் வேண்டாம்; வரைந்து கொள்க' எனத் தலைவனை வற்புறுத்துகின்றாள் தோழி. 'வரைந்து கொள்' என்னும் கருத்து 'வாரற்க' என்னும் கருத்துடனேயே உறைகின்றது. மணியினின் றெழுந்த ஓர் ஒலியலை பிறிதொரு அலையைத் தோற்றுவிப்பது போல 'வருக' என்னும் பொருளின் புறத்ததாக 'வாரற்க' என்னும் கருத்து எழுகிறது. அக் கருத்தின் புறத்ததாக 'வரைந்து கொள்க' என்னும் கருத்து எழு

கின்றது. இஃது "இறைச்சியிற்றோன்றும் பொருளு மாருளவே" என்னும் சூத்திரத்திற்கும் உதாரணமாம்.

உதாரணம் 3

"முத்தணி நீல மணித்தகட் டுள்இங்கு மொய்கொளவே
வைத்தணி சேர வகுத்தது போல்தஞ்சை வாணன்வையைப்
பைத்தணி வார்திரை தோய்கருந் தாட்புன்னைப் பாசிலைவெண்
தொத்தணி பூந்துறை வாவருள் வாயிருள் தூங்கிடையே."

(தஞ்சை - கோவை.)

பகல் வருவானை இரவு வருகெனக் கூறுகின்றாள் தோழி. எனினும், அவளது உள்ளக் கிடக்கை 'இரவில் வாரற்க, வரைந்துகொள்க' என்பதேயாம். "வெண்தொத்தணி பூந் துறைவன்" என்பதனால் அக் கருத்துப் பெறப்படும். 'வெண் தொத்தணிவதால் இருளினும் அவனைப் பிறர் அறிவர். ஆதலின், வரைந்துகொள்க' என்பது உய்த்துணரப் புலப்படுகின்றதன்றோ! 'வருவாய்' என்னும் பொருட்புறத்தே 'வாரற்க' என்பதும், அதன்புறத்தே 'வரைந்து கொள்க' என்பதும் தோன்றுதல் காண்க. இஃது, "இறைச்சிதானே பொருட்புறத்ததுவே" என்னும் சூத்திரத்திற்கு உதாரணமாம். "இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே" என்பதற்கும் உதாரணமாமாறு காண்க.

மேற்காட்டிய மூன்று உதாரணங்களுள் பின்னிரண்டும் முன்னதினின்றும் வேறுபட்டுள முன்னதனுள் குறிப்புப் பொருள் ஒன்றேயாகப் பின்னிரண்டனுள் ஒரு குறிப்புப் பொருளினின்று பிறிதொரு குறிப்புப்பொருளும் தோன்றுவது காண்க. பின்னிரண்டன் நிலையையும் தொல்காப்பியர் "இறைச்சி யிற்பிறக்கும் பொருளுமாருளவே திறத்தியல் மருங்கின் தெரியு மோர்க்கே" என்னும் சூத்திரத்தால புலப்படுத்துகின்றார். இறைச்சி என்னும் உள்ளுறையடியாகத் தோன்றும் பிறிதொரு பொருளுட இறைச்சி எனப்படும் என்பது இச் சூத்திரத்தின் கருத்தாம்

உடனுறை (அன்புறு தகுந சுட்டல்)

இனி வேறொருவகையைக் காண்பாம். "அன்புறு தகுந இறைச்சியுட் சுட்டலும் வன்புறையாகும் வருந்திய பொழுதே" என்னும் சூத்திரம் அதனை விளக்குகின்றது.

உதாரணம் 4

"துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப் பிடியூட்டிப் பின்னுண்ணும் களிறெனவும் உரைத்தனரே" (கலி) என்பது போல் வருவன இதற்கேற்ற உதாரணங்களாம் களிறு அக்

கலங்கல் நீரையும் பிடியே முதலில் உண்ணுமாறு செய்கின்றது. அதுபோல, தலைவன் தலைவியைத் தண்ணளி செய்வான் அல்லது செய்கின்றான் என்று பொருள்கொண்டால் இஃது உள்ளுறை யுவமமாம். 'இத்தகைய வழி என்று சொல்லிய அவர் அத் தண்ணளியைக் கருதவில்லையே' என்ற கருத்துத்தான் தோன்று கின்றது. அக் களிற்றின் அன்புநிலை அத் தலைவற்கும் அன்புணர்ச்சியை மிகுவிக்கும். ஆதலின் பிரிந்துசென்ற தலைவன் திரும்பி வரினும் வருவான் என்னும் கருத்தும் அதனொடு எழுகின்றது. ஆதலின், உள்ளுறையுவமம் முற்ற முடியாமை காண்க. உள்ளுறையுவமம்போலத் தோற்றம் அளித்து அவ் வுவமம் ஆகாது வருவதும் இறைச்சியாம்.

உள்ளுறை யுவமத்துடனுறை

" இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே
திறத்தியல் மருங்கின் தெரியு மோர்க்கே."

என்னும் தொல்காப்பியச் சூத்திரத்திற்கு உரை கூறும் நச்சினார்க்கினியர் உவமக்குறிப்பொடு பிறபொருள்பட வருவதும் இறைச்சிக் கியல்பெனக் கூறுகின்றார். இஃதோர் வகை. உவமம் கருப்பொருளின் உள்ளுறைந்து தோன்ற, அவ் வுவமத்தான் பிறிதொரு பொருள் தோன்றுவதனால் இச் சூத்திரத்திற்கு இங்ஙனம் பொருள் கொண்டார்போலும். இங்ஙனம் பொருள் கொண்டதனால் உள்ளுறையுவமத்தினின்று இறைச்சி தோன்றும் என முடிவுகட்டலாகாது. உள்ளுறை யுவமத்தினின்றும் இறைச்சி தோன்றுமாயின், அவ் வுள்ளுறையுவமம் முற்ற முடியாது வரும். அவ் வுவமம் முற்ற முடியாததனால் அஃது உள்ளுறையுவம மன்றாம். உள்ளுறையுவமம் முற்ற முடியாது வருவதற்கு மேற்குறித்த உதாரணம் சான்றாம். வேறு உதாரணங்களும் காண்பாம்.

**உதாரணம் 5**

" உலைவந் தயரும் குன்மர்திக் குருகா நிலங்கீண் டெகுகுலக்
கலைவன் பலவின் சுளைகிறிக் களிப்போ டளிக்கும் காந்தாரத
தலைவன் சகுனி யிவன் கண்டாய் தக்கோ ராடாச் சூதுக்கும்
நிலைவஞ் சனைக்குந் தரணிபரில் யாரே யிவர்க்கு நிகரென்றார்."
(வில்லிபாரதம் - திரௌபதி - கூள.)

மன்னவையில் கடிமணப் போட்டிக்காக வந்து வீற்றிருந்த காவலர்களை 'இன்னோ ரின்னோ ரிவர்' என்று தோழி திரௌபதிக்குக் கூறிச்செல்லுமிடத்து, சகுனி பற்றிக் கூறு கின்றாள். அங்ஙனம் கூறுகின்ற தோழியர், 'இன்னோரை மணக்கலாம், இன்னோரை மணக்கலாகாது' எனக் குறிப்பாகவும்

வெளிப்படையாகவும் உணர்த்திச் செல்வர். "பொய்யே மலர்ந்த திருமுகத்தான்" எனக் கூறித் துரியோதனனையும், "கொடுமை வகிரன்ன துணைவர்" எனக் கூறி அவனது தம்பியரையும் மணங்கொள்ள வேண்டாமென்று வெளிப்படையாகவே தோழி கூறுகின்றாள். சகுனியைக் குறிக்கும்போது, "வருந்தி யயர்ந்த சூல்மந்திக்குக் கடுவன் பலவின்சுளைகீறிக் களிப்போடளிக்கும் காந்தாரத் தலைவன்" எனக் குறிக்கின்றாள். 'மந்திக்குக் கடுவன் வேண்டியவற்றைத் தானே தந்து களிப்பூட்டுவதுபோல, இவனும் மாதர் வேண்டியவற்றைத் தந்து உவக்கச்செய்வான்,' எனக் கூறாமல் கூறுகின்றாள் தோழி. இங்ஙனம் உரைகொள்வது உள்ளுறையுவமமாம். இதனை, உள்ளுறையுவமமாகவே கொண்டால 'சகுனியை மணந்துகொள்க' என்னும் பொருளும் வெளிப்படுதல் காண்க ஆனல், தோழிக்கு அக் கருத்தில்லை. அஃது எதனாற் பெறுதும்? எனில், "தக்கோராடாச் சூதுக்கும நிலைவஞ்சனைக்கும் தரணிபரில் யாரே இவர்க்குநிகர்" எனத் தோழி கூறுவதனால் உணரலாம். "தக்கோராடாச் சூதுக்கும்" என்றதனால் சகுனி தகுதியற்றவன் எனக் குறிக்கின்றாள். முதலில் 'மாதருவகை யடையச்செய்வான்' எனக் கூறிப் பின்னர் 'அவன் தக்கோனல்லன்' என அத் தோழியே கூறுதலால் அவள 'திரௌபதி சகுனியை மணந்துகொள்ள வேண்டும்' என்ற எண்ணம் உடையவளல்லள் என்பது திண்ணம். ஆதலின், சகுனியை மணத்தல் வேண்டாம் எனக் கூறுவதே அவள் கருத்தாம். 'மாதரை உவக்கச்செய்வன்; ஆதலின், மணந்துகொள்க' என்னும் கருத்தமையின், "உலைவாந்த....... தலைவன்" என்றது உள்ளுறையுவமமாம். அங்ஙனம் கருத்தமையாது, "மாதரை உவக்கச் செய்வான்; ஆனல் தக்கோனல்லன்..........." எனக் கருத்தமைகிறது. உள்ளுறையுவமம் முற்றமுடியாமையின், "உலைவந்த...........தலைவன்" என்பது இறைச்சி என்னும் உள்ளுறையின்பாற்படும். இதனுள், இறைச்சி கருப்பொருளேதுவாகத் தோன்றுதலும் கொடுமை சுட்டலும் காண்க. ஆதலின், இவ்வகைத்தான இறைச்சி உள்ளுறையுவமம் போலத் தோன்றினும் அவ் வுவம மாகாமை காண்க.

(தொடரும்)

# அருளாக்கம்

[அருட்கவி, சேதுராமன்]

(சிலம்பு: ௩௧-பரல் அ - ௩௧அ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## *திருச்சிராப்பள்ளி

### (தாயுமானவர் சந்நிதி)

இராகம்: காம்போதி. தாளம்: ஆதி.

1. தந்தையும் தாயும் சுற்றமும் மற்றும்
தலைவனும் துணையோடே பிறவும்
எந்தைநீ யேயாம் என்றிருப் பேனை
என்றருள் புரிதலும் என்றோ!
மந்தையுள் மாடொன் றெனஎனைக் கருதேல்!
மட்டுவார் குழலிதன் மணாளா!
சிந்தையிற் குடிகொள் செல்வமே! தெய்வச்
சிராப்பளித் தாயுமா னவனே!

### (முருகர் சந்நிதி)

இராகம்: சிம்மேந்த்ர மத்யமம். தாளம்: ஆதி.

2. [1]வனத்தராய்ப் பிள்ளைப் பெயரோய்! [2]மால்—
வழுத்து[3]மாப் பிள்ளைப் பெரியோய்! செம்;
மனத்தராய்த் [4]தெள்ளித் தமிழேவாய்—
மலர்த்துவார்க் கள்ளித் தாலீவாய்;
[5]புனத்தறாப் [6]புள்ளிப் பரிபோலி—
புயத்தைவேட் டுள்ளிப் புணர்வேளே;
[7]சினத்தராப் பள்ளித் திருமால்[8]சேர்—
திருச்சிராப் பள்ளிப் பெருமாளே.

---

1. வனம் - காடு; அழகு; நீர் (நிலைகள்) - சூழ்ந்த, (பூந்) தராய் - சீகாழி. பிள்ளை - ஞானசம்பந்தப் பிள்ளையார்.

2. மால் - இந்திரன். 3. மாப்பிள்ளை - மருமகன்

4. தெள்ளி - தெளிந்து.

5. புனத்து அறா - தினைப்புனத்தை விட்டு நீங்காத.

6. புள்ளிப் பரி - புள்ளிகளையுடைய குதிரையாம் மயில்.

7. சினத்து அராப் பள்ளி - கோபமிக்க பாம்பைப் படுக்கையாக் கொண்ட.

8. சேர் - இடைவிடாது தியானிக்கும்.

* புகைவண்டி நிலயம். சோழநாடு. திருச்சி மாவட்டம். சம்பந்தர், அப்பர் இருவர் தேவாரமும், திருப்புகழும் பெற்ற தலம்.

இராகம்: ஸ்ரீராகம். தாளம்: ரூபகம்.

3 [1]செவ்வந்தித் திடவேறிச்—
[2]செவ்வந்திட் டருளீசன்;
[3]செவ்வந்திப் படஆளும்—
[4]செவ்வந்தித் திருநாமன்;
[5]செவ்வந்திக் குபகாரி—
[6]செவ்வந்தித் திருமேனிச்;
[7]செவ்வந்தித் தொடையோன் வாழ்—
[8]செவ்வந்திப் பெருமாளே.

## *வயலூர்

### (முருகர் சந்நிதி)

### பங்குனி உத்திரநாள்

இராகம். நாதநாமக்கிரியை. தாளம்: ஆதி.

4 [9]கணித்த ஊழ்வினை பிணித்த வாழ்விது
கடைப் படாதுன கழலோதும்—
கருத்து நீதர இருத்தி ஆள்செய்து
கடைக் கணொலொரு நொடியேனும்;
தணித்த பார்வைய தளித்தி டாய்சிவ
சடக் கரா!சர வணஜாதா—
தமிழ்ப் பனீரொடு கவிப்பண் மாலைகள்
தரித்த மார்பகம் அணைவாயே;
[10]எணித்'த யாபர கருப்ப வேதனை
[11]எனக கிதாவதில்' எனவோதும்—
இரத்தி ஹவதி பொருட்டு மாதுரு
எடுத்த ஈசுரர் உறைகோயில்;

---

1. செ - இடபம், வந்தித்திட - வழிபட்டு முன்னிற்க.
2. சே - செ - உயர்வாக, வந்திட்டு - வந்து.
3. செ - செனனம் (என்னும்), வந்தி - வருத்தம். பட - அழிய.
4. செவ்வு - செம்மையாக, அந்தித்து இரு - பொருந்தியிருக்கும், நாமன் - புகழன்: பெயரன்; தும்பை சூடியவன்.
5. செ - செம்மை (மனத்தளாம்), வந்திக்கு - பிட்டு விற்ற கிழவி வந்திக்கு.
6. செ - சிவந்த, அந்தி - மாலைக்காலம் போன்ற.
7. செவ்வந்தி - சாமந்தி என்று சொல்லப்படும் மலர்.
8. செவவந்தி - திருச்சிராப்பள்ளி.
9. கணித்த - (பிரமன்) கணக்கிட்டு விதித்த.
10. எணி - எண்ணி.
11. எனக்கு இது ஆவது இல் எனப் பிரிக்க.

* திருச்சிராப்பள்ளிக்குத் தென்மேற்கு 6 மைல். திருப்புகழ்பெற்ற தலம்.

அணித்த காவிரி திருச்சி ராமலை
அடுத்த ஆதிநல வயலூரா—
அருக்க னொளிர் இலட்ச கோடியென்
[1]அயிற்கை ஆள்தரு பெருமானே.

(பழனுபுரி)

இராகம்: செஞ்சுருட்டி தாளம்: ஆதி

5. [2]மழமா கனிறே மடையேனும்—
வழிபா டுசெயா துழலாமல்;
[3]குழனு விசையால் இசைபோதக்—
குருவாய் வருவாய் அருள்வாயே;
கிழவோன் எனவே மலையேறிக்—
[4]கிறியால் விளையா டிளையோனே;
[5]பழனு புரிவாழ் பழ(ம்) நீயே—
[6]பழனு புரிவாழ் பெருமானே.

*திருஆனைக்கா

(அம்பிகை கோயிற்பிரகார முருகர் சந்நிதி)

இராகம்: ஆனந்தபைரவி. தாளம்: ஆதி.

6. தவயோகத் தானத் தினைநாடித்—
தவறுமற் சேவித் திடுமாறே;
அவமோகப் பாவத் தழியாமல்—
அடியார்குற் றேவற் கமர்வேனே;
[7]நவலோகத தாருக் கரியானே—
நவநீதச் சோரற் கினியோனே;
சிவஞானப் பாலைப் பருகீசா—
திருவானைக்காவிற் பெருமானே.

---

1. அயில் - வேல்.
2. மழமை - இளமை.
3. குழல் நா இசை - புல்லாங்குழல் போன்ற குரலோடு நாவாற் பாடும் இசை.
4. கிறி - மாயம்; தந்திரம். 5. பழனுபுரி - தென்பழநி.
6. பழனுபுரி - வடவூர் (பழனம் - வயல், புரி - ஊர்.)
7. நவலோகம் - பூமியின் பிரிவாய் அமைந்த ஒன்பது கண்டங்கள். அவைதாம் வடபால விதேகம், தென்பால் விதேகம், கீழ்பால் விதேகம், மேல்பால் விதேகம், வடபா விரேவதம், தென்பா விரேவதம், வடபாற் பரதம், தென்பாற் பரதம், மத்திம கண்டம் - எனப் பிங்கல நிகண்டு கூறும். "நவகண்ட பூமிப் பரப்பை வலமாக வந்தும்" தாயுமானவர் - சின்மயா - 11.

* திருச்சிராப்பள்ளிக்கு வடக்கு $2\frac{1}{2}$ மைல். மூவர் தேவாரமும் திருப்புகழும் பெற்ற தலம்.

## *தான்மியாபுரம்

### (விநாயகர் கோயில்)

இராகம்: வராளி. தாளம்: ஆதி.

7. [1]ஆன்மிகா னுபவம தறியேனை—
ஆண்மையா வதிவற வழிவேனை;
[2]நான்மிகா உறநனி நலிவேனை—
[3]நான்மையால் வருபவம் நழுவாவோ;
வான்மியூர் முதலிய தலமேவும்—
மான்மியா! கரிமுக கணநாதா;
[4]தான்மிகா நுசரணர் தமை ஆள்வோய்—
[5]தான்மியா புரமுறை பெருமாளே.

## *திருமழபாடி (13—4—57)

### (முருகர் சந்நிதி)

இராகம்: ஸ்ரீராகம். தாளம்: ஆதி.

8. மகிழிய ஞகித் தவஞானம்—
வரன்முறை தேறத் தெரியாத;
[6]அகமுடை யேனைக் கடிதாள—
அடியவ ரோடுற் றருள்வாயே;
[7]அகருகு லாமைக் குழல்மாதா—
[8]அழகமை யாருக் கொருபாலா;
[9]செகமுழு தாள்கைக் குடையோனே-
*திருமழ பாடிப் பெருமாளே.

1. ஆன்மிக அனுபவம் அது அறியேனை எனப் பிரிக்க.
2. நான் மிகா உற - நான் என்னும் ஆணவம் மிகுந்து பொருந்த.
3. நான்மை-நான்கு, நால்வகைப் பிறப்பு-அண்டஜம், யோனிஜம், சுவேதஜம், உற்பீஜம் என்பன. தேவர், மனிதர், நரகர், விலங்கு என்னும் நால்வகைப் பிறப்பு எனினுமாம்.
4. தான்மிக அநுசரணர் - தருமச் செயல்கட்கு உதவியா யிருப்போர்.
5. தான்மியாபுரம் - டால்மியாபுரம்.
6. அகம் - அகங்காரம்: பாவம்; மனம்.
7. அகரு - அகில் (மணம்).
8 அழக(ம்)மையார் - இவ்வூர்த் தேவியார் பெயர்.
9. செகம் முழுது ஆள்கைக்கு உடையோனே எனப் பிரிக்க. செக முழுது ஆள்கைக்குடையோனே எனக்கொண்டு உலகமுழு தாண்ட(வனே), கையிற் குடையேந்தி (அசுரர் படைகளை யெல்லாம் வென்றபின்) நடனமாடியவனே! என்றும் பொருள் கொள்ளலாம்.

* டால்மியாபுரம் புகைவண்டி நிலையம். திருச்சி மாவட்டம்.
* சோழநாடு. மூவர் தேவாரம் பெற்ற தலம்.

(ஷை கோயில் அழகம்மை சந்நிதி)

இராகம்: ஸ்ரீகாம்போதி. தாளம்:

9. திருமாலும் நான்முகனும் தேட நின்ற
செழு[1]வயிரத் தூணீசர் [2]மாணிக் கப்பேர்
தருமாலின் கீழமர்ந்தார் அறம்நால் வர்க்குத்
தகவுடனே உபதேசம் செய்தார் யார்க்கும்
வரு[3]மாலும் பிறப்பிறப்பும் அறுப்பார் [4]நந்தி
மணம்புரியக் குணம்புரிந்த மகிமை யாளர்
[5]இருமாலும் வழிபடுதென் மழபா டிக்குள்
எழிலாரும் அழகம்மை இருதாள் போற்றி.

## *திருப்பழுவூர்

(முருகர் சந்நிதி)

இராகம்: நாதநாமக்கிரியை. தாளம்: ஆதி.

10. மோக மதக்ரம அதிகாமம்—
[6]மோய முனைப்பொடு வினையோதத் ;
தாக மெடுத்திட வருவேனைத்—
தானிலை சப்பது தகையாதோ ;
ஏக மனத்தொடு வழிபாடார்—
ஈடில் [7]மறைத்தவர் இறைவா ! சூர் ;
[8]யூகம் அழித்தவ ! பழுவூர் சேர்—
[9]யோக வனத்தமர் பெருமாளே.

1. இவ்வூர் ஈசர் பெயர் வஜ்ர ஸ்தம்பேசுரர். 'மழபாடி வயிரத் தூணே' என்றார் அப்பர்.
2. 'மழபாடியுள் மாணிக்கமே' என்றார் சுந்தரர்.
3 மால் - மயக்கம்.
4. திருமழபாடிக்குப் பங்குனி மாதத்தில் திருவையாற்றிலிருந்து ஐயாறப்பரும் நந்திதேவரும் வருகின்றார்கள். நந்திதேவருக்கு அங்கே திருக்கல்யாணம் நடக்கின்றது.
5. மால் - இந்திரன் ; திருமால். திருமாலும் தேவேந்திரனும் வழிபட்ட தலம் மழபாடி. 'மாலினூர் வழிபடு மாமழபாடியே' என்றார் சம்பந்தர். மாலினூர் என்பது இருமாலையும் குறிக்கும்.
6. மோய - அழிய.
7. மறைத்தவா - அந்தணா : மலையாள அந்தணர். 'அந்தணர்களான மலையாளரவ ரேத்தும் .....பழுவூர' சம்பந்தர். 'அமர ரந்தணர் போற்றவே .....பழுவூர்க்குள் மேவிய பெருமாளே' திருப்புகழ்.
8. யூகம் - படைவகுப்பு.
9. பழுவூருக்கு 'யோகவனம்' என்றும் ஒரு பெயர் உண்டு. சிவபெருமானை 'யோகவனேசுரர்' என்றும் கூறுகின்றார்கள்.
* அரியலூர் புகைவண்டி நிலையத்திலிருந்து 7 மைல். சம்பந்தர் தேவாரமும் திருப்புகழும் பெற்ற தலம்.

(வடமூலநாதர் சந்நிதி)

இராகம் : செஞ்சுருட்டி. தாளம் : ஆதி.

11. [1]கலையாளர் சடைமிசையிற் [2]கழுக்கடைசேர் கையர்
கயிலாயச் சயிலரிடக் கரமிசைபொற் [3]சிலையாம்
சிலையாளர் திருவாளர் செவ்வேளைக் கரியின்
திருமுகனைப் பெற்றருளும் செங்நிறத்துச் [4]சேயர்
தலையாளர் சரமாக [5]அருந்தவநாயகிதன்
தலைவர்[6]பரசிராமர் தொழக்கொள்ளிடத்தின் கரை
[7]மலையாளரவர்பூசை மருவுதிருப் பழூர் [மேல்
[8]வடமூல நாதரைநீ வாழ்த்துமட நெஞ்சே.

## *திருமாந்துறை

### (முருகர் சந்நிதி)

இராகம் : ஸஹாநா. தாளம் : ஆதி.

12. [9]நீண்டவர் தீண்டலர் பூண்டற மூண்டவர்
[10]நீஞ்சிய தீந்தண ரங்கவாணர்—
[11]நீங்கலர் பூங்கழல் மாண்பொடு தாங்கிட
[12]நேர்ந்திசை பாங்கரை அன்பினேர்வார் ;

---

1. கலை - பிறைச்சந்திரன். 2. கழுக்கடை - சூலம்.

3. சிலையாம் சிலை - மலையாம் வில்.

4. சேயர் - வெகுதூரத்திருப்பவர்.

5. அருந்தவநாயகி - இவ்வூர்த் தேவியார் திருநாமம்.

6. பரசுராமர் தம் தாயைக் கொன்ற பழி நீங்கப் பூசித்த தலம் பழூர்.

7. மலையாள அந்தணர்கள் பூசைசெய்த தலம் இது. பாடல் 10 குறிப்பு 2-ம் பார்க்க.

8. வடமூலநாதர் - இவ்வூர்ச சிவபிரான் நாமம்.

9. நீண்டவர் - திரிவிக்ரமாவதாரம் எடுத்தவர். தீண்டலர் - பகைவர். பூண்டு - வேர் ; குலம். மூண்டவர் - கோபித்தெழுந்தவர்.

10. நீஞ்சிய : நீந்திய என்பதன் போலி. தீம் தண் அரங்கவாணர் - இனிமையும் குளிர்ச்சியும் பொருந்திய (காவிரி நடுவமைந்த) திருவரங்கத்தில் வாழ்பவர்.

11. நீங்கலர் - நீங்காதவர்களாய்.

12. நேர்ந்து இசை - பொருந்திப் புகழும். பாங்கரை-பண்பினரை, அன்பின் - அன்போடு, நேர்வார் - எதிர்தோன்றி ஆட்கொள்வார்.

* திருச்சிக்கடுத்த திருஆனைக்காவுக்கு வடகிழக்கு 10 மைல் சம்பந்தர் தேவாரமும் திருப்புகழும் பெற்ற தலம்.

[1]காண்டவர் வேண்டுவ ஈந்திடல் வாய்ந்தருள்
[2]காஞ்சிய தேந்திடை மங்கைகேள்வா—
[3]காங்கெய ஈங்குய ஓங்கரு ளாய்ந்துசெய்
[4]காஞ்சன மாங்கழல் தந்துகாவாய்;
[5]காண்டவர் பாண்டவர் ஆண்டவர் ஏண்டவர்
[6]காஞ்சிர மாங்குடி கம்பை மூதூர்—
காஞ்சி [7]மயேந்திர மாங்குடி பூந்துறை
[8]காம்பறை பூம்பறை யெங்குமோதும்;
மாண்டவர் [9]வீண்டலை பூண்டவர் தாண்டவர்
[10]வாஞ்சிய வாஞ்சையர் தந்தவாழ்வே—
[11]மாம்பொழில் தேன்பொழி பூம்பொழில் வான்கொழி
[12]மாந்துறை போந்துறை தம்பிரானே.

## *திருத்தவத்துறை

### (அறுமுகன் சந்நிதி)

இராகம்: மத்யமாவதி. தாளம்: ஆதி.

13. எனைக்[13]கிறிச் செயலினி எதுநாளும்—
எனக்கெனப் புகழிசை வரம் நீயே;
[14]அனைக்கினைப் படஅருள் புரிவாயேல்—
அடுத்தெனக் கொருமுறை இலையேதான்;

---

1. காண்டவர் - கண்டவர்; (தம்மைத்) தரிசித்தவர், வாய்ந்து அருள் - பொருந்திப் பெற்றருளிய (மங்கை).
2. காஞ்சி - எண்கோவைமணி; ஒட்டியாணம். மங்கை - வள்ளி அல்லது தேவசேனை.
3. காங்கெய - காங்கேய, ஈங்குய - ஈங்கு + உய்ய.
4. காஞ்சனம் - பொன்.
5. காண்டவர் - இந்திரர்; பாண்டவர், ஆண்டவர் - திருமால், ஏண்தவர் - பெருமைமிக்க தவசியார்.
6. காஞ்சிரம் ஆம்குடி - எட்டிகுடி.
7. மயேந்திரம் ஆம்குடி - திருமேயந்திரப் பள்ளியாம் ஊரா யிருக்கலாம். பூந்துறை - சிந்து பூந்துறை.
8. காம்பு அறை - மூங்கில்கள் வளரும் சிறுமலைகள், பூம்பறை - திருப்புகழ்பெற்ற மலைத் தலம்.
9. வீண்தலை - வீணே வீழ்ந்துகிடக்கும் தலைகள்.
10. வாஞ்சையர் - அன்பர்.
11. மாம்பொழில் - மாந்துறையில் மாஞ்சோலைச சிறப்பை உரிய தேவார திருப்புகழ்ப் பாக்களிலும காண்க.
12. இப் பாடலின் 2, 4, 6, 8, 10, 12, 14, 16 அடிகள் தனியே ஒரு பாடலாதும்.
13. கிறி - வஞ்சகம். 14 அனை - அன்னை.

* திருஆனைக்காவிலிருந்து 12 மைல். இது 'லாலிகுடி' என வழங்குகின்றது. தேவார வைப்புத்தலம். திருப்புகழ் பெற்றது.

மனைக்கிழத் தியரிரு வருமேவ—
மகிழ்ச்சியிற் புயமணை மயில்வீரா ;
தினைக்கிரிப் புறநனி திரிபாதா—
[1]திருந்தவத் துறையுறை பெருமாளே.

(ஷ கோயில்தேவி சந்நிதி)

**கட்டளைக் கலித்துறை**

இராகம் : **நாதநாமக்கிரியை.** தாளம் :

14. பவத்துறை யிற்சமு சாரக் கடலிற்
படிந்திழிந்தே
அவத்துறை வாழ்வை விடுத்துனை என்றும்
அடுக்க அருள் !
சிவத்துறை தெய்வப் [2]பெருந்திருச் செல்வீ !
[illegible]வே
தவத்துறை வார்சேர் தவத்துறை மேவும்
தயாபரியே.

## *பழநி (14—4—57)

(மலைமேற் கயிலாயநாதர் சந்நிதி)

**பதிகத்தொரு பாடல்**

இராகம் : **நவரோஸ்.** தாளம் : **ஆதி.**

15. செவியுலாம் தோட்டினன் செய்யபொன் மேனியான்
[3]நவியுலாம் கண்ணினள் நங்கைபங் காயினன்
[4]கவியுலாம் பழநியிற் கயிலைமா நாயகன்
புவியுலாம் பாதங்கள் போற்றுதல் போகமே.

(பழநியாண்டவர் சந்நிதி)

இராகம் : **வசந்தா.** தாளம் : **ஜம்பை.**

16. [5]அழனச் சுறுநாகத்—
தணையிற் றுயில்மாயன்
[6]குழனத் துகைஆயன்—
[7]குவிகைக் கழல்சேராய் ;

---

1. இது திருப்புகழ்பெற்ற தலம்.
2. பெருந்திருப்பிராட்டியார் என்பது தேவியின் திருநாமம்.
3. நவி - நவ்வி : மான். 4. கவி - பாடல்கள் ; குரங்குகள்.
5. அழல் நசசு நெருப்பைக் கக்கும் விடம்.
6. குழல் நத்துகை ஆயன் - புல்லாங்குழலை விரும்பும் கையை யுடைய இடையன் (கண்ணன்) 7. குவிகை - கை குவி.

* புகைவண்டி நிலையம். பிரபல முருகஸ்தலம். திருப்புகழ்பெற்றது.

[1]பழனத் தலைவா — 
[2]பழனிக் கதிபா தென்;
[3]பழனப் பதிவாழ்வே — 
பரநிப் பெருமாளே.

## *திருவாவினன்குடி

(முருகர் சந்நிதி)

இராகம்: பூர்வகல்யாணி. தாளம்: ஆதி.

17. [1]நவநாதர் சந்திரர் ஈராறு சூரியர்
பதினொரு சங்கர ராறேழெண் மாவசு
நவவிரர் இந்திரர் ஈராதி யாமுடு வினபேரார் —
[2]நவலோகர் விஞ்சையர் நாராய ணாதியர்
தவயோகர் தும்புரு மாநார தாதியர்
நவமாதர் பங்கர்கள் பாதாள லோகர்கள் பிறநாகர்;
[3]அவதூதர் அஞ்சர்கள் மேலோர் பவூதகர்
கணநாதர் கந்தரு வோர்மா குடீசகர்
அடியார்கள் அன்பர்கள் பாவாணர் யோகியர் முனிவோர்கள் —
[4]அவரேழு பண்பினர் தேவாதி மானிடர்
பெரியோர்கள் சிந்தை யிலாஞான மோனியர்
அழகாக வந்தனை சேர்பாத தாமரை அருள்வாயே;

---

1. பழனம் - சப்த ஸ்தானத் தலங்களுள் ஒன்றான திருப்பழனம்.

2. பழனி - ஆலங்காட்டைச்சேர்ந்த பழையனூர்.

3. பழனப்பதி - வயலூர். (பழனம் - வயல், பதி - ஊர்.)

அடி 1. நவநாதர்கள் - பிரதான சித்தர் ஒன்பதின்மர். ஈராறு சூரியர் - துவாதச ஆதித்தியர். பதினொரு சங்கரர் - ஏகாதச ருத்திரர். எண்மாவசு - அஷ்ட வசுக்கள். ஈராதியாம் உடுவின பேரார் - இரண்டு ஆதிநட்சத்திரமான அசுவினியின் பெயரைக்கொண்டவர்கள்; அசுவினி தேவர்கள் இருவர்.

அடி 2. நவலோகர் - நவலோகத்தோர், (பாடல் 6, குறிப்பு 1 பார்க்க.) விஞ்சையர் - வித்தியாதரர். நவமாதர் பங்கர்கள் - நவசக்திகளின் தலைவர்கள். நாகர் - தேவலோகத்தவர்.

அடி 3. அஞ்சர்கள்-ஹம்ஸர், பரமஹம்ஸர் என்ற இருதிறத்தோர். பவூதகர், குடீசகர், ஹம்ஸர், பரமஹம்ஸர், அவதூதர் என்போர் ஐவகைச சந்நியாசியர். கணநாதர் - சிவகணத்தலைவர்கள்.

அடி 4. (முனிவோர்கள்) ஏழு பண்பினர் - எழுவகை முனிவர்.

* பழநிமலை அடிவாரத்தில் கோயில். திருமுருகாற்றுப்படையில் கூறப்பட்ட மூன்றும் படைவீட்டுத் தலம். திருப்புகழ் பெற்றது.

[1]சிவகாம சுந்தரி மாதா பராபரி
அபிராமி அம்பிகை வேதாக மேசுரி
திருமூலர் சந்ததி சார்தாயு மானவர் கவிபாடும்—
[2]திருவாணி யும்பணி மாராணி பார்வதி
சருவாணி சங்கரி பூபால நாரணி
ஜெயராம சந்திர கோபால சோதரி அருள்சேயே;
[3]தெவயானை வஞ்சி கிராதா மனோகர
புரிவேணி யிங்கிதர் போரேறு போல்பவர்
திரிவேணி சங்கம வாராண சீசுரர் குருதேவா—
[4]சிவஞான சம்ப்ரம வேலாயுதா! யுவ!
தவராஜர் வந்திசெய் காலாயுதா! திகழ்
திருவாவி னன்குடி வாழ்தேவ தேவர்கள் பெருமாளே.

(பழநியாண்டவர் சந்நிதி)

இராகம்: நாதநாமக்ரியை. தாளம்: ஆதி.

18. நாவுள் நமசிவய நாமம் நனிபரவி
நாளு மினியதமிழ் வேதம் உரைசெய்பவர்
நாடு பரமசிவ னோடுசிவையு 'முயர் பழம்நீயே—
ஞான வடிவழக! மோன இளைய' என
ஆன படியுரைசெய் [5]தானம் நிலைபெறவும்
நாத லயவிரத போத [6]சுகசரத முறவாழ்வோய்;
தேவுள் உனையலது வேறு கடவுள்வழி
பாடு புரிவதறி யேனை யுனதுபத
சீத வனஜமலர் சேர இனிதுதிரு வருள்தாராய்—
ஜீவ தயைபெருக நீடு மனமுருக
ஆவி உடல்பொருள்கள் யாவும் உனதுடைமை
தீர அடையமனம் வாய்மெய் ஒருமையுறு
நெறிசேராய்;

---

**அடி** 1. திருமூலர் சந்ததி சார் தாயுமானவர் - தாயுமானவர் திருமூலர் மரபைச் சேர்ந்தவர். (மௌனகுருவின் சீடர் தாயுமானுர். மௌனகுருவோ மூலர் மரபினர். 'மூலன் மரபில் வருமௌன குருவே'—தாயுமானுர்.)

**அடி** 2. திரு வாணி - இலக்குமி, சரச்சுதி. மாராணி - மகாராணி. சருவாணி - அனைத்துமானவள்.

**அடி** 3. கிராதா-கிராதை. வேடிச்சி - வள்ளி. புரிவேணி-பின்னிய சடை, திரிவேணி சங்கமம் வாராணசி ஈசுரர் - மூன்று ஆறுகள் கூடும் பிரயாகையோடு கூடிய காசி ஈசுரர்.

**அடி** 4. யுவ-இளையவனே. தவராஜர்-அருணகிரிநாதர். காலாயுதா-கோழிக்கொடியனே.

5. தானம் - நிலை. 6 சரதம் - சத்தியம்.

[1]பாவுள் முதல்வைமுரு காறும் அருணகிரி
நாதர் [2]புகழுமழி யாத தொடையெனஅ
பார கருணையொடு நாளு மகிழ்வுபுனை பரமேசா—
பாகின் இனியமொழி மோக மறவர்மகள்
போக சரசஅது போக! [3]த்ரிமலபரி
பாக மிருவினை சமான மிவையருளு முருகோனே;
பூவும் அகிலும்விரை [4]யாரம் இவையுமலை
யோடு புரளவரு மா[5]ஷண் முகநதிவை
போக சரவணை வையா புரியொடினைய புடைசூழப்—
[6]பூக மொடுகதலி மாபலவு பொழிலில்
மேகம் அளவவளர் [7]வேழ வயல்கள்மலி
போகா பழநிமலை மீது மருவிமகிழ் பெருமாளே.

## *திண்டுக்கல்

(பற்பகிரீசுரர்கோயில் அபிராமியம்மை சந்நிதி)

### வெண்பா

இராகம் . பிலகரி. தாளம் :

19. குண்டுக்கல் சூழும்
குலவரையாய் நீண்டோங்கும்
திண்டுக்கல் வாழும்
சிலைமுலையாள்—அண்டு
[8]சுபிராமி [9]பற்பகிரிச்
சொக்கேசர் பங்கில்
[10]அபிராமி தானே
அரண்.

---

1. முருகாறு - திருமுருகாற்றுப்படை. அது பாவுள் முன்நிற்பது: 'பாவுள் முன்னுறவந்து நிற்கும் முருகாற்றுப்படை' சிவப்பிரகாச சுவாமிகள்.
2. புகழ் - திருப்புகழ்.
3. த்ரிமலபரிபாகம், சமானம் - மும்மல பரிபாகமும், இருவினை யொப்பும்.
4. ஆரம் - சந்தனம்.
5. ஷண்முகநதி, சரவணப்பொய்கை, வையாபுரித் திருக்குளம் முதலிய தீர்த்தங்கள் பழநிமலையைச் சூழ்ந்துள.
6. பூகம் - பாககுமரம் 7. வேழம் - கரும்பு.
8. சுபிராமி - நல்ல பிரமசக்தி.
9. திண்டுக்கல் மலைக்குப் பற்பகிரி என்றும் பெயருண்டு.
10. அவ் வூர்த் தேவியின் திருநாமம்.
11. அரண் - காவல்.

* மதுரை மாவட்டம். புகைவண்டி நிலையம். அழகிய கோயில் அடிவாரத்தில் உளது.

## திண்டுக்கல்

[திரு சுந்தரராஜன் அவர்களில்லம், நெ. 14. சத்திரத் தெரு.]

இராகம்: கரகரப்ரியா. தாளம்: ஆதி.

20. [1]தற்சுட ரைக்கண் டுட்டரி சிக்கும்
பொற்பை நலத்தொண் டர்க்கரு ளிப்பின்
தத்துவ முற்றுஞ் சொற்று விளக்கும் தயையாளா—
சத்திய மிக்குன் [2]பெற்றி யுரைக்கும்
கற்பினர் துக்கம் [3]பட்டிட வைக்கும்
சத்துவ நித்தம் சற்குரு வொத்தெங் குழுளானே;
சிற்சுக நித்தன் சொற்பொரு ளொப்பென்
றிச்சை மடப்பெண் பக்கல் நடிக்கும்
சிற்சபை முத்தன் பொற்செவி யிற்பண் டுரைபோதா-
சிக்க லறுக்கும் [4]பற்ப பதத்தின்
துய்த்த நிழற்கண் சற்று புகறகென்
சித்த நிருத்தங் [5]கொட்ட மடக்கும் [6]திருநாளே;
சொற்சுவை சொட்டும் சித்ர கவித்வங்
கற்றை [7]அனற்செம பொற்றை யருக்கஞ்
சொர்க்கம் வரைக்கும் தற்புக ழெட்டும் படியியும்—
சுத்த [8]பவித்ரம் பெற்ற ஒருத்தன்
கற்ற விருத்தன் குற்ற மறுத்தென்
[9]துப்பினில் நிற்பன் செப்பில் [10]எனற்கென்
றருள்வாய்,[11]வீ;
பற்சு விலத்தன் பற்குன னுக்[12]கன
பற்கு மயற்குங் கிட்டரு மத்தன்
பத்தரை மெச்சும் சித்த னிருத்தன் பெறுபாலா—
பச்சை நிறச்சந் தத்து நடிக்கும்
பட்சி நடத்தும் பட்ச மிகுக்கும்
பறப கிரிதிண் டுக்க லிருக்கும் பெருமாளே.

---

1. தன் (தத்) சுடரைக் கண்டு உள் தரிசிக்கும் எனப் பிரிக்க.
2. பெற்றி - தன்மை. 3. பட்டிட - அழிய.
4. பற்பபதம் - தாமரைப்பாதம். 5. கொட்டம் - ஆர்ப்பாட்டம்.
6. திருநாளே - திருநாளும் உண்டோ என்றபடி.
7. அனல் செம் பொற்றையர் - சிவந்த அக்கினி மலையார்; அருணகிரிநாத சுவாமிகள். பொற்றையருக்கு அம் சொர்க்கம் எனப் பிரிக்க. 8. பவித்ரம் - புனிதம். 9. துப்பு - புத்தி.
'ஒருத்தன்......விருத்தன், செப்பில்' (சொன்னால்.) 'குற்றமறுத் தென் துப்பினில் நிற்பன்' 10. (எனற்கு) என்று சொல்லுவதற்கு எனக் கூட்டுக.
11 வீபற்சு, வில்அத்தன், பற்குனன் என்பன அருச்சுனனது திருநாமங்கள். வில் அத்தன் - காண்டீபத்தைக் கையிற்கொண்டவன்.
12. பற்குனனுக்கு அன்பன் - கண்ணன்.

## தென்னிந்திய தமிழ்ச்சங்கம், திருநெல்வேலி

# தமிழ்ப்புலவர் மாணவர் தேர்வு

திருநெல்வேலித் தென்னிந்திய தமிழ்ச்சங்கத்தார் ஆண்டு தோறும் புலவர் கல்லூரி மாணவர்களின் நலங்கருதி பிப்ரவரி மாதத்தில் நடத்தி வரும் "தமிழ்ப் புலவர் மாணவர் தேர்வு" நிகழும் யாண்டில் பிப்ரவரித் திங்களில், திருப்பனந்தாள், திருவையாறு, கரந்தை, பேரூர், சின்னமனூர், கொழும்பு, தூத்துக்குடி, நெல்லை ஆகிய நகர்களில் நடத்தப்பெற்றன.

புகுமுகத் தேர்வுக்கு விண்ணப்பித்தவர் 31 பேர். எழுவர் தேறாதவர். தேர்ந்தவர்களில் முதற்றகுதி பெற்ற நால்வரில் முதல் மூவர்கட்குப் பரிசுள. முதனிலையில் விண்ணப்பித்த 44 பேர்களில் இருவர் தேறிலர். தேர்ந்தவர்களில் முதற்றகுதி யில் 9 பேரும், இரண்டாந்தகுதியில் 18 பேரும், மூன்றாந்தகுதி யில் 15 பேரும் ஆக 42 பேர் தேர்ந்துளார். இவர்களில் முதற்றகுதி யில் சேர்ந்த முதல் மூவர்க்கு மட்டும் பரிசுகள் வழங்கப்படும். வித்துவான் இறுதிநிலையில் விண்ணப்பித்தவர்கள் 41 பேர். தேர்ச்சியுற்றவர் 31 பேர். முதற்றகுதியில் தேர்ந்த ஒருவரே பரிசு பெறுவர். மற்றையோர் தேர்ச்சித் தகுதித்தாள் பெறுவர். கல்லூரித் தலைவர்கள் மாணவர்களைத் திரள்திரளாக விண்ணப் பித்துத் தேர்ச்சியடையச் செய்வது பேருதவியாகும்.

### பரிசு பெறுவோர்

#### புகுமுகம்

பதிவெண்.

1. *273.* K. M. இராயன், அரசர் கல்லூரி, திருவையாறு,
 **முதற் பரிசு, ரூ.** *20.*
2. *276.* ராசம்மாள், திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி, நெல்லை, **இரண்டாவது பரிசு, ரூ** *15.*
3. *272.* P. சிராஜுத்தின், அரசர் கல்லூரி, திருவையாறு
 **மூன்றாவது பரிசு.**

#### முதனிலை

1. *343.* M. வீரபாகு, K.V.S.S. கல்லூரி, திருப்பனந்தாள்,
 **முதற் பரிசு ரூ.** *40.*
2. *362.* S. பழனிச்சாமி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
 **இரண்டாவது பரிசு ரூ.** *30.*
3. *383.* G. ஆநந்தவல்லி, திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி, நெல்லை. **மூன்றாவது பரிசு ரூ.** *20.*

## இறுதி நிலை

பதிவெண்

1. 182. K. வேங்கடராமன், K.V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
பூதற் பரிசு ரூ. 50.

## தேர்ச்சி பெற்றுள்ளவர்

### புகுமுகம்

4. 256. அ. சோமசுந்தரம், திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி, திருநெல்வேலி, முதற்றகுதி.

இரண்டாந் தகுதி :

5. 249. S. கமலா, K. V. S S கல்லூரி, திருப்பனந்தாள்.
6. 257. சாதுகணபதி, முருகவேள் தமிழ்க் கல்லூரி, தூத்துக்குடி.
7. 262. அ. பழனியாண்டி, அரசர் கல்லூரி, திருவையாறு
8. 263. ஆ. மாணிக்கவாசகம், ,, ,,
9. 246. M. V. பசுபதி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
10. 247. D. நாகராசன் ,, ,,
11. 253. M அடைக்கலம், சின்னமனூர்.
12. 261. கு. நடராசன், அரசர் கல்லூரி, திருவையாறு.
13. 251. து. வசந்து, சின்னமனூர்.
14. 260. நாராயணசாமி, அரசர் கல்லூரி, திருவையாறு.
15. 2‾5. அ சுப்பையா, பாளையங்கோட்டை.
16. 269 சுப்பராயன், அரசர் கல்லூரி, திருவையாறு.

மூன்றாந் தகுதி :

17. 275. S. வீராச்சாமி, அரசர் கல்லூரி, திருவையாறு.
18. 266. சொ. வடிவேலு ,, ,,
19. 264. த. சம்பந்தம் ,, ,,
20. 274. K. சண்முகம் ,, ,,
21. 250. N. ராஜு, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
22. 268. இரா. சச்சிதானந்தம், அரசர் கல்லூரி, திருவையாறு.

### முதனிலை

முதற் றகுதி:

4. 364. A. வேங்கடேசன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
5. 348. N. குருசாமி ,, ,,
6. 359. S. ராசு ,, ,,
7. 357. P. சிவராமன் ,, ,,
8. 351. D. சுந்தரராசன் ,, ,,
9. 356 T. S. ஜயராமன் ,, ,,

இரண்டாந் தகுதி :

10. 347. T. வாசுதேவன், K. V. S S. கல்லூரி, திருப்பனந்தாள்.
11. 374. A. மணவாளன், சாந்தலிங்க அடிகள் கல்லூரி, பேரூர்.
12. 352. S. V. மருதமுத்து, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
13. 354. ப. துரைராசன் ,, ,,
14. 350. M. ஜகன்னாதன் ,, ,,

பதிவெண்

15. 361 K. கதிரேசன், K. V S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
16. 346. S. அண்ணாமலை ,, ,,
17. 345. M. ஆபத்சகாயம் ,, ,,
18. 360. P. பாலுசாமி ,, ,,
19. 382. A. சிதம்பரம், திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
20. 353. G. மாதேசன், K. V. S S. கல்லூரி, திருப்பனந்தாள்.
21. 342. P. முத்து ,, ,,
22. 355. P. ஸ்ரீனிவாசப் பெருமாள் ,, ,,
23. 344. A. சண்முகம் ,, ,,
24. 363. T. ஆடியபாதம் ,, ,,
25. 371. R. கணேசன், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை
26. 381. அன்னத்தாய்தாமஸ், திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
27. 341. S. A. அனந்தராமன், K.V.S.S. கல்லூரி, திருப்பனந்தாள்.

மூன்றாந் தகுதி :

28. 358. T. S பாலசுப்பிரமணியன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
29. 349. V. கருப்பண்ணன் ,, ,,
30. 367. ஆ. சிவானந்தம், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
31. 369. V சொக்கலிங்கம் ,, ,,
32. 366. K. சுப்பராயன ,, ,,
33. 384. K. தமயந்தி, திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
34. 375. S. சத்தியஞானராஜ், தூத்துக்குடி.

## இறுதி நிலை

இரண்டாந் தகுதி :

2. 188. K. வேங்கடராமன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
3. 200. R. S. மாரிமுத்து, கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
4. 192. T. S. நடராஜன, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்
5. 196. A. பாலசுந்தரம் ,, ,,
6. 190. S. நடராஜன் ,, ,,
7. 194. S. கைலாசம் ,, ,,
8. 195. S துரைப்பாண்டியன் ,, ,,
9. 189. S. சுந்தரகிருஷ்ணன், ,, ,,
10. 193. K. M. ஈஸ்வரன ,, ,,
11. 211. U. வெள்ளையப்பன், சாந்தலிங்க அடிகள் கல்லூரி, பேரூர்.
12. 185. V. வடுகநாதன், K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
13. 202. P. ஆறுமுகம், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
14. 183. R. சடையப்பன், K.V.S.S. கல்லூரி, திருப்பனந்தாள்.
15. 186. கோவிந்தசாமி ,, ,,
16. 215. G. அழகிரிசாமி ,, ,,
17. 187. N. P. திருமூர்த்தி ,, ,,
18. 216. S. ரஞ்சிதம் ,, ,,

மூன் ரந் தருதி :

பதிவெண்

19. 199. K. கணேசமூர்த்தி K.V S.S. கல்லூரி, திருப்பனந்தாள்.
20. 206. பாப்பணபிள்ளை, கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
21. 209. K. P. நடராசன் " "
22. 197. K. கலியபெருமாள், K.V.S.S. கல்லூரி, திருப்பனந்தாள்.
23. 214. P. அழகுவேல் " "
24. 217. M. மாணிக்கவாசகம் " "
25 208. சி. சம்புகேசுவரன், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
26. 184. S நாராயணசாமி, K. V. S. S. கல்லூரி, திருப்பனந்தாள்.
27. 203. D. தனபால், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
28. 220. S. வேலாயுதம், திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி, திருநெல்வேலி.
29. 198. M. S ராஜன், கரந்தைப் புலவர் கல்லூரி, கரந்தை.
30. 204 S. A. கைலாசம் " "
31. 218. M. ஜேம்ஸ்வில்லியம், தூத்துக்குடி.

பு. சி. புன்னைவனநாதன்,

திருநெல்வேலி, 10—6—1957

புலவர் குழுத் தலைவர்,
தென்னிந்திய தமிழ்ச்சங்கம்.

---

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) வட எழுத்துக் கலவாமை

தொன்மை நன்மைத் தமிழை ஆட்சிமொழியாக்குவதற்காகத் தமிழக ஆட்சினர் ஒரு குழுவினரை அமைத்தனர். அக் குழுவினர் 'ஜ' 'ஷ' 'ஹ' 'ஸ' ஆகிய வட எழுத்துக்களை அப்படியே தொடர்ந்து பயன்படுத்திக் கொள்ளலாமென்று ஆதரித்தலாகிய சார்புரை செய்திருப்பதாகத் தெரிகின்றது. இஃது ஒரு சிறிதும் பொருந்தாச சார்புரையாகும். சார்புரை - சிபாரிசு. தமிழ்மொழின் தனித்தன்மை தனித்தியங்கும் பேராற்றல் வாய்ந்ததாகும். எந்த மொழியினின்றும் எழுத்தோ சொல்லோ கடன் வாங்கவேண்டிய முடம், இடம்பட வளர்ந்து இயற்கையாக இயங்கும் நம் தமிழ்மொழிக்கு எஞ்ஞான்றுமில்லை. மேலோதிய ஜ முதலிய நான்கெழுத்துக்களும் தமிழ்மொழியின் இயற்கை இன்னொலிக்கு வேண்டத்தகாதன. தமிழ்மொழி ஒலியின் தனியியற்கையமைப்பு சொற்களை ஒலிக்குங்கால் ஒலிகளெனத் தனியெழுத்துக்கள் வேண்டாது எழுத்துக்கள் சேர்ந்துள்ள அமைப்பு முறையினாலேயே எல்லா ஒலிகளும் இயல்பாகவே தோன்றுகின்றன.

இச சிறப்பு வேறெம்மொழியிடத்தும் காணப்படாததொன்று. ஆரியர்கள் வலுகட்டாயமாகப் புகுத்திய எழுத்துஞ் சொல்லும் ஓரோவழி வரத்தலைப்பட்டாலும் தமிழை தனிமாண்புடன் வளர்க்கவேண்டுமென்னும் நன் நோக்கம் கொண்டுள்ள சான்றோர் அதற்கு ஒருப்பட்டிலர். ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனார்,

"வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே."

—தொல். சொல். - ௪௦௧.

என எழுத்துக்கடன் பெறுதல் கூடாதென அழுத்தம் திருத்தமாகக் கண்டித்துள்ளார். சில ஆயிர ஆண்டுகளுக்குப்பின் வந்த நன்னூலார் அயல்மொழி மயலினராயினும் வடவெழுத்தைக் கடன்வாங்க ஒருப்பட்டிலர். அவரும் அவ்வெழுத்துக்களைத் தமிழெழுத்துக்களாகவே வழங்க வேண்டுமென வரைசெய்துள்ளனர். அஃது அவர் ஆக்கிய 'வடமொழி யாக்கத்தின்கண்' காணலாம்.

மேலும் நன்னூலார் காலம் போன்றன்று இந்நாள். இந் நாள் நம் செந்தமிழ் மொழியினைத் தனிமையும் இனிமையும் கெழுமத் தூய்மையாக எழுதியும் வழுவின்றிப் பேசியும் வருதல் வேண்டுமென்னும் ஆர்வமும் விழிப்பும் நாட்டிடை மிக்கு எழுந்துள. இந்த வகையில் ஆட்சிச சார்பினர்—அரசியற்கட்சியினர் அனைவர்களும் ஒருமுகமாகவே உரைத்தும் உழைத்தும் வருகின்றனர். மக்கள் மனநிலையைத் தக்கவாறு ஆராயாது ஆக்கக் குழுவினர் செய்யும் சார்புரை பொருத்தமற்றதாகும். முதற்கோணல் முற்றுங்கோணல்போல் வரவொட்டாது ஆட்சியினர் மக்களை மதித்து ஆவன செய்வதே முறைமையும இறைமையுமாகும். உள்ள எழுத்தைப் புறக்கணித்துவிட்டு வேண்டா எழுத்தைப் புகுத்துவது உள்ள காலை வெட்டி எறிந்துவிட்டு மரக்காலோ, தோற்காலோ சேர்த்து வழி நடப்பிப்பதாகும். மற்றும் தூய வைரத்துடன் வெள்ளைக் கல்லையும் ஒட்டவைபபது போன்றுமாகும். வேண்டாததும் இன்றியமை யாததும் அல்லாததும் ஆகிய வடசொல்லையோ வடவெழுத்தையோ திணிக்க முயலுவது செருக்க நடக்கும் ஒரு கட்டிளைஞனை வற்புறுத்திக் கோலூன்றிக் குனிந்து நடக்கவேண்டுமென வலுகட்டாயப்படுத்துவதையே யொக்கும். அங்ஙனம் நேரொட்டாது ஆவன புரிவாராக.

## (உ) தென்னிந்திய மொழி புத்தக வெளியீட்டு விழா

கடந்த 19—5—57 இல் சென்னை இராசாசி மண்டபத்தில் தென் இந்தியமொழிப் புத்தக வெளியீட்டுக் குழுவினரால் 12 தமிழ்ப் புத்தகங்களும் 10 தெலுங்குப் புத்தகங்களும் முதன்முதலாக வெளியிடப்படும் விழா நடைபெற்றது. திரு. பி. வி இராசமன்னர் இவ் விழாவிற்குத் தலைமை தாங்கினார். திருவாளர்கள், டாக்டர், ரா. பி சேதுப்பிள்ளை, இராசகோபாலாசசாரியார், வி. வி. கிரி, நார்லா வெங்கடேசராவ், ம பொ. சிவஞான கிராமணியார், திருவாட்டி மோனர்ஹன்ஸ்மன் ஆகியோர் பேசினர். தாய்மொழியில் புத்தம்புது நூல்கள் வெளிவரவேண்டிய இன்றியமையாமை குறித்தும், "பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள தமிழ்மொழியில் பெயர்த்தல்வேண்டும்" என்னும் பாரதியாரின் கருத்து நிறைவேற வேண்டும் எனவும் இவர்கள் பேசினர். திரு. இராசகோபாலாச்சாரியாரவர்கள் பேசுகையில் அரிய நூல்களை எளிய விலையில் வெளியிட வேண்டுமெனவும், இப் பணிக்கு அரசியலார் உதவி புரியவேண்டுமெனவும் குறிப்பிட்டார்கள. குடியரசுத் தலைவர், திரு. இராசேந்திரபிரசாது, முதலமைசசர் நேரு மற்றும் பல வடநாட்டுத் தலைவர்கள் இவ் விழாவுக்கு வாழ்த்துச் செய்திகள் அனுப்பியிருந்தனர். பொதுச செயலாளர் திரு. வி. கிருபாநிதி வரவேற்புரை நிகழ்த்தினார்.

**குறிப்பு :** நாடு நலம்பெற இல்லங்கள் தோறும் ஒரு நூல் நிலையம் வேணடும் என்பது அறிஞர்கள் கருத்து. இக் கருத்து நிறைவேறப் பணிபுரியும் ்தன்னிகரிய மொழிப் புத்தக வெளியீட்டுக் குழுவினரின் முயற்சியை வரவேற்கிறோம்—பாராட்டுகிறோம். கருத்தை எழுத்தாக்கி, எழுத்தை ஏடாககிக்கொணரும் பணி எளிதன்று. இது, கனித்தங்கத்தை அணிகலனுக மாற்றுதல் போன்றதோர் அரும்பணி. இதற்கு, திரு. ஆசசாரியார் அவாகள் கூறியதுபோல் அரசியலாா உதவி மிக மிக இன்றியமையாததாகும். மக்களாட்சி சிறபபுறவேணடுமானல், மககளி டையே படிக்கும் பழக்கமும், அறிவாட்சியும் வளரவேண்டும. அந்நிலை வளர நூல் வெளியீட்டகஙகளுக்கு அரசியலாா தாராளமாக உதவிபுரிய முன் வரவேண்டும். சட்டம் ஓா அளவுக்குத்தான் ஆட்சிக்குத் துணை புரியக்கூடும். மககளை மககளாகச செய்யும் அடிப்படைப் பணி அறிவுப் பணி. அதறகு வழிகோலுவன நூலவெளியீட்டகஙகளே. எனவே நூல்வெளியீட்டகங்களுககு உதவிபுரிதல் அரசியலாா் கடன் என்பது சொல்லாமலே விளங்கும்.

## (ட) திருவள்ளுவர் நினைவுநாள் ஆண்டுவிழா

கடந்த 1—6—57-இல் சேலம் குகை திருக்குறள் கழகச சார்பில் திருவளளுவா நினைவுநாள் 16-ஆம ஆணடுவிழா ஸ்ரீராமலிங்க சௌபேஸவரி அம்மன் சமரச சன்மார்கக சபையில் நடைபெற்றது. இவ் விழாவிற்குப் பேராசிரியா், டாக்டா. ரா. பி. சேதுப்பிள்ளையவர்கள் தலைமை தாஙகினர்கள். கழகச சார்பில் செயலாளா திரு. வி. நமசிவாயம் தலைவருககு வாசித்தளித்த வரவேற்பிதழில், தமிழகத்தில் திருவள்ளுவர் நினைவு நாளைப் பலர் பலவாறு பல நாட்களில் கொண்டாடு வதை நீககித் தமிழக முழுமைக்கும் ஒரு நாளையே நினைவு நாளாக்கவும் அந்நாளை அரசியலார் பொது விடுமுறை நாளாக்கவும் முயன்று செயலாற்றவேண்டுமெனவும் கோரப்பட்டிருந்தது

**குறிப்பு :** தமிழர்க்குவேண்டாத—பொருத்தமில்லாத விழாக்களுக் கெல்லாம் விடுமுறை வழங்கும் ஆட்சியாளர், நக்கெட்டும் தமிழமுழக்கம் கேட்கும் இந்நாளிலேனும் திருவள்ளுவருக்கும் திருக்குறளுககும் ஏற்றம் தரும் வகையில ஒரு நாளைப் பொதுவிடுமுறை நாளாகச் செய்தல் வேண்டும் பலர் பலவிதமாகத திருவளளுவா நாளைககொண்டாடுகிறா் கள என்பது உண்மையே. இந்நிலை மாறவேண்டுமாயின் அரசியலார் முன்வந்து, குறள்நெறியைப் பரப்பிவரும் பல்வேறு கழகத் தலைவர்களை யும், டாகடா. ஆர். பி. சேதுப்பிள்ளை, டாக்டர். மு. வரதராசனர் போன்ற தமிழறிஞர்களையும்கொண்ட ஒரு குழு அமைத்து, அக்குழுவின் கருத்தறிந்து பொதுவிடுமுறைக்கு வழிவகை காணவேண்டும். வளளுவர் நாள், நாட்டில் சிறப்புற நடைபெறும் ஒருபெரு விழா நாளாக மாறும் காலம் விரைந்து வந்துகொண்டிருக்கிறது. வரும்பொருள் உணாந்து வள்ளுவர் நாளைப் பொது விடுமுறைநாக்க அரசியலார் சட்டம் செய் வார்கள என நம்புகிறோம். சேலம், குகை திருவள்ளுவர் கழகத்தாரின் வேண்டுகோள் மிக இன்றியமையாத தொன்று. எனவே அவர்களைப் பாராட்டுகிறோம்—வாழ்த்துகிறோம். தமிழகத்தில் தோன்றித் தமிழ் மறையைச செய்த நம் திருவளளுவனுர்கரு, நாம் செய்ய வேண்டிய கடமைகளைப் புரிதற்கு, இனிமேலுங காலங்கடத்திக்கொணடு போதல் தககதன்று.

(௪ சென்னையில் திருவள்ளுவர் திருநாள்

சென்னையில் உள்ள பல்வேறு தமிழ்க் கழகங்கள் ஒன்றுகூடி வைகாசி 29 (11—6—57) ஆம் நாளைத் திருவள்ளுவர் திருநாளாகக் கொண்டாடவேண்டுமென 19—5—57-இல் நக்கீரர் கழகச் சார்பிலும், மாணவ மன்றச் சார்பிலும் முடிவு செய்யப்பட்டது. இவ்வேண்டுகோள் அறிக்கையைச் சிறுவை. திரு. நச்சினார்க்கினியன் அவர்கள் வெளியிட்டுள்ளார்.

குறிப்பு: தமிழாசிரியர்கள் ஒன்றுகூடி வள்ளுவர் திருநாளைக் கொண்டாடுவது சாலும் சிறப்பும் உடையதாகும். சிறுவை. திரு. நச்சினார்க்கினியாரின் வேண்டுகோட்கிணங்க வள்ளுவர் விழாவினைச் சிறப்புற நடத்தத் தமிழ்க் கழகங்களும், தமிழாசிரியர் கழகமும் முன் வருவார்களாக.

(ஙி) 'சேக்கிழார் திருநாட் கழகம்' தேவக்கோட்டை

இக் கழகப் பேரன்பர்கள் 'பத்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவ'ராம் சேக்கிழார் திருவிழாவை வள்ளுவர் யாண்டு ௧௯அஅ, வைகாசி ௧அ, ௧௯, ௨0 வெள்ளி, சனி, ஞாயிறு ஆகிய மூன்று நாட்களிலும் மிகச் சிறப்பாகக் கொண்டாடினார்கள் எனத் தெரிகிறது. நிகழ்ச்சிகள் வருமாறு: வெள்ளிக்கிழமை, 'திருத்தொண்டர் புராணமும் திருக்குறளும்' செல்வி வயிநாகரம் இராம. மீனாட்சி. 'திருத்தொண்டர் புராணமும் திருப்புகழும்' திருமுருக கிருபானந்தவாரியார்; சனிக்கிழமை, 'திருத்தொண்டர் புராணமும் தேவாரமும்' சேவு. மெ. மெய்யப்ப செட்டியார்; 'நம்பியாண்டார் நம்பிகள்' செல்வன், இராம. திருஞானசம்பந்தன்: 'திருத்தொண்டர் புராணமும் திருவாசகமும்' சி இராமலிங்கம் எம். ஏ அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தத்துவப் பேராசிரியர்; 'சோமாசிமாறர்' செல்வன் வயிநாகரம் இராம. சொக்கலிங்கம்; 'திருத்தொண்டர் புராணமும் சங்க இலக்கியங்களும்' சுப. அண்ணாமலை எம். ஏ. தியாகராசர் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்; ஞாயிறு, 'நமிநந்தியடிகள்' செல்வன் இராம. திருநாவுக்கரசு; 'திருத்தொண்டர் புராணமும் சித்தாந்த சாத்திரமும்' ஆறுமுக நாவலர்; இரவு 'சேக்கிழாரடிகள்' திருமுறை வீதியுலா.

(௬) திரு. 'பாகம் பிரியாள் மாதர் கழகம்' தூத்துக்குடி

'திருவள்ளுவர் திருநாளை' ௧௯அஅ, வைகாசித்திங்கள் 29-ஆம் நாள் கொண்டாடுவதாகத் தெரிகிறது. திருவள்ளுவராண்டைத் தொடராண்டாக எல்லாவகையான நிகழ்ச்சிகளிலும மேற்கொள்ளவேண்டுமெனவும, ஆட்சியினர் திருவள்ளுவர் திருநாள் விடுமுறை விடுதல் வேண்டுமெனவும் கழகத்தினர் வேண்டிக்கொள்வதாகவும் தெரிகிறது.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர்: வ. சுப்பையா.



திரு. சா. அர. பக்தவத்சலம்

தோற்றம்: 1923 மறைவு: 1957




சிலம்பு ௩௧ | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௮, ஆனி ஜூலை, 1957 | பரல் ௧௧

# மறைந்த இளைஞர்

வெண்பா

"பாரோர் புகழ்பத்த வத்சலப் பாலகவி
சீரோர் வடுகுசார் செம்மலார்—ஏரோர்
கழகப் பணியாளர் கண்ணுதமிழ் விண்ணோர்
பழகப் புவியகன்றார் பார்."

நம் கழகத்தில் ஏறத்தாழப் பத்தாண்டுகள் நற்பணியாற்றிய இளைஞர் திரு. பக்தவத்சலம் ஆவர். இவருக்கு அகவை முப்பத்து நான்கு கடந்து இரண்டொரு திங்களே ஆகின்றன. அவர் இத் திங்கள் எட்டாம் நாள் திங்கட்கிழமை (8-7-1957) முற்பகலில் திடீரென மருத்துவமனையில் ஆவிநீத்தனர். இவர், சிலநாட்களாக உடல்நலம் குன்றியிருந்த காரணத்தால் இடையிடையே ஓய்வுபெற்றும், அலுவலகம் வந்து பணியாற்றியும் வந்தனர். இத்திங்கள் ஐந்தாம் நாள் தாமேவந்து கழகப் படிப்பணம் வாங்கிச் சென்றனர். காய்ச்சலும் மார்பு நோவும் இருந்தமைபற்றி ஏழாம் நாள் பிற்பகல் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டனர். பலவேறு ஊசி மருந்து, உயிர்க் காற்று முதலியன கையாண்டும் பயன்பெறவில்லை.

இவர் செங்கற்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த கிடங்கரை என்னும் ஊரில் உயர்ந்த நாயுடு குடும்பத்தில் சா. அரங்கசாமி நாயுடு அவர்கள் புதல்வராய்த் தோன்றியவர். கூர்த்த மதியினர். இளமைக் கல்வி, பிறந்த ஊரிலும, சென்னை முத்தியாலுப் பேட்டை உயர்நிலைப்பள்ளியில் பள்ளியிறுதிவரையும் பயின்று தேறினர். பின்னர் பச்சையப்பன் கல்லூரியில் இடைநிலைக் கலைக்கல்வியினை (Intermediate) சிறிதுகாலம் பயின்று வந்தனர். கல்வி பயிலுங்காலத்தே தமிழின்கண் தனியார்வம்

உண்டாயிற்று. பாடும் வன்மையும், கதை, நாடகம், கட்டுரைகள கவினுற யாக்குந் தன்மையும் கைவரப்பெற்றனர். மாணவராக இருக்குமபொழுது தோன்றிய இங்கிலை வரவரப் பிறைத்திங்கள போன்று வளர்ந்து வந்தது. இவர்தம் பாட்டுக்கள் ஆற்றொழுக்காய்ச் செம்பொருளாய் இன்சுவையாய்த் தெளிவும் திட்பநுட்பமும் செறிந்தனவாயுள்ளன. மாணவராகப் பயின்று கொண்டிருக்குங்கால் நாவலந்தீவின் நற்றந்தை காந்தியடிகளார் சென்னை போந்தனர். அவர்தம திருப்பெயரால் நீண்டதோர் பாவும் பாவினமும் சேர்ந்த பாமாலை பாடிப் படித்தளித்தனர். அதனை ஆசிரியன்மாரும் அவையோரும் நன்கு பாராட்டினர். ஊரண்மையிலுள்ள மதுராந்தகத்தில் கற்கும் இளமைக்காலத்தே டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் பேரில் அழகிய செந்தமிழ்ப்பா ஒன்று இயற்றினர். அதனை அனைவரும் பாராட்டிப் 'பாலகவி'ப் பட்டம் வழங்கினர்.

பின் பணியாற்றுங்காலத்தும் கதை கட்டுரை நாடகங்கள் எழுதி அறிவைப் பெருக்கிக்கொண்டனர். இவர் எழுதிய நாடகமொன்று அவர்தம் நண்பர்களால் 'இராசா சர். அண்ணாமலை மன்றத்தில்' நடிக்கப்பட்டுத் தகைசால்புகழ் எய்தியது. பல கழகங்களின் தொடர்பும் தலைமைப் பொறுப்பும் செயற் பொறுபபும் உள்ளவராய் ஓவாதுழைத்த ஒண்மையராவர். நகைமுகமும் இனசொல்லும நல்லொழுக்கும் உடையவராவர். நாட்டுத்தலைவர் பலரின் தொடர்புண்டு. இவர் இரண்டாண்டுக் காலம் 'தமிழ மணி' எனனும் கிழமை இதழில் துணையாசிரியராகப் பணியாற்றி வந்தனர். இவர் 'முத்தமிழ் மணி' எனப் புனைபெயர் பூண்டிருந்தார். இவர் எழுதிய தெனாலிராமன் என்னும நாடகம் நம் கழகவழி வெளிவந்துளளது. உயிர் நீங்கிய அவர்தம உடலைக்கண்டு கடைசி அன்பினைக் காட்டும் பொருட்டுக் கழகப்பணியாளர்கள் அச்சகப் பணியாளர் அனைவர்களும் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்களுடன மாலையில் மருத்துவமனை சென்று கண்டு தங்கள் அன்பினையும் நன்றியையும் செலுத்தினர்; கண்கலங்கினர்; கழகச் சார்பில் அழகிய இரண்டு பூமாலைகள் அணியப்பெற்றன. அவர்தம் அருமைத் தந்தையாருளளிட்ட குடும்பத்தினர்கள் கணகலஙகினர். மாலையில் தனி உந்துவண்டி வழியாக (Car) அவர்தம் உடமபு அவர்தம் ஊருக்குக் கொண்டுபோகப்பட்டு நல்லடக்கம செய்யப்பட்டது. அவருக்கு இளம்பருவமசார் மனைவியும தொடக்கப்படிப்புப் படிக்கும் அகவை ஆறு உள்ள ஓர் ஆணமகனும் உளர். அவர்கட்கு எஙகள் கையறுநிலைப் பரிவு உரியதாகுக. அவர்தம ஆவி பரமபதஞ்சார்ந்து இன் புறுவ தாகுக.

---

# மாரியும் உண்டு

[திரு. மது. ச. விமலானந்தம், பி. ஏ.,]

### வள்ளல்கள் வரிசையிலே

அள்ளித் தந்த வள்ளல் பாரி; கருணை வடிவினன், கள்ளமில் உள்ளத்தினன். ஈத்துவக்கும் இன்பமறிந்தவனே தவிர வைத்திழக்கும் வன்கண்மை யறியாதவன். கொடை மடம் அறிந்தவனே தவிரப் படைமடம் அறியாத பாத்தரும் பண்பினன். பாடி வருவோர்க்கு நாடிப் பரிசில் நல்கும் நல்லவன். ஆடிவரும் கூத்தர்க்குக் கோடிப் பொன் தரும் கொடைவள்ளல். தமிழ்கெழு மூவரும் தம்மகத்தே அழுக்காறு கொள்ளும் அளவிற்குத் தக்கார்க்கும் தகவிலர்க்கும் தந்து சிறந்தவன். ஆருயிருக்கு மட்டும் அருள்புரிந்தவனல்லன். ஓருயிர்மாட்டும் உள்ளமுருகி உற்றது செய்யும் உயர்குணத்தான். கடையெழுவள்ளல்களில் பாரியும் ஒருவன். அவர்களனைவரும் பொருளையே தந்து பெருமை பெற்றனர். ஆனால் பாரியோ உயிரையும் தந்த ஒப்புரவாளன். எனவேதான் வள்ளன்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாய், வள்ளல்கள் வரிசையிலே ஒரு வான்சுடராய்—விண்மீனாய் விளங்குகின்றான் வள்ளல் பாரி.

### மாரியின் மாண்பு

இல்லார்க்கேயன்றி எல்லார்க்கும் இல்லையென வழங்கும் இயல்பால் ஈகைக்கோர் எடுத்துக்காட்டாக மாரியைக் கூறுவர். விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து உள்நின்று உடற்றுமாம் பசி. விசும்பின் துளிவீழின் அல்லால் மற்று ஆங்கே பசும்புல் தலையெடுத்தல் கூட அரியதாகும். மாரியில்லையேல் மண்ணுலகில்லை என எண்ணுமளவிற்கு இன்றியமையாச் சிறப்பினது மாரி. எனவேதான் அதனை, "அமிழ்தம்" என அழைக்கலாயினர்.

"நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு."

என ஒழுக்கத்தின் உயிர்நிலை மழையென மொழிந்தார் மறையாளர். மாரியின் மாண்பை யறிந்துதானோ என்னவோ, வள்ளுவனாரும் 'வான்சிறப்பு' என்றே தனியோர் அதிகாரம் அமைத்து—அதுவும் கடவுள் வாழ்த்தினையடுத்து வைத்து அழகு காண்கின்றார். நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரமும் எடுத்த எடுப்பிலேயே,

"மாமழை போற்றதும்; மாமழை போற்றுதும்,
நாமநீர் வேலி உலகிற்கு அவனளிபோல்
மேனின்று தான்சுரத்த லான்"

என்று ஏற்றிப் போற்றுதலும் காண்க.

மாரி தானுகச் சுரந்து மண்ணுயிரைக் காப்பதுபோன்றே வள்ளலாரும் அறிஞர்க்கும் வறிஞர்க்கும் வசிய வழக்கும் வண்மையாளர் வள்ளன்மைக்கும் வான் பெய்தலுக்கும் உள்ள உறவும் ஒற்றுமையும்தான் என்னே!

**மாரியும் உண்டு**

மாரியின் மாண்பு இங்ஙனமாக, உலகுபுரத்தற்கு மாரி இருக்க அதனை மறந்து பைந்தமிழ்ப் புலவரனைவரும் பாரி பாரி என்று பாரியின் புகழ்பாடுகின்றனரே! உலகினைக் காக்க பாரி ஒருவன் மட்டுமா உளன்? மாரியும் இருக்கின்றதே! என்கிறார் ஒப்பில் கபிலர்:

"பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் 'செந்நாப் புலவர்'
பாரி ஒருவனு மல்லன்
'மாரியும் உண்டு' ஈண்டு உலகுபுரப் பதுவே." (புறம்-௧0௭)

சிந்தை, சொல், செயல் மூன்றும் தம்முள் முரண்படாமையன்றோ செப்பம். அத்தகைய செம்மையுடைய 'செந்நாப் புலவர்' கூற்றுக் குறையுடையதாமோ? புலவருலகு இங்ஙனமாக, மக்களுலகோ, உலகுபுரக்க மாரியுண்டென உரைக்கின்றது. இவ்விரு கூற்றில் எதனைக் கொள்ளுவது? எதனைத் தள்ளுவது! என்ற முறையில் மாரியின் மாண்புகூறிப் பாரியின் பண்பைப் பன் மடங்கு பாராட்டும் கபிலர் கவித்திறம் வியந்து செயல் மறந்து பாராட்டற்பாலது.

**பாரியும் மாரியும்**

மாரியினின்றும் பாரி வேறுபடும் நிலையையும், மாறுபடும் மாண்பையும் காண்போமாயின் புலவர் கூற்றுப் புலனுதல்கூடும். எனவே மாரிக்கும் பாரிக்கும் உள்ள வேறுபாடு கண்டு விளக்கம் காண்போம். உழுநிலத்தில் பெய்யாது உவர் நிலத்தில் பெய்யு மியல்பு மாரிக்கு உண்டு. ('உறுமிடத்து தவாது'-புறம்). இச் சிறுமை பாரிபால் என்றுமில்லாத ஒன்று. மடவர்க்கும் மெல் லியர்க்கும ஈயும் பாரி மறவர்க்கும மாண்புடையார்க்கும் ஈய என்றுமே தவறியதில்லை. 'கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றுங்கே எடுப்பதூஉம் எல்லாம் மழை' என்றார் குறளாசிரியர். இத்தகைய கெடுத்தலெனும் குறையோ

கறையோ பறம்புக் கோமானிடம் பார்த்தலே அரிது. 'ஏற்பது இகழ்ச்சி' என்ருள் தமிழ்மூதாட்டி. ஆவிற்கு நீரென்று இரப்பினும் அதுவே நாவிற்குப் பெரும் இழுக்காகும் என்ருர் வள்ளுவர். அவரே குறள் கoருரு-இல், 'கரப்பிலா நெஞ்சின் கடனறிவார் முன்னின்று இரப்புமோர் ஏருடைத்து' என்ருர். வேண்டிய பொருளைப் பெறுதலும், உயிரினும் மேலாம் மான மழியாமையும் இரத்தலுக்கு ஓர் ஏற்றம் தருவதாகும். இத்தகைய மறைத்தலில்லா நெஞ்சமும், மானத்தைப் பெரிதென மதிக்கும் கடப்பாடும் கைவரப் பெற்றவன் பாரி. ஆனல் மாரியோ கரக்கும் தன்மையது; எனவே கடனறிவற்றது.

அற்ருரும் அலர்ந்தாரும் அலமந்து அரற்றும் மொழிதனைக் கேட்டும் இரங்கி இன்னல் தீர்க்கும் இயல்பு மாரிபால் இல்லை. ஆனல் பாரியோ ஓரறிவுயிர்க்கும் இரங்கி ஏங்குமியல்பினன். ஓரறிவுயிர்க்கும் இரங்கிய பாரி எங்கே? ஆறறிவினரின் அறைகூவலுக்கும் அருள்புரியாத மாரி எங்கே? காட்டுவளமும் நாட்டு வளமும் காணத் தேர் ஏறிப் புறப்பட்டான் தேர்வண் பாரி. விரைந்து சென்ற தேர் 'சட்'டென நின்றது. பற்றிப்படரப் பற்றுக்கோடின்றி வாடிக்கிடந்த முல்லைக் கொடியைக் கண்டன கண்கள். கரைந்தன நெஞ்சம். கொழுகொம்பின்றிக் குழைந்த கொடியின் துன்பம் கண்டு துயரம் எண்ணிக் குமுறியது வள்ளல் உள்ளம். தரமறியும் திறமின்றித் தன்னையே மறந்து தானேறி வந்த தேரினையே கொழுகொம்பாக நிறுத்திவிட்டு நடந்தான் நன்னகர் நோக்கி. தன் திறமும் தரமும் அறியானுய்த் தேரின் உயர்வும் நோக்கானய், முல்லைக்கொடியின் துயர் ஒன்றே எண்ணி, உற்றதும் உணராது ஏற்றதும் எண்ணுது தேரினையே தந்துவந்த தார்வேந்தனின் றன்மைதான் என்னே! இதனைப்,

"பூத்தலை அருஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி."

என்று புறம் - உoo புகழ்வதும் காண்க.

வள்ளல்கள் வழங்காது போயின் வறியவர்க்குப் பிறர் மாட்டுச் சென்று வாழ்வு பெறுதல் கூடும். ஆனல் வானம் வறக்குமேல் மன்னுயிர்க்கு வாழ்வேது? வகையேது? எங்கு யாரிடந்தான் செல்வது? சென்ருலும் பயனேது? ஆனல் இல்லார்க்கு இல்லையெனக் கூறி வேறு வள்ளல்களை நாடும் நிலை ஏற்படாதவாறு இரந்தோரனைவருக்கும் கரவாது தரும் கருணை மறவன் பாரி. வசியும் வளனும் சிறக்கப் பசிபோக்கும் பாரி

மாரியினும் மேம்படுதல் காண்க. மேகமே இனி இல்லையெனு மளவிற்கு எங்கேனும் மழைபெய்வதுண்டா? தன்னையே முற்றும் தந்து சிறக்குமியல்பு மாரிக்கு இல்லை. ஆனால் பாரியோ தன்னையும் தனக்குரிய அனைத்தையும் ஈந்தான். எனவே சிறந்தான். பெய்தநீர் அனைத்தையும் மீண்டும் மேகமாகப் பெறுதலும் பின்பு மழையாகப் பொழிதலும் மாரியின் இயல்பு. ஆனால் பாரியோ 'இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் எனும் அறவிலை வணிகனல்லன்' பயன் கருதி வழங்குவோன் பாரியு மல்லன். ஈத்துவக்கும் இன்பத்திலே இனிமை கண்டான். எனவே ஈந்தான். தன்னுயிர்க்கே இறுதி வருமளவிற்கு ஈந்து இறுதியிலே தன்னையே தமிழ்வேந்தர்க்குத் தந்து தன்னேரிலாத் தனிச் சிறப்புப் பெற்றான். இன்னபிற சான்றுகளால் மாரியினும் சிறந்து விளங்குபவன் பாரி என்பதனை அறியும்போது கபிலரின் கருத்து இனிது விளங்கக் காண்கின்றோம்.

ஒப்பில் கபிலனின் உவமை

உலகில் உயர்ந்த ஒன்றையே மற்றொன்றிற்கு உவமையாக் கூறுதல் மரபு. அம் முறையில்தான் அமிழ்தமெனத்தகும் மழையை மாண்புமிக்க வள்ளண்மைக்கோர் உவமையாகக் கூறி யுள்ளனர். பெருஞ்சித்திரனார், வன்பரணர், உறையூர் ஏணிச் சேரிமுடமோசியார் போன்ற புலவர்கள். இதனை,

'அடுபோர் ஆனா ஆதன் ஓரி
மாரி வண்கொடை காணிய நன்றுஞ்
சென்றது மன்னெங் கண்ணுளங் கடும்பே.' (புறம் - ௧௫௨)

'மாரி யன்ன வண்மைத்
தேர்வேள் ஆயைக் காணியசென்மே.' (புறம் - ௧௩௩)

'மாரி ஈகை மறப்போர் மலையன்.' (புறம் - ௧௫௮)

போன்ற இன்னபிற எடுத்துக்காட்டுக்களால் அறியலாம். ஆனால் ஒப்பில் கபிலரோ, உவமையாகத் தரும் மாரியை உவமேயமாக்கி, உவமேயமாதற்குரிய பாரியை உவமையாக்கி யுள்ளார். 'பொய்யா நாவிற் கபிலன்,' 'புலனழுக்கற்ற அந்தணாளன்' கபிலன் இங் ஙனம் மாற்றியதேன்? மாரிபால் இவன்கண்ட குறையும் கறையுமே யன்றோ? பாரியின்நிறை கண்டான். எனவே நேர்ப்படமொழிந்தான். தெளிந்ததைத் தெள்ளு தமிழிலே தந்தான். அதனை அள்ளிப் பருகி அகமகிழ்வோம்!

# உள்ளுறையுவமமும் இறைச்சியும்

[திரு. சு. குமாரசாமி ஆச்சாரி, எம். ஏ.]

(சிலம்பு ௩௧ - பரல் ௧0 - ௫0௧-ஆம் பக்கத் தொடர்ச்சி)

உதாரணம் 6

“பாடுகம்வா வாழி தோழி வயக்களிற்றுக்
கோடுலக்கை யாக நற்சேம்பி னிலைசுளகா
ஆடுகழை நெல்லை அறையுரலுட் பெய்திருவாம்
பாடுகம்வா வாழி தோழி.” (கலி - ௪௧.)

இது தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைவிக்குக் கூறியது. வள்ளைப்பாட்டினால் தலைவனை ஏத்துவாம் எனத் தோழி கூறுகின்றாள். தலைவனைப் பயன்படுத்திக்கொள்ளவே, “ஏத்துவாம்” என்கின்றாள். தலைவனைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்ற கருத்து, “வயக்களிற்று... ........பெய்திருவாம் பாடுகம்” என்பதனுள் உள்ளுறைந்து நிற்கிறது. ‘உயர்ந்த மூங்கிலின் நெல் தானே உதிர்ந்ததனை எடுத்துக்கொண்டு உரலிற் பெய்து களிற்றுக் கோடாகிய உலக்கையால் அதனைப் பயன் படுத்திக் கொள்வதுபோலத் தலைவனைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்’ என உவமம் உள்ளுறைந்து நிற்கிறது. குற்றிய அரிசி பயன்படுவதுபோலத் தலைவன் பயன்படுவான் என்னும் கருத்து அவ் விருவருக்கும் இருந்ததாயின் இஃது உள்ளுறை யுவமமாம்! ஆனால், ‘தலைவனைப் பயன்படுத்திக்கொள்ள முடிய வில்லையே. ஆதலின், அது நிறைவேறுமாறு ஏத்துவாம்!’ என்றே அவர்கள் கருதுவதனால் உள்ளுறையுவமமன்று.

நெல் குற்றுபவர்கள் தானே யுதிர்ந்தநெல்லை எடுத்துக் கொண்டுவந்து உரலிலிட்டுக் குற்றினர். தெய்வம் தானே கொண்டுவந்ததனால் தலைவனைத் தன்வயமாக்கினாள் தலைவி. உரலிலிட்ட நெல்லைப் பயன்படுத்திக்கொள்ள உலக்கைகொண்டு குற்றினர் தன்வயப்பட்ட தலைவனால் இல்லறப்பயனை யடைய வரைவுகடாவினள். குற்றப்பட்ட—பயன்படுதற்குத் தகுதி யாக்கிய—நெல்லைச் சுளகுகொண்டு உமியில்லாது தூய்மைப் படுத்திக்கொண்டனர். வரைவுகடாதலாகிய செயல் நன்மை தரும்படி தன் ஒழுக்கத்தினால் முயன்றனள். அங்ஙனம் தூய்மைப்படுத்திய நெல்லைப் பயன்படுத்திக்கொள்வர். ஆனால், தலைவி தலைவனைப் பயன்படுத்திக்கொள்ளவில்லை வரைவுகடாத லாகிய செயல் கற்பொழுக்கத்தோடு அமைதல் வேண்டும் என்பது ‘சேட்படை’ என்னும் அகப்பொருட்பகுதியால்

விளங்கும். 'பகலினு மிரவினும் பயின்று வாரற்க' எனத் தலைவனை மறுக்கின்ற தலைவி, அவனையே மணங்கொள்ள வேண்டுமென்ற உள்ளமுடையவளாயின், கற்பு நெறியினின்றும் தவறுதவளன்றோ! அங்ஙனம் ஒழுகவேண்டியவள் அக் கற்பொழுக் கத்தைக் கைவிட்டு (தமர் கொடுப்ப வரைந்துகொள்ளுதல் வேண்டும் என்பதைக் கைவிட்டு) களவொழுக்கத்தையே மீண்டும் மீண்டும் மேற்கொள்ளுகின்றாள். ஆதலின், தலைவனை அடைந்து பெறவேண்டிய இல்லறப்பயனை அவள் அடையவில்லை.

பயனை யடையாததற்குக் காரணம் களவொழுக்கம் ஆகுமா? எனில், ஆம். நெல்லைக் குற்றிப் புடைத்துத்தான் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். தலைவனை வரைவுகடாவித்தான் பயன் பெறுதல் வேண்டும் உமி தவிடு நீக்கி அதனைப் பயன்படுத்திக் கொள்வர். தம் காதலுக்கு வரும் இடையூறுகளை நீக்கி, அல்லல் நீத்த உவகையடைதல் வேண்டும் உமியை நீக்கப் புடைத்தல் வேண்டும். காதலுக்கு வரும் இடையூறுகளை நீக்கக் கற்பி னின்றும் வழுவாத—அத் தலைவனையன்றி வேறு தலைவனைக் காதலிக்காத—திண்மைநிலை வேண்டும். கற்பினின்றும் வழுவ லாகாது என்ற கொள்கையினாலேயே அவள் களவொழுக்கத்தை மேற்கொண்டாள். ஆதலின், அக் களவொழுக்கம் தவறுடைய தாகுமா? எனில், தவறுடையதேயாம். ஏனெனில், அல்லலில்லா வுவகையை அவ்வொழுக்கம் தாராது. 'குற்றிய நெல்லைச் சுளகால் புடைத்தல் வேண்டும்' என்பது உண்மையே. எனினும், அச் சுளகு அதற்கேற்ற வன்மையுடையதாகவும் வேண்டும். தக்க வன்மையில்லாத சுளகு—சேம்பினிலையாகிய சுளகு—புடைத்தற் றொழிலை முற்றமுடித்து அரிசியை ஆக்காத தன்மைபோலக் களவொழுக்கம் தலைவனை வரைந்துகொள்ளும்படி செய்யாது. சேம்பினிலைகொண்டு அரிசியாக்குவதுபோலத் தலைவியும் கள வொழுக்கத்தின் துணையை விடாமலேயே இல்லறப்பயனை யடைய வேண்டுமெனத் தோழி கூறுவதாக உள்ளுறையுவமம் தோன் றினும், அத் தோழியின் கருத்து, களவொழுக்கத்தைக் கைவிட வேண்டும் என்பதேயாம். அக் கருத்து, "சேம்பினிலைச் சுளகால்" என்பதனாற் பெறுதும். 'களவொழுக்கத்தின் துணையால் பயனை யடைதல் வேண்டும்; ஆனால்............' என்பதனால் உள்ளுறை யுவமம் முற்றமுடியாமை காண்க. ஆதலின், இஃது 'உவமக் குறிப்பொடு பிறிதொரு பொருள்பட வந்த இறைச்சி' என்ற உள்ளுறையாம்.

உதாரணம் 7

"கருங்கோட்டு நறும்புன்னை மலர்சினை மிசைதொறும்
சுரும்பார்க்கும் குரலினோ டிருந்தும்பி யியையூத

ஒருங்குடன் இம்மென விமிர்தலிற் பாடலோடு
அரும்பொருள் மரபின்மால் யாழ்கேளாக் கிடந்தான்போற்
பெருங்கடல் துயில்கொள்ளும் வண்டிமிர் நறுங்கானல்."
(கலி - கஉ௬.)

இது காப்பு மிகுதிக்கண் ஆற்றாத தலைவி தலைவன்பாற் சென்ற நெஞ்சினை நோக்கி அழிந்து கூறியது. புன்னைமலரும் செவ்வி பார்த்து, அம் மலரை நுகர்தற்குரிய வண்டுகள் நுகர்கின்றமை கண்டு, யாமும் காமச் செவ்வியறிந்து நந்தலைவரால் நுகரப் பெற்றிலேமென்று வருந்துகின்றது தலைவியின் நெஞ்சு. " கருங்கோட்டு............இமிர்தலின் " என்றதனால், 'மலரின் செவ்வி கண்டு மலரை வண்டுகள் நுகர்வதுபோலத் தன் காமச் செவ்வி கண்டு தலைவன் தன்னை நுகர்ந்தான் அல்லது நுகர்வான்' எனக் கருத்து முடியுமாயின் இஃது உள்ளுறையுவமமாம். 'தலைவன் தன்னை நுகரவில்லையே' எனத் தலைவி வருந்துகின்றாள் என்பது அச் செய்யுளால் உணரப்படுகிறது. ஆதலின், உள்ளுறையுவமம் முற்ற முடியாமை காண்க.

"பெருங்கடல் துயில்கொள்ளும் வண்டிமிர் நறுங்கானல்" என்பதும் இறைச்சிப்பொருளது. 'வண்டிமிர்தலைக் கேட்டுக் கொண்டே கடலும் துயில்வதுபோல, இனிய இசையைக் கேட்டுக்கொண்டே தலைவனிடத்துத் துயிலைப் பெறுகின்றிலேம்' எனத் தலைவி வருந்துகின்றாளாதலின் இறைச்சியாம். பெற்றேம், பெறுகின்றேம், பெறுவேம் என வாராது 'பெறுகின்றிலேம்' எனப் பொருள்படுதலின் இறைச்சியாயிற்று.

உதாரணம் 8

" கன்றுதன் பயமுலை மாந்த முன்றில்
தினை பிடியுண்ணும் பெருங்கன் னாட
கெட்டிடத் துவந்த உதவிக் கட்டில்
வீறுபெற்று மறந்த மன்னன் போல
நன்றி மறந்தமை யாயின் மென்சீர்க்
கலிமயில் கலாபத் தன்ன விவள்
ஒலிமென் கூந்தல் உரியவாம் நினக்கே." (குறுந் - உ௫.)

தன் கன்று கெடாதபடி காத்தற்குப் பிடி தினையை மேய்கிறது. தலைவன் காமஇன்பம் நுகர்தலாகிய தன்கருமம் சிதையாதபடி தன் தலைவியை நாடி நுகர்கின்றான். பிறர்க்கு உயிரைக்கொடுக்கின்ற தினையைப் பிடி யுண்டு அழிவுசெய்கிறது. தோழிக்கு உயிராகிய தலைவியைத் துயருறுத்தி இறந்துபடும்படி செய்கின்றான் தலைவன். இது, " கன்றுதன்............நாட " என்பதனுள் எழுந்த உவமக் கருத்தாம். எனினும், இஃது

உள்ளுறை யுவமமன்று. "முலைமாந்த" என்றது, 'தன்கருமம் சிதையாதபடி பார்த்து' என்னும் துணையன்றி உள்ளுறையுவமப் பொருளை முற்ற வுணர்த்தாமை யுணர்க" என்பர் நச்சினார்க்கினியர். தலைவனது கொடுமை கூறுகின்ற தோழி, "இவள் ஒலிமென் கூந்தல் உரியவாம் நினக்கே" எனவும
'தன் கன்று கேடுறாதபடி தன்பய முலைமாந்த வேண்டுமாயின், தினையை யழித்தலாகாது. முன்றிலிலுள்ள தினையை முற்றும் உண்டபின் வேறு தினையின்மையின் தன் கன்றினைக் காத்தல் இயலாது. தலைவி இறந்துபடும்படி செய்தால் காம நுகர்ச்சியாகிய கருமமும் இல்லையாம். இதனை யுணர்க.' எனத் தோழி குறிக்கின்றாள். ஆதலின், "கன்று தன்...........நாட" என்பது உள்ளுறை யுவமமன்று. உள்ளுறையுவமம் முற்றமுடியாமையின் இறைச்சியாம்.

இச் செய்யுளுக்கு வேறுமுறையில் இறைச்சிப் பொருள் கூறுவர் டாக்டர், உ. வே. சாமிநாதையர் அவர்கள். "தன் பசியை நீக்குவதற்கும் கன்று தன் முலைமாந்திக்கொண்டே யிருக்க அதற்குரிய பாலைப் பெறுதற்கும் தினையைப் பிடியுண்டதுபோல நீயும் யாங்கள் நின்னுறவை எதிர்நோக்கி மகிழ்ந்திருக்குங்கால் காமப்பசியைத் தணிக்கும் நின் கடப்பாட்டையும் இவளும் இன்பம் நுகர்ந்திருக்க வரைந்துகொள்வதனையும் ஒருங்கே யுடையாய்" என உள்ளுறையுவமமாக அமையாது, அவற்றிற்குரிய 'பொருளை யீட்டி வருக' எனப் பொருள்படும் என்பர். இஃதும் உள்ளுறை யுவமம்போலத் தோன்றும் இறைச்சியேயாம்.

மேற்காட்டிய உதாரணங்களான், இறைச்சிப்பொருள் தலைவன் கொடுமைகூறும் வழிவரும் என்பதும், ஒன்றனைச் சொல்ல அதனானே பிறிதொரு பொருள் தோன்றுவதும், உள்ளுறையுவமம் போலத் தோன்றிப் பிறிதொரு பொருளைத் தோற்றுவிப்பதுமாக வரும் என்பதும், தலைவனது அன்பினைச் சுட்டும் வழியும் வரும் என்பதும் கருப்பொருளடியாகத் தோன்றும் என்பதும் புலப்படுதல் காண்க.

*இறைச்சி உள்ளுறை யுவமமன்று*

இறைச்சிக்கும் உள்ளுறை யுவமத்திற்குமுள்ள வேறுபாடு மேல் இறைச்சிக்குக் காட்டிய 4, 5, 6, 7, 8-வது உதாரணங்களில் விளக்கப்பட்டுள்ளது. "உள்ளுறுத் திதனோ டொத்துப் பொருள் முடிகென உள்ளுறுத் திறுவது உள்ளுறை யுவமம்" என்பர் தொல்காப்பியர். கருப்பொருளிலிருந்து தோன்றும் கருப்பொருட் செய்தியோடு ஒத்து உவமக் கருத்து முடிதல்

வேண்டும். அங்ஙனம், உவமக்குறிப்பு முற்ற முடிந்துவருவது உள்ளுறை யுவமமாம். இறைச்சியும் உள்ளுறை யுவமம்போலத் தோன்றும்; ஆனால், உவமக் கருத்தொழிந்துப் பொருள் முடியாது வரும். உவமக் கருத்திற்கும் அதனால் தோன்றும் பிறிதொரு பொருளுக்குமிடையே 'ஆதலால்' என்னும் சொல் வந்தால் உள்ளுறையுவமமாம். 'ஆனால்' என்னும் சொல் வந்தால் இறைச்சியாம். இறைச்சி கருப்பொருள் அடியாக வருதலால் ஒட்டணியும் ஆகாது. நச்சினார்க்கினியர், "கன்றுதன் பயமுலை மாந்த" என்னும் குறுந்தொகைச் செய்யுளை உதாரணமாகக் காட்டி விளக்குமிடத்து "உள்ளுறை யுவமப்பொருளை முற்ற உணர்த்தாமையை உணர்க" என்பதையும் காண்க.

இரண்டிற்குமுள்ள வேறுபாடு

இரண்டும் உள்ளுறை வகையாய் அகத்திணைக்கே பெரு வழக்காய் வருவதனால் ஒன்றே எனத் தோன்றும் என்னும் இரண்டும் வெவ்வேறானவையாம் இரண்டிற்குமுள்ள வேற்றுமைகள் : (1) தெய்வம் ஒழிந்த கருப்பொருளை யிடனாகக்கொண்டு அக் கருப்பொருட் செய்தியை உவமையாக்கிக் கருதியபொருளை அவ் வொப்பினால் உணர்த்துவது உள்ளுறை யுவமம். உள்ளுறை யுவமப்பொருளை முற்றமுணர்த்தாது குறிப்பின் பிறிதொரு பொருள் தோன்றினால் அஃது இறைச்சியாம் உள்ளுறையுவமச் சார்பின்றியே செய்யுளின் செம்பொருளின் புறத்தே தோன்றும் குறிப்புப்பொருளை உணர்த்துவதற்கு இறைச்சி (கருப்பொருள்) துணையாயிருத்தலுமுண்டு ஆதலின், இறைச்சி உவமக் குறிப்போடு வருவது, உவமக் குறிப்பின்றி வருவது என இருவகைப் படும். (2) தலைவன், தலைவி, செவிலி, தோழி, பாங்கன், பாணன் ஆகிய அறுவரும் உள்ளுறையுவமம் கூறுதற்குரியர். இறைச்சி கூறுதற்குரியர் தலைவியும் தோழியுமாம். (3) இறைச்சி பெரும்பாலும் தலைவன் கொடுமை கூறுமிடத்து வரும்; சிறுபான்மை அன்புறுதகுந சுட்டுமிடத்தும் வரும். உள்ளுறை யுவமம் ஈரிடத்தும் வரும்.

அகப்பொருட்கே உரியவையா?

இவை அகத்திற்கே வரவேண்டும் என்றோ புறத்தில் வரக் கூடாதென்றோ தொல்காப்பியர் வெளிப்படையாகக் கூறவில்லை. ஏனைய உள்ளுறைகளுக்கு விளக்கம் கூறாது உள்ளுறையுவமத்திற்கு மாத்திரம் அகத்திணையியலில் கூறியிருப்பதினாலும், திணை யுணர்த்தலின் தவறாது இயல்வது என்பதனாலும் உரையாசிரியர்கள் இதற்கு அகப்பொருட் செய்யுட்களையே உதாரணமாகக் காட்டுவதனாலும் உள்ளுறையுவமம் அகத்திற்கே உரியதென்பது

வெளிப்படை. இறைச்சி தலைவனது கொடுமை சுட்டுமிடத்தும், வற்புறுத்தவேண்டி அன்புறு தகுந சுட்டுமிடத்தும் வருவது இயல்பானமையின் அஃதும் அகத்திற்கே வரும் உரிமை யுடையதாம்.

இவை புறப்பொருளினும் வருமென்பர் சிலர். ஆயினும், டாக்டர், உ. வே. சாமிநாதையர் அவர்கள் புறநானூற்று உரையின் இயல்பு கூறும் பகுதியில் (புறநானூறு ?-ஆம பதிப்பு) "அகப்பொருட் செய்யுட்களுக்கு உரை வகுக்கும் உரை யாசிரியர்கள் உள்ளுறையாகவும் இறைச்சிப்பொருளாகவும் அறிந்து கூறும் பொருளைப்போன்று, பாட்டிற் காணப்படும் இன்ன சொற்களின் குறிப்பினால் இன்ன பொருள் தோன்று கின்றதென்றும் இன்ன நயம் புலப்படுகின்றதென்றும் இவர் எடுத்துச் சொல்லுமிடங்கள் மிக்க இன்பத்தையுண்டாக்கும்" எனக் குறித்து, இதற்கெடுத்துக்காட்டாகப் புறம் 23, 143, 145, 200-ஆம் செய்யுட்களைக் காட்டுவர். ஆதலின், ஐயரவர்கள் கருத்தின்படி உள்ளுறையுவமமும் இறைச்சியும் அகபொருட் செய்யுட்களிற்றான் வருமென்பதும், புறத்தில்கொள்ளும் குறிப் புப்பொருளை உள்ளுறையுவமம் இறைச்சி எனக் குறிப்பதில்லை என்பதும் நன்கு விளங்கும்.

இவை தமிழுக்கே உரியன

இறைச்சிக்குக் கருப்பொருள் சார்பில்லை என வாதிப்பார் சிலர். இச் சாரார் 'தமிழில் வழங்கும் அணியிலக்கணம் வட மொழி யிலக்கணத்தின் மொழிபெயர்ப்பே யொழிய தமிழுக் கென ஒன்றில்லை என்னும் கொள்கையுடையவராவர். அணி களுள் பல அவர் தம் கொள்கையின்படி இருக்கலாம் எனினும் ஒருசிலவாவது தமிழுக்கென இருந்திருத்தல் வேண்டுமன்றோ? நனிநாகரிகம் பெற்ற தமிழரின் வாழ்க்கைவளத்தைப் புலப் படுத்துகின்ற தொல்காப்பியம் அவர்களது பேச்சுத் திறத்தையும் அறிவிக்கின்றதன்றோ! அணியிலக்கணம் பேச்சுததிறத்தினை அளந்துகாட்டுவதுதானே! குறிப்பால் பொருளுணர்த்தலை விளக்கும் தொல்காப்பியர் அவற்றை முன்னம், குறிப்புமொழி, எச்சம் எனப் பாகுபடுத்துகின்ற முறையினை ஓர்ந்துணர்க. தமிழுக்கென அணியிலக்கணம் தனியாக அமையவில்லை என்று கூறுவோர் சிந்திப்பின், இன்று அணியிலக்கணம் கூறும் பல்வகை அணிகளும் பண்டைச் சங்க இலக்கியங்களில் விளங்கு வதைக் காணலாம்

உள்ளுறையுவமம் வடமொழியில் காணப்படாததொன்று. இதனை ஒருபுடையொத்த அணியொன்றுண்டு. அது பரிக ராலங்காரம் எனப்படுவது. அவ் வணி, தமிழில் 'கருத்துடை

படைகோளி யணி' எனக் கூறப்படுகிறது. ஒரு கருத்தை புட்கொண்ட அடைமொழி அமைத்துக் கூறுதலாம் அது. "திங்கள் முடிசேர் சிவனுமது தாபத்தை இங்ககற்றி யாள்க இனிது" என்பது அதற்கோர் உதாரணம் இதனுள் "திங்கள் முடிசேர்" என்னும் அடைமொழி 'தாபத்தை நீக்கவல்லன்' என்ற கருத்தினை உட்கொண்டிருக்கின்றது. குவலயாநந்த (தமிழ்) உரையாசிரியர் வித்வான், மீனாட்சிசுந்தரக் கவிராயர் அவர்கள் இவ் வணியில் வியங்கியமான பொருளிருந்தபோதிலும் தொனி என்ற விவகாரமில்லை எனக் கூறியுள்ளார் ஆதலின், இது வியங்கியத்தின் வேறுபட்டதாம். 'அடைமொழி ஒரு கருத்தை யுட்கொண்டிருப்பதால் தமிழில் வழங்கும் உள்ளுறை யுவமம் என்று கூறுதல் இயலாது; அவ் வடைமொழி, நாடு, ஊர் முதலியவற்றை விளக்கவந்த கருப்பொருள்களால் அமைய வில்லை யாதலின்' என உணர்க. உள்ளுறையுவமம் தமிழுக்கே உரியதென்பது இதனுல் வெள்ளிடைமலையாம். மேற்கண்ட உதாரணங்களிலிருந்து கருப்பொருட்சார்போடு இறைச்சி தோன் றும் என்பதும் நன்கு புலனும். வடமொழி யிலக்கணத்துள் கூறப்படாததனுல் கருப்பொருட் சார்புடையதன்று எனல் பொருந்துமா? ஓர்க.

முடிவு

உள்ளுறையுவமமும் இறைச்சியும் வேறுபட்டவை என்று கண்டோம். ஈண்டு இறைச்சி என்பது உடனுறையையே குறிக்கும் என்பது உதாரணங்களால் கண்டோம். உரை யாசிரியர்கள் கருத்தும் அதுவே. ஆதலின், 'உள்ளுறை யுவமமும் உடனுறையும்' என்றுதான் இக் கட்டுரையைக் கொள்ளுதல் வேண்டும். உடனுறையைமாததிரம் இறைச்சி என்பது வழக்கில் புகுந்ததொன்று. ஆனல் இறைச்சி என்பது 'உள்ளுறை' என்ற பொருளில் அமைந்துளது. இறைச்சி என்ற சொல்லுக்குக் கருப்பொருள் என்ற பொருளுண்டு. கருப் பொருள் அடியாகத் தோன்றும் பொருளைக் குறிப்பதனுல் இறைச்சி என்பது 'உள்ளுறை' எனப் பொருள்படுவதாயிற்று. இஃது "உள்ளுறையாவது பிறிதொரு பொருள்பட நிற்ப தொன்று. அது கருப்பொருள்பற்றி வரும் என்பது அகத் திணையியலுட் கூறப்பட்டது" என இளம்பூரணர் கூறுவதனுல் வலியுறுதல் காண்க. 'கருப்பொருளாகிய நாட்டிற்கும் ஊர்க்கும் துறைகரும் அடையாகி வருவது இறைச்சி' எனவும் அவர் கூறுவதைக் காண்க. இவ் வுண்மையைச் சிறிது காண்பாம்.

"இறைச்சிதானே பொருட்புறத்ததுவே" என்ற சூத்திரத் தின் பொருள், 'வாக்கியம் குறிக்கும் பொருளுக்குப் புறத்ததாக

... புறத்ததாகத் தோன்றுகின்ற பொருள்' என்பதனல் 'இறைச்சி' என்பது, 'தொனி' என்பதாகும். எனவே, உள்ளுறைகளைக் குறிக்கும் பொதுச் சொல்லாம் அது. மணியினின்றெழும் ஓர் ஒலியலை வேறோர் ஒலியலையைத் தன்னிடத்திலிருந்து தோற்றுவிப்பதுபோல ஓர் உள்ளுறை பிறிதோர் உள்ளுறையையும் தோற்றுவிக்கும். இதனை, "இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே" என்னும் சூத்திரத்தால் விளக்குகின்றார் தொல்காப்பியர். இந்த இறைச்சியே ஐவகைப் படும் எனத் தொல்காப்பியர், "உடனுறை யுவமம் சுட்டு நகைசிறப்பெனக் கெடலருமரபின் உளளுறை யைந்தே" என்ற சூத்திரத்தால் குறிப்பிடுகின்றார். ஈண்டு 'உள்ளுறை' எனப்படுவது இறைச்சியேயாம் என்பதனை, "உள்ளுறையாவது..........கருப்பொருள்பற்றி வருவது" என இளம்பூரணர் குறிப்பதனல் உணரலாம். பொதுச்சொல்லாக வழங்கின 'இறைச்சி' என்னும் சொல் இப்பொழுது உடனுறையை மாத்திரம் குறிக்கும் சிறப்புச்சொல்லாக வழங்கப் படுகிறது. இவ் வுண்மையை அகநானூற்றுப் பழைய உரையால் உணரலாம்.

மாறனலங்கார ஆசிரியர் நச்சினர்க்கினியரையும் பேராசிரியரையும் துணையாகக்கொண்டு, 'இறைச்சி' என்பதைத் தனி உள்ளுறையாக ஆக்கினர். அவர் துணைகொண்டே இக் கட்டுரை எழுந்தது. இறைச்சியை உள்ளுறைகளுக்கெல்லாம் வழங்கும் பொதுப்பெயர் எனப் பொருள்கொண்டால் இறைச்சிபற்றிய பல்வகை ஐயங்களும் நீங்கிப்போம். இக் கட்டுரையுள் இறைச்சிக் குரிய இலக்கணங்களெனக் காட்டப்பட்டவை உடனுறைக்குரிய இலக்கணமாம் என உணர்க. சுட்டு, நகை, சிறப்பு எனும் மூன்று உள்ளுறைகளும் உடனுறை, உள்ளுறையுவமம் என்ற இரண்டினுள் அடங்குமென்பதை ஓர்ந்துணர்தல் வேண்டும். இவ் விரண்டையும் வடநூலார் 'அநுநாதம்', 'பிரதித்வனி' என்பர். ஏனைய மூன்றனையும் முறையே 'வஸ்துத்வனி', 'ரசத்வனி', 'அலங்காரத்வனி' என்பர் வடநூலார். இம் மூன்றனையும் பற்றிப் பின்னர் ஆய்வோமாக.

# செந்தமிழ்நாடு

[ஆசுகவி, கீர்த்தனை அரசு, சித்திரகவிச்சரபம், கணித
சோதிட கலாநிதி, திருவையாற்றுப் புலவர்,
திரு. பி. வி. அப்துல் கபூர் சாஹிப்.]

## கீர்த்தனை நவமணிக் கண்ணிகள்

(ஆயிதிவாலி என்ற மெட்டு)

தாளம் : ஆதி ராகம் : தேசிகதோடி

### பல்லவி

செந்தமிழ்நாடு செந்தமிழ்நாடு

### அனுபல்லவி

முந்திமாந்தர் தோன்றியநாடு மொழி
முதலிலே உண்டாக்கிய நாடு—செந்தமிழ்நாடு

### சரணங்கள்

கற்காலத்தைப் பொற்காலமாக்காட்டியநாடு—உயர்
கடவுட்காகக் கற்றளிமுதற்கட்டியநாடு
விற்புலிமீன் இமயப்பொருப்பிலே—தீட்டி
வேந்தர்மூவராண்ட நன்னாடு—செந்தமிழ்நாடு

முதலிலே மரக்கலத்தைக் கட்டிமுடித்திட்டநாடு—ஒளிர்
முத்துமிளகு மயிலின்தோகை சந்தனத்தோடு
விதவிதமாச்சரக்கை யேற்றியே—வணிகம்
மேதினியெங்கும் செய்திட்டநாடு—செந்தமிழ்நாடு

அகத்தியர்பதினெமூவர்க்குமுன் குடகுநாட்டிலே—வாழ்ந்த
அகத்தியர்சேயிடத்திற்கேட்டுப் பொதியிற்பொருப்பிலே
இகத்தில்முதலில் இயலிசைகூத்து விளங்க
இலக்கணங்களை வகுத்திட்டநாடு—செந்தமிழ்நாடு

தொல்காப்பியம்வடவர் வேதம்தோன்றிடா முன்னே—தமிழில்
தூயமறையைத் தீட்டியி ல்லறந் துறவறம் பேணி
பல்காப்பியம் சங்கமூன்றிலே புலவர்
பாடியுலகிற் பரப்பியநாடு—செந்தமிழ்நாடு

உழவுதொழிலால் உலகவுயிரை ஓம்பியநாடு—நல்ல
உடைகள்நெய்தே உலகமானங்காத்திட்டநாடு
கழகம்பட்டிமண்டபங்களிலே—நீதிக்
கதைகள் பலவும்வளர்த்திட்டநாடு—செந்தமிழ்நாடு

கங்கையுங்கடாரங்கொண்டு காசினிதொழவே—எதிர்த்த
கலிங்கம்வென்று பரணிபெற்ற கனமிகுநாடு
சிங்கம்போலவடவர்தலையிலே—கண்ணகித்
தெய்வச்சிலைக்கற் கொணர்ந்திட்டநாடு—செந்தமிழ்நாடு

கற்பரசிக ளாதிமந்தி கண்ணகியோடு—பாடுங்
கவிரயசிகள் ஔவைமுதலாக் கலைவளர்த்தோரும்
மற்புயத்துப்பாரிமுதலெழு—மூவர்
வள்ளலாரைப் பெற்றநன்னாடு—செந்தமிழ்நாடு

பூமிவானம் கோள்களுடுக்களறிந்திடுநூலும்—வானிற்
போகுந்தேர்கள் குதிரைமயில்கள் புனைபொறிநூலும்
வாமச்சிற்பம் மருத்துவநூலும்—பிறவும்
வகுத்துப் புவியில் வழங்கியநாடு—செந்தமிழ்நாடு

பொன்னி பெண்ணை வையை பொருநைப்புனல் வளத்தாலே—கழனி
பொழில்களுணவுகனிமலர்தேன் பொலிவதனாலே
கன்னித்தமிழ்நாடு பொன்னாடு—பரந்த
காசினிதனி லேநிதற்கீடு—செந்தமிழ்நாடு.

## திருக்குறள் மாண்பு

[திரு. வடிவேல் முதலியார்]

உள்ள விருள்கடிந்தே யோங்கின்ப மீந்திடலால்
வள்ளுவரும் வான்மதியு மொப்பென்பர்—விள்ளுமதி
தேய்ந்து வளரும் திரண்மேகங் கோண்மறைக்கும்
ஆய்ந்த குறட் கில்லை யவை.

# கம்பன் காவியநடை

[திரு. ச. கணபதி முதலியார், எம். ஏ., எல். டி]

(சிலம்பு ௩௧, பரல், ௧0, பக்கம் ௪௬௩-ன் தொடர்ச்சி)

கீழ்வரும் கம்பன் பாக்களின் ஈற்றடிகள் கம்ப ராமாயணம் படித்தோர் நினைவில் யாண்டும் அசைக்க முடியா வண்ணம் மறத்தற்கியலாதாய் ஊன்றி நிலைபெற்றிருக்குமென்பதும் திண்ணம். அவ் வீற்றடிச் செல்வங்களுள் ஒரு சிலவற்றை அடியில் தருதும்:

'கண்ணிணைக் காக்கின்ற விமையிற் காத்தனர்'
'கைவண்ண மங்கு கண்டேன் கால்வண்ண மிங்கு கண்டேன்'
'பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ'
'அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்'
'கண்வழி நுழையுமோர் கள்வனே கொலாம்'
'எடுத்தது கண்டன ரிற்றது கேட்டார்'
'கைவளை திருத்துபு கடைக்கணி னுணர்ந்தாள்'
'மண்ணே கொள்நீ மற்றைய தொன்றும் மறவென்றான்'
'அப்பொழு தலர்ந்தசெந்தா மரையினை வென்ற தம்மா'
'கழுத்தின் நாணுன் மகற்குக் காப்பின் நாணு மென்றான்'
'தையற் கடலிற் கிடந்தானைத் தயிலக் கடலின் தலையுய்த்தார்'
'நின், பிரிவி னுஞ்சுடு மோபெருங் காடென்றான்'
'ஆயிர மிராமர் நின்கே ழாவரோ தெரியி னம்மா'
'தழற்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தான்'
'என்றுமுள தென்றமி ழியம்பியிசை கொண்டான்'
'சான்றோர், கவி யெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார்'
'வஞ்சியென நஞ்சமென வஞ்ச மகள் வந்தாள்'
'கற்றனர் ஞானமின்றேற் காமத்தைக் கடக்கலாமோ'
'களிக்கின்றா ரலாற் கவல்கின்றா ரொருவரைக் காணேன்'
'வெல்லுமோ தீவினை யறத்தை மெய்ம்மையால்'.

ஒரு புலவனின் செய்யுள் கற்றோராலும் மற்றோராலும் விரும்பிப் பயிலப்பட வேண்டுமேல் அவனது பாடல்கள் எளிய, இனிய சொற்களால் ஆக்கப் பெற்றிருத்தல் நல்லது. புலவன் தெள்ளிய நடையில் பாக்களை யாத்தல் வேண்டும். பொருள் மயக்கந்தரும் சொற்களைப் பயன் படுத்தல் கூடாது. பகட்டு மொழிகள், ஆடம்பரச் சொற்கள், கரடு முரடான சொற்கள் நீக்கப்படுதல் வேண்டும். தெளிவு, அதைவிடத் தெளிவு, எல்லா வற்றையும் விட மிகத் தெளிவு (Lucid, more lucid, most

lucid—positive, comparative, superlative) என்ற முறையில் சொற்கள் தெளிவுநிலையோடு அமைதல் வேண்டும். கம்பன் காவிய நடையில் இத் தெளிவு சாலவும் உண்டு. அவனது நடை சையபாகமான நடை; வெள்ள நீர் பள்ளம் பார்த்துச் செல்வது போல் தட்டுத் தடங்கலின்றி ஆற்றொழுக்காய்ச் செல்லும் நெறியது. தவளைப் பாய்த்தும், பருந்தின் வீழ்ச்சியும் அரிமா நோக்கும், ஆண்டுப் பெரிதும் கிடையா. கவிஞனுக்குச் சொற்றெளிவு வேண்டற்பாலது என்பதைச் 'சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவிச் சான்றோர் கவியென' என்ற அவரது வாக்கானும் அறிக. சொற்றெளிவில்லாக் கவிஞன் புன்கவிஞன் என்று கொள்ளப் படுவான் என்பதை அவரே மீண்டும் 'புன்கவி யெனத் தெளிவின்றி' என்று பிறிதோரிடத்தில் கூறியிருப்பதையுங் காண்க. கிட்கிந்தா காண்டம் நாடவிட்ட படலத்தில் புலவனின் காவிய நடையைப்பற்றிக் கம்பர் தம் கருத்தை அறுதியிட்டு உறுதியாகக் கூறியிருப்பதையும் ஈண்டு எடுத்தியம்புதல் தகுதியுடைத்தாம். இராமன் அனுமனுக்குச் சீதையின் அங்க அடையாளங்களை வருணிக்குமிடத்தில் சீதையின் நடைக்கு உவமை காட்ட வந்த கம்பர் இதனைக் குறிப்பிடுகின்றார். அன்னத்தின் மென்னடை சீதை தன்னடைக்கு ஒப்பாகா; இளமபிடியின் பெருமித நடையும் சீதை நல்லாள் நடைக்கு நிகராகா. நாவிற்கு நற்சுவை பயக்கும் செஞ்சொற்களாலாய காவியத்தைப் புனையும் உத்தம கவிஞனின் காவிய நடைக்கே அன்னாளது நடை ஒக்கும் என்கின்றார். அப்பாட்டிது; கற்றுத் தேர்மின் :

"பூவரு மழலை யன்னம் புனமடப் பிடியென் றின்ன
தேவரு மருளத் தக்க செலவின வெனினுந் தேறேன்
பாவரு கிழமைத் தொன்மைப் பருணிதர் தொடுத்த பத்தி
நாவரு கிளவிச் செவ்வி நடைவரு நடைய ளல்லோய்."

கீழ்வரும் செய்யுட்கள் கம்பனது தெள்ளிய நடைக்கு ஒருசில எடுத்துக் காட்டுகள் :

" ஓங்குமா ரோங்கிமலை யோங்கிமண லோங்கிப்
பூங்குலை குலாவுகுளிர் சோலைபுடை விம்மித்
தாங்குதிரை யாறுதவழ் குழவதொர் குன்றின்
பாங்கருள தாலுறையுள் பஞ்சவடி மஞ்ச."

" வெய்யோ னொளிதன் மேனியின் விரிசோ தியின் மறையப்
பொய்யோ வெனுமி டையாளொடு மிளையா னொடும் போனான்
மையோமர கதமோமறி கடலோமழை முகிலோ
ஐயோ விவன் வடிவென்பதொ ரழியா வழ குடையான்."

இச் செய்யுட்கள் சொன்னோக்கும் பொருள் நோக்கு முடையன; எளிய, இனிய சொற்களால் ஆக்கப்பட்டன. சொல்லும் பொருளும் பருந்தும் நிழலும் போல் தொடர்வன.

கம்பன் காவிய நடையில் சொல்லிசை பயக்கும் பாடல்களும் பலவுண்டு. அவனது சொல்நடை சந்தர்ப்பத்திற்கேற்றவாறு மென்றொடர்ச் சொற்களாலும் வன்றொடர்ச் சொற்களாலும் அமையப் பெறுவதும் உண்டு. சூர்ப்பனகை பஞ்ச வடியில் கரிய செம்மலாம் இராமனைக் கண்டாள். ஓவியத்திலும் எழுதவொண்ணா அவன் எழில்நலத்தில் பெரிதும் ஈடுபட்டுக் காமத் தீயால் சுடப்பெற்றாள். அத் தீ நீங்கில் தெறாஉம் குறுகுங்கால் தண்ணென்னும். என் செய்வாள்! எனவே இராமனை விட்டு நீங்கவுமில்லாள். அவனை அணுகத் தன் மாயா சக்தியால் கவினுரு ஒன்றெடுத்தாள். இராமனை நோக்கிச் சென்றாள். அவள் வருகையை வருணிக்க வந்த கம்பர்,

"பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவ மனுங்கச்
செஞ்செவிய கஞ்சநிமிர் சீறடிய ளாகி
அஞ்சொலிள மஞ்ஞையென வன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்."

என்று இச் செய்யுளை மென் சொற்றொடரிலே பெரும்பான்மையும் வைத்து அமைத்தார். இஃது ஒழுகிசை யின்பத்திற்கும் நடைக்கும் அமையும் நற்சான்று. சீற்றத்தை அல்லது கோபத்தை வருணிக்கும் இடங்களில் எல்லாம் கம்பன் முற்றிலும் வன் சொற்றொடராலேயே அச் செய்யுட்களை அமைப்பன். கம்பன் காவியத்தில் இந்நடைக்குப் பல எடுத்துக்காட்டுகள் உள்ளன. தாடகையின் சீற்றத்தை வருணித்துழி,

"இறைக்கடை துடித்தபுரு வத்தளெயி றென்னும்
பிறைக்கடை பிறக்கிட மடித்தபில வாயள்
மறக்கடை யரக்கிவட வைக்கன லிரண்டாய்
நிறைக்கடல் முளைத்தென நெருப்பெழ விழித்தாள்."

என்ற பாட்டாலும்,

பரதனைக் கண்ட குகனின் கோபத்தைச் சொல்லோவியப் படுத்துழி,

"கட்டிய சுரிகையன் கடித்த வாயினன்
வெட்டிய மொழியினன் விழிக்கட் டீயினன்
கொட்டிய துடியினன் குறிக்கும் கொம்பினன்
இட்டிய தமரெனக் கிளர்ந்த தோளினன்."

என்ற செய்யுளாலும் குறித்தமை காண்க.

விரைவுக் குறிப்பைக் காட்டவேண்டிய இடங்களில் கம்பன் அதற்கென அமைத்த சந்தமும் சொற்சுருக்க நடையும் அடுத்து நாம் ஆராயவேண்டியதொன்று.

"மாலு மக்கணம் வாளியைத் தொட்டதும்
கோல விற்கால் குனித்ததுங் கண்டிலர்
காலனைப் பறித்தக் கடியாள் விட்ட
சூல மற்றன துண்டங்கள் கண்டனர்."

"தடுத்திமை யாம லிருந்தவர் தாளின்
மடுத்தது நாணுதி வைத்தது நோக்கார்
கடுப்பினில் யாரு மறிந்திலர் கையால்
எடுத்தது கண்டன ரிற்றது கேட்டார்."

"உற்ற போதவ னுள்ளக் கருத்தெலாம்
கொற்ற வீர னுணர்ந்தென்று கூறலும்
முற்ற வோதியென் மூர்க்கன் முடித்தலை
யற்ற போதன்றி யாசை யறுனென்றன்."

மேலே காட்டிய இம்மூன்று பாடல்களும் கம்பனது அவ் வாற்றலை அங்கை நெல்லியென எடுத்துக் காட்டும். 'எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்' என்ற இவ்வடி நனிசிந்திக்கற் பாற்று. சனகன் சீதையின் திருமணத்திற்கென்று வில்விழா எடுத்தான். வந்த திருவுடை மன்னர்களில் பலர் வில்லை எடுக்க மாட்டாமல் மயங்கினர். சனகனின் மனம் பெரிதும் கவன்றது. அவன் இராம இலக்குவனோடு வீற்றிருந்த கோசிகனை 'நின்னுடைய வேள்வி காணிய வந்தார் வில்லும் காண்பார்' என்று அவன் முன் கூறியதால் மாதவனை மன்னன் நோக்கினான். மாதவனும் இராமனை நோக்கினான்; குறிப்பால் குறிப்பை உணர்ந்த தசரதன் மைந்தனும் வில்லை நோக்கி நடந்தான். ஆண்டுக் குழுமி இருந்த மகளிரெல்லாம் இராமனையே நோக்கினர். இராமனின பேரழகில் ஈடுபட்ட மகளிருள் சிலர் இமையா நாட்டத்தோடு அவன் தோள் கண்டார் தோளே கண்டார்; அவன் தாள் கண்டார் தாளே கண்டார், பின் பின்வருமாறு தமமுன் பேசுவாருமா யினர்; முனிவைய ஏசுவாருமாயினர்; சனகனைத் தூற்றுவாரு மாயினர். சிவனது வில்லை இவ்விள வழகன் முன்—இப்பிள்ளை யின்முன்—இட்டது பேதைமை என்பார் ஒருசிலர்; ஞான முனிக்கொரு நாணிலை என்பார் மற்றோர் சிலர்; கோனிவனிற் கொடியோனிலன் எனபார் பிறிதொரு சாரார். வில்லை இராமன் எடுப்பானோ, நாண் தொடுப்பானோ, அன்றிப் படுப்பானோ என்று வருந்துவாரும் ஒரு சிலர். என்ன நிகழுமோ வென்று சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தவராய் தடுமாற்றமுற்று

இருக்கும் காலேயில் கம்பன் வில்லொடிக்கும் இராமனது ஆற்றலைப் பல பாட்டுக்கள் கூறி நீடிக்க மனமில்லாதவனுய் ஆண்டுள்ளோரின் மனத்தியக்கத்தைப் போக்குவான் கருதி விரைவில் 'எடுத்தது கண்டார் இற்றது கேட்டார்' என்று இமைப்பொழுதில் முடித்துவிட்டார். அங்ஙனமே அங்கதன் தன் தூதின் வரலாற்றைப் பலப்படச் சொல்லி இராமனின் பொறுமையைச் சோதிக்காவண்ணம் சுருக்கமாக 'மூர்க்கன் முடித்தலே அற்ற போதன்றி யாசை யறான்' என்று விரைவில் முடித்ததுமாமென்க.

இவையன்றியும் கம்பன் காவிய நடையழகில் ஆழ்ந்து கிடப்பது அவனது சொல்வளம் உண்மையாம். (Copiousness of Vocabulary) கம்பனிடத்தில் சொற்பஞ்சம் யாண்டுமின்று. ஒரு பொருளேயோ அல்லது ஒரு கருத்தையோ விளக்குவதற்கு ஒரு பொருள் குறித்த பல சொற்கள் அவர்க்கு உற்றுழி வந்து உதவும் என்பதை அடியில் காணும் பாட்டுக்களினின்றும் தெரியலாம்.

"ஆறுபா யரவ மள்ள ராலேபா யமலே யாலேச்
சாறுபா யோசை வேலேச் சங்குவாய் பொங்கு மோதை
ஏறுபாய் தமர நீரி லெருமைபாய் துழனி யின்ன
மாறுமா றுகித் தம்மின் மயங்குமா மருத வேலி."

(நாட்டுப்படலம்-ஈ)

"திங்களுங் கரிதென வெண்மை தீற்றிய
சங்கவெண் சுதையுடைத் தவள மாளிகை
வெங்கடுங் கால்பொர மேக்கு நோக்கிய
பொங்கிரும் பாற்கடற் றரங்கம் போலுமே." (நகரப்படலம்-உஎ)

இவ்விரு செய்யுட்களில் முதற் செய்யுளில் ஒலிக்குறிப்பைச் சுட்டக் கம்பன்—பல சொற்களேப் பயன்படுத்திய திறனே ஓர்மின். இவ்வாற்றல் புலவர்களில் ஒரு சிலர்க்கே அமைவதுண்டு. இளங்கோவடிகளின்பாலும் இத் திறனே நாம் காண்கின்றோம். வஞ்சிக் காண்டத்து காட்சிக் காதையுள் இளமைக்குரிய மரபுச் சொற்களே அவர் பயன்படுத்துவதைக் கீழ்வரும் அடிகளால் உணருங்கள்:

"ஆளியி னணங்கும் அரியின் குருளேயும்
வாள்வரிப் பறழும் மதகரிக் களபமும்
குரங்கின் குட்டியுங் குடாவடி உளியமும்
வரையாடு வருடையும் மடமான் மறியும்
காசறைக் கருவும் மாசறு நகுலமும்
பீலி மஞ்ஞையும் காவியின் பிள்ளேயும்

கானக் கோழியும் தேன்மொழிக் கிள்ளையும்
மலைமிசை மாக்கள் தலைமிசை கொண்டாங்கு."

சொல்வளத்தின் மிகுதிபோலக் கருத்து வளத்து மிகுதியும் கம்பன் காவிய நடையில் ஒரோவழி காண்டலாகும். அடியிற் காணும் ஒரு செய்யுளில் பல கருத்துக்கள் பொதிந்து நிற்பதைக் காண்மின் :

"நிலமகள் முகமோ திலகமோ கண்ணோ
நிறைநெடு மங்கல நாணோ
இலகுபூண் முலைமே லாரமோ உயிரி
னிருக்கையோ திருமகட் கினிய
மலர்கொலோ மாயோன் மார் பினன்மணிகள்
வைத்தபொற் பெட்டியோ வானோர்
உலகின்மே லுலகோ ஊழியி னிறுதி
யுறையுளோ யாதென வுரைப்பாம்."     (நகரப்படலம்-௨)

இப் பொருட் செறிவிற்குக் கீழ்வரும் செய்யுளும் சான்றுதல் குறிக்கொள்மின் :

"தோற்பித்தீர் மதிக்குமேனி சுடுவித்தீர் தென்றல்தூற்ற
வேர்ப்பித்தீர் வயிரத்தோளை மெலிவித்தீர் வேனில்வேளை
ஆர்ப்பித்தீர் என்னையின்ன லறிவித்தீர் அமரரச்சம்
தீர்ப்பித்தீ ரின்னமென்ன செய்வித்துத் தீர்திரம்மா."
(மாயாசனகப்படலம்)

எச்சொல் எதற்குரித்தோ அச்சொல்லை அதற்குத் தருந்த வகையில் ஆட்சி செய்தல் கம்பன் காவிய நடையின் மற்றோர் அழகாம். இராமன் வீதியில் உலாவுகின்ற காலத்து அவனைக் காண மகளிர் வந்த பலவிதத் தன்மையைக் கம்பன் அடியில் வரும் பாட்டால் நமக்கு உணர்த்துகின்றான். அப் பாட்டின் சொல்லின்ப நிலையை உய்த்தறிமின் :

"மானினம் வருவ போன்றும் மயிலினந் திரிவபோன்றும்
மீனினம் மிளிர்வ போன்றும் மின்னின மிடைவபோன்றும்
தேனினம் சிலம்பி யார்ப்பச் சிலம்பினம் புலம்ப வெங்கும்
பூநனை கூந்தல் மாந்தர் பொம்மெனப் புகுந்து மொய்த்தார்."
(உலாவியற்படலம் ௯)

இச் சொல் வைப்புமுறை அவை நம் கண்முன் நடப்பன, வருவன போன்ற உணர்ச்சியைப் பயக்கின்றது.

சொற் சுருக்கமும் பொருள் விளக்கமும் கம்பன்பாலுண்டு. வேண்டாத சொற்களை எந்நாளும் கம்பன் வேண்டிற்றிலன். ஒரு சொல்லை வைத்தே பொருள் நயங்கெழுமித் தோன்ற வருணனை

செய்துவிடுவது கம்பனுக்கு எளிதாம். இதற்கோர் உதாரணம் கையடைப் படலத்தினின்றும் காட்டுதும். கோசிகனின் தவ வேள்விக்குற்ற இடையூற்றை நீக்க இராமன் இலக்குவனோடு அவன்பின் செல்கின்றான். அஞ்ஞான்று முதற்கண் இராமன் கொண்ட கோலத்தைக் கம்பன் வருணிக்கின்றான்.

> "வென்றி வாள்புடை விசித்து மெய்ம்மைபோல்
> என்றுந் தேய்வுறாத் தூணி யார்த்திரு
> குன்றம் போன்றுயர் தோளிற் கொற்றவில்
> ஒன்று தாங்கினான் உலகந் தாங்கினான்."

என்பது கம்பனின் சொல்லோவியம். இரண்டாவதாக இலக்கு வன் கோலத்தைக் கம்பன் வருணித்தல்வேண்டும். அவன் கோலத்தைக் காட்டக் கம்பன் ஒரு தனிச் செய்யுளைப் புனைந்திட் டானிலன். இராமன் எப் படைக்கலங்களைப் பூண்டு நின்றானோ அப் படைக்கலங்களையே இலக்குமணனும் தாங்கி நின்றான் என்ற கருத்தை 'அன்ன தம்பியும்' என்ற சொற்றொடரால் பெற வைத்தார். 'அன்ன' என்ற ஒரு சொல்லே இலக்குவ னின் கோலத்தைக் காட்டா நின்றது. இராமன் தாங்கி நின்ற படைக்கலங்களையே பின்னவனும் தாங்கி நின்றான் என்று மீண்டுங் கூறின் அது கூறியது கூறல் எனும குற்றத்தின் (Tautology or Repetition) பாற்படும் எனினுமாம்.

அடுத்துக் கம்பன் தீட்டிய சொல்லோவியம் (Word - Picture or Images) மாண்பினைப் பற்றிச் சிறிது சிந்திப்பாம். கலைகள் பல திறத்தன. அவை கவின் கலைகள் (Fine Arts) என்றும், சிறிய அல்லது கீழான கலைகள் (Lesser or Mechanical Arts) என்றும் பாகுபாடு செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் கட்டிடக் கலை (Architecture), சிற்பக் கலை (Sculpture), ஓவி யக்கலை (Painting), இசை (Music), செய்யுள் (Poetry) என்ற இவ்வைந்தும் கவின் கலைகள் எனப்படும். மரம், கண்ணாடி, பித்தளை முதலிய பொருள்களின் மீது செய்யப்படும் அழகிய கைவேலைகள் சிறிய கலைகள் எனப்படும். கவின் கலைகளுக்கும் சிறிய கலைகளுக்கும் பொதுவில் வேறுபாடுகள் இல்லாமலில்லை. இரண்டு வகைக் கலைகளும மக்களின் அறிவு ஆற்றலின் வளர்ச்சி வெளிப்பாட்டின் குறிகளே (They are both alike manifestations of the development of man) கவின் கலைகள் மக்களின் ஆன்ம இன்பத்தைத் தூண்டுவன; சிறிய கலைகள் வெறும் பொறிபுலனின்பம் பயப்பன; கவின் கலைகள் நுண்ணறிவு வளர்ச்சியோடு ஒழுக்க சீலத்தையும் வளர்ப்பன (Intellectual as well as moral development); சிறிய கலைகள் மக்களின் தேவைகளை நிறைவேற்றுவன.

"The arts of the first class minister to the enjoyment of man while those of the latter minister to his needs. Fine arts are concerned mainly with his moral and intellectual growth and the lesser arts with his physical and material well being" (Judgement in Literature—Worsfold.)

கவின்கலைகள் ஐந்தும் இரு பிரிவினுள் அடங்குமென்பர்.
கட்டிடக் கலை, சிற்பக் கலை, சித்திரக் கலை இம் மூன்றும் கட்
புலன் வழி அறியும் கலைகள் (Arts of the eye); இசையும
செய்யுளும் செவிப்புலன் வழி நுகரும் (Arts of the ear)
கலைகள். அழகுடைய நல்ல கட்டிடத்தை, ஓவியத்தை, சித்
[illegible] கண்டு களிக்கின்றோம் நல்லிசையை, பாட்டைக்
காது குளிரக் கேட்டு அகமகிழ்கின்றோம். கட்டிடம் கல்லாலும்
சுண்ணத்தாலும், நீரில் பிசைந்த மண்ணாலும் கட்டப்படுகிறது;
ஓவியம் திரைச் சீலையில் வண்ணங்கொண்டு கோலால் தீட்டப்
படுகின்றது. சிற்பம் கல்லில் சிற்றுளி கொண்டு பொறிக்கப்படு
கின்றது: செய்யுள் சொல்லால், சொல்லமைப்பால் யாக்கப்படு
கின்றது. இசைக்கும் செய்யுளுக்கும் ஓசை அடிப்படை.
ஓவியப் புலவன் ஒரு காட்சியைத் திரைச் சீலையில் கவினுற
எழுதுகின்றான் அது பேசாது. காவியப் புலவன் அதே
காட்சியைச் சொற்சேர்க்கையால் பாவாய்ப் புனைகின்றான். ஓவிய
மும் உணர்ச்சியை ஊட்டுகின்றது; காவியமும் உணர்ச்சியை
ஊட்டுகின்றது இப் பண்பில் ஓவியமும் செய்யுளைப்போன்றதே.
ஆனால் ஓவியம் பேசாதது; ஊமை; காவியம் பேசுவார்க்கு
உறுதுணை. (Painting is mute poetry). வண்ணங்கொண்டு
(Colour) திரைச் சீலையில் (Canvas) ஓவியத்தைத் தீட்டுவது
போலச் சொல்லைக் கொண்டு சொலலோவியங்கள் (Word -
pictures தீட்டுவது கவிஞர்களுக்கு இயல்பாம். அச் சொல்லோவி
யங்கள் கற்போர் மனத்தின்கண் சொல் சித்திரங்களை (Mental-
pictures) எழுப்புதலும் உண்டு. கம்பர் இங்ஙனம் நெஞ்சை
யள்ளும் கொஞ்சும் நற்றமிழில் சொல் சித்திரங்களை எழுப்பு
வதில் வல்லவர். கீழ்வரும் பாடல்கள் கம்பனின் அவ்வாற்றலை
நினைப்பூட்டுவன:

"விழுதல் விம்முதல் மெய்யுற வெதும்புதல் வெருவல்
எழுத லேங்குத லிரங்குத லிராமனை யெண்ணித்
தொழுதல் சோருத றளங்குத றுயருழந் துயிர்த்தல்
அழுத லன்றிமற் றயலொன்றுஞ் செய்குவ தறியாள்."

எனும் இக் கம்ப சித்திரம் அசோக வனத்தில் சீதையின்
நிலையைப் புலப்படுத்துவது.

"விழுந்தாள் புரண்டா ளுடல்முழுதும் வியர்த்தாள்
உயிர்த்தாள் வெதும்பினள்
எழுந்தா ளிருந்தாள் மலர்க்கரத்தை நெரித்தாள்
சிரித்தா ளேங்கினள்
கொழுந்தா வென்று ளயோத்தியர்தங் கோவே
யென்று ளெவ்வுலகும்
தொழுந்தா ளரசேயோ வென்றாள் சோர்ந்தா
ளரற்றத் தொடங்கினள்."

எனும் இப் பாட்டு, களங்காண் படலத்தில் சீதையின் ஆற்றொணுத் துயரத்தைச் சித்திரிப்பது.

"தண்டலை மயில்க ளாடத் தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கள் முழவி னேங்கக் குவளைகள் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிதுபாட மருதம்வீற் றிருக்கு மாதோ."

எனும் இப் பாட்டு மருதநிலத்துச் சொல்லோவியம்.

இறுதியில் கம்பன் காவியத்தில் இராம கதையை முற்றிலும் தொகுத்து வைத்த நயப்பாட்டொன்றினை ஈண்டெடுத்துக் காட்டுவாம்:

"கார்ந்தையருக் கணியனைய சானகியார்
பேரழகு மவர்தங் கற்பும்
ஏந்துபுயத் திராவணனர் காதலுமச்
சூர்ப்பனகை யிழந்த மூக்கும்
வேந்தர்பிரான் தயரதனர் பணியினல்
வெங்கானில் விரதம் பூண்டு
போந்ததுவுங் கடைமுறையே புரந்தரனர்
பெருந்தவமாய்ப் போயிற் றம்மா."

இச் செய்யுளில் இந்திரன் பேசப்பட்டிருக்கிறான். முக்கோடி வாணளையும் முயன்று தவத்தால் பெற்ற இராவணனை அழிக்க இந்திரன் உள்ளிட்ட தேவர்கள் மகாவிட்டுணுவை இரந்தனர்; அவர்களின் இடுக்கணைப் போக்கவே வைகுந்தவாசனும் செந்தாமரைக்கண்ணன் இராமனுக அவதாரஞ் செய்தான். இராவண வதம் ஏற்பட வேண்டி மந்தரையின் சூழ்ச்சியால் இராமன் சீதையோடு காட்டிற்கு வரவேண்டும். அவனும் தசரத னிடத்தில் பெற்ற சிற்றன்னை கைகேயியின் வரத்தால் கானகம் எய்தினன். அது 'வேந்தர்பிரான் தயரதனர் பணியினல்' என்று பாட்டில் குறிக்கப்பெற்றுள்ளது. இனி இராவணன் சீதையைக் காதலுற்று அவளைத் தன் இதயமாஞ் சிறையில் வைத்தாகல் வேண்டும். அக் காதலைத் தூண்டுவதற்குரிய

பாத்திரமாகவுள்ளவள் சூர்ப்பனகை. எனவே 'அச் சூர்ப்ப னகை'யும் இப் பாட்டில் இடம் பெற்றாள். இலங்கைநாதன் சீதையின் பேரழகில் ஈடுபட்டு அறிவிழந்து சீதையின் கற்பிற்குப் பங்கம் விளைக்க அவளைச் சிறை எடுத்தான்; முயன்றான்; சீதை யின் கற்பு வென்றது; இவ்வுண்மை 'காந்தையருக்கு அணியனைய சானகியார் பேரழகு மவர்தங் கற்பும்' என்று பாட்டில் கூறப் பட்டது. இறுதியில் இராவணன் இராமன் வாளியால் கொல்லப் பெற்றான் என இப் பாட்டு இராம கதையை முற்றிலும் தன் னகத்தே கொண்டுமிளிர்வது.

அன்றியும் இக் கவி இன்னொரு சிறந்த நயத்தையும் எடுத்துக் காட்டுகின்றது. இப் பாட்டு இராவணன் இறந்தபின் அவன் மனைவி மண்டோதரி புலம்பி அழுத பாடல்களாக அமைக்கப் பெற்ற பாடல்களுள் ஒன்றாக அமைந்துள்ளது. ஆகவே இப் பாடல் மண்டோதரியின் கூற்றாக உள்ளது. அவள் இந்திரன், தசரதன், இராவணன், சீதை ஆகிய நால்வரையும் பெரிதும் மதிக்கின்றாள். ஆனால் சூர்ப்பனகை ஒருத்தியைத் தான் இகழ் கின்றாள். ஏனெனில் அவளேதான் குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக்காம்பாக வந்தவள் அவளேதான் சானகி எனும் பெருநஞ்சினைத் தன் கணவன் இராவணன் பருகுமாறு தூண்டி யவள். மண்டோதரி தனது விருப்பையும் வெறுப்பையும் ஒரு சிறப்பு விகுதிச்சொல்லால் காட்டுகின்றாள். மேலேகூறிய நால்வரையும் கூறுங்கால் 'சானகியார், இராவணனார், தயரதனார், புரந்தரனார்' என்று 'ஆர்' எனும் சிறப்பு விகுதி அடை கொடுத்துப் புகழ்ந்தாள். அப் பாட்டில் வந்துள்ள ஐந்து பாத்தி ரங்களில் சூர்ப்பனகை ஒருத்திக்குத்தான் 'ஆர்' எனும் சிறப் படையை அவள் கொடுக்கவில்லை மண்டோதரியின் மங்கல நாணைக் கழற்ற வந்தவள் அவளே. எனவே மண்டோதரி அவளை வெறுத்தது அறநெறியேயாம். இது கம்பன் காவிய நடையில் ஆர் எனும் சிறப்பு விகுதி எங்ஙனம் வைக்கப்படுதல் வேண்டும் என்பதைப் புலப்படுத்த வந்தது என்க. இன்னனைய பல நடைநயங்கள் கம்பன் காவியத்தினுள்ளே இலைமறைகாய்போல் மறைந்து கிடக்கின்றன. ஒரு சிலவற்றை இதுகாறும் சுட்டி னேம். அறிஞர்கள் மற்றையவற்றையும் அறிவுகொண்டு ஆய்ந்து இறும்பூதெய்துவார்களாக

# கண்ணகி திருமணம்

[வை. தட்சிணாமூர்த்தி, பி. ஏ. (ஆனர்சு)]

"கற்பெனப்படுவது களவின் வழித்தே" என இறையனார் களவியலும், "கற்பெனப்படுவது கரணமொடு புணரல்" எனத் தொல்காப்பியக் கற்பியலும் கூறும். "இருவர் கண்ணுற்று இருவரும் காதல்கூர்ந்த இடமெல்லாம் கந்தருவமாம்" என்பார் நச்சினார்க்கினியர். "நிலத்தினும் பெரிதே, வானினும் உயர்ந்தன்று" எனக் குறுந்தொகை கூறுவதொத்தது மாறா அன்புடையராகவுள்ள தலைவனும் தலைவியும் பிரிவின்றி வாழ்தல் வேண்டும். பிரிவமையினும் அது பரத்தையிற் பிரிவாக அமைதல் கூடாது. சுட்டிப் பெயர் கொளப்பட்ட தலைவன் பரத்தையிற் பிரிவிற் பிரிதல் தமிழ்ப் பண்பிற்கு முரணாம். தொல்காப்பியர் கூறும் ஐந்திணைக் காதலறம் பாடல் சான்ற புலனெறி வழக்கில் மட்டுமன்றி நாடக வழக்கினும், உலகியல் வழக்கினும் வளம் பெற்றே இருந்திருத்தல் சாலும். "களவின்கண் ஒத்தாரிருவர் வேட்கைமிகுதியாற் கூடி ஒழுகியவழி கரணத்தின் அமையாது இல்லறம் நடத்தலாமோ எனின் அஃதாகாது" என்றார் இளம்பூரணர் தம் கற்பியல் முதற்சூத்திர உரையின்கண். கரணம் என்பது வதுவைக் கரணம். கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக் கொடைக்குரி மரபினோர் என்றது ஒத்த குலத்தானும், உயர்ந்த குலத்தானும் என்பதற்கு. கொளற்குரி மரபினோர் என்றது தந்தையும் தாயும் பிறரும். கொடுக்கக்கொள்வது என்பதால் களவு வெளிப்பட்ட வழியும், வெளிப்படா வழியும், மெய்யுறு புணர்ச்சியின்றி உள்ளப் புணர்ச்சியான் உரிமை பூண்ட வழியும் கொள்ளப் பெறும். களவு மணமே தமிழர் தம் வழக்கென்பது களவியல் அகூ-ஆம் சூத்திரத்தால் அறியக் கிடக்கின்றது.

மேற்கண்ட காரணங்களான் களவுக் கற்பே தமிழர் தம் வழக்கென்பது தெளிவுறுகின்றது.

வரலாற்றாலும், வண்டமிழ்ச் சிலப்பதிகாரத்தானும், சிறப்பிக்கப்படும் சிலம்பின் வென்ற சேயிழையான கற்பரசி கண்ணகியின் திருமணத்தை சேரமுனியாய இளங்கோவடிகள் தமிழ் மரபு பிறழாமற்றான் கூறியுள்ளார் எனக் கணக்காயர் நாவலரவர்கள் வாதாடுவார்கள். கண்ணகி கோவலன் திருமணம் பிரசாபத்தியம் என்பார் அடியார்க்குநல்லார். இல்லை, பாணிக்கிரகணம் என்பார்கள் இராவ்சாகிப் வையாபுரிப் பிள்ளையவர்

களும், டாக்டர் இராசமாணிக்கனூர் அவர்களும். இத் திருமணம் வணிகர் வழக்காய வேதவழக்கே, அஃதாவது மறையோர் மன்றலே என்பார்கள் மறைந்த அறிஞர் வையாபுரிப் பிள்ளை அவர்கள். இத்துணை இடர்ப்பாடுகளும் இற்றைத் திருமண முறைகளை இதனுடன் ஒப்பிட்டு நோக்குவதான் வந்ததே.

இனி, கற்பரசியின் திருமணம் காதற்கற்பாகத்தான் அமைந் திருத்தல் தெளிவு என்பதனைச் சிறிது காண்போம்.

பிரசாபத்தியமாவது, "மகட்கோடற்குரிய கோத்திரத்தான் மகள் வேண்டியவழி இருமுதுகுரவரும் இயைந்து கொடுப்பது" எனப் பகருவார் இளம்பூரணர். பிரசாபதி என்பான் நடுவிருந்து முடித்தலின் பிரசாபத்தியமானது என்பார் உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர். ஈண்டுக் கண்ணகியின் பெற்றோரைக் கோவலன் பெற்றோர் கொடு எனக் கேட்டுத் திருமணம் செய்த தாகக் கூறப்படவில்லை. ஒத்த கோத்திரத் தாராய மாநாய்கனும், மாசாத்துவானுமாய இருவரும் ஒருங்கு கூடி மணவணி காண மகிழ்ந்துழி மணவிழா நடந்ததேயன்றி வேறொன்றும் கூறப் பட்டிலது. மாமுது பார்ப்பார் மறைவழி காட்டிடத் தீவலஞ் செய்தது இன்னோரன்ன பிற வதுவைக்குரிய கரணங்களேயன்றி பிரசாபத்தியத்தின் கூறுகளல்ல அடியார்க்கு நல்லார் பிரசா பத்தியம் என்று கூறியதற்கு வேறொரு காரணமுமிருக்கலாம். வரலாற்றில் தலைவன் பரத்தையிற்பிரிவு கொள்வானுயின் இழி வெனத் தடைவிடைகள் எழும் என எண்ணி, காதற்கற்பெனுது இவ்வாறு கூறியிருக்கலாம். காதற் கற்பாயின் ஏன் காதற் காட்சிகளையும் காட்டியிருக்கலாகாது எனும் கடாவிற்கு விடை யாகப் "பின்னர் பிரிந்து வாழ நேரிட்டதே என எண்ணிக் கூடிய நிகழ்ச்சிகள் கூறப்படாமலிருக்கலாம்" என்பார் திரு. மு. சிவகுருநாதன் அவர்கள். இக்கடாவிற்கு விடை இதுவன்று. கண்ணகி கதையின் உயிர்நாடியே அப் பிரிவில்தானுள்ளது. தமிழ் நாடக மியற்றியார் மங்கலவழக்குப்பற்றி முதற்கண் திருமண நிகழ்ச்சிகளைக் கூறுகின்றார். அஃதன்றியும் அகத் துறை நூலன்மையின் காதற்காட்சிகள் கழறப்பட வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டிலது. இவையன்றியும் இருவரும் காதலர் எனும் குறிப்பினைக் காதலால் எனும் சொல்லை இருவர் மேலும் ஏற்றி இயம்பி அறிமுகப்படுத்துகின்றார்.

பாணிக்கிரகணமாய வேதவழக்காயின், ஆண்டுக் கைபிடித் தல், ஏழடிநடத்தல், அம்மி மிதித்தல், அருந்ததிகாணல் முதலியன கூறப்பட்டிருத்தல் வேண்டும். "கவவுக்கை நெகிழாமல்" என வாழ்த்துவதையே கரியாகக் கொண்டு பாணிக்

கிரகணம் எனக் கூறல் தகவுடைத் தன்று. சீவகன் இலக்கணை யார் திருமணத்தைக் கூறப் போந்த தேவர் "இடக்கைபற்றி வளஎரி வலங் கொண்டான்" என்பார். "பாணிக்கிரகணம் எனவே, பொரியாலுள்ள ஓமமும், கால்வைத்தலும் பெற்றும்" என உரை பகர்வார் நச்சினார்க்கினியர். பாணிக்கிரகணமாயின் ஆண்டு மணவணியாக மாங்கல்யம் அணிவித்தல் இருக்காது. இற்றை நிலையில் வழங்கும் தமிழர் மணமுறை வேத வழக்கோடு ஒன்றி உருமாறியதே. எனவே, சங்க காலத் திருமணங்களில் தாலியணிதல், மாலைமாற்று, பாலிகை ஏந்தி வருதல் இவையே சிறப்புடைச் சடங்குகள் என்பது அகப்புறப் பாடல்களாலும், சிலப்பதிகாரத்தாலும் அறியக் கிடக்கின்றது "காதல் ஒருவனைக் கைபிடித்து அவன் காரியம் யாவினும் கைகொடுத்து" என மகாகவி பாரதியார் பாடியதை சான்றாகக் கொண்டு இருபதாம் நூற்றாண்டில் நடந்த திருமணங்கள் எல்லாம் பாணிக்கரகணம் என்றால் எவ்வாறிருக்குமோ அஃதொப்பது கண்ணகியின் திருமணம் பாணிக்கிரகணம் என்பது. இந்நாளில் திருமண நாட்டுமுன்னர் மங்கலிய சூத்திரம் வலம் செய்வதொத்ததே "அகலுள் மங்கல அணி எழுந்ததும", "மறுவின் மங்கல அணியே அன்றிப் பிறிதணி அணியப் பெற்றதவன்கொல்" எனவும், "மங்கல வணியிற் பிறிதணி மகிழாள் எனவும் பற்பல விடங்களில் மணத்தாலி கூறியிருப்பன கண்டு இவை மணத் தாலியல்ல என வுரைப்பது மயக்கத்தின் பாற்பட்டதே.

முதலில் கூறிய "அகலுள் மங்கல அணி எழுந்தது" என்பதின்கண் வரும் மங்கலவணியை மங்கள மகளிர் குழாமாக் கினால், யானை எருத்தத்தின் மீதேறி அணியிழையார் மாநகர்க்கு மணச் செய்தியினை ஈந்ததைக் கூறிய பின்னர் இம்மங்கலவணி முரசியம்ப, முருடதிர, வெண்குடை எழ வலம்வரக் காரணம் என்னை? எனும் ஐயம் எழும் ஊருக்கு மணச் செய்தி கூறப் பட்ட பின்னர் மணத்தாலி வலம் செய்யப்பட்டது என்பதை இந்நாள் வழக்கோடும், பின்னர் கூறப்படும் மஙகலவணிகளோடும் ஒப்பிட்டுக காப்பியப்போக்கில் நோக்கின் உணரலாம்.

கோவலனும் கண்ணகியும் மனையறத்தில் நெடுநிலை மாடத் தின் இடைநிலத்து மணிக்கா லமளிமிசை அமர்ந்திருப்புழி கண்ணகியைக் கண்டு கோவலன் கூறும் ஓர் குறியாக் கட்டுரையில் "குழவித் திங்கள்" எனத் தொடஙகும் (௩அ-ருஉ) அடிகளில் முதற்கண் நுதல், புருவம், இடை, கண் முதலாய கட்புலனாதும் உறுப்புக்களைக் கூறிப் பின்னர்க் கட்புலனாகியும், ஆகாததுமாகிய சாயல், நடை, மழலைக்கிளவி முதலியன வருணிக்கப்படுகின்றன.

இவ்வருணனைகளைத் தொடர்ந்து புனைந்த அழகுகளைப் பார்த்துப் பாராட்டுகிறான் கோவலன். பெண்ணொருத்திக்கு அணிவதால் சிறப்பான அழகைத் தருவது மாங்கல்யம் ஒன்றேயாகும். அன்றியும் அஃதே எக்காலத்தும் கழற்றப் படாத ஒன்று. [illegible] புனைந்த அழகைக் கண்டவுடன் தான் தொட்டுக் கட்டிய மங்கலவணியாய தாலியே முதற்கண் அவன் கண்முன்னர்த் தோற்றுகின்றது. உடனே "மங்கலவணியே யன்றியும் பிறிதணி அணியப் பெற்றதை எவன் கொல்" எனத் தொடங்கி வருணிக்கின்றான். இம் "மங்கலவணி" எனுஞ் சொற்குப் புனையாத அழகு என உரை புகன்று கண்ணகியின் செய்யாக் கோலத்தையே வருணித்தான் என்பர். புனையா அழகுகளை முற்கூறிய கவிஞர் பின்னரும் அதனையே கூறின் "கூறியது கூறல்" எனுங் குற்றத்துட் படாரோ? புனையா அழகுகளாய சாயல், நடை, மொழி இவைகட்குப் பின்னர்ப் புனையும் அழகுகளாய மலர் பெய்தல், சாந்தணிதல், முத்தணிதல் இவைகளைக் கூறுமுன்னர்ப் புனையும் அழகுகளிற் றலையாயதாய மங்கலவணி மொழியப்பட்டதே அஃது என்றென்றும் கழற்றப் படாத ஒன்று என்னும் பொருட் குறிப்பினை ஊன்றி நோக்குவார்க்கு உணர்த்துவதாயிற்று.

அந்திமாலைச் சிறப்பில் அடிமுதல் தலை ஈறாகக் கண்ணகி வருணிக்கப்பட்டுழி "அஞ்செஞ்சீறடி" எனத் தொடங்கும் வருணனையில் அடி, இடை, ஆகம், கழுத்து, காது, முகம், கூந்தல் முதலிய உறுப்புக்கள் வருணிக்கப்படுகின்றன. காதைக் கூறிய பின்னர் முகம் எனக் கூறி அதனைத் திங்களோடு ஒப்பிட்டு விட்டுப் பின்னர், அதனையே விதந்து கூறுமுகத்தான் கண், நுதல், வாய் முதலியனவற்றைக் கூறிய முறையே கூறிப் பின்னரே கூந்தலைக் கூறினார். முகத்தைக் கூறிப் பின்னர் அதன் உள்ளுறுப்புக்களைக் கூறுழி, முறை பிறழ்ச்சி காணப்படுவதையே காரணமாகக்கொண்டு இஃது ஏறுவரிசை வருணனை அன்று என்பர் ஈண்டு இளங்கோவடிகள் காதை முற்கூறித் தொடர்ந்தே முகமெனவும் கூறி, அதனையே விதந்து கண், நுதல், வாய் என்பனவாகக் கூறி முடித்து முகமாய உறுப்பைக் கடந்து பின்னர் அடுத்த உறுப்பாய கூந்தலுக்குச் செல்கின்றார். செவ்வையாக வருணனை சென்றிருக்க வேண்டின் கழுத்து, காது, வாய், கண், நுதல், கூந்தல் முதலியன முறையே கூறப்பட்டிருத்தல் வேண்டும். காதுக்குப் பின்னர் முகம் கூறியிருக்க வேண்டியதில்லை. ஏனெனில் கண், நுதல், வாய் முதலியன முகத்தின் உள்ளுறுப்புக்களே இவ்வாறன்றி வருணனை இலக்கணத்தை முகத்தோடு நில்லென நிறுத்தி விதந்து உறுப்புக்களைக் கூறினார்.

முறை பிறழ்ச்சி ஏன் என்பதை இனி நோக்குவோம். வருணனை முகமொழித்து நின்றதேல் வாய், கண், நுதல் முதலிய வற்றை முறையே கூறியிருக்க வேண்டும். வாயை முதலிற் கூறாது இறுதியிற் கூறியதன் காரணமே ஆராயத் தக்கது. இவ் வருணனையில் எல்லா அணிகளும் தாம் உறுப்புக்களை அணிவ தாய பேற்றினை இழந்ததாகவே கூறப்படுகின்றன இவனே வாயை வருணிக்கையில் நகையாய அணியை அணியும் பேற்றை வாயும இழக்கவில்லை; நகையும் இழக்கவில்லை நகையைக் கோவலனிழக்கின்றான். தொடர்புடைய உறுப்போ அன்றி நகையோ பேற்றை இழக்காது கோவலனிழக்கின்றான். இவ் வேற்று முடிபு கூறவே கவிஞர் திட்டமிட்டு வேண்டுமென்றே இம முறை பிறழ்ச்சியை ஏற்படுத்துகின்றார். இதுகாறும் இவ் வருணனை ஏறுவரிசை வருணனை என மெய்ப்பிக்கப்பட்டது. "கொங்கை முன்றிற் குங்கும மெழுதாள்" எனுமடிக்கும் "கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்" எனுமடிக்கும் இடையில் "மங்கலவணியிற் பிறிதணி மகிழாள்" எனுமடி வருகின்றது மார்பகத்திற்கும், காதிற்கும் இடைப்பட்ட கழுத்து தாலியைத் தவிர வேறு எந்த அணிகட்கும் தம்மை அணியும் பேற்றை அளிக்கவில்லை என்பதையே கூறுகின்றது.

(தொடரும்)

---

## அன்னை

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

அன்னையே முதலிற் காணும்
அருட்பெருங் கடவு ளாவள்
அன்னையே அன்பின் காட்சி
அறிவினை ஊட்டும் தெய்வம்
அன்னையே உயிரி னுக்கு
ஆதர வளித்துக் காப்பள்
அன்னையே என்றும் நமமுள்
அகங்கனிந் திருப்பள் நன்றே.

---

# திருவாசக நிருத்த நாட்டியம்

[திருவாளர், இசைமணி. கா. சங்கரனர்]

(சிலம்பு - ௩௪, பால் - அ. ௬௪௪-ஆம் பக்கத் தொடர்ச்சி)

## காட்சி 3

பூவல்லி

இணையார் திருவடி என் தலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையுந் துறந்தொழிந்தேன்
அணையார் புனற்றில்லை அம்பலத்தே ஆடுகின்ற
புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ.

*சென்ற இதழ் குறிப்பு:*

*காலையில் துயில் நீங்கிய பெண்கள் நீராடச் சென்றனர்.*

*நிகழ்ச்சிக் குறிப்பு:*

*நீராடிய பெண்கள் ஆண்டவன் வழிபாட்டிற்கு மலர் கொய்யப் பூஞ்சோலை வருகின்றனர். ஆண்டவன் புகழ்பாடி, பூப்பறிக்கின்றனர்.*

(குறிப்புரை): *இணை - இரண்டு; ஒப்பு - இறைவன் திருவடிகளுக்குப் பிற ஒப்பாகா; அணையார் புனல் - கரை பொருந்திய நீர்நிலை; புணை - தெப்பம்; பூவல்லி - பூவிற்குரிய முத்திரை பிடிக்கவும்.*

இராகம்: உதய ரவிச்சந்திரிகா. தாளம்: ஆதி.

(29) ஆ: ச க ம ப நி ச் அ: ச நி ப ம க ச

| | 1 | O | O |
|---|---|---|---|
| 1. | ச் ச்ா நீ , பா மா நி ப ம க மா | ப நீ பா , மா | ம கா ப ம க சா |
| | இ ணை யா ர் தி ரு வ டி என் | த லை மே ல் | வை த் த னு மே |
| 2. | ச சா கா , மா , ; பா க மா | ; க மா ப நீ | ப மா ப நீ நீ |
| | து ணை யா ன சுற் றங் கள் | அத் த னை யும் | து றந் தொ ழிந் தேன் |
| 3. | ம பா கா , மா ப நீ ச்ா , ச்ா | ; நி ச்ா ச் ச்ா | சா , நி க்ா ச்ா |
| | அ ணை யா ர் பு ன ல் தில் லை | அ ம்ப லத் தே | ஆ டு கின் ற |
| 4. | ; ச் ம்ா க் ச்ா நி பா நீ , ச்ா | ப நி ச் நி பா மா | க மா பா , நீ |
| | பு ணை யா ளன் சீர் பா டி | . பூ வல் லி | கொ ய் யா மோ |

(சிட்டை சுரம்)

| | | | |
|---|---|---|---|
| 1. | ச்ா ச்ா நி ப ச் நி ப நி ப பா ம க ம | பா , ச் நி ப நீ | ம பா ம க ம பநி |
| 2. | ச்ா ச் நி ச் நி ப ம ப நி ப ம க ப ம க | சா ச ம க ச ப ம | க நி ப ம க ம ப நி |
| 3. | ச் நி ச் கா ச் க் ச் நி ச்ா ப ச் நி ப நி | ம பா ம ப ம க ம | ச கா ச ம க ச நி |
| 4. | ச ம க க ம ப ச் நி நி ச் ச் நி ச் ம் க்ா | , ச் நி ப ச் நீ ப | ம க ச கா ம ப நி ‖ |

“கொய்யாமோ” என்று பாடி முடிந்ததும் மேற்கண்ட சிட்டை சுரத்தைப் பாடி முடிக்கவும்.

தேனாடு கோன்றை சடைக்கணிந்த சிவபெருமான்
ஊனாடி நாடிவந் துள்புகுந்தான் உலகர்முன்னே
நானாடி ஆடிநின் றோலமிட நடம் பயிலும்
வானாடர் கோவுக்கே பூவல்லி கொய்யாமோ.

(குறிப்புரை): தேனாடு கொன்றை - வண்டுகள் நாடி அடைகின்ற கொன்றை மலர்; ஊனாடி - மனித உடம்பு (எடுத்தல்); (நான்) நாடி - (நான்) அவனைத்தேடி; வானாடர் - வான் உலகினர் தலைவன்.

இராகம்: (45) சுப பந்து வராளி. தாளம்: கண்ட சாப்பு.

1. ச்ா ; ச் நி தா தா பா ; பா தா பா
தே னா டு கொ ன் றை
2. ; ம பா ம கா கா ரீ ரீ சா ரீ சா
ச டை க்க ணி ந்த சிவ பெரு மா ன்
3. ; ச ரி கா ; கா மா ; மா தா பா
ஊ னா டி நா டி வந் து
4. ; ப தா ப பா ; பா கா மா தா பா
உள் பு குந் தான் உ ல கர் முன் னே
5. ; த மா த நீ நீ ச்ா ; ரீ ச்ா ச்ா
நா னா டி ஆ டி நின் று
6. ; ச் ரி க்ா க்ா க்ா க்ா ம்ா க்ா ரீ சா
ஓ ல மி ட ந டம் ப யி லும்
7. ச்ா ; ச் நி தா தா பா ; பா தா பா
வா னா டர் கோ வு க் கே
8. ; ப ம கா கா கா கா சா ரி தா தா
பூ வ ல் லி கொ ய் யா மோ.

"கொய்யா மோ" என்று பாடின உடன் கீழ்க்கண்ட ஜதியைப் பாடி முடிக்கவும். ||

1. தா தீ தா கத ஜெம்
2. ; தீ தா கத ஜெம்
3. தக தீ தா கத ஜெம்
4. ; தீ தா கத ஜெம்
5. தஜ் ஜெம் தரீத்த ஜெம்
6. தா தீ , கிடதக தரிகிட தக
7. ஜெ ஜெ ஜெ
ஒ ஜெ ஜெ ஜெ ||

அன்றால நீழற்கீழ் அருமறைகள் தானருளி
நன்றாக வானவர் மாமுனிவர் நாள்தோறும்
நின்றார ஏத்தும் நிறைகழலோன் புனைகொன்றைப்
போன்தாது பாடிநாம் பூவல்லி கோய்யாமோ.

(குறிப்புரை): *அன்றால நீழற்கீழ்* - கல்லால மர நிழலின் கீழ்; *அருமறைகள்* - (தட்சிணாமூர்த்தி) நான்கு மறைகளை வெளிப்படுத்துவதான முத்திரை; *நின்றார ஏத்தும்* - நிறை மனதோடு வழிபடுகின்ற; *நிறை கழல்* - சிலம்புகளையுடைய அடிகள்; *போன்தாது* - மகரந்தப் பொடி.

இராகம்: சாரங்கா.  தாளம்: கண்ட சாப்பு.

(65) ஆ: ச ரி க ம ப த நி ச்  அ: ச் நி த ப ம ரி க ம ரி ச

| | | |
|---|---|---|
| 1. | ; சா ரீ சா சா<br>அன் றா ல | பா ; ப ம மா பா<br>நீ ழ ற் கீழ் |
| 2. | ; ப தா ப பா பா<br>அ ரு ம றை கள் | ம த த ப கா மா பா<br>தா ன ரு ளி |
| 3. | ; ம ப தா ; தா<br>ந ன் றா க | பா ; த த ப ம பா<br>வா ன வர் |
| 4. | ம ப த த பா பா பம<br>மா மு னி வர் | ரி க மா ரீ ; சா<br>நா ள் தோ றும் |
| 5. | ; ச்ா ச்ா ; ச்ா<br>நின் றா ர | த நி ச்ா தா பா பா<br>ஏ த்தும் நி றை |
| 6. | ; ம ப தா பா பா<br>க ழ லோ ன் பு | ச்ா ; தா நீ ச்ா<br>னை கொ ன் றை |
| 7. | ; ச்ா ச் நி க் ரி சா<br>பொன் தா து | ச் ச் தா ச் ச் நி த பா<br>பா டி நாம் |
| 8. | ம ப த நி ச்ச தா ப ம<br>பூ வல் லி | ரிக மா ரீ ; சா<br>கொ ய் யா மோ. ‖ |

சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்போலிக்கே
ஆராதே ஆசையதாய் அடியேன் அகம்மகிழத்
தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் திருநடஞ்செய்
*பேரானந் தம்பாடிப் பூவல்லி கோய்யாமோ.

(குறிப்புரை): தேரார்ந்த வீதி - தேர்கள் நிறைந்த தெரு; சீரார் திருவடி - சிறப்பு மிக்க பாதங்கள்; ஆராத ஆசையதாய் - நிரம்பாத பேரார்வம் உடையோனாய்; பேரானந்தம் - பேரின்பம்; திண்சிலம்பு - பகைவர் மனதில் அச்சம் விளைக்குஞ் சிலம்பு; மெய்ப்பாடு - அச்சக்குறி.

இதன் அடியில் சேர்க்கப்பட்டுள்ள சொற்கட்டுகள் பேரணி நாட்டியத்திற்கென 'நடனாதி வாத்திய ரஞ்சனம்' என்னும் நூலில் அமைக்கப்பட்டுள்ளதை இங்குக் கையாளப்பட்டிருக்கிறது.

---

* பேரானந்தம்: ஆனந்தத் தாண்டவம். இது 13 வகைக் கூத்துக்களில் "பாண்டரங்கம்" எனப்படுவது. இஃது உலக (ஜீவித்தம் 12) உற்பத்திக்காகப் பரமசிவன் ஆடியது. இந்த ஆடலைப் "பேரணி" நாட்டியமாக ஆடுவது மரபு.

இராகம்: வசந்தா. தாளம்: ஆதி.

(17) ஆ: ச க ம த நி ச் அ: ச் நி த ம க ரி ச

1. ச் , ச் நி த த நி த மா ம கா மா | மா , நி தா மா | கா , ம கரி சா
சீ ரா ர் தி ரு வ டித் | திண் சி லம் பு | சிலம் பொ லிக் கே

2. சா , மா க மா மா , த கா மா | க மா தா , தா | ச்ா , நி ச் ரி ச்ா
ஆ ரா த ஆ சை ய தாய் | அ டி யேன் அ | கம் ம கி ழ

3. ச் நி மா தா , நீ , ச்ா ச்ா , ரி ச் | ச் ரீ சா , ச் நி | த மா த நீ ச்ா
தே ரார் ந்த வீ திப் பெருந் | துறை யான் தி | ரு ந டஞ் செய்

4. ச்ா , ம் க் ரி ரீ ச்ா , நி த ம தா | த நி ச் நி தா மா | க மா தா , நீ ||
பே ரா னந் தம் பா டி | பூ வல் லி | கொ ய் யா மோ

“கொய்யாமோ” என்று பாடி முடிந்ததும் கீழ்க்கண்ட ஜதிகளைச் சொல்லுக.

1. தீம்தத் ததீம்த தகதொம் கிடதக | திமித தகிட தக | தகத ததிங் கிண தொம் ||
2. தக்கிடதத்தா கிடதகதீம்; கிடதக தத்தா கிடதக | தீம் ; தகதிமி | தக ததிங்கிண தொம் ||
3. தத்திமி-திமித-தக தக்கிடகிடதகி தத்தகிடதகி | ததிமி திமித ஜெணு | ததா ததிங்கிணதொம் ||

| | 1 | O | O |
|---|---|---|---|
| 4. | தா தக்கிடு தக்கிடு கிடதகி ; தக்கிடு தக்கிடு கிடதகி | தத்தத்தக்கிடு தக்கிடு கிடதகி | ; தக்கிடு தக்கிடு கிடதகி |
| | தா தக்கிடு தக்கிடு கிடதகி தத்தத் தக்கிடு தக்கிடு கிடதகி | தக்கிடுதக திக்கிடுதக தக்கிடு | தா ததீங்கிண தொம் ‖ |
| 5. | தா த்ருகுடுதத் தளங்கு தொம் ; த்ருகுடுதத் தளங்குதொம் | தத்த த்ருகுடுதத் தளங்கு தொம் | ; த்ருகுடுதத் தளங்குதொம் |
| | தா த்ருகுடுதத் தளங்குதொம் தத்த த்ருகுடுதத் தளங்குதொம் | த்ருகிடுதத் தளங்கு தொம் த்ருகிடுதத் | தளங்குதொம் த்ருகிடுதத் தளங்கு |
| | திரிகுடு தா திரிகுடு தா திரிகுடுதத்த கிடதகி | தா ; தா தகதின் | , ததின தகஜெணு தகதிமி |
| | தாம் தா தகதின் , தகஜெணு தகதிமி | தாம் தா தகதின் | , ததின தகஜெணு தகதிமி |

(குறிப்புரை): மேற்கண்ட "சீரார் திருவடி" என்ற பாடலை இருவராக ஆடலாம். 1-ஆவது "தீம்தத் ததீம்த" என்று தொடங்கும் சொற்கட்டுக்குப் பலவிதமாக அடைவுகளைப் பிடித்துப் பின் 2. 3. 4. 5 சொற்கட்டுகளை முறையே ஒவ்வொன்றையும் பாடி முடித்து 1-ஆவது சொற்கட்டை பாடிக் கொள்க.

# மறைமலையடிகள்

## இயற்றிய நூல்களின் சிறப்பும் பயனும்

"கண்ணுடைய ரென்பவர் கற்ருேர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்." (திருவள்ளுவர் திருக்குறள்)

இத் தென்னுடு தவிர மற்றை எல்லாத் தேயத்தின்கண்ணும் உள்ளஎல்லா மக்களுந் தங்கள தஙகள் மொழிகளில் உள்ள நூல்களைக் கற்று அறிவிலும் ஆராய்ச்சியிலும நீண்ட இன்ப வாழ்க்கையிலுஞ் சிறந்து வருகின்ருர்கள். ஆனுல், இத் தெனுட்டில் உள்ள தமிழர்களோ பெரும்பாலுங் கல்வியறிவு இல்லாதவர்களாயும, அதனுல் ஆராய்ச்சியே இன்னதென்று உணராதவர்களாயும், அதனுற் கவலையும் நோயும் வறுமையுங் குறுகிய வாழ்நாளும் உடையவர்களாயும விரைவில் மாண்டு போகின்றனர்; நீண்ட நாள் இருந்தாலுந் தமது தாய்மொழியாகிய தமிழிலுள்ள நூல்களைக் கற்று அறிவு விளங்காத அவர்கள் விலங்குகளினுங் கடைப்பட்டவராவார்கள. மேலுந், தமிழர்கள் தமது தமிழ்மொழியைக் கற்றுத் தேர்ச்சியடையாமல் இனி உயிர் வாழல் முடியாது.

இதுகாறுந் தமிழர்கள் தமது தமிழ் மொழியைக் கல்லாமைக்கு ஒரு பெருங்காரணந் தமிழ் நூல்களெல்லாம் பெரும்பாலுஞ் செய்யுள நடையில் எழுதப்பட்டிருத்தலே யாகும். இச் செய்யுள நூல்களைக் கற்றறிய வேண்டுமானுல், அவைகளை நன்குணர்ந்த தமிழாசிரியர் உதவி கட்டாயம்வேண்டும். ஆனுல், இந் நூல்களைக் கற்பிக்கத்தக்க தமிழாசிரியர்களும, அவர்களால் நடத்தபபடுந் தமிழ்ப் பள்ளிக்கூடஙகளுமோ இத் தென்னுட்டில் எஙகும் இல்லை; எஙகோ ஒன்று இரண்டு இருந்தாலும் அவை தமிழர்க்குப் பயன்படுவதில்லை. இபபடியாகத் தமிழைக் கற்பதற்கு ஒரு செவ்வையான எளிய வழி இல்லாமையுந் தமிழக் கல்விக்கு ஒரு பெருந் தடை.

இத்தகைய பெருந்தடையை நீக்கித் தமிழ்க்கல்வியை எளிதாக எங்கும் பரவச்செய்யும் பொருட்டாகவே, ஆசிரியர் மறைமலையடிகள் திருத்தமான அழகிய இனிய தனிச்செந்தமிழ் உரைநடையில் அரிய பெரிய நூல்களை இயற்றிச், சென்ற அறுபது ஆண்டுகளாக அவைகளைத் தமது பெரும்பொருட் செலவி

லேயே வெளியிட்டு வந்தார்கள். இவர்கள் பழைய தமிழ் நூல்களில் உள்ள அரும்பெரும் பொருள்களை மட்டும் எடுத்து அவைகளை அழகுபெற விளக்கி இனிய செந்தமிழ் உரைநடையில் எழுதிவரும் அவ்வளவில் இருந்துவிடவில்லை. இக் காலத்திற் பல துறைகளிலும் நுட்ப ஆராய்ச்சி செய்யும் பேரறிஞர்கள் வெளியிடும அரும்பெரும் பொருள்களையும நம் தமிழ் மக்கள் கட்டாயம் அறிந்துகொண்டாலல்லாமல், அவர்கள் மற்றைத் தேய மக்களுக்கு ஈடாக உயர்ந்த அறிவுநிலைக்கு ஏறுதல் இயலாது. ஆகவே, அவ்வறிஞர்கள் கண்டெழுதும புதிய புதிய அரும்பெரும் பொருள்களையும் மறைமலையடிகள் தாம் அல்லும் பகலும் ஆராய்ந்தறிந்து, அவைகளைத் தம்முடைய செந்தமிழ் நூல்களில் தெளிய விளக்கி வெளியிட்டுள்ளார்கள்.

இவர்களுடைய நூல்களைக் கற்று அறிவு விளங்கிப் பெரும் பயன் அடைந்து வருபவர்கள் இத் தென்னாடு முழுதுமேயன்றி, இலங்கை, யாழ்ப்பாணம், பர்மா, மலாய்நாடு, தென்னாப்ரிக்கா முதலிய அயல்நாடுகளிலும் மிகுந்திருக்கின்றார்கள். இவர்களுடைய நூல்களைக் கற்று அவற்றாற் பெரும்பயன் அடைந்த மகிழ்ச்சியை அங்கங்குள்ள அன்பர்கள தெரிவித்து எழுதிய கடிதங்கள பல்லாயிரக்கணக்காகும்.

பழைய தமிழ் நூல் வடநூல்களின் கால ஆராயச்சிகளும், அவற்றுள மெய் இது, பொய் இது, பயனுள்ளது இது, பயன் இல்லது இது எனப் பகுத்துக் காணும் முறைகளும, தமிழின் பழஞ்சிறப்புந், தமிழ் நாகரிகமே பண்டுதொட்டு உலக நாகரிகத்திற்குக் காரணமாயிருந்த உண்மைகளும அடிகளாலேதாம் முதனமுதல் தமிழ்மொழியில் திருத்தமான செந்தமிழ் உரைநடையில் எழுதி வெளிப்படுத்தப்பட்டன. அடிகள் இற்றைக்கு 60 ஆண்டுகளுக்குமுன் இயற்றி வெளியிட்ட முதற்குறள் வாத நிராகரணம் என்னும் நூலையும், அதனபின தொடர்பாக வெளியிட்டுவந்திருக்கும் ஞானசாகர முதற்பதுமத்தையுந், திருக்குறள் ஆராய்ச்சி, பண்டைக்காலத் தமிழர் ஆரியர், சாதி வேற்றுமையும் போலிச் சைவரும், வேளாளர் நாகரிகம், பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம், முற்கால பிற்காலத் தமிழ்ப்புலவோர் என்னும் நூல்களையும், மாணிக்கவாசகர் வரலாறுங் காலமும் என்னும் ஆராய்ச்சிப் பெருநூலையும் பயில்கின்றவர்களுக்கு, அடிகள் இவ்வுண்மைகளை எவ்வளவு உழைப்பெடுத்து ஆராய்ந்து காட்டி உலகிற்கு உதவி செய்திருக்கின்றார்களென்பது நன்கு புலப்படும். தமிழ்நூல் வடநூல்களின் கால அளவைகளும், அவைகொண்டு தெளியப்படும் அரியபெரிய உண்மைகளும், அடிகள் இந்நூல்களை எழுதியுதவிய பிறகுதான் எங்கும் பரவலாயின.

இதுமட்டுமோ, கடவுளால் மிக அருமையாக அமைத்துக் கொடுக்கப்பட்ட நமதுடம்பைப் பாதுகாக்கும் முறைகளும், உடம்பைப் பாதுகாத்தற்கேற்ற உணவுவகைகளும், மனைவியுங் கணவனும ஒழுகவேண்டிய இயற்கை முறைகளும், அவர் தாம் விரும்பிய மக்களைப்பெறும் வழிகளும், நோய் அணுகா வாழ்க்கைத் திறன்களும், **மக்கள் நூறு ஆண்டு உயிர் வாழ்தல் எப்படி?, பொருந்தும் உணவும் பொருந்தா** உணவும் என்னும் நூல்களிலே அடிகளால் விரிவாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

இன்னும், உடம்பைக் கருவியாய்க்கொண்டு நடைபெறும் நமது உயிர்க்குள்ள ஆற்றல்களும், அவ்வாற்றல்களை மறைத்துக்கொண்டு உயிரைத் துன்புறுத்தும் அறியாமையின் இயல்புகளும், அவ்வறியாமையை யடக்கி, உயிரின் அறிவாற்றல்களை விளங்கச்செய்து, அவ்வாற்ருல் இவ் வுலகத்திலும் இனிச் செல்லும் உலகங்களிலும் நாம அடைதற்குரிய மிகச் சிறந்த நலங்களும் **யோகநித்திரை, மனிதவசியம்** என்னும் விழுமிய நூல்களில் விளங்கக்காட்டி, உயர்ந்த மனபபயிற்சியை இத் தமிழ் நாட்டவர்க்கு முதன்முதல் வற்புறுத்தி அதனைப் பரவச்செய்தவர்களும் நம் அடிகளே யாவர்.

மேலும், இவ்வாறெல்லாம விளங்கப்பெறும் நமது அறிவுகொண்டு நம்முடைய புலன்களுக்குத் தெரியாத இடங்களிலும் எட்டாத் தொலைவுகளிலும் நிகழும நிகழ்ச்சிகளையெல்லாம் இருந்த இடத்தில் இருந்தே அறிந்துகொள்ளும் வழிவகைகளைத் தெள்ளத்தெளிய விரித்துத், **தொலைவில் உணர்தல்** என்னும் அரியநூலை இத் தமிழகத்திற்கு உதவிய பேரறிஞரும் நம் அடிகளாரே யன்றி வேறு யாவர் உளர்?

அதுவேயுமன்றி, இவ் வுலகவாழ்வைவிட்டு நீங்கும்உயிர்கள், மறுமையுலகஙகளுக்குச் செல்லுங்கால் அவ் வுயிர்களுக்கு உண்டாகும் இன்ப துன்ப நிலைகளை; உண்மையாக நடந்த வரலாறுகள் கொண்டு இத் தமிழநாட்டில் ஆராய்ந்து காட்டியவர்கள், நம் அடிகளைத் தவிர வேறு எவருமேயில்லை. இவர்கள் அரிது முயன்று இயற்றி வெளியிட்ட **மரணத்தின்பின் மனிதர்நிலை** என்னும நூலைப்பயின்று மறுமையுலகின் மறைபொருள்களைத் தெரிந்து அளவிலா மகிழ்ச்சியடைபவர்கள் இப்போது தமிழ் நாட்டிற் பல்லாயிரக் கணக்காய்ப் பெருகி வருகின்றனர்.

இனி, இவையெல்லாவற்றினுஞ் சிறந்த முழுமுதற் கடவுளின் உண்மையியல்புகளும், அவர் எல்லா உயிர்களின் உள்ளும் புறம்பும் விளங்கித் தோன்றி அருள்செய்யும் முறைகளும், இறைவனுதவியைப் பெறும் உயிர்கள் பிறவியெடுப்ப

தற்கு முன்னும் பின்னும் நிற்கும் நிலைகளும், உயிர்களைப் பற்றிக்கொண்டு தடையாயும் உதவியாயும் நிற்கும் மும்மல இயல்புகளும், மும்மலப் பற்றுவிட்டு இறைவன் திருவடி சேர்தற்குரிய ஞானயோகப் பயிற்சி முறைகளும், எத்தனை யறியாமை ஐயம் உடையவர்களும் அவை தீர்ந்து களிக்குமபடி சைவசித்தாந்த ஞானபோதம், சிவஞானபோத ஆராய்ச்சி, கடவுளுக்கு மாறான கொள்கைகள் சைவம் ஆகா என்னும் ஒப்புயர்வற்ற ஞான நூல்களில் அடிகள் எடுத்து விளக்கிக் காட்டிஞற்போற், பேர் உதவி செய்த பேரறிஞர்கள் இத் தமிழகத்தில் வேறு பிறர் உண்டோ?

அதுவேயுமன்றிக், கல்நெஞ்சத்தையுங் கரைந்துருகச் செய்து, கடவுளின் அருளைக் கைம்மேற் றந்து. தனக்கு ஒப்பாவதும உயர்வாவதும் வேறு எந்த மொழியிலும் இல்லாத வழுத்துரை நூலாகிய திருவாசகம் என்னுஞ் செந்தமிழ் மாமறைக்குப், பண்டை யிலக்கண இலக்கிய மெய்ந்நூல் வரம்பு தேற்றி விழுமிய வுரை யெழுதினவர், தமக்குமுன் எவருமே யில்லாத பெரியதொரு குறைபாட்டை நீக்கி, ஆசிரியர் மறைமலையடிகள் அதன் முதல்நான்கு பெருமபாடல்களுக்கு எழுதித் தந்த திருவாசக விரிவுரை செந்தமிழ் நந்தாமணி விளக்கமாய்க் கற்றவர் முடிமேல் தெற்றெனத் திகழுதலைத் தமிழ் வழங்கும் நாடெல்லாம் ஒருங்கறிந்து போற்றுகின்றமை காண்மின்கள்!

இவைமட்டுமோ! நம் தனித்தமிழ் அன்னைக்கு அரும் பெறல் உயிராய்த் திகழாநின்ற பண்டைச் சங்கத் தமிழ் நூல்களின் ஒப்புயர்வில்லா மெய்ப்பெருஞ் சிறப்பினைத், தாம் வகுத்த முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரையானும், பட்டினப்பாலை ஆராய்ச்சியுரையானும், அடிகளே இத் தமிழகத்திற்கு முதன்முதல் எடுத்துக்காட்டியவர் ஆவர். இந் நூல்களைப் பயின்ற பின்னர்த் தான் தமிழ் மாணவர் பழைய நூல்களின் விழுப்பம உணர்ந்து, அவற்றை விரும்பிப் பயிலலாயினர்; பினறைக்காலத் தமிழ் நூல்களைவிடப் பண்டைத் தமிழ் நூல்களே சிறந்தனவென்று தமிழ்ப்புலவர்களுந் தேர்வாராயினர்.

இனிக், கற்றவரேயன்றிக் கல்லாதாருந் தாம் எல்லாத் துறைகளிலும அறியவேண்டிய அரும்பெரும் பொருளகளை எளிதில் அறிந்துகொளளுமபொருட்டு எளிய இனிய தனித் தமிழில் அறிவுரைக்கொத்து என்னுஞ் சிறந்த நூலையும், சிறுவர்க்கான செந்தமிழ், இளைஞர்க்கான இன்றமிழ் என்னும் நூல்களையும் இயற்றி அடிகள் வெளியிட்டிருக்கின்றனர்கள். இந் நூல்களைப் பயின்று பயன்பெறுவாரும் மிகப்பலர்.

அங்ஙனமே மக்கள் எத்திறத்தாரும் பயின்று களிக்கத்தக்க கதை நூலாகிய **கோகிலாம்பாள் கடிதங்கள்** என்னும் நூலையும் இயற்றியிருக்கின்றார்கள். வெறும் பாட்டிக்கதை, காமக்கதை, இயற்கைக்கு மாறான பொய்க்கதை மிகுந்த இந் நாளில், நல்லிசைப் புலவரால் நுட்ப அமைப்புகள் பொருந்த ஆக்கப்படும் கதை நூல்கள மிகச்சில. சிறந்த அமைப்புகளுடைய கதை நூல்களை ஆங்கிலம் முதலிய அயல்மொழிகளிலன்றித் தமிழிற் காண்டல் அரிது. அக் குறைபாடு அடிகள் ஆக்கிய இக் கதை நூலால் தீர்ந்தது. ஆங்கிலத்தில் உயர்ந்த கல்வி வாய்ந்த மாணவரும் பிறரும் இக் கதைநூல் அமைப்பின் திறத்தை மிக வியந்து பாராட்டுகின்றனர்.

இதனோடு, ஆங்கில நல்லிசைப் புலவர்கள் இயற்றிய கதை நூல் அமைப்பின் திறத்தைத் தமிழநாட்டவர்க்கும் விளங்கச் செய்யும்பொருட்டு, ஆங்கிலத்திற் சிறந்த "லீலா" (Leila) என்பதனை நேர் மொழிபெயர்ப்புச் செய்து **குமுதவல்லி அல்லது நாக நாட்டரசி** என்னும் பெயரால் ஓர் இனிய கதை நூலையும் அடிகள் இயற்றியிருக்கின்றனர். ஆங்கிலத்தில் உள்ளபடியே செந்தமிழில் பொழிபெயர்த்து ஆக்கப்பட்ட இதனையும் மூலத்தையும் ஒத்து நோக்கியவர்கள், இங்ஙனம் மொழிபெயர்ப்புச் செய்தல் எவர்க்கும் அரிதரிதென்று வியந்து பாராட்டுகின்றனர். ஆங்கிலம் உணராதவர்கள், மொழிபெயர்ப்பு நூலெனறே கண்டறியக் கூடாதபடி அத்துணைத் திறமையாக இது செந்தமிழில் அமைந்திருக்கின்றது.

இனி, ஆங்கிலத்தில் உயர்ந்தமுறையில் எழுதப்பட்ட நூலை அப்படியே தமிழில் மொழிபெயர்த்தற்குத் தமிழில் நேரான தமிழ்ச்சொற்கள் இல்லையென்று சொல்வோர், தாம் அப்படிச் சொல்வது பிழையென்று உணரும்பொருட்டு, ஆங்கிலத்தில் அடிசன் (Addison) என்னும் நல்லிசைப்புலவர் இயற்றிய ஆறு சிறந்த கட்டுரைகளின் தனித்தமிழ் மொழிபெயர்ப்பாகச் **சிந்தனைக்கட்டுரைகள்** என்னும் நூலை அடிகள் இயற்றியிருக்கின்றார்கள். ஆயிரக்கணக்கான கல்லூரி மாணவரும் பிறரும இதனைப் பயின்று ஆங்கிலத்திற்கு நேரான தமிழுந் தமிழுக்கு நேரான ஆங்கிலமுந் தெரிந்து இருமொழியிலுந் தேர்ச்சியுந் திறமையும் அடைந்து வருகின்றனர்.

இனி, வடமொழியிற் காளிதாசர் என்னும் மாப்பெரும் புலவர் இயற்றிய **சாகுந்தலம்** என்னும **நாடக இலக்கியத்தின்** சுவையினைத் தமிழ் மக்களும் அறிந்து களிக்கும்பொருட்டு, அதனை வடமொழியில் உளளபடியே அடிகள் நேர் மொழிபெயர்ப்புச் செய்து, இந்நூலின் நுட்பங்களை விளக்கும் முகத்

தால், இதுவரையில் தமிழில் வெளிவராத நாடகக் காப்பிய இலக்கணங்களையும், ஆங்கில நாடக ஆசிரியரான சேக்குவீயரின் அரிய பெரிய ஆற்றலினையும் ஒற்றுமை வேற்றுமை வகையால் நன்கெடுத்து விளக்குஞ் சிறந்த **சாகுந்தல நாடக ஆராய்ச்சியுரை** நூலும் எழுதி வெளியிட்டிருக்கின்றார்கள்.

இனிப், பழைய சங்கச்செய்யுளை யொத்த இயற்கை யழகு வாய்ந்த தனித்தமிழ்ச் செய்யுளும் உரையும் இக்காலத்தில் இல்லாக் குறையானது, அடிகள் இயற்றிய **திருவொற்றி முருகர் மும்மணிக்கோவை**யானும், அதனுரையானும், **சோமசுந்தரக்காஞ்சி**யானும் அதன் ஆக்கவுரையானும் நீங்கியது காண்மின்! இவ்விரண்டு நூல்களையும் பயில்வோர் சங்கத்தமிழ் நூல்களை எளிதில் அறிதற்கு வல்லவராவர்.

பலதிறப்பட்ட ஆராய்ச்சி நூல்களையும் விரிவுரைகளையும் நாடக நூல்களையும் இயற்றிய மறைமலையடிகள் இத்துணை ஆற்றலைத் தமக்கு அருளிய தம்முடைய ஆசிரியர் சோமசுந்தர நாயகர் அவர்களின் வாழ்க்கை வரலாற்றைச் "**சோமசுந்தர நாயகர் வரலாறு**" என்னும் நூலில் சுருக்கமாக, ஆனல் போதிய அளவு விளக்கமாக வரைந்துள்ளார்.

மேற்சொன்ன நூற்களிற் பலவற்றை அவ்வப்போது வெளியிடுதற்குக் கருவியாய் நிலவும **ஞானசாகரம்** என்னுஞ் செந்தமிழ் வெளியீட்டை அடிகள் சென்ற முப்பத்தாறு ஆண்டுகளாகச் சிறிதுஞ் சலிப்பின்றி விடாமுயற்சியுடன் வெளியிட்டு வரும் அருமபெருந்தகைமைக்கு, இத் தமிழுலகம் அவர்கட்கு யாது கைம்மாறு இயறறவல்லது!

இங்ஙனம் எந்தத்துறையில் எந்தப்பொருளை யறிந்து அறிவும் இன்பமும் பெறல்வேண்டுமாயினும், அவைகளை எளிதில் அறிந்து இன்புறுதற்கு அடிகள் அருளிச்செய்த நூல்கள் பேருதவி செய்தலால், அவைகளை வாங்கிக் கற்று எல்லாரும் அறிவுமிக்க இன்பவாழ்க்கையில் இனிது வாழவேண்டுமென்பதே அடிகள் விரும்புவது. இத்தகைய அரும்பெருநூல்கள் அடிகள் வாயிலாக எளிதிற் கிடைத்தும், நம்மவர்கள் அவற்றை வாங்கிப் பயிலாமல் அறியாமையிலும் அதனல் வரும் அளவிறந்த துன்பங்களிலுங் கிடந்துழல்வார்களானல், அது மன்னிக்கப்படாத பெருங்குற்றமாய் முடியுமன்றோ? ஆதலால், நம்மவர் ஒவ்வொருவரும் அடிகளா நூல்கள் அத்தனையும் வாங்கிக் கற்கும் பயன் மிகுந்த வழியிற் பொருளைச் செலவிட்டு அறிவும் இன்பமும்பெற்று வாழவார்களாக!

—**பொன்னரசு.**

# நல்வாழ்வின் ஆக்கம் யாது?

[வித்துவான் மாவை. துரை. பழநியகாதேவன்]

துனியோ, இனிதோ, துயருறு தோல்வியோ,
வென்றியோ, அன்றி வினைவீழ் நிலையோ,
மகிழ்வோ, இகழ்வோ, மயக்குறு களியோ,
சமயநல் உணர்வோ, அமய நோக்காது
ஆற்றிப் பயன்தர நின்றதாம் தொழிலோ,
இருநில வாழ்வில் இனியநற் கொள்கையின்
இயங்குறு கருத்தின் மயங்குறும் எண்ணமோ,
யாதோ அஃதோர் தீதே இல்லா
நடையோ டியன்ற நல்லொழுக் கம்மே
உடையோ னெவனோ அவனே உயர்ந்தோன்;
தனிமகன் உளமே புறவுல கதனில்
இனிதமை செயலிற் கேற்றதோர் உலைக்களம்,
தீய பயத்தற்கும் செல்லும் அஃதால்;
அதனால்,
நடையே, நாளும் பயின்ற நடையே
செயலும் அதற்கமை பயனும் என்ப;
நடையோன் றானே செயலுறுத் தற்கும்,
தடையே தின்றிப் பயன்றுய்த் தற்கும்
உரியோன்; அவன்காண் உயருல கம்மும்,
தரிய லாற்றா இருணர கம்மும்,
உரிய தாகும் கழுவாய் வினையும்
அவற்கே உரிய; அழகும் மகிழ்வும்
அற்ற வாழ்க்கையோன் பெற்ற பயனே
உற்ற அவனுளப் பெற்றி காட்டுமால்;
இனிமையும் எழிலும் இயைந்த வாழ்க்கையான்
இனிமைசேர் உடலுளத் தூய்மையாற் பயனை
அடைந்தன னென்ன அறியக் கடவேம்;
ஆகையின்,
நன்னடை யாக்கமே நல்வாழ் வாமே.

# செய்திகளும் குறிப்புக்களும்

## (க) மலேயாவில் டி. கே. எஸ். உடன்பிறப்பாளர் கலைப்பணி

டி. கே. எஸ். நாடகக் குழுவினர் தமிழ்க் கலையை வெளிநாடுகளிலும் பரப்பவேண்டுமென்ற சீரிய நோக்கத்தோடு சென்னையிலிருந்து மலேயா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளுக்கு ஏப்ரல் மாதம் 11-ஆம் தேதி புறப்பட்டனர். சிங்கப்பூரில் ஒருமாத காலம் தங்கி, அங்குச் சிறந்த நாடகங்களை நடத்தி, அங்குள்ள தமிழ்மக்களையல்லாது பிறமொழி பேசும் சீன, மலேய மக்களையும் களிப்பில் ஆழ்த்தினர். குழுவுக்கு அளித்த வரவேற்புகள் அனைத்திலும் குழுத்தலைவர் திரு டி. கே. சண்முகமும் பிற குழு உறுப்பினரும் தமிழ்மொழியின் சிறப்பையும் தமிழ்ப் பண்பாட்டின் மேன்மையையும் எடுத்துக்கூறி விளக்கினர். சிங்கப்பூரிலிருந்து மே 2-ஆந் தேதி கோலாலம்பூருக்குச் சென்றனர். அங்குப் பல நாடகக்கலைக் குழுவினர் அவர்களுக்குப் பெரும் பாராட்டு அளித்தனர். மலேயா நாட்டுத் தொழில், வணிக, பயிர்த்தொழில் அமைச்சர்களும் டி. கே. எஸ். குழுவினர்களின் நாடகங்களைக் கண்டு களித்து அறத்தைப் போற்றி அறிவை வளர்க்கும் நாடகங்கள் என்று அவைகளைப் பாராட்டினர். கோலாலம்பூரில் டி. கே. எஸ். உடன்பிறந்தார்களுக்குத் தங்கப் பதக்கமும் நடிகர்களுக்குத் தங்க மோதிரங்களும் பரிசாக வழங்கப்பட்டன.

**குறிப்பு:** டி. கே. எஸ். குழுவினரின் மலேயாச் செலவு இந்திய—மலேயா ஒற்றுமையை வளர்த்து, இரண்டிற்கும் இடையே உள்ள உறவை வலுப்படுத்தும் என்று நம்புகிறோம். டி. கே. எஸ். நாடகக் குழுவினர் வாழ்க!

## (உ) தமிழ் ஆட்சிமொழிபற்றி அரசியலார் போக்கு

“தமிழிலேயே நிர்வாகம் நடத்துமாறு உத்தரவிடுவது கஷ்டமல்ல, ஆனால் நடைமுறையில் சிரமங்கள் உள்ளன. முதலாவதாக டைப் டைரக்டர்கள் தமிழில் வேண்டும். எழுத்து வரிசை சம்பந்தமாக அபிப்பிராய பேதம் உள்ளன. இதில் முடிவு காணவேண்டும். ஆங்கில பதங்களுக்குச் சரியான தமிழ்ப் பதங்களைத் தயாரிக்கவேண்டும். ஏற்கனவேயுள்ள சட்டங்களைத் தமிழில் மொழிபெயர்க்கவேண்டும்.”— இவை கடந்த 28-6-’57-இல் சென்னை சட்ட அவையில் நிதி அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் தமிழை ஆட்சிமொழியாக்குவது பற்றிப் பேசியபோது வெளியிட்ட கருத்துக்கள்.

**குறிப்பு:** தமிழை ஆட்சிமொழியாக்குவதில் நடைமுறையிலுள்ள தொல்லைகளை, இவ்வளவு காலங்கடந்து, இவ்வளவு விளக்கமாகத் தெரிவித்த அமைச்சர் அவர்களின் கூற்று மிகமிக வருந்தத் தக்கது. ஒரு கருத்து சட்டமாவதென்றால் அதற்கு ஆற்றவேண்டிய அடிப்படைப் பணிகளும் அதில் சில இன்னல்களும் இருக்கத்தான் செய்யும். அவற்றையெல்லாம் கடந்து உறுதியைத் துணைக்கொண்டு செய்யப்படுவதுதான் ‘சட்டம்’ எனப்படும். அமைச்சர் அவர்கள் கூறும் தொல்லைகள் புதியவையல்ல. தமிழை ஆட்சிமொழியாக்குவது பற்றிய எழுச்சி ஏறக்குறைய நான்கு ஆண்டுகளாக இருந்து வருகிறது. இந்நிலையில் தேர்தலுக்கு முன் ‘அதோ ஆட்சிமொழி’ ‘இதோ ஆட்சிமொழி’ எனப் பறைசாற்றிய ஆட்சியாளர் இன்று கூறும் காரணங்கள் பொருந்தாக் கூற்றுகளேயாகும்.

(ட) எழுத்தாளர் மாநாடுகள்

கடந்த திங்கள் இறுதியில் சென்னையிலும் திருச்சியிலும் முறையே நடைபெற்ற தமிழ் எழுத்தாளர் மாநாடுகளில் கீழ்வரும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன.

"சென்னை ராஜ்யத்திற்குத் தமிழ்நாடு என்று பெயரிடவும் அதற்கான நடவடிக்கைகளை விரைவில் மேற்கொள்ளுமாறு சட்டசபைகளையும் அரசியலாரையும் இம்மாநாடு கேட்டுக்கொள்ளுகிறது," என சென்னை மாநாட்டிலும, சென்னைககுத் தமிழ்நாடு எனப் பெயர் வைக்கவேண்டும், இலக்கியத்தில் மறுமலர்ச்சிவேண்டும் என்பவற்றை வற்புறுத்தித் திருச்சி மாநாட்டிலும தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. "அழிக்கும் யந்திரங்களைவிட எழுத்தாளர் பேனா சக்தி வாய்ந்தது. நமது இலக்கியத்தில் மறுமலர்ச்சி காணவேண்டும்; நல்ல தமிழ்ச்சொற்களைப் பயன்படுத்தவேண்டும் பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்தக்கூடாது. எல்லோருக்கும் புரியும் வகையில எளிய நடையில் எழுதவேண்டும்" என்று திருச்சி எழுத்தாளர் மாநாட்டில் டாக்டர். சேதுப்பிள்ளை தம்முடைய தலைமையுரையில் கூறினார்.

**குறிப்பு:** 'வாளைவிட எழுதுகோல் வலிமை வாய்ந்தது' என ஒரு பழமொழியுண்டு. அத்தகைய வலிமை பொருந்திய கருவியைக் கைக்கொள்ளும் எழுத்தாளர் கூடி இரு இடங்களில் தமது கருத்தை வலியுறுத்தியிருப்பது குறிப்பிடத்தககது. திருச்சி மாநாட்டிற்குத் தலைமை தாங்கிய டாக்டர், சேதுப்பிள்ளையவர்கள் எழுத்தாளர் வன்மையை நன்கு சுட்டிக் காட்டியுள்ளார்கள். அத்தகைய எழுத்தாளர் தாம் சென்னைக்குத் "தமிழ்நாடு எனப் பெயரிடுக!" என முழங்குகிறார்கள் என்றால் இதனை அரசியலார் பொருட்படுத்தாதிருக்க இயலாது. தமிழ் ஆட்சிமொழி ஆவது, நாடு தமிழ்நாடு என அழைக்கபபடுவது எனபன போன்ற செய்திகள் மிகமிக இன்றியமையாதவை. இவற்றைச் செயலபடுத்துவதில் காலங்கடத்துவது நாட்டு நலத்துக்கு உகந்ததல்ல.

(ச) மதுரையில் தமிழ்க் கல்லூரி துவக்கம்

கடந்த 3-7-'57-இல் மதுரையில் தமிழ்க் கல்லூரி ஒன்று துவக்கப்பட்டது. இக் கல்லூரி மதுரைத் தமிழ்ச சங்கத்தினால் நடத்தப்படும். இக் கல்லூரி சென்னைப் பல்கலைக் கழகத்துடன் இணைககப்பட்டுள்ளது. கல்லூரியைத் துவக்கிவைத்த திரு. எஸ். சோமசுந்தர பாரதியார் இக கல்லூரி மதுரையில் அமைந்தது மிகப் பொருத்தமானதெனறும் தமிழ்ச சங்க நடவடிக்கைகளைப் பெருக்கக் கல்லூரி உதவுமென்றும் கூறினார்.

**குறிப்பு:** மதுரைத் தமிழ்க் கல்லூரி துவக்கச்செய்தி தமிழ்ப் பற்றுக்கொண்டோர் அனைவருக்கும் மகிழ்ச்சி தரும ஒரு நற்செய்தியாகும். தமிழுக்குப் போதிய அளவு கல்லூரிகள் இலலாதது ஒரு பெருங்குறையேயாகும். அக் குறையினை இக் கல்லூரி ஓர் அளவுக்குக் குறைத்துள்ளது. எனினும் நாடும மொழியும் நலமுறவேண்டுமானால் இதுபோன்ற தமிழ்க் கல்லூரிகள் தமிழகத்தின் பல பகுதிகளிலும் தோன்றவேணடும். மதுரைத் தமிழ்க் கல்லூரி நல்ல தமிழறிஞரகளை நாட்டிற்குத் தந்து பல்லாண்டு தமிழ்ப்பணி ஆற்றவேண்டும் என உளமாற வாழ்த்துகின்றோம்.

# மதிப்புரை

'பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் வரலாறு' (செய்யுள் நூல்)

[இதன் ஆசிரியர் திரு. புலவர் - அரசு ஆவார்கள். பதிப்பாளர் திரு. இராசரத்தின முதலியாரவர்கள், மாங்காடு. இதன் விலை ரூபா, இரண்டு.]

இந்நூல் திருமுருகன் திருவருள் நேரில் கைவரப்பெற்று முழுத்தவ முனிவராய் நாம் செய்தவப்பேற்றால் நம்மிடைத் திகழ்ந்து நம்மை ஆட்கொண்டருளிய பாம்பன் சுவாமிகள் திருவரலாற்றை - மெய் வரலாற்றை உள்ளவாறு தெள்ளத்தெளிய உரைக்கின்றது. இஃது அறுநூற்று அறுபத்தாறு செய்யுட்களைக் கொண்டிலங்குகின்றது. செய்யுட்களனைத்தும் மிக்க இனிமையுடையன. எளிமையும் தெளிவும் மிளிர்வன. திட்பநுட்பம் செறிந்தன. ஒழுகிய ஓசையை உடையன. யாவரும் உரைநடைபோன்று படிக்கும பாநலங்கனிந்தன.

இவ் வரலாற்றைச் செம்மையாக ஓதுவார், செவ்வேளின் பேரன்பின ராவர். பாம்பன் அடிகளார் பாடியருளிய திருப்பாட்டுக்கள் ஆறாயிரத்தறு நூற்றறுபத்தாறு திருப்பாடல்கள் என்ப. அடிகளார் அறிவித்தருளிய மெய்க்கோள் ஒரு கடவுளும், ஒரு குலமும் என்ப. அக் கடவுள் தமிழ்க் கடவுளாகிய செவ்வேளென்ப. ஒவ்வாக் கதைகளை வன்மையாகக் கண்டித்தொதுக்கினாலன்றி நன்னெறியொழுகி நலம்பெறமுடியா தென்பதுமாகும். எந்தக் கடவுளரையும் தான் வழிபடு கடவுளாகவே மனங்கொள்ளுதல்வேண்டுமென்பதும், குறைகூறுதல் ஆகாதென்பதும், எச்சமயப் பெரியாரையும் போற்றுதல்வேண்டுமென்பதும் பிறவுமாகும். இவையனைத்தும் இந் நூலிடை ஆங்காங்கு மிளிரக் காணலாம்.

இதனைச் செந்தமிழன்பரும் செந்நெறிச் செல்வரும் ஓதியுணர்ந்து செவ்வேள் திருவடியன்பராய்த் திகழ்வாராக.



திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிட்டு வெளியிடப்பெற்றது. ஆசிரியர் : வ. சுப்பையா.





| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு ௧௯௮௮, ஆடி | பரல் |
|---|---|---|
| ௩௧ | ஆகஸ்டு, 1957 | ௧௨ |


# செல்வியின் சிறப்பு

நம் 'செந்தமிழ்ச் செல்வி' அம்மையப்பர் திருவருளால் கடந்த முப்பத்தோராண்டுகளாக நாடு, மொழி, நன்னெறி ஆகிய முன்னேற்றத்தின் பொருட்டுச் செவ்விய முறையில் தொண்டாற்றி வருகின்றனள். நம் செல்வியொன்றே தொன்மைச் செந்தமிழையும், செந்தமிழ்ச் சான்றோர் பண்டுதொட்டு இன்றுகாறும் ஓவாது உயிரெனப் போற்றிவரும் ஒரு முழுமுதல் வணக்கமாம் சிவனெறியினையும், உயர்ந்த இலக்கண இலக்கியச் செழுந்தமிழ் நூல்களையும் தமிழின் தொல்மரபு வழுவாமல், உயர்ந்த செந்தமிழ் இயல்நடை பொதுளிய அரிய பெரிய கட்டுரைகள் பலவற்றால் அவ்வப்போது அணி செய்து ஓம்பி வருகின்றனள்.

தமிழகப் பண்பாடு, தமிழ் நாகரிகம், ஓவியம், சிற்பம், கல்லெழுத்து, தமிழக ஒழுக்கம், அறிவியற்றுறை, ஆட்சிமொழிச் சிறப்பு, அறிவுசான்ற பெரும்புலவர்கள் வரலாறு, பெருந்தலைவர்களின் பேரியல் வரலாறுகள், தமிழ்மொழி வளர்ச்சிக்கு ஆவன புரியத் துணைசெய்யும் புதிய கருத்துக்கள் நிரம்பிய கட்டுரைகள், வரலாற்றுக் காலக்குறிப்புகள், புதைபொருளாராய்ச்சிகள், அருஞ்சொல் வழக்கின் ஆராய்ச்சிகள், ஆய்ந்து துணிந்து உறுதிப்படுத்திய உயர்ந்த பொருண்மொழிகள், இருவர் மாறுகோள் ஒருதலை துணியும் பொருவரும் கட்டுரைகள், இலக்கண நுண்முடிபுகள், சொல்லாராய்ச்சிகள், வேர்ச்சொல் விளக்கம், தமிழகப் பண்டைய விளையாட்டு விளக்கங்கள் முதலிய பிறவும் நம் செல்வி அழகுறத் தாங்கி அறிஞருலகிற் றிகழ்கின்றனள்.

நம் தமிழகத்துக்கே உரிய தொன்மைத் தமிழ்க் கொள்கையாம் செம்பொருட்டுணி வென்னும் சித்தாந்த சைவச் சிறப்புக்கள், அவற்றிற்குத் துணைபுரியும் திருமுறைகள், மெய்கண்ட நூல்கள் ஆகியவற்றின் விளக்கங்களும் அவ்வப்போது மேற்கொண்டு போந்தனள். இன்றியமையாத உலகியற் செய்திகளும் ஆண்டாண்டு மேற்கொண்டுள்ளாள்.

வேடிக்கை, விளையாட்டு, புதுமை, தொடர்கதை, பொழுது போக்கு, நகைப்பு முதலியவற்றிற்கு உரிய வெளியீடுகள் பல உலவுகின்றன நம் நாட்டகத்து. அவைகளெல்லாம் பெரும்பாலும் பார்த்து மகிழும் பான்மையனவே. படிப்பகங்களிலும், நூலகங்களிலும் போற்றிவைத்துப் பலரும் பலகாலும் கற்று நாடி நினைவுகூரத்தக்க நீர்மை வாய்ந்தது நம் 'செந்தமிழ்ச் செல்வி' யொன்றேயாம். நம் செழுந்தமிழின் கொழுமைமிக்க தீஞ்சுவை நடையினை நாம் நெகிழ விட்டுவிட்டால் நீரிற் பால் கலந்த நீர்மையாய்த் தனித் தமிழின் ஈடும் எடுப்புமில்லாப் பீடு சேர் பெருமித நடைநலம் மாசுபட்டுக் கெட்டொழியும். அங்ஙனம் ஆகவொட்டாது அணைகோலி நிறுத்துவது நம் 'செல்வி' யொன்றேயாம்

இனி வரும் முப்பத்திரண்டாம் ஆண்டு முதல் 'மும்மொழி வல்லாராய், செம்பொருட்டுணிவின் சீரியராய்,' எழுத்தாலும் சொல்லாலும் நூலாலும், தனித்தமிழ்க் கொள்கையினையும், தமிழகத் தொன்னெறியாம் சிவநெறி மாண்பினையும் தமிழகத்தும், புறத்தும், வெளியுலகத்தும் கடந்த அரை நூற்றாண்டுகளாக நிலைநாட்டி அம்பலவாணர் திருவடி சேர்ந்த ஆசிரியர் மறைமலையடிகளாரின் மாண்பு நிறைந்த கடிதங்களும், அவர்தம் பன்னூற்களினும் காணப்படும் விலைவரம்பில்லா நன்மணியனைய பொன்மொழிகளும் தொடர்ந்து நம் செல்வியில் வெளிவரும். அவைகள் தமிழகத்துக்கோர் ஊன்றுகோலாய்த் தமிழ்நன் மாணவர்க்கும், ஆசிரியர்க்கும் பெருந்துணை புரிவனவாகும். மேலும் அவர்தம் ஒப்பிலா நடை யாவரையும் செப்பமுற எழுதவும் பேசவும் செய்து பெருமையுறப் பெருந்துணை புரியும்.

ஆதலின் நம் செல்வியன்பர்களும் பிறரும் செல்வியினை வாங்கியும் வாங்குவித்தும் ஓங்கச் செய்யுமாறும், செந்தமிழினைத் தொன்மைநயங் கெடாது பேணுமாறும் வேண்டுகின்றோம்.

# சென்னை மாணவர் மன்ற வெள்ளி விழா

இவ்வரும்பெரும்விழா சென்னைமா நகர்க்கண் 'வண்ணை சர். தியாகராயர் கல்லூரியில்' அமைக்கப்பட்டிருந்த 'மணியரசர்' பந்தலில் 20, 21—7—1957 சனி, ஞாயிறுகளில் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அதன் சுருக்கம் வருமாறு :

முதல் நாள் நிகழ்ச்சிக்கு நாவலர் டாக்டர், எஸ். சோமசுந்தர பாரதியார், எம் ஏ., பி.எல். அவர்கள் தலைமை பூண்டார்கள்.

கனம் கல்வி அமைச்சர், திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள் விழாவினைத் துவக்கி வைத்தார்கள்.

கனம் அமைச்சர், ஸ்ரீர்து அம்மையாரவர்கள் பரிசு வழங்கினார்கள்.

மேயர், திரு. கே. என். சீநிவாசன் பி. ஏ., பி. எல். அவர்கள் கண்காட்சியைத் திறந்து வைத்தார்கள்.

ஊர்வலமும் சிறப்பாக நடந்தது.

மறுநாள் விழாவுக்கு முத்தமிழ்க் காவலர் திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தலைமை பூண்டார்கள்.

மிக்கார் பலர்க்கும் தக்க பட்டங்கள் வழங்கப்பட்டன. பட்டம் வழங்கிய பண்பின் மிக்கார், நாவலர் டாக்டர், எஸ். சோமசுந்தரப் பாரதியாராவர்.

பட்டம் பெற்றுள்ள நண்பின் மிக்க நல்லாரும் பட்டமும் வருமாறு :

திருத்தேவாரம் மயிலை, வேதாசல முதலியார், 'தமிழ்மறை இன்னிசைப் புலவர்'.

வாலாசாபாத் இந்துமதப் பாடசாலை முதல்வர், மாசிலாமணி முதலியார், 'பொதுநல ஊழியர்'.

பண்டிதை, எஸ். கிருட்டிணவேணி அம்மையார், 'தமிழ் மூதாட்டியார்'.

புலவர், எஸ். எஸ். அருணகிரிநாதர், 'ஆசிரியமணி'.

கழகம், வ. சுப்பையாபிள்ளை, 'தமிழ்நாற் காவலன்'.*

---

* திரு. வ. சு. அவர்கள் கடப்பாட்டுத் தொண்டினுக்குக் கைம்மாறு வேண்டாமையே முறைமை எனக் கூறிப் பட்டத்தை மறுத்தனர். தூத்துக்குடிச 'சைவசித்தாந்த சபையார்' வழங்கிய 'சித்தாந்தக் காவலர்' என்னும் பட்டத்தை முன்னம் தாம் ஏற்காமையையும் அன்புடன் மொழிந்தனர். அங்ஙனமிருந்தும் மன்றத்தார் ஆர்வ மிகுதியால் நல்குவித்தனர். எனினும் அவர்கள் அதனை ஏற்றுக்கொள்ளவில்லை என்பதைக் குறிப்பிடாமலிருக்க முடியவில்லை.

விழாத் துவக்கத்தில் திரு பேராசிரியர் மயிலை சிவமுத்து அவர்கள் அனைவர்களையும் அன்பாக வரவேற்று மன்ற அறிக்கையுடன் விரிந்ததோர் விரிவுரை ஆற்றினார்கள். திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் மன்றத்தின் தொண்டுகளை மிகவும் பாராட்டிப் பேசினர். "உலகத்திலேயே ஒப்பில் ஒரு நூலாகத் திகழ்வது தெய்வத் தமிழ்த் திருக்குறளே. அதனைப் பிற மொழியில் மொழிபெயர்க்க விரும்புவோர் தமிழைத் தாய் மொழியாகக் கொண்டு அதனை உயிரினும் சிறப்பாக ஓம்பி வரும் செந்தமிழ்ப் புலவோர் உதவியுடன் மொழிபெயர்த்தல் வேண்டும். இப்பொழுது ஐ. நா. திருக்குறளை அயலவர் உதவியுடன் மொழி பெயர்க்கத் துவங்குகிறது. அதனை நாம் எதிர்க்க வேண்டும். ஒருவேளை மொழிபெயர்த்தாலும் தமிழ்ப் பெரும் புலவர் ஒப்புதல் பெற்றே வெளியிடவேண்டுமென வற்புறுத்தல் வேண்டும் என்பதாம்."

டாக்டர், அழகப்பச் செட்டியார் அவர்களின் உருவப் படத்தை திரு. அழ. வள்ளியப்பா அவர்கள் திறந்து வைத்துச் சிறப்புறப் பேசினார்கள்.

திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர், திரு. சி. என். அண்ணாத்துரையவர்கள், மாணவர்களும் அரசியலும் என்பதன் நுணுககத்தை விளக்கி விழைதக்க விரிவுரையாற்றினார்கள். டாக்டர், மு வரதராசனர் அவர்கள், பல்கலைக் கழகத்தில் தமிழுக்குத் தக்க மதிப்பிடம் தரவேண்டுமென்றும், தமிழிலேயே திருமணங்கள் நடைபெற வேண்டுமென்றும், தமிழைப் புறக்கணித்துத் தமிழுக்கு ஆக்கம் வரும் செய்திகளை இருட்டடிப்புச் செய்யும் செய்தித் தாள்களை அறவே விலக்குதல் வேண்டும் என்றும், அஞ்சல் அட்டை முகப்புகளில் தமிழ் நாட்டில் தமிழிலேயே விளக்கம் பொறிக்கப்பட வேண்டுமென்றும், தமிழைப் பொறுத்த அளவில் எல்லாக் கட்சியினரும் 'வில்லக விரல்போல்' ஒற்றுமையுற்று உழைக்கவேண்டும் எனவும் உணர்ச்சிமிக விரிவுரையாற்றினார்கள். சைதை ஆசிரியர் கல்லூரி முதல்வர் திரு. எம். ஆர். பெருமாள் அவர்களும் விரிவுரையாற்றினர்.

சென்னை நாட்டைத் 'தமிழ்நாடு' என்று பெயரமைக்க வேண்டுமென்றும், வானொலி நிலையத்தில் 'ஆகாசவாணி' என்று கூறுவதை 'வானொலி' என்று மாற்றி மொழிய ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும் 'தமிழ்' அரசியல் மொழியாக்கப்படுதல் வேண்டுமென்றும் கோரித் தீர்மானங்கள் ஒருமுகப்பட நிறைவேற்றப்பட்டன. திரு. தணிகை உலகநாதனவர்கள் நன்றிகூற விழா இனிது நிறைவுற்றது.

# கண்ணகி திருமணம்

[வை. தட்சிணாமூர்த்தி, பி. ஏ. (ஆனர்சு)]

(சிலம்பு ௩௧-பரல்-௧௧-பக்கம் ௫௫௧-இன் தொடர்ச்சி)

செய்யாக் கோலமொடு வந்தீர் என மாதரி கூறுவதொப்ப கண்ணகி தாலியைத் தவிரப் பிற அணிகலன்களை அணியவில்லை. நெடுநல்வாடைத் தலைவிகூடத் தன் தலைவனைப் பிரிந்திருக்கையில் பிற அணிகளைத் துறந்து பின்னமை நெடுவீழாய தாலிதாழ வருந்தி இருந்தமை பத்துப் பாட்டில் கண்டோம். அத் தமிழ் வழக்குத் தவறா வண்ணம் கணவனைப் பிரிந்த கண்ணகியும் பிற அணிகளை அணியவில்லை. "பிறிதணி மகிழாள்" என்புழி மங்கல வணியின் வேறான பிறிதணி எனப் பிரித்துக் கூறப்படு கின்றது. பிறிதணி என அணியப்படும் அணிகளோடு ஒப் பிட்டுக் கூறுவதால் மங்கல வணியும் அணியப்படும் ஓர் அணி யாகத்தான் இருக்க வேண்டும் என்பது போதருகின்றது. மங்கலவணி எனுஞ் சொற்கு இயற்கையழகு எனப் பொருள் கொள்ளின் அவ் வியற்கை அழகு ஏன் பிறிதணிகளாய அணி கலன்களோடு ஒப்பு நோக்கப்படுதல் வேண்டும்; எற்றுக்கு அவ்வியற்கை அழகை மார்புக்கும் காதுக்கும் இடையில் கூற வேண்டும்; முதலிலோ, இறுதியிலோ அன்றோ அத் தொகை நிலையான அழகு கூறப்பட்டிருக்க வேண்டும் என்ற ஐயங்கள் எல்லாம் எழுதல் இயல்பு.

கண்ணகி தாலி அணிந்திருந்தால் அதனைத் தன் கேள்வன் மாண்ட பின்னர் ஏன் களைந்ததாகக் கூறவில்லை; பொற்றொடி தகர்த்தாள் எனமட்டும் கூறப்படுகின்றதே எனும் ஐயம் எழாம லில்லை. பொற்றொடி தகர்த்தமை கூறப்படுவதால் அதுவே ஏன் மங்கலவணியாய மணவணியாக இருந்திருக்கக்கூடாது என்னும் ஐயமும் எழலாம். தொடி மணக் காலத்திலும் அணிவிக்கப்படும் ஓர் அணியேயன்றி மணத்தாலி போன்று மணவணியேயன்று. தொடியைப் பரத்தையரும், மணமாகாப் பெண்டிரும், இளம்பெண் டிரும், மணமானோரும் பிறருமாய பல்லோரும் அணிந்திருக்கின் றனர். அத்துடன் தொடி தகர்த்தல் ஊடலும், உள நெகிழ்ச்சி யும் ஏற்பட்ட நேரமெல்லாம் பெண்டிர்மாட்டு நடந்த நிகழ்ச்சி யாக அகநானூறு, கலித்தொகை முதலிய இலக்கியங்கள் கூறு கின்றன. கண்ணகியின் திருமணத்தின்போது தொடி அணி வித்ததாகவும் சிறப்பித்துக் கூறவில்லை. தொடி தகர்த்தமை கூறப்பட்டது கண்ணகியின் வெகுளியைக் காட்டவேயாகும்.

கோவலன் மாண்ட பின்னர், கண்ணகி தாலியறுத்தாள் என வெளிப்படையாகப் பகர்வது நாகரிகமுடைய மங்கல வழக்கன்று என்பது நாம் உணராததன்று. கண்ணகியின் திருமணம் பாணிக் கிரகணம் என்போரே தொடியைச் சிறப்பணியாகக் கொள்ள முயல்கின்றனர். தாலியைக் களைந்ததாகக் கூறுவது மங்கல வழக்கன்மையோடன்றிக் கண்ணகி 'கணவனைக் காண்பேன் தீதறு நல்லுரை கேட்பேன்' என்று வஞ்சினம் கூறியவளாயிற்றே, அவள் கணவனை இழந்ததாக எண்ணித் தாலியைக் களைந்திருப்பாளா? எனும் ஐயமும் எழுவது இயல்பு. வாலாமை நாட்கள், திருச் செங்குன்றத்தில் கண்ணகி நாட்களைக் கழித்தமை இவற்றைக் கூறுகின்றது சிலப்பதிகாரம். இவ் வழக்குகள் இக்கால வழக்கு களோடு ஒப்புமை உடைத்தே. எனவே தொடி தகர்த்தமை கணவனை இழந்து ஊரை எரித்து ஊரை விட்டு வெளிவந்த வுடனன்றே நிகழ்ந்தது; இது தாலிகளைதல், வளையல் உடைத்தல் போன்ற இறந்தாரை எண்ணி வருந்திச் செய்யும் சடங்கு களோடு ஒப்பு நோக்கத் தக்கதா? என்பதும் ஆராயத்தக்கது. ஓரளவு எண்ணிப் பார்க்கையில் கண்ணகி தொடி தகர்த்தது வெகுளிப் பொருட்டே யன்றிக் கணவனை இழந்தோர் மண வணியைக் களைதல் வேண்டும் என்னும் கருத்தோடன்று என்பது விளங்குகின்றது.

திருமணத்திற்கு ஒரு படலம் வரைந்த கம்பர் காலத்தும் நைடத காலத்தும் தமிழகத்தில் தாலி கட்டும் திருமணமே நடைபெற்று வந்தது என்பது வெள்ளிடை மலையாயினும் ஆண்டு திருமணச் சடங்குகளைக் கூறிய கவிஞர்கள் தாலிகட்டினன் எனக் கூறிச் செல்லவில்லை. "தாலிகட்டாது திருமணம் நடந் திருக்க முடியாது'' என்ற எண்ணத்தால் அந் நிகழ்ச்சியைக் கவிஞர்கள் மரபாகக் கூறுவதில்லை. அன்றியும் சங்க காலத்தே தாலி பெருவரவிற்று என்பது "ஈகையரிய இழையணி'' எனும் புறப்பாட்டடியாலும், "பின்னமை நெடுவீழ் தாழ'' எனவரும் நெடுநல்வாடை அடியானும் நலம்பெறத் தெரிய அஃதொப்பவே சிலப்பதிகாரக் கண்ணகிக்கும் கோவலன் தாலிகட்டினன் எனக் கொள்வதே தக்கது.

இதுகாறும் ஒருவாறு கண்ணகியின் திருமணம் பாணிக் கிரகணம் அன்று, பிரசாபத்தியம் அன்று என்பனவற்றைக் கண்டோம். இனி அஃதெங்ஙனம் காதற்கற்பாகும் என்பதனைக் காண்போம் :

கண்ணகியை முதற்கண் கூறுமுகத்தான் அவள் வடிவு, திறம், குணம், காதற் பண்பு இவற்றை இளங்கோ இயம்பு கின்றார்.

"போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்" எனு மடி வடிவையும், "தீதிலா வடமீனின் திறம்" என்பது கற்புத் திறத்தையும், "மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங் குணத்து" என்பது அவள் தன் பெருங் குணத்தையும், "காதலாள்" என்ற சொல் காதற்பெற்றியையும் இயம்புவன வாயின. "வயங்கிய பெருங் குணத்துக் காதலாள்" என்ற தொடருக்கு "விளங்கிய பெருங் குணத்தாற் காதலித்தவள்" என அரும்பத வுரைகாரர் உரை பகர்வார். அடியார்க்கு நல்லாரோ எனின் "பெருங் குணங்களைக் காதலிப்பாள்" என் பார். பெருங் குணங்களைக் காதலிப்பாள் எனக் கூறின் அக் குணங்கள் இல்லாமை தோன்றும்; எனவே செம்மையாகப் பெருங் குணங்களையும், காதற்பெற்றியையும் உடையவள் எனக் கூறலே சாலும். அன்றித் தனக்கிருந்த பெருங் குணங்களோடும் தக்க வாறு முறையே கோவலனைக் காதலித்தவள் எனும் குறிப்புறக் கூறினார் எனக் கூறினும் தகைத்தே. வடிவு, கற்பு, இவற்றை இயம்பினார் தொடர்ந்து குணத்தையும், காதற் பண்பையும் கூறினதாகக் கொள்ளல் சிறந்ததே. அக் காதலாள் என்ற சொல் கண்ணகிக்கும் கோவலனுக்கும் இருந்த காதல் உறவைத் தான் காட்டுவதாகின்றது.

கோவலனைக் கூறுழி "பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டிக், கண்டேத்துஞ் செவ்வேளென் றிசை போக்கிக் காதலாற், கொண்டேத்துங் கிழமையான்" எனக் கூறப்படும் தொடருக்கு "மடவார் ஆயத்துக் கண்டேத்தும் செவ்வேளென்று கண்டார் கொண்டேத்தும் கிழமையான்" என அரும்பதவுரைகாரர் உரை கூறினார். கண்டார் மேலேற்றி இவர் கூறியது பெண்பழி யகற்றவேயாகும். அடியார்க்கு நல்லார் "மடவார்தம் காதலால் உலகிற் கண்டேத்தும் செவ்வேளென்று அவனிசையைத் தம் தாயத்தினகட் பாராட்டிப் பரப்பிக் காமக் குறிப்பினால் உட்கொண்டு ஏத்துதற் குரியான்" என வுரை பகர்வார். செவ்வேளென்றது காமவேளின் நீக்குதற்கு. காமன் காமநோய் படரச் செய்வான்; செவ்வேளோ கொண்ட காதலைக் காக்க வழி செய்வான். இது வள்ளி மணத்தாலும் அறியப் படும். காதன்மை ஈண்டுக் கண்ட பெண்டிரெல்லாங் கொண்ட தன்று காதன்மை பெறத்தக்க வீரம், அழகு முதலியன முறை வழுவாக் காதலைக் காக்கும் கடமையுள்ளமேயாகும். காமம் நோந்திறக் காமமாகாது, செந்திறக் காமமாகவே ஆயத்தார் மேல் ஏற்றப்பட்டது. அவன் கொண்டேத்தும் கிழமை பெற்றானே யன்றி, மகளிர் கற்பிழக்கும் வண்ணம் செய்யவில்லை. செந்திறக் காமம் தலைகாட்டியது களவுவழிக் கோவலன் கண்ணகிபாற்

கொண்ட காதலைக் காக்கும் திறத்தோன் என வியப்பதற்கே. கண்ணகியும் கோவலனும் கொண்ட காதல் மாறாக் காதலாகவே இருந்தது; யாண்டும் குறைந்ததாகச் சிலப்பதிகாரம் கூறவில்லை.

கோவலன் மாதவிபாற் கொண்டது விடுதலறியா விருப்பே யன்றிக் காதலன்று. மாதவி காதலித்தாள். கோவலன் மாதவியின் காதலனானான்; ஆனால் கோவலன் அவளைக் காதலியாகக் கூறியதாக மறந்தும் சிலப்பதிகாரம் சொல்லவில்லை. கண்ணகி பின்பால் தீராக் காதல் கோவலன் கொண்டிருந்தான். காதலன் காதலி என்றே இருவரும் உரிமையோடு கூறப்பட்டார்கள். ஆனால் மாதவி தான் கொண்ட காதல் அளவு கோவலனிடமிருந்து காதலைப் பெறவில்லை.

எனவே காதல் கண்ணகிபாலும் கோவலன்பாலும் மணவறை புகுமுன்னர் புகுந்து மண்ணகத்தைவிட்டு விண்ணகம் சென்ற பின்னரும் சிறப்புப் பெற்றிருந்தமை தெளிவு. கண்ணகி திருமணம் பிரசாபத்தியம், பாணிக்கிரகணம் முதலியவற்றின் பாற் பட்டதன்மையானும், தமிழர் வழக்குப்படி தாலிகட்டியதானும், காதல் கொண்டமையினும் காதற் கற்பின்பாற் பட்டதே என்பது தெளிவுறுகின்றது.

---

## திறன்

[நாஞ்சில், திரு. கா. கணபதி]

திறன் என்பது, மனவுறுதி சொல்லுறுதி செயல் உறுதிகளைக் குறிக்கும் பொதுச்சொல். அஃது ஒருவர்க்கு இயற்கையாக அமைவதொன்று. அதனைப் படிப்படியாகத் திருத்திக் கொண்டே வந்தால் அது வலிவுற்று அஃதுடையாரையும் உயர் நிலையினை எய்துவிக்கும். திறன் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு வகையில் அமையலாம தமக்கு வாய்ந்த அத் திறனைச் செவ்விய நெறியில் மேம்படச் செய்தற்கு முதலில் தம் உள்ளத்தைச் செம்மையாக—நடுநிலை திறம்பாததாக—வாய்மையிற் பிறழாததாக அமைத்துக்கொள்ளல் வேண்டும். அங்ஙனம் ஆக்கிக் கொண்டால் உள்ள உறுதி அசையாததாக இருக்கும். இவ் உள்ள உறுதியையே வள்ளுவர்பெருமான் திட்பம் என்பர். அவ் உறுதியினின்று செயல்படுவதே வினைத் திட்பம்.

"வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத் திட்பம்
மற்றைய எல்லாம் பிற."

"வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்
ஊறெய்தி உள்ளப் படும்."

(குறள்: கூகக, கூகரு.)

---

# பேரா இயற்கை எய்திய பெரியார்

டாக்டர் வரதராஜுலு நாயுடு 22—7—1957 இரவு ஒரு மணிக்குச் சென்னையில் மாரடைப்பினால் காலமானமை கேட்டு வருந்துகின்றோம். அவர்தமக்கு அகவை எழுபதாகின்றது. அவருக்கு மனைவியும், ஆறு புதல்வர்களும், மூன்று புதல்வி யரும் உள்ளனர். அவர் தென்னிந்திய 'திலகர்' என்று அழைக் கும் பேறுபெற்றவர். அவர் சேலம் மாவட்டம் இராசிபுரத்தில் 1887-ஆம் ஆண்டு ஜூன் 4-ஆம் நாள் தோன்றினர். இளம் பருவத்திலேயே தாய்தந்தையரை இழந்தார். கோவை மாவட் டத்தில் உயர்நிலைப்பள்ளியில் படித்தார் அரசியல் காரணமாகப் படிப்புத் தடைப்பட்டுவிட்டது. பிரித்தானியர் ஆட்சியை எதிர்த்துப் போராடினர். பல தடவை சிறை சென்றனர். நாட்டு வைத்தியப் பயிற்சி பெற்றுத் திருப்பூரில் மருத்துவத் தொழில் மாண்புடன் புரிந்தனர். நல்ல வருவாயும் கிடைத்தது.

'பிரபஞ்ச மித்திரன்' எனும் பத்திரிகையைத் தொடங்கினர். ஆயிரம் ரூபாய் ஈடுகாணம் கட்ட நேர்ந்தது. 1918-இல் அரசி யல் குற்றத்திற்காகத் தண்டனை பெற்று மேல்மன்றத்தில் விடுதலை பெற்றார். 1921-இல் 'தமிழ் நாடு' பத்திரிகையின் காரண மாக ஒன்பது திங்கள் சிறை வாழ்வு ஏற்பட்டது. மூன்றாம் முறையாக மதுரை அரசியல் மாநாட்டுத் தலைமைத் தொண்டால் ஆறு மாதம் சிறை பெற்றார். பகல்பூரில் 'இந்துமகாசபை' மாநாட்டுத் தடையை மீறியதற்காகப் பிகார் அரசினரால் நான்காம் தடவையாகச் சிறைக்கு அனுப்பப்பட்டார்.

பின், காங்கிரசில் சார்ந்து சேவை புரிந்தனர். 1924-இல் திரு நாயுடு தமிழ்நாடு காங்கிரசுக் குழுவின் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பெற்றார் 1925—1926 இந்திய தேசிய காங்கிரசுக் காரியக்குழுவினராய்ப் பணிபுரிந்தார். 1926-இல் அனைத்திந் தியத் தொழிற்சங்கக் காரியக்குழுவினும் உறுப்பினரானர். சைமன் குழுவினை எ[

1917-இல் நாகப்பட்டணத்தில் 'தென்னிந்திய புகைவண்டி நிலையத் தொழிலாளர் சங்க'த்தை முதன்முதல் தோற்றுவித் தார். தீண்டாமை ஒழிப்பில் மிகுந்த முன்னணிக் கருத்துக் கொண்டனர் 'தமிழ்நாடு இந்துமாசபை'யின் தலைவராக ஐந் தாண்டுகள் தொடர்ந்து தொண்டாற்றினர். 1942—44 அனைத் திந்திய இந்துசபையின் துணைத் தலைவராகத் தொண்டாற்றினா. 1941-இல் இந்திய அரசியல் நெருக்கடிக்கு ஒரு முடிவுகாணும் வண்ணம் அரச ஆணையாளர் (Vice Roy), காந்தியடிகள் ஆகிய இருவரையும் முகம்புகுதலாகிய பேட்டி கண்டனர். எல்லா

5கரும் போர்ப் பயிற்சி

மிகவும் விழைந்தார். இந்து தரும மகாமண்டலம் அவருக்குத் 'திரசிகாமணி' என்னும் பட்டம் வழங்கியது. இந்தியன் எஃச் பிரசு பத்திரிகையை நிலைநாட்டியதிலும் அவர்க்குச் சிறந்த பங்குண்டு.

1950-இல் சென்னை மேல்சட்டசபையிலும் 1952-54 வரை சட்டசபையிலும் உறுப்பினராகத் திகழ்ந்தனர். 1947-ல் டாக்டர் நாயுடு அவர்களின் நாற்பதாண்டுத் தொண்டினைப் பாராட்டும் முறையில் அறுபதாண்டு நிறைவு விழாவைச் சிறப்பாகச் சேலத்தில் கொண்டாடினர். 1954-இல் பொன்னுடை போர்த்துப் புகழப்பட்டார். டாக்டர் நாயுடு அவர்கள் 'தென்னிந்திய திலகர்' 'சிறந்த தேசபக்தர்' 'சமூக சீர்திருத்த வழக்கர்' 'முதிர்ந்த அரசியல் திறலினர்' 'சிறந்த இதழாசிரியர்' 'அஞ்சா நெஞ்சத்தர்' 'தந்நலமற்ற தாளாளர்' முதலிய சிறப்பினர். அவர்தம் ஆவி என்றும் இன்புறுக. அவர்தம் குடும்பத்தார்க்கு எங்கள் பரிவும் ஆறுதலும் உரியவாகுக.

## சிந்தனைக்குச் சில

[தொகுப்பு: நாகை. த. சி. வேலன்]

சிந்தனை ஒரு செல்வம். அதனைப் போற்றுவார்க்கே அஃது உரியதாகும். —**எமர்சன்**

படிக்காமல் சிந்திப்பது வீண்முயற்சி; சிந்தியாமல் படிப்பது கேடுபயப்பது. —**கன்பூசியஸ்**

உயிராற்றல் தனக்குத்தானே பேசிக்கொள்வதுதான் சிந்தனை எனப்படுவது. —**பிளேட்டோ**

மொழி என்பது எண்ணத்தின் ஆடை. —**ஜான்சன்**

கல்வி என்றால் மக்களுக்குத் தெரியாததைக் கற்பித்தல் என்பதல்ல பொருள். அவர்கள் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதைக் கற்பிப்பதுதான் கல்வி. —**ரஸ்கின்**

வாழ்க்கைப் போராட்டத்தில் ஒருவன் அடையும் பயிற்சிதான் மிகச் சிறந்த கல்வி —**வெண்டேல் பிலிப்ஸ்**

ஒருவன் தன்னுடைய நன்மைக்காகப் பாடுபடுவதைக்கொண்டே அவனைத் தன்னலக்காரன் என்று கூறிவிடலாகாது. அடுத்தவனின் நலத்தைப் பொருட்படுத்தாதபோதுதான் அவன் தன்னலக்காரன் எனப்படுகிறான். —**வாட்லே**

சட்டம் ஏழைகளை நசுக்குகிறது; பணக்காரன் சட்டத்தையே ஆளுகிறான். —**கோல்டுஸ்மித்**

# திருக்குறளும் திருவாய்மொழியும்

[திரு. ஆதிநாதபிள்ளை, ஆழ்வார் திருநகரி]

மாறன் சடகோபர், . திருக்குறளைத் தெளியக்கற்றுத் தம் அந்தாதி ஆயிரத்துள் அழகாகக் கூறியிருக்கிறார். வள்ளுவர் கி. மு. முதல் நூற்றாண்டில் வாழ்ந்தவர். நம்மாழ்வார் (மாறன் சடகோபன்) கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். திருவள்ளுவர் யாண்டு ௧௯௮௮. சடகோபர் யாண்டு ௧௧௨௫. வள்ளுவர் ௩௧. கி. மு. சடகோபர் கி. பி. ௮௩௨—௮௯௭.

நம்மாழ்வாரைக் கலிபிறந்த ௪௩-ஆம் நாளில் தோன்றியவர் என்னும் குருபரம்பரைக் கதை ஐயாயிரம் யாண்டுகளுக்கு முற் செல்லும். அது கற்பனை.

"இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும்" (௪-௧0-௫)

எனத் திருவாய்மொழி கூறுவதனால் சமண சாக்கிய (பௌத்த) சமயத் தோற்றம் கி. மு. ௯-ஆம் நூற்றாண்டென்று அறியும் நாம் திருவாய்மொழி ௨௫00 யாண்டுகளுக்குப் பின்னர் பாடியதென்றறியலாம். சிரீவரமங்கலமும் ௫-௭-௧ வரகுணமங்கையும் (௯-௨-௪) பாடப் பெறுவதனால் பராங்குசன் வரகுணன் என்னும் பாண்டியர் காலத்துக்குப் பின் திருவாய்மொழி பாடப் பெற்றதாகும்.

'சிந்தாமணிகள் பகரல்லை' (௬-௧0-௯) என்று ஆழ்வார் அருளிச் செய்வதனால் சீவகசிந்தாமணிக்குப் பிற்பட்டது.

" வச்சிரமெய்க் கூன் செழியன் மைந்தன் வழுதி."

என்று ஆழ்வார் தாலாட்டுக் காப்புச்செய்யுள் ஆழ்வார் முன்னோரைக் கூன்பாண்டியன் மகன் திருவழுதியின் வழியினர் என்பதனால் கூன்பாண்டியன் கி. பி. ௭-ஆம் நூற்றாண்டினன்.

அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு. (திருக்குறள்)

பிணக்கற அறுவகைச் சமயமும் நெறியுள்ளி உரைத்த
கணக்கறு நலத்தனன் அந்தமில் ஆதியம் பகவன்.
(திருவாய்: ௧ - ௩ - ௫)

மலர்மிசை எகினான் மாண்அடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். (திருக்குறள்)

மனன் அக மலம்அற மலர்மிசை எழுதரும். (திருவாய்: ௧ - ௧ - ௨)

அறஆழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறஆழி நீந்தல் அரிது. (திருக்குறள்)

பிறவித்துயர அற ஞானத்துள் நின்று
துறவிச் சுடர்விளக்கம் தலைப்பெய்வார்

அறவனை ஆழிப்படை அந்தணனை
மறவியை யின்றி மனத்துவைப் பாரே. (திருவாய்: க - எ - க)

திறமுடை வலத்தால் தீவினை பெருக்காது
அறமுயல் ஆழிப் படையவன் கோயில்
மறுவில் வண் சுனைசூழ் மாலிருஞ் சோலை
புறமலை சாரப் போவது கிறியே. (திருவாய்: உ - க0 - ரு)

மறப்பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும். (திருக்குறள்)

ஓதுவார் ஓத்தெல்லாம் எவ்வுலகத்து எவவெவையும்.
(திருவாய்: ௩ - க - சு)

பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை. (திருக்குறள்)

வன்மா வைய மளந்தஎம் வாமனா நின்
பன்மாயப் பல்பிறவியில் படிகின்றயான். (திருவாய்: ௩-உ-உ)

தொழுத்தையோம் தனிமையும் துணை பிரிந்தார்
துயரமும் நினைக்கிலை கோவிந்தாநின்
தொழுத்தனிற் பசுக்களை யேவிரும்பித்
துறந்தெம்மை விட்டவை மேய்க்கப் போதி
பழுத்தநல் லமுதினின் சாற்றுவெள்ளம்
பாவியேன் மனனகந்தோறும் உட்புக்கு
அழுத்தநின் செங்கனிவாயின் கள்வப் பணிமொழி
நினைதொறும் ஆவிவேமால். (திருவாய்: க0 - ௩ - ௪)

கேடில் விழுச்செல்வம் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை. (திருக்குறள்)

கேடில் விழுப்புகழ்க் கேசவனைக் குருகூர்ச் சடகோபன்சொன்ன.
(திருவாய்: ௩ - க0 - கக)

சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு. (திருக்குறள்)

என்ன இயற்கைகளா லெங்ஙனே நின்றிட்டாய் என்கண்ணா
துன்னு கரசரணமுதலாக வெல்லா வுறுப்பும்
உன்னு சுவையொளி யூறோசை நாற்றமுற்று நீயே
உன்னை யுணரவுறி லுலப்பில்லை நுணுக்கங்களே. (திருவாய்: எ-அ-சு)

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும் (திருக்குறள்)

அற்றது பற்றெனில், உற்றதுவீடு உயிர்
செற்றது மன்னுறில், அற்றுஇறை பற்றே. (திருவாய்: க - உ - ரு)

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. (திருக்குறள்)

பற்றிலன் ஈசனும், முற்றவும் நின்றனன்
பற்றிலையாய் அவன், முற்றில் அடங்கே. (திருவாய்: ௧ - ௨ - ௬)

ஊரவர் கவ்வை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய். (திருக்குறள்)

ஊரவர் கவ்வை எருவிட்டு அன்னைசொல் நீர்மடுத்து
ஈரநெல் வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ்செய்யுள்
பேரமர் காதல் கடல் புரைய விளைவித்த
காரமர் மேனிநம் கண்ணன் தோழீகடியனே.
(திருவாய்: ௫ - ௬ - ௪)

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள. (திருக்குறள்)

கண்டுகேட் டுற்றுமோந் துண்டுழலு மைங்கருவி
கண்டவின்பந் தெரிவரிய வளவில்லாச் சிற்றின்பம்
ஒண்டொடியாள் திருமகளும்நீயுமே நிலாநிற்ப
கண்டசதிர் கண்டொழிந்தேன் அடைந்தேனுன் திருவடியே.
(திருவாய்: ௪ - ௯ - ௧0)

துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சம் துணையல் வழி. (திருக்குறள்)

பாவியேன் மனத்தேநின் றீருமாலோ!
வாடைதண் வாடைவெவ் வாடையாலோ!
மேவுதண் மதியம்வெம் மதியமாலோ!
மென்மலர்ப் பள்ளிவெம் பள்ளியாலோ!
தூவியம் புள்ளுடைத் தெய்வவண்டு
துதைந்தஎம் பெண்மையம் பூவிதாலோ!
ஆவியின் பரமல்ல வகைகளாலோ!
யாமுடை நெஞ்சமும் துணையன்றாலோ! (திருவாய்: ௯-௯-௪)

அழல்போலு மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை. (திருக்குறள்)

யாமுடை நெஞ்சமும் துணையன்றாலோ!
ஆபுகு மாலையும் ஆகின்றாலோ!
யாமுடை யாயன்தன் மனம்கல்லாலோ!
அவனுடைத் தீங்குழல் ஈருமாலோ!
யாமுடைத் துணையென்னும் தோழிமாரும்
எம்மின்முன் அவனுக்கு மாய்வராலோ!
யாமுடை ஆருயிர் காக்குமாறென்?
அவனுடை யருள்பெறும் போதரிதே. (திருவாய்: ௯-௯-௫)

அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு (திருக்குறள்)

அன்புற் றமர்ந் துறைகின்ற
அணி பொழில் திருவாறன் விளை
அன்புற் றமர்ந்து வலஞ்செய்து
கைதொழு நாள்களும் ஆகுங்கொலோ. (திருவாய்: எ-க0-க)

அறநவர் என்பார் அவாவற்றார் மற்றையார்
அற்றாக அற்ற திலர். (திருக்குறள்)

ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும். (திருக்குறள்)

அவாவறச்சூழ் அரியை அயனைஅரனை அலற்றி
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன
அவாவில் அந்தாதி களால்இவை ஆயிரமும் முடிந்த
அவாவில் அந்தாதி இப்பத்தறிந்தார் பிறந்தார் உயர்ந்தே.
(திருவாய்: க0-க0-)

இவை திருக்குறள்கள் திருவாய்மொழியிற் காண்பன. இனிப், பொருளமுதல் பொருந்துவன காண்பாம்.

தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. (திருக்குறள்)

உயர்வற உயர்நலம் உடையவன் எவன்அவன்
மயர்வற மதிநலம் அருளினன் எவன்அவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி எவன்அவன்
துயரறு சுடர்அடி தொழுதெ ழென்மனனே. (திருவாய்: க-க-க)

ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியும் அல்ல பிற. (திருக்குறள்)

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு. (திருக்குறள்)

மின்னின் நிலையில, மன்னுயிர் யாக்கைகள்
என்னுமிடத் திறை, உன்னுமின் நீரே. (திருவாய்: க-உ-உ)

யான்என தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும். (திருக்குறள்)

நீர்நும தென்றிவை, வேர்முதல் மாய்த்திறை
சேர்மினுயிர்க் கதன், நேர்நிறை இல்லே. (திருவாய்: க-உ-ரு)

முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும். (திருக்குறள்)

'திருவுடை மன்னரைக் காணில்
திருமாலைக் கண்டேனே என்னும்.' (திருவாய்: ச-ச-அ)

இவை போன்று இன்னும் பல ஆராய ஆராய வெளிப்படும். அவற்றை வாய்ப்புள்ளவர்கள் வகைபெற ஆராயலாம்.

---

# புதுமைக் கவிதைப் பெண்

[திரு. புலவர் அரசு அவர்கள்]

வானி லிருந்து வழிந்து பெருகியின்பத்
தேனி லினித்துத் தெளிந்த நறும்பாலாய்
எங்கும் பரவிய இன்ப நிலவமுதம்
பொங்குங் களிமயக்கைப் போர்த்தியதால் மெல்லணையில்
ஏந்துந் துயில்மயக்கம் எய்தாமை யாலெழுந்து
போந்தேனென் கால்சென்ற போக்கினிலே நீள்வெளியில்
பாற்கட லேபோற் பரந்த மணற்பரப்பில்
ஏற்க அமர்ந்தே இனியதொரு கற்பனையில்
உள்ளமஃ தோடி யுலவியவப் போதினிலே
கள்ளவிழ் பூங்குழலாள் கள்ளவிழ் கண்மலராள்
ஓவியந் தேரு வொருசிறுவன் தான்வடித்த
ஓவியம் போலே உருவந் தெளிவில்லாள்
எட்ட இருந்துமே நோக்கின் இனிதாகிக்
கிட்ட அமர்ந்து கிளர்ச்சியுற நோக்குங்கால்
எல்லா உறுப்பும் இயலின் படியின்றிக்
கல்லா வொருவன் கவிதையெனத் தோன்றினளே;
காண வினிக்குமக் காரிகையென் முன்வந்து
நாண மிலாமல் நகைத்தமர்ந்தாள்; நாணுற்றேன்,
'யாரையோ நீ?' என்றேன்; "யாப்பமைய இக்காலென்
பேரையே நீதான் அறியாத பேதமையென்?
இந்நாட் கவிஞரெலாம் ஏலப் புனைந்திட்ட
செந்நாக் கவிதைப்பெண் யானெனவே தேராயோ?
செந்தமிழ் நாட்டுத் திருவாளன் நீயலையோ?
எந்தநாட் டான்நீ?" எனவே நகைத்தனளால்;
'எந்தமிழ் நாட்டுக் கவிதைப்பெண் இவ்வுருவோ?
நொந்ததென் உள்ளம்' எனவே துவன்றயர்ந்தேன்;
"சேரன் இளங்கோ திருவள் ளுவன் கோவைச்
சீரன் மணிமொழியான் சேக்கிழான் கம்பனின்ப
வெண்பாப் புகழேந்தி மேவுமூலாக் கூத்தன்போல்
ஒண்பாக் கவிஞர்புனை ஓவியப்பெண் நீயேயோ?
கீரை விதைபோற் கிளர்விழிக்குக் கண்ணாடி
சீரையோ நல்கும்? திருமுகத்தில் வெண்ணிறமாப்

பூச்சுமேன்? நின்மெய் நிறமென்? புகலுதியே!
மீச்சிறந்த மாந்தளிரோ, மேவுறுசெந் தாழையோ
நின்னிறத்தைக் காட்ட உவமையா நேர்வனகாண்?
பொன்னிறப் பூச்சுடைய பூவையே, நீபுனைந்த
பூணெலாம் பூச்சாற் பொலிவனவே; நற்கவிதை
நாணிலா நங்காய்! நறுமணமில் லாமலரேன்?
மேனி விளங்குறவே மெல்லியசல் லாப்புனைந்த
மானினி யாளே! நின் மாண்கவினை ஆன்றோர்கள்
காணவுங் கூசுவரே! கைதொட் டருகமர்ந்து
நாண மிலாமல் நகையாட வொவ்வுவரோ?
போற்றிப் புகழ்வரோ?" என்றேன்; புதுக்கவிதைக்
கோற்றொடியாள் கேட்டாள்; குலுங்க நகைத்திட்டாள்;
"காலத்தின் போக்கறியாக் காரணத்தா லிப்படியென்
கோலத் தினையே குலைத்துப் பழித்திட்டாய்;
தூரிகை தோய்ந்து துலங்குநிற ஓவியமும்
காரிகை தோய்ந்த கவிதையுமிங் கிந்நாளிற்
பண்டைக் கவினைப் படியெடுத்த லொவ்வுறுமோ?
கண்டா லினிக்குங் கவினையே வேண்டுலகில்
நுண்பொருளுஞ் செஞ்சொலும் நூல்யாப்பும் யாதுசெயும்?
பண்பொருந்த வேண்டுவதேன்? பாடுவது பாட்டென்றும்
கற்பனை புத்தம் புதிதென்றுங் கண்டோர்கள்
பற்பலரும் பேசும் பரிசறியாப் பாவலனே!"
என்றே மொழிந்தாள்; எழுந்தேன்; கனவாக,
நின்றே நினைந்தேன் நெடிது.

---

## தொழுகை

காலை, நண்பகல், மாலை, இருள் என்னும் நாற்பொழுதும் நன்னெறி நான்மையர்க்காம். அக் காலங்களில் ஓதவேண்டும் திருமுறைத் திருப்பாட்டுக்கள் ஐந்து அவை முறையே, சிந்திப்பார், காலையே, படைக்கலமாக, வாழ்க, என்றுமின்பம் என்னும் முதனினைப் புடையனவாகும்.

நம்மூல நாற்போற்ற நால்வரான் நாட்டநிலை
செம்பொருட்சித் தாந்தசைவம் தேறுங்கால்—அம்பொனருள்
'சிந்திப்பார் காலை படைக்கலமா வாழ்கஎன்றும்'
வந்திப்பார் நாற்போதை வாழ்த்து. —தொண்டன்.

# பல்லவர்களின் புதிய செப்புப் பட்டயம்[1]

[ஆசிரியர்: திரு. என். இரமேசன் அவர்கள், எம்.ஏ, ஐ.ஏ, எஸ்.]

[மொழிபெயர்ப்பு. வித்துவான். திரு. கரு நாகரத்தினம்.]

1200 ஆண்டுகளுக்கு முற்பட்ட பல்லவர்களைப் பற்றிய செப்புப் பட்டயத் தொகுப்பொன்று அண்மையில் நெல்லூர் மாவட்டத்தின் பொதிலி என்ற நகரின் அருகில் உள்ள குருவாய்ப் பாலம் என்ற ஊரில் குண்டூர், திரு. பி. சேஷாத்திரி சாத்திரியார் அவர்களால் கண்டுபிடிக்கப்பட்டது. 7-ஆம் நூற்றாண்டில் ஆண்ட பல்லவர்களின் வரலாற்றை ஆய்வதற்குப் பெருந்துணை புரியும் இச் சாசனம் இன்றியமையாததொரு கருவூலமாக நமக்கு விளங்குகிறது.

இச் சாசனத்தில் மூன்று செப்புப் பட்டயங்கள் உள்ளன. பட்டயங்களின் ஓரங்கள் உலோகததால் ஆன வளையத்தால் கோக்கப்பட்டு அதன்மேல் பல்லவர்களின் இலச்சினையும் பொறிக்கப்பட்டுள்ளது. முதல் பட்டயத்தின் முன்புறமும், மூன்றாம் பட்டயத்தின் பின்புறமும் எவ்வித எழுத்துக்களும் இன்றிக் காலியாக (Blank) இருப்பதனால் அது சாசனத்தின் உறையாக (Cover) விளங்குகிறது. மற்ற நான்கு பக்கங்களிலும் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இதுவரை நமக்குக் கிடைத்துள்ள பல்லவர் பட்டயங்களின் முறையைப் போலவே 7-ஆம் நூற்றாண்டில் பல்லவ அரசியலில் விளங்கிய வடமொழியில் எழுதப்பட்டுள்ளன என்பதை அவைகளின் நடையையும் வடிவத்தையும் நோக்கினால் நாம் நன்கு அறியலாம்.

உலோக வளையத்தில் கோக்கப்பட்டு அரசனது இலச்சினையை அதற்குமேல் கொண்டுள்ள இப் பட்டயங்கள் அரசாங்க [2]அனுமதிச் சின்னத்தைக் குறிப்பதாக உள்ளன. பல்லவர் ஆட்சி நிர்வாக அமைப்பின்படி வரி வசூல் செய்யும் காலங்களில் இவ்வனுமதிச் சின்னங்கள் அதிகாரிகளுக்குத் தாங்கள் அரசாங்கத்தின் பணியாட்கள் என்பதை நிரூபிக்கக் காட்டப்பட்டன. சில

1. This article (A pallava copper plate grant) was written by Tiru N. Ramesan, M.A.,I.A.S., (Deputy Secratary to Government of Andhra, Home Department, Himayatnagar, Hyderabad Dn.) in "The HINDU" dated 16—6—1957: Published here with Permission.

2. The stamp of Royal authority· பரிசசின்னம் என்பது கல்வெட்டுத் தொடர்.

குறிப்பிட்ட நிலங்களுக்கு மட்டும் இறை தவிர்க்கப்பட்டதாகவும் இதனல் அறிய முடிகின்றது

அரசனது இலச்சினை (The seal of the king) $2\frac{1}{2}$ அங்குலம் குறுக்களவு (Diameter) உள்ளது. வலப்புறமாகத் திரும்பி யுள்ள இடபம் ஒன்று பொறிக்கப்பட்டு அதன்மேலும் பல்லவர் களின் சின்னங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இடபத்தின்கிழ் 'ஸ்ரீநிதி' என்ற மூன்று எழுத்துக்கள் நன்கு படிக்குமாறு உள்ளன. இவையும் பல்லவர்கால எழுத்துக்களே. பல்லவ வேந்தன் ஸ்ரீநிதி என்ற பட்டம் கொண்டிருந்தான்.

பட்டயங்களின் முதல் இரண்டு பக்கங்களிலும் மன்னன் தன்னை ஸ்ரீ பரமேசுவரவாமன் என்றும், ஸ்ரீ மகேந்திரவர்ம னின் பரபௌத்திரன் எனறும், ஸ்ரீ நரசிம்மவர்மனின் பௌத் திரன் என்றும், ஸ்ரீ மகேந்திர விக்கிர வர்மனின் புத்திரன் என்றும் கூறிக்கொண்டதாகக் குறிக்கப்பட்டுள்ளது. அஃதாவது சாசனம் கொடுத்தவன் முதலாம் மகேந்திரவாமனின் கொள் ளுப் பேரனும், நரசிம்பவர்மனின் பேரனும், இரண்டாம் மகேந்திர வர்மனின் மகனும் ஆவன். பட்டயப்படி வமிசாவளி கீழ்க்கண்டவாறு அமைகிறது.

மகேந்திரவர்மன் I (கி. பி. 615-630.)
நரசிம்மவர்மன் I (கி. பி 630-668.)
மகேந்திரவர்மன் II (கி. பி. 668-670.)
பரமேசுவரவர்மன் I (பட்டயம் விடுத்தவன்.)
(670-685 A. D.)

வரலாற்றில் நமக்கு இதுகாறும் கிடைத்துள்ள விவரங்களி லிருந்து மேற் குறித்த முதலாம் மகேந்திரவர்மன் மகாபலிபுரத் தில் மலைக் கோயில்களையும் குடைக் கோயில்களையும் வெட்டிப் புகழ்பெற்றவன் ஆவான் என்பது தெளிவாகக் கிடைக்கும் சான்றுகும். 'மத்தவிலாசப் பிரகசனம்' என்ற வடமொழி நாடக நூலை இயற்றியவனும் இவனே என்பதும், சிம்மவிட்டுணு (கி பி. 575-615.) மரபில் வந்த மகேந்திரவர்மன் இவனே என்பதும் வரலாற்றுண்மையாகும். நரசிம்மவர்மன் I என்பவன் (630-668 A. D.) மேலைச் சாளுக்கிய மன்னனை இரண்டாம் புலிகேசியைத் (கி. பி. 609-642) தோறகடித்து அவனது தலை நகரான வாதாபியை எரியூட்டியவன் ஆவான் எனவே, பட்ட யம் விடுத்தவன் முதலாம் நரசிம்மவர்மனின் பேரனை முதலாம் பரமேசுவரவர்மனே என்பது போதரும்.

இப் பரமேசுவரவர்மனைப் பற்றி மற்றும் ஒரு பட்டயமான கூரம்பட்டயத்தாலும் அறிகிறோம். அது காஞ்சிபுரத்தைக்

கண்மையில் கண்டுபிடிக்கப்பட்டு டாக்டர் ஹல்ட்செச் என்பவரால் பதிப்பிக்கப்பட்டுள்ளமை காண்க.[1] இவனைப்பற்றி மகாபலிபுரத்தில் உள்ள ஒற்றைக் கல் கணேசர் கோயிலான இராமானுச மண்டபத்தாலும் அறிய முடிகின்றது. டாக்டர் ஹுசட்செச் இக் கோயிலின் கல்வெட்டுக்களைப் பதிப்பிக்கும்போது[2] அக் கல்வெட்டில் கண்ட 'அத்யந்த காமன்' என்ற மன்னனின் பெயர் பரமேசுவரவர்மனின் பட்டப் பெயர்களுள் ஒன்றாகும் எனக் குறித்துள்ளார். இக் கல்வெட்டின் எட்டாவது செய்யுளில் 'ஸ்ரீநிதே காமராகஸ்ய ஹராராதனஸங்கினு'[3] என்ற வரியும் நமக்குக் கிடைத்துள்ளது. எனவே, இம் மன்னன் ஸ்ரீநிதி என்ற பட்டப்பெயரும் கொண்டிருந்தான் என்பது தெறறென விளங்கும். அதனால் இலச்சினையில் காணப்பட்ட ஸ்ரீநிதி என்பதும் பட்டப்பெயரே என்பது புலனாகும்.

இப் பரமேசுவரவர்மன் சாளுக்கிய மன்னனை முதலாம் விக்கிரமாதித்தனை (கி. பி. 555-680) ஒரு போரின்கண்ணே முற்ற முறியடித்தான் என்று கூரம் பட்டயம் கூறுகிறது. ஆனால், அப் போர் நடந்த இடம் திருச்சி மாவட்டம் லால்குடி வட்டத்தில் உள்ள பெருவளநல்லூர்[4] என்ற ஊராகும் என வேலூர்ப்பாளையக் கல்வெட்டுக்கள் சான்று தருகின்றன. இச் சாளுக்கிய முதலாம் விக்கிரமாதித்தன் உக்கிர புரத்திலிருந்து விடுத்த அவனது கத்வல் பட்டயத்தாலும்[5] தெரிய வருகின்றான். உக்கிரபுரமென்பது திருச்சிக்கருகில் உள்ள உறையூராக இருக்கலாம் என்று கருதப்படுகின்றது. இப் பட்டயம் இவனது ஆட்சியின் 20-ஆவது ஆண்டில் 596-ஆவது சகராயாண்டில் வைகாசிப் பௌர்ணமி திதியன்று வெளியிடப்பட்டது இது கி. பி. 794-ஆவது ஆண்டு ஏப்ரல் திங்கள் 25-ஆம் நாளான செவ்வாய்க்கிழமையாகும் என்று டாக்டர் பிளிட் (Dr. Fleet) துணிந்துள்ளார்.

முதலாம் விக்கிரமாதித்தன் தோற்றோடிய பெருவளநல்லூர்ப் போர், இவன் பட்டயம் விடுத்ததற்கு மறுநாள் நடந்தது ஆகலின் இந்த நாள் வரலாற்றாராய்ச்சிக்கு இன்றியமையாததும் பயன்தருவதும் ஆகும். இப்பொழுது கூறப்படுகின்ற சாசனங்கள்

1. Dr. Hultzsch in South Indian Inscriptions. Vol. I. page 144.
2. In Epigraphia Indica. Vol. X.
3. S. I. I. Vol. I. p. 4.
4. பெருவளநல்லூர்ப் போரைப் பற்றி நந்திவர்மன் II (கி. பி. 710—775.) விடுத்த உதயேந்திரப் பட்டயமும் செப்பும்—டாக்டர். மா. இராசமாணிக்கனாரின் பல்லவர் வரலாறு காண்க.
5. Ep. Ind. Vol. X.

நெல்லூர் மாவட்டத்தில் கிடைத்தவை. பல்லவர்களுக்கும், மேலைச் சாளுக்கியர்களுக்கும் அடிக்கடி போர் நடந்து வந்தன. ஆதலின் இப் பகுதி சிலகாலம் பல்லவர் வசமும் சிலகாலம் சாளுக்கியர் வசமும் இருந்தது. போர் நிகழ்ச்சிகளுக்குப் பிறகு பண்டைய தொண்டை மண்டலத்தையடுத்த ஆந்திரத்தில் பல்லவர்களுடைய ஆதிக்கம் வேரூன்றிவிட்டது என்பது அவர்களது வென்றியால் புலப்படும். வேந்தனது நல்வாழ்வின் பொருட்டு உத்தராயண சங்கராந்தியில் கந்துகூரம் என்ற கிராமம் எல்லா வரி வகைகளினின்றும் நீக்கப்பட்டு இறையிலியானதை முதற் பட்டயம் கூறுகின்றது. இரண்டாவது பட்டயத்தில் 'பமீரஸ்த்ர கந்துகூரு நாம கிராமே' எனக் குறிக்கப்பட்டுள்ளது. எனவே, இறையிலியாக்கப்பட்ட கந்துகூரம் கிராமம் 'பமீரஸ்த்ரா' என்று பல்லோராலும் அழைக்கப்பட்டது. பட்டயத்தில் கூறப்பட்ட கந்துகூரம் நெல்லூர் மாவட்டத்தில் உள்ள கந்துகூரமாகத்தான் இருக்கவேண்டும் என்று கருத இடம் உண்டு. ஏறத்தாழ 1200 ஆண்டுகளாக இப் பெயர் சிறிதும் மாறுமல் இருப்பது வியப்புக்குரிய செய்தியேயாம். மேலும், கந்துகூர்ம கிராமம் 'பிரமதேய'மாகவும் 'சர்வகர பரிகாரியா'வாயும் கொடுக்கப்பட்டது எனக் கூறுகின்றது. கர என்பது வரியைக் குறிக்கும் ஒரு சொல்லாம். பிரமதேயமென்பது உத்தராயண விழாக் காலத்தில் மன்னன் வாழ்வும் வழிமுறையும் சிறந்து விளங்கும் பொருட்டு வரிநீக்கி அளிக்கப்பட்ட நிலமாம்.

இனி, பட்டயத்திற்கு உரியவன் யாவன் என்று கவனிப்போம். அவனைப்பற்றி இரண்டாம் பட்டயத்தில் கூறப்படுவதாவது :

" அந்தணர்கட்கு உரிய அறுவகைத் தொழில்[1]களில் நிரல்பட நின்றொழுகுபவனும், வாய்மையுடையவனும், வாணிகம், தொழில் முதலியவைகளில் வன்மையானவனுமான தேவசர்மா என்ற அந்தணனுக்கு இப் பட்டயம் அளிக்கப்பட்டது அவ்வந்தணன் சாத்திரங்களில் கூறி உள்ள மெய்ப்பொருளின் கூறுபாடுகளை நன்கறிந்தவனும் யம, நியம, ஸ்வதியாய முதலிய கலைகளில் பயிற்சியுடையவனுமான துரோணிசர்மாவின் மகனும், உப்புசதூரு என்ற கிராமத்தைச் சார்ந்த சுவாமி சர்மாவின் பேரனும் ஆவான். சுவாமி சர்மா 'மௌளத் கல்யாயண' கோத்திரத்தைச் சேர்ந்தவர் ; 'அபஸ்தம்பா'வைப் பின்பற்றி ஒழுகு

1. 'அறுவகைப்பட்ட பாரப்பனப் பக்கம்'—தொல். பொருள். புறத். 16. அவை : ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றலாம்—இளம்.

பவன். இவன் வேதத்தின் அங்கங்களிலும் இதிகாச புராணங்களிலும் சிறப்பாகப் புகழப்பட்டுள்ளான்"

இறுதிப் பட்டயத்தில் எழுதியவன் (திருமந்திர ஓலை) 'அக்ஞாப்தி கோத்த வர்மா' என்பதாக அறிய முடிகிறது. அக்ஞாப்தி என்ற சொல் அரசனது ஆணையைப் பட்டயத்தில் எழுதுபவனைக் குறிக்கும் அவனது இயற்பெயர் கோத்த வர்மா என்பது. பட்டயம் கொடுக்கப்பட்ட ஆண்டும், நாளும் பின்வருமாறு :

[1]"ப்ரவர்த்தமான விஜய ராஜ்ய, சம்வத்ஸர ஏகோனவிம்ஸத்யம், பௌஷ்யமாஸ சக்லபக்ஷ திரயோதஸ்யம் ஆதித்யாதினி"

அஃதாவது களம்பல கண்ட மன்னனது ஆட்சியின் 19-ஆம் ஆண்டில் தைத்திங்கள் சுக்கில பட்ச திரயோதசிதிதி கூடிய ஞாயிற்றுக்கிழமையாம். பரமேசுவரவர்மன் பட்டத்திற்கு வந்த ஆண்டு கி. பி. 660. எனவே பட்டயம் விடுத்த ஆண்டு $660+19=679$ ஆக இருக்கவேண்டும். எனவே இச் சாசனம் 7-ஆம் நூற்றாண்டில் எழுந்ததாகும். வானநூல் தத்துவப்படி மேற் கூறிய உண்மைகள் ஏற்றுக்கொள்ளத் தக்கவைகளே.

உத்தராயண விழாவில் நெல்லூர் மாவட்டத்தில் உள்ள கந்துகூரு என்ற கிராமத்தை இறையிலியாக ஓர் அந்தணனுக்கு அளிக்கப்பட்ட செய்தியையே இச் சாசனம் கூறுகின்றது. 7-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆண்ட பல்லவர்களின் ஆட்சிமுறையைப் பற்றிய விளக்கங்களும் இவற்றால் நன்கு புலப்படுமாறு அறிக. இப் பட்டயங்கள் சிம்மவிஷ்ணு மரபில் வந்த பல்லவர்களின் வரலாற்றை அறிவதற்கு உரிய சான்றாகவும் பயன் தருகின்றது. மற்றும், பரமேசுவரவர்மன் ஸ்ரீநிதி என்ற பட்டம் கொண்டதையும் தானம் செய்த முறையும், தானம் செய்த பல்லவனது மூன்று தலைமுறை பற்றிய செய்திகளையும் அவனது தெள்ளிய இலச்சினையால் வரையறுத்துக்கொள்ள

1. "Pravarthamana vijaya rajyasa, samvatsara eknonavimsathyam, paushyamasa suklapaksha tirayodasyam, adityadine."

# தமிழை வாழவைக்க எல்லோரும் முயல வேண்டும்

[பண்டிதர், திரு. கா. பொ. இரத்தினம், எம். ஏ. இலங்கை]

"எம் உயிரினும் மேலான தமிழ்மொழிக்குப் பேரிடர் வந்துள்ள இந் நேரத்திலே தமிழ்மொழியை எவ்வாறு வாழச் செய்யலாம், எப்படி வளம்படுத்தலாம் என்பவற்றை இலங்கையி லுள்ள தமிழ்மக்கள் யாவரும் அறியவும், அறிந்து உகந்த வழி வகை மேற்கொள்ளவும் செய்தல் கொழும்புத் தமிழ்ச் சங்கத்தின் முதற் கடமையாகும்" என்று வெள்ளவத்தை சைவமங்கையர் கழக மண்டபத்தில் நடைபெற்ற கொழும்பு தமிழ்ச் சங்கத்தின் பதினைந்தாவது ஆண்டுக் கூட்டத்தில், அச் சங்கத்தின் புதிய தலைவராகத் தெரிவு செய்யப்பட்ட பண்டிதர் கா. பொ. இரத்தினம் அவர்கள் கூறினார்கள்

பண்டிதர் இரத்தினம் மேலும் தொடர்ந்து பேசுகையில் பின்வருமாறு கூறினர். "இன்று நீங்கள் என்னைத் தலைவராகத் தெரிவு செய்ததைத் தமிழ்த் தாய்க்கு நீங்கள் செய்த பெரு மதிப்பாகவே கொள்ளுகிறேன். எமது சங்கத்தில் சென்ற சில ஆண்டுகளாக இருந்த பிரிவினைகளும் போட்டிகளும் இந்த ஆண்டில் நீங்கிவிட்டன. எல்லோரும் ஒன்றுபட்டுத் தமிழ் வளர்க்க முன் வந்திருப்பதைக் கண்டு பெருமகிழ்ச்சியடை கிறேன். இது தமிழன்னை முடிசூடுவாள் என்பதற்கு அறிகுறி யாகும்.

நான் கடந்த பல வருடங்களாகப் பலமுறை தமிழ்ப் பெரு மக்களை வேண்டிக் கொண்டு வருவதை முதலில் உங்களுக்கு நினைவூட்டுகிறேன். தமிழ் வளர்க்கச் சங்கம் எடுத்த பெருமக்க ளாகிய நீங்கள் இதனைச் செய்யக் கடமைப்பட்டிருக்கிறீர்கள். பெருந் தியாகமின்றிச் சிரமந்தானுமின்றிக் கடமை யுணர்ச்சியா லுந்தப்பட்டுச் செய்யப்படவேண்டியது இது. தமிழுக்கு உஙகள் வாழ்வின் துறையனைத்திலும் முதன்மை கொடுங்கள். நீங்கள் எழுதுவன பேசுவன பாடுவன யாவற்றையும் தமிழிலே செய் யுஙகள். அரசாங்கத்துக்கும் வியாபார நிலையங்களுக்கும் பிறவற் றுக்கும் எழுதுவன யாவற்றையும் தமிழிலே எழுதுங்கள். தமிழிலே வருமானவரிப் பத்திரங்கள் முதலியவற்றை நிரப்பு தற்கு முடியாமல் இடர்ப்படுகிறவர்களுக்கு எமது தமிழ்ச் சங்கம் வேண்டிய உதவியினைச் செய்தல் வேண்டும்.

* கொழும்பு தமிழ்ச்சங்க ஆண்டுக் கூட்டத்தில் பேசிய பேச்சு.

# இயற்பெயரும் சுட்டுப்பெயரும்

[பண்டித. வித்துவான் திரு. தி. சங்குப்புலவர் அவர்கள்]

துன்முகி ஆண்டு தைத்திங்கள் 10-2-57 ஞானசம்பந்தம் மலர் 16, இதழ் 3, 227-ஆம் பக்கத்திற் பதித்து வெளிவந்த பன்மொழிப் புலவர் வித்துவான் திரு. வே. வேங்கடராசலு ரெட்டியாரவர்கள் எழுதிய "இயற்பெயரும் சுட்டுப்பெயரும்' என்ற ஆராய்ச்சியின் முடிவுக்கு மறுப்பு இது.

## ஆராய்ச்சியாளர் முடிவு

"அவனணங்கு நோய் செய்தான்" என்ற செய்யுளில் வந்துள்ள "சேந்தன்" என்ற இயற் பெயரை "அவன்" என்ற சுட்டுப்பெயர் சுட்டாது என்பதும் சுட்டினால் அகப்பொருட்டுறைக்குப் பொருட்பொருத்தமின்று என்பதும், அவன் என்பது தலைவனையே சுட்டும் என்பதும், தலைவனைச் சுட்டியதாகப் பொருள் கொள்ளும்போது "செய்யுளில் இயற் பெயர்க்கு முன்னும் சுட்டுப் பெயர் வரும்' என்ற இலக்கணத்திற்கு இச் செய்யுள் உதாரணமாகாது என்பதும், இவ்வாறு பொருந்தாத உதாரணத்தை உரையாசிரியர் பலருங் காட்டியிருக்கின்றனர் என்பதும், இச் செய்யுள் சண்டைக்கு அமைவுடையதாகத் தோன்றவில்லை என்பதும், ஒரோவழி உரைகாரர் எல்லாருமே பொருந்தாத உரையெழுதி உதாரணமும் காட்டுதல் உளது என்பதும், உதாரணமாக "கண்ணும் தோளும்" என்னும் கிளவியாக்கத்து இறுதிச் சூத்திரத்தின் உரையைக் காண்க என்பதும் வித்துவான். திரு. வே. வே. அவர்களது முடிவு ஆகும். இம் முடிவு குறித்து ஆய்ந்து உண்மை காணவேண்டியது அறிஞர் கடமையாகும். என் சிற்றறிவிற்கெட்டிய வரையில் ஆய்ந்து விளக்குகின்றேன். பிழையிருப்பின அறிஞர் மறுத்து எனக்கு உண்மை யுணர்த்த வேண்டுகிறேன்.

## முடிவு தகுதியின்று என்பது

இம் முடிவைப் புலவருலகம் ஏற்றுக் கொள்வது தகுமா? ஏற்றுக் கொள்ளின் தொல்காப்பியத்திற்கு முதலில் உரைகண்ட உரையாசிரியர் காலமுதல் இந்நாள் வரையும் தமிழ்நாட்டில் வாழ்ந்துவரும் அறிஞர்களாகிய உரையாசிரியர்களும், நூலாசிரியர்களும் கற்றவரும், கற்பித்தவரும் மடமையர் எனப் பழிக்கப் படுவரன்றோ? இந் நாளிற் புலவராய் வாழும் எவர்க்கும் அப் பழி

சாரும் அன்றோ? ஒருவர் காட்டினால் அவர் மறந்திருப்பர் எனக் கொள்ளலாம் பல உரையாசிரியர்களும் காட்டியிருப்பதால் அது பொருத்தமாகத்தான் இருக்கும் எனத் துணியவேண்டும். அவ்விலக்கணத்திற்குப் பொருத்தமாகப் பொருள் காண முயல வேண்டும் பொருத்தமாகிய பொருளைக் கண்டு அமைத்துக் கொள்வதுதான் சிறந்தது. உதாரணமாகாது எனத்தள்ளி விடு வதுநன்றன்று. அதற்குத் தகுதியாகப் பாடபேதமும் இருக்கிறது. "சேந்தன் என்பதை அவன் என்பது சுட்டும் எனக்" குறித்துக் காட்டியிருக்கின்றனர் உரையாசிரியர் ஒவ்வொருவரும். அச் செய்யுளின் பொருள் அறியாமல் எவ்வாறு குறித்துக் காட்ட இயலும்! தெய்வச்சிலையார் உரையில் "சேந்தன் என்பதூஉம் அவன் என்பதூஉம் ஒரு பொருள் ஆகியவாறும் சுட்டு முன் வந்துழியும் பொருள் வேறுபடாமையும காண்க" என விளக்கி யிருக்கின்றார். அடியில் பாடபேதமும் வரைந்திருக்கிறது. தொல்காப்பியம் சொல்லதிகாரம் தெய்வச்சிலையார்உரை பக்கம் ௩௨ காண்க.

## பாட பேதம்

"அவனணங்குநோ யென்றான்" என்பதும், அவனணங்கு நோய் செய்தான் என்பதும், இறுதியில் அதன்கண் விளைவு என்பதும், அதன்கண் விரைவு, என்பதும் பாடவேறு பாடுகளாகக் காண்கின்றோம். இச் செய்யுள் இயற்றிய புலவர் முதலில் எவ்வாறு பாடினர் என்பதை அறிவதற் குரிய வழியொன்றும் தோன்றவில்லை. ஆதலால் இவ்விரண்டு வகையான பாடங்கட்கும் பொருள் காணவேண்டியதும், சிறந்த பொருளைத்தரும் பாடத்தை வைத்துக்கொள்ள வேண்டிய தும் அறிஞர் செயலாகும். "என்றான்" என்ற பாடமும் "விளைவு" என்ற பாடமும் சிறந்தது என நான் எடுத்துக்கொள்கிறேன். பாடலும் வரைந்து பொருளும் வரைகின்றேன்.

## வெண்பா

*அவனணங்கு நோயென்றா னாயிழாய் வேலன்*
*விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி—முகனமர்ந்*
*தன்னை யலர்கடப்பந் தாரணியி னென்னைகொல்*
*பின்னை யதன்கண் விளைவு.*

## பொருள்கோள்

இச் செய்யுளை "ஆயிழாய்! வேலன் விறல்மிகுதார் சேந்தன் பேர் வாழ்த்தி அவன் அணங்கும் நோய் என்றான். அன்னை

முகன் அமர்ந்து அலர் கடப்பந்தார் அணியின் பின்னை அதன்கண் விளைவு என்னை கொல்" எனக் கொண்டுகூட்டுக.

இது வெறிவிலக்குவித்தல் என்னுந் துறையமைந்தது. வெறிவிலக்குவித்தல் என்பது தலைவன் பிரிவாற்றாமையால் தலைவி நோயும் பசலையும் கொண்டு வருந்த அவளது மெய்வேறுபாடு கண்ட தாய் வேலனையழைத்து வெறியாட்டுக் காணும்போது தலைவி பாங்கியை நோக்கி இவ்வெறியாடலை விலக்கி அறத்தொடு நிற்பாய் என்று கூறுவது. எனவே இது தலைவி கூற்று. பாங்கி கேட்பவள் எனக் கொள்ள வேண்டும். (பொழிப்புரை) ஆய்ந்த அணிபுனைந்த பெண்ணே! (ஈங்கு வெறியாட்டயரும்) வேலன் என்பவன் வெற்றிமிகுந்த மாலைபுனைந்த முருகனது பெயரைக் கூறித் துதித்து (அம முருகனாகிய தெய்வம் தன்மேல் ஏறிய தாகப் பாவனை காட்டி) பிரிவாற்றாமையாகிய (எனது காம நோயை) அம் முருகன் வருந்திய நோய் என்று கூறிவிட்டான் (இனி நம்) அன்னை (நோய் நீங்கிவிடும் என்று கருதி) முக மலர்ச்சியடைந்து (அம் முருகனுக்குரிய) மலர்ந்த கடப்பம் பூ மாலையை (எனக்குப் புனைவாள்) புனைந்தால் பின்பு அச் செயலால் (உண்டாகும் நன்மை) என்ன? (தீமைதானே விளையும் நீ விரைவிற் சென்று வெறியாடலை விலக்கி அறத்தொடு நிற்பது தான் நலம்) என்று தலைவி கூறினள். இதுதான் பொருள். சேந்தன்-முருகன், அவன்-அம் முருகன் சேந்தன் என்ற இயற் பெயரை அவன் என்ற சுட்டுப்பெயர் சுட்டியது காண்க.

## பாடபேதத்தின் பொருள்கோள்

"செய்தான்" என்ற பாடத்தின்படி பொருள் கொள்ள வேண்டுமெனில், அவன் அணங்குநோய்-அச் சேந்தன் வருத்திய நோயாக, செய்தான்-காட்டினான், ஆக்கினான். என்று கொள்க "விழைவு" என்ற பாடததின்படி பொருள் கொள்ள வேண்டுமெனில், அதன்கண்-விழைவு பின்னை என்னைகொல் எனக் கொண்டுகூட்டி, அதன்கண்-(நாம் இப்போது வெறியாடலின் முடிவு காண்போம என்று நினைத்து) அவ் வெறியாட லிடத்து (வைத்திருக்கும்) விழைவு-விருப்பமானது. பின்னை, பிறகு (அதன் முடிவில்) என்னை-என்ன பயனைத்தரும் (தீமை யைத்தானேதரும் ஆதலால், விரைவிற் சென்று அறத்தொடு நிற்க என்று கொள்க; கொல்: அசை.

## அவன் என்பது தலைவனைச் சுட்டும் என்பதன் மறுப்பு

ஆராய்ச்சியாளர் அவன் என்பது தலைவனைச் சுட்டும் எனக் கொண்டார். அது குறித்துச் சிறிது ஆராய்வோம்.

"அறத்தொடு நிற்குமாறு தலைவி தோழிக்குக் குறிப்பித்தாளா யிற்று" எனத் துறையை அவரும் விளக்கியிருக்கின்றார். ஆத லால், தலைவி பாங்கிக்குக் கூறுவதுதான் இச் செய்யுளில் அமைந்த பொருள் என்பது தெளிவு.

தலைவி பாங்கியை நோக்கி "அவன் அணங்கும் நோய் செய் தான்" என்று கூறுவாளா? தலைவன் தலைவிக்குப் பிரிவாற்றாமை யாகிய காமநோயைத் தந்தது பாங்கியறியாத செயலா? பாங்கியும் தலைவியும் உடன்பட்ட பின்புதானே பகற்குறி, பகற்குறியிடை யீடு, இரவுக்குறி, இரவுக்குறியிடையீடு ஆகிய செயல்கள் நிகழ்ந் தன. இடையீடு நிகழ்ந்த பின்னரன்றோ மெய்வேறுபாடு தோன்றும். தலைவியின் வேறுபாடறிந்துதானே அன்னை வேலனையழைத்து வெறியாட்டுக் காண்பாள் வெறியாட்டு நிகழ்த்தும்போது "என் தலைவன் எனக்குக் காமநோய் செய் தான்" என்று தன் ஆருயிர்ப் பாங்கியிடம் தலைவி கூறினள் என்பது எவ்வாறு பொருந்தும்? தலைவியும் பாங்கியும் ஓரிடத்திற் கூடியிருந்து வெறியாடல் நிகழ்வதைக் காணும்போது "வேலன் வெறியாடுகின்றான்; முருகன் அணங்கிய நோயென்று எனது காமநோயை மொழிந்தான், மொழிகின்றான், மொழிவான் ஆத லால் நீ சென்று வெறியாடலை விலக்கு: அறத்தொடு நில் என்று கூறுவதுதானே பொருத்தமாகும். "தலைவன் எனக்குக் காம நோய் செய்தான்" என்று தலைவி பாங்கியிடம் அறத்தொடு நிற் கும் அமையம் இதுவா? எவ்வாறு பொருத்தமாகும்? பொருந் தாக் கூற்றாகவும், பயனில் கூற்றாகவும் தோன்றுவதைக் காண்க.

## உதாரண மறுப்பு

இனி ஆராய்ச்சியாளர், "ஆக்கமும் கேடும்" என்ற குறட் பாவையும், "என்றும் புதியார்" என்ற நாலடி வெண்பாவையும் பொருத்தமான உதாரணம் எனக் காட்டினர். இதுவும் ஆராய்

தொல்காப்பியர் இயற்பெயர் என்று மட்டும் கூறினர் எனினும் அதற்கு உரையாசிரியர் பலரும் சாத்தன், சாத்தி, கொற்றன், கொற்றி என்பன போன்ற பெயர்களையே உதாரண மாகக் காட்டியிருக்கின்றனர். தெய்வச்சிலையார், இயற்பெய ராவன: சாத்தன், கொற்றன், சாத்தி, கொற்றி என்பன எனக் காட்டியிருக்கின்றனர்; (தொல்காப்பியம் சொல்லதிகாரம் தெய்வச்சிலையார் உரை பக்கம் ௩௧. சூத். 36 உரை.) ஆதலால் இயற்பெயர் என்பது ஒருவனையாவது ஒருத்தியையாவது ஒரு பொருளையாவது விதந்து சுட்டும் பெயர்கள் எனக் கொள்ளல் வேண்டும். "மக்கணுதலிய" என்ற தொல்காப்பியம் அகத்திணையி

பல் (எண் ருச) சூத்திரத்தில் "சுட்டியொருவர் பெயர் கொளப் பெறூஅர்" என்பதன் உரையை யாய்ந்தால் இயற்பெயர் என்பது இன்னது என நன்கு விளங்கும். "அவற்றுள், இயற்பெயர் கிளவித்தலைவற் கிசையார்" என்ற நம்பியகப் பொருள் ஒழிபியல் ௩௬-ஆம் சூத்திரமும் உரையும் அக் கருத்தை வலியுறுத்தும். எனவே 'ஆக்கமும்" என்ற குறளில் வந்துள்ள "சொல்" என்ற பெயரும் "என்றும்" என்ற நாலடியில் வந்துள்ள "இரப் பாரை யெள்ளாமகன்" என்ற பெயரும் சுட்டி யொருவரை விதந்துகூறும் இயற்பெயர்கள் அல்ல. ஆதலின் அவர் காட்டிய உதாரணமும் அவ்விலக்கணத்திற்குப் பொருத்தமின்று எனக் காண்க.

## முடிவுரை

இவ்வாராய்ச்சியால் "சேந்தன்" என்ற இயற் பெயரையே "அவன்" என்பது சுட்டும் என்பதும், அவ்வாறு சுட்டினல்தான் அகப்பொருட்டுறைக்குப் பொருத்தமான பொருள் தரும் என்ப, தும், தலைவனைச் சுட்டும் என்றது பொருத்தமின்று என்பதும் தலைவனைச் சுட்டாமல் சேந்தனையே சுட்டுவதால்தான் அக் கவி அவ் விலக்கணத்திற்கு உதாரணமாயிற்று என்பதும், புதிதாக ஆராய்ச்சியாளர் காட்டிய உதாரணம் பொருத்தமின்று என்ப தும், இது போன்ற சிறந்த கவி ஒன்றும் இல்லாததால்தான் உரையாசிரியர் பலரும் இதனையே காட்டினர் என்பதும், பொருத்தமில்லாத உதாரணத்தை எவரும் எடுத்துக்காட்ட மாட்டார் என்பதும், ஒரோ வழி உரைகாரர் எல்லாருமே பொருந்தாத உரையெழுதி உதாரணமுங் காட்டுதல் யாண்டும் இல்லை என்பதும், "கண்ணும் தோளும்" என்ற சூத்திரத்தின் உரையும் ஆராய்வார்க்குப் பொருத்தமுடையது. ஆகவே புலப் படும் என்பதும் தெற்றென விளங்கும். உயர்ந்தோர் உண்மை கண்டு தெளிக.

## போடிடுக அம்மானை!

[திருவையாறு, திரு. இரா. இராமானுசனுர்]

தென்னகத்துத் தீஞ்சுவையாம், தித்திக்கும் தெள்ளமுதாம்
கன்னித் தமிழெனும் காரிகைகாண் அம்மானை!
கன்னிப் பருவமே ஆமாகில், காவியங்கள்
என்னையோ ஈன்றவிதம் அம்மானை! அம்மானை!
ஆனலும் நாதனில்லை, அற்புத நூல்களிவை,
பொற்பிலா மாந்தரில்லை, போடிடுக அம்மானை!

# கண்ணகி கதை[1]

[மறைத்திரு. மறைமலையடிகள்]

இற்றைக்கு ஓராயிரத்து எழுநூற்றைம்பது ஆண்டுகட்கு முன் சோழ நாட்டின்கட் கடற்கரையில் உளதான காவிரிப்பூம் பட்டினஞ் சோழ மன்னர்க்குத் தலைநகராய் விளங்கிய பெருஞ் சிறப்புவாய்ந்தது. வடக்கே பனிமலை (இமயகிரி) வரையிற் சென்று தன் செங்கோலாட்சிக்கீழ் இப் பரதநாடு முழுவதும் வைத்து அரசு புரிந்த கரிகாற்சோழனுக்குத் தலைநகராயிருந்த சிறப்புவாய்ந்ததும் இக் காவிரிப்பூம்பட்டினமேயாம். இந் நகரின் கண் இப்பர் கவிப்பர் பெருங்குடியர் எனப் பெயர் வாய்ந்த மாந்தர் வாணிகத் துறையிற் சிறந்த வணிகர்களாய் உயிர் வாழ்ந்து வந்தனர். அவருட் பெருங்குடியர் குலத்திலே பிறந்த **மாசாத்துவான், மாநாய்கன்** எனப் பெயரிய பெருஞ் செல்வர் இருவர்க்கு முறையே **கோவலன், கண்ணகி** என்னும் மக்கள் இருந்தனர்.

கோவலன் அழகிற் சிறந்தவனுயதுடன், அறிவிலும் மிக்க வனுய்த், தன் இளம் பருவத்திலேயே இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழுந் துறைபோகப் பயின்று யாவரும் வியக்கத் தக்க புலமையுடையவனுய் விளங்கினுன்.

கண்ணகியும் அங்ஙனமே முத்தமிழும் முற்றப் பயின்று, அழகில் நிகரற்ற பொற்பாவையாய்த் திகழ்ந்தனள்.

அஞ்ஞான்று தமிழ்நாட்டிலிருந்த மாதரார் இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் வியக்கத்தக்க பெரும் புலமை வாய்ந்து வாழ்ந்தமை, **புறநானூறு, அகநானூறு** முதலான அருந் தமிழ்த் தொகைநூல்களிற் காணப்படும் அவர்தம் பாடல்கள் பலவற்றுல் தெற்றெனப் புலனுகா நிற்கின்றது.

---

1. அடிகளார் தாம் இயற்றிய ‘இளைஞர்க்கான இன்றமிழ்’ என்னும் இனிய நூலிற் சேர்க்கும் முகத்தான் கண்ணகி கதை என்னும் இப் பகுதியை எழுதினுர்கள். அது முற்றுப் பெருமல் இவ்வளவோடு நிறுத் தப்பட்டுள்ளது. அஃது அவ் வண்ணமே இவ்விதழில் வெளியிடப்படு கின்றது.

ஆகவே, கண்ணகி தமிழ்ப்புலமையில் மிக்கு விளங்கினாள் என்றல் அக் கால இயற்கைக்கு ஒத்ததேயன்றிப் புனைந்துரை யாகாமை யுணர்க. ஔவையார், காக்கைபாடினி நச்செள்ளை யார், காவற்பெண்டு, குறமகள் இளவெயினி, பாரி மகளிர் முதலான பெண்பாலார் பாடிய செய்யுட்களைப் 'புறநானூறு' முதலிய தொகைநூல்களில் உற்றுநோக்குங்கால் அவர்கள் ஆண்பாற் புலவர்க்கு எவ்வகையிலும் எட்டுணையுங் குறைந்தவ ரல்லரென்பது நன்கு விளங்கா நிற்கும்.

இவ்விருவரின் பெற்றோர்கள், நெருங்கிய உறவினராதலால், தம் மக்களான கோவலனுங் கண்ணகியுந் தமது கட்டிளமைப் பருவத்திலேயே ஒருவர்மீதொருவர் காதலன்பிற் கனிந்தொழுகு தல் தேர்ந்து, மகிழ்ந்து, நன்னாள் ஒன்றில் இருவரையும் ஒரு மனமாய்த் திருமணஞ் செய்து வைத்தனர். கோவலனுங் கண்ணகியும் மலரும் மணமும்போல், தேனும் பாலும்போல், உடலும் உயிரும்போற் காதலன்பிற் கலந்து இனிது உறைந்து வரும் நாட்களிற், கோவலனுக்குத் தாயான பேரிற்கிழத்தி, தன் மகனும் மருமகளுந் தனியே வேறோர் இல்லிலிருந்து வாழ்க்கை நடாத்துதலைக் காணல் வேண்டி, மற்றுமொரு மாளிகையினை அமைத்து, அதன்கண் இல்வாழ்க்கைக்கு வேண்டும் எல்லாப் பண்டங்களுங் குறையறத் தொகுத்து வைத்து, நல்லதொரு நாளில் அவரை அதனுட் குடிபுகுத்தி வைத்தனர். அவ்விரு வரும் அதன்கணிருந்து,

"அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலுந்
துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின்

ஆகிய இல்லறவொழுக்கத்தைச் செவ்வனே நடாத்தி வந்தார்.

ஈதிங்ஙனமிருக்க, இயற்றமிழோடு, இசையிலும் நடிப பிலும் பெரிந் தேர்ச்சி பெற்றவளும் அழகில் மிகச் சிறந்தவளு மான மாதவி என்பவள் காவிரிப்பூம்பட்டினத்து நாடகக் கணிகை யருள் முதன்மை பெற்ற இளமங்கையாய்த் திகழ்ந்தனள். இவளது கலைப் புலமையைச் சோழ வேந்தற்குக் காட்டல் வேண்டி அவடன் உறவினர், அவளை அவ் வேந்தனது அவைக் களத்தே கொண்டு சென்று, ஆடியும் பாடியும் அவள் தன் கலைப் புலமையை வேந்தற்குக் காட்டுமாறு செய்தனர். வேந்த

னும் அவளது புலமையை மிக வியந்து பாராட்டி, அவளுக்கு நன்கொடையாகப் பொற்பூவாற் றொடுக்கப்பட்ட 'பொன்னரி மாலை' ஒன்றை அளித்துச் சிறப்பித்து விடுத்தான். அதனை மகிழ்ந்து ஏற்று வந்த மாதவி, அத்துணை உயர்ந்த மாலையைப் பெரும்பொருள் கொடுத்து வாங்குவார் அரியராதல் கண்டு, செல்வத்திற் சிறந்த இளைஞர் இயங்கா நின்ற தெருவில், தன் தோழி கூனி கையிற் கொடுத்து அதனை விலைசெய்யுமாறு ஏவி, அதனை விலைகொடுத்து வாங்குவானே தனக்கு மணவாளனாதற் குரியன் என்றும் அறிவிக்கச் செய்தனள்.

ஒருநாள் அத் தெருவழியே சென்ற கோவலன், கூனி கையிற் றாங்கிய அப் பொன்னரி மாலையின் விலையேறப் பெற்ற சிறப்பையும், அதனை விலை கொடுத்துப் பெறுவோன் மாதவிக்கு மணவாளனும் அறிவிப்பையுங் கண்டுங் கேட்டும், முன்னமே மாதவியின் நிகரற்ற அழகையும் அவளது கலைப் புலமையையும் அறிந்தவனாதலின், அவள்பாற் காதலன்பு மிக்கவனாய், அம் மாலையை விலை கொடுத்துப் பெற்றுக்கொண்டு சென்று மாதவிக் கும் மணவாளனாயினன்............

## வெற்றியும் இசையும்

[வித்துவான், மாவை. துரை. பழநிமகாதேவன்]

இயலுன வற்றை இயலுநற் றிறத்தால்
"யாது செய்யினும் யாது பய"னெனக்
கருதா தென்றும் புகழ்விழை யாது,
ஒன்றிய நினைவொடு, ஊன்றிய மனத்தொடு,
நயனும் நலனும் நன்குற ஆற்றின்
வென்றிப் பேறே விளங்கிடும் என்ப;
வென்றியொடு நல்லிசை வேண்டுநர்க் கியையா
உரியார்க் கவைதாம் உரிய வாகலின்.

# மணிவிழா வருகை

சிவத்திரு அருணகிரிநாதர் அடிகளாரவர்களின் மணிவிழா 31—8—1957-இல், வருகின்றது அடிகளார் தென்பாண்டி நாட்டு இராமநாதபுர மாவட்டம், சிவகங்கையை அடுத்த பழூரின்கண் திருவருளால் ஏவிளம்பி யாண்டு (1897) ஆவணித் திங்கள் பத்தொன்பதாம் நாள் தோன்றினர். குலம் அகம்படியர் குலம். தவமிருந்து ஈன்றெடுத்த தாய்தந்தையர் முறையே காளிமுத்தம்மையார், பொன்னையா பிள்ளையாராவர். அடிகளார்க்கு இளமையிலேயே பண்டுள்ள தொடர்பால் செந்தமிழன்பும், சிவனடிப்பற்றும், செந்நெறிப் பண்பும், துறவுள்ளமும் எளிதாகவும் இனிதாகவும் முகைக்கு மலரின் நாற்றம்போல அடங்கிப் பொருந்தியுள்ளன. என்றாலும் பருவம் எய்தும்வரை ஏனையாரைப் போன்றே ஒழுகி வந்தனர்.

ஏழாவது அகவை முதல் திண்ணைப் பள்ளியில் சார்ந்து படித்தனர். பள்ளிப்படிப்பு முடிந்ததும் வேளாண்டொழிலாகிய பயிர்த்தொழிலை மேற்கொண்டனர் பத்தொன்பதாம் அகவையில் கற்புமிகும் நற்குலப் பெண்ணைப் பொற்புற மணந்து மனையறம் மேற்கொண்டனர். அந்நங்கையின் பெயர் மாரியாயி என்ப. இருபதாம் அகவையில் பெண் மகவினைப் பெற்றெடுத்துப் பெரிதும் மகிழ்ந்தனர்.

இருபத்து மூன்றும் அகவையில் துறவுபூண்டனர். இலங்கையிலும் உள்நாட்டிலுமுள்ள பல திருவூர்களுக்குஞ் சென்று இறைவழிபாடாற்றினர். இருபத்தைந்தாம் அகவையில் திருவண்ணாமலைக்கண் திருகார்த்திகை விழாவின்போது ஆத்துமானந்த அடிகளாரிடம் கல்லாடை பெற்றுப் புனைந்து துறவியாயினர். பின்னும் பல திருவூர்களை வழிபட்டுச் சென்னை வந்தனர். வந்து வேதாந்த நூற்களையும் பிற நூற்களையும் ஞானானந்த மணவாள அடிகள் முதலிய பல பெரியோர்களிடத்தும் துறைபோகக் கற்றனர். பின்பு அவ்வடிகளாரையே மெய்யுணர்வுக்குருவாகப் பெற்றுச் சாது நாராயண தேசிகர் மரபைச் சார்ந்தனர். தமிழகத்தில் பல இடங்களுக்கும் பலகாலும் சென்று தமிழர் சமயவுண்மைகளை மக்களிடையே தக்கவாறு பரப்பினர்.

காங்கிரஸ் இயக்கத்தில் ஈடுபட்டு எல்லாத் தொண்டிலும் பங்கு பெற்றனர்.

1925-இல், 1937-இல் இந்தி எதிர்ப்புப் போரில் ஆண்மை மிக்க மறமள்ளராய்த் திகழ்ந்து பல தொண்டரையும் பயிற்றித்

தாமும் முன்னின்று போராடினர். ஈராண்டுத் தண்டனையும் ஏற்று விழுச்சிறையும் புகுந்து வெற்றியும் பெற்றனர்.

1945-இல் 'தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கம்' எனப் பெயரிய மாபெருங் கழகம் ஒன்றையமைத்தனர். அதன் வாயிலாகத் 'துறவி' என்னும் திங்கள் வெளியீடு ஒன்றை நடத்தினர். இறைவழிபாடு, மெய்யுணர்வு முதலியன பற்றிய நூற்கள் முப்பதுக்குமேல் செய்துவெளிப்படுத்தினர். அவர்தம் மணிவிழா வருகை நம் அனைவர்க்கும் அணியென உவந்து வரவேற்கத் தக்க நற்பணியாகும்.

அத்தகைய சிறந்த செயற்கரிய செயல்களைச் செய்துகொண்டு மக்கட்குப் பெருந்துணையாக நிற்கும் அடிகளார் மணிவிழாவைப் பொதுவாகச் செந்தமிழ் அன்பர்களும் சிறப்பாகச் செந்நெறிச் செல்வர்களும் ஒன்றுகூடிக் கொண்டாட வேண்டுவது பெருங்கடனாகும். அது வகைக்கு அவரவர்களாலியன்ற காணிக்கைப் பெரும் பொருள் கொடுத்தும் கொடுப்பித்தும் துணைபுரிதல் நம் தமிழுச்குச் செய்யும் பெருநன்றியாகும். கட்டுரை வழங்குவாரும் தம் கடமையினைப் புரிவாராக, எல்லாவற்றினுக்கும் முகவரி: சாது நாராயண தேசிகர் நிலையம், 200, திருவொற்றியூர் நெடுஞ்சாலை, சென்னை—21.

## 'கடவுள் வாழ்த்து'

திருக்குறளின்கண் காணப்படும் கடவுள் வாழ்த்தில் ஓதப்பெற்ற 'கடவுள்' என்னும் சொல் அவ்வதிகாரத்திலேனும், அன்றி நூன் முழுவதிலேனும் காணப்படாத ஒன்று. அங்ஙனமிருப்பவும் கடவுள் வாழ்த்தென வழங்குவதை உய்த்துணரின் 'வாழ்த்தும் வணக்கமும் புகழ்வும் போற்றும்' கடவுளுக்கே உரியன என்பது சொல்லாமலே அமையும். அதனால் 'கடவுள் வாழ்த்து' எனப் பெறப்பட்டது. முதல் மூன்று குறள்களாலும் முறையே உண்மை, அறிவு, இன்பங்களும், ௪-இல் அன்பும், ௫. இருள்வினை மாயை இன்மையும், ௬. ஒழுக்கமும், ௭. ஒப்பின்மையும், ௮. அறமும், ௯. எண் குணமும், ௧௦. திருவடிப்பேறும் முறையே பெறப்பட்டன. இவற்றை வரும் வெண்பாவால் நினைவுகூரத் தருகின்றாம் :

உண்மையறி வின்ப உருவன்பன் ஒட்டிலிருள்
வண்மை வினைமருள் வாங்கியான்—உண்மை
ஒழுக்கனொப் பில்லான் ஓங்கறனெண் பண்பன்
அழுக்ககற்றி ஆட்கொளிறை வாழ்த்து.

# கீழ்க்கணக்கு

[திரு. பி. எல். சாமி, பி. எஸ். ஸி.]

பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் என்ற வழக்கு 13, 14-ஆம் நூற்றாண்டுகளில் வழங்கியதாக வையாபுரிப்பிள்ளை கருதினார். அவருடைய கொள்கைப்படி திருக்குறள் உள்ளிட்ட கீழ்க்கணக்கு நூல்கள் சங்க காலத்திற்குப் பிற்பட்டன வாகும். அதை மறுத்துக் கூறுவதன்று இக் கட்டுரையின் நோக்கம். கீழ்க்கணக்கு என்ற வழக்கு எப்படித் தோன்றிற்று என்று ஆராய்வதே இதன் நோக்கம். கணக்கு என்ற சொல் வழக்குச் சங்க காலத்திலேயே இருந்திருக்க வேண்டுமென்பதில் ஐயமேதுமில்லை. கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடிய பாடல்கள் சங்க நூற்களில் உள்ளன கணக்கு என்ற சொல் 'கண்' எனும் வேர்ச்சொல்லடியாகப் பிறந்தது. கண் என்ற சொல்லடியாகக் கிளைத்த பிற சொற்களையும் ஆராய்வது பயன் தரும்.

பண்டைக் காலத்தில் கணக்குத் தோன்றிய வரலாற்றில் பின்னிக்கிடக்கின்றது எழுத்துத் தோன்றிய வரலாறும். கண்ணெழுத்து என்றொரு எழுத்து வணிகரிடை வழங்கியதைச் சிலப்பதிகாரம் கூறுகின்றது. பண்டைய எகிப்து, சுமேர், சிந்துவெளி நாகரிகங்களை ஆராய்ந்த புதைபொருளாராய்ச்சியாளர்கள் வணிகரினால், வணிகத்திற்காக வளர்க்கப்பட்டவையே கணக்கும், எழுத்தும் என்று கருதுகின்றனர். அரப்பாவில் (Harappa) காணப்படும் விலங்குகள், மனிதர்கள், கடவுளர்கள் பொறித்த முத்திரைகள் வணிகர் தங்களுடைய பண்டங்களைப் பற்றிப் பிறருக்குத் தெரிவிக்க வணிக நோக்குடன் பயன்படுத்தியவை என்று ஸ்டுவர்ட் பிகாட் (Stuart pigot) என்ற ஆராய்ச்சியாளர் "வரலாற்றுக் காலத்திற்கு முந்திய இந்தியா" (Prehistoric India) என்ற நூலில் கூறியுள்ளார் அடையாளமாகப் பெயரும் உருவும் பொறித்த சித்திரவெழுத்துக்களே பின்னர் நெடுங்கணக்கெழுத்துக்களாக மாறின என்றும் அவர் கருதுகிறார். இக் கொள்கைக்கு ஆதரவு தருவதுபோல் தமிழ் நூற்களில் சில செய்திகள் காணப்படுகின்றன. இதைப் பிறரும் எடுத்துக்காட்டியுள்ளனர். கண்ணெழுத்து என்ற எழுத்து முறை வணிகர்களால் தங்களுடைய சரக்குகளின் அளவு, தன்மை, முதலியவற்றைக் குறிக்கும் அடையாள எழுத்தாகப் பயன்படுத்தப்பட்டதென் றறிகிறோம். இந்த அடையாள எழுத்துச் சித்திரவெழுத்தாக இருந்ததென்றும் தெரிகின்றது.

"வம்ப மாக்கள் தம்பெயர் பொறித்த
கண்ணெழுத்துப் படுத்த எண்ணுப் பலபொதி."

என்ற சிலம்பு வரிகளில் வணிகர் பெயரும், கண்ணெழுத்தும் மூடைகளில் பொறிக்கப்பட்டுள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. மற்றும்,

"எய்யா வடவளத் திருபதி னாயிரம்
கண்ணெழுத்துப் படுத்த கைபுனை சகடம்."

என்ற வரிகளில் இருபதினாயிரம் வண்டிகளில் இருந்த வடபுலச் சரக்குகள் கண்ணெழுத்துப் பொறிக்கப்பட்டனவாயிருந்தன வெனாறும் கூறப்பட்டுளளது. காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து ஏற்றின பண்டங்களெல்லாம் புலிப்பொறி வைத்து வரிவிதிக்கப் பட்டன வென்றும் பட்டினப்பாலை கூறுகின்றது. கண்ணெழுத்தால் முடங்கல் தீட்டும் வழக்கமிருந்ததைக்,

"கண்ணெழுத் தாளர் காவல் வேந்தன்
மண்ணுடை முடங்கலம் மன்னவர்க் களித்து."

என்ற வரிகள் காட்டும். உருவெழுத்து என்று வழங்குவதும் கண்ணெழுத்துப் போன்றதே.

"காணப் பட்ட உருவ மெல்லாம்
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவி லோவியன் கைவினை போல
எழுதப் படுவ துருவெழுத் தாகும்."

என்ற சூத்திரத்தில் உருவெழுத்து விளக்கப்பட்டுள்ளது. இந்த எழுத்தை எழுதக் 'கண்ணெழுத்தக்கோல்' என்ற எழுதுகோல் இருந்ததாகவும் தெரிகிறது. ஓவியம் வரைபவரைக் 'கண்ணுள் வினைஞர்' என்று சிலப்பதிகாரம் கூறும். மற்றும் நாணய பரிசோதகரை 'வண்ணக்கன்' என்று அழைப்பதுமுண்டு. இதிலும் கண் என்ற சொல் பயிலுகின்றது. கண்ணுளர் என்று கூத்தரை மற்றோரிடத்தில் சிலப்பதிகாரம் கூறுகின்றது. கண் என்ற சொல் ஓவியம், கூத்து என்ற பொருள்களும் பெற்று வருகின்றது. நோக்கினோர் கண்ணில் தம் தொழிலை நிறுத்துவோர் என்று கண்ணுள் வினைஞர் எனற சொற்கு நச்சினார்க்கினியர் பொருள் கூறுவார் :

"அன்றை யனைய வாகி யின்றுமெங்
கண்ணுள் போலச சுழலு மாதோ."

"................ .. .. ..உண்கண்
மணிவாழ் பாவை நடைகற் றன்னவெ
னணி யியற் குறுமக ளாடிய
மணியேர் நொசசியுந் தெற்றியுங் கண்டே."

என்ற நற்றிணைப் பாடல்களில் கண்ணுள் நின்று நிலவுவதாக, சுழலுவதாகப் பழைய நிகழ்ச்சிகளைப் பற்றிச் செவிலித்தாய் கூறுகின்றாள். கண்ணுள் வினைஞர், கண்ணுளர் ஆகிய சொற்களும் நற்றிணைப் பாடலில் கூறுமுறை போன்றே தோன்றியிருக்க வேண்டும். கண் என்ற சொல் கணக்கு என்ற சொல்லில் நூலையும் இலக்கியத்தையும் குறித்துப் பொதுவாக வழங்கியிருக்கின்றது. நூலைச் சொல்லித் தருபவரான ஆசிரியர் கணக்காயர் எனப்பட்டார். கணக்கு என்பது எண்ணையும் எழுத்தையும் சேர்த்துக் குறித்தது. அதன்படி எண்ணும் எழுத்தும் கணக்கெனத் தகும் இக் காலத்தில் கணக்கெனில் எழுத்தைக் குறிக்கும். நெடுங்கணக்கென்றால்தான் எழுத்து வரிசையைக் குறிப்பதாக உணர்வர். கணக்கு என்ற சொல் கணிதத்தைக் குறிப்பதால் அதனினின்றும் பிரித்துக்காட்டவே நெடுக்கணக்கென்று அழைத்ததாகத் தெரிகின்றது. எழுத்து என்ற சொல்லே பண்டை நூல்களில் சித்திரத்தைக் குறித்து வழங்கியிருக்கின்றது. எழுத்து நிலை மண்டபம் என்று ஓவியம் வரைந்த மண்டபத்தைப் பரிபாடல் அழைக்கும். 'எழுது' என்ற வினைச் சொல்லும் சித்திரம் வரைதல், அழகு செய்தல் என்ற பொருள்களில் பயின்றுள்ளது. வட்டிகைச் செய்தி என்றால் ஓவச் செய்தி என்று பொருள். வட்டெழுத்து என்பதிலும் வட்டித்தல் என்ற சொல் வண்ணம் பூசுதல், சித்திரம் வரைதல் என்ற பொருளுடன் மறைந்திருக்கலாமென்ற ஐயமெழுகின்றது.

எழுத்து வரிசையைக் குறித்த நெடுங்கணக்கு என்ற வழக்கிருப்பினும், எண்வரிசையைக் குறிக்கும் 'குறுங்கணக்கு' என்ற வழக்கு இல்லை. கீழ்க்கணக்கு என்ற வழக்கோ சில நூற்களைக் குறித்து முதலில் மயிலைநாதருரையிலும் பேராசிரியர் உரையிலும் வழங்கியிருக்கின்றது. பன்னிருபாட்டியலிலும் மேற்கணக்கு, கீழ்க்கணக்கு ஆகியவற்றின் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. இனி, கீழ்க்கணக்கென்ற சொல் நூற்களைக் குறியாது ஏதோ ஒரு கணித முறையைக் குறித்து நாவுக்கரசர் பாடலிலும் பட்டினத்தார் பாடலிலும் வழங்குவதைப் பிள்ளையவர்கள் காட்டியுள்ளார்,

"தொழுது தூமலர் தூவித் துதித்து நின்று
அழுது காமுற் றரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கின்னம்ப ரீசனே."

என்று நாவுக்கரசர் நல்லவரையும் பொல்லாதவரையும் ஏதோ ஒரு கணக்கில் ஈசன் எழுதுவதாகக் கூறுகின்றார்.

தமர் பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்து
என்னையும் எழுத வேண்டுவன்.”

என்று பட்டினத்தடிகள் தம் பெயரை தமர்பெயரோடு வரிக் கணக்குப் புத்தகத்தில் சேர்த்தெழுதுமாறு இறைவனை வேண்டுகின்றார். இங்குக் கூறப்பட்ட கணக்கு, புத்தகம் என்பவை நிலவரிக்கணக்கு, நிலவரிக்கணக்கேறிய புத்தகமென்பதில் ஐயமில்லை. நிலத்தின் அளவு, தன்மை, வரி, உரியவர் ஆகியவைபற்றிக் கணக்கெழுதும்படி அரசர்கள் செய்வதுபோல் இறைவனும் கணக்கெழுதுவதாகக் கற்பித்துக் கூறப்பட்டிருக்கின்றது. இம் முறையான கணக்கு ஊர்தோறும் அக் காலத்தில் வைக்கப்பட்டிருந்தது சோழ அரசர்கள் காலத்தில் நிலம் அடிக்கடி அளக்கப்பட்டு வந்தது. இஃது ஆங்கில நாட்டில் இருநத Doomsday book போன்ற ஒரு வரிப் புத்தகத்தில் பதிவு செய்யப்பட்டது. இந்த நிலவரிக் கணக்கு நிலத்தின் உரிமையாளர் பெயர், தன்மை, அளவு, வரி, இறையிலி முதலிய பல செய்திகளை உடையதாக இருந்திருக்க வேண்டும். இக் கணக்கும் தமிழ்நாட்டில் வழங்கிய ஒருவகை அளவையினால் வைக்கப்பட்டிருக்கவேண்டும். தமிழ் நாட்டில் வழங்கிய எண்ணளவை சிற்றிலக்கம் பேரிலக்கம் எனப்படும். சிற்றிலக்கத்தில் கீழ்வாயிலக்கமென்றும் மேல்வாயிலக்கமென்றும் இரு பிரிவுகள் இருந்தன. மிகச் சிறிய அளவைகள் கீழ்வாயிலக்கததில் தெரிவிக்கப்பட்டதெனத் தோன்றுகின்றது. தமிழ்நாட்டில் நிலங்கள் மிக நுட்பமாக அளக்கப்பட்டன. மிகச் சிறிய அளவுடைய நிலமும் விடப்படவில்லை. “........ஆக இறையிலி நீங்கு நிலம் முக்காலே இரண்டு மாக்காணி அரைக் காணி முந்திரி கைக்கீழ் அரை இரண்டு மாமுக்காணிக்கீழ் முக்காலே நான்குமா அரைக்காணி முந்திரிக்கீழ் நான்கு மாவினால் இறை கட்டினக் காணிக்கடன்” என்று சோழர் காலத்துக் கல்வெட்டுக் கூறுகின்றது. இதன் அளவு $\frac{1}{52,428,800,000}$ வேலி என்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. இவ்வளவு நுட்பமாக அளக்க அவர்கள் கீழ்வாயிலக்கத்தைப் பயன்படுத்தினர். மேற் காட்டிய கணக்கில் ‘கீழ்’ என்ற சொல் அடிக்கடி பயினுவதைக் கவனிக்கவும். மிகச சிறிய பின்ன எண்களைக் குறிக்கக் கீழ் என்ற அடைமொழியை அளவைகளுடன் சேர்த்துக் கொண்டதாகத் தெரிகின்றது. கீழ்வாய்ச் சிற்றிலக்கத்தில் அடிமட்ட எண் கீழ் முந்திரியாகும் இது $\frac{1}{102,400}$ என்பதாகும். மற்றும் கீழரை $\frac{1}{640}$, கீழ்க்கால் $\frac{1}{1280}$, கீழரைக்கால் $\frac{1}{2560}$, கீழ்வீசம்

$\frac{1}{5120}$ என்று கீழ்வாயிலக்கம் செல்லுகின்றது. நிலங்கள் மிகச் சிறிய கீழ்வாய்ச் சிற்றிலக்கத்தில் அளக்கப்பட்டதாலும், இக் கணக்குகளில் 'கீழ்' என்ற சொல் பலதடவைகள் வருவதாலும் கீழ்க் கணக்கு என்ற பெயர் தோன்றிற்று. ஆதலின் சிலவரிக் கணக்குக் கீழ்க்கணக்கெனஅழைக்கப்பட்டிருக்கலாம் அடி நிமிர்பில்லாச் செய்யுட்களை ஒப்புமை நோக்கிக் கீழ்க்கணக்கெனப் பெயரிட்டிருக்கலாம் பின்னர் அடிநிமிர்பான செய்யுட்களுக்கு மேற் கணக்கென்று பெயரிட்டிருப்பர். அடிகுறைந்தவைகளைக் கீழ்க்கணக்கென்றும் அடிநிமிர்ந்தவைகளை மேற் கணக்கென்பதும் இயற்கையாகத் தோன்றக்கூடியதே.

கீழ்க்கணக்கு என்ற கணக்குமுறையோடு ஒத்த வழக்காறு இந்திய கணித சாத்திரத்தில் இருப்பதாகத் தெரியவில்லை என்று வையாபுரிப்பிள்ளை கூறுகின்றார். ஆகலின் இது தமிழுக்கே உரித்தான, தனிக் கணக்கியல் முறையெனத் தெரிகின்றது. அரப்பா நாகரிகத்தை ஆராய்ந்த ஸர் வீலர் பிகாட் அரப்பாவில் வழங்கிய அளவைமுறை பதினறின் மடங்காக இருந்ததைக் காட்டுகின்றார். 32,64 என்று அளவைமுறை செல்வதைக் காட்டுகின்றார்; பதினறின் மடங்காக வழங்கிய அளவுமுறை வேறு எந்தப் பழைய நாகரிகங்களிலும் இருந்ததாகத் தெரியவில்லை என்றும் அவர் அறுதியிட்டுக் கூறுகின்றார். ஆதலின் இது சிந்துவெளிநாகரிகத்திற்கே உரித்தான அளவை முறை என்று தெளிவாகின்றது ஆனல் இந்த அளவை முறை தமிழ் நாட்டு எண்ணலளவை முறையுடன் ஒத்திருப்பது அவருக்குத் தெரியாது. கீழ்வாய்ச் சிற்றிலக்கங்களைக் கவனித்துப் பார்த்தால் அவையெல்லாம் பதினறின் மடங்காக இருப்பது தெரியும். சிந்துவெளியிலும், தமிழ்நாட்டிலும் ஒரேமுறை, எங்குமே காணப்படாத ஒரே அளவைமுறை, கணக்கியல் முறை வழங்கியிருப்பதை நோக்கும்போது அது நம்மை வியப்பிலாழ்த்துகின்றது. தமிழெழுத்துத் தோன்றிய வகையிலும் சிந்துவெளி மக்களுடன் தொடர்பு கண்டோம. கணக்கு முறையிலும் கி. மு. 3000 ஆண்டுகளுக்கு முற்பட்ட சிந்துவெளிமுறையொடு தொடர்பு காண்கின்றோம்.

கண்ணெழுத்தை எழுதியவர் கண்ணெழுத்தாளர் எனப்பட்டனர். அவரே பிற்காலத்தில் கணக்கர், கரணவர் எனப்பட்டாரென்றும் தெரிகின்றது. எகிப்திய, சுமேரிய நாகரிகங்களில் தோன்றிய ஓவிய எழுத்துமுறை (Heiroglypic) அக்காலத்தில் மிகச் சிலருக்கே தெரிந்திருக்கவேண்டுமென்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். எகிப்திய நாட்டு வரு

மானத்தையும் செலவையும் கணக்கெழுதத் தோன்றிய எழுத்து முறை சித்திர வெழுத்து முறையே என்றும் கூறுகின்றனர். சித்திர வெழுத்துமுறை தெரிந்த ஒருசிலர் பின்னர் ஒரு தனி அரசாங்க அலுவலகக் குழுவினராகவும், வகுப்பினராகவும் மாறினர். இந்த அலுவலகர்களுக்கு அரசாங்க வரவு செலவு அதிகாரிகள் பள்ளிகள் நடத்தியதாகவும் எகிப்திய வரலாற்றில் தெரிகின்றது. இந்தக் கணக்கு அலுவலகர்களிடமே இலக்கியமும் தோன்றியதாகத் தெரிகின்றது இச் செய்திகள் தமிழ் இலக்கியத்தில் காணப்படும் சில செய்திகளொடு ஒத்து வருகின்றன. தமிழில் கணக்காயர் என்பவர் ஆசிரியராயிருந்து கணக்குமட்டுமன்றி இலக்கியத்தையும் சொல்லிக்கொடுத்து வந்தார். தமிழில் கண்ணெழுத்தாளர் எனப்படுவார் மிகச் சிலராகவே இருந்திருக்க வேண்டும். மற்றும் அவர்கள் தனி இனத்தினராகவும் மாறியிருப்பர். மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் என்று சொல்லப்படுகின்றது. கணக்காயர் தனி வகுப்பினரென்று தெரிகின்றது. பிற்காலத்தில் பட்டயம் தீட்டுவதிலும் கவிபாடுவதிலும் சிறந்தவர்கள் காரணிகர் எனப்பட்டாரென்று அறிகிறோம். பல்லவர்கள் காலத்தில் இவர்கள் பட்டயம் தீட்டுவதோடு நல்ல புலவர்களாகவும் இருந்தனர். இவர்களுக்குப் பல்லவ அரசர்கள் பல விருதுகள் வழங்கினர். முற்காலத்தில் முடங்கல் தீட்டிய கண்ணெழுத்தாளரே பிற்காலத்தில் பட்டயம் தீட்டும் 'காரணிகர்' ஆயினர். இவர்களே கணக்கர் எனவும் கூறப்படுவர். கரணம் என்ற சொற்குக் கணிதம், எண்ணிக்கை என்ற பொருட்களுண்டு. முதலில் அரசாங்கக் கணக்கெழுதத் தோன்றியவர் பிற்காலத்தில் கவிகளாகவும் ஆசிரியர்களாகவும் மாறினர். அவர்களே பிற்காலத்தில் நூற்களைப் பாதுகாத்தும் வந்தனரென்றும் தெரிகின்றது இறையனாரகப் பொருளுக்கு 'இன்ன உரைதான் சரி' என்பதை உணாத்தக் காரணிகன் ஒருவன் வேண்டும் என்று இறைவனிடம் குறையிரந்த செய்தி களவியல் உரையில் காணப்படுகின்றது ஆதலின் காரணிகன் நூல்களை நன்குகக் கற்றுணர்ந்தவன் என்றும தெரிகின்றது. கணக்கெழுதிய கணக்கர் கணக்காயராகிக் காரணிகராகிய வரலாறு எகிப்திய வரலாறுடன் ஒத்திருக்கின்றது. எண்ணும் எழுத்தும் தோன்றி வளர்ந்த வரலாற்றில் சிந்துவெளி நாகரிகத்துடன் காணும் தொடர்புகளும் எகிப்திய நாகரிகத்துடன் காணும் ஒப்புமையும் தமிழர் நாகரிகத்தை வரலாற்றுக் காலத்திற்கு முன்னர்க் கொண்டு செல்லுகின்றது.

# செங்கோன் தரைச்செலவு

## முன்னுரை

சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும் நல்லிரும் பூந்தாது கமழும் மல்லிகை மலர்த்தொடையாம் நம் தமிழ் மொழி காலத்தால் முற்பட்டது; கனிவு இனிமை மென்மை சான்றது இவைகள் பொதுள நிறைந்தன நூல்கள். அவைகளைக் காலத்தானும் போற்றுமையானும் கறையான் உண்டன சில; மண் தின்றன பல; கடல்கொண்டன அளப்பில; அவற்றுள் அடியும் முடியும் அற்றன எண்ணில. இவற்றுள் ஒன்றே செங்கோன் தரைச்செலவு என்னும் இந்நூல்; இதற்குத் தலையும் காணேம்; அடியுங் காணேம். இவை யாண்டுற்றனவோ! கறையான் தின்றவோ! காலங் கொண்டவோ! அறிகின்றிலேம்! சிதைந்தனபோக எஞ்சியன; ஆறுபாட்டுகள்தாம் பழைய உரையுடன் கிடைத்துள்ளன. செங்கோன் தரைச்செலவு என்னும் பெயர், செங்கோன் என்னும் பெயருடைய வேந்தன் பன்னாடுகளையெல்லாம் வென்றடிப்படுத்து ஒருமொழிவைத் துலகாண்டு தன் ஆட்சி செலுத்தி, ஆண்டான் எனப் பொருள்கொள்ளக் கிடக்கின்றது. செலவு-செல்லுதல் என்னும் பொருளுடையது.

இந் நூற்கண் பாயிரம் போல் முதலில் இடம் பெற்றுள்ள வெண்பா ஒன்றினால், முதலூழியில் தலைச்சங்ககாலத்துக் குமரியாற்றுக்கும் பஃறுளியாற்றுக்கும் இடையேயிருந்த பெருவள நாட்டரசனாகிய செங்கோவை முதலூழிக் தனியூர்ச்சேந்தன் என்னும் புலவர் பெருமான் 'நரப்புலி' என்னும் ஒருவகைப் பாட்டால் பாடியதாகப் பஃறுளியாற்றுத் தலைப்பாய்ச்சல் ஏழ்தெங்காட்டு முத்தூர் அகத்தியன் என்பார் விளக்கியுள்ளனர்.

இதற்கு உரையுளது; அதையெழுதினோர் ஊரும் பேரும் ஒன்றும் தெரிந்திலது; இதற்கு உரை வகுத்தோரும் காலத்தால் முற்பட்டவராகவே காணக் கிடக்கின்றது. அஃதெற்றாலெனின்? அவர் இந் நூலின் இறுதிப்பாட்டுக்கு உரைத்த உரை விளக்கத்தில் முல்லைத்திணைக்குப் புறத்திணையான வஞ்சித்திணை இலக்கணத்தை விளக்குங்கால் அதற்கு விதி 'முல்லைப்புறன் வஞ்சியது துறைக்கூற்றைப் பேராற்று நெடுந்துறையன் பெருநூலுள்ளும் இடைக்கழிச் செங்கோடன் இயனூலுள்ளுங் காண்க' எனச் சுட்டிக் கூறுதலால் காணலாம்.

எனவே, மேற்கூறிய இவ் வியல்நூல்கள் இரண்டும் இதற்கு உரைகண்டவர் காலத்தே நாட்டில் பெருவழக்காறாக வழங்கி

எங்கும் நிலவியிருத்தல் வேண்டும்; இவ் விருநூல்களும் காலக் கோட்பாட்டால் மறைந்திருத்தல் வேண்டும்; இவற்றிற்குப் பின்னரே அகத்தியமும் தொல்காப்பியமும் தோன்றியனவாக வேண்டுமென ஊகித்துணரக் கிடக்கின்றது. ஆகவே, இந் நூல் தோன்றி நெடுங்காலமானதால் சிதைந்து மறைந்தொழிந்ததில் வியப்பொன்றுமில்லை.

இந் நூலை மதுரை திரு. ம. சுந்தரபாண்டிய ஓதுவார் என்பவர் தேடிக் கண்டு 1902-ஆம் ஆண்டில் பதிப்பித்துள்ளனர். இன்னார், முன்னோர் மொழிந்த நன்னூல்களில் மிக்க பற்றுக் கொண்டிருந்தமையை இது விளக்குகின்றது. இவர் இந் நூலை இவர்காலத்தில் திரிசிரபுரத்திலிருந்த அ சுந்தரநாத பிள்ளை யென்பாரிடமிருந்து கிடைத்த ஏட்டுப்படியின்படி அச்சிற் பதிப்பித்ததாக முகவுரையில் கூறியுள்ளனர்.

இந் நூலால் நம் பழந்தமிழ் நாட்டில் ஒன்றாக விளங்கிய ஏழ்தெங்கநாடு முதலிய நாடுகளைச் சார்ந்த பெருவளநாடு முதலிய நாடுகளும், மணிமலை முதலிய சில மலைகளும், முத்தூர் முதலிய சில ஊர்களும்; சக்கரக்கோ, பேராற்று நெடுந்துறையன், இடைக்கழிச் செங்கோடன் முதலிய சில புலவர்களின் பெயரும் ஊரும் பெருநூல், இயல்நூல் என்னும் சில நூற்பெயர்களும், நன்கறியக் கிடக்கின்றன.

இந் நூல் முதலூழிக் காலத்தில் இயற்றியதாக அறியப் பெறுவதால் இந் நூலின் காலமுதன்மை கொண்டு பாராட்டற் குரியது. இத்தகைய நூல் முழுதும் கிடைக்கப்பெறாதது, தமிழர்களின் தவக்குறைவே.

ஆகவே, இந் நூல் நம் செல்வி அன்பர்கட்கும் தமிழ்ப் பெருமக்கட்கும் பயனும்வண்ணம் வெளியிட்டுள்ளோம் இதனால் முன்னோர் நூலைப் பொன்போற் பொதிந்து காப்பாற்றும கடப்பாடும் உளது. எனவே, இச் சிறுநூல், நாம் தமிழக மாந்தர்க்கு வரலாற்றுண்மை கண்டுணர வாய்ப்புத்தரும் அருங்கருவூலமாகத் திகழுமென எண்ணிப் பதித்து வெளியிடுகின்றோம்.

## முகவுரை

சங்கமிருந்து தமிழாராய்ந்து தொல்லிசை நிறுத்த நல்லிசைப் புலவரது எல்லையில் பாடலெழுதிய பல்லாயிரமேடுகள் செல்லினு நீரினுந் தீயினுஞ் சிதைவுற்றொழிய இக் காலத் திருப்பன சிலவேடுகளே. அவையும் புரப்போரின்றி நாளுக்கு நாளழிவுபா டெய்துகின்றன. இத்தகைய பெருங்குறையுற்ற

நமது தமிழ்நாடு உய்யும் வண்ணம் ப்ரம்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள் முதலிய சில பரோபகார சீலர்கள் தமது நன்மையைச் சிறிதுங் கருதாது இடைவிடா முயற்சியால் தமிழ் நாட்டினும் பிறநாட்டினும் அரிதிற் கிடைப்பனவாய ஏட்டுப் பிரதிகளைத் தேடித் தொகுத்து எழுதுவோரா னேர்ந்த வழூஉக் களைந்து யாவருமெளிதிற் பெறுமாறு சிந்தாமணி சிலப்பதிகார முதலிய அரிய பெரிய நூல்களை அச்சிடுவித்துப் பேருதவி செய்துவருகின்றனர். அவர்களின் புத்தகங்களை வாசிப் படித்தலால் தமிழினது வாய்மிகந்த மாட்சிமையை யெட்டுணையு மறியாத யானும் முன்னோரது நூல்களைத் தேடித் தொகுக்க வேண்டுமென்னும் பேராவப் பிடர்பிடித்துந்தப் பற்பல விடத்துச் சென்று சில கொணர்ந்தேன். அவற்றுள் முதலிறுதி காணப் பெறாத செங்கோன் றரைச் செலவு என்னும் பெயரிய நூலெழுதிய பழைய ஏட்டுப் பிரதியொன்று திரிசிரபுரத்திலிருக்கும மகா-ா-ஸ்ரீ அ. சுந்தரநாத பிள்ளையவர்களிடமிருந்து எனக்குக் கிடைத்தது. அந்நூல் முழுதுங்கிடைக்க வேண்டுமென்று பலவிடத்திற் சென்று தேடியும் அகப்படவில்லை ஆதலால் கிடைத்த இதுவும் அச்சிற் பதிப்பியாவிடில் இறந்துபடுமென வெண்ணி இதனை அச்சிடலாயினேன்.

இது முதலூழியிற் றலைச் சங்கத்தார் காலத்துக் குமரியாற்றிற்கும் பஃறுளியாற்றிற்கும் இடையேயுள்ள பெருவளநாட்டரசனாகிய செங்கோனை முதலூழித் தனியூர்ச் சேந்தன் பாடியதாகப் பஃறுளியாற்றுத் தலைப்பாய்ச்சல் ஏழ்தெங்க நாட்டு முத்தூர் அகத்தியன் கூறிய பாட்டால் விளங்குகின்றது இதற்கு உரையெழுதினவரது பெயர் எவ்வாற்றானும் விளங்கவில்லை சிலப்பதிகாரத்தின்கண் வேனிற் காதையில் அடியார்க்கு நல்லாருரையான் விளங்கிய ஏழ்தெங்க நாடு முதலிய நாடுகளைச் சார்ந்து பெருவளநாடு முதலிய பிறநாடுகளும் மணிமலை முதலிய சில மலைகளும் முத்தூர் முதலிய சில வூர்களும் சக்கரக்கோ பேராற்று நெடுந்துறையன் இடைக்கழிச் செங்கோடன் முதலிய சில புலவரது பேரும் பெருநூல் இயனூலெனச் சில நூற்பெயரும் இந் நூலானு மிதனுரையானும் வெளியாகின்றன இதனை முதலூழி நூலென எழுதப்பட்டிருக்கு மபிமானம் ஒன்றேபற்றி ஏட்டிலுள்ளவாறு பதிப்பித்தேன்.

இப்பொழுது அச்சிட்டு வெளியாயிருக்கிற புறநானூற்றையும் என் வீட்டிலுள்ள புறநானூற்று ஏட்டுப் பிரதியையும் ஒத்துப் பார்த்ததில் நச்சினார்க்கினியார் உரையால் முதற்குறிப்பு மட்டு மறியப்பட்டு அச்சுப் புத்தகத்தில் எத்தேசப் பிரதியிலும் கிடைக்கவில்லையென்று லெழுதப்பட்டிருக்கிற "மீனுண்கொக்

கின் றாவியன்ன வானரைமுதியோள்'' என்னும் பாட்டு முழுதுமகப்பட்டது. அது தனிப்பாட்டாயிருத்தல்பற்றி மதுரையில் இப்பொழுது தாபித்திருக்கிற செந்தமிழ்ச் சங்கத்தில் நடாத்தப் போகிற செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளியிடுமாறு அச் சங்கப் புலவருக்கு அனுப்பித் திருக்கின்றேன்.

முன்னோர் பாடல்களில் ஒருசிறு அடியேனும் அகப் படின், அதனையும் இறவாது காத்தல் கருதி உடனே அச்சிற் பதிப்பித்தல் வேண்டுமென்பது எனது கொள்கை.

இங்ஙனம்,
ம. சுந்தரபாண்டிய ஓதுவார்.

## நூல்

இஃது,

சேங்கோன் றரைச்சேலவைச் சேந்தன் றனியூரான்
றுங்கன் றமிழ்த்தாப் புலித்தொடரால்—அங்கிசைத்தான்
சக்கரக்கோ முன்னின்று சாற்றும் [1]பெருவூழி
யக்கரக்கோ நாமஞ்சு வாம்.

என்னும் பஃறுளியாற்றுத் தலைப் பாய்ச்சல் ஏழ்தெங்க நாட்டு முத்தூர் அகத்தியன் கூற்றுணு மறிக.

அக் கரக்கோ வியப்பிடைச் சொல்போலும். முதலூழி, முன் கடல் கொள்ளப்பட்ட பெரும்பரப்புத் தமிழ் நிலம்.

க. ஒளிச்சேங்கோ தரைச்சேலவை
யுடைத்தமிழை [2]மடைமடுப்பின்
அளிக்கோண்ட பேரோளியே
யாருலகத் தேநிறைந்த
வவனடத்து நானேன்னே.

(இதன்பொருள்) ஒளிச் செம்மல் கோமான் தரையெல்லாந் தன்னடிப் படுப்பான் எஃகங்கொண்டெழுந்த வெழுச்சியைத் தமிழ்ப்பாட்டிற் கூறுதலான் அருளுருவாய்ச் சோதியுலகத்தே நிறைந்தான் நடத்துதற்குரியன் யான் அதற்கெத் துணையனென்க

ஒளிச் செம்மல் - செங்கதிர்க் கடவுள். செங்கோ - வழிமுதல். இது தாப்புலிப் பாட்டென்க. "தாப்புலி கொண்டு

1. பெருவூழியென்பது முதலூழி யென்றிருத்தல் வேண்டும் போலும்.

2. மடைமடுப்பின் என்பதற்கு உரை காணப்படவில்லை.

தரைச்செலல் சொல்ல" என்றது கட்டளை. பேராற்று நெடுந் துறையன் பெருநூல்.

பேராற்று நெடுந்துறையன் - பெருவள நாட்டுப் பேராற்றை யடுத்த நெடுந்துறையூரில் ஆசிரியன். இது பின்னோர் குறிப்பு. (க)

உ. தமிழ்த்தலைமை தலைக்கொண்டான்
சக்கரன்றேக் கார்குழுவில்
சிமிழ்ப்பித்தா னேனைமொழிச்
சிறுகண்க ளவன்றருக்கச்
செப்புவேன் றிறத்தினே.

(இ - ள்.) தமிழ்க் கழகப் புலவராய தக்கார் குழுவினனந் தலையிருந்து தமிழ்ப் புலமை தலைக்கொண்டு தமிழின் சிறப்பை விரிப்புழி யேனை யேனை நிலத்து மொழிக்கண் டிறக்குமாறு செய்தானைய சக்கரனதவைக் களத்தே அவன் செருக்குறுத்து மாறு இப் பாட்டினை யவன் முன்னைப் பொருளிய லணிசுவை முதலிய திறம்படச் சொல்லுவே னென்க.

(இத் தமிழ்க் கழகம் மூதற்கழகம் போலும், இக் கழகத்து இந்நூல் பாடிய காலத்துத் தமிழ்த் தலைமைப் புலவன் சக்கரன் போலும்; சேந்தன் அக் கழகப் புலவருள் ஒருவன் போலும்) (உ)

* * *

க. தரைச்சேறி தரைச்சேறி
தனிக்காயு மெஃகினு
யுரைக்கண்ணே முத்தலையு
மடிப்படிந்த வும்பருஉ
மொழிந்துறைந்த வூங்கோ.

(இ - ள்.) துணையின்று எந்நிலத்தியாரையுங் கொல்ல வல்ல வேலுடையானே! நீ நிலமனைத்தினையு மளந்தடிப் படுத்த குணக்கு வடக்கு குடக்குஎ செல்ல நிற்றி நின்னடிப் படிந்தது இவ் வரைப்பேயோ? வானெல்லை நின்னளவில் வழுவிற்றில்லை என்க. (எல்லை, குணகோடும் வடகோடும் குடகோடும் போலும்; அக் காலத்து எந்நிலத்துஞ் செங்கோலாட்சி பரவியது போலும்.) (க)

உ. வடதலையை வாய்மடுத்து
வயிறுகொண்ட திருநாடா
வடமலைமே லேறேற்றேன்
மணிமலைமே லேறேற்ற
வயச் சேங்கோவே.

(இ - ள்.) வடாது நிலத்துள்ள வளனெல்லாந் தன்னகட்டிடத்தேகொண்ட திருவளநாட்டினை யுடையராய்! எப்பான மலையினுஞ் சிறந்த மணிமலைமே லேற்றிய வேற்றுக் கொடியினைப் பனிமலைமே லேற்றல் சிறைப்புடைத்தோ வெற்றியை யுடைய செங்கோவே என்க.

பெருவளநாட்டிற் சிறந்தது மணிமலை. செங்கதிர்த் தோற்றத்துச் செம்மணி போறலின் மணிமலை யென்னப்படடது (௨)

௩. பேராறும் வழிக்கழியும்
பிற்படுக்கு மதன்முன்னே
வாராருங் கழலடிக்கீழ்
வைத்திடா மணித்தலைகள்
மாண்ட மாண்ட.

(இ - ள்.) பெரியதோ ராற்றினையும் வழிக்கண் நீராழியையும் பிற்பட நீ கடந்து வருமுன்னம் நீண்ட கழற்காலில் கீழ் வந்து ஏனை நிலமன்னர் மணிமுடி பொரலிறைஞ்சுவர்; அவ்வாறு செய்யாத மாட்சிமை மன்னர் மணித் தலைகள் அழிந்தன என்க.

(பேராறு - அந் நாட்டியாறு; வழிக்கழி - முதலூழியாகிய அந் நிலத்திற்கும் அதனை வடமேற் பாங்கர் தொடர்ந்த தமிழ் நிலத்திற்கும் இடையேயிருந்த கடல் போலும்.) (௩)

௪. செங்கோவே யொளிச்செம்ம
றிருக்கோவே மணிக்கோடு
தங்குபேரு வளநாட்டிற்
றமிழிருந்து புறங்காக்குந்
தமிழ் நாடியாங்கே.

(இ - ள்.) சேயொளிச் செல்வன் வழித் தோன்றலாகிய செங்கோவே! தன்னிடத்தே மணிமலையைக் கொண்டு தமிழென்னும் பெருமொழி புறங்காப்பதாய் நினது பெருவள நாட்டினைப் போலு மொப்பற்ற நாடு பிறிது யாங்குளது என்க. (௪)

௫. வச்சிரவேல் வலனேந்தி
வான்வகுத்தான் மகட்கோண்டாய்
அச்சுறுத்தல கருதிற்றே
வருளோன்றே அகங்குளிர்ப்பித்
தடையார்வன் புரஞ்சுடுமே.

(இ - ள்.) வச்சிரத்தானுய படையினை வெற்றியானேந்தி பகைகடிந்து வானெல்லையைத் தன்னட்டார்க்குங் கூறுபடுத் திந்து காத்த திறலான் மகளை மணந்தாய்? அம் மணப்பேறு அவ் வான வேந்தனை அச்சுறுத்தல் வேண்டிற்றன்று; நின்னருளொன்றே யனைத்துயிரினையு மகங்குளிர்ப்பித் தடையா ரியாக்கையைத் தீத்தற்கமைந் திருத்தலி னென்க.

வான்வகுத்தான் - விண்ணகத் திறைவன். தன்னட்டார் - ஏனைத் திசையிறைவர் அவன் மகட்கொடை போந்தது செங்கோலினட லானேயன்றி யருட்டிறத் தானுமென்க. அகங்குளிர்ப்பித்தல் - மகிழ்தூங்க வினிது வாழ்வித்தல். புறஞ்சுடல் - அடங்காரைக் கோறல். இதனல் அடங்காதார் வழிமுனையைச் சீர்ப்படுத்துப் புறந்தந்தமை புலப்படும். (௫)

௬. எழுச்சிகேட் டேப்பாலுந்
தட்பெருநீர் வெப்புறுமேற்
றழிச்சியீ ருய்ந்துறைக
டழுவினையேன் புறமுல்லைத்
தனிவஞ்சி மிலேச்சினே.

(இ - ள்.) முல்லைப் புறனுய வஞ்சி மிலேச்சி எழுச்சியரவங் கேட்ட காலேயே எண்டிசைக்கண் மலைகள் பிளந்துகுதலேயன்றிக் கடலனைத்துமச்சத்தான் வெம்பிக் கொதிக்குமெனின் நேரார் யாண்டையர்; ஆங்ஙனமாகத் தழிச்சியீருய வேனைத் துறைச் செயலெற்றிற் கென்க.

எப்பாலும் பெருநீர் வெப்புறு மென்றான் ஆக்கிக் கோட் பொருளான் பெருநீரிடை விரிதடர் வேந்தரைக் கோடற்கு. பெருநீரென்றதனனே ஒழிந்தது கோடலியலாற்றானு மேலையதியலாற்றானுஞ் சிமையப் பொருப்பிற் கமையார் வேந்தருங் கோடும் வஞ்சியரவ முன்னர்க் கூறினு னாகலின் றழிச்சி யீருமேனைத் துறையென்றான் முல்லைப்புறன் வஞ்சியது துறைக்கூற்றைப் பேராற்று நெடுந்துறையன் பெருநூலுள்ளு மிடைக்கழிச் செங்கோடனியனூலுள்ளுங் காண்க. (௬)

திருச்சிற்றம்பலம்

## தமிழ்மறைக் கழகத் திருக்குறள் மாநாட்டுக்கு

# அல்பேட் சுவைச்சர் அனுப்பிய செய்தி

தமிழ்மறைக் கழகம் அண்மையில் கொழும்பு மாநகரில் நடத்திய ஐந்தாவது திருக்குறள் மாநாட்டில் பங்கு பற்றிச் சொற்பொழிவாற்றுமாறு கேட்டுத், தமிழ்மறைக் கழகத் தலைவர் பண்டிதர், கா. பொ. இரத்தினம் அவர்கள் உலகப் பேரறிஞர் அல்பேட் சுவைச்சருக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தார். பேரறிஞர் அல்பேட் சுவைச்சர் தாம் கொழும்புக்கு வரமுடியா திருப்பதைத் தந்தி மூலம் அறிவித்துப் பின்வரும் செய்தியை யும் தமிழ்மறைக் கழகத் தலைவருக்கு அனுப்பினார்.

"இந்திய சிந்தனையும் அதன் வளர்ச்சியும்" எனும் எனது நூலில் யான் திருக்குறளைப் பற்றி எழுதியிருப்பதை நீங்கள் போற்றுவது அறிந்து மகிழ்ச்சியடைகிறேன். யான் முதன் முதல் திருக்குறளைப் படித்தபொழுது அதனுட் பொதிந்திருந்த கருத்துக்கள் என்னை ஆட்கொண்டுவிட்டன. அறத்தினை நுட்பமாகவும் திட்பமாவும் உரைக்கும் நூல்களுள் அறவாழ்வை முற்றமுடிய எடுத்துரைக்கும் நூல் திருக்குறளேயாகும். ஐரோப் பிய நாட்டு மக்கள் பலரைத் திருக்குறளைப் படிக்கச் செய்துள் ளேன். திருக்குறளின் உயர்ந்த கருத்துக்கள் அவர்களையும் ஆட்கொண்டுள்ளன.

இரண்டாவது உலகப் பெரும்போர் நடந்திருக்காவிட்டால் தென்னிந்திய மக்கள் தெய்வத் திருக்குறளுடன் எவ்வாறு தொடர்பு கொண்டிருக்கிறார்கள் என்பதை நேரிலேயே கண் டறிந்துகொள்ள அங்கு வந்திருப்பேன். இப் போரினால் இலம் பெறேனில் 1937-ஆம் ஆண்டுத் தொடக்கம் 1948-ஆண்டுவரை எனது வைத்திய சாலையை மேற்பார்வை செய்யவேண்டிய கடமை யில் ஈடுபட்டிருந்தேன். இதன் பின்னரும் ஒரு பெரும் பிரயா ணத்தைச் செய்யக்கூடிய நிலைமை ஏற்படவில்லை.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றிய இப் பெரு நூலை இப்பொழுதும் மக்கள் பெரிதும் போற்றுகிறார்கள் என்பதை உங்கள் வாயிலாக அறிந்து மகிழ்ச்சியடைகின்றேன். இத் திருநூலினாலே வழிகாட்டப்பெறும் நாடுகள் யாவும் என் றும் இந் நூலைப் போற்றி நல்வாழ்வு வாழ்வதாக."

# செய்திகளும் குறிப்புக்களும்

(க) நூல் வெளியீடுபற்றிய பண்டித நேருவின் கருத்துரை

"சினிமாவுக்குப் போகிறவர்கள் சினிமாவுக்காகச் செலவு செய்யும் பணத்தில் பத்தில் ஒரு பகுதியை புத்தகத்திற்குச் செலவிட்டாலே இந்தியாவில் ஏராளமான புத்தகங்களை விற்பனை செய்யமுடியும்" என்று இத் திங்கள் முதல்நாள் புது தில்லியில் தேசிய புத்தக டிரஸ்ட் துவக்க விழாவில் பேசிய இந்திய முதன்மை அமைச்சர் நேரு குறிப்பிட்டார்.

குறிப்பு: அமைச்சரின் கூற்று பெரிதும் உண்மையே. சினிமா ஓரளவு மக்களின் பணத்தைப் பறித்துவிடுகிறது. இன்னும் பல துறைகளில், அஃதாவது ஆடம்பரம் என்னும் பல வகையிலும் மக்கள் தமது பொருளை மிகுதியாகச் செலவு செய்கின்றனர். அத்தகையோர் புத்தகங்களைப் படிக்கும் பழக்கத்தை மேற்கொண்டால் நாட்டுப் பொருளாதாரம் பண்பும் பயனும் உடையதாகும். அதே நேரத்தில் மற்றொரு நிலைமையையும் அரசியலார் உணர்தல் வேண்டும். நம் நாட்டு மக்கட்டொகையில் பெரும்பாலோர் வறியர். அவருள் கலைதேர் மிகப் பலர் எஞ்சியுள்ள கற்றவர்கள் படித்தற்கு விழைவு இருப்பினும் அவர்க்குப் பொருளாதார வாய்ப்பும் வசதியும் கிட்டுவதில்லை. இதனாலேயே இந் நாட்டில் போதிய நூல்கள் நல்ல முறையில் நல்ல எண்ணிக்கையில் பரவுதற்கில்லை. இந்த அடிப்படை உண்மையை அரசியலார் உணர்ந்து நாட்டுப் பொருளாதாரநிலை சாயும் வகை காண்பாராயின் எத்தகைய குறைபாடும் நீங்கும்.

(உ) நல்ல தீர்ப்பு

"தமிழே ஆட்சி மொழியாக ஆகவேண்டும்; பள்ளிகள் கல்லூரிகளில் தமிழே போதனாமொழியாக வேண்டும்; என்று மக்கள் கோரி வரும் இந்தக்காலத்தில் வேதநாயகம்பிள்ளை அவர்களின் நூலை வெளியிடும் இதுபோன்ற முயற்சிகளுக்குத் தமிழன்பர்கள் ஆதரவு அளிப்பதுடன், பிற மொழிகளிலுள்ள இலக்கியங்களைத் தமிழில் மொழிபெயர்ப்பதிலும் அதிக முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும்" என்று 1-8-57-ல் சென்னையில் நடைபெற்ற திரு. வேதநாயகம்பிள்ளை யவர்களின் பிரதாப முதலியார் சரித்திர வெளியீட்டு விழாவில் தலைமைதாங்கிப் பேசிய நீதிபதி திரு. பஷீர் அகமது அவர்கள் குறிப்பிட்டார்கள்.

குறிப்பு: தமிழ் ஆட்சிமொழியாக வேண்டுமென்பதையும் பிற மொழி இலக்கியங்கள் தமிழ்மொழியில் வருதல்வேண்டும் என்பதையும் நீதிபதி யவர்கள் வலியுறுத்தியிருப்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி. ஒரு நீதிபதியவர்களே மொழிபற்றி இத்தகைய நல்ல தீர்ப்பு வழங்கியுள்ளாரென்றால் ஆட்சியாளர் தமிழை ஆட்சிமொழியாக்குவதில் எத்துணை கருத்துச் செலுத்துதல் வேண்டுமென்பதைக் கூறவும் வேண்டுமோ?

(ங) விடுதலைப்போரின் நூற்றாண்டுவிழா

இத் திங்கள் 15-ஆம் நாள், விடுதலைபெற்ற இவ்விந்திய நாடெங்கும் விடுதலைப்போரின் நூற்றாண்டு விழாக் கொண்டாடப்போவதாக அரசியலார் அறிவித்துள்ளனர். அதுகாலை சென்னைமா நகரிலும் வேறு பல இடங்களிலும் விடுதலைக்கு உழைத்த வீரர்களின் உருவச்சிலைகளை நாட்டப் போவதாகத் திட்டமிட்டுள்ளனர்.

குறிப்பு : ஆட்சியாளரின் இத் திட்டம் பெரிதும் வரவேற்கத் தக்கது. விடுதலைக்கு உழைத்த வீரர்கள் மக்கள் நினைவில் என்றும் இருக்கத்தக்கவர்கள் அதற்கு இச் சிலைகள் பெருந்துணைபுரியவல்லவை. தமிழகத்தைப் பொறுத்தவரையில் வீரர் வ. உ. சிதம்பரனார் நாட்டுப் பற்று மிகவுடைய விடுதலை வீரர் ஆவர். அவர் உருவம் மக்கள மனத்தே என்றும் நின்று நிலவும்படி நல்லதொரு பொதுவிடத்தில் அவரது உருவச்சிலையினை நாட்டுவது நலம். விடுதலைக்குழைத்த வீரர்களின் புகழுடம்பு வாழ்க!

(ச) தமிழில் பிறமொழி கலப்புபற்றி கல்வி அமைச்சர் கருத்து

"பிற மொழிகளிலிருந்து புதிய வார்த்தைகளையும், புதிய கருத்துக் களையும் சேர்த்துக்கொள்ள தயாராக இருந்தால்தான் தமிழ்மொழி வளரும்"—இது 20—7—57-ல் சென்னை கல்வி, நிதித்துறைகளின் அமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்கள், இராயப்பேட்டையில் கம்பன் கல்விக்கழக ஆதரவில் தமிழ் இலக்கியச் சொற்பொழிவு வரிசை யைத் துவக்கிவைத்தகாலை பேசிய பேச்சு.

குறிப்பு : தமிழின் தனித்தன்மையும் சிறப்பும் உலகம் அறிந்தவை. பிறமொழிகலப்பில்லாமல் தமிழ் தனித்தியங்கவல்லது என்பதை எடுத் துக்கூறாத அறிஞரில்லை. அதுமட்டுமன்று; பிறமொழிக்கலப்பால் தமிழ் கெட்டது—கெடுகிறது—கெடும் என்று தமிழறிஞர் பலரும் கூறிவரு வதும், தனித்தமிழ் பேசவும் எழுதவும் வேண்டும் என்பதை செயலள வில் காட்டிவருவதும் நாடறிந்த உண்மை. இதனை அமைச்சரவர்களும் அறிந்தே இருப்பர் இருந்தும் இப்படிப் பேசுவதுகண்டு இரங்குவதன்றி வேறொன்றும் கூறுதற்கில்லை.



**"செந்தமிழ்க்கலைமணி"**
**வித்துவான், பண்டிதர்**
**கா. பொ. இரத்தினம் அவர்கள்**
**எம். ஏ., பி. ஓ. எல்.**

இலங்கை அரசகரும மொழியலுவற் பகுதித் தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவ ரும் தமிழ்மறைக் கழகத் தலைவருமாகிய இவர் கொழும்புத் தமிழ்ச்சங்கத் தலைவ ராகவும் அண்மையில் தெரிவு செய்யப் பட்டுள்ளார். அச் சிறப்பினை யாங்கள் மனமார வாழ்த்துகின்றோம். தமிழ் வாழ்க.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே,
அப்பர் அச்சகத்தில், திரு. வ. சுப்பையா அவர்களால்
அச்சிட்டு வெளியிடப்பெற்றது. யா : வ. சுப்பையா.